# இந்தியப் பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகள்

(இரண்டாம் பகுதி)

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்
ச. அன்சர் அலி, எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், பொருளாதாரத் துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—October, 1973

T.N.T.B.S. (C.P.) No. 513



**Problems of Indian Economic Development (Part II)**

S. ANSAR ALI

Price Rs. 12-55

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
New Century Printers,
6/30, Mount Road,
Madras-2.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்றுண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக, இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான **'இந்தியப் பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகள் (இரண்டாம் பகுதி)'** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 513 ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 548 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முன்னுரை

'இந்தியப் பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினைகள்' என்னும் இந் நூல் இரு பகுதிகளாக எழுதப்பட்டு முதல் பகுதி ஏற்கெனவே வெளிவந்து, எல்லோரின் நல்லெண்ணத்தையும் பெற்றுள்ளது. முதல் பகுதியில் இந்தியப் பொருளாதாரத்தின் அமைப்பும், தேசிய வருவாயின் வளர்ச்சியும், மக்கள் தொகைப் பிரச்சினை, வேலையின்மைச் சிக்கல், வேளாண்மை, தொழில் பிரச்சினைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டாம் பாகத்தில் வளர்ச்சிப் பொருளாதாரமும், வளர்ச்சித் திட்டங்களும், பணவீக்கப் போக்குகளும், வெளிநாட்டு முதலின் பங்கும், போக்குவரத்து, வாணிபப் பிரச்சினைகளும், தொழிலாளர் பிரச்சினைகளும், பிராந்தியப் பொருளாதாரமும், சமுதாயப் பிரச்சினைகளும் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. இது சென்னைப் பல்கலைக் கழகத்தின் திருத்தப்பட்ட புதுப் பாடத்திட்டப்படி B.A. பட்டப் படிப்பு மாணவர்களுக்குப் பயன்படத்தக்கபடி எழுதப்பட்டுள்ளது. இந் நூலில் இன்றைய நாள்வரைக்குமான புள்ளி விவரங்களும், விளக்கங்களும், ஆய்வுகளும் தகுந்த இடங்களில் சேர்க்கப் பட்டுள்ளன. பொருளாதார வளர்ச்சிக் கொள்கைகள் நூலின் பல இடங்களில் விவாதிக்கப்பட்டுள்ளன. பொருளாதாரத் திட்டங்களை அமலாக்குவதில் ஏற்படும் பல்வேறு பிரச்சினைகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. திட்டக்கால இந்தியப் பொருளாதார வளர்ச்சி இந் நூலின் ஏழாம் பாகத்தில் திறனாய்வு செய்யப்பட்டுள்ளது. தற்போது இந்தியப் பொருளாதாரத்தில் பெரிதும் தீவிரமாக விவாதிக்கப்பட்டு வரும் பிராந்திய வளர்ச்சிக் கருத்துகளின் அரும்பெரும் முக்கியத்தை உணர்ந்து, அவைகள் இந் நூலில் சிறப்பாக விளக்கப்பட்டுள்ளன. இந்தியா விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க இயலாமல் இருப்பதற்கு அடிப்படைக் காரணமாய் விளங்கும் சமுதாய, பண்பாட்டுக் காரணிகள் இந் நூலின் இறுதியில் பரந்த முறையில் விரிவாகத் திறனாய்வு செய்யப்பட்டுள்ளன.

இந் நூலை எழுதுவதற்குத் துணையாய் நின்ற நூல்களும், அறிக்கைகளும், வெளியீடுகளும் மிகப்பலவாகும். அந் நூல்களின் பெயர்களும், ஆசிரியர்களின் பெயர்களும் இந் நூலின் கடைசியில் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாசிரியர்களனைவருக்கும் என் நன்றியைத் தெரிவிக்க நான் என்றென்றும் கடமைப் பட்டுள்ளேன்.

ச. அன்சர் அலி

# பொருளடக்கம்

பக்கம்

## பாகம் VI

## வளர்ச்சிப் பொருளாதாரம்

பக்கம்

பாகம் VII

## திட்டமும் பொருளாதார வளர்ச்சியும்

பக்கம்

பக்கம்

பக்கம்

பக்கம்

பாகம் IX

## தொழிலாளர் பிரச்சினைகள்

பாகம் X

## பிராந்தியப் பொருளாதாரம்

பாகம் XI

## சமுதாயப் பிரச்சினைகளும் பொருளாதார வளர்ச்சியும்

பக்கம்

பக்கம்

# 33. வளர்ச்சியும் அதைப் பாதிக்கும் காரணிகளும்

## (Economic Growth and Factors Affecting Crowth)

### வளர்ச்சிச் செயல்முறை

### (Process of Growth)

பொருளாதார முன்னேற்றம் (Economic Dcvelopment) என்பது பொதுவாக வளர்ச்சி குறைந்த நாடுகளின் வளர்ச்சிப் பிரச்சினைகளோடும், பொருளாதார வளர்ச்சி (Economic Growth) என்பது வளர்ச்சியடைந்த நாடுகளோடும் தொடர்புடைய கருத்து என்று சில பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றனர். முன்னேற்றம் என்பது (Development) தொடர்ச்சியில்லாத, தானகத் தோன்றும் மாற்றமென்றும் வளர்ச்சி (Growth) என்பது படிப்படியான, நிலையான நீண்டகால மாற்றமென்றும் திரு. J. A. சும்பீட்டர் (J. A. Schumpeter) குறிப்பிடுகிறர். சேமிப்பு வீதம், மக்கள் தொகை ஆகியவைகளில் ஏற்படும் அதிகரிப்பினால் ஏற்படுவது வளர்ச்சியாகும். எனவே, பொருளாதார வளர்ச்சி (Economic Growth) என்பது பிற்பட்ட, வருவாய் குறைந்த, ஏழ்மை வேளாண்மை நாடு, மிகவும் வளர்ந்து முன்னேறிய, அதிக வருவாயுள்ள, தொழில் மயமடைந்த செல்வநாடாகப் படிப் படியாய் மாற்றம் (Transformation) பெறும் செயல் முறையைக் குறிக்கிறது. இத்தகைய மாற்றம் எந்தெந்த வகைகளில், எத்தகைய சூழ்நிலையில் உருவாகி வளர்ச்சியைப் பெருக்கும் என்பது ஆராயத்தக்கதாகும். பிற்பட்ட நாடுகளின் உற்பத்தித்திறன் தலாவருவாய், சேமிப்பு வீதம், முதலாக்கம், நுட்பத் தொழில் புத்தாக்கங்கள் (Innovations) ஆகியவைகள் மிகக்குறைந்த அளவில் இருப்பதால், நச்சு வளையம் தோன்றித் தேக்கநிலை ஏற்படுகிறது. வறுமை என்னும் நச்சு வளையத்தைத் (Vicious circle of poverty) தகர்த்தெறிந்து சுய ஆற்றலும், வலிமையும் கொண்ட நிலையான ஆறல், விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்கும் முறைகளை ஆராய வேண்டியது இங்கு அவசியமாகும். இதை

அறிந்து ஒவ்வொரு நாடும் தத்தம் நாட்டுக்கேற்ப பொருளாதார வளர்ச்சிக் கொள்கைகளை அமைத்துக் கொள்ளவேண்டும். வளர்ச்சிப் பொருளாதாரக் கோட்பாடு பொருளாதார மாற்ற நடவடிக்கைகளை விளக்கி, வளர்ச்சியை ஊக்குவிக்கும் அல்லது தடை செய்யும் காரணிகளை ஆராய்ந்து நிலையான வளர்ச்சியைப் பராமரிக்கத் தேவையான அம்சங்களைத் தெளிவாய் உணர்த்த வேண்டும். பொருளாதார வளர்ச்சிச் செயல்முறை பலதரப்பட்ட சமூக-பொருளாதார காரணிகளைப் (Socio-economic Variables) பொறுத்ததென்பதை இனி ஆராயலாம்.

### வளர்ச்சியைப் பாதிக்கும் காரணிகள்

(1) இயற்கை வளங்கள் (Natural Resources)

(2) மனித வளங்கள் (Human Resources)

(3) மூலதனம் (Capital)

(4) தொழில் நுட்பமும், தொழில் துணிவும் (Technology and Entrepreneurship)

(5) உற்பத்தியளவு (Scale of Production)

(6) சமூக-கலாசார காரணிகள் (Socio-Cultural Factors)

(7) பன்னாட்டுச் சக்திகளின் எதிர்விளைவுகள் (Repurcussions of International Forcess)

பொருளாதார வளர்ச்சி பல்வேறு சமூக-பொருளாதார காரணிகளால் பாதிக்கப்படுகிறது. அவைகளில் வளர்ச்சிக்கு மிகவும் அடிப்படையாக உள்ளவைகளை மட்டும் தெளிவாக ஆராயலாம். மேற்குறிப்பிட்டுள்ள காரணிகள் வளர்ச்சி மேம்படவும் அல்லது வளர்ச்சி பாதிக்கப்படவும் காரணமாய் உள்ளன. தகுந்த தொழில்நுட்ப அறிவைப் பயன்படுத்தித் திறமையான உற்பத்திக் காரணிகள் அளிப்பு அதிகரிப்பதாலோ ஒரு சமுதாயத்தின் உற்பத்தி (Output) அதிகரிக்கிறது. இந்த உற்பத்தி மிக விரைவாக அதிகரித்தால் ஒரு நபர் உற்பத்தி அதிகரித்து, நவீன வளர்ச்சி ஏற்படுவதைக் காணலாம். ஆனால், உற்பத்திக் காரணிகள் குறைவாகவோ, அல்லது தரம் குறைந்தவைகளாகவோ இருந்தால் வளர்ச்சி தடைபடும். வளர்ச்சிக்கு எந்த அளவுக்கு இக் காரணிகள் முட்டுக்கட்டைகளாய் விளங்குகின்றன என்பதை இனி ஆராயலாம்.

## 1. இயற்கை வளங்கள்
(Natural Resources)

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாய் விளங்குவது நிலம், தரமுள்ள மண், காடு, மீன் தொழில், நிலக்கரி, இரும்பு போன்ற கனிவளங்கள், எண்ணெய், நீர், மற்றும் அநேக உலோக தாதுப் பொருள்கள் போன்ற உள்ளீடுகளாகும். வேளாண்மை உள்ளீடாகவும், போக்குவரத்தில் ஒரு காரணியாகவும், மற்ற உற்பத்திக் காரணிகளோடு சேர்ந்து நிறைவு செய்யும் காரணியாகவும் நிலம் அமைந்து வளர்ச்சிக்கு அடிப்படைக் கருவியாகவும், முதுகெலும்பாகவும் உள்ளது. இயற்கை வளங்களால் மட்டுமே பொருளாதார வளர்ச்சி மேம்படும் அல்லது பாதிக்கப்படுமென்று கூற இயலாது. ஏனெனில் அதிக வளங்களைப் பெருத இஸ்ரேல், ஜப்பான் போன்ற நாடுகள் பதிலீடு, வாணிபம், இயற்கைச் சூழ்நிலைகேற்பச் செயல்படும் திறமை கொண்ட மக்கள் போன்றவைகளால் போதிய இயற்கை வளங்கள் இல்லாமலேயே அதிக வளர்ச்சியைச் சாதித்துள்ளன. மேலும், ஒரு வளர்ந்து வரும் நாடு வேளாண்மை நிலையிலிருந்து அதிக தொழில் வளர்ச்சி பெற்ற நாடாக மாற்றமடையும் பொழுது மொத்த வளங்களில் 20-25 சதவீதமாக இருக்கும் இயற்கை வளங்கள் 5 சதவீதமாகக் குறையும் என்று பேராசிரியர் தியோடோர் சூலட்ச் (Theodore Schulty) குறிப்பிடுகிருர். சீரமைக்கப்பட்ட தொழில் நுட்பம், நல்ல விதைகள், உரங்கள் மிகத் திறமையான நில நிர்வாகம் போன்ற காரணங்களளால் உற்பத்தி அதிகரிக்கும்போது நில உள்ளீடு (Land input) குறையும் என்று A. மீயர்ஸீம், I. அடல் மெனும் (Mears and Adelmen) குறிப்பிடுகின்றனர். எனினும் இயற்கை வளங்களின் பற்றுக்குறை அல்லது அதிக அளிப்பு இடம், காலம் தொழில் நுட்பம், கண்டுபிடிப்புகள், மக்களின் கலாசார மன நோக்கு, சுவை மாற்றங்கள் போன்ற காரணிகளைப் பொறுத்த தாகும். இக் காரணிகளின் மாற்றத்திற்கேற்றபடி ஒரு நாட்டின் வளங்கள் அதிகரிக்கும் அல்லது குறையும்.

## 2. மனித வளங்கள்
(Human Resources)

பொருளாதார வளர்ச்சியின் அளவை மக்கட் தொகையின் அளவு, அமைப்பு, சமூக கலாச்சார இயல்புகள் தீர்மானிக்கின்றன. முதல் சேர்க்கை (Capital formation) வீதத்தை நிர்ணயிப்பவைகளே. மக்களின் இயல்பு, கலாச்சார காரணிகள் ஆகியவைகளாகும். உற்பத்தியில் தொழில் நுட்பம், அமைப்பு முறை, உற்பத்தி

இலக்குகள் ஆகியவைகளைத் தீர்மானிப்பதில் மனித வளங்களின் தன்மை பெரும்பங்கு பெறுகிறது. எனவேதான் பொருளாதார வளர்ச்சிக்கு மனித சக்தியின் (Man power) அம்சம் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. மனித வளங்கள் பொருளாதார வளர்ச்சியில் ஓர் உற்பத்திக் காரணியாகவும், மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் கருவியாகவும் விளங்குகிறது. விரைவான வளர்ச்சியை அடைய விரும்பும் வளர்ச்சி குறைந்த நாடுகளில் மனித வளங்களின் பிரச்சினைகள் தீவிரமாகக் காணப்படுகின்றன. மிதமிஞ்சிய மக்கட்தொகை வளர்ச்சி, பாதகமான வயதுப் பாகுபாடு, சரிசமமில்லா மக்கட்தொகைப் பாகுபாடு, மனித சக்தி இடம் பெயராமை, பயிற்சி பெற்ற மனித சக்தியின் பற்றாக்குறை, குறைந்த தொழிலாளர் திறன், வேலைக்குறைவு, ஸ்தாபனத் தடைகள் போன்ற அநேக முட்டுக்கட்டைகளால் தலாவருவாயை அதிகரித்து மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடிவதில்லை.

மனித வளங்களின் தரம் (Quality of human resources)

வளர்ச்சி குறைந்த நாடுகளில் விரைவான வளர்ச்சிக்கு பெரும் தடையாக இருப்பவை தொழிலாளர்களின் அறியாமை, கல்வியறிவின்மை, குறைந்த திறன் ஆகும். பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாததாக விளங்குவது தொழில் நுட்ப முன்னேற்றம் ஆகும். தொழில் நுட்ப முன்னேற்றம் பயிற்சி, திறன் இவைகளைப் பெற்ற தொழிலாளர்களின் அளிப்பைப் பொறுத்ததாகும். ஐரோப்பா, அமெரிக்கா, ஆகிய வளர்ச்சியடைந்த நாடுகளின் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாக விளங்குவது அறிவியல் தொழில் நுட்ப முன்னேற்றமும், அதைத் திறம்பட அறிந்த பெரும்பாலான, தொழிலாளர்களுமே யாகும். அதிக இயற்கை வளங்களைப் பெறாத நாடுகளும்கூட அதிகத் திறம்பட்ட மனித சக்தியைப் பெற்றிருப்பதால் மிக உயர்ந்த பொருளாதார வளர்ச்சிக் கட்டத்தை அடைந்துள்ளன. இதற்கு உதாரணமாக ஜப்பான், நெதர்லாந்து, சுவிட்சர்லாந்து போன்ற அநேக நாடுகளின் அனுபவங்களிலிருந்து அறியலாம். எனவே, மனித அம்சத்தில் முதலீடு செய்வதால் வளர்ந்துவரும் நாடுகளில் ஓர் எல்லை வரைக்கும் அதிகமான பலன் ஏற்படும் என்றால், அது மிகையாகயாகாது. வளர்ச்சி நடவடிக்கையைச் சிறந்த முறையில் தோற்றுவிக்க மிக இன்றியமையாததாக விளங்குவது மனித வளங்களின் முதலீடாகும். பிரடெரிக் ஹாரிசன் குறிப்பிடுவது போல் ''தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகள் நவீன இயந்திரங்கள், உற்பத்தி முறைகளைப் பயன்படுத்தப் பெரிதும் தூண்டப்படுகின்றன. ஆனால், தொழில் நுட்பத்தைத் திறம்பட அறிந்து பிற்பட்ட நிலையி

லிருந்து மேம்பட்ட நிலைக்கு மாற்றமடைய மனித சக்தியை வளர்ச்சியடையச் செய்யும் பிரம்மாண்டமான பணிதேவைப் படுகிறது. இந் நடவடிக்கையின் வெற்றி மிக உன்னிப்பான திட்டம், கல்வியில் தகுந்த முதலீடு, பற்றுக்குறை மனிதத்திறனைத் திறம்படப் பயன்படுத்தல் போன்ற அம்சங்களைப் பொறுத்த தாகும்."[1]

## மனித மூலதனம்
## (Human Capital)

கல்விச் சீரமைப்பைப் போலவே மக்களின் சுகாதாரத்தையும், மேம்படுத்தினால் வளர்ச்சி மேலோங்கும். கல்வி மனவலி மையையும், அறிவுத் திறமையையும் அதிகரிப்பதைப் போல் சுகாதாரம் உடல் திறனையும், வலிமையையும் சீராக்குகிறது. பொருளாதார வளர்ச்சிக்கு பிறப்புவீதம் குறைந்தால் மக்களின் வாழ்க்கைத் தரம் அதிகரிக்கும். பல்வேறு மனித சக்திப் பிரச்சினை களைத் தீர்க்கக் குறைந்த பிறப்புவீதம் வலியுறுத்தப் பட்டாலும் அதைச் சுலபமாக நடைமுறைப்படுத்த முடியாது. பெரும்பாலான வளர்ச்சி குறைந்த நாடுகளில் மக்களிடம் உழைப்புக்கான ஆர்வமோ, குடும்ப அளவைக் கட்டுப்படுத்தும் தீவிரமான நோக்கோ கிடையாது.

## 3. மூலதனம்

மூலதனம் என்பது கட்டடங்கள், ஆலைகள், இயந்திரம், கருவிகள், சாதனம், மூலப்பொருள்கள் போன்ற ஒருநாட்டின் உற்பத்திச் சாதனங்களைக் குறிக்கிறது. உற்பத்தி அதிகரிக்கவும், வளர்ச்சியைப் பெருக்கவும் மூலதனம் ஒரு கருவியாக அமைந்திருப்ப தால் அதில் தொழில் நுட்பக் கல்வி, சுகாதாரம் திறனதிகரிப்பு போன்றவைகளில் முதலீடு செய்வதையும் உள்ளடக்குகிறது. ஒரு நாட்டின் எந்திரங்கள், எந்திர அமைப்புகள், ஆகியவை களால் மட்டும், பொருளாதார வளர்ச்சி அதிகரிக்குமென்று கூறமுடியாது. ஏனெனில் வளர்ச்சியில் மனித மூலதனம் பெரும் பங்கு பெற்றுள்ளது. மேலும், மூலதனம், முதலீடு செய்யப்படு முன் சேகரிக்கப்பட வேண்டும். எனவே, முதலாக்கம் என்பது எந்திரங்கள், கருவிகள் போன்ற மூலதன வளங்களை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள், சேர்க்கும் நடவடிக்கையைக் குறிக்கிறது. முதலாக்கம், முதலீடு ஆகியவைகளால், குறித்த காலத்திற்குள் உற்பத்தி சாதனங்களை அதிகரிக்க முடிகிறது. நிலம் ஏறக்குறைய குறித்த அளவுடையதாக இருப்பதால் மக்கட்தொகை அதிகரிக்கும்

[1] F. N. ஹார்பிசன், மையர்ஸ் (F. N. Harbison and Myres) 'தொழில் உலகில் நிர்வாகம், பக். 87–88.

போது நிலம்-தொழிலாளர் விகிதம் (Land-labour ratio) குறைகிறது. ஒரு தொழிலாளர் உற்பத்தியை (Output per worker) அதிகரிக்க முதல்-தொழிலாளர் விகிதத்தை (Capital labour ratio) அதிகரிக்க வேண்டும். இதன்படி பொருளாதார வளர்ச்சிமுறை என்பது மூலதனத்தை அதிகரித்து, தொழிலாளர்களைக் குறைக்கும் நடவடிக்கையாகும். அதாவது உற்பத்தி முறையில் இயந்திர மயத்தை அதிகரிப்பதாகும். வளர்ச்சிக்கு மூலதனம் மையமான அம்சமாக மட்டுமில்லாமல் சில சிறப்பு அம்சங்களையும் கொண்டதாக விளங்குகிறது. அதாவது முதலாக்கம், வருவாயை அதிகரித்து, சேமிப்பைப் பெருக்கி மீண்டும் முதலாக்கத்தை விரைவுபடுத்துகிறது. உற்பத்தியின் அளவை அதிகரிக்க மூலதனம் மிகவும் இன்றியமையாததாக விளங்குகிறது. முதலாவதாக, தொழில் நுட்ப உற்பத்தியில் தக்க மாற்றங்களை ஏற்படுத்த வகை செய்கிறது. இதனால் பேரளவு உற்பத்தியும், சிறப்புத் தேர்ச்சியும் அதிகரிக்கிறது. தொழில் நுட்ப முன்னேற்றத்திற்கு முதலாக்கம் மிகவும் இன்றியமையாததாக விளங்குகிறது. இரண்டாவதாக, வளரும் மக்கட்தொகையின் தேவைகளைப் பூர்த்தி செய்யக் கருவிகள், சாதனங்கள், போன்றவைகளை அளிக்க இது வகை செய்கிறது. மூன்றாவதாக, விரைவான முதலாக்கத்தால் தொழிலாளர், கருவிகள், இயந்திரங்களின் அளிப்பு அதிகரித்து ஒரு தொழிலாளர் உற்பத்தி உயர்கிறது. கடைசியாக முதலாக்கம் உற்பத்தியின் அமைப்பை விரிவாக்கித் தொழில் மயம் ஏற்பட வகைசெய்கிறது. மக்கட்தொகை வளர்ச்சிக்கு ஏற்ப அங்காடியை விரிவாக்கவும், இயற்கை வளங்களைக் கண்டறியவும் இது வகைசெய்கிறது. நிலையான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க இது பெருந்துணை புரிகிறது. ஆனால், மூலதனத்தைச் சேகரிப்பதைக் காட்டிலும், அதை ஒருங்கிணைக்க அமைப்புகளை ஏற்படுத்தலும், நிர்வாகிகளுக்குப் பயிற்சியளிப்பதும், புத்தாக்கங்களை உற்பத்தியில் பயன்படுத்தலும், பிரச்சினைகளை ஏற்படுத்தும்.

எனவே, வளர்ச்சியைப் பாதிக்கும் காரணிகளில் மூலதன வளங்களின் பற்றாக்குறையும் ஒரு காரணியாகும். தொழில் நுட்பம், தொழில் துணிவு, உற்பத்திச் சிறப்புத் தேர்ச்சி சமூக கலாச்சார காரணிகள், போன்றவைகளின் மாற்றங்களைத் தக்க முறையில் பயன்படுத்தாவிட்டால் வளர்ச்சி அதிகரிக்காது.

## 4. தொழில் நுட்பமும் தொழில் துணிவும்
(Technology and Enterpreneurship)

முன்னேறிய நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றத்தின் அடிப்படையில் தோன்றிய புரட்சிகரமான உற்பத்தி முறையினை

பொருளாதார வளர்ச்சி வியப்புறத்தக்க வகையில் அதிகரித்துள்ளது. தொழில்நுட்ப முன்னேற்றம் (Technological progress) என்பது ஏராளமான புதிய கருத்துகள், கண்டுபிடிப்புகள், உற்பத்தி முறைகளின் மூலம் உண்மை உற்பத்திப் பணிகளில் மாற்றம் ஏற்படுவதைக் குறிக்கிறது. பொருளாதார, அரசியல், சமூக அம்சங்களைக் கொண்ட மனித நடத்தை முழுவதிலும் ஏற்படும் புதிய கண்டுப்பிடிப்புகள் (Invention), புத்தாக்கங்கள் (Innovations), நுட்பமுறை ஆகியவைகளும் தொழில் நுட்ப முன்னேற்றத்திற்குள் அடங்குகின்றன. ஆனால், பொருளாதார வளர்ச்சிக் கருத்தில் தொழில் நுட்ப மாற்றமென்பது ஒரு தொழிலில் பின்பற்றப்படும் எத்தகைய உற்பத்தி முறை மாற்றத்தையும் குறிக்கும். தொழில் நுட்பப் புரட்சியினால் குறைந்த வளங்களைக் கொண்டு அதிக உற்பத்தியைப் பெற முடியும். தொழில் நுட்ப முன்னேற்றம் நடைமுறை விஞ்ஞானம் (Applied Science), கருத்துவழி விஞ்ஞானம் (Pure Science) ஆகியவைகளைப் பொறுத்ததாகும். கருத்துவழி விஞ்ஞானம் சமூகத்தின் 'விஞ்ஞான மனநோக்கைப்' பொறுத்ததாகும். அறிவியல் முன்னேற்றம் நாட்டில் அறிவியல் நடவடிக்கைகளுக்காகப் பயன்படுத்தப்படும் வளங்களைப் பொறுத்ததாகும். இதில் முக்கியத்துவம் பெற்று விளங்குவது தொழில் கல்வியாகும். கல்வியறிவில்லாத சமூகத்தால் தொழில் நுட்ப மாற்றங்களை அறியவோ அல்லது அவைகளை உற்பத்தியில் பயன்படுத்தவோ இயலாது. எனவே, தொழிற் கருவியைப் பரவலாக்கித் தொழிற் பயிற்சியை விரிவடையச் செய்தால்தான் ஒரு சமூகத்தில் புதிய தொழில் நுட்ப நிபுணர்கள் தோன்றி வளர்ச்சி அதிகரிக்க வகைசெய்ய முடியும்.

### புத்தாக்கங்களும் வளர்ச்சியும் (Innovations and Growth)

தொழில் நுட்ப முன்னேற்றம் உண்மையில் வளர்ச்சிக்குத் தகுந்த முறையில் பயனளிக்கத் தொழில் துணிவோர் சுய திறமையால் (initiative) புத்தாக்கங்களை உற்பத்தியில் உட்புகுத்த வேண்டும். பொருளாதார வளர்ச்சியின் போது தொழில் நுட்ப மாற்றங்களை நடைமுறைப்படுத்தத் தொழிலதிபர்கள் நடவடிக்கைகளைத் திறமையுடன் தீர்மானிக்க வேண்டும். இத் தீர்மானங்கள் பழைய எந்திரங்களுக்குப்பதில் புதிய எந்திரங்களைப் பொருத்துதல் போன்றவைகளாகும். புத்தாக்கங்களால் மூலதனம் அல்லது தொழிலாளர் ஆகியவைகளின் சேவைகளைச் சிக்கனப்படுத்த முடியும். புத்தாக்கங்கள் உற்பத்திச் செலவைக் குறைக்கவும், பொருளுக்குத் தேவையை அதிகரிக்கச் செய்யவும் வகை செய்கின்றன. J. A. ஷும்பீட்டர் (Schumpeter) அவர்களின் படி கீழ்க்கண்ட மூன்று விதங்களில் புத்தாக்கங்கள்

செலவைக் குறைக்க முடியும். (i) புது உற்பத்தி முறையை உட்புகுத்தல் (ii) ஒரு புதுவகைக் கச்சாப் பொருளைப் பயன்படுத்துதல் (iii) புதுவகை அமைப்பை ஏற்படுத்துதல். புத்தாக்கங்களால் கீழ்க்கண்ட இருவகைளில் தேவையை அதிகரிக்க முடியும் (i) ஒரு புதுவகைப் பொருளை உட்புகுத்தல் (தரச்சீரமைப்பு உள்பட). (ii) புதிய சந்தைகளைத் தோற்றுவித்தல். இந்த ஐவகைப் புத்தாக்கப் பாகுபாட்டை J. A. சூம்பீட்டர் வலியுறுத்தி வளர்ச்சியை அதிகரிக்க முடியும் என்று குறிப்பிடுகின்றார்.[1]

புத்தாக்கங்களை ஏற்படுத்தும் நாட்டம் பல்வேறு சமூக, பொருளாதார, அரசியல் சூழ்நிலையைப் பொறுத்தாகும். சிலரின் கருத்துப்படி இலாப நோக்குதான் புத்தாக்கங்களைத் தோற்றுவிக்கின்றன. ஆனால், இக் கருத்து முற்றிலும் உண்மையானதன்று. பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் இலாப உணர்வுடன் புத்தாக்கங்கள் தோன்றவில்லை. பல்வேறு சூழ்நிலைகளைப் பொறுத்துத்தான் அவைகள் தோன்றுகின்றன என்று மாக்ஸ் வெபர் (Max weber) குறிப்பிடுகின்றார். W. சோம்பார்ட் அவர்களின் கருத்துப்படி சூழ்நிலைக்குத் தக்கப்படி புத்தாக்க விஞ்ஞானியின் (Innovator) தொழில் உணர்வு, தொழிலைக் கைப்பற்றுதல், போட்டி, பொருளாதாரப் பகுத்தறிவு ஆகிய கருத்துகளால் ஆட்கொள்ளப்படுகின்றது. எனவே, இலாப நோக்கு மட்டுமே புத்தாக்கங்களைத் தோற்றுவிக்கும் என்பதைவிடச்சூழ்நிலை தான் அதை நிர்ணயிக்கும காரணி என்று கூறலாம். பார்நாட்டின் (Barnard) கருத்துப்படி தொழில் அமைப்பைப் பராமரிக்கும் ஆர்வத்துடன், புத்தாக்கங்கள் ஊக்குவிக்கப்படுகின்றன. போட்டி நிலையைப் பாதுகாத்தல், தன்தொழில் நிலையை நிர்வாகி பாதுகாத்தல், தொழிலில் தன் கௌரவத்தையும், மேம்பட்ட நிலையையும் நிலைநாட்டுதல், ஆகிய காரணங்களால் புத்தாக்கங்கள் ஊக்குவிக்கப்படலாம் என்று J. J. ஸ்பென்க்லர் குறிப்பிடுகின்றார்.[2]

வளர்ச்சி குறைந்த நாடுகளின் மக்களிடையே புத்தாக்கங்கள் தோன்ற திரு. கோல்டுஸ்மிட் (Goldschmidt) சில கொள்கைகளை எடுத்துக் கூறியுள்ளார். அவைகள் வருமாறு:-

(i) சமுதாயத்தின் கலாச்சாரப் பாங்கு, புத்தாக்கங்களால் ஏற்படும் சமூக, மானிட, விளைவுகள் ஆகியவற்றை விவரமாகக் கண்டறிய வேண்டும். இதனால் புதுத் தொழில் நுட்பத்தைத் தகுந்த

[1] J. A. சூம்பீட்டர். 'வாணிபச் சுழல்கள்'. ப. 87.

[2] ஜோஸப். J. ஸ்பென்க்லர் (SPengler), 'மனித சமுதாய மதிப்புக் கோட்பாடு' 'பொருளாதார ஆய்வு', 'பொருளாதாரக் கொள்கை', அமெரிக்க பொருளாதார வெளியீடு (மே, 1958) ப 348.

முறையில் பயன்படுத்தவும், தீயவிளைவுகள் ஏற்படாமல் தடுக்கவும் வகையேற்படுகிறது.

(ii) சமுதாய மக்களால் உணரப்பட்ட உண்மையான தேவைகளைப் பூர்த்தி செய்யத்தக்க வகையில் புத்தாக்கங்கள் தோன்ற வேண்டும். வெளியாள்களின் தேவைகளுக்கேற்பத் தோன்றிய புத்தாக்கங்கள் உள்நாட்டு மக்களுக்குப் பயன்தராது.

(iii) புதிய தொழில் நுட்ப முறைகளை உள்நாட்டு மக்களின் அமைப்புவழிக் கருத்துகளுடன் ஒன்றிணைக்கப்படவேண்டும். இதனால் உற்பத்தித் திறமையின் சில அம்சங்கள் பாதிக்கப் பட்டாலும் பரவாயில்லை. இதனால் புத்தாக்கங்களுக்கு ஏற்படும் எதிர்ப்பும் நீங்கும்.

(iv) உள்ளூர், கலாச்சாரம், அமைப்பு வழிமுறைகள் ஆகியவைகளை உற்பத்தியில் மேற்கொள்ளும்போது, பொருமை ஏற்படக் கூடாது. ஏனெனில் அது அமைப்பு முறையில் நெகிழ்ச்சி யின்மையை (Regidity) தோற்றுவிக்கும். இத்தகைய மாற்றத்தால் பழமைப் பாங்கு, பிற்பட்ட தொழில் அமைப்பு, படிப்படியாக நீங்கி வளர்ச்சியைத் தடைசெய்யும் பொருள்சாரி காரணிகள், சமூக காரணிகள் மறைந்து வளர்ச்சி மேலோங்கும். மக்களின் கலாச்சார அமைப்போடு அதிக அளவில் தலையிடுவது விரும்பத்தக்கதல்ல.[1]

தொழில் நுட்ப ரீதியில் வளர்ச்சியைச் சாதிப்பதற்கு முன், பொருளாதாரத் தலைமை (Economic-leedaship) வளர்ச்சியை அதிகரிக்க மிக முக்கிய பங்கை ஏற்றுக வேண்டும். விடாமுயற்சி, பேரார்வம், முன் சிந்தனை, பழைமைத் தடைகளைத் தகர்த்தெறியும் புதுமைச் சிந்தனை, சமூகக் கிளர்ச்சியின்மை (Social inertia)யை எதிர்த்தல், கோட்பாட்டை நடைமுறைப்படுத்தல் போன்ற உன்னத இயல்புகளைப் பெற்ற தொழிலதிபர்கள் பொருளாதாரத் தலைமையை ஏற்றுகவேண்டும்.

## 5. உற்பத்தி அளவுச் சிக்கனங்கள்
(Scale of Production)

பொருளாதார வளர்ச்சியோடு கூடவே உற்பத்தி நடவடிக்கையின் அளவும் தக்க மாற்றம் பெறுகின்றது. மனிதனின் தொழில் நடவடிக்கைகள் கிராமங்களிலிருந்து நகரத்திற்கும்,

[1] வால்டர் R. கோல்டுஸ்மிட் (Walter R. Goldschmidt) "கலாச்சார காரணிகள்' புதிய தொழில் நுட்பத் திறனைச் சேர்த்தல் இவைகளுக்கிடையே உள்ள உள்ளுறவு," ப. 149-151.

நகரங்களிலிருந்து நாடு முழுவதும், பின்பு உலகம் முழுவதும் விரிவடைகின்றன. இவ்வாறு கிராமப் பொருளாதாரம் பிராந்திய, தேசிய, பொருளாதாரமாக மாற்றமடையும் பொழுது தக்க சந்தை நிறுவனங்களும், பணத்துறை ஸ்தாபனங்களும், போக்குவரத்துத் தொடர்பும் தகுந்த முறையில் விரிவடையா விட்டால் வளர்ச்சி தடைபடுவது இயற்கையே.

உற்பத்திச் சிக்கனங்கள் (Economics of scale)

அளவுச் சிக்கனங்களைப் பயன்படுத்தி பேரளவு உற்பத்தியை மேற்கொள்ளத் தொழில் நுட்பமுறை பெரிதும் துணைபுரிகின்றது. அகச் சிக்கனங்கள் (Internal Economics) ஒரு தொழில் நிறுவனத்துக் குள்ளேயே ஏற்படும் சிக்கனங்களாகும். புறச் சிக்கனங்கள் (External economics) நிறுவனத்தின் வெளி நடவடிக்கைகளில் தோன்றித் தொழிலின் எல்லா நிறுவனங்களுக்கும் பொதுவாகக் கிடைப்பவைகளாகும் அளவுச் சிக்கனமின்மையும் (Diseconomics of scale) உற்பத்தியின் போது தோன்றுகின்றது. பணவகைச் சிக்கனங்கள் (Pecuniary economics), அங்காடிச் செலவு, ஒரு உற்பத்திக் காரணியின் விலைகள், ஆகியவைகளின் மாற்றத்தினால் ஏற்படுபவைகளாகும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் அகச் சிக்கனங்களைப் பயன் படுத்திச் சர்வாதீனச் சந்தைகள் தோன்றுகின்றன. புதிய தொழில்கள் சந்தையில் நுழைவதற்குத் தொல்லைகள் இருப்பதாலும் அதிகப் போக்குவரத்துச் செலவு, சந்தை வாய்ப்புகளை அறியாமை, மூலதனக் குறைவு, உள்ளீடுகள் கிடைக்காமை போன்ற குறை களாலும் அங்காடி விரிவடையாமல் ஒரு சிலராலேயே கட்டுப் படுத்தப்பட்டு வருகின்றது. சந்தைகள் சிறியனவாயும், துண்டாடப்பட்டும் இருப்பதால் பொருள்களைக் கொண்டு செல்வதில் விற்பனைச் செலவு அதிகரிக்கின்றது அங்காடிச் செலவு களைக் குறைப்பதால் புறச் சிக்கனங்களைப் பெறமுடியும். உற்பத்திக் காரணிகள், நடுத்தர, வினைமுடிவுற்ற பொருள்களுக்கான சந்தைகளில் சீரான அமைப்பை ஏற்படுத்தினால் அளவுச் சிக்கனங்கள் அதிகரிக்கும்.

அதிகச் சிறப்புத் தேர்ச்சி அல்லது வேலைப்பகுப்புப் பெற்றுள்ள பேரளவு உற்பத்தி நிறுவனங்களால் ஒரு சமுதாயம் அதிக உற்பத்தியைப் பெறமுடியும். ஆடம்ஸ்மித் குறிப்பிட்டது போல் 'சிறப்புத் தேர்ச்சியால் தொழிலாளியின் திறமை அதிகரிப்பதோடு, குறுகிய காலத்தில் தரமான பொருள்கள் கிடைக்கின்றன. மேலும், தொழிலாளர்கள் மனித சக்தியைக் குறைக்க வல்ல புதிய கண்டுபிடிப்புகளையும் அடைய முடியும்.' தனி ஒருவரின் திறனை

அதிகரித்து நிபுணர்களைத் தோற்றுவித்து இயந்திரமயத்தின் மூலம் உற்பத்தியை அதிகரித்துத் தொழிலமைப்பைச் சீரமைத்தால் பொருளாதார வளர்ச்சி மிகச் சிறப்பாக விரைவான வளர்ச்சியைப் பெறும்.

## அங்காடி அளவு விரிவடைதல்

தொழில் சிறப்புத் தேர்ச்சி அல்லது வேலைப்பகுப்பு அதிகரிக்க அங்காடியின் அளவு விரிவடைய வேண்டும். அங்காடி விரிவடைந்தால்தான் ஒருநாடு தனித் தேர்ச்சி, அளவுச் சிக்கனங்கள் ஆகியவைகளின் முழு நன்மையையும் அடையமுடியும். அங்காடி விரிவடையப் போக்குவரத்துத் தொடர்புச் சீரமைப்பு மிகவும் இன்றியமையாததாகும். அங்காடியின் தன்மையும் தகுந்த மாற்றம் பெறவேண்டும். சந்தையின் இயல்பில் பெரிய மாற்றம் தேவை—அளிப்பு இவைகளின் நெகிழ்ச்சியைப் பொறுத்ததாகும். அங்காடியின் வளர்ச்சிச் சமுதாயத்தை பொருளாதார வளர்ச்சிக்கு ஆயத்தம் செய்ய பெருந்துணை புரிகிறது. தொழில் நிபுணர்களுக்கு தீவிரப் பயிற்சி அளித்து வளர்ச்சிக்கு மக்களை ஆயத்தம் செய்யலாம். அங்காடியின் வளர்ச்சி தொழில் நிபுணர்களுக்குப் பயிற்சி அளித்து முதலாக்கத்தை அதிகரிக்கிறது. இதனால் சேமிக்கும் பண்பு விரிவடைந்து மூலதனச் சேர்க்கை தொழில் வளர்ச்சிக்குப் படிப் படியாகத் துணை புரிகின்றது. தொழிலாளர்களின் அமைப்பைச் சீர்படுத்தி அவர்களுக்குத் தொழில் உணர்வைப் புகட்டி ஆலை உற்பத்தியை அதிகரிக்க வேண்டும். இத்தகைய ஒருங்கிணைந்த நடவடிக்கைகளால் திடமாகத் தொழில் மயம் தோன்றும்.

உற்பத்தியின் அளவை அதிகரித்தல், சிறப்புத் தேர்ச்சியை ஊக்குவித்தல், ஆகியவைகளை ஆராய அங்காடியின் இயல்பை யும், வளர்ச்சியையும், பாதிக்கும் காரணிகளைக் கண்டறிய வேண்டும். போக்குவரத்துச் சீரமைப்பு, மக்கட் தொகை வளர்ச்சி, ஒருநபர் உற்பத்தியின் அளவு, போன்ற பல்வேறு காரணிகள் ஒரு சமுதாயம் விரைவான வளர்ச்சியைப் பெறமுடியுமா? இல்லையா? என்பதைத் தீர்மானிக்கும்.

## 6. சமூக–கலாச்சார காரணிகள்
### (Socio-Cultural Factors)

வளங்கள், தொழில் நுட்பம், மனித வளம் ஆகியவைகளின் ஒருங்கிணைந்த நடவடிக்கைகளால் ஏற்படும் பொருளாதார நடவடிக்கை ஒரு சமூகத்தின் மனிதப் பண்புகள், மனநோக்கு, ஊக்கங்கள், (incentives) .மனப்பாங்கு (Attitudes) போன்ற கலா

சார அம்சங்களில் பிரதிபலிக்கிறது. பொருளாதார வளர்ச்சி முறை மனித பொருளாதார மாற்றங்களைமட்டும் பெற்றிருப்பதில்லை. பொருளாதார நடவடிக்கைகளில் அடங்கும் சமூக சூழ்நிலையில் ஏற்படும் முக்கிய மாற்றங்களையும் அது உள்ளடக்குகிறது. சமூக-கலாச்சார காரணிகளால் பொருளாதார வளர்ச்சி எந்த அளவுக்குத் தடைபடுகிறது என்பதை அளவிட்டுத் துல்லியமாகக் கூற முடியாது. ஏனெனில் இக் காரணிகள் ஏராளமாகவும், இவைகளுக்கிடையே உள்ள தொடர்பு கடுஞ் சிக்கலானதாகவும் உள்ளது. எனினும் ஒருநாடு இக் காரணிகளால் மிகவும் பிற்பட்ட பொருளாதார நிலையில் இருப்பதால் இவைகளைப் பற்றிய ஆய்வு இன்றியமையாததாகும்.

பிற்பட்ட பழக்கங்கள்

மனிதப் பண்புகளும், சமூக அமைப்புகளும், நுகர்வுக்கான மன நோக்கு, பொருளாதார அமைப்பின் வகைகள், தொழிலாளர் திறன், தொழில் துணிவோரின் மனப்பாங்கு, வாழ்வின் பொது நோக்குப் போன்ற பல திறப்பட்ட வகைகளில் பொருளாதார வாழ்வைப் பாதிக்கின்றன. பெரும்பாலான வளர்ச்சி குறைந்த நாடுகளில் சில உள்நாட்டுக் கலாச்சார பண்புகளும் (indigenous Cultural Values) அவற்றின் ஸ்தாபனங்களும் பொருளாதார வளர்ச்சியின் குறுக்கே பெரும் பாறைகளாய் நின்று வளர்ச்சியைத் தடுக்கின்றன. நவீன மாற்றங்களை ஏற்படுத்தத்தக்க சக்திகள் செயல்படாத பிற்பட்ட நாடுகளில், இப் பழமைக் கலாச்சார பண்புகள் ஒரு குறைந்த பட்ச வளர்ச்சியைச் சாதிப்பதற்கும் முட்டுக் கட்டைகளாய் விளங்கும். பொருள் பெருக்கம் (Materiaism) தற்போதைய நல்வாழ்வு என்ற கருத்துகளுக்கு மாறாக, மேலுலக வாழ்வு, ஆன்மிகக் கொள்கை (Spiritualism) போன்றவைகள் பெரிதும் வலியுறுத்தப்படுவதால் கடும் உழைப்பை மக்களில் பலர் விரும்புவதில்லை. எனவே, ஊக்கமுடன் உழைத்து அதிக வருவாய் பெற வேண்டுமென்ற ஆர்வம் மக்களில் பெரும்பாலோர்க்கு இல்லை. அமெரிக்கா, ஜப்பான் போன்ற நாடுகளின் மக்கள் கடுமையாக உழைத்து, அதிக ஊதியம் பெற வேண்டுமென்ற மனப்பாங்கு உடையவர்களாயுள்ளனர். ஆனால், இந் நாடுகளில் மக்கள் ஆன்மீகக் கொள்கையில் சிறிதும் பற்றில்லாதிருப்பது ஒரு குறையாகும். பொருள் பெருக்கமும், ஆன்மீகக் கொள்கையும் ஒருங்கிணைந்த நாடுகளைத்தான் காண்பதற்கு அரியதாய் உள்ளது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஆன்மீகக் கொள்கையில் ஈடுபாடு குறைந்து கடின உழைப்பு ஏற்பட்டால் தான் வளர்ச்சித் தடைகளைத் தகர்த்தெறிய முடியும். பற்றற்ற நிலை, ஏழ்மையைக் கர்மவினை அல்லது தலை எழுத்து என்று ஏற்றுக்

கொள்ளல், கடும் உழைப்பில் அக்கறையின்மை, நெடுங்கால வெளி நாட்டினர் ஆதிக்கம், துர்நிர்வாகம் போன்ற பல்வேறு சமூக-கலாச் சாரக் காரணிகளால் பிற்பட்ட நாடுகளில் வளர்ச்சி தடைபட் டுள்ளது. ராக்னர் நர்க்ஸ் குறிப்புடுவதுபோல் “மக்களின் ஆற்றல்கள் சமுதாயப் போக்குகள் (attitudes), அரசியல் நிலைமைகள் வரலாற்றுநிகழ்ச்சிகள் ஆகியவைகள் பொருளாதார வளர்ச்சியுடன் பெருந் தொடர்பு கொண்டுள்ளன. மூலதனம் வளர்ச்சிக்கு அவசிய மானதென்றாலும் அது மட்டுமே முன்னேற்றத்திற்குப் போதும் என்பது உண்மையன்று.” [1]

வளர்ச்சித் தடைகள்

பல்வேறு பிற்பட்ட சமூக அமைப்புகளால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் முன்னேற்றம் தடைபட்டுள்ளது உண்மையாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளின் தொழில் வளர்ச்சி நடவடிக்கை களும், பிரச்சினைகளும் என்ற ஐ. நா. அறிக்கை ஒன்றில் இக் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. இந் நாடுகளில், “ஒரே வகைத் தொழிலில் ஒரு வகுப்பினர் ஈடுபடுதல், மூடநம்பிக்கை, பிற்பட்ட பழக்க வழக்கங்கள், பண்புகள், வாணிப நடவடிக்கைகளில் அக்கறை யின்மை, ஜாதி, வகுப்பு வாத சச்சரவுகள், மத, கலாசார வேறு பாடுகள், அடிமை மனப்பான்மை போன்றவைகளால் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது.” இதன் விளைவாக சமூக, பூகோள ரீதியில் பெயர்ச்சி தடைபட்டு வளர்ச்சி குறைகிறது. இந் நாடுகளில் புத்தாக்க விளைவுகளால் தோன்றும் புதிய பண்புகளை மக்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராய் இல்லை. இந்திய நிலைமையைப் பற்றி A. H. ஹான்சன் குறிப்பிடுகிறார்: “பழமையான பழக்க வழக்கங் களால் வேளாண்மை நடவடிக்கைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன. கிராம மக்கள் விஞ்ஞானத்தை எண்ணி அச்சமடைகின்றனர். எல்லா உயிர்களும் புனிதமானதால் கிருமி நாசினிகளைப் பயன் படுத்தப் பெரும்பாலான குடியானவர்கள் விரும்புவதில்லை. புதிய சீரான விதைகள் குறையுள்ளவை. அவற்றைப் பயன்படுத்துதல் சூதாட்டமாகும். உரங்கள் உதாரணமாக வேளாண்மையில் இடர் விளைவிக்கும். பரிசோதிக்கப்படாத இம் முறைகளைப் பின் பற்றினால் இடர் ஏற்பட்டு வேளாண்மை தோல்வியடையும். தோல்வி என்றால் பட்டினி என்ற பொருள்படும்.” உண்மையில் இது இந்திய விவசாயிகளின் பிற்பட்ட சமூக மனப்போக்கைப் படம்பிடித்துக் காட்டுகிறது. [2]

[1] ராக்னர் நர்க்ஸ், வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்கச் சிக்கல்கள் ப. 1.

[2] ஆல்வின் H. ஹான்சன் (A. H. Hanson) ‘1960ன் பொருளாதார ஆய்வு’ ப. 157-158.

குடும்பம் ஒரு பொருளாதார, சமூக ஸ்தாபனமாக அமைந்து மக்கட் தொகை அதிகரிப்பிற்கும், சேமிப்பு, முதலீடு, தடைபடுவதற்கும் காரணமாக அமைந்துள்ளது. பணம் தங்கமாகவோ, ஆபரணங்களாகவோ, சொத்துகளாகவோ, சேர்த்து வைக்கப்படுகிறது. அந்தஸ்தை நிலைநாட்ட மணவிழா போன்ற வைபவ காலங்களில் செல்வந்தர்கள் மேலான செலவினங்களில் ஈடுபடுகின்றனர். இத்தகைய வீண் செலவுகளை 'டம்ப நுகர்வு' (Conspicuous Consumption) என்று டியூஸன்பரிபோன்ற பொருளாதார அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இதனால் சேமிப்பு, முதலீடு சக்தி செல்வந்தர்களிடையே குறைகின்றது. அறிஞர்கள் 'பகானன்,' 'எல்லிஸ்,' குறிப்பிடுவதுபோல், ஜாதி, மத நம்பிக்கை போன்ற காரணங்களால் உற்பத்திக்கு ஒரு நபருடைய திறன் முழுவதும் பயன்படுத்தப்படுவதில்லை. இதனால் உற்பத்தித் துறையில் திறமை குறைகிறது இத்தகைய சமூக மனப் போக்குகளால் திறமையான நிர்வாகமும், சீரான அரசாங்கமும், திறன் கொண்ட பேரளவு நிறுவனங்களும் தோன்ற வாய்ப்பில்லாமல் போய்விடுகின்றது. இதனால் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படுகின்றது.

கல்வி முறை

மக்களின் பண்புகளின் இயல்பு அவர்கள் கற்றுள்ள கல்வி முறையிலும் பிரதிபலிக்கிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழில் நுட்ப வல்லுநர்கள், மேலாளர்கள் நிர்வாகிகள் பண்பட்ட விவசாயிகள், பயிற்சி பெற்ற மக்கள், ஆகியவர்களின் பற்றுக் குறை மிகவும் தீவிரமாக உள்ளது. இத்தகைய நாடுகளில் உள்ள கல்வி முறையில் பழமையான கல்வி போதனை முறையும், பயிற்சியில்லாக் கல்வி முறையும், இருப்பதால் தொழிலாளர்களின் திறமை குறைந்து இயற்கை வளங்கள் திறம்படப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்படுகின்றன. எனவே, பொருளாதார வளர்ச்சியில் கல்வியின் பங்கு பெரிதும் இன்றியமையாததாக உள்ளது. விஞ்ஞானம், தொழில் நுட்பம் பரவலாக்கப்படவும், வளர்ச்சிக்குத் தேவையான திறன்களை அதிகமாக அளிக்கவும் கல்வி பயன்படுவதோடு மக்களின் மனத்தைப் பண்படுத்தவும் பெரிதும் துணைபுரிகிறது. இதனால் பொருள்சார் நலனைப் பெறுவதற்கு எதிராக உள்ள தடைகள் தாமாகவே நீங்கும் தொழிற் கல்வி வளர்ச்சியால் கைவேலைக்கு (Manual Workr) எதிராக உள்ள தப்பெண்ணம் நீங்கி அதற்கு நல்ல மதிப்பும் ஏற்படும். இதன் விளைவாக நடைமுறை வேலைப் பயிற்சி பெறுதல், போன்றவைகளில் இயற்கையாகவே மக்களுக்கு ஆர்வம் ஏற்பட்டு தொழில் நுட்ப ரீதியான பிற்பட்ட நிலை நீங்கும். பொருளாதார நடவடிக்

கைகளையும், அமைப்புகளையும் மேம்படுத்தும் ஸ்தாபனங்கள் அதிக அளவில் தோன்றும்.

பழமை நோக்குடைய மதங்கள், கடும்உழைப்பு, சேமிப்பு, போன்ற பண்புகளை ஊக்குவிப்பதில்லை. அத்தகைய சமுதாய அமைப்புகள் வேலையை ஒரு பண்பாக எண்ணுவதற்குப் பதிலாக ஒரு கேடாகவே கருதுகின்றனர். அவைகள் ஓய்வு, திருப்தி, சடங்குகள், மதவிழாக்களில் பங்கேற்றல், ஆகியவைகளுக்கு அதிக மதிப்பளிக்கின்றனர். மனித முயற்சியால் முன்னேற்றத்தை அடைவதை அவைகள் நம்புவதில்லை, மனிதன் விதியென்ற சக்திக்கு முன் செயலிழந்து அடிமையாகின்றான். எனவே, வளர்ச்சிக்கு உகந்த சமூகப் பொருளாதார அமைப்புகளின் மாற்றங்களுக்கு இடையூறாக மதக் கருத்துகள் விளங்குகின்றன. டாக்டர் S. ராதாகிருஷ்ணன் குறிப்பிடுவதுபோல் "கிழக்கத்திய கலாச்சாரத்தின் இயல்புகள் வாழ்க்கையை ஏற்படுத்தவும், நிலைபேற்றைப் பெறுவதற்கும் துணைபுரிகின்றன. மேற்கத்திய கலாசாரத்தின் தன்மைகள் முன்னேற்றம், தீரச்செயல், ஆகியவற்றோடு தொடர்பு கொண்டனவாய் உள்ளன"[1] கடைசியாக, புதிதாக விடுதலைப்பெற்ற சிலநாடுகளில் நாட்டுப்பற்று (Nationalism) அதிகரித்துள்ளதால் அது பொருளாதார மாற்றத்திற்குத் தடையாய் உள்ளது. அத்தகையப் பற்று பழைய பண்பாடு, உள்ளூர் கலாச்சாரம், ஆகியவைகளை மேன்மைப்படுத்துவதில் பிரதிபலிக்கிறது.

## 7. பன்னாட்டுச் சக்திகளின் எதிர்விளைவுகள்
## (Repercussions of International Forces)

பொருளாதார அறிஞர்களாகிய மின்ட், (Myint), பிரிபிஸ்க் (Prebisch), சிங்கர் (Singer), W. A. லூவிஸ் (W. A. Lewis), குன்னர் மிர்தல் (Cunnar Mirdal) போன்றவர்கள் வளர்ச்சி குறைந்த நாடுகளை உலகம் சுரண்டும் கோட்பாடு ஒன்றை விளக்கியுள்ளனர். உலகப் பொருளாதாரத்தில் 'சில சமநிலையற்றச் சக்திகள்' (disegualising Forces) ஆதிக்கம் செலுத்துவதால் பன்னாட்டு வர்த்தகத்தின் நன்மைகள் பெரும்பாலும் முன்னேறிய நாடுகளுக்கே கிடைக்கிறது.

வளர்ச்சி குறைந்த நாடுகள் பன்னாட்டுச் சந்தைக்குப் பொருள்களை ஏற்றுமதி செய்யத் தொடங்கியதிலிருந்து அந்நாடுகளின் மற்றத் துறைகள் வளர்ச்சியானது பாதிக்கப்படுகிறது.

1 டாக்டர் S. ராதாகிருஷ்ணன், 'கிழக்கத்திய மதமும் மேற்கத்திய சிந்தனையும் ப. 258.

அதாவது பொருளாதாரத்தின் மற்றத்துறைகளைப் புறக்கணித்து விட்டு ஏற்றுமதித் துறையை வளர்ச்சியடையச் செய்ய இந்நாடுகள் விரும்புகின்றன. இவ்வாறு ஏற்றுமதியையே பெரிதும் நம்பி யிருக்கும் நாடுகள், தங்கள் பொருளின் தேவை, விலைகள். பன்னாட்டுச் சந்தையில் மாற்றமடைவதால், பெரிதும் பாதிக்கப் படுகின்றன. வாணிக ரீதியான சமமின்மை (Cyclical Instability). செலுத்து இருப்புநிலைத் தொல்லைகள், போன்றவைகளால் இந் நாடுகள் நிலையான பொருளாதார வளர்ச்சியைப் பெறமுடிய வில்லை. மந்த காலங்களில் பாதகமான வாணிப மாற்று வீதத்தால் வெளிநாட்டுச் செலாவணி வருவாய் பெரிதும் குறை கிறது. இதனால் பாதகச் செலுத்து இருப்புநிலை ஏற்படுகிறது. மேலும், பன்னாட்டு சந்தையும், தொழில் பூரிப்பால் (Boom) இந் நாடுகள் நன்மையடைய முடியவில்லை. வாணிப மாற்றுவீதத்தில் சீரமைப்பு ஏற்பட்டால் உற்பத்தி, வேலைவாய்ப்பு, அதிகரிக்க வாய்ப்பில்லை. இதற்குக் காரணம் அங்காடி சீர்கேடுகள், போதாத சமூக நலனை மேம்படுத்தும் மூலதனம், அமைப்புமுறைச் சீர்கேடுகள் (Structuralmal-Adjustments), போன்றவைகளாகும். ஏற்றுமதி அதிகரிப்பால் கிடைக்கும் ஊதியம், யூகவாணிகம், டம்ப நுகர்வு (Conspicuous Consumption), நிலச்சொத்துகள், போன்றவைகளில் வீணாக்கப்படுகின்றன, இதனால் பணவீக்க அழுத்தம், முதலீட்டுச் செலவினங்களின் துர்ஒதுக்கீடு, செலுத்து இருப்புநிலைத் தொல்லைகள் போன்ற பிரச்சினைகள் அதிகரிக்கின்றன.

வெளிநாட்டு முதலீடு (Foreign investments)

வளர்ச்சி குறைந்த நாடுகளின் வளர்ச்சிக்கு இடையூறாக (obstacles) இருக்கும் மற்றொரு காரணி வெளிநாட்டு முதலீட்டின் பாதக விளைவுகளாகும். ஏற்றுமதிப் பொருள்களை அதிகரிக்கும் நோக்கத்துடன் வெளிநாட்டு முதலீடு ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால், இதனால் பொருளாதார வளர்ச்சிக்குப் பாதக விளைவுகளே ஏற்படுகின்றன. முதல்நிலைத்துறையின் உற்பத்தி, வருவாய், வாழ்க்கைத்தரம், கணிசமான அளவு உயர்வதில்லை. ஏற்றுமதிப் பொருள்களின் துறையிலும்கூட திறமையற்ற தொழிலாளர்களின் உண்மைக் கூலிகள் குறைவாகவே உள்ளன. இலாபம், நிர்வாக ஊதியம், என்ற பெயரில் ஏராளமான பணத்தை வெளி நாட்டினர் கவர்ந்து செல்கின்றனர். மேயர், பால்டுவின், குறிப்பிடுவதுபோல் "இலாபத்தை இறக்குமதியாக எடுத்துச் செல்லுவதற்குப் பதிலாக, நேரடியாக உள்நாட்டுப் பணத்தை அபகரித்துச் செல்வதால் பொருளாதாரத்தின் உண்மைச் சேமிப்பு ஆற்றல் குறைகிறது."[1]

[1] மேயர், பால்டுவின் (Meier, and Baldwin), 'பொருளாதார வளர்ச்சி, ப. 332.

பேராசிரியர் R. பிரிபிஸ்க் (Prebisch) வளர்ச்சி குறைந்த நாடுகளின் வாணிப மாற்றுவீதம் நெடுநாள்களாகவே சீர்கேடு அடைந்து வருகிறது என்று குறிப்பிடுகின்றார். "கடந்த எழுபது ஆண்டுகளாக வளர்ச்சி குறைந்த நாடுகள் அதிகமான இறக்குமதியால் பெரிதும் பாதிக்கப்பட்டு வருகின்றன. முதல்நிலை உற்பத்தித் தொழில்கள் தங்கள் வளர்ந்துவரும் மக்கட்தொகையைப் பாதுகாக்கக்கூட சக்தியற்றவைகளாய் உள்ளன. தொழில்நுட்ப முன்னேற்றத்தின் பயன் அவர்களுக்குக் கிட்டுவதற்குக்கூட வாய்ப்பில்லை. இத்தொழில்களின் உற்பத்தித்திறனை அதிகரிக்க மேற்கொண்ட முயற்சிகளால் பாதக வாணிப மாற்றுவீதம், வேலையின்மை, பாதகச் செலுத்து இருப்புநிலை ஆகியவைகள் ஏற்பட்டுள்ளன. இதன்விளைவாக இத்தொழிலில் முதலாக்கம் குறைந்து பொருளாதார வளர்ச்சியும் குன்றியுள்ளது."[1]

வளர்ச்சிக் குறைந்த நாடுகளின் வாணிப மாற்று வீதத்தின் நெடுங்காலச் சீர்கேடு, முன்னேறிய நாடுகளுக்குப் பன்னாட்டு வாணிபத்தின் நன்மைகள் சென்றடைந்துள்ளன என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது. இதன் விளைவாக ஏழைநாடுகளின் உண்மை வருவாயின் அளவு குறைந்து அவர்களின் வளர்ச்சிக்கான சக்தியும் குறைந்துள்ளது என்பது வெளிப்படையாகும்.

[1] F. A, மோதா, "வளர்ச்சி குறைந்த நாடுகளின் வளர்ச்சியில் பாதக வருமான மாற்றுவீதத்தின் விளைவுகள்," 'இந்தியப் பொருளாதார வெளியீடு ஜுலை—1956.

# 34. ரோஸ்டோவின் பொருளாதார வளர்ச்சிக் கட்டங்கள்

## (Rostow's Stages of Economic Growth)

பேராசிரியர் W. W. ரோஸ்டோவ் அவர்கள் பொருளாதார வளர்ச்சிச் செயல்முறைக்கு ஒரு வரலாற்றுவழி விளக்கத்தை அளித்துள்ளார். அவர் பொருளாதார வளர்ச்சியின் ஐந்து கட்டங்களைத் (Five Stages) தெளிவாக விளக்கியுள்ளார். அவை களாவன :- *(1)* பழமைச் சமூகம் (Traditional society) *(2)* மேலெழு நிலைக்கு முன் நிபந்தனை (Pre-conditions for take-off) *(3)* மேலெழு நிலை (The take-off) *(4)* பொருளாதார முதிர்ச்சிக்கான இயக்கம் (Drive to maturity) *(5)* உயர் பெரும் நுகர்வுக்காலம் (Age of high mass-Consumption). பொருளாதார வளர்ச்சி யென்பது (Economic growth) பிற்பட்ட, வளர்ச்சிகுன்றிய ஏழ்மையான வேளாண்மை நாடு முற்பட்ட, தொழில் துறையில் முன்னேறிய வளர்ச்சியடைந்த நாடாக மாற்றம் பெறும் செயல் முறையைக் குறிக்கிறதென்பதை ஏற்கெனவே மற்றோர் இடத்தில் ஆராய்ந்துள்ளோம்.

### I. பழமைச் சமூகம்
(The Traditional Society)

ஒரு பழமைச் சமூகமென்பது "நியூட்டனின் விஞ்ஞான, தொழில் நுட்ப மனநோக்கு காலத்திற்கு முற்பட்ட, உற்பத்தி அம்சங்களை மட்டுமே பெற்று வளர்ச்சியடையும் பொருளாதார அமைப்பைக் கொண்ட ஒரு சமூகமென்று" பேராசிரியர் W. W. ரோஸ்டோவ் இலக்கணம் கூறுகிறார்.[1] ஆனால், இத்தகைய சமூகங்களில் பொருளாதார மாற்றமே சிறிதும் இல்லையென்று கூற முடியாது. உண்மையில் இச் சமூகங்களில் அதிக நிலங்கள்

1 W. W. 'ரோஸ்டோவ், 'பொருளாதார வளர்ச்சியின் கட்டங்கள்', 1960, 'பொருளாதார வளர்ச்சியின் செயல் முறைகள்' (Process of Economic growth) 1953.

உழுது பயிரிடப்படவும், வர்த்தகத்தின் பாங்கும் அளவும் அதிகரிக்கவும், செய் பொருள்கள், வேளாண்மைப் பொருள்கள் ஆகியவைகளின் உற்பத்தி அதிகரிக்கவும் வழி உண்டு. மக்கட் தொகை, உண்மை வருவாய் ஆகியவைகளின் அதிகரிப்போடுகூட இப் பொருளாதார நடவடிக்கைகள் விரிவடையும். ஆனால், நவீன விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் முறையாகவும், ஒழுங்காகவும் பயன்படுத்தப் படாததால், "அடையத் தக்க ஒரு நபர் உற்பத்தி அளவிற்கு ஓர் உச்சவரம்பு" இருக்குமென்பதை மறுக்க முடியாது. புதிய கண்டுபிடிப்புகளும், புத்தாக்கங்களும் இச் சமுதாயத்தில் இல்லையென்று கூறமுடியாது. ஆனால், திடஉலகில் நியூட்டன் காலத்திற்குப்பின் தோன்றிய கருவிகள், மக்களின் மனநோக்கு ஆகியவைவே இச் சமுதாயத்தில் காணப்படாதவையாகும். இச் சமுதாயங்களில் சமூக அமைப்பு பல குடும்ப வர்க்கங்களைக் கொண்டதாக அமைந்து, குடும்பப் பிணைப்பு பெரும் பங்கைப் பெற்று விளங்கியது. அரசியல் சக்தி பிராந்தியங்களில் நிலச்சுவான்தார்களிடம் குவிந்து கிடந்தது. போர் வீரர்களும், அரசு ஊழியர்களும் அதிகமான செல்வத்தைப் பெற்று நிலச்சுவான்தார்களை ஆதரித்தனர். மொத்தப் பணிபுரியும் மக்களில் 75 சதவீதத்தினருக்குமேல் வேளாண்மையிலேயே ஈடுபட்டிருப்பார்கள். பிரபுக்கள், அரசு, ஆகியவைகளுக்கு வேளாண்மையிலிருந்துதான் பெருமளவு வருவாய் கிடைத்தது. இது கோயில்களுக்காகவும், போர்களுக்காகவும், இறுதிச் சடங்குகளுக்காகவும், திருமணம் போன்றவைகளுக்காகவும் வீணாகச் செலவிடப்பட்டது.

## II. மேலெழுநிலைக்கு முன்நிபந்தனைகள்
### (Pre-Conditions for Take-off Stage)

இரண்டாவது கட்டம் மாற்றமடையும் காலமாக (Transitional era) அமைந்து நிலையான வளர்ச்சிக்குத் தேவையான முன் நிபந்தனைகளை ஏற்படுத்த வல்லதாக இருக்கும். பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்தும் பதினாறும் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்தும் பிரிட்டன், மேற்கு ஐரோப்பாவில், மெதுவாக நிலையான வளர்ச்சிக்கான முன் நிபந்தனைகள் உண்டாக்கப்பட்டன. இக்காலத்தில்தான் இடைக்காலம் முடிந்து நவீன காலம் தொடங்கியது. நான்கு சக்திகளால் மேலெழு நிலையை அடைவதற்குத் தேவையான முன் நிபந்தனைகள் தோற்றுவிக்கப்பட்டு ஊக்குவிக்கப்பட்டன.

அவைகளாவன :—மறுமலர்ச்சி அல்லது புத்துணர்ச்சி, புது முடியாட்சி, புது உலகம், புது மதம் அல்லது மதச்சீர்திருத்தம்.

இச் சக்திகள் நம்பிக்கை, அதிகாரம் ஆகியவைகளிருந்த இடத்தில் பகுத்தறிவு போன்ற இயல்புகளை ஏற்படுத்தித் தேசிய அரசுகள் தோன்றுவதற்கு அடிகோலின. புதிய கண்டுபிடிப்புகள் ஏற்படுவதற்கு வகைசெய்து பகுத்தறிவுடைய வகுப்பினரைப் புதுவர்த்தக நகரங்களில் பெருமளவு பெருகுவதற்கு இக் காலம் வகைசெய்தது. இச் சக்திகள் சமூகமன நோக்கு, எதிர் நோக்குகள், அமைப்பு,குண இயல்புகள் ஆகியவைகளில் மாற்றத்தைஏற்படுத்தக் காரணமாயிருந்தன. முன் நிபந்தனைகள் உள்ளார்ந்த சக்திகளால் ஏற்படாமல் சில வெளிப்படையெடுப்புகளாலும் ஏற்படுகின்றன. சான்றாக, நெப்போலியனின் ஆதிக்கத்தால் ஐரோப்பாவில் வளர்ச்சிக்கான முன் நிபந்தனைகள் முடிவுற்றன. நெப்போலியனின் வெற்றிப்படைகள் புதுக்கருத்துகளையும், எண்ணங்களையும் உருவாக்கி ஐரோப்பியப் பழமைச்சமூக அமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்தி ஜெர்மனி, இத்தாலி ஆகிய நாடுகளின் ஒருங்கிணைப் பிற்கு வகைசெய்தன.

மேலெழுநிலைக்கு முன் நிபந்தனைகளை ஏற்படுத்தும் செயல் முறை கீழ்க்கண்ட வழிகளில் அமைகிறது. பொருளாதார முன்னேற்றம் பெறவேண்டுமென்ற எண்ணம் மக்களிடையே பரவுகின்றது. தேசிய மரியாதையை அதிகரிக்கவோ, தனியார் இலாபத்தைப் பெருக்கவோ, பொது நலனை மேம்படுத்தவோ, வளர்ச்சியடைய வேண்டுமென்ற எண்ணம் மக்களிடையே உருப் பெறுகிறது. நவீன நடவடிக்கைகளை அதிகப்படுத்தக் கல்வியும் ஓரளவு வகை செய்கிறது. புதுவகைத் தொழில்திறம் கொண்டவர்கள் தனியார், அரசாங்கத் துறைகளில் ஈடுபட்டு வளர்ச்சியை அதிகரிக்கின்றனர். அவர்கள் சேமிப்பைச் சேகரித்து இலாபத்தைப் பெருக்குவதில் இடர்களைத் தாங்கி நவீனமயத்தை உருவாக்க வகைசெய்கின்றனர். வங்கிகளும் மற்ற நிறுவனங்களும் மூல தனத்தைச் சேகரிக்கின்றன. போக்குவரத்து, செய்தித் தொடர்பு மூலப்பொருள்கள் போன்றவைகளின் முதலீடுகள் அதிகரிக்கின்றன. உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத்தின் அளவு விரிவடைகின்றது. புதுமுறைகளைப் பயன்படுத்தும் நவீன செய்பொருட் தொழில்கள் சிற்சில இடங்களில் தோன்றுகின்றன. நிலையான தொழில் மயத்தைப் பெற மூன்று தொழில்லாத துறைகளில் தீவிர மாற்றங்கள் ஏற்பட வேண்டுமென்று ரோஸ்டோவ் குறிப்பிடு கின்றார். முதலாவதாக சமூக நலனை மேம்படுத்தும் மூலதனம் (Social Overhead Capital) பெருமளவில் அதிகரித்து அங்காடி விரிவடைய வேண்டும். இயற்கை வளங்களை ஆக்கத்திற்காக முழு அளவில் பயன்படுத்த அரசே பொருளாதாரத் துறையில் திறமையாக ஈடுபடவேண்டும். இரண்டாவதாக,

வேளாண்மையில் தொழில் நுட்பப் புரட்சி ஏற்பட்டு, வேளாண்மை உற்பத்தி பெருமளவு அதிகரித்து, பெருகும் மக்கட் தொகையின் தேவைகளைப் பூர்த்தி செய்யும். மூன்றாவதாக, திறமையான உற்பத்தியாலும், ஏற்றுமதிக்கான அங்காடி வசதியாலும், நிதியிடப்பட்ட, இறக்குமதி அதிகரிப்பும் ஏற்பட வேண்டும்.

கிடைக்கும் இலாபத்தை இலாபகரமான முறையில் மீண்டும் மறு முதலீடு செய்வதன்மூலம் நவீன தொழில் பெருக்கமும் தொடர்ந்த வளர்ச்சியும் ஏற்படும். பொருளாதார மாற்றத்தின் அளவு முதலீட்டு வீதம் எந்த அளவு மக்கட் தொகை வளர்ச்சியை விட அதிகரிக்கிறதோ அதைப்பொறுத்துதான் விளங்குமென்று திரு. ரோஸ்டோவ் குறிப்பிடுகிறார். முன் நிபந்தனைகளை ஏற்படுத்துவதில் சமூக அரசியல் அம்சங்களின் முக்கியத்துவம் மேலே கொடுக்கப்பட்டிருப்பினும் அரசியல் அம்சங்கள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பெரும் விளைவுகளை ஏற்படுத்துகின்றன. காலனிப் பிரதேசங்களிலும் வளர்ச்சி குறைந்த நாடுகளிலும் வெளி நாட்டு ஆதிக்கத்தை எதிர்த்து ஏற்பட்ட 'எதிர்நோக்கு தேசியம்' (Reactive Nationalism) மாற்றத்தை ஏற்படுத்தும் பலம் வாய்ந்த சக்தியாக விளங்கி, வளர்ச்சிக்கு வகைசெய்தது. ஜப்பானில் அதிக இலாபத்தினாலோ, அல்லது புதிய செய்பொருள் நுகர்வுப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டதாலோ பொருளாதார மாற்றம் ஏற்படவில்லை. பன்னாட்டுப் பரிசோதனை விளைவால் தான் (Demonstration Effect) ஜப்பானில் தகுந்த சமூக, பொருளாதார மாற்றம் ஏற்பட்டு, பொருளாதார வளர்ச்சி விரைவாக ஏற்பட்டது. சைனாவில் 1840-ன் ஆரம்பத்தில் ஏற்பட்ட அபினிப் போர் (Opium war) இதற்குப் பத்து ஆண்டுகளுக்குப் பின் கம்மோடோர் பெர்ரியின் (Commodore Perry) ஏழு கறுப்புக் கப்பல்கள் ஆகியவைகளின் விளைவால் சைனாவில் நவீனமயம் (Modernisation) ஏற்பட்டது.

காலனிப் பிரதேசங்களில் வெளிநாட்டினர் சமூக நலனை மேம்படுத்தும் மூலதன (Social Overhead Capital) வளங்களைத் தங்கள் சுயநலனுக்காக மேம்படுத்தியதால் இப் பிரதேசங்களில் மாற்றம் ஏற்பட்டது. இதனால் பாரம்பரியக் கருத்துகளைக் கொண்ட பழமைச் சமுதாயம் மாற்றமடையும் பாதையில் சென்று முன்னேற்றமடைய இது துணை புரிந்தது. கல்வியின் வளர்ச்சியினால் இப் பகுதிகளில் வாழும் மக்களின் சிந்தனை, அறிவு, மனநோக்கு ஆகியவைகள் படிப்படியாக மாற்றமடைகிறது. இதனால் காலனி ஆட்சிக்கு எதிரான தேசிய உணர்வு மக்க

ளிடையே சுடர்விட்டு எரிகிறது. பன்னாட்டுப் பரிசோதனை விளைவினால் (International Demonstration Effect) மக்கள் நவீன தொழில் நுட்ப உற்பத்தி முறையையும், நவீன தொழில்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களையும் பெரிதும் விரும்புகின்றனர்.

## III. மேலெழு நிலை

(Take-off Stage)

ஒரு பொருளாதாரம் வெளி உதவியைப் பெரிதும் எதிர்பார்க்காமல் தானாக இயங்கி வளர்ச்சி பெறும் நிலையே மேலெழு நிலையாகும். ஆகாய விமானம் ஒன்று முதலில் தரையில் பூமியின் ஆதரவுடன் இருக்கும். பின் அது மேலெழுந்து தானாகப் பறக்க அது சக்தி பெற்று விளங்குகிறது. அதேபோல் ஒரு பொருளாதாரமும் முதலில் பழமைப் பாங்கை மாற்றியமைத்து வெளிநாட்டு உதவியைப் பெரும்பாலும் நம்பியிருக்காமல் பின் தானாக வளர்ச்சி பெறும் நிலையைப் பெறுவதே மேலெழு நிலையாகும். ஒரு சமுதாயத்தின் வாழ்வில் மேலெழு நிலை ஒரு மாபெரும் திருப்பமாகும். இக் கட்டத்தில் வளர்ச்சி சாதாரணமாக ஏற்பட்டு, பழமைப் பழக்க வழக்கங்கள், நிறுவனங்கள் ஆகியவைகளுக்கு எதிராக நவீனமயத்தின் சக்திகள் வலுப்பெற்று எழுச்சி பெறுகின்றன. பழமைச் சமுதாயத்தின் பாரம்பரிய இயல்புகளும் குணங்களும் மகத்தான மாற்றம் பெறுகின்றன. சமூகத்தின் அமைப்பில் கூட்டு வட்டியைப் (Compound Interest) போன்ற விரைவான பொருளாதார வளர்ச்சி தொடர்ந்து பன்மடங்கு பெருகுகிறது. "உற்பத்தி முறையில் ஏற்பட்ட தீவிர மாற்றங்களின் நேரடி விளைவாக ஏற்படும் தொழிற் புரட்சியை" (Industrial Revolution) பிறிதோரிடத்தில் திரு. W. W. ரோஸ்டோவ் மேலெழுநிலை என்று விளக்குகிறார். இதன் விளைவாக மிகக் குறுகிய காலத்தில் மகத்தான விளைவுகள் பொருளாதாரத்தில் ஏற்படுகிறது.

மேலெழு நிலையின் காலம் மிகக் குறுகிய காலமாக இருக்குமென்று கருதப்படுகிறது. ஏறக்குறைய இருபது ஆண்டுகள் இவ் வளர்ச்சிக் கட்டம் ஒரு பொருளாதாரத்தில் இருக்குமென்றும் ரோஸ்டோவ் குறிப்பிடுகிறார். எந்தெந்த நாடுகள் எவ்வெக் காலங்களில் மேலெழு நிலையை ஏறக்குறைய பெற்றிருக்கின்றன என்பது பின்வருமாறு :

| நாடு | | மேலெழுநிலை |
|---|---|---|
| பிரிட்டன் (Great Britain) | ... | 1783—1802 |
| பிரான்சு | ... | 1830—1860 |
| பெல்ஜியம் | ... | 1833—1860 |
| ஐக்கிய நாடுகள் | ... | 1843—1860 |
| ஜெர்மனி | ... | 1850—1873 |
| ஸ்வீடன் | ... | 1868—1890 |
| ஜப்பான் | ... | 1878—1900 |
| ரஷ்யா | ... | 1890—1914 |
| கானடா | ... | 1896—1914 |
| அர்ஜன்டைனு | ... | 1935 — |
| துருக்கி | ... | 1937 — |
| இந்தியா, சீனு | ... | 1952 — |

மேலெழு நிலையை அடைவதற்குத் தேவையான மூன்று முக்கிய நிபந்தனைகள் உண்டு. அவைகள் வருமாறு :

(1) உற்பத்தி முதலீட்டு வீதத்தில் (Rate of productive investment) தேசிய வருவாயில் 5 சதவீதத்திலிருந்து 10 சதவீதத்திற்கு மேற்பட்ட உயர்வு இருக்கவேண்டும்.

(2) அதிக வளர்ச்சி வீதத்தைக் கொண்ட ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட செய்பொருள் உற்பத்தித் துறைகளின் வளர்ச்சி இருக்கவேண்டும்.

(3) நவீன துறைகளில் பெருக்கத்தை ஏற்படுத்தி வளங்களை முழு அளவில் பயன்படுத்தத் தக்க அரசியல், சமூக நிறுவன அமைப்பு விரைவாக உருவாக வேண்டும். இவைகளை விளக்கமாக இனி அறியலாம்.

1. பத்து சதவீதத்திற்கு மேற்பட்ட நிகர முதலீட்டு வீதம் (Rate of net investment over 10% of National Income)

முதலாவதாக, மக்கட் தொகை வளர்ச்சியைக் காட்டிலும் ஒரு நபர் உற்பத்தி (Per-Capital output) பெருமளவு அதிகரித்து,

தலா வருவாயின் மட்டம் உயர் அளவில் நிலைநாட்டப்பட வேண்டும். பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் இறுதி நிலை முதல் உற்பத்தி விகிதம் 3·5:1 இருந்தால் மேலும் மக்கட் தொகை வளர்ச்சி ஆண்டொன்றுக்கு 1—1·5 சதவீதமாக அதிகரித்தால் ஒரு நபர் நிகர தேசிய உற்பத்தியை நிலையாகப் பெற, நிகர தேசிய உற்பத்தியில் 3·5 சதவீதத்திலிருந்து 5·2 சதவீதம் முதலீடு செய்யப்பட வேண்டும். ஒரு நபர் நிகர தேசிய உற்பத்தியில் ஆண்டொன்றுக்கு 2 சதவீத அதிகரிப்பைப் பெற நிகர தேசிய உற்பத்தியில் 10·5 முதல் 12·5 சதவீதம் முதலீடு செய்யப்படவேண்டும். எனவே, வளர்ச்சி குறைந்த நாடுகளில் மக்கட் தொகை விரைவாக அதிகரிப்பதால் பொருளாதாரத் தேக்கத்தைப் போக்க நிகர தேசிய உற்பத்தியில் 5 சதவீதத்திலிருந்து 10 சதவீதம் முதலீடு செய்யவேண்டும்.

மேற்குறிப்பிட்ட ரோஸ்டோவின் மாதிரி விளக்கம், கூடுதல் முதல்-உற்பத்தி விகிதம், மக்கட் தொகை வளர்ச்சி வீதம், ஆகிய இரண்டும், சமமாக, மாறுமல் ஒரே நிலையில் இருக்கிறதென்ற கருத்தில் கூறப்பட்டவையாகும். மேலெழு நிலையின்போது முதல்—உற்பத்தி விகிதம், முதலீட்டுப் பாங்கு மாறுவதால் குறைகிறது. எனவே, 5 சதவீத முதல் 10 சதவீத நிகர முதலீட்டு அதிகரிப்பு மக்கட் தொகை வளர்ச்சியைவிட நிச்சயம் அதிகமாக இருக்கும்.

2. முன்னேடித் துறைகளின் வளர்ச்சி

மேலெழு நிலையின் மற்றொரு நிபந்தனை ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட பிரதான துறைகளின் வளர்ச்சியாகும். இத் துறைகளின் வளர்ச்சியைப் பொருளாதார வளர்ச்சிக் கட்டங்களின் பின்னப்பட்ட எலும்பு அமைப்பு (analytical bone structure) என்று ரோஸ்டோவ் கருதுகிருர். ஒரு பொருளாதாரத்தில் பொதுவாக மூன்று முக்கியத் துறைகள் இருக்கின்றன.

(a) முதல் நிலை வளர்ச்சித் துறைகள் (Primary growth sectors) : இத் துறையில் புத்தாக்கங்களாலோ அல்லது புதிய வளங்களைப் பயன்படுத்துவதாலோ, மற்றத் துறைகளைக்காட்டிலும் இத் துறையில் அதிக வளர்ச்சி ஏற்படுகிறது. பிரிட்டன், புது இங்கிலாந்து ஆகிய இடங்களில் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் பருத்தி நெசவுத் தொழில் வளர்ச்சியடைந்தது இதற்குச் சான்றாகக் கூறலாம்.

(b) துணை வளர்ச்சித் துறைகள் (Supplementany growth sectors): முதல்நிலை வளர்ச்சித் துறைகளின் வளர்ச்சியின் விளைவாக இத் துறையில் விரைவான வளர்ச்சி ஏற்படுகிறது. சான்றாக இரயில்வேக்களின் வளர்ச்சியை முதல்நிலை வளர்ச்சித் துறைகளாகவும், அதனால் ஏற்படும் இரும்பு நிலக்கரி எஃகுத் தொழில்களின் வளர்ச்சியைத் துணை வளர்ச்சித் துறை என்றும் கருதலாம்.

(c) பிறப்பிக்கப்பட்ட வளர்ச்சித் துறைகள் (Derived growth sectors): மொத்த வருவாய், மக்கட் தொகை, தொழில் உற்பத்தி அல்லது நிலையாக அதிகரிக்கும் ஓர் அம்சம் ஆகியவைகளின் வளர்ச்சியில் வளர்ச்சிநிலையாக இத் துறையில் ஏற்படுகிறது. சான்றாக மக்கட் தொகையின் அதிகரிப்பிற்கேற்ப உணவு, வீடு கட்டுதல் ஆகிய துறைகளில் உற்பத்தி அதிகரிக்கிறது.

இச் சிறப்புத் துறைகளின் வளர்ச்சி ஒரு துறையில் மட்டும் ஏற்படாமல் பல துறைகளின் மூலமாக ஏற்படுகிறது. எனவேதான் பொருளாதாரம் மிகக் குறுகிய காலத்தில் மேலெழு நிலையை அடைகிறது. இங்கிலாந்தில் பருத்தி நெசவுத் தொழில்கள், ஐக்கிய நாடுகள், ரஷ்யா, ஜெர்மனி, பிரான்ஸ் ஆகியநாடுகளில் இரயில்வேக்களும், ஸ்வீடனில் நவீன மரம் வெட்டும் தொழிலும் வரலாற்று வழியாக வளர்ச்சியடைந்துள்ளன. டென்மார்க் நியூசிலாந்து ஆகிய நாடுகளில் ஏற்பட்ட விரைவான பொருளாதார வளர்ச்சிக்குக் காரணம் அங்கு விஞ்ஞான முறையிலேயே முட்டைகள், வெண்ணெய், இறைச்சி ஆகியவைகள் தயாரிக்கப் படுகின்றன. இம் முன்னோடித் துறைகளில் விரைவான வளர்ச்சி ஏற்பட நான்கு அடிப்படைக் காரணங்களுண்டு. முதலாவதாக, இத் துறைகள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு உறுதித் தேவை (Effective Demand) அதிகரிக்க வேண்டும். இரண்டாவதாக, இத் துறைகளில் ஆக்கச் சக்தி அதிகரிக்கப்பட வேண்டியதோடு புதுமை உற்பத்தி அம்சங்கள் (Production Function) மேற் கொள்ளப்படவேண்டும். மூன்றாவதாக, இத் துறைகளில் மேலெழு நிலையேற்படப் போதிய ஆரம்ப முதலும், முதலீட்டு இலாபமும் இருக்கவேண்டும். நான்காவதாக, தொழில் நுட்ப மாற்றங்களின் மூலமாக இம் முன்னோடித் துறைகள் மற்றத் துறைகளில் உற்பத்திப் பெருக்கத்தை உட்படுத்த வேண்டும்.

3. பெருக்கத்தை ஏற்படுத்தும் கலாச்சார அமைப்பு
(Cultural Frame Work that exploits expansion)

நவீனத் துறையில் பெருக்கத்தை ஏற்படுத்தும் உணர்ச்சி ஆர்வத்தை முழு அளவில் பயன்படுத்தத்தக்க கலாச்சார

அமைப்பு உருவாக வேண்டியது மற்றொரு நிபந்தனையாகும். இதற்கு அதிகரிக்கும் வருமானத்திலிருந்து அதிகச் சேமிப்பைச் சேகரிக்கப் பொருளாதாரத்திற்குத் தகுதியேற்பட்டுச் செய் பொருள்களுக்கு உறுதித் தேவை அதிகரிக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். மேலும், முன்னோடித் துறைகளின் பெருக்கத்தின் மூலமாகப் புறச் சிக்கனங்கள் (External Economics) அனைத்தையும் ஏற்படுத்திப் பயன் பெறவேண்டியது அவசியமாகும். சமூகத்தின் பொருளாதார அமைப்பின் இருதயத்தில் பல்வேறு மாற்றங்களை ஏற்படுத்தி, அரசியல், சமூக, கலாச்சார, வெற்றியைப் பெற்றுப் பொருளாதாரத்தை நவீனப்படுத்திப் புதுக் குறிக்கோள்களை அடைய நவீனத் தொழில் நுட்பத்தின் தந்திரங்களைத் துறைகளில் விரிவாக்க வேண்டியது மேலெழு நிலைக்கு மிகவும் அவசியமாகும் என்று ரோஸ்டோவ் குறிப்பிடுகிறார்.[1]

எனவே தீவிரத் தூண்டுதலின் துவக்கத்தால் மேலெழு நிலை ஏற்படுகிறது. ஓர் முன்னோடித் துறையின் வளர்ச்சியாலோ அல்லது ஓர் அரசியல் புரட்சியாலோ மக்கட் தொகை வளர்ச்சியை விட மிஞ்சும். தேசிய வருவாயில் 10 சதவீத நிகர முதலீட்டு விகிதத்திலேற்படும் உயர்வோ மேலெழு நிலையைத் தோற்று விக்கிறது.

## IV. முதிர்ச்சிக்கான இயக்கம்
## (Drive to Maturiy)

இக் காலத்தில் ஒரு சமூகம் அதன் எல்லா வளங்களையும் நவீனத் தொழில் நுட்பத்தைத் திறம்படப் பயன்படுத்தி வளர்ச்சியைப் பெருக்குகிறது. இக் காலத்தில் நிலையான பொருளாதார வளர்ச்சி 40 ஆண்டுகளுக்கு மேற்பட்டுப் பொருளாதாரத்தை வலுப்பெறச் செய்கிறது. பழைய தொழில் நுட்ப உற்பத்தி முறை மாறி புதுமைத் தொழில் நுட்ப உற்பத்தி முறை இடம் பெறுகிறது. புதிய முன்னோடித் துறைகள் உருவாகின்றன. நிகர முதலீட்டு வீதம் தேசிய வருவாயில் 10 சதவீதத்திற்குமேல் அதிகரிக்கும். எதிர்பாராத அதிர்ச்சிகளையும் பொருளாதாரம் தாங்கவல்ல சக்தி பெறுகிறது. கீழ்க்கண்ட நாடுகளின் பல்வேறு காலங்களில் தொழில் நுட்பங்கள் முதிர்ச்சி ஏற்பட்டுள்ளதென்று திரு.ரோஸ்டோவ் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

1 W. W. ரோஸ்டோவ் 'பொருளாதார வளர்ச்சிக் கட்டங்கள்' 1960, ப. 58.

| நாடு | காலம் |
|---|---|
| பிரிட்டன் | 1850 |
| ஐக்கிய நாடுகள் | 1900 |
| ஜெர்மனி | 1910 |
| பிரான்ஸ் | 1910 |
| ஸ்வீடன் | 1930 |
| ஜப்பான் | 1940 |
| ரஷ்யா | 1950 |
| கானடா | 1950 |

ஒரு நாடு தொழில் நுட்ப முதிர்ச்சிக் கட்டத்தை அடையும் போது மூன்று மகத்தான மாற்றங்கள் ஏற்படுகின்றன.

முதலாவதாக, பணிபுரிவோரின் குண இயல்புகள் மாறுகின்றன. இவர்கள் திறனுள்ளவர்களாகவும் வலுப்பெறு கின்றார்கள். மக்கள் கிராமங்களைவிட நகரங்களில் வாழ விரும்புகின்றனர். உண்மைக் கூலிகள் அதிகரிக்கின்றன. அதிகப் பொருளாதாரச் சமூகப் பாதுகாப்பைப் பெறத் தொழிலாளர்கள் தங்களுக்குள்ளே அமைப்பை ஏற்படுத்துகின்றனர். இரண்டாவதாக, தொழில் துணிவோரின் குண இயல்புகள் மாற்றம் பெறுகின்றன. கடுமையான பெரும் உழைப்பு மேற்கொள்ளும் தொழிலதிபர்கள் மென்மைக் குணமும், சாந்தமும், திறமையும் கொண்ட தொழில் துணிவோர்களாக மாற்றம் பெறுகின்றனர். மூன்றாவதாக, தொழில் மயத்தின் அற்புதங்களில் சலிப்புற்ற சமூகம் ஒரு புதிய மாற்றத்தை விரும்புகின்றது.

## V. உயர்பெரும் நுகர்வுக் காலம்
## (The Age of High Mass-Consumption)

உயர்பெரும் நுகர்வுக் காலத்தில் மக்கள் நகரப்பகுதிகளுக்குக் குடிபெயர்தல், மோட்டார் வாகனங்கள் நிரந்தர நுகர்வுப் பொருள்கள் (Durable consumer goods), வீட்டுப் பழக்கப் பொருள்கள், ஆகியவைகள் அதிக அளவில் பயன்படுத்தப் படுகின்றன. இக் காலத்தில் சமூகத்தின் நிலையான கவனம், அளிப்பிலிருந்து தேவைக்கும், உற்பத்திப் பிரச்சினைகளிலிருந்து நுகர்வு, நலன் (welfare) பிரச்சினைகளுக்கு மாற்றமடைகிறது. முதிர்ச்சிக்கு மேற்பட்ட இக் காலத்தில் நலனை அதிகரிக்கவல்ல

மூன்று சக்திகள் தெளிவாகக் காணப்படுகின்றன. முதலாவதாக, தேசிய எல்லைகளுக்கு வெளியேயுங்கூட அதிகாரத்தையும் செல்வாக்கையும் பெருக்க வேண்டுமென்ற ஆர்வம் தேசியக் கொள்கையின் அம்சமாக விளங்குகிறது. இரண்டாவதாக, உயர்வீதவரி (Progressive taxation), அதிக சமுதாயக் காப்பீடு, தொழிலாளர்களுக்கு ஓய்வு ஆகியவைகளின் மூலம் தேசிய வருவாயைச் சமமாகப் பங்கிட்டு மக்கள் நலம் பேணும் அரசு (welfare state) ஏற்படுத்தப் படுகிறது. கடைசியாக, புதுவர்த்தக நிலையங்கள், மலிவான மோட்டார் வாகனங்கள், வீடுகள், மின்விசையில் இயக்கப்படும் ஏராளமான மனைப் பயன் சாதனங்கள், போன்ற முன்னேடித் துறைகள் ஆகியவைகள் உருவாக்கப்படுவதற்கு வகைசெய்யப் படுகின்றது. நிரந்தர நுகர்வு, பொருள்களின் பெருமளவு நுகர்வு, நிலையான முழுவேலை நிலை, அதிகரிக்கும் பாதுகாப்பு உணர்ச்சி, ஆகியவைகளால் இச் சமுதாயத்தில் மக்கட்தொகை வளர்ச்சிவீதம் அதிகரிக்கிறது. இதனுல் சமுதாயத்தில் மக்கட்தொகை எழுச்சி ஏற்படுகிறது.

வரலாற்றுப் பாதையில் அமெரிக்க ஐக்கிய நாடுகள்தான் 1920-ல் முதலாவதாக உயர்பெரும் நுகர்வுக் காலத்தைப் பெற்றது. அதற்கடுத்தபடியாக பிரிட்டன் 1930-லும் ஜப்பானும், மேற்கு ஐரோப்பாவும் 1950-லும், சோவியத் ரஷ்யா ஸ்டாலினின் மறைவுக்குப் பின்பும், இக் காலத்தை எய்தின.

## ஆய்வுரை

ரோஸ்டோவின் பொருளாதார வளர்ச்சிக் கட்டங்கள் சமீப காலத்தில் பொருளாதார இலக்கியத்தில் பெரும்பாலோரால் அறியப்பட்டுப் பெருமளவில் பரவி, அதிக அளவில் விவாதிக்கப் படுகிறது. ரோஸ்டோவால் குறிப்பிடப்பட்ட ஐந்து வளர்ச்சிக் கட்டங்களாகப் பொருளாதார வரலாறு பிரிக்கப்படுவது எந்த அளவு ஏற்றுக்கொள்வதென்பது சர்ச்சைக் குரியதாக உள்ளது. பிறப்பு, இறப்பு அல்லது குழந்தைப்பருவம், இளமைப்பருவம், முதிர்ச்சி, வயோதிகம், போன்ற ஓர் அமைந்த தொடர்ச்சியை இக் கட்டங்கள் பின்பற்றுகின்றனவா என்பது ஐயப்பாட்டிற்குரிய தாக உள்ளது. ஒரு கட்டம் சரியாக முடிந்து அடுத்த கட்டம் ஏற்படுகின்றதா என்றுகூடத் துல்லியமாகக் கூறமுடியாது. இக் கட்டங்களை விரிவாக இனி விவாதிக்கலாம்.

(a) ஐக்கியநாடுகள், கனடா, நியூசிலாந்து, ஆஸ்திரேலியா போன்ற ஏராளமான நாடுகள் பழமைச் சமுதாயங்களின்றேயே

தோன்றியுள்ளன. அவைகள் ஏற்கெனவே முன்னேறியிருந்த இங்கிலாந்து நாட்டிலிருந்து முன் நிபந்தனைகளைப் பெற்றுக் கொண்டன. எனவே வளர்ச்சி பெறுவதற்கு ஒரு நாடு முதல் கட்டத்தைக் கடந்து செல்லவேண்டிய அவசியமில்லை,

(b) முன் நிபந்தனைகள் விளக்கத்தில், இவைகள் மேலெழு நிலைக்கு முன்பே ஏற்பட்டிருக்க வேண்டுமென்கின்ற அவசியமில்லை. சான்றாக மேலெழு நிலையை அடைவதற்கு முன்பே வேளாண்மைப் புரட்சி, சமூக நலனை மேம்படுத்தும் மூதல் சேர்க்கை ஆகியவைகள் ஏற்பட்டிருக்க வேண்டுமென்கிற தேவையில்லை. உண்மையில் பல நாடுகளின் அனுபத்தில் மேலெழு கட்டத்திலகூட வேளாண்மை தொடர்ந்து வளர்ச்சியடைந்து வந்ததைக் காணமுடிகிறது. நியூசிலாந்து, டென்மார்க்கில் வேளாண்மை வளர்ச்சியினால்தான் மேலெழுநிலை ஏற்பட்டுள்ளது. மேலெழுநிலையின்போது இரயில் வேக்கள் போன்ற சமூக மூலதனம் முன்னோடித் துறைகளில் ஒன்றாக அமைகிறது. எனவே பல்வேறு கட்டங்களுக்கிடையே ஓரளவு குழப்பம் காணப்படுகிறது.

(c) மிகவும் விவாதிக்கப்பட்டு, சர்ச்சைக்குரிய பகுதி மேலெழு கட்டமாகும். பொது மக்களின் மனத்தைப் பெரிதும் அலைக் கழிப்பது இக் கட்டமாகும். சுய உறுதிகொண்ட வளர்ச்சியை முயற்சியின்றி அடையவேண்டுமென்ற நவீன சிந்தனை இதில் காணப் படுகிறது. ரோஸ்டோவ் குறிப்பிட்ட மேலெழுநிலைக் காலங்களைப் பொருளாதார வரலாற்று நிபுணர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. ஒவ்வோர் அறிக்கையிலும் வருடங்கள் வேறுபடுகின்றன. இந்தியா மேலெழு நிலையை அடைந்த காலம் முதலில் 1937 என்றும், பின்னறிக்கையில் 1952 என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. ரோஸ்டோவ் கூறிய காலங்களைச் சரியாகத் தீர்மானிக்கப் பல ஆண்டுகளின் ஆராய்ச்சி தேவை. வரலாற்று மரபுரிமை, நவீன பொருளாதார வளர்ச்சி முறையில் நுழையும் காலம், பிற்பட்ட நிலையின் அளவு போன்ற உண்மை அம்சங்களின் விளைவுகளை மேலெழு ஆய்வு கவனத்தில் கொள்ளத் தவறிவிட்டது. மேலெழு நிலைக்குத் தேவையான நிபந்தனைகளில் குறைபாடுகள் உண்டு. முதலாவதாக, முதலீட்டுவீதம் தேசிய வருவாயில் 10 சதவீதம் அதிகரிக்க வேண்டுமென்பது துல்லியமான கணக்கீடல்ல. தாஸ் குப்தா குறிப்பிடுவதுபோல் 10 சதவீத வருடாந்திரச் சேமிப்பு வளர்ச்சியினால் தலாவருவாய் அதிகரிக்குமென்று எவ்வாறு கூற முடியும்?[1]

1 A. K. தாஸ்குப்தா. 'திட்டமும் பொருளாதார வளர்ச்சியும்' ப. 58.

தொழில் மயத்தின் துவக்கத்தில் சேமிப்பு-வருவாய் விகிதம் பெருமளவு அதிகரிக்கும் என்பதற்கு வரலாற்றுச் சான்றுகள் எதுவும் இல்லை. இதற்கு மாருக வளர்ச்சி ஏற்படும் போது இவ் விகிதம் படிப்படியாகத்தான் அதிகரிக்கிறது. இரண்டாவதாக, பொருளாதார வளர்ச்சியின் போது ஒரு சில முன்னேடித் துறை களே பொருளாதார வளர்ச்சியை எப்போதும் தீர்மானிக்கின்றன என்பது உண்மையல்ல.

(d) சுய ஊக்கம் கொண்ட வளர்ச்சிக் கட்டம் (Stage of Self-sustained growth) மக்களைத் தடுமாற்றமடையச் செய்து, தூர்வழி காட்டுகிறது. அது மேலெழு நிலையின் எல்லா அம்சங்களையும் பெற்றுள்ளது. அவ்வாறு இருக்கும் போது சுய ஊக்கமுடைய ஒரு தனி வளர்ச்சிக் கட்டம் என்பது தேவையில்லை. மேலெழு நிலைக் கட்டத்திலேயே ஒரு நாடு சுய ஊக்கமுள்ள நாடாக முடியும் பேராசிரியர் கஸ்னட்ஸ் (Kuznets) குறிப்பிடுவது போல், எந்த வளர்ச்சியும் சுய ஊக்கமுடையதாகவோ அல்லது சுய வரையறை (self-limiting) கொண்டதாகவோ இல்லை.

(e) உயர் பெரும் நுகர்வுக் காலத்தில் ஆஸ்திரேலியா, கனடா, போன்ற சில நாடுகள் முதிர்ச்சியடைவதற்கு முன்பே இக் கட்டத்தை அடைந்து விட்டதாக விளங்குவது விவாதத்திற் குரியதாகும். பெரும் நுகர்வுக் காலமென்பது கருத்துவழிக் கொள்கையே அன்றி வேறென்றுமில்லை என்று ஆய்வாளர் ஒருவர் குறிப்பிடுகின்ருர்.

## மேலெழு நிலையின் முக்கியத்துவம்

தொழில் துறையில் வளர்ச்சியடையா நாடுகளுக்கு மேலெழு நிலைக் கருத்து மிகவும் பொருத்தமானதாக உள்ளது. திரு. தாஸ்குப்தா குறிப்பிடுவது போல் இச் சொல் துல்லியமான இலக்கணத்தைத் தராவிட்டாலும், வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சி நடைமுறையை அறிந்து கொள்வதற்கு மிகவும் பயனுள்ள கருத்தாக உள்ளது. மேலெழு நிலைக்கான மூன்று முக்கிய நிபந்தனைகளில் முதலிரண்டு அம்சங்கள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழில் மய நடவடிக்கைகளை அதிகரிக்கப் பெருந்துணை புரிகின்றன. அதாவது தேசிய வருவாயில் 10 சதவீதத்திற்கு மேற்பட்ட முதலாக்கம், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட முன்னேடித் துறைகளின் வளர்ச்சி தொழில் மயத்தைச் சாதிக்க இன்றியமையாதவைகளாகும். வளர்ச்சி குறைந்த நாடு களுக்கு மூன்றுவது நிபந்தனையும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த

தாகும். இந் நாடுகளில் பணமுறை, அரசியல் நிறுவனங்கள், திறமை தொழில் நுட்பம் ஆகியவைகள் கீழ்மட்டத்திலிருப்பதால் நவீனத் துறையின் வளர்ச்சி தடைபடுகிறது.

மேலெழுநிலைக் கருத்தை வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டிற்குப் பயன்படுத்தினால் ஒரு குழப்பம் ஏற்படுகிறது. மேலெழு நிலையின் போது தேசிய வருவாய் அதிகரிக்கும் போது சராசரி நுகர்வு நாட்டம் குறையாமல் முதலீடு அதிகரிக்கிறது. உண்மையில் இறுதி நிலைச் சேமிப்பு வீதத்தின் அதிகரிப்பு சராசரிச் சேமிப்பு வீதத்தைவிட அதிகமாக இருப்பதால் சராசரி வீதம் தொடர்ந்து உயர்கிறது. கடைசியில் நிலையான சராசரிச் சேமிப்பு வீதம் பொருளாதாரத்தில் ஏற்படுகிறது. ஆனால் இது அறிவுடைய விளக்கம் இல்லையென்றும், அதிக முன்னேறிய நாடுகளிலும் சராசரிச் சேமிப்பு வீதம் மாறாமல் நிலையாக இருக்காது என்றும் தாஸ்குப்தா குறிப்பிடுகின்றார். மேலெழுநிலைக் கருத்து வளர்ச்சி குறைந்த ஒரு பொருளாதாரத்திற்கு ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்த சுய தூண்டுதலால் இயங்கும் நிலையை எடுத்துணர்த்தியுள்ளது. மேலெழு நிலையென்பது உடனடியாக ஏற்படும் செயல் முறையல்ல. அது காலப் போக்கில் பெறவேண்டிய பயிற்சிகளை அடிப்படையாகக் கொண்டு இயங்கி ஒரு குறித்த வேகத்தைப் பெற்றபின், அதன்பின் மீண்டும் குறையாத வளர்ச்சியைப் பெற்று முன்னேறும் நிலையாகும். எனவே, இவ் வளர்ச்சிக் கட்டத்தில் பொருளாதாரம் மிகவும் கடினமாக நகர்ந்து செல்ல வேண்டிய நிலை உள்ளது. பறந்து செல்ல இயலாத வளர்ச்சிக் கட்டமாக இது உள்ளது. எனவே, ஒவ்வொரு வளர்ச்சி குறைந்த நாடும் சுலபமாக மேலெழு நிலையை அடைய முடியாது. மிகவும் கடினமான வளர்ச்சிப் பாதையைக் கடந்து செல்ல வேண்டியுள்ளது.

## மேலெழு நிலையும் இந்தியாவும்

ரோஸ்டோவின் கருத்துப்படி மேலெழு நிலையை அடைவதற்கான நிபந்தனைகளில் ஒன்று தேசிய வருவாயில் 5 முதல் 10 சதவீத சேமிப்பு-முதலீட்டு விகிதத்தை அதிகரிக்க வேண்டும். இந் நிலை சுய ஊக்கம் கொண்ட வளர்ச்சியின் மாற்ற மடையும் கட்டமாகும். இந்தியாவில் 1960-61 விலைகளில் தேசிய வருமானத்தில் முதலீட்டு விகிதம் 1950-51-ல் 5·5 சதவீதமாக இருந்ததிலிருந்து 1964-65-ல் 14·4 சதவீதமாக அதிகரித்தது. தேசிய வருவாயில் உள்நாட்டுச் சேமிப்பு விகிதம் இதே காலத்தில் 5·5 சதவீதமாக இருந்ததிலிருந்து 10·5 சதவீதமாக அதிகரித்தது. இவ்வாறு இந்தியா 1950-51-ல் மேலெழு நிலைக் கட்டத்தில் நுழைந்து 1964-65-ல் சேமிப்பு

முதலீட்டு விகிதம் 10 சதவீதத்திற்கு மேற்பட்டு விட்டதால் மேலெழு நிலையைக் கடந்து விட்டது.

மேலெழு நிலைக்கான மற்றொரு நிபந்தனை பொருளாதாரத்தின் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட முன்னோடித் துறைகளில் வளர்ச்சி ஏற்படுவதாகும். 1664-65-ல் இந்திய வேளாண்மை, தொழில், பணத் துறைகளில் (Tertiary sector) கணிசமான அளவு வளர்ச்சியடைந்துள்ளன. வேளாண்மை உற்பத்திக் குறிப்பெண் 1950-51-ல் 45·6 ஆக இருந்ததிலிருந்து 1964-65-ல் 158·4 ஆக உயர்ந்தது. அதேபோல் தொழில் உற்பத்திக் குறிப்பெண் 73·5 லிருந்து 186·9 ஆக உயர்ந்தது. எனவே, இந்தியா மேலெழு நிலையின் இந்த நிபந்தனையையும் நிறைவு செய்து விட்டதாகத் தெரிகிறது.

மேலெழு நிலையின் கடைசி நிபந்தனையையும் இந்தியா பூர்த்தி செய்துள்ளது. திட்டமிட்ட வளர்ச்சியினுல் நவீனத் துறையின் பெருக்கத்திற்கு வகைசெய்யும் கலாச்சார அமைப்பையும் இந்தியா உருவாக்கியுள்ளது. மக்களின் திறனும், மன நோக்குகளும் மாற்ற மடைந்து வருகின்றன. நவீனத் தொழில் நுட்பம் பழமைச் சமூதாயத்தில் ஊடுருவிச் செல்கிறது. நிர்வாகத் திறமையும், நேர்மையும் சீரடைந்து வருகின்றன.

மேலெழு நிலையின் மூன்று நிபந்தனைகளும் கட்டாயமாக இருக்கவேண்டுமென்ற கண்டிப்பான நெறிமுறை எதுவும் இல்லை. இம் முன்று நிபந்தனைகளின் அடிப்படையில் மூன்றும் திட்டகாலத்தில் இந்தியா உறுதியாக மேலெழு நிலையை அடைந்து விட்டதென்ற விரைவான முடிவையும் கூறமுடியாது. இந்தியா முதிர்ச்சியடைய மேலெழு நிலையை அடைய முயன்றிருப்ப தாகத் தெரிகிறது. பேராசிரியர் மின்ட் (Myint) எச்சரிப்பது போல் முதிர்ச்சியடையாமல் மேலெழு நிலையை அடைய முயன்றால் பற்றாக்குறை வளங்கள் வீணடிக்கப்படுவதோடு மட்டு மல்லாமல் தோல்வி மனப்பான்மையும், மனச்சஞ்சலமும் ஏற்பட்டுத் தீவிர மனச்சார்பான அரசியல் விளைவுகள் ஏற்படும். இந்தியப் பொருளாதாரத்தில் இது உண்மையில் நிகழ்ந்துள்ளது. 1950-51-க்கும் 1964-65-க்கும் இடையே இந்திய நிகர தேசியவருவாய் (1960-61 விலைகளில்) 3·8 சதவீதம் வருடாந்திரக் கூட்டு வீதத்தில் ரூ. 9,850 கோடிகளிலிருந்து ரூ. 16,630 கோடிகளாக அதிகரித்தது. ஆனல், உண்மைத் தலாவருவாய் ஆண்டொன்றுக்குச் சராசரியாக 1·8 சதவீதமாகவும், மக்கட்தொகை வளர்ச்சி வீதம் ஆண்டொன் றுக்கு 2·5 சதவீதமாகவும், அதிகரித்தது. இத்துடன் கூட இந்தியப் பொருளாதாரத்தில் பணவீக்க அழுத்தங்கள் தொடர்ந்து இருந்துவருவதால் இந்தியா மேலெழு நிலைக்கட்டத்தை அடைந்து

விட்டதா என்பது பெரிதும் ஐயப்பாட்டிற்குரியதாக உள்ளது மூன்றும் திட்டத்தின் கடைசி ஆண்டில் (1965-66) தேசிய வருவாய் 5·6 சதவீத அளவு குறைந்தது. 1965-66-ல் உண்மைத் தலாவருவாய் 1960-61-ல் இருந்த அளவிலேயே இருந்தது. 1966-68-ல் பொருளாதாரத்தில் பின்னிறக்கம் ஏற்பட்டு நிலைமை மேலும் சீர்கேடடைந்தது. 1965-66-ல் சிலதொழில்களில் சுமார் 80 முதல் 90 சதவீத ஆக்கச்சக்தி பயன்படுத்தப்படாமலேயே வீணடிக்கப்பட்டது. சிறப்பிடம் பெற்ற தொழில்களிலுங்கூட வீணடிக்கப்பட்ட ஆக்கச்சக்தி 40 சதவீதமாகும். உள்நாட்டுச் சேமிப்புவீதம் 1965-66-ல் 10·5 சதவீதமாக இருந்ததிலிருந்து, 1966-67-ல் 8·2 சதவீதமாகவும், 1967-68-ல் 8 சதவீதமாகவும் குறைந்தது. உண்மை மதிப்பீட்டில் இது திட்டகாலத்திற்கு முன் இருந்த நிலையைவிட மிகக் குறைவானதாக இருக்கலாம்.

மூன்றும் திட்டம் ஒரு சுயச்சார்புடைய, சுய ஊக்கம் கொண்ட பொருளாதாரத்தைப் பெறுவதற்காக மேற்கொள்ளப்பட்ட தீவிர வளர்ச்சியின் முதல் கட்டமாகக் கருதப்படுகிறது. அது நிகர முதலீட்டை 1960-61-ல் 11 சதவீதமாக இருந்ததிலிருந்து 14-15 சதவீதமாக அதிகரிக்கும் குறிக்கோளைப் பெற்றிருந்தது. உள்நாட்டுச்சேமிப்பும் 1960-61-ல் 8 சதவீதமாக இருந்ததிலிருந்து மூன்றும் திட்ட இறுதியில் தேசிய வருவாயில் 11·5 சதவீதமாக அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், சேமிப்பு, முதலீட்டு வளர்ச்சி வீதத்தில் தேவையான வளர்ச்சியை ஏற்படுத்துவதில் மூன்றும் திட்டம் தோல்வியடைந்தது. சேமிப்பு 8 லிருந்து 10·5 சதவீதமாகவும், முதலீடு, 11 லிருந்து 13 சதவீதமாகவும் மட்டுமே உயர்ந்தது. தொடர்ந்து ஏற்பட்ட மூன்று பாதகமான பயிர் விளைச்சல்களால் பொருளாதாரம் தேக்க நிலையை அடைந்தது. எனவே, வருடாந்திரத் திட்டங்கள் அமுலாக்கப்பட்டன. நான்காம் திட்ட நகல் ஏற்றுக் கொள்ளப் படாமல் தள்ளிப் போடப்பட்டது. ஆனால், ரோஸ்டோவின் முக்கிய நிபந்தனையாகிய 10 சதவீதத்திற்கு மேற்பட்ட நிகர முதலீட்டு விகிதத்தை இந்தியா அதிகரித்துள்ளதால் மூன்றும் திட்டகாலத்தில் இந்தியப் பொருளாதாரம் மேலெழு நிலையை அடைந்துவிட்டதென்று கூறலாம்.

## முடிவுரை

பசுமைப் புரட்சியினால் ஏற்பட்ட பொருளாதார மீட்சி நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தை 1969 ஏப்ரலில் நடைமுறைப் படுத்த வகை செய்தது. நான்காம் திட்டம் (1969—74) சேமிப்பு

விகிதத்தை 8 சதவீதத்திலிருந்து 13 2 சதவீதமாகவும், முதலீட்டு விகிதத்தை 11·2 சதவீதத்திலிருந்து 14·5 சதவீதமாகவும் திட்ட காலத்தில் அதிகரிக்கச் செய்யுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. நான்காம் திட்ட நீண்டகால எதிர்நோக்கு மதிப்பீட்டின்படி முதலீட்டுவீதம் 1968-69-ல் 11·2 சதவீதமாக இருப்பதிலிருந்து, 1980-81-ல் 17-18 சதவீதமாக அதிகரிக்குமென்று எதிர் பார்க்கப்படுகிறது. ஆண்டொன்றுக்கு 6 சதவீத நிலையான பொருளாதார வளர்ச்சியைப் பெற்றால், 1973-74-க்குப்பின் மக்கட் தொகைவீதம் குறைய ஆரம்பித்தால் இந்தியப் பொருளா தாரம் ஏழாவது ஐந்தாண்டுத்திட்ட (1985-86) இறுதியில் சுயச் சார்புடைய, சுயஉறுதியும், இயக்கமும் கொண்ட பொருளா தார வளர்ச்சியை நிச்சயம் பெறமுடியும்.

# 35. வளர்ச்சி குறைந்த நாட்டில் பணவழிக் கொள்கை

## (Monetary Policy in an Underdeveloped Country)

பணவழிக் கொள்கை என்பது பணத்தின் பரிமாணம், கடன்பெறும் செலவு, போன்றவைகளைப் பணத்துறை அதிகாரிகள் கட்டுப்படுத்தும் கொள்கைகளைக் குறிக்கிறது. இக் கொள்கை முதலாவதாக நிதி நிறுவனங்களைக் கட்டுப்படுத்துகின்றது. பணத்துறை, அதிகார அமைப்புகள் பணநிலையைத் தகுந்த முறையில் மாற்றியமைக்கக் காகிதச் சொத்துகளை விற்றல், வாங்குதல் நடவடிக்கைகளை இக் கொள்கை உள்ளடக்குகிறது. "ஒரு குறித்த வட்டி வீத அமைப்பு, நிலையான விலைகளைப் பாதுகாத்தல், போன்றவைகளுக்காகக் காகிதச் சொத்துகளை வாங்கல், விற்றல் நடவடிக்கைகளையும்," இக் கொள்கை உள்ளடக்கு வதாக J. D. சேத்தி குறிப்பிடுகிறார். வளர்ச்சி குறைந்த நாடுகளில் பண வழிக் கொள்கை கடன் அளிப்பு, கடன் செலவு ஆகியவைகளை மாற்றியமைத்தல், பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துதல், செலுத்து இருப்பு நிலைச் சமநிலையைப் பராமரித்தல் போன்றவைகளால் வளர்ச்சியை வேகப்படுத்த வகை செய்கிறது. வளர்ச்சி விரைவாக ஏற்படும் போது தகுந்த பணவழிக் கொள்கை மிகவும் இன்றியமை யாததாக விளங்குகிறது. ஏனெனில் தகுந்த பணவழிக் கொள்கை அதிகரிக்கும் வர்த்தகத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், அதிகரிக்கும் மக்கட் தொகை, பெருக்கமடையும் பணவழித்துறை ஆகியவைகளின் தேவைகளை நிவர்த்திசெய்யவும், ஒரு நெகிழ்ச்சி யான கடனளிப்பை நிலைநாட்ட வகை செய்கிறது.

### பணவழிக் கொள்கையின் முக்கிய அம்சங்கள்

பணவழிக் கொள்கை கீழ்க்கண்ட பணிகளைப் புரிவதற்காகப் பயன்படுத்தப் படலாமென்று டாக்டர் J.D. சேத்தி குறிப்பிடுகிறார்.

(i) தகுந்த வட்டிவீத அமைப்பை ஏற்படுத்திப் பயன் படுத்துதல்.

(ii) பணத்தின் தேவை—அளிப்பு ஆகியவைகளுக் கிடையே ஒரு சரியான சமநிலையை ஏற்படுத்துதல்.

(iii) வளரும் பொருளாதாரத்திற்குத் தேவையான தகுந்த கடன் வசதிகளை அளித்தலும் கடன் பணத்தின் மிதமிஞ்சிய பெருக்கத்தைத் தடுத்தலும், திட்டத்திற்கு முன்பு தீர்மானித்த முதலீட்டுடன் சமமாக இருக்கத் தக்க அளவில் கடனைப் பயன்படுத்தச் செய்தல்.

(iv) நிதி நிறுவனங்களை ஏற்படுத்தித் திறமையுடன் பணி புரியச் செய்து அவைகளின் பெருக்கத்திற்கு வகை செய்தல்.

(v) கடன் நிர்வாகம்.

பணவழிக் கொள்கையின் இவ்வம்சங்கள் எவ்வாறு வளர்ச்சி குறைந்த நாடுகளில் பயன்படுத்தப்படுகின்றன என்பது கீழே விளக்கப்பட்டுள்ளது.

## 1. நிதி நிறுவனங்களை ஏற்படுத்துதலும் பெருக்குதலும்

வளர்ச்சி குறைந்த நாடுகளின் பணவழிக் கொள்கையின் நோக்கங்களில் ஒன்று பண, கடன் முறைகளைச் சீர்படுத்துவதாகும். ஏராளமான வங்கிகளும், நிதி நிறுவனங்களும் ஏற்படுத்தப்பட்டு அதிக நிதி வசதி கிடைக்க வகை செய்யப் படவேண்டும். தானாகத் தோன்றும் சேமிப்பை உற்பத்தித் துறைக்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டும். இந் நாடுகளில் நிதி நிறுவனங்கள் பெரிய நகரங்களிலேயே நிறுவப்பட்டுள்ளன. மேலும், இவைகள் பெரிய தோட்டங்களுக்கும், பெரிய தொழில், வர்த்தக நிறுவனங்களுக்கும் நிதி வசதியளிக்கின்றன. இதைச் சரிசெய்வதற்காகக் கிளை வங்கி முறையும், ஒற்றை வங்கி முறையும் கிராமப் பகுதிகளில் விரிவாக்கப் படவேண்டும். குடியானவர்களுக்கும், சிறு வர்த்தகர்கள், தொழிலதிபர்களுக்கும் கடன் வசதி கிடைக்கச் செய்யவேண்டும். பணவழிக் கொள்கையைத் திறமையாக அமுலாக்க ஒரு சக்தி வாய்ந்த, வலுப் பெற்ற மத்திய வங்கி இருக்க வேண்டியது முன் நிபந்தனையாகும். இந் நாடுகளில் வணிக வங்கிகள் குறுகிய காலக் கடனை மட்டுமே யளிக்கின்றன. அக் கடன்கள் கூடக் கிராமப் பகுதிகளில் கிடைப்பதில்லை. கிராமங்களில், கிராம லேவா தேவிக்காரர்கள் அதிக வட்டிக்குக் கடன் கொடுத்து விவசாயிகளைக் கடன்காரர்களாக்குகின்றார்கள். இம் முறையில் மட்டுமே கிராமங் களில் கடன் வசதி கிடைக்கிறது. இந் நாடுகளில் அமைப்பும், வளர்ச்சியும் கொண்ட பங்கு பத்திர அங்காடிகள் இல்லை. இக்

குறைகளை நீக்கி நாட்டின் பணவழிக் கொள்கையைச் சீராகச் செயலாற்றச் சக்தி வாய்ந்த மத்திய வங்கி முக்கிய பங்கேற்க வேண்டும்.

மத்தியவங்கி அரசுக்கு நிதி நடுவராகப் பணி புரிந்து பொதுக் கடனை நிர்வகிக்கிறது. அரசு கடன் பாத்திரங்களை மத்திய வங்கி வணிக வங்கிகளின் மூலம் வெளியிடுகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் வளர்ச்சியடைந்த உண்டியல் அங்காடி இல்லாததால், மத்தியவங்கியே பங்குபத்திர அங்காடியை அமைக்க வேண்டியுள்ளது. கிராம லேவாதேவிக்காரர்களின் ஆதிக்கத்தைக் குறைப்பதற்காகக் கிராமப் பகுதிகளில் மத்திய வங்கி குறைந்த வட்டிக்குக் குறுகிய நடுத்தர, நீண்டகாலக் கடன் வசதியைக் குடியானவர்களுக்கு அளிக்கப் புது நிறுவனங்களை ஏற்படுத்த வேண்டும். மத்திய வங்கியில் நிதியிடப்பட்ட மேல்மட்ட வங்கிகளைக் கொண்ட கூட்டுறவுக் கடன் சங்கங்கள் ஏராளமாக ஏற்படவேண்டும். பரந்த நிதி வளங்களைப் பெற்றுள்ள மத்தியவங்கி, தொழில் வங்கிகள், நிதிக் கழகங்கள், போன்றவைகள் ஏற்படத் துணைபுரிந்து பெரிய, சிறிய தொழில்களுக்கு நிதிகிடைக்க வகை செய்யவேண்டும்.

கடைசியாக மத்திய வங்கி, பண அங்காடியின் பாதுகாப் பாளராகச் செயல்புரிகிறது. மத்தியவங்கி விரும்பியபடி வணிக வங்கிகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தை அது பெற்றுள்ளது. "வணிக வங்கிகளின் மேல் மத்திய வங்கி மேற்கொள்ளும் கட்டுப் பாடு பணவழிக் கொள்கையின் ஒரு முக்கிய கருவியாக உள்ளது." மறுகழிப்பு வசதிகளின் மூலமாக மத்திய வங்கி வணிக வங்கிகள் அதிக நடுத்தர, நீண்டகாலக் கடன்களை அளிக்க வகைசெய்ய முடியும்.

1949-ஆம் ஆண்டின் வங்கிக் கம்பனிச் சட்டப்படி இந்திய ரிசர்வ் வங்கி வணிக வங்கிகளின்மேல் கட்டுப்பாடுகளை மேற் கொள்ள அதிக அதிகாரங்கள் பெற்றுள்ளது. இச் சட்டம் அவ்வப்போது திருத்தப்பட்டுள்ளது. இந்தியா விடுதலை அடைந்த திலிருந்து ரிசர்வ் வங்கி தொடர்ந்து நாட்டில் நிதிநிறுவனங்களை ஏற்படுத்திப் பெருக்கமடையச் செய்யத் துணைபுரிந்து வருகிறது. தொழில், வேளாண்மை வளர்ச்சிக்காகக் குறுகிய, நடுத்தர, நீண்ட காலக் கடன்வசதியை அளிக்கவல்ல ஏராளமான நிதி நிறுவனங்களை அது ஏற்படுத்தியுள்ளது. தொழில் நிதித் துறையில் அது, தொழில் நிதிக்கழகம், மாநிலநிதிக்கழகங்கள், தேசியத் தொழில் வளர்ச்சிக் கழகம் போன்றவைகள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தது. ஏற்றுமதியாளர்களுக்கு நிதிவசதியளிக்க ஏற்றுமதிக்

கடன், உத்திரவாதக் கழகம் ஒன்றையும் அது ஏற்படுத்தியது. ஜூலை 1, 1955-ல் இந்திய இம்பீரியல் வங்கி நாட்டுடைமையாக்கப் பட்டு ஸ்டேட் வங்கி என்ற பெயரினைப் பெற்றது. அது நாடு முழுதும் வங்கிவசதிகளை ஏற்படுத்தியுள்ளது. முக்கியமாகக் கிராமங் களில் அது ஏராளமான கிளைகளை ஏற்படுத்தியுள்ளது. தற்போது அது 2000 கிளைகளைப் பெற்றுள்ளது. ஜூலை 1969-ல் மத்திய அரசு 14 பெரிய வணிக வங்கிகளை நாட்டுடைமையாக்கியது. சர்வாதீனக் குவிப்பை போக்கவும், கிராமங்களில் அதிகக்கிளைகளை ஏற்படுத்தவும், பொருளாதார வளர்ச்சிக்கு அவைகளின் வைப்பு களைப் பயன்படுத்தவும் இவைகள் நாட்டுடைமையாக்கப்பட்டன. இந் நடவடிக்கையினால் பொதுச் சேமிப்பு, நேர் வழியில் அதிகரித்து, விரைவான வளர்ச்சியைப் பெற முடியுமென்று எதிர்பார்க்கப் படுகிறது. 1952-க்கு முன்பு இந்தியாவில் அமைப்புடைய உண்டியல் அங்காடி ஏற்படவில்லை. ஜனவரி, 1952-ல் ரிசர்வ்வங்கி உண்டியல் அங்காடி ஒன்றை ஏற்படுத்திப் பட்டியலில் உள்ள எல்லா வங்கிகளுக்கும் நிதிவசதியளிக்கிறது. பணவழி நிதிமுறை நிறு வனங்கள்மட்டும் வளர்ச்சியைப் பெருக்கும் நடவடிக்கைகளில் முழுப் பயனையும், ஏற்படச் செய்ய முடியாது. தொழில் துணிவோர், தொழில் நிறுவனங்கள் ஆகியவைகளிடமிருந்து அடிப்படைத் தூண்டுதல் ஏற்பட்டால்தான் பணத்துறை அத் தூண்டுதலை ஏற்று வளர்ச்சியை மேம்படுத்த முடியுமென்று மேயரும் பால்டுவினும் குறிப்பிடுகின்றனர்.

## 2. தகுந்த வட்டி வீதக் கொள்கை

வளர்ச்சி குறைந்த நாடுகளில் வட்டிவீத அமைப்பு மிக உயர் மட்டத்தில் இருந்துவருகிறது. நீண்டகால, குறுகியகால வட்டி வீதங்களுக்கிடையேயும், பல்வேறு துறைகளின் வட்டி வீதங்களுக் கிடையேயும் பெருத்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதிக வட்டி வீதம் இருப்பது இந் நாடுகளின் தனியார் பொது முதலீட்டின் வளர்ச்சியைத் தடுக்கிறது. வேளாண்மையிலும், தொழிலிலும், தனியார் முதலீட்டை ஊக்குவிக்கக் குறைந்த வட்டி வீதம் இன்றியமையாததாகும். பொது முதலீட்டை ஊக்கு விக்கவும் குறைந்த வட்டி வீதக் கொள்கை அவசியமாகும். ஒரு குறைந்த வட்டிக் கொள்கை என்பது "மலிவு பணக் கொள்கை யாகும்." அது மலிவாகப் பொதுக்கடனைப் பெறவும், பொதுக் கடன் பணிகளைக் குறைந்த செலவில் பெறவும் வகை செய்து பொருளாதார வளர்ச்சிக்கு நிதியிடத் துணைபுரிகிறது. ஆனால், குறைந்த வட்டி வீதக் கொள்கையினால் பூகவாணிக முதலீடுகள் போன்றவைகள் ஏற்பட்டு ஆக்க முதலீடுகளுக்கு நிதியிடுவது

தடுக்கப்படுகிறது. ஒரு குறைந்த வட்டி வீதம் பொருளாதாரத்தில் சேமிப்பையும் வளர்ச்சியையும் தீவிரமாகப் பாதிக்கிறது.

வளங்கள் யூகவாணிக காரணங்களுக்காகப் பயன்படுத்தப் படுவதைத் தடுக்க மத்திய வங்கி பேதங்காட்டும் வட்டி வீதக் கொள்கையைக் கடைபிடிக்க வேண்டும். அதாவது தேவையில்லா, ஆக்கத்திற்குதவா, கடன்களின்மேல் அதிகவட்டியும், ஆக்கக்கடன் களுக்குக் குறைந்த வட்டி வீதமும் விதிக்க வேண்டும். ஒரு நிலையான விலை மட்டம் இருந்தால்தான் குறைந்த வட்டிவீதக் கொள்கை வெற்றிபெறும்.

இந்தியப் பண வழிக் கொள்கை மேற்குறிப்பிட்ட வகையில் செயலாற்றி வருகிறது. இந்திய ரிசர்வ்வங்கி உயர்விலைப் பணக் கொள்கையைப் (Dear money policy) பின்பற்றிவருகிறது. இத்தோடு கூடக் கடுமையான பொருள் கட்டுப்பாட்டு முறைகளை யும், பண வீக்க அழுத்தங்களைக் குறைப்பதற்காகப் பின்பற்றி வருகிறது. மேலும், பின்னிறக்கம் ஏற்படும் காலங்களில் பொருள் கட்டுப்பாட்டைக் குறைத்து மலிவுப் பணக் கொள்கையைப் பின் பற்றுகிறது நவம்பர், 1951-ல் வங்கி வீதம் முதன்முதலில் மூன்றிலிருந்து மூன்றரை சதவீதமாக உயர்த்தப்பட்டது. இரண்டாம், மூன்றும் திட்டகாலங்களில் ஏற்பட்ட பெருமளவு வளர்ச்சிச் செலவினங்களால் ஏற்பட்ட பணவீக்க அழுத்தங்களைக் கட்டுப்படுத்த வங்கி வீதம் மே, 1957-ல் $3\frac{1}{2}$ லிருந்து 4 சதவீத மாகவும், 1963-ல் $4\frac{1}{2}$ சதவீதமாகவும், செப்டம்பர் 1664-ல் 5 சதவீதமாகவும், பிப்ரவரி 1965-ல் 6 சதவீதமாகவும் அதிகரிக்கப் பட்டது. மேலும், ஏராளமான வேளாண்மைத் தொழில் பொருள் களின் மீது கட்டுப்பாடு விதித்து அவைகள் சம அளவில் பங்கிடப் பட வகை செய்யப்பட்டது. 1966—67-ல் பின்னிறக்கம் ஏற்பட்ட தால் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இந் நடவடிக் கைகள் மீட்சியை ஏற்படுத்தத் தவறியதால் மார்ச், 2, 1968-ல் வங்கி வீதம் 6 சதவீதத்திலிருந்து 5 சதவீதமாகக் குறைக்கப் பட்டது. இத்துடன் கூட மற்றப் பொருள் கட்டுப்பாடுகளும், குறைக்கப்பட்டதால் எல்லா வழிகளிலும் தொழில் மீட்சி ஏற்பட்டது செப்டம்பர், 1964 லிலிருந்து அவ்வப்போது பேதங் காட்டும் வட்டிவீதக் கொள்கையை ரிசர்வ் வங்கி பின்பற்றி வருகிறது.

## 3. கடன் நிர்வாகம்
## (Debt Management)

ஒரு வளர்ச்சி குறைந்த நாட்டில் கடன் நிர்வாகம் பணவழிக் கொள்கையின் முக்கியமான அம்சங்களில் ஒன்றாக விளங்குகிறது.

அதன் முக்கிய நோக்கம் சரியாகக் காலா காலத்தில் அரசு கடன் பத்திரங்களை அளித்தலும், அவைகளின் விலைகளை நிலை பெறுக்குவதும், பொதுக் கடன் பணியின் செலவைக் குறைத்தலு மாகும். மத்திய வங்கி அரசு கடன் பத்திரங்களை வாங்கும், விற்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்கின்றது. மேலும், அது பொதுக் கடனின் அமைப்பையும் அளவையும் சரியான காலத்தில் மாற்ற மடையச் செய்கிறது. கடன் நிர்வாகத்தின் அடிப்படை நோக்கம். பணத்துறையில் எந்தத் தடுமாற்றமும் இல்லாமல் ஆண்டுதோறும் பெருமளவில் பொதுக் கடன் அதிகரிக்கும் சூழ்நிலையை உருவாக்கு வதாகும்.

அரசு கடன் பத்திரங்களின் அங்காடியை வலுப்பெறச் செய்து நிலைப்பேருக்கக் குறைந்த வட்டி வீதங்கள் அவசியமாகும். குறைந்த வட்டி வீதங்கள் அரசு கடன் பத்திரங்களின் விலையை அதிகரித்துப் பொதுமக்கள் அவற்றை வாங்குவதற்கு ஏற்ற சூழ் நிலையை உருவாக்குகின்றன. மேலும், அவைகள் அரசின் பொதுக் கடன் திட்டங்களுக்குத் தூண்டுதல் அளிக்கின்றன. குறைந்த வட்டிவீத அமைப்பை நிலைநாட்டினால் தேசியக் கடன் பணியின் செலவைக் குறைக்க முடியும். மேலும், அது தனியார் நிறுவனங் களின் கடன் வசதியை அதிகரிக்கவும் வகை செய்கிறது. வட்டி வீதத்தைப் பயனுள்ளபணியில் ஒருகுறித்த அங்காடியில் ஈடுபடுத்த அரசு ஏராளமான கடன் பத்திரங்களை அளிக்க வேண்டும் என்றும் டாக்டர் சேத்தி குறிப்பிடுகிறார். அவைகளுக்கு வளர்ச்சி குறைந்த நாடுகளில் தேவை குறைவாக இருந்தால் கடன் நிர்வாகக் கொள்கையின் மூலம் அக் கடன் பத்திரங்களின் தேவைகளை அதிகரிக்கவேண்டும்.

கடன் நிர்வாகத்தின் வெற்றி நாட்டில் உள்ள நன்கு வளர்ச்சி யடைந்த பண, மூதல் அங்காடிகளைப் பொறுத்ததாகும். இவ் வங்காடிகளில் குறுகியகால நீண்டகாலக் கடன் பத்திரங்கள் ஏராளமாக இருக்கவேண்டும். இவ்வம்சங்கள் எந்த அளவுக்குக் குறைகின்றனவோ, அந்த அளவுக்குக் கடன் நிர்வாகம் கடுமையான செயலாகிவிடுகின்றது. இந்தியாவில் ரிசர்வ் வங்கி போற்றத் தக்க வகையில் பொதுக்கடனை நிர்வகித்து வருகிறது. மத்திய, மாநில அரசாங்களின் பொருட்டு ரிசர்வ் வங்கி கடன்களைப் பெறுகிறது; கடன் பத்திரங்களையும் அளிக்கிறது. மத்திய அரசின் உள்நாட்டுக் கடன் மார்ச் 1951-ல் ரூ. 2,022 கோடிகளாக இருந்ததிலிருந்து, மார்ச் 1970-ல் அது 13,375 கோடிகளாக சுமார் ஆறு மடங்கு அதிகரித்தது. இவ்விதமாக ரிசர்வ் வங்கி சமுதாயச் சேமிப்பைச் சேகரிக்கவும், பொதுக்கடனை நிர்வகிக்கவும் பெருந்துணைபுரிகிறது.

## 4. பணத் தேவை—அளிப்பில் சமநிலை ஏற்படுத்துதல்

பணத் தேவைக்கும், அளிப்புக்கும் இடையே ஒரு தகுந்த சமநிலையை ஏற்படுத்தப் பணவழிக் கொள்கை ஒரு முக்கியமான. கருவியாகப் பயன்படுகிறது. இவ்விரண்டிற்குமிடையே ஏற்படும் சமமின்மை, விலை மட்டத்தில் பிரதிபலிக்கிறது. குறைந்த பண அளிப்பு, வளர்ச்சியைக் குறைக்கிறது; ஆனால் மிதமிஞ்சிய அளிப்பு பண வீக்கத்தை ஏற்படுத்துகிறது. பொருளாதாரம் வளர்ச்சியடையும் போது பணத்தின் தேவை அதிகரிக்கும். ஏனெனில் பணப் புழக்கமில்லாத் துறையில் படிப்படியாகப் பணம் பயன்படுத்தப் படுவதாலும், வேளாண்மைத் தொழில் உற்பத்தி, மேலும் விலைகள் அதிகரிப்பதாலும் பணத் தேவை அதிகரிக்கிறது. எனவே, பண அளிப்பின் அதிகரிப்பு தேவையின் அதிகரிப்பைவிட அதிக விகிதத்தில் இருக்கும். மேலும், கூடுதல் பண அளிப்பு, யூக வணிகத்திற்காகப் பயன்படுத்தப் படுமாதலால் வளர்ச்சி தடைபட்டுப் பணவீக்க மேற்படலாம். பணத்துறை அதிகார அமைப்புகள், பணம், கடன், ஆகியவைகளின் உபயோகத்தைக் கட்டுப்படுத்தத் தகுந்த பண வழிக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும். நேரிடை, திடப்பொருள்கள் கட்டுப்பாடுகளின் மூலம் யூக வாணிக நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த வேண்டும். எனவே, இவ்விதமாக வளர்ச்சி குறைந்த நாட்டில், பணம், கடன் ஆகியவைகளின் அளிப்பு கட்டுப்படுத்தப்பட்டு விலை மட்டம் அதிகரிப்பது தடுக்கப்பட்டு முதலீடு—உற்பத்தி கடுமையாகப் பாதிக்கப்படுவது தவிர்க்கப்பட வேண்டும்.

## 5 கடன் கட்டுப்பாடு

வளர்ச்சியுறும் பொருளாதாரத்தில் முதலீடு—உற்பத்திப் பாங்கை நேர்வழியில் செலுத்தக் கடனைக்கட்டுப்படுத்துதல் பண வழிக் கொள்கையின் ஒரு முக்கியக் குறிக்கோளாகும். வளர்ச்சிச் செயல் முறையினாலேற்படும் பணவீக்க அழுத்தங்களைக் கட்டுப் படுத்துவதுதான் அதன் முக்கிய நோக்கமாகும். இதற்குக் கடன் கணிய கட்டுப்பாடும், நன்மைக் கட்டுப்பாட்டு முறையும் தேவைப் படுகிறது.

கடன் கணியக் கட்டுப்பாடு (Quantitative credit control): வளர்ச்சி குறைந்த நாடுகளில் வெளி நாடுகளில் வெளி அங்காடி நடவடிக்கைகளால் பண வீக்கத்தை வெற்றியுடன் கட்டுப்படுத்த முடிவதில்லை. வெளி அங்காடி நடவடிக்கைகளின் வெற்றி மூன்று நிபந்தனைகளைப் பொறுத்ததாகும். நன்கு அமைக்கப்பட்ட

உண்டியல் அங்காடியின் வளர்ச்சி, வணிக வங்கிகளால் குறித்த ரொக்க இருப்பு விகிதம் நிலைநாட்டப்படுதல், மத்திய வங்கியின் மறுகழிவு வசதிகள் இல்லாமை. ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளில் இக் காரணிகள் செயல் புரிவதில்லை. பண அங்காடி இந் நாடுகளில் சிறியதாயும், வளர்ச்சி குன்றியதாகவும் உள்ளது. வணிக வங்கிகள், மத்திய வங்கியின் கட்டுப்பாடு முழுமையாக இல்லாததால், நெகிழ்ச்சி மிக்க ரொக்க வீதத்தைப் பராமரிக்கின்றன. பத்திரங்களின் குறைந்த வட்டி வீதத்தினால் இவ் வங்கிகள் அரசுகடன் பத்திரங்களில் முதலிட விரும்புவதில்லை அதற்கு மாறாக, தங்கம், வெளிநாட்டுச் செலாவணி, ரொக்கம் போன்ற வகைகளில் இருப்புகளை வைத்துக் கொள்ளவே அவைகள் விரும்புகின்றன.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் வங்கி வீதக் கொள்கை திறம்படச் செயலாற்றுவதில்லை உண்டியல் கழிவு அதிக அளவில் நடைபெறாததாலும், வணிக வங்கிகள், அதிக ரொக்க இருப்புகளை வைத்துக் கொள்வதாலும், இக் கொள்கை நல்ல பலனளிக்கவில்லை. சக்தி வாய்ந்த மத்திய வங்கி இருக்கும் நாடுகளில் தகுந்த வங்கி வீத மாற்றங்களால் அது அங்காடி வீதங்களைத் தகுந்த முறையில் மாற்றியமைக்கச் சக்தி பெற்று விளங்குகிறது. வெளி அங்காடி நடவடிக்கைகள், வங்கி வீதக் கொள்கை ஆகியவைகளைவிட வேறுபட்ட இருப்பு விகிதம் மிகத் திறமையுடன் கடனைக் கட்டுப்படுத்தப் பயன்படுகிறது வணிக வங்கிகள் இந் நாடுகளில் அதிக ரொக்க இருப்பை வைத்திருப்பதால் அவைகள் அதிகக் கடனைத் தயாரிக்க முடிகிறது. மத்திய வங்கி, கட்டாய இருப்பு விகிதத்தை உயர்த்தி இக் கடன் பெருக்கத்தை தடுக்க முடியும்.

தன்மைக்கடன் கட்டுப்பாடு (Selective credit control): கடன் கணியக் கட்டுப்பாட்டு முறைகளைவிட, தன்மைக் கடன் கட்டுப்பாட்டு முறை மிகவும் பலனுள்ளதாக உள்ளது. தன்மைக்கடன் கட்டுப்பாடு கடன் ஒதுக்கீட்டைக் கட்டுப்படுத்தி, முதலீட்டுப் பாங்கைச் சீராக்குகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் தங்கம், ஆபரணம், போன்றவைகளில் முதலீடு செய்யும் இயல்பு அதிகமாக உள்ளது வேளாண்மை, சுரங்கத் தொழில், தோட்டங்கள் தொழில்துறை போன்ற ஆக்கத் துறைகளில் பணம் பெருமளவில் முதலீடு செய்யப்படுகின்றன. தேர்ந்த கடன் கட்டுப்பாடுகளின் மூலம் ஆக்கத்திற்குதவாக் காரியங்களுக்குக் கடன் வசதியளிக்கப் படுவதைத் தடுத்து உற்பத்திக்கான கடன்களை அதிகரிக்க முடியும். உணவு தானியங்கள், மூலப் பொருள்கள், ஆகியவைகளில் யூக வாணிக நடவடிக்கைகள் ஏற்படுவதைக் கட்டுப்படுத்த இம் முறை தகுந்த முறையில் பயன்படுத்தப்பட முடியும். பொருளாதாரத்

தின் பகுதிப் பண வீக்கங்களைக் கட்டுப்படுத்த இம்முறை சிறந்த வகையில் பயன்படுகிறது. இம் முறை இறக்குமதியின் தேவையைக் குறைக்கின்றது. இறக்குமதியாளர்கள் அதிகமான அளவு வெளி நாட்டுப் பணத்தை இருப்பாக வைக்க வேண்டியிருப்பதால், இறக்குமதியைக் கட்டுப்படுத்த முடியும். இம்முறைகளின் மூலம் வங்கிகளின் இருப்புகளைக் குறைத்து அவற்றை மத்திய வங்கியிடம் மாற்றமடையச் செய்வதற்கு வகை செய்ய முடியும்.

பல்வேறு கடன்சுணிய, தன்மைக்கடன் கட்டுப்பாட்டு முறைகளில் பின்னவைகள் முன்னவைகளைவிட மிகத் திறமையுடையவைகளாய் உள்ளன. ஆனால், ஒரு குறித்த முறையை மட்டும் நம்பியிருப்பது விரும்பத் தக்கதல்ல. எனவே, தன்மைக்கடன் கட்டுப்பாட்டு முறையோடு கூட, எந்திர சாதன நேரடிக் கட்டுப்பாட்டு முறையும், மூதல் அளிப்புக் கட்டுப்பாடும், பேதங்காட்டும் வரிகளும், இறக்குமதி ஏற்றுமதியின் மேல் கட்டுப்பாடும், பொருள் அங்காடிகளின்மேல் நேர் திடப்பொருள் கட்டுப்பாடும், மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். இந்தியப் பணவழிக் கொள்கையும் மேற்கண்ட வழியிலேயே செயலாற்றிப் பணத்தின் தேவை—அளிப்புக்கிடையே சமநிலையேற்படுத்தக் கடன்கணிய, தன்மை, கட்டுப்பாட்டு முறைகளோடு, நிதிவழி, மற்ற நடவடிக்கைகளையும் மேற்கொண்டு வருகிறது. வளர்ந்து வரும் இந்தியப் பொருளாதாரத்திற்குப் பணத்தின் அளிப்பு அதிகரிக்க வேண்டியது தவிர்க்க முடியாததாக உள்ளது. எனவே, அரசு பல்வேறு கட்டுப்பாடுகளை விதித்துள்ள போதிலும், விலை மட்டம் உயர்ந்து கொண்டே வருகிறது. நிகரதேசிய வருவாயின் அதிகரிப்புக்கும் பணத்தின் பரிமாணத்தின் உயர்வுக்குமிடையே சமநிலை ஏற்படாவிட்டால் விலைமட்டம் அதிகரிக்கிறது. இத்தகைய சூழ்நிலையில் கடன்கட்டுப்பாட்டு முறையைச் செயலாக்குவது மிகவும் கடினமாகும். சான்றாக முதல் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் பண அளிப்பு 13 சதவீதம் அதிகரித்தது. தேசியவருவாய் 18 சதவீதம் அதிகரித்தது. இதனால் மொத்த விலையின் குறிப்பெண் 22 சதவீதம் குறைந்தது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் பண அளிப்பு 30 சதவிகிதம் அதிகரித்தது. ஆனால், தேசிய வருவாய் 19·5 சதவிகிதமே அதிகரித்தது. இதன் விளைவாக விலை மட்டம் 30 சதவிகிதம் அதிகரித்தது. மூன்றும் திட்டகாலத்தில் நிலைமை மிகவும் சீர்கேடுற்றது. பண அளிப்பு 61·8 சதவீதமும் தேசிய வருவாய் 14·3 சதவிகிதமும், விலைமட்டம்36.4 சதவீதமும் அதிகரித்தது. நான்காம் திட்டத்தின் முதல் மூன்றுண்டுக் காலத்தில் பண அளிப்பு 26·3 சதவிகிதமும், தேசிய வருவாய் ஆண்டொன்றுக்கு 5 சதவிகிதத்திற்கும் குறைவாகவும், விலைகள் ஆண்டொன்றுக்கு 5 சதவிகிதம் அதிகமாகவும் உயர்ந்தன.

மேற்காணப்படும் உண்மைகளிலிருந்து இந்திய ரிசர்வ் வங்கியின் பணவழிக் கொள்கை வெற்றிபெறவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. ரிசர்வ் வங்கி கடன்கட்டுப்பாட்டின் எல்லா வகை ஆயுதங்களையும் திறமையுடன் பயன்படுத்தியுள்ளது. எல்லாவகைச் சூழ்நிலைகளிலும் அது பணவழிக் கொள்கையின் ஆயுதங்களை அவ்வப்போது பயன்படுத்தியுள்ளது. பொருளாதாரத்தின் மிகக்குறைந்த வளர்ச்சி, ரிசர்வ் வங்கியின் பணவழிக் கொள்கை வெற்றியுடன் செயல்படுத்தப் பெருந் தடையாக இருந்து வருகிறது.

## முடிவுரை

டாக்டர் பல்ஜித்சிங் குறிப்பிடுவதுபோல், "வங்கி வசதிகள், சேமிப்பு நிறுவனங்கள் ஆகியவைகளின் வளர்ச்சி, வேளாண்மை, தொழில், கடன் சீரமைப்பு, பண அங்காடியின் ஒருங்கமைப்பும், சீரமைப்பும், வலிவான மத்திய வங்கியின் வளர்ச்சி, தங்கம், வெள்ளியில் சூதந்திர அங்காடியை நீக்குதல், பதுக்குதலை நீக்குதல், பணச்சீர்திருத்தங்கள், ஆகிய பணவழி நடவடிக்கைகள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் உடனடியாகத் தேவைப்படுகின்றன. இத்தகைய குறைபாடுகளை நீக்கிய பின்தான் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பணத்துறை அமைப்புகள் வளர்ச்சியைத் திறம்படப் பயன்படுத்த முடியும். இப் பணியில் ஒருநாடு தோல்வியடையுமானல் அது குறைந்த வளர்ச்சியையோ, பொருளாதாரத் தேக்கத்தையோ பெற்று அரசின் நேரடிக் கட்டுப்பாட்டிற்குள் வரவேண்டிய சூழ்நிலை ஏற்படும்."[1]

[1] டாக்டர் பல்ஜித்சிங், 'வளர்ச்சி குறைந்த பொருளாதாரமு கூட்டாட் சிநிதியும்' ப. 70.

# 36. நிதிவழிக் கொள்கையும் பொருளாதார வளர்ச்சியும்

## (Fiscal Policy and Economic Development)

### வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிதிக் கொள்கை

நிதிவழிக் கொள்கையென்பது ஒரு நாட்டில் நிலைபேற்றை உண்டாக்கவும், வளர்ச்சியைப் பெருக்கவும், அரசால் பயன்படுத்தப் படும் வரி விதிப்பு, பொதுக்கடன், பொதுச்செலவு ஆகிய கொள்கைகளாகும். நிதிவழிக் கொள்கையைப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்துவது சமீப காலத்தில் ஏற்பட்ட ஒரு செயலாகும். J. M. கீன்ஸ் அவர்களின் பொருளா தாரக் கருத்துகளின் விளைவாக நிதிவழிக் கொள்கை இன்றைய வளர்ச்சி குறைந்த நாடுகளில், வளர்ச்சி உணர்வைத் தட்டியெழுப்பி யுள்ளது. கீன்ஸ் அவர்களின் நிதிவழிக் கொள்கை ஆய்வு, வளர்ச்சி யடைந்த நாடுகளுக்குத்தான் மிகவும் பொருத்தமாகும். வளர்ச்சி யடைந்த பொருளாதாரங்களின் நிதிவழிக் கொள்கை வளர்ச்சி வீதத்தை நிலைபேறுக்குவதற்குப் பெரும் பங்காற்றுகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்க வீதத்தை வேகப்படுத்த நிதிவழிக் கொள்கை பெரும் பங்காற்ற வேண்டியுள்ளது. கீன்ஸின் விளக்கத்தின்படி நிதித்துறை நடவடிக்கைகள் சேமிப்பைக் குறைத்து நுகர்ச்சி நாட்டத்தை அதிகரிக்கப் பயன்படுகின்றன. ஆனால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் முற்றிலும் வேறு வகையான பிரச்சினை நிலவுகிறது. இத்தகைய நாடுகளில் சேமிப்பு நாட்டம் மிகக் குறைவாகவும், நுகர்வு நாட்டம் மிக அதிகமாகவும் உள்ளது. எனவே, நுகர்வு நாட்டத்தைக் குறைத்தல்தான் சேமிப்பு நாட்டத்தை அதிகரிக்க முடியும். எனவே, கீன்ஸின் ஆய்வு வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு ஓரளவுதான் பயனுள்ளதாக இருக்கும். கீன்ஸின் பொதுக் கோட்பாட்டில் சேமிப்புக்கு எதிரான கருத்தும், நுகர்ச்சியை விரும்பும் நோக்கமும் காணப்படுவது உண்மைதான். ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு இக் கருத்து

முழு அளவில் பயன்படாது என்று ராக்னர் நர்க்ஸ் குறிப்பிடுகின்றார்.[1]

நிதிவழிக் கொள்கையின் முக்கியத்துவம்:— வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிதிவழிக் கொள்கை ஒரு இயக்கமுள்ள மாறும் பங்கைப் பெற்றுள்ளது. உண்மையில் வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு நிதி வழிக் கொள்கையின் பரந்த பயன் இன்றியமையாததாக விளங்கு கின்றது நர்க்ஸின் கருத்துப்படி "நிதிவழிக் கொள்கை வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்கப் பிரச்சினையைத் தீர்க்க மிக முக்கியப் பங்கை பெற்று விளங்குகிறது." இந் நாடுகளில் தலா வருவாயும் சேமிப்பும் மிகவும் குறைவாக உள்ளது. ஒரு சில செல்வந்தர்கள் ஆடம்பர நுகர்வுகளில் ஈடுபடுகின்றனர். சேமிப்பின் கணிசமான அளவு சொத்துகள், பதுக்கல், ஆபரணம், தங்கம், யூக வாணிகம், போன்ற ஆக்கத்திற்குப் பயன்படா வழி களில் வீணடிக்கப்படுகிறது. நிதிவழிக் கொள்கை இவைகளை யெல்லாம் ஆக்க வழிகளில் பயன்படுத்தத் துணைபுரிகிறது. வளர்ச் சியின் முக்கியமான தீர்மானிப்பானுக (determinant) இருப்பது ஒரு நாட்டின் உயர்வு சேமிப்பு விகிதம்—(Incremental saving ratio) இறுதி நிலை சேமிப்பு நாட்டம் (Marginal propensity to save) என்று நர்க்ஸ் கருதுகிறார். உயர்வு சேமிப்பு விகிதம் அரசின் செலவினங் களால் உருவாக்கப்படும் சமூகப் பொருளாதார நலன் அமைப்பு களால் அதிகரிக்கிறது. வங்கிகள், கடன் நிறுவனங்கள், புதுத் தொழில்கள், ஆகியவைகளில் அரசின் செலவு அதிகரிப்பதாலும் உயர்வு சேமிப்பு விகிதம் அதிகரிக்கிறது. இவைகள் நாட்டின் வேலை வாய்ப்பு, உற்பத்தி, வருமானம் ஆகியவைகளின் அளவை அதிகரிக்கின்றன. வளர்ச்சி குறைந்த நாடுகளில் சுய சேமிப்பு மிகவும் குறைவாக இருப்பதால் கட்டாயச் சேமிப்பை ஏற்படுத்த வரிக்கொள்கை துணை புரிகிறது. செல்வந்தர்களின் ஆடம்பர நுகர்வு, மற்ற வீண் செலவினங்களை வரிக் கொள்கை, திறம்படக் குறைக்கிறது. எனவே, தனியார் நுகர்வைக் குறைக்கவும், வீண் அடிக்கப்படும் வளங்களை முதலாக்கத்திற்காகப் பயன்படுத்தவும், நிதி நடவடிக்கைகளின் ஒரு முக்கிய கருவியாக வரிக் கொள்கை விளங்குகிறது. எனவே, "நிதிக் கொள்கை வளர்ச்சி குறைந்த நாடு களில் போதிய சேமிப்பை அதிகரித்துப் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக்கு நிதியிடவும், தீவிரப் பொது முதலீட்டு நடவடிக்கை களை அதிகரிக்கவும், பெருந்துணை புரிகிறது" என்று ஐ. நா. அறிக்கை ஒன்று குறிப்பிடுகிறது.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் பண, முதல் அங்காடிகள் வளர்ச்சியடையா நிலையிலிருந்து, பணவழிக் கொள்கை திறன்

[1] ராக்னர் நர்க்ஸ், 'வர்த்தகம், வளர்ச்சிப் பாங்கு'—ப 148.

குன்றி இருப்பதால் நிதிவழிக் கொள்கையைப் பயன்படுத்தி, பண வழிக் கொள்கையின் குறைபாடுகளைப் போக்கி முதலாக்க வீதத்தை வேகப்படுத்த முடிகிறது.

வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரத் திட்டங்களைச் செவ்வனே அமுல்படுத்துவதற்கு நிதிக்கொள்கை பெருந்துணை புரிகிறது. திட்டத்தின்போது இக் கொள்கையால் உண்மை மதிப்பிற்கும், பண மதிப்பிற்குமிடையே ஒரு சம நிலையை ஏற்படுத்த முடிகிறது. திடப்பொருள் சார்திட்டம் (Physical Plan) நிதி முறைத் திட்டத்தோடு (Financial Plan) ஒரே மதிப்புடன் சம அளவிலிருக்கச் செய்ய முடிகிறது. நிதி நடவடிக்கைகளால்தான் நிதிமுறைத் திட்டத்திற்கும், பொருள்களின் உண்மை மதிப்பிற்குமிடையே சமநிலையை ஏற்படுத்த முடியும்.

நிதிவழிக் கொள்கையின் குறிக்கோள்கள்:—பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தும் ஒரு சாதனமாக நிதிவழிக் கொள்கை அமைந்து கீழ்க்கண்ட குறிக்கோள்களைச் சாதிக்கப் பயன்படுத்தப் படுகிறது.

1. முதலீட்டு வீதத்தை அதிகரித்தல் (Increasing rate of Investment)
2. சமூக நலன் பேணும் உத்தம அளவு முதலீட்டை ஊக்குவித்தல் (Encouraging Socially Optimal Investment)
3. வேலை வாய்ப்புகளை அதிகரித்தல்.
4. பன்னாட்டு நிலையின்மையின் முன் பொருளாதாரச் சம நிலையை மேம்படுத்துதல் (Promoting Economic stability in the face of International instability)
5. பண வீக்கத்தைக் குறைத்தல்.
6. தேசிய வருவாயை அதிகரித்தலும், மறு பங்கீடு செய்தலும் (Increasing and Redistributing National Income)

## 1. முதலீட்டு வீதத்தை அதிகரித்தல்

முதலாவதாக, நிதிக்கொள்கையின் மூலமாக வளர்ச்சி குறைந்த நாடுகளில் அதிகமான வருவாயைச் சேகரிக்க வழியிடைக்கிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளைக் காட்டிலும், வளர்ச்சியடைந்த நாடுகளில் வரி வருவாய் அதிகமாக உள்ளது. சான்றாக பிலிப்பைன்சில் அது தேசிய வருவாயில் 6 சதவீதமாகவும், இந்தி

யாவில் 8 சதவீதமாகவும் மலேசியாவில் 11 சதவீதமாகவும், பர்மாவில் 15 சதவீமாகவும், சிலோனில் 19 சதவீதமாகவும் இருந்தது. ஆனல், வளர்ச்சியடைந்த நாடுகளில் அது 20 முதல் 30 சதவீதமாக இருந்தது. இருபதாம் நூற்ருண்டின் துவக்கத்தில் ஜப்பானில் நிலவரியின் மூலம் அதிக வருவாய் சேகரிக்கப்பட்டு முதலீடு செய்யப்பட்டதால் நாடு தொழில் மயமடையத் தகுந்த வாய்ப்பு ஏற்பட்டது. போலந்து போன்ற நாடுகளிலும், போர்க் காலத்தில் இவ்வாறே நாடு தொழில் மயமடைந்தது. நிதிக் கொள்கை நாட்டின் தனியார், பொதுத் துறைகளில் முதலீட்டு வீதத்தைத் துரிதப்படுத்தி மேம்படுத்தும் நோக்கத்தினைப் பெற்றுள்ளது. உண்மையான நுகர்வைக் கட்டுப்படுத்துதல், உயர்வு சேமிப்பு வீதத்தை அதிகரித்தல் ஆகியவைகளால் முதலீட்டு வீதத்தை அதிகரிக்க முடியும். முதலீடுகளில் சிலவற்றை ஊக்கப் படுத்தவும், சிலவற்றைக் குறைக்கவும், நிதிக் கொள்கையைப் பயன்படுத்தலாம். முதலீட்டு வீதத்தை உயர்த்த அரசு பொதுத் துறையில் திட்டமிட்ட முதலீட்டுக் கொள்கையை முதலில் கையாள வேண்டும். இதன் விளைவாகத் தனியார் துறையிலும் முதலீட்டின் அளவு அதிகரிக்கும். ஆனல் வளர்ச்சி குறைந்த நாடுகளில் சுய சேமிப்பு மிகக் குறைவாக இருப்பதால் முதலீட்டுக்குத் தேவையான நிதி வளங்களைப் பெறுவதுதான் பெரும் பிரச்சினையாகும். ஆடம்பர நுகர்வைக் குறைப்பதாலும், ஆக்கத்திற்குதவாத் துறைகளில் முதலீட்டைக் கட்டுப்படுத்துவதாலும், முதலீட்டிற்கு வேண்டிய ஓரளவு நிதி வளங்களைப் பெற முடியும். தனியார், பொது வெளி நாட்டு முதல் போதிய அளவு கிடைக்காமல் போய் விடுவதால் பொது நிதியியல், வரிக் கொள்கை, கட்டாயக் கடன்கள் போன்றவைகளின் மூலம் கூடுதல் சேமிப்பு விகிதத்தை, அதாவது இறுதி நிலைச் சேமிப்பு நாட்டத்தை உயர்த்த முடியுமென்று நர்க்ஸ் அவர்கள் கருதுகிருர்.

வளர்ச்சிக்குத் தேவையான நிதியைப் பெறுவதற்காகக் கூடுதல் சேமிப்பு விகிதத்தை உயர்த்த அரசு ஆறு முறைகளைக் கையாளலாம் என்று டாக்டர் R. N. திரிபாதி குறிப்பிடுகின்ருர்.[1] அவைகளாவன:—(1) நேரிடைத் திடப்பொருள் கட்டுப்பாடுகள் (2) இருக்கும் வரிவீதங்களை அதிகரித்தல் (3) புது வரிகளை விதித்தல் (4) பொது நிறுவனங்களிலிருந்து உபரியைப் பெறுதல் (5) பண வீக்கம் ஏற்படா இயல்புடைய பொதுக்கடன் முறை (6) பற்ருக் குறை நிதியாக்கம்.

1 டாக்டர். R. N திரிபாதி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொது நிதியியல்' ப. 56

நுகர்வு, ஆக்கத்திற்குதவா முதலீடு ஆகியவைகளைக் குறைக்க நேரிடைத் திடப் பொருள் கட்டுப்பாடுகள் மிகவும் திறம் கொண்டவைகளாகும். இவைகளை வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிர்வகிப்பது கடினமான செயலென்றாலும், நிதிக் கொள்கைக்கு இக் கட்டுப்பாடுகள் துணையாக இருக்கத் தக்கவைகளாகும். புது வரிகளை விதிப்பதோடு, நிலவும் வரிவீதங்களை வளர் விகிதத்தில் அதிகரிக்க வேண்டியது இன்றியமையாததாகும். நுகர்வைக் குறைக்கக் கடுமையான வளர் விகித வருமான வரிகள், ஆடம்பரப் பொருளிறக்குமதிக் கட்டுப்பாடு, ஆடம்பரப் பொருளிறக்குமதியின்மேல் அதிக இறக்குமதி வரிவிதித்தல், உள்நாட்டில் ஆடம்பரப் பொருள் உற்பத்தியைத் தடுத்தல் ஆகிய நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

பொது நிறுவனங்களைத் திறமையுடன் நடத்தினால் அதிவிருந்து உபரியைப் பெறமுடியும். ஆரம்பக் கட்டத்தில் இவைகள் அதிகச் செலவுடன் செயலாற்றுவதால் உபரி கிடைப்பதில்லை. மேலும், அதிக உபரியைப் பெறுவதற்கு ஏராளமான பொது நிறுவனங்களுமில்லை. உள்நாட்டுச் சேமிப்புத் தட்டுப்பாட்டை நிவர்த்திசெய்ய வெளி உதவியைப் பெற வேண்டியது அவசியமாகும். தனியார் துறை முதலீடு செய்யாத துறைகளில் வெளிவுதவியைப் பயன்படுத்த வேண்டும். வெளி உதவி தனியார் துறை வளர்ச்சியடையச் செய்யவும் பயன்படுத்தப் படவேண்டும். நிதிக் கொள்கை, தனியார் துறையின் வளர்ச்சிக்கு ஊக்கிகளை அளிப்பதற்கு வகை செய்யவேண்டும். இதற்குப் பலவகை நிதிமுறைச் சலுகைகள் உள்ளன. முதலீட்டு, தேய்மான, பதிலீட்டுத் தொகை, படிகள் (allowances), வெளிநாட்டுச் செலாவணி அளித்தல், வரிவிடுமுறை, வளர்ச்சி உதவிக் கொடைகள், தள்ளுபடி, போன்ற நிதிமுறைச் சலுகைகள் பொருளாதாரத்தின் தனியார் துறையில் முதலீடு அதிகரிக்கப் பெருமளவில் துணை செய்கின்றன என்று டாக்டர் திரிபாதி அவர்கள் கருதுகின்றார். எல்லா முறைகளிலும் வரிவிதிப்புதான் கட்டாயச் சேமிப்பைத் திறம்பட அதிகரிப்பதில் முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. துணை நிதி வளங்களில்லாததால் பற்றாக்குறை நிதியாக்கம் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பணவீக்கத்தை ஏற்படுத்துகிறது.

## 2 உத்தம அளவு சமூக முதலீட்டை ஊக்குவித்தல்

சமூக நலனை மேம்படுத்தும் துறைகளில் முதலீடு அதிகரிப்பதற்கு நிதிக்கொள்கை வகை செய்கிறது. உத்தம அளவு முதலீட்டுப் பாங்கையும் சமூகப் பொருளாதார நலம் பேணும்

துறைகளை அரசு மேம்படுத்தவும் நிதிக் கொள்கை துணை புரிகிறது. போக்குவரத்து, செய்தித் தொடர்பு, ஆக்கச் சக்தி வளர்ச்சி நிலப் பாதுகாப்பு ஆகிய துறைகளில் மேற்கொள்ளப்படும் முதலீடு பொருளாதார நலம் பேணும் அமைப்புகளில் முதலீடு செய்தலாகும். கல்வி, பொதுச் சுகாதாரம், தொழில் நுட்பப் பயிற்சி வசதிகள், ஆகியவைகளில் முதலீடு செய்தல் சமூக நலம் பேணும் அமைப்புகளில் முதலீடு செய்தலாகும். இவ்விருவகை முதலீடுகளும் பொருளாதாரத்தில் புறச்சிக்கனங்களை அதிகரிக்கின்றன. இவைகள் அங்காடியை விரிவடையச் செய்து, மொத்த உற்பத்தியை அதிகரித்து, ஆககச் செலவைக் குறைக்கின்றன.

சுய ஆர்வமும், மூலதனமும் குறைவாகப் பெற்றுள்ள தனியார் துறையினர் அதிகநிதி தேவைப்படும் இத்தகைய துறைகளில் முதலீடு செய்ய விரும்பார். மேலும், இத்தகைய துறைகளிலிருந்து விரைவான பலனையும் எதிர்பார்க்க முடியாது. எனவே, இத்தகைய துறைகளில் முதலீடு செய்யும் பொறுப்பை அரசே தன் கடமையாக ஏற்றுக்கொண்டு முதலாக்க வீதத்தை வேகப்படுத்தவேண்டும். பொது நலனைப் பேணும் அமைப்பு மூலதனம் (Overhead Capital), சமூக இறுதிநிலை ஆக்கத்திறன் (Social marginal productivity) கருத்தோடு ஒன்றி வருகிறது. இது புறச்சிக்கனங்களை உருவாக்கித் தனியார் முதலீட்டின் இறுதி நிலை ஆக்கத்திறனை உயர்த்துகிறது. எனவே, தனியார் முதலீடு பயனுள்ள ஆக்கவழிகளில் ஊக்குவிக்கப்படுகிறது.

## 3. வேலைவாய்ப்புகளை அதிகரித்தல்

நிதிமுறைக் கொள்கை வேலை வாய்ப்புகளை அதிகரித்து வேலையின்மை, வேலைக்குறைவு ஆகியவைகளைக் குறைக்க வகை செய்யவேண்டும். இதற்காக அரசின் செலவுகள், சமூகப் பொருளாதார நலம் பேணும் அமைப்புகளில் அதிகரிக்க வேண்டும். அத்தகைய செலவுகள் வேலை வாய்ப்பை அதிகரித்துக் காலப்போக்கில் பொருளாதாரத்தின் ஆக்கத் திறமையை அதிகரிக்கின்றன. வளர்ச்சி குறைந்த நாடுகளில் கிராம மக்கட் தொகை அதிகமாயிருப்பதால் அரசு சமுதாய வளர்ச்சி, உள்ளூர்ப் பொதுப் பணிகளை மேற்கொண்டு அதிக உழைப்பையும், குறைந்த மூலதனத்தையும் பயன்படுத்தவேண்டும். பொது நிறுவனங்களை ஏற்படுத்துவதோடு அரசு வரிவிடுமுறைகள், சலுகைகள், மலிவுக்கடன்கள், உதவிக் கொடைகள் போன்றவைகளை அளித்துத் தனியார் துறைகளை ஊக்குவித்தால், வேலைவாய்ப்புகள் அதிகரிக்கும். கிராமப்பகுதிகளில் பயிற்சி, நிதி, தொழில் இயந்திரங்கள்

ஆகியவைகளை அளிப்பதன் மூலம் உள்நாட்டுத் தொழில்களை ஊக்குவிக்க வேண்டும். இத்தகைய குறுகிய, நீண்டகால நடவடிக்கைகளில் செலவினங்களை அதிகரித்தால், வேலையின்மை, வேலைக் குறைவைப் போக்கி வேலை வாய்ப்புகளை அதிகரிக்க முடியும். விரைவான பொருளாதார வளர்ச்சியால்தான் ஒரு நாட்டில் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும். மக்கட் தொகை வளர்ச்சி வீதத்தைக் காட்டிலும் வேலை வாய்ப்புகள், வருவாய், வீதங்கள் அதிகரித்தால்தான் விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியும். எனவே, நிதிமுறைக் கொள்கை அதிக சமூக வசதிகளை அளித்துக் குடும்பக்கட்டுப்பாட்டு முறையைப் பெரிதும் வலியுறுத்த வேண்டும். மக்கட் தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்தினாலன்றி வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் குறிக் கோளைச் சாதிக்க முடியாது.

## 4. பன்னாட்டு நிலையின்மையின்முன் பொருளாதாரச் சமநிலையை மேம்படுத்துதல்

குறுகியகாலப் பன்னாட்டு வணிக மாற்றங்களுக்கு முன் நாட்டில் தேவையான பொருளாதாரச் சமநிலையை மேம்படுத்த நிதிக் கொள்கை வகைசெய்கிறது. வளர்ச்சி குறைந்த ஒரு பொருளாதாரம் தன் பொதுவான இயல்பினால் பன்னாட்டு வணிகச் சுழல் மாற்றங்களின் விளைவினால் பாதிக்கப்படுவது இயற்கையாகும். அது முதல் நிலைப் பொருள்களை ஏற்றுமதி செய்து, செய்பொருள்களையும் மூலதனப் பொருள்களையும் இறக்குமதி செய்கிறது. பன்னாட்டுச் சந்தையில் வேளாண்மை, தாதுப் பொருள்களின் விலைகள் குறையும் சமயங்களில் வாணிப மாற்று வீதம் (Terms of Trade) பாதகமாக மாறி, வெளிநாட்டுச் செலாவணி வருவாய் குறைந்து தேசிய வருவாயும் வீழ்ச்சியடைகிறது. வேளாண்மை, தாதுப் பொருள்கள் அளிப்பில் நெகிழ்ச்சியில்லா இயல்பினால் (Inelastic Nature) ஒரு வளர்ச்சி குறைந்த நாடு, இப்பொருள்களின் விலைகள் குறையும்போது அதன் ஏற்றுமதி அதிகரிப்பினால் நன்மை பெற முடியாது. அதே போன்று உலகச் சந்தையில் பூரிப்பு ஏற்பட்டாலும் அதனால் இந் நாடு நன்மையடைய முடியாது. வாணிப மாற்று வீதத்தில் ஏற்படும் சீரமைப்போடு கூடவே உற்பத்தி, வேலை வாய்ப்பு ஆகியவைகள் அதிகரிப்பதில்லை. இதற்கு மாறாக அதிக ஏற்றுமதி வருவாயானது, உண்மைச் சொத்துகள், யூகவாணிகம், ஆடம்பர நுகர்வு, ஆகியவைகளில் மறைந்து விடுகிறது. இதனால் பொருளாதாரத்தில் பணவீக்க அழுத்தங்கள் ஏற்படுகின்றன. வெளி, உள், சக்திகளால் ஏற்படும்

நிலையின்மையைப் போக்கிப் பொருளாதாரச் சமநிலையை நிலை நாட்டுவதில் நிதிமுறைக் கொள்கை முக்கிய பங்கேற்க வேண்டியுள்ளது. பூரிப்புக் காலங்களில் ஏற்படும் பன்னாட்டு வாணிகச் சுழல் மாற்றங்களின் விளைவுகளைக் குறைக்க, ஏற்றுமதி, இறக்குமதி வரிகளை விதிக்கவேண்டும். உலகச் சந்தை விலைகளின் அதிகரிப்பால் ஏற்படும் மித மிஞ்சிய இலாபத்தைப் போக்க ஏற்றுமதி வரிகளை விதிக்கவேண்டும். நுகர்வுப் பொருள்களின் மேல் அதிக இறக்குமதி வரிகளை விதிப்பதின் மூலமும், ஆடம்பரப் பொருள் இறக்குமதியைத் தடுப்பதன் மூலமும், அதிக வாங்கும் சக்திப் பயனைத் தடுக்க முடியும். நிதிமுறைக் கொள்கையின் வெற்றி, எந்த அளவுக்கு ஆடம்பரப் பொருள் இறக்குமதித் தடைகளும், ஏற்றுமதி, இறக்குமதி வரிகளும், உள்நாட்டுச் சேமிப்பு, முதலாக்கம் ஆகியவைகளை அதிகரிக்கப் பயன்படுகிறது என்பதைப் பொறுத்து அமையும். உலக அங்காடியில் பின்னிறக்கம் ஏற்படும்போது, ஏற்றுமதி வருவாய் குறைந்து, ஏற்றுமதிப் பொருள்துறை பெரிதும் பாதிக்கப்படுகிறது. இத்தகைய சூழ்நிலையில் அரசு பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் பொதுப்பணித் திட்டங்களைப் பெருமளவில் மேற்கொள்ளவேண்டும். நிதிமுறைக் கொள்கை பல்வேறு பொருளாதாரத் துறைகளில் சமச்சீரான வளர்ச்சியை ஏற்படுத்தப் பொருளாதாரத்தை விரிவடையச் செய்யவேண்டும். பன்னாட்டு வாணிகச் சுழல் மாற்றங்களின் விளைவைக் குறைக்க மந்த காலங்களில் பற்றுக்குறை வரவு-செலவுத் திட்டத்தின், எதிர் வாணிகச் சுழல் நிதிமுறைக் கொள்கையைப் (Contra—Cyclical Fiscal Policy) பின்பற்றவேண்டும். பின்னிறக்கக் காலங்களில் உபரி வரவு-செலவுத் திட்டமுறையைக் (Surplus Budgeting) கடைப்பிடிக்கவேண்டும்.

## 5. பணவீக்கத்தைக் குறைத்தல்

வளரும் பொருளாதாரங்களில் ஏற்படும் பணவீக்கப் போக்குகளைக் கட்டுப்படுத்தும் குறிக்கோளினை நிதிமுறைக் கொள்கை பெற்றிருக்க வேண்டும். அத்தகைய ஒரு பொருளாதாரத்தில் உண்மை வளங்களின் தேவை-அளிப்பு ஆகியவைகளுக்கிடையே ஒரு சமநிலையின்மை எப்போதும் இருந்து வருகிறது. பொருளாதாரத்தில் வாங்கும் திறனை அதிகரித்தால் தேவை அதிகரிக்கிறது. ஆனால், அமைப்புமுறைச் சீர்கேடுகளாலும், அங்காடிச் சீர்கேடுகளாலும், தாற்காலிகத் தடைகளாலும் இன்றியமையாத பொருள்களின் அளிப்பு நெகிழ்ச்சியடையாமல் இருந்து விடுகிறது. இதனால் பணவீக்க விலையேற்றம் ஏற்படுகிறது. மேலும், பொருளாதாரத்தின்

அமைப்புடைய துறையில் கூலிகள் உயர வேண்டுமென்ற கோரிக்கையும் எழுகிறது, இதன் விளைவாக ஆக்கச் செலவு அதிகரித்து, பொருள்களின் விலைகள் மேலும் அதிகரிக்கின்றன. இந் நிலையில் நுகர்வுப் பொருள் துறையைப் புறகணித்து முதல் பொருள் துறைகளில் முதலீட்டை அதிகரித்தால் பணவீக்க அழுத்தங்கள் மேலும் அதிகரிக்கின்றன.

பணவீக்க அழுத்தங்களைக் கட்டுப்படுத்த வளர்விகிதமுறையில் நேரடி வரிகளும், பொருள் மீதான வரிகளும், அதிகரிக்கச் செய்வது மிகவும் திறமையான நிதிமுறை நடவடிக்கையாக அமையும். அத்தகைய வரிகள் பணவீக்கத்தால் ஏற்பட்ட பண வருவாய் அதிகரிப்புகளை அதிக விகிதாசாரபபடி குறைக்க முடியும். நிதிமுறைக் கொள்கை, பணவீக்க விலையேற்றததைக் கட்டுப்படுத்துவதோடு, பொது விலை மட்டத்தில் சமநிலையை நிலைநாட்டும் நோக்கத்தையும் பெற்றிருக்க வேண்டும். இதற்காக அரசு நிதி முறை நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். தாற்காலிகத் தடைகள், அமைப்புமுறைச் சீர்கேடுகள் ஆகியவைகளை நீக்குதல் பல்வேறு துறைகளில் வளர்ச்சிக்குத் திட்டமிடுதல், முக்கிய பொருள்களின் மேல் கட்டுப்பாடு விதித்தல், உதவிக் கொடைகள் அளித்தல், இன்றியமையாத நுகர்வுப் பொருள் தொழில்களுக்குப் பாதுகாப்பளித்தல் போன்றவை இதற்கும் சிறந்த நிதிமுறை நடவடிக்கைகளாகும். எல்லாவற்றிற்கும் மேலாக, நிதி முறை, பண முறை நடவடிக்கைகள் ஒன்றை ஒன்று நிறைவு செய்பவைகளாய் அமைய வேண்டும். ஆனால், இவ்விரண்டு கொள்கைகளுக்குமிடையே மோதல் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இக் கொள்கைகள், பொதுக் குறிக்கோளாகிய பொருளாதார வளர்ச்சி, நிலைபேறு, ஆகியவற்றை அடைவதற்கு உகந்ததாக அமைய வேண்டும்.

## 6. தேசிய வருவாயை அதிகரித்தலும் மறுபங்கீடு செய்தலும்

நிதிமுறைக் கொள்கை, தேசிய வருவாயை அதிகரித்து அதை மறு பங்கீடு செய்ய வேண்டும். இதனால் வருமான, செல்வ, நுகர்வுத்தர ஏற்றத் தாழ்வுகள் குறைக்கப்பட வேண்டும். இது ஒரு மிகவும் கடினமான செயலாகும். தீவிர வருமான—செல்வ ஏற்றத் தாழ்வுகள் சமூக மனக்கசப்பை ஏற்படுத்தி, பொருளாதார அரசியல் சமநிலையின்மையை ஏற்படுத்தி, பொருளாதார வளர்ச்சிக்குப் பெரும் முட்டுக் கட்டையாக இருக்கின்றன. ஒரு சில

செல்வந்தர்கள் ஒரு பக்கம் தங்கள் செல்வம், வருவாய் ஆகியவற்றை ஆடம்பர நுகர்வு, உண்மைச் சொத்துகள், தங்கம், வெளி நாட்டுச் செலாவணி, யூக வாணிகம் ஆகியவைகளில் துர் உபயோகம் செய்கின்றனர். ஆனல், மறுபக்கம் மக்களில் பெரும் பாலோர், கடுமையான ஏழ்மை, துன்பம், ஆகியவைகளால் அல்லலுறுகின்றனர். நிதிமுறைக் கொள்கையின் நோக்கம் இத்தகைய தீவிர ஏற்றத் தாழ்வுகளைப் போக்கி வீண்போக்கில் தவருகப் பயன்படுத்தபடும் வளங்களைப் பொருளாதார வளர்ச்சிக்காக ஆக்க வழிகளில் செலுத்துவதற்கு வகை செய்ய வேண்டும். நிதிமுறை கொள்கையின் மறுபங்கீட்டுச் செயல்முறை ஏழை மக்களின் உண்மைவருவாயை அதிகரிக்கவும், உயர் வருமான மட்டங்களைக் குறைக்கவும் வகைசெய்கிறது. சமூகப் பொருளாதார அமைப்புகளில் அரசின் நேரிடை முதலீடு, உற்பத்தி, வேலைவாய்ப்பு, உண்மை வருவாய் ஆகியவைகளின் அளவை அதிகரிக்கச் செய்கிறது. இதனல் சாதாரண மக்களின் பொருளாதார நிலை உயர்ந்து வாழ்க்கைத் தரமும் சீரடைகின்றது. இக் கொள்கைக்கு ஆதரவாக அரசு பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளில் சமச்சீரான பிராந்திய வளர்ச்சித் திட்டங்களையும் நடைமுறைப்படுத்த வேண்டும்.

உயர் வருமான மட்டங்களைக் குறைக்க வளர்விகித, பரந்த அடிப்படையைக் கொண்ட வரி அமைப்பை உள்ளடக்கும் நிதிமுறைக் கொள்கையைப் பின்பற்ற வேண்டும். அத்தகைய வரியமைப்பு, வருமான, செல்வ, செலவு, சொத்துகள் ஆகியவைகளின் மீது வரி விதிக்கும் முறையைக் கொண்டதாக இருக்க வேண்டும். ஆடம்பர நுகர்வுப் பொருள்களின் மேல் கடுமையான வரிகளை விதிக்கும் அமைப்பாக இருக்கவேண்டும். பல்வேறு நேரடி வரிகளை அமுலாக்குவதும், சேகரிப்பதும், மிகவும் கடுமையான பிரச்சினையாகும். அரசியல் தலையீடு, வரிசெலுத்தும் இயல்பின்மை, நேர்மையும் திறமையும் கொண்ட நிர்வாகமின்மை, ஆகிய காரணங்களால் நிதிமுறைக் கொள்கை, திறமையாக வருவாயை மறு பங்கீடு செய்ய முடிவதில்லை. நிதிமுறைக் கொள்கை இக் குறிக்கோள்களை வெற்றியுடன் சாதிப்பது இரு காரணிகளைப் பொறுத்ததாகும். அவைகளாவன: (1) பொது வருவாயை அதிகரிக்குமளவு (2) பொதுச் செலவின் அளவும் போக்கும். வருவாயை அதிகரிக்க அரசு நிதிமுறைக் கொள்கைகளைக் கையாளுகிறது. அவைகள் வரவு செலவுத்திட்ட உபரி, வரி விதித்தல், வங்கிகளிடமிருந்தும், பொது மக்களிடமிருந்தும் கடன் வாங்குதல் ஆகியவைகளாகும். இம் முறைகள் பொருளாதார வளர்ச்சியோடு கூட நிலை பேற்றைச் சாதிக்கவும் வகை செய்யவேண்டும்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிதிமுறைக் கொள்கை பெரும்பாலும் திருப்திகரமான நிலையில்லை. இதற்குக் காரணங்கள் வருமாறு:- (1) திருப்திகரமில்லாத வரி அதிகாரத்துறை (2) பணப் புழக்கமில்லா பொருளாதாரத் துறையின் பரந்த அளவு (3) மக்கள் வருமான—செல்வக் கணக்கு வழக்குகளைச் சீராகப் பராமரிக்காமை (4) நேர்மையும், நற்குணமில்லா வரி கொடுப்போரும், வரியைப் பெறுவோரும் (5) வெளி நாட்டு அங்காடிகளினால் உள்நாட்டுத் தேசிய வருவாயில் நிலையின்மை ஏற்படுதல். திருப்திகரமில்லா வரியமைப்பினால் வரி வருவாய் அதிகரிப்பதில்லை. வரி நிர்வாகம் சீரமைக்கப்பட்டால் பொது வருவாய் அதிகரிக்கும். பிலிப்பைன்ஸ் நாட்டின் 'பெல்குழு' (Bell-Commission) கூறிய பரிந்துரையின்படி வரி நிர்வாகம் சீரமைக்கப்பட்டதால் வரி வருவாய் 90 சதவீதம் அதிகரித்தது. வேளாண்மையில் உள்ள பணப்புழக்கமில்லாத் துறையில் அதிகப் பணம் புழக்கத்தில் வந்தால் பொது வருவாய் அதிகரிக்கும். இந்தியாவில் தேசிய வருவாயில் 6 சதவீதமும், பர்மாவில் 20 சதவீதமும், இலங்கையில் 45 சதவீதமும், மலேசியாவில் 75 சதவீதமும் ஏற்றுமதித் துறையிலிருந்து கிடைத்துள்ளது. ஏற்றுமதி வருவாயினால் ஏற்படும் தேசிய வருமான மாற்றங்கள் உள்நாட்டு வரி வருவாயில் மாற்றத்தை ஏற்படுத்துகின்றன.

### வரிக் கொள்கையையும் பொருளாதார வளர்ச்சியும்

வரி விதிப்பு, நிதிமுறைக் கொள்கையின் ஒரு திறமையான கருவியாக இருந்துவருகிறது. அதிக விலைகள், அதிக வரி வீதங்கள் ஆகியவைகளின் மூலமாக வரவு—செலவுத் திட்ட உபரி கிடைக்கிறது. பொது மக்களிடமிருந்து கடன் வாங்குவதினால் வட்டி வீதங்கள் அதிகரித்து, அதனால் முதலீடு பாதிக்கப்படுகிறது. வங்கிகளிலிருந்து கடன் நிதியைப் பெற்றால் விலைகள் உயர்ந்து வளங்கள் வேறுபக்கம் திருப்பப்படுகின்றன. நாட்டின் வரியமைப்பைப் பொறுத்துத்தான் நிதிமுறைக் கொள்கையின் உண்மைத் திறன் விளங்கும். வரி விதிப்பினால் தனியார் நுகர்வு முதலீட்டைக் குறைத்து வளங்களைப் பொருளாதார வளர்ச்சிக்காக அரசிடம் மாற்றமடையசெய்ய முடியும். ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த. கீழ்க்கண்ட நோக்கங்களைச் சாதிக்க, வரிக் கொள்கை பயன்படவேண்டும்:

(1) வரி விதிப்பினால் நுகர்ச்சியைக் குறைத்து வளங்களை நுகர்வுத் துறையிலிருந்து முதலீட்டுத் துறைக்கு மாற்றமடையச் செய்யமுடியும்.

(2) வரி முறையினுல் சேமிப்பு—முதலீட்டிற்கான ஊக்கிகளை அதிகரிக்க முடியும்.

(3) தகுந்த வரி முறையினுல் வளங்களைப் பொதுமக்களிட மிருந்து, அரசாங்கத்திடம் மாற்றமடையச் செய்து பொது முதலீட்டை அதிகரிக்க முடியும்.

(4) சீரான வரி விதிப்பால் முதலீட்டுப் பாங்கை மாற்றி யமைக்க முடியும்.

(5) வரிக் கொள்கையால் பொருளாதார ஏற்றத் தாழ்வு களைக் குறைக்க முடியும்

(6) பொருளாதார உபரியைச் சேகரிப்பதற்கு வரி விதிப்புத் தகுந்த சாதனமாகும்.

பொதுக்கடன் முறையும் பொருளாதார வளர்ச்சியும்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்கத்தை அதிகரிக்கப் பொதுமக்களிடமிருந்து கடன் வாங்கும் முறை முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. இது வரி விதிப்பைவிடச் சிறந்த முறையாகும். வரி விதிப்பால் கட்டாயச் சேமிப்பு ஏற்படுகிறது. கடன் வாங்கு வதால் தன்னிச்சைச் சேமிப்பு அதிகரிக்கிறது. வரி கொடுப்பவர்கள் வரியினுல் நன்மை பெருததால் வரி கொடுப்பதை விரும்புவதில்லை. கடன் கொடுப்பவர் கடனை வட்டியுடன் திரும்பப் பெறுகிருர். வரி விதிப்பைப் போன்று, கடன் வாங்குதல் சேமிப்பு–முதலீட்டு ஊக்கத்தைப் பாதிப்பதில்லை. வளரும் நாடுகளில் பொதுக்கடன் எதிர் பணவீக்க நடவடிக்கையாக அமைந்து மக்களிடமுள்ள உபரியை சேகரிக்க வகை செய்கிறது. ஒரு வெற்றி கொண்ட பொதுக்கடன் திட்டத்தால் வளங்களை ஆக்கத்திற்குதவாத் துறை களிலிருந்து ஆக்கத் துறைகளுக்குத் திசை திருப்ப முடியும். ஆக்கச் சக்தி உற்பத்தி, நீர்ப்பாசனப் பணிகள், சாலைகள், இரயில்வேக்கள் அமைத்தல் போன்ற குறித்த வளர்ச்சித் திட்டங்களுக்காகப் பொதுக்கடன் முறை மேற் கொள்ளப்படுகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் குறைந்த வருவாய், குறைந்த சேமிப்பு, மக்களின் அதிக நுகர்ச்சி நாட்டம் ஆகியவைகளால் தன்னிச்சைப் பொதுக்கடன் முறையின் வாய்ப்புக் குறைந்துள்ளது. செல்வந் தர்கள் அரசு கடன்களில் தங்கள் பணத்தை முதலீடுசெய்ய

விரும்புவதில்லை. மேலும், அமைப்புடைய பண, முதல் அங்காடிகள் இல்லாத காரணத்தால் அரசு அதிக அளவில் கடன் பெற முடிவதில்லை. வங்கிகள், நிதி நிறுவனங்கள் மிகக் குறைவாகவே உள்ளன. கடன் பத்திரங்கள், உண்டியல்கள் பெருமளவில் பயன் படுத்தப்படுவதில்லை. அரசின் நிதி, அரசியல் சமநிலையில் மக்கள் நம்பிக்கை கொள்வதில்லை. அரசு ஆக்கத்திற்குதவா வழிகளில் சேமிப்பு வீணடிக்கப்படுவதைத் தடுக்க வேண்டும். மக்களின் சேமிப்பை அதிகரிக்கவல்ல நடுவண் நிறுவனங்கள் அதிகரிக்க வேண்டும். உண்டியல் அங்காடி நல்ல அமைப்புடன் வளர்ச்சி யடைய வேண்டும். அரசின் நிதி, அரசியல் சமநிலையில் மக்களின் நம்பிக்கை அதிகரிக்கச் செய்யவேண்டும். தன்னிச்சைக் கடன்கள் பெருமளவில் கிடைக்காவிட்டால் அரசு கட்டாயப் பொதுக் கடன் முறையைப் பின்பற்றி முதலாக்கத்தை அதிகரிக்க வேண்டும்.

## பொருளாதார வளர்ச்சியில் பொதுச் செலவின் பங்கு

வளர்ச்சிகுறைந்த நாடுகளில் வருவாய் குறைவாகக் கிடைக்கும் இடர்மிகுந்த துறைகளில் தனியார் துறையினர் முதலிடத் தயங்கு கின்றனர். பணக்காரர்களாக இருக்கும் சிலர் சுய ஆற்றலும், சுறுசுறுப்பும் இல்லாதவர்களாகிப் பணத்தை தங்கம், ஆபரணம், யூகவாணிக நடவடிக்கைகள் போன்றவைகளில் முதலீடு செய்கின்ற னர். ஒரு சிலரே நுகர்வுப் பொருள் தொழில்களிலும், தோட்டங் களிலும், சுரங்கத் தொழில்களிலும் முதலீடு செய்கின்றனர். இத்தகைய சூழ்நிலையில் பொதுச் செலவின் மூலமாகத்தான் மிக விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியும். ளர்ச்சிக்குத் தேவையான பொதுநலன் அமைப்பை அரசுதான் ஏற்படுத்த முடியும். அரசிடம் நிதி வளங்கள் ஏராளமாக இருக் கின்றன.

பலன் பெற நீண்டநாளாகும், பொருளாதாரச் சமூக அமைப்பில் முதலீடு செய்வதற்கு அரசே தகுந்ததாக உள்ளது. பொருளாதார வளர்ச்சியில் பொதுச் செலவின் பங்கு கீழ்க்கண்ட அம்சங்களில் உள்ளது. அவைகளாவன:- (1) பொருளாதாரத்தின் வளர்ச்சி வீதத்தை அதிகரித்தல். (2) அதிக வேலை வாய்ப்புகளை அளித்தல். (3) வாழ்க்கைத் தரத்தையும் வருவாய்களையும் அதிகரித்தல். (4) வருமான—செல்வ ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தல். (5) தனியார் சுய ஆற்றலையும், சுறுசுறுப்பையும், தொழிலுணர்வையும் ஊக்குவித்தல் (6) பொருளாதாரத்தில் சமச்சீரான பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்துதல் ஆகியவை களாகும்.

## முடிவுரை

வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிதிமுறைக் கொள்கை பல கருவிகளைப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியை மேம் படுத்தப்பெருந்துணை புரிகிறது. வரி விதிப்பு, பொதுச் செலவு, பொது வருவாய், பொதுக்கடன் போன்ற ஆயுதங்களைத் தகுந்த முறையில் திறமையுடன் பயன்படுத்தினால், நிதிமுறைக் கொள்கை ஏழ்மை நாடுகளில் வருவாய், உற்பத்தி, வேலை வாய்ப்பு, வாழ்க்கைத் தரம், நிலையான பொருளாதார வளர்ச்சி, விலைகளில் நிலைபேறு போன்றவைகளில் மேம்பாட்டை அடையும் குறிக்கோள்களைச் சுலபமாகச் சாதிக்க முடியும். ஆனால், நிதிமுறைக் கொள்கை மட்டும் தனியாகச் செயல்படுத்தப்பட்டால் முழுப் பலனையும் அடைய முடியாது. எனவே, பணமுறைக் கொள்கையும், நிதி முறைக் கொள்கையும் ஒன்றையொன்று நிறைவு செய்து திறமை யுடன் ஒருங்கிணைந்து செயல்பட்டால் விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சுலபமாகச் சாதிக்க முடியும்.

# 37. தொழில், வேளாண்மையின் கூட்டுச் சார்பு

## (Interdependence of Industry and Agriculture)

இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் தொழில், வேளாண்மை ஆகிய துறைகள் ஒன்றையொன்று சார்ந்து செயல்பட்டால்தான் சமச்சீரான பொருளாதார ஏற்றத்தைப் பெற முடியும். எனவே, நாட்டின் முழுமையான ஒருங்கிணைந்த வளர்ச்சிக்கு (overall development) தொழில், வேளாண்மை ஆகிய இரண்டு துறைகளும் ஒரே சமயத்தில் வளர்ந்து, ஒன்றையொன்று நிறைவு செய்பவைகளாய் அமைந்தால்தான் இந்தியாவின் தேசிய வருவாய் அதிகரித்து மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும். மேலும், இதனால் தொழில்துறையிலும் வேளாண்மைத்துறையிலும் கிடைக்கும் வருவாயும், கூலிகளும், விலைகளும் சமவிகிதத்தில் இருக்கும். இதன் விளைவாக நாட்டில் முழுவேலை நிலையைச் (Full employment) சாதிக்க முடியும். குறுகிய காலத்தில், ஒரு துறைக்கு (Sector) மட்டும் முதலிடம் அளித்தால் மற்றத் துறைகளில் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படும். குறுகியகாலத்தில் வளங்களின் அளவு குறைந்திருக்குமாதலால் ஒவ்வொரு துறையும் வளர்ச்சிபெறப் போட்டியில் முனைகிறது. ஆனால், நீண்டகாலத்தில் எல்லாத் துறைகளும் ஒன்றையொன்று சார்ந்து வளர்ச்சியடைவதால் ஒரு துறையில் தோன்றும் வளர்ச்சி மற்றத் துறைகளின் வளர்ச்சியை மேம்படுத்துகிறது. எனவே, காலப் போக்கில் பல்வேறு துறைகளின் தொடர்பு ஒன்றையொன்று நிறைவு செய்வனவாய் (Complementary) அமையும். இந்தியாவில் பொருளாதார வளர்ச்சியைச் சுய—பலத்துடன் Self—Sustaining) சாதிக்க, தொழில், வேளாண்மை ஆகிய துறைகள் ஒன்றையொன்று சார்ந்து வளர்ச்சியடையச் செய்ய வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

கிராமப் பொருளாதாரம் மாற்றமடைதல்
(Transformation of Village Economy)

இன்றைய தொழில் மயம் பெற்று முன்னேறிய நாடுகளாகிய ஜப்பான், ரஷ்யா, அமெரிக்கா இவைகளின் பொருளாதார வரலாற்றை ஆராய்ந்தால் இந் நாடுகளில் வேளாண்மை, தொழில் துறைகள் ஒன்றையொன்று சார்ந்து வளர்ந்துள்ள முறையை உணரலாம்.[1] இந் நாடுகளின் ஆரம்ப வளர்ச்சிக் கட்டத்தில், செய்பொருள் தொழில்கள் (Manufacturing industries) வளர்ச்சியடைவதற்குச் செழிப்பான வளர்ச்சியைக் கொண்ட வேளாண்மைத் துறைதான் அடிப்படையாக அமைந்தது. பெருகி வந்த நகர மக்கட் தொகைக்கு அதிக அளவில் உணவுப் பொருள்களை அளித்தது வேளாண்மைத்துறையாகும். வேளாண்மையல்லாத இதர துறைகளில் (Non Agricultural Sectors) முதலாக்கத்தை அதிகரிக்க வேளாண்மை உபரி (Agricultural Surpluses) சேகரிக்கப் பட்டுப் பயன்படுத்தப்பட்டது. கிராமப்பகுதிகளில் உண்மை வருவாய் (Real income) அதிகரித்ததால், செய்பொருள்களின் (Manufactured Goods) உறுதித்தேவை (Effective demand) விரிவடைந்தது. பண்ணைப் பொருள்களின் ஏற்றுமதி முதல் பொருள்களின் இறக்குமதிக்கு நிதி அளித்து வகை செய்தது. இதனால் தொழில் வளர்ச்சி மேம்பட்டது. கிராமப் பொருளாதாரத்தின் அடிப்படை அமைப்பே மாற்றம் (Structural transformation) பெற்றது. வர்த்தகப் பயிர்களின் (Cash Crops) உற்பத்தி அதிகரிப்பால் பராமரிப்புப் பொருளாதாரம் (Subsistence Economy) மாற்றுப் பொருளாதாரமாக (Exchange Economy) மாற்றம் பெற்றது. புதிய வேளாண்மை உறவுமுறை, புதிய தொழில் நுட்பம், உற்பத்தித்திறன், புதிய அமைப்பு, தொழில் துணிவோரின் திறன் ஆகியவைகள் கிராமங்களில் உருவாகித் தொழில் வளர்ச்சியும், வேளாண்மை முன்னேற்றமும் சம அளவில் மேம்பட்டது. இதன் விளைவாக வரி வருவாய் (Tax—Revenue) கணிசமாக அதிகரித்துச் சமூகநலனை அதிகரிக்கும் மூலதனத்தை (Social Overhead capital) அரசு பெறமுடிந்தது.

இந்தியாவின் நிலை

இந்திய விவசாயிகளின் சிந்தனையிலும், செயலிலும் பெருமளவு மாற்றம் ஏற்பட்டுவருகிறது. உற்பத்தியை அதிகரிக்க வேண்டுமென்ற உணர்வுடன் பல்வேறுவகையான உரங்கள், சீரான அதிக விளைச்சல் தரும் I. R. 8 போன்ற விதைகள், கிருமி

1 பி. டி. பாயர், பி. எஸ். யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம், ப. 285.

நாசினிகள், போன்றவைகளைப் பெருமளவில் பயன்படுத்தி வருகின்றனர். இந்தியாவில் தற்போது விற்பனை உபரி (Marketable Surplus) நகரங்களிலுள்ள மக்களுக்காகக் கிராமங்களிலிருந்து அனுப்பப்படுகிறது. தற்போது விவசாயிகள் டிராக்டர்கள், கருவிகள், மற்றத் தொழில்நுட்ப சாதனங்களைப் பயன்படுத்தி வேளாண்மை நடவடிக்கைகளை மேற்கொள்கின்றனர். இந்தியக் கிராமப் பொருளாதாரம் மாற்றமடைவதற்கு அடிப்படைக் காரணமாய் இருந்தது சமுதாய வளர்ச்சித்திட்டங்களும், தேசிய விரிவாக்கப் பணிகளுமாகும். பஞ்சாயத்து ஆட்சியின் அடிப்படையில் கிராமப் பொருளாதாரம் மேலும் பல்வேறு முன்னேற்றங்களைப் பெற்று வருகிறது. தற்போது கிராமங்களில் மின்னோட்டம், கல்வி வசதி, வீட்டு வசதி, சுகாதாரம் போன்றவைகள் விரிவடைந்து வருகின்றன.

### வேளாண்மையும் தொழில் வளர்ச்சியும்

வேளாண்மை தொழில் முன்னேற்றத்திற்குப் பெருமளவில் ஆதரவு அளித்து வருகிறது. தொழில் துறைக்குத் தேவையான மூலப்பொருள்களை வேளாண்மைத் துறை அளிக்கிறது. வேளாண்மை மூலப்பொருள்களாகிய பருத்தி, சணல், எண்ணெய் வித்துகள், கோதுமை, கரும்பு, போன்றவைகள் தொழில் துறைக்கு உள்ளீடுகளாக (Inputs) பயன்படுகின்றன. வேளாண்மைத் துறை விரைவாக வளர்ச்சியடைந்தால்தான் தொழில் துறைக்குத் தேவையான உள்ளீடுகள் கிடைக்கும். எனவே, எந்திர மயமாக்கப்பட்ட நவீன உற்பத்தி முறைகளைக் கொண்ட வேளாண்மைத் துறையினால் ஒரு நாட்டின் தொழில் செழிப்புற்று வளர்ச்சியுறும். வேளாண்மைத்துறையில் சில முதல் பொருள்களின் (Capital goods) தேவை அதிகரித்தால் தொழில் துறை முன்னேற்றமடைகிறது. உதாரணமாக வேளாண்மைத் துறையில் டிராக்டர்கள், வேளாண்மைக் கருவிகள், மற்றச் சாதனங்கள், உரவகைகள், போன்ற முதல்பொருள்கள் பெருமளவில் தேவைப்பட்டால் தொழில் துறைகளில் இவைகளின் உற்பத்தி அதிகரிக்கிறது. இதன் விளைவாக நாட்டில் தொழில் மயம் ஏற்படுகிறது, எனவே, தொழில், வேளாண்மைத்துறைகள் ஒன்றையொன்று சார்ந்திருந்தால் நாட்டில் தொழில் வளர்ச்சியும், வேளாண்மை முன்னேற்றமும் ஏற்படுகிறது. இதற்கு இரு முக்கிய மாதிரிகளும் உள்ளன.

### ஜப்பானின் வளர்ச்சி

முதலாவதாக ஜப்பான் நாட்டின் தொழில் வளர்ச்சியை ஆராய்ந்தால் மேற்குறிப்பிட்ட உண்மை புலனாகும். ஜப்பானில்

சராசரியாகப் வேளாண்மைப் பண்ணையின் அளவு இன்றும் இரண்டு அல்லது மூன்று ஏக்கர்கள்தான். எனினும், ஓர் ஏக்கர் நில உற்பத்தித் திறன் ஆசியாவின் மற்றப் பகுதிகளில் இருப்பதைவிட இரண்டு முதல் மூன்று மடங்கு அதிகமாக உள்ளது. முதல் உலகப் போருக்கு முற்பட்ட முப்பது ஆண்டுகளில் அந் நாட்டின் உற்பத்தித்திறன் ஐம்பது சதவிகிதம் அதிகரித்தது. 1930-க்கும் 39-க்கும் இடைப்பட்ட காலத்தில் உற்பத்தித் திறன் இருமடங்காக அதிகரித்தது. உற்பத்தியில் ஏற்பட்ட இத்தகைய முன்னேற்றம் பண்ணையின் அளவில் எந்த விதமாற்றமும் இன்றிச் சாதிக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய ஆச்சரியப் பட்டத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டதற்குக் காரணம் ஜப்பான் அரசு வேளாண்மை ஆராய்ச்சி, விரிவாக்கப்பணிகள், கல்வி ஆகியவைகளில் மொத்தத் தேசிய வருவாயில் சுமார் ஒரு சதவிகிதத்தை செலவிட்டதுதான். பேராசிரியர் W. A. லூயிஸ் அவர்கள் குறிப்பிடுவதுபோல் "ஆண்டொன்றுக்குத் தேசிய வருவாயின் ஒரு சதவிகிதம் ஆராய்ச்சி, வேளாண்மைக் கல்வி ஆகியவைகளில் செலவிட்டால், வேளாண்மை உற்பத்தித்திறன் ஆண்டொன்றுக்கு ஒரு சதவீதம் அதிகரிக்கும். இது ஆண்டொன்றுக்கு ஐம்பது சதவீத இலாபத்திற்குச் (Return) சமமாக இருப்பதால், இது மிக உன்னத ஆக்க முதலீடாகும். வேளாண்மை நாடுகளுக்கு இது அதிக இலாபத்தைத் தரக்கூடிய முதலீடாகும். இத்தகைய இலாப வீதத்தைச் சாதிக்க நம்மால் முடியும்."[1] ஆனால், வேளாண்மைத்துறை அதன் சீரமைப்பிற்குத் தேவையான உற்பத்திக்குமேல் வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. வேளாண்மைத் துறைக்குத் தேவையான அதிக உற்பத்தியில் ஒரு பங்கை விற்றுவிட்டு மீதியை விவசாயிகளிடமிருந்து அதிக வாரமாகவோ, அல்லது வரியாகவோ ஜப்பான் அரசு பெற்றது. அவ்வாறு பெற்ற தொகையைத் தொழில் மயத்தை அதிகரிக்கச் செய்யவும் சமூக நலனை மேம்படுத்தும் முதலை (Social overhead Capital) உண்டாக்கவும் அரசு பயன்படுத்தியது. ஜப்பானில் 1914-க்குமுன் பண்ணை வரி விதிப்பு முறையால் வேளாண்மை உபரியில் கணிசமான பகுதியை எடுத்துப் பொது நடவடிக்கைகளுக்காகப் பயன் படுத்தப்பட்டது. 1870 ஆம் ஆண்டிலிருந்து இவ் வரிவருவாய் முதலாக்க வீதத்தை ஆண்டுக்கு மூன்று சதவீதமாகத் தொடர்ந்து அதிகரித்து வருகிறது.[2]

[1] W. A. லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 188—89.

[2] W. W. லாக்வுட் (W.W. Lockwood) 'ஜப்பானின் பொருளாதார வளர்ச்சி' (Economic Development of Japan) ப. 300—301.

ரஷ்யாவின் வளர்ச்சியும் வேளாண்மையின் முக்கியத்துவமும்

வேளாண்மை உற்பத்தி அதிகரிப்பால் பண்ணை உபரியைத் தொழில் மயமாக்கப் பயன்படுத்திய நாடு ஜப்பானுக்கு அடுத்தபடியாக ரஷ்யா (U. S. S. R.)வாகும். ஆனால், அது வேறு நடவடிக்கைகளின் மூலமாகத் தொழில் வளர்ச்சிக்கு நிதி வசதி அளித்தது. பர்மா, உகண்டா, தங்கக் கரையோரம் (Gold-coast) ஆகிய நாடுகள் பண்ணை உற்பத்தி அதிகரிப்பில் பெரும் பகுதியை மற்றத் துறைகளின் வளர்ச்சிக்கு நிதியளிப்பதற்காகப் பயன்படுத்தி வருகின்றன. விரைவாகப் பெருகும் வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களோடு தொழில் மயத்திட்டம், அதிக முதலாக்கம் ஆகியவைகளும் உடன் வளர்ச்சியடையும் என்பது பொருளாதார வரலாற்றில் காணப்படும் ஓர் உண்மையாகும். வேளாண்மைத் துறையில் மேற்கொள்ளப்படும் முதலீடு பண்ணை உற்பத்தித் திறன், வேளாண்மை முன்னேற்றம் ஆகியவைகளில் மகத்தான விளைவுகளை ஏற்படுத்துகிறது. இம் முதலீடு மற்றத் துறைகளின் தேவையை அதிகரிக்கச் செய்யவும் முதலாக்கத்தைப் பெருக்கவும் வகை செய்கிறது. பண்ணை வேளாண்மையை (Peasant Agriculture) புறக்கணிக்கப்பட்ட நாடுகளில் பொருளாதார வளர்ச்சி தேக்கமடைந்தோ அல்லது வளர்ச்சி வீதங்கள் மிகக் குறைந்தோ காணப்படுகிறது. இங்கிலாந்து அல்லது சீனாவை பிரான்ஸின் பொருளாதாரத்தோடு ஒப்பிட்டால் பிரான்ஸில் உள்ள தேக்க நிலைக்குக் காரணம் அந்த வேளாண்மை உற்பத்தித் திறனின் வளர்ச்சி மிகக் குறைவாகும். பிரான்ஸில் அந் நாட்டு மக்கட் தொகையில், கால்பகுதிக்குமேல் பண்ணைகளில் பணிபுரிய ஆள்கள் தேவைப்படுகின்றனர். வளர்ச்சியடைந்த நாடுகளில் பன்னிரண்டு முதல் பதினைந்து சதவீதம், பண்ணைகளில் பணிபுரிய ஆள்கள் தேவைப்படுகின்றனர்.

தொழில் வேளாண்மை பரவலாக்கப்படல் (Diversification of Industry and Agriculture)

இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் நாட்டைத் தொழில் மயமாக்க அரசு வகை செய்யவேண்டும் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டதாகும்[1]. வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், பொருளாதார வளர்ச்சியை அதிகரிக்கவும், அரசால் ஆதரிக்கப்பட்ட தொழில் மயம் முக்கிய கருவியாக விளங்குகிறது. மக்கட்தொகை அதிகமாகக் கொண்ட நாடுகளில் உபரி மக்கட்தொகையை வேலையிலமர்த்த செய்பொருள் தொழில்கள் வளர்ச்சியடைய வேண்டும். வேளாண்மை அல்லாத மற்றப் பணிகளில் வேலை வாய்ப்பை அதிகரிக்க வகை செய்ய

1 பி. டி. பாயர், பி. எஸ். யாமி—'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்,' பக். 250.

வேண்டும். வருமான மட்டத்தில் ஏற்படும் ஒரு பொது அதிகரிப் பின் விளைவாக வேளாண்மை அல்லாத மற்றப் பொருள்களின் தேவை அதிகரிக்கும். இத்தகைய அதிகமான தேவையைப் பூர்த்தி செய்ய உற்பத்திச் சாதனங்களை செய்பொருள் தொழில்களின் வளர்ச்சிக்காகப் பயன்படுத்த வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. இந்தியா போன்ற நாடுகளில் உரு மறைந்த வேலையின்மை (Disguized unemployment) இருப்பதால், அதைப் போக்கத் தொழில் பரவலாக்கப்பட வேண்டும். தொழில் பரவலாக்கப் பட்டால் (Diversification of Industry) புதிய தொழில்கள் தோன்றி வேலையில்லாதவர்களுக்கு ஆக்கப்பணிகளை அளிக்க வகை செய்ய முடியும். அதிக உற்பத்தியால் ஏற்றுமதியைப் பெருக்கவும், உலகச் சந்தையில் பொருள்களுக்கு நெகிழ்ச்சியற்ற தேவையை அதிகரிக்க வும் வகை செய்யலாம். ஒப்பீட்டுக் கிரய (Comparative Cost) நன்மைகளின் அடிப்படையில் தொழில், வேளாண்மை ஆகியவை களைப் பரவலாக்கினால்தான் இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் சமச் சீரான வருவாயைப் பெற முடியும். இத் துறையில் வளர்ச்சியடைந்த நாடுகள் வளர்ந்து வரும் நாடுகளின் பொருள் களை இறக்குமதி செய்து ஏழை நாடுகளின் வளர்ச்சியை அதிகரிக்கத் துணைசெய்ய வேண்டும்.

பொருளாதாரச் சமநிலையை ஏற்படுத்தப் பன்னாட்டு நடவடிக் கைகள் திறம்பட இல்லாததால் ஏழை நாடுகள் தொழில் வேளாண்மையைப் பரவலாக்குவதின் மூலம் தங்கள் துயரத்தை குறைக்க வகை கிடைக்கிறது கிராம மக்கள் பொருளாதார ரீதியாகவும் சில சமயம் கலாச்சார ரீதியாகவும் பிற்பட்ட நிலையில் இருக்கின்றனர். தொழில்மயம், மக்களின் திறன், உழைப்பு ஆகிய வைகளை ஊக்குவித்துச் சமுதாய அமைப்பை முன்னேற்றமுடைய தாகவும், ஆற்றல் மிக்கதாகவும் மாற்றியமைக்கிறது. வளர்ந்த நாடுகளில் மக்கட் தொகையில் பெரும்பாலோர் செய்தொழில் நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளனர். அதன் விளைவாக அந் நாடுகள் ஏழை நாடுகளைக் காட்டிலும் மிக அதிகமாக உலகச் செய்பொருள் மொத்த உற்பத்தியில் பெரும் விகிதத்தை உற்பத்தி செய்கின்றன. வளர்ச்சியடைந்த நாடுகளில் வேளாண்மைத் துறையிலிருந்து கிடைக்கும் வருமானத்தைவிடத் தொழில் துறையிலிருந்து கிடைக்கும் தலாவருவாய் பொதுவாக அதிகமாக உள்ளது.

### ஒருமித்த பொருளாதார வளர்ச்சி (Integrated Economic Development)

ஒரு பொருளாதாரத் துறையின் முக்கியத்துவத்தை உணர்த்த மற்றத் துறையின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப் பிடத் தேவை இல்லை. உண்மையில், வளர்ச்சி நடவடிக்கையில்

(Growth Process) ஒரு துறையின் முக்கியத்துவம் சில சமயங்களில் மற்றத் துறையின் வளர்ச்சியையே பெரும்பாலும் சார்ந்திருக்கும். இக் கருத்து முக்கியமாக வேளாண்மை, தொழில் ஆகிய துறைகளுக்குப் பொருந்தும். ஒரு துறையின் வளர்ச்சியை மட்டும் தனியாக மதிப்பிடுவது தவறாகும். பொருளாதாரத்தைப் பல்வேறு பகுதிகளால் ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு பகுதி (one unit)யாகக் கருத வேண்டும். பல்வேறு பகுதிகள் ஒன்றோடொன்று ஒருங்கிணைந்து ஒவ்வொன்றும் சரிசமமாக வளர்ச்சியடைய வேண்டும். ஒருமித்த பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க ஒவ்வொரு நாடும் முயன்று வருகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் வேற்றுமையான வளர்ச்சி நிலை இருப்பதால், அந் நாடுகளில் சமச் சீரான வளர்ச்சிக் கொள்கையைச் சாதிக்கத்தக்க பொதுமை (Generalisation) ஒன்றும் இல்லை. சூழ்நிலைகளின் உண்மை நிலைக்கு ஏற்றபடி ஒவ்வொரு நாடும் அதற்கேற்ற வளர்ச்சி மாதிரியை (Model of Deve'opment) உருவாக்க வேண்டும். வளர்ச்சி குறைந்த நாடுகள், அதிகமான வளர்ச்சியையும், செல்வந்த நிலையையும் வேறுபட்ட பொருளாதாரத்தையும் பெற்ற நாடுகளின் இயல்புகளை அப்படியே ஏற்றுக்கொண்டு தங்கள் வளர்ச்சி நடவடிக்கைகளின் பாங்கை (Pattern of priorities) அமைத்தல் விவேகமாகாது. வளர்ந்த நாடுகளின் செல்வந்த நிலைக்குக் காரணம் அவைகள் ஒரு துறைக்குச் சிறப்பிடம் அளித்து அதை வளர்ச்சியடைச் செய்ததுதான் என்று கூற முடியாது. மலிவான ஆக்க சக்தி, ஏராளமான உலோக தாதுக்கள், மற்ற இயற்கை வளங்கள், முதல் சேர்க்கை, தொழில் துணிவோர் திறன், நிர்வாகத் திறமை போன்ற சிலவகைக் காரணங்களால் நாடுகள் செல்வந்த நிலையைப் பெற்றுள்ளன. அமெரிக்கா, கானடா, நியூஜிலாந்து, ஸ்வீடன் ஆகிய நாடுகளில் வேளாண்மையில் மக்கட் தொகையில் அதிக சதவிகிதத்தினர் ஈடுபட்டிருந்தும் அந் நாடுகளில் இங்கிலாந்திலிருப்பதைக் காட்டிலும் அதிகமான உண்மைத் தலாவருவாய் உள்ளது.[1] வேளாண்மை நாடுகளில் செல்வந்த நாடுகளும் ஏழை நாடுகளும் உள்ளன. அதேபோல் தொழில் நாடுகளில் செல்வந்த நாடுகளும், செல்வம் குறைந்த நாடுகளும் உண்டு. துறைகளுக்குச் சிறப்பிடம் அளிப்பதால் நாடு முன்னேறிவிட முடியாது. நவீன தொழில்-நுட்பம், புதிய வாய்ப்புகளைப் பயன்படுத்துதல் போன்றவைகளை நடைமுறைப்படுத்துவதால் வளர்ந்த நாடுகளின் பொருளாதார அந்தஸ்து உயர்கின்றது. உதாரணமாக இந்தியாவில், பஞ்சாப் மாநிலத்தில் செழிப்பான வேளாண்மையும், துணைத்தொழில் நடவடிக்கைகளும் இருப்பதால் அம் மாநிலம் செழிப்பான வளர்ச்சியைப் பெற்

1 பி. டி பாயர், பி. எஸ். யாமி,—'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 238.

றுள்ளது. அதற்கு மாறாக பீஹாரில் சுரங்கத் தொழில், உலோகத் தொழில் ஆகியவைகள் தோன்றியும் அது பொருளாதார ரீதியில் பிற்பட்ட மாநிலமாகவே இருந்துவருகிறது.

வளர்ச்சி குறைந்த நாடுகள் எல்லாவற்றிற்கும் பயன்படத் தக்க வேளாண்மை, தொழில்களுக்கிடையே ஒரு பொதுச் சமநிலைப் பாங்கை (Pattern of Balance) ஒரு பொதுமையின் (Generalisation) மூலம் எடுத்துரைப்பது கடினமாகும். இருப்பினும் வளர்ச்சி குறைந்த நாடுகளின் திட்ட நிபுணர்களுக்கு வழிகாட்டியாக விளங்கும் வகையில் கொள்கைகளை அமைக்கச் சில கருத்துகளைக் ('Pointers') கீழ்க்கண்டபடி பரிந்துரைக்கலாம். உள்ளூர்ச் சூழ் நிலைக்குத் தக்கபடி இக் கருத்துகளை மாற்றியமைத்துக் கொள்ளலாம்.

வேளாண்மை, தொழில் கூட்டுச் சார்புக் கொள்கை

(Policy for Interdependence of Industry and Agriculture)

முதலாவதாக, ஒரு தொழிலுக்கு மட்டும் மற்றத் தொழில் களைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் அளிக்கலாகாது. எனவே, திட்ட நிபுணர்கள் ஒரு துறையின் வளர்ச்சி பாதிக்கும் வகையில் மற்றோர் குறித்த துறையின் வளர்ச்சிக்காக வளங்களைப் பயன் படுத்தக் கூடாது. ஒரு குறித்த அளவு வரைக்கும் வளங்களை ஒரு குறித்த நடவடிக்கையில் பயன்படுத்தலாம். அந்த அளவுக்குப் பின் வளங்களை வேறு சில நடவடிக்கைகளில் ஈடுபடச் செய்தால் மொத்த நலன் அதிகரிக்கும். இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் அடிப்படை அமைப்பிலேயே (Structural) பேரளவு மாற்றங்களை ஏற்படுத்த வேண்டியிருப்பதால், இறுதிநிலைக் கருத் தைக் (Marginal Principle) குறைந்த அளவில்தான் பிரயோகிக்க முடியும். வளங்களின் பேரளவு தாறுமாறான பெயர்ச்சி, சமச் சீரில்லாச் வளர்ச்சி விளைவுகளைத் தோற்றுவிக்கும். எனவே, வளங் களின் உபயோகத்திற்குச் சிறப்பிடம் அளிக்கும்போது சமூக இறுதி நிலை உற்பத்தித் திறன் (Social Marginal Productivity) கருத்தை வழிகாட்டிக் கொள்கையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டாவதாக, பொருளாதார நடவடிக்கைகளுக்குச் சிறப் பிடம் அளிக்கும் போது, வளங்களின் அளவு, தன்மை, தொழில் நுட்ப முன்னேற்றமட்டம், நிறுவனமுறைக் காரணிகள் (institutional factors) ஏற்கெனவே பெற்றுள்ள வளர்ச்சியின் அளவு போன்ற உள்ளூர்ப் பொருளாதார நிலைகளைக் கருத்தில் கொண்டு திட்டம் தீட்ட வேண்டும். இத் துறையில் மற்ற நாடுகளின் அனுபவங்களையும் அறிந்து நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

மூன்றாவதாக, உபரித் தொழிலாளர்களுள்ள நாடுகளில் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில், வேளாண்மை, நீர்ப்பாசனம், போக்குவரத்து, மற்றப் பொது நடவடிக்கைகள் ஆகியவைகளில் மூலதனத்தைப் பயன்படுத்தினால் சிறந்த பயனளிக்கும். உபரி கிராம மக்கட் தொகையை நவீன பேரளவுத் தொழில்களில் வேலைக்கமர்த்துவதை விட, வேளாண்மை வளர்ச்சிப் பணிகளில் குறைந்த மூலதனத்துடன் நல்ல முறையில் ஈடுபடச் செய்ய முடியும்.[1] வேளாண்மை, தொழில் இவைகளில் சமநிலையை ஏற்படுத்தவும் வேளாண்மை வேலையின்மையைப் போக்கவும், மறைந்து இருக்கும் திறனை வெளிக் கொணரவும், பொருளாதார நிலைபேறின்மையைக் (Economic instability) குறைக்கவும் தொழில் மயம் ஏற்படுத்தப் படவேண்டும். எனவே, வேளாண்மை உற்பத்தி அதிகரிப்பு பாதிக்கப்பட்டாலும் உண்மைச் சமநிலையை (Real balance) ஏற்படுத்தும் நோக்கோடு தொழிலில் ஓரளவு முதலீடு தேவைப்படுகிறது. வேளாண்மையில் ஈடுபட்டிருப்போரின் எண்ணிக்கையைக் குறைக்காமல் அத் துறையில் கணிசமான தொழில்நுட்ப முன்னேற்றத்தைப் பிரயோகிப்பது இயலாது என்பது நடைமுறை உண்மையாகும். இத்தகைய சூழ்நிலையில் வேளாண்மை உபரி மக்கட் தொகையை ஈர்க்கவல்ல (absorb) செய்பொருள் தொழில்களை வளர்ச்சியடையச் செய்ய ஒரு வேளாண்மைச் சீரமைப்புத் திட்டத்தை ஏற்படுத்த வேண்டும். ஐ. நா. ஆய்வு அறிக்கையில், "மற்றக் காரணங்களிருப்பினும் வளர்ச்சி குறைந்த நாடுகளில், முக்கியமாக ஆசியாவில் வேளாண்மை வேலையின்மையைப் போக்குவதற்கு, செய்பொருள் தொழில்களின் வளர்ச்சிக்கு அதிகச் சிறப்பிடம் அளிக்க வேண்டும்."[2] வேளாண்மை, தொழில் இவைகளுக்கிடையே கூட்டுச் சார்பும் (Interdependence) நிறைவு செய்யும் இயல்பும் (Complementarity) இருப்பதால் இவ்விரு துறைகளுக்கு மிடையே ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய அவசியமில்லை. இரண்டுமே முழு அளவில் அக்கறையுடன் வளர்ச்சியடையச் செய்ய வேண்டும்.

நான்காவதாக, வளர்ந்து வரும் பொருளாதாரத்தில் சில துறைகளில் அழுத்தங்கள் ஏற்படும். எல்லாத் துறைகளும் சம அளவு வளர்ச்சி பெற்று முன்னேறும் என்று எதிர்பார்க்க முடியாது. பொருளாதார வளர்ச்சியின் போது சில துறைகளில் உபரியும் சில துறைகளில் பற்றாக் குறையும் தோன்றுவது இயற்கையே

[1] (a) ராக்னர் நார்க்ஸ் 'வளர்ச்சி குறைந்த நாடுகளில் முதலாக்கச் சிக்கல்கள்' ப.45-46 (b) W. ஆர்தர் லீவிஸ் (W. A. Lewis) 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' 218-19.

[2] ஐ. நா : 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கான நடவடிக்கைகள்' ப.59.

இப் பிரச்சினைக்கு W. A. லீவிஸ் அவர்களின் அறிவுரை மிகப் பொருத்தமானதாகும். "பொருளாதாரத்தில் தேவை, அளிப்பு இவற்றிற்கிடையே சமமின்மை தோன்றும் தருணத்தில் இதற்கான விவரங்களை முழுவதும் சேகரிக்கவேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். இவ் விவரங்களின் அடிப்படையில் பற்றுக் குறையான வளங்களை (Limited resources) மிகச் சிறந்த முறையில் பயன்படுத்துவதற்குத் திட்டமிட வேண்டும்."[1]

### வேளாண்மைக் கல்வி
(Agricultural Education)

வேளாண்மை வளர்ச்சிக்கும், விவசாயியின் வாழ்க்கை மேம்படுவதற்கும் வேளாண்மைக் கல்வி அவசியமாகும். இங்கிலாந்தில் விவசாயிகள் பயிர்கள், கால்நடை, ஆகியவைகள் பற்றிய முழு அறிவு, வேளாண்மையைச் சீர்படுத்தும் ஆவல் இவைகளைப் பெற்றுச் சீர்திருத்தங்களை மேற்கொள்கின்றனர். "சீரமைப்புகள் அவர்களை நோக்கிச் செல்வதில்லை. ஆனால், அவர்கள் சீரமைப்புகளை அறிந்ததும் அதை மேற்கொள்கின்றனர்." பரிசோதனை நிலையங்களில் இருக்கும் பணியாளர்கள் இங்கிலாந்தில் அவ்வப்போது விவசாயிகளுடன் தொடர்பு கொள்கின்றனர். இந்திய விவசாயிகள் ஏழைகளாய் இருப்பதால் அவர்கள் ஏழ்மையின் மனோதத்துவ விளைவில் மிகவும் சோர்ந்து போய் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவதில்லை. எனவே, அறியாமை, உடல் சுகமின்மை, ஏழ்மை, ஆகிய காரணங்களால் முன்னேற்றத்தில் ஆர்வமின்றி இருப்பதால், அது வேளாண்மைச் சீரமைப்புக்குத் தடையாக உள்ளது. கல்வியறிவின்மையால் விவசாயிகள் அறியாமையில் மூழ்கி நவீன உற்பத்தி முறை இயந்திரமயம், ஆகியவைகள் மூலம் வேளாண்மை மேம்படச் செய்ய முடியும் என்பதை அவர்கள் உணருவதில்லை. குறுகிய மனப்பான்மையில் விவசாயி தன் தொழிலில் முன்னேற்றமடைய விரும்புவதில்லை. அவன் பழமை நோக்குடையவனாயிருப்பதால், இருந்து வரும் அமைப்பிலிருந்து எந்தவித மாற்றத்தையும் ஏற்றுக் கொள்ள விரும்புவதில்லை.

### வேளாண்மைக் கல்வி நிலையங்கள்

மேற்குறிப்பிட்ட வேளாண்மைச் சீர்கேடுகளைப் போக்குவதற்குச் சிறந்த கருவியாக அமைவது வேளாண்மைக் கல்வியாகும். கிராம ஆரம்பப்பள்ளிக் கூடங்களில்வேளாண்மைக் கல்வி கட்டாயப் பாடமாக இருந்தாலும் அது செயல் முறையாகப் போதிக்கப்படவில்லை. உள்ளூர் நிலைமைகளுக்கு ஏற்ப வேளாண்மைக் கல்வி போதிக்கப்படவேண்டும். ஆராய்ச்சிகளை நாடு முழுவதும் பிரபல்ய

[1] W. A., லீவிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு', ப. 364.

மாக ஆதரிக்கப்பட்டால்தான் அவ்வாறு செய்யமுடியும். இதற்காகத்தான் மாநில அரசுகள் தங்கள் வேளாண்மைக் கல்வி முறையை மாற்றியமைக்க வேண்டுமென்று திட்டக்குழு பரிந்துரைத்தது. உத்திரப்பிரதேச அரசாங்கம் வேளாண்மைக் கல்வி மறுசீரமைப்புத் (Re-orientation) திட்டம் ஒன்றை மாநிலத்தில் பின்பற்றியது. இத் திட்டம் கீழ்நிலை உயர் பள்ளிக்கட்டத்தில் வேளாண்மை, தொழில் இவைகளில் பயிற்சி அளிக்கத் திட்டம் வகை செய்தது. இத் திட்டம் ஆசிரியர்களுக்கு வேலை கிடைப்பதின் மூலம் வேலையின்மைப் பிரச்சினையை உடனடியாகத் தீர்க்கவும் துணைபுரிந்தது. இதனடிப்படையில் வேளாண்மைப் போதனை கட்டாயப் பாடமாக்கப்பட்டு நாள்தோறும் இரண்டுமணி நேரம் மாணவர்கள் பள்ளிப் பண்ணையில் செய்முறை வேலையிலும் பயிற்சி அளிக்கப்பட்டனர். இத் திட்டத்தின் வெற்றி கிராமப் பகுதிகளில் வியக்கத்தக்க மாற்றங்களை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கீழ்நிலை உயர்பள்ளிகளுடன் மாவட்டத்தில் உள்ள திட்ட அமைப்புகளும் ஒருங்கிணைக்கப்பட்டு, மாவட்டத் திட்ட அதிகாரிகள் இப் பள்ளிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்து, அவர்களுக்கு வழி காட்டவும் வகைசெய்யப்பட்டது. இவ்விதமாக மாநிலத்தின் கிராமப் பகுதிகளில் உள்ள பள்ளிகளில் பயிலும் ஒரு லட்சம் மாணவர்களுக்கு மேல் கட்டாய வேளாண்மைக் கல்வி போதிக்கப் பட்டனர்.

மாநில ஜனதாக் கல்லூரி

மத்திய அரசால் ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒரு 'ஜனதாக் கல்லூரி' (Janata College) ஆரம்பிக்கப்பட அனுமதி வழங்கப் பட்டது. இக் கல்லூரிகள்நாட்டின் கல்வி முறையில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தும். இவைகள் வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு மையமாக விளங்கும். கிராமப் பணியாள்களைப் பயிற்சி அளிக்க வகை செய்யும் ஒரு ஜனதாக் கல்லூரியில் ஐந்து பிரிவுகள் இருக்கும்—விரிவாக்கம், வேளாண்மை, கைத்தொழில், சுய சீரமைப்பு, கலாச்சார நடவடிக்கைகள். கிராமமட்டப் பணியாள்களுக்கு விரிவாக்க ஆசிரியர் பயிற்சி அளிக்கிறார். கிராமங்களுக்குத் தகுந்த சிற்றளவு, குடிசைத் தொழில்களில் பயிற்சியளிக்கப்படுகிறது. ஐந்து கீழ்நிலை உயர் பள்ளிகள் ஒரு ஜனதாக் கல்லூரியில் இணைக்கப்பட்டு ஒவ்வொரு கல்லூரியும் கல்வி விரிவாக்க நிலையமாகச் செயல்புரிகின்றது.

கீழ்நிலை உயர்பள்ளிகள் பதினைந்து ஆரம்பப் பள்ளிகளைக் கண்காணிக்கின்றன. கிராமங்களில் வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு மையக் கருவியாகக் கிராம மக்களைப் பயிற்றுவிக்க ஜனதாக் கல்லூரி பெரும்பணி புரிகிறது. தற்போது பல்வேறு மாநிலங்களில் வளோண்மைப் பல்கலைக்கழகங்களும் உருவாகி வருகின்றன.

## வேளாண்மை ஆராய்ச்சி
## (Agricultural Research)

இந்திய வேளாண்மையில் அறிவியல் முறையை உட்புகுத்த முதன்முதலாக 1889-ல் தீவிரமாக முயற்சி எடுக்கப்பட்டது. இந்திய வேளாண்மையில் இரசாயனத்தைப் பயன்படுத்திப்பொதுச் சீரமைப்பைப் பெற மத்திய அரசு, டாக்டர் வோயல்கர் (Voyelker) என்பவரை அழைத்து ஆலோசனை கூறச் செய்தது. இரண்டாவது முயற்சி 1905-ல் கர்ஸன் பிரபுவின் தூண்டுதலால் ஏற்பட்டது. அப்போதுதான் பூஸா (Pusa) என்னுமிடத்தில் அரசு வேளாண்மை ஆராய்ச்சி நிலையமும்(Imperial Agricultural Research Institute), அகில இந்திய வேளாண்மைக் கழகமும் நிறுவப்பட்டன. "ஆராய்ச்சி அடிப்படையில்லாத வேளாண்மையை மேம்படுத்தும் நிறுவனம் மணலின் மேல் கட்டிய ஒரு வீட்டிற்குச் சமமாகும்" என்று அரசு ஆணைக் குழு (Royal Commission) குறிப்பிட்டது. எனவேதான் தற்போதுள்ள இந்திய வேளாண்மை ஆராய்ச்சி சபை (Indian Council of Agricultural Research) மாநிலப் பல்கலைக் கழகங்கள், மற்ற அறிவியல் அமைப்புகள் ஆகியவைகளின் நிபுணர்கள் அடங்கிய ஸ்தாபனமாக 1929-ல் நிறுவப்பட்டது.

### வேளாண்மை ஆராய்ச்சி சபையின் பணிகள்

நாட்டின் பல்வேறு ஆராய்ச்சி நிலையங்களில் நடைபெறும் ஆராய்ச்சியை இச் சபை ஒருங்கிணைத்து ஆய்வு செய்கிறது. இச் சபை தகுந்த வகையில் பணிகளை மேற்கொள்ளச் சுயமாகவே ஆலோசனை கூறுகின்றது. அது தன் சொந்தத் திட்டங்களை மேற்கொண்டு ஆராய்ச்சியை நடத்துகின்றது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள அநேக பயிர் ஆராய்ச்சி நிலையங்கள் (Crop—Research Institutes) இதன் கட்டுப்பாட்டின் கீழ் பணி புரிகின்றன. அனுமதிக்கப்பட்ட வழிகளில் சில குறித்த காரியங்களுக்காகப் பல்கலைக் கழகங்களுக்கும் மாநில வேளாண்மைத் துறைகளுக்கும் ஆராய்ச்சி நடத்த இச் சபை மானியங்களைக் கொடுக்கின்றது. ஆராய்ச்சியின் முடிவுகளை நாடு முழுவதும் பரப்ப இச் சபை ஒரு மாதாந்திரப் பத்திரிகையும் வெளியிடுகிறது. இச் சபை கால்நடைப் பெருக்கக் கல்வி ஆராய்ச்சி ஆகியவைகளிலும் ஈடுபட்டுள்ளது.

### மாநிலங்களில் வேளாண்மை யாராய்ச்சி

மாநிலங்களில் உள்ள கல்லூரிகளின் மூலமாக ஆராய்ச்சிப் பணி தொடர்ந்து நடைபெறுகிறது. உள்ளூர் வேளாண்மைப் பிரச்சினைகள், மாநிலங்களைப் பாதிக்கும் சிக்கல்கள் இவைகளைக் கல்லூரிகள் ஆராய்கின்றன. மாநிலமட்டத்தில் நடத்தப்பட்ட

முக்கியமான ஆராய்ச்சி முடிவுகள் நாடு முழுவதற்கும் சம்பந்தப் பட்டதாய் இருந்தால் அதை மத்திய ஆய்வுக் கழகங்கள் பயன் படுத்திக் கொள்கின்றன.

ஆராய்ச்சியின் விளைவுகள்

இந்தியாவில் பண்ணை வளர்ச்சிக்கு வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் வினை ஊக்கியாகச் (Catalyst) செயல்புரிகிறது. தற்போது நாட்டின் பதினொரு மாநிலங்களில் பன்னிரண்டு வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் உள்ளன. மகாராஷ்டிராவில் மட்டும் இரு வேளாண்மைப் பல்கலைகழகங்கள் உள்ளன. இந்தியாவில் உள்ள ஆராய்ச்சி நிலையங்களில் நடைபெறும் பணியினால் புதிய சீரான விதை வகைகள், கிருமி நாசினிகள், ஆகியவைகள் உருவாகின்றன. சில பயிர்களின் நோய்களுக்குச் சிகிச்சைகளும் உரப்பிரச்சினைகளுக்குத் தக்க தீர்வு களும் ஆராய்ச்சியால் கிடைக்கின்றன. இவ்வாராய்ச்சிக்குத் தற்போது புதிய ஊட்டமளிக்கப்பட்டுள்ளது. வேளாண்மை, கால்நடைப் பெருக்கம் (animal husbandry) இவைகளில் ஒரு நூறு ஆராய்ச்சித் திட்டங்களை ஆராய்ச்சி சபையின் ஆலோசனைக் கழகம் (Advisory Board) மேற்கொள்ள அனுமதியளித்தது.

## முடிவுரை

இந்தியாவில் ஆராய்ச்சி நிறுவனங்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக உள்ளது. வேளாண்மைப் பெருக்கத்திற்கு ஏற்றபடி வேளாண்மைப் பயிற்சி நிலையங்கள் அதிக அளவில் தோன்றவில்லை. ஆராய்ச்சியின் முடிவுகள் ஆராய்ச்சிக் கூடத்திலேயே இருந்து விடுகின்றன. ஆராய்ச்சி வசதிகள் ஒவ்வொரு பிராந்தியத்திலும் வளர்ச்சியடையச் செய்து ஒவ்வொரு வேளாண்மை மண்டலத் திற்கும் நன்மை கிடைக்கும்படி வகை செய்ய வேண்டும். ஆராய்ச்சியின் முடிவுகள் உண்மை விவசாயியிடம் விரைவாகச் சென்றடைய வழிவகைகளை மேற்கொள்ள வேண்டும். வேளாண்மைக் கல்வி, பயிற்சி, ஆராய்ச்சி ஆகியவைகளை விரிவாக்கி வேளாண்மை வளர்ச்சியைத் தொழில் வளர்ச்சிக்குச் சரிசமமான நிலையில் இருக்கச் செய்ய வேண்டியது அவசியமாகும். வேளாண்மை சீராக வளர்ச்சியடைந்தால்தான் தொழில் வளர்ச்சியைப் பேணிக்காக்க முடியும். எனவே, எதிர்காலப் பிராந்தியத் திட்டங்களில் தொழிலும், வேளாண்மையும் ஒன்றை யொன்று சார்ந்து சீரான வளர்ச்சி பெற வகை செய்தால்தான் பிராந்தியங்களில் வருமான ஏற்றத்தாழ்வுகளை அகற்றிச் சமதர்ம சமுதாயத்தை அமைக்க முடியும்.

# 38. வளர்ச்சித் திட்டம்
## (Development Planning)

### வளர்ச்சித் திட்டத்தின் நன்மைகள்

பொருளாதாரத் திட்டம் நவீன காலப் பொருளாதாரப் பிரச்சினைகளுக்கெல்லாம் எல்லாக் காலத்திற்கும் ஒரு மகத்தான தீர்வாக எல்லா நாடுகளிலும் பிரபலியமடைந்துள்ளது. திட்டமிடப்படாத பொருளாதாரங்களில் முதலாளித்துவ, சுதந்திர தனியார் துறையின் பல்வேறு குறைபாடுகளால், நாட்டில் நிலையான பொருளாதார வளர்ச்சியைக் கடுமையான மாற்றங்களின்றிச் சமச்சீரான முறையில் முறையாகப் பெறமுடியவில்லை. பேராசிரியர் மௌரிஸ் டாப் (Maurice Dobb) அவர்களும் A. P. லர்னர் (Lerner) அவர்களும் குறிப்பிடுவதுபோல் திட்டமிடாத பொருளாதாரம் விழிப்புணர்ச்சியின்றிக் குறுகிய கண்ணோட்டம், பகுத்தறிவின்மை, சுயதயக்கம், சமூகத்தீங்கு போன்ற பல்வேறு சீர்கேடுகளைப் பெற்று, "நடத்துநர் இல்லாத ஒரு மோட்டார் வாகனத்தைப் போல்" நிலைதடுமாறி அழிந்து போகும் நிலையேற்படும். திட்டமிட்ட பொருளாதாரம், இயற்கையாகவே சிறப்பான நெடுங் கண்ணோட்டத்தைப் பெற்று, தனியார் போட்டி முறையினால் தோன்றும் வாணிகச் சுழல்களை (Business Cycles) தோன்றாவண்ணம் பாதுகாக்கும் ஒரு சிறந்த அமைப்பாக இருக்குமென்று பேராசிரியர் டர்பின் (Durbin) குறிப்பிடுகின்றார். திட்டமிடாத பொருளாதாரங்களில் வருமானம், செல்வம், பொருளாதாரச் சக்திக் குவிப்பு, வாய்ப்புகள் ஆகியவைகளில் மிகத் தீவிரமான, அதிர்ச்சியடையத்தக்க ஏற்றத் தாழ்வுகள் காணப்படுகின்றன. மேலும் திட்டமிடாத முதலாளித்துவப் பொருளாதாரங்களில் சமூகச் சுரண்டல் ('Social Parasitism') கேடுகள் பெருமளவில் தோன்றி எல்லோருக்கும் சமவாய்ப்புகளும் வசதிகளும் கிடைப்பதில்லை.

### திட்டமுறையின் முக்கிய நன்மைகள்

இப் பொருளாதாரங்களில் ஏராளமான தொழிலாளர்களுக்கு வருமானம், குத்தகை, வேலை வாய்ப்பு, போன்றவைகளில் நிரந்தர

மான பாதுகாப்பு அளிப்பதற்கு வசதிகளும் வாய்ப்புகளும் கிடைப்பதில்லை. சான்றாக அமெரிக்காவில் தொழில்கள் அனைத்துமே தனியார் தொழில் நிறுவனங்களால் நிர்வகிக்கப்படுவதால், வருமான, வேலை வாய்ப்பு ஆகியவைகளில் நிரந்தரப் பாதுகாப்பு தொழிலாளர்களுக்குக் கிடைப்பதில்லை. திட்டமிடாத பொருளாதாரங்களில் போட்டியின் விளைவாக எல்லாவகை வளங்களும் வீணாக்கப்படுகின்றன. கொள்ளை இலாபம் கிடைக்கும் ஆடம்பரப் பொருள்களின் உற்பத்திக்காகவே வளங்கள் பயன்படுத்தப்படுவதால் இன்றியமையாத பொருள்களின் உற்பத்திக்குப் போதிய வளங்கள் கிடைக்காததால் சாதாரண மக்களுக்குத் தேவையான பொருள்களின் விலைகள் அதிகரிக்கின்றன. சில சமயங்களில் சில பொருள்களின் பற்றுக் குறையும், மற்றக் காலங்களில் மித மிஞ்சிய உற்பத்தியும் ஏற்படுகிறது. சில மிகப்பெரிய செல்வந்தர்களும், கொடிய வறுமையால் வாடும் ஏழைகளும் இருப்பதால் நாட்டில் இருக்கும் வளங்களுக்கேற்ற முறையில் சமூகநலனின் (Social Welfare) அளவு அதிகமான அளவில் பரவலாக இருப்பதில்லை. இதற்கு மாறாக, 'பொருளாதாரத் திட்டம்' எல்லோருக்கும் ஏராளமான வற்றை அளிக்க உறுதியளிக்கிறது. தனியார் தொழிலதிபர்கள் கல்வி, சுகாதாரம் போன்ற சமூகச் செலவுகளை (Social Costs) மேற்கொள்ளாமல் தங்கள் தொழில் முன்னேற்றத்திலேயே அக்கறை கொள்கின்றனர். சமூக நலனை கருத்தில் கொள்ளாமல் கொள்ளை இலாபத்தைப் பெறுவதிலேயே கண்ணுங்கருத்துமாயுள்ளனர். திட்டமிட்ட பொருளாதாரத்தில் முதலாக்க வீதத்தைப் பல்வேறு வழிகளில் அதிகரிக்க வாய்ப்புக் கிடைக்கிறது.

வளங்களைத் தகுந்த முறையில் சிக்கனத்துடன் பயன்படுத்தி, மக்களுக்குப் பெருமளவு பொருள்சார் வசதிகளையளித்து, அதன் மூலம் திறமையை உயர்த்தி, நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் பொருளாதார நலனையும், மகிழ்ச்சியையும் பொருளாதாரத் திட்டங்கள் உறுதியளிக்கின்றன. எனவேதான் நவீன காலத்தில் திட்டமிட்ட பொருளாதார முறை போற்றப்பட்டுச் சமதர்ம சமுதாயத்தை அமைக்க எல்லா நாடுகளிலும் பின்பற்றப்பட்டு வருகிறது.

### பொருளாதாரத் திட்டத்தின் விளக்கம்
### (Meaning of Economic Planning)

பொருளாதாரத் திட்டமென்பது, "குறிப்பிட்ட சில தெளிவான சமூக முடிவுகளைக் கருத்தில் கொண்டு, வளங்களை ஒருங்கமைத்து, திறம்படப் பயன்படுத்தி, அதன் விளைவாக நன்மைகளைப் பெருமளவில் பெறுவதைக் குறிப்பிடுகிறது. திட்டத்தின் இரு முக்கிய அம்சங்களாவன : (1) அடைய வேண்டிய முடிவுகளைப்

பற்றிய ஆய்வுமுறை, (2) கிடைக்கும் வளங்களைப் பற்றி அறிந்து தெரிந்து, அவைகளை உத்தம அளவில் ஒதுக்கீடு செய்தல் (Optimum allocation) ஆகியவைகளாகும். "[1] H. D. டிக்கின்ஸன் குறிப்பிடுவதுபோல், "பொருளாதார அமைப்பு முறை முழுவதைப் பற்றிய ஒரு முழுக் கணக்கீட்டின் அடிப்படையில் ஒரு தீர்மானிக்கும் ஆற்றல் மிக்க அமைப்பின் அறிவார்ந்த முடிவில் என்னென்ன பொருள்கள் எவ்வளவு உற்பத்தி செய்யப்பட வேண்டும், அது யாருக்காக ஒதுக்கப்பட வேண்டும், என்ற பிரதான பொருளாதாரத் தீர்மானங்களை ஆக்குதலே பொருளாதாரத் திட்டமாகும். "[2]

நாட்டில் பொருளாதாரத் திட்டத்தில் கிடைக்கும் வளங்களைப் பற்றிய ஒரு துல்லியமான மதிப்பீடு மேற்கொள்ளப்பட வேண்டும். வளங்களைப் பொருளாதார ரீதியில் பயன்படுத்துவதற்குச் செயல் திட்டங்கள் தீட்டப்பட வேண்டும். இதனால் வளங்களின் ஒவ்வொரு பகுதியும், மிகத் திறமையான முறையில் பயன்படுத்தப்பட்டு வளங்கள் பல்வேறு துறைகளின் முதலீடுகளுக்கு ஒதுக்கீடு செய்யப் படுகிறது. இதன் விளைவாக எல்லாத் துறைகளிலும் சீரான உத்தம அளவு முடிவுகள் கிடைக்கப் பெறுகின்றன. மேலும், அதிகரித்த உற்பத்தி, சமுதாயத்தில் உள்ள பல்வேறு வகையான மக்களுக்குச் சம அளவில் பங்கீடுசெய்ய வழிமுறைகளையும் பின்பற்ற முடிகிறது. இத்தகைய செயல் திட்டங்களைத் தயாரித்து, அவைகளை நடைமுறைப்படுத்த ஒரு மத்திய அமைப்பு இன்றியமையாததாக விளங்குகிறது. இவ்வமைப்பு, உற்பத்தியின் பல்வேறு ஆக்கப் பகுதிகளை ஒருங்கிணைத்து வளங்களின் திறமையான ஒதுக்கீட்டையும், வேலை வாய்ப்பையும், சீராக்கும் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறது. எனவே, திட்ட நடவடிக்கைகளில் அரசின் தலையீடு நேரடியாக ஏற்பட்டு அதன் நடவடிக்கைகளின் வாய்ப்பு நாட்டுத் திட்டத்தின் அளவு, தன்மை, தேவை தீவிரம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. இதன் அடிப்படையில், "அங்காடிச் சக்திகளின் நடவடிக்கைகளிடையே, அரசாங்கத் தலையீட்டால், ஒரு தேசிய அரசு தன் சிறப்புக் கொள்கைகளைச் (Strategy) சாதித்து, அதனால் சமூக நடவடிக்கை முறைகளில் (Social Process) பெரும், எழுச்சியை உருவாக்கும் செயல் திட்டத்தை" ஒரு பொருளாதாரத் திட்டமென்று கூறலாம்.[3]

1 'முதல் ஐந்தாண்டுத் திட்டம்,' 'இந்திய அரசு' 1951, ப. 7.

2 H. D. டிக்கின்சன் (Dickinson), 'சமதர்ம சமுதாயத்தின் பொருளாதாரம்,' லண்டன். ப. 41.

3 G. மிர்தல் (Myrdal) 'பொருளாதாரக் கோட்பாடும், வளர்ச்சி குறைந்த பகுதிகளும்,' 1958. ப. 91.

மேற்குறிப்பிட்டுள்ள விளக்கங்கள் பொருளாதாரத் திட்டத்தின் இலக்கணத்தை விளக்கிய போதிலும் அதைப் பற்றிய கருத்து வேற்றுமை பல்வேறு வளர்ச்சிப் பொருளாதார அறிஞர்களிடையே காணப்படுகிறது. பேராசிரியர் L. ராபின்ஸ் அவர்களின் கருத்துப்படி திட்டமென்பது ஒரு நுட்பமுறை (Technique)யாகும். அது ஒரு முடிவைப் பெறுவதற்கான சாதனமாகும். முடிவு என்பது ஒரு மத்தியத் திட்ட அதிகார அமைப்பால் முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்டுச் சீராய் விளக்கப்பட்ட தெளிவான குறிப்பிட்ட சில நோக்கங்களையும் (aims), குறிக்கோள்களையும் (objectives) அடைவதாகும். எனவே, தற்போதைய பிரச்சினை, "திட்டம் தேவையா அல்லது தேவையில்லையா என்பதல்ல; பல்வேறு வகைத் திட்டங்களில் எந்தெந்த அம்சங்களைத் தேர்ந்தெடுப்பது என்பது தான்."[1] பேராசிரியர் W. A, லூவிஸ், திட்டம் என்னும் கருத்தை ஆறு மாறுபட்ட வகைகளில் விளக்குகிறார். (1) "முதலாவதாக, திட்டமென்பது பூகோள ரீதியில் காரணிகள், வசிக்கப் பயன் படுத்தப்படும் கட்டடங்கள், காட்சிக் கூடங்கள் போன்றவைகளை மண்டலவாரியாகப் பிரித்தல் என்ற பொருளிலேயே பொருளாதார நூல்களில் பயன்படுத்தப்படுகிறது. சில சமயங்களில் அது நகர, கிராமத் திட்டமென்றும், மற்றச் சில சமயங்களில் திட்டமென்று மட்டும் அழைக்கப்படுகிறது." (2) "திட்டமென்பது, அரசாங்கத்தினிடம் பணம் இருந்தால், அது எவ்வளவு பணம் எதிர்காலத்தில் செலவிட வேண்டுமென்பதைத் தீர்மானிப்பதையே குறிக்கிறது." (3) "திட்டமிட்ட பொருளாதார மென்பது, ஒவ்வோர் உற்பத்திப் பகுதியிலும் உற்பத்திப் பங்கின் (Quota) ஒதுக்கிடப்பட்ட தொழிலாளர்கள், மூலப் பொருள்கள், சாதனங்கள் (equipment) ஆகியவைகளைப் பயன் படுத்தி, உற்பத்தி செய்த பொருள்களை மத்திய அதிகார அமைப்பால் குறிப்பிடப்பட்ட நபர்களுக்கோ அல்லது நிறுவனங் களுக்கோ கொடுப்பதையே தன் நடவடிக்கையாகக் கொண்டுள்ள நாடாகும்." (4) "சில சமயங்களில் திட்டமென்பது அரசு தனியார் அல்லது பொது நிறுவனங்களுக்கு உற்பத்தி இலக்குகளைத் (Production Targets) தீர்மானிக்கும் நடவடிக்கையையும் குறிக்கும்." (5) "பொருளா தாரத்தின் பல்வேறு துறைகளில் நாட்டின் தொழிலாளர், வெளி நாட்டுச் செலாவணி, மூலப் பொருள்கள், போன்ற மற்ற எல்லா வளங்களும் ஒதுக்கீடு, செய்யப் படுவதற்காகப் பொருளாதாரம் முழுவதற்குமாக இலக்குகளை அமைத்தலே திட்டமாகும்." (6) "ஏறகெனவே தீர்மானிக்கப்பட்ட

[1] L. ராபின்ஸ் (Lionel Robbins) 'பொருளாதாரக் கொள்கையும், பன்னாட்டு ஒழுங்கு முறையும்' ப. 6.

இலக்குகளைத் தனியார்துறை மேற்கொள்ளச் செய்யத் தகுந்த சாதனங்களை ஏற்படுத்துவதே திட்டமாகும்.[1]"

பேராசிரியர் W. A. லூவிஸ் அவர்களின் விளக்கத்தை மறுத்து பெர்டினண்டு ஜ்வீக் (Ferdynand Zweig) என்பவர் திட்டமென்பது, "தேசிய பொருளாதாரத்தின் ஒரு சில அம்சங்களில் மட்டும் திட்டமிடுவதல்ல; பொருளாதாரம் முழுவதற்குமாகச் சேர்த்துத் திட்டமிடுவதுதான் திட்டத்தின் முக்கிய அம்சமாகும்" என்று குறிப்பிடுகிறார்.[2] பேராசிரியர் ராபின்ஸ், "கூட்டுக் கட்டுப்பாடு அல்லது தனியார் உற்பத்தி, பொருள்மாற்ற நடவடிக்கைகளைக் குறைப்பதே" பொருளாதாரத் திட்டமென்று விளக்குகிறார். திரு. ஹேயக் (Hayek) என்பவர், "மத்திய நிர்வாக அமைப்பு (Central authority) உற்பத்தி நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்துவதே" திட்டமென்று குறிப்பிடுகிறார். டாக்டர் டால்டன், "பொருளாதாரத் திட்டமென்பது உற்பத்தி நடவடிக்கைகளுக்குத் தேவையான வளங்களைப் பெற்றிருப்பவர்கள் தேர்ந்தெடுத்த முடிவுகளைச் சாதிக்க அவ் வளங்களைச் சிந்தனை ஆற்றலுடன் பயன்படுத்துவதுதான்" என்று விளக்குகிறார். எனவே, திட்டமென்பது தேசியப் பொருளாதாரத்தை மத்தியக் கட்டுப் பாட்டுக்குள் கொண்டுவருவதைத்தான் குறிக்கிறது. இம் முறையில் முன்பு குறிப்பிட்டுள்ள H. D. டிக்கின்ஸன் அவர்களின் விளக்கமே சிறந்ததாக உள்ளது.

இவ் விளக்கத்திற்கு நிபுணர்களிடையே ஒருமித்த கருத்து இல்லையெனினும் அவர்களுள் பெரும்பாலானவர்களின் எண்ணங் களின் அடிப்படையில் பொருளாதாரத்திட்டமென்பது உறுதியான குறிப்பிட்ட சில இலக்குகளையும், குறிக்கோள்களையும் ஒரு குறித்த காலத்திற்குள் சாதிக்க, ஒரு மத்திய அதிகார அமைப்பால் பொருளாதாரம் தகுந்த முறையில் உணர்வாற்றலுடன் கட்டுப் படுத்தப் படுவதைத்தான் குறிக்கிறது.

### வளர்ச்சியுறு நாடுகளில் திட்டத்தின் அவசியம்

வளர்ச்சியுறு நாடுகளில் திட்டங்களை அமுலாக்குவதன் அடிப்படை நோக்கம் விரைவான பொருளாதார வளர்ச்சி வீதத்தை அதிகரிப்பதற்காகவே ஆகும். பொருளாதார வளர்ச்சிக்காகத் திட்டமிடுதலென்பது, திட்ட நிர்வாக அமைப்பு (Planning Authority) பொருளாதார நடவடிக்கைகளை மேலாகத் தூண்டுவதையோ அல்லது கட்டுப்படுத்துவதையோ குறிக்கிறது

1 W. A. லூவிஸ், வளர்ச்சித் திட்டம், (Development Planning)ப. 20.

2 பெர்டினண்டு. ஜ்வீக், சுதந்திர சமூகங்களின் திட்டம் ப. 14.

என்று பேராசிரியர் D. R. கட்கில் குறிப்பிடுகிறார். எனவே, திட்டத்தின் மூலம் வருவாய், சேமிப்பு, மூதலீடு ஆகியவைகளின் அளவை அதிகரித்து, மூதலாக்க வீதத்தின் வேகத்தை உயர்த்துவதும் எளிதாகும். துரதிர்ஷ்டவசமாக இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் முதலாக்க வீதம் மிகவும் குறைவாக இருக்கிறது. இதனால் பல்வேறு தொல்லைகள் ஏற்படுகின்றன. இந் நாடுகளில் பெரும்பாலான மக்கள் ஏழைகளாகவே இருக்கின்றனர். இவர்களின் தலாவருவாய் மிகக் குறைவாகவும் நுகர்வு நாட்டம் (Propensity to Consume) மிக அதிகமாகவும் இருப்பதால் சேமிப்பு தோன்ற வாய்ப்பே ஏற்படுவதில்லை. எனவே குறைந்த முதலாக்கத்தினால் முதலீட்டு வீதம் குறைவதால் முதல் பற்றுக் குறையும் குறைந்த உற்பத்தித்திறனும் ஏற்படுகிறது. குறைந்த உற்பத்தித் திறனல் குறைந்த வருவாய் ஏற்படுவதால் வறுமை என்னும் நச்சு வட்டம் (Vicious circle of poverty) முழு நிலையை எய்துகிறது. இப் பொருளாதார நச்சுவளையத்தை உடைத்துப் பொருளாதாரச் சமநிலையை ஏற்படுத்தத் திட்டமிட்ட வளர்ச்சியால்தான் முடியும் எனவே, திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி, ஏழ்மை நாடுகளுக்கு இன்றியமையாததாக விளங்குகிறது. இந் நிலையை மாற்ற வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு இரு பாதைகள் உள்ளன:

(1) திட்டமிட்ட வளர்ச்சியை வெளிநாட்டு மூலதனத்தைப் பெறுவதின் மூலம் மேற் கொள்ளுதல். அதை ஜ்வீக் (Zweig) 'ஆதரிக்கப்பட்ட தொழில் மயம்' ('Supported Industrialisation') என்கிறார்.

(2) மற்றொரு முறை கட்டாயச் சேமிப்பு (Forced Saving) மூலம் வளர்ச்சியைப் பேணுதல். அதை அவர் 'தன்னிறைவுத் தொழில் மயம்' ('Self-sufficient iudustrialisation') என்கிறார்.

வளர்ச்சி குறைந்த நாடுகளில் வேலையின்மையும், புலனாகா வேலையின்மையும் (Disguised unemployment) மக்கட் தொகை அதிகரிப்பினல் பெருமளவில் உயர்ந்துவருகிறது. மூலதனப் பற்றுக் குறையும், மிதமிஞ்சிய தொழிலாளர்களையும் கொண்ட இந் நாடுகளில் மத்திய திட்ட அமைப்பு ஒன்றே வேலைவாய்ப்புக் களை நாட்டில் அதிகரிக்கச் செய்ய வழி முறைகளைக் கண்டறிய முடியும். நாட்டில் போதிய தொழில் துணிவும், சுய ஆற்றலும், சுய உறுதியும் இல்லாததால் மத்திய அமைப்பொன்றே நாட்டின் சமச்சீரான வளர்ச்சித் திட்டத்தை நடைமுறைப் படுத்தமுடியும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க வேளாண்மை, தொழில் துறைகளின் வளர்ச்சி

சமூக, பொருளாதார நலனை மேம்படுத்தும் அமைப்புகளின் தோற்றம், உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத் துறைகளின் பெருக்கம் ஆகிய அம்சங்கள் பொருத்தமான முறையில் சமச்சீராக மேம்பட வேண்டியது அவசியமாகும். இதற்கு எல்லாத் துறைகளிலும் ஒரே சமய முதலீட்டை (Simultaneous investment) மேற்கொள்ள வகை செய்யும் வளர்ச்சித் திட்டங்கள் இன்றியமையாதவைகளாய் உள்ளன.

வேளாண்மையும் தொழில்துறையும் ஒன்றையொன்று சார்ந்திருப்பதால் (interdependent) இவ்விரு துறைகளையும் ஒரே சமயத்தில் சரிசமமாக வளர்ச்சியடையச் செய்ய வேண்டும். வேளாண்மையைச் சீரமைத்தால் மித மிஞ்சிய தொழிலாளர்கள் அத்துறையிலிருந்து வெளியேறித் தொழில் துறைகளில் பணிகளை மேற்கொள்ள முடியும். தொழில் துறைக்கு வேண்டிய கச்சாப் பொருள்கள் போன்றவைகளை ஏராளமான அளவில் வேளாண்மைத்துறை வழங்குவதற்கு வகை செய்ய வேண்டும். இவ்விரு துறைகளும் சீராக வளர்ச்சியடையச் சமூக, பொருளாதார நலனை மேம்படுத்தும் சுகாதாரம், கல்வி, கால்வாய்கள், சாலைகள், இருப்புப் பாதைகள், ஆக்கச் சக்திநிலையங்கள், வீட்டு வசதிகள் போன்ற அமைப்புகளை ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியமாகும். பயிற்சி பெற்ற, திறமையுடைய பணியாள்களை (Personnel) பெருமளவில் பெறுவதற்கு பயிற்சி நிலையங்களை ஏற்படுத்த வேண்டும். இத் துறைகளில் இலாபமின்மை காரணமாகத் தனியார் தொழில்கள் ஈடுபடுவதில்லை. எனவே, வளர்ச்சி குறைந்த நாடுகளில் சமூக, பொருளாதார நலனை மேம்படுத்தும் மூலதனத்தை (Socio-economic overhead captial) திட்டமிட்ட முறையில் ஏற்படுத்த வல்லது அரசாங்கமே யாகும்.

சமூக, பொருளாதாா நலனை மேம்படுத்தும் மூலதனத்துடன் வேளாண்மை, தொழில் துறைகள் சீராக வளர்ச்சியடைந்தால் தான் உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகம் விரைவாகப் பெருக்கமடைய முடியும். இதற்கு நிதிமுறை நிறுவனங்கள் (Financial institutions) வளர்ச்சி தேவை. வளர்ச்சி குறைந்த நாடுகளில் பண அங்காடியும் (Money Market), முதலங்காடியும் (Capital Market) வளர்ச்சியில்லாமலேயே உள்ளன. இது தொழில், வர்த்தகம் ஆகியவைகளின் வளர்ச்சிக்குப் பெருந்தடையாய் உள்ளது. பன்னாட்டுத் தொழில் சுழற்சியின் மாற்றங்களால் உள்நாட்டில் பொருளாதார நிலையின்மை (economic instability) ஏற்படுகிறது. இத்தகைய பாதக விளைவுகளை அரசாங்கத்தால் தான் சரிசெய்ய முடியும். மத்திய வங்கியின் மூலம், உண்டியல் அங்காடி, வணிக வங்கிகள், மற்ற நிதி நிறுவனங்கள் ஆகியவை

களைச் சீராக வளர்ச்சியடையச் செய்ய அரசால்தான் முடியும். நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டு உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகத்தைக் கட்டுப்படுத்திச் சீர்படுத்தத் திட்ட நிர்வாக அமைப்பால்தான் முடியும் என்பது வெளிப்படையாகும். தேவை, அளிப்பு இவைகளுக்கிடையே சமநிலையை ஏற்படுத்தி நாட்டில் பொருளாதாரச் சமநிலையை நிலைநாட்டவும் திட்ட அமைப்பு இன்றியமையாததாக விளங்குகிறது.

நாடுகளின் ஏழ்மையை அகற்ற இன்றியமையாத கருவியாகப் பயன்படுவது வளர்ச்சிக்கான திட்டமாகும். "தேசிய வருவாயையும், தலாவருவாயையும், அதிகரிக்க, வருமான, செல்வ ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க, வேலை வாய்ப்புகளைப் பெருக்க, விரைவான முழு அளவு வளர்ச்சியைப் பெற, புதிதாகப் பெற்ற தேசிய விடுதலையைக் கட்டிக் காக்க, வளர்ச்சி குறைந்த நாடுகளுக்குக் கிடைத்திருக்கும் ஒரே பாதை திட்டமிட்ட வளர்ச்சியாகும்." எனவேதான் உலகின் வளர்ச்சி குறைந்த நாடுகள் புத்தெழுச்சி பெற்று தங்கள் பிற்பட்ட பொருளாதார நிலையைப் போக்க முழு நம்பிக்கையுடன் திட்டக் கருத்திற்கு நடைமுறை வடிவம் அளித்துள்ளனர். இதற்குத் தலைசிறந்த சான்றாக விளங்குவது ஏழை ரஷ்யாவின் அக்டோபர்ப் புரட்சிக்குப் பின் திட்டத்தினால் தோன்றிய விரைவான வளர்ச்சியாகும். பேராசியர் காட்கில் அவர்கள் குறிப்பிடுவதுபோல் வெளியார் தலையீடும் தூண்டுதலும் இல்லாத நிலையில் தோன்றும் வளர்ச்சியின் போக்கும் வேகமும் திருப்திகரமாக இல்லாததால், திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியை மேற்கொள்ளவேண்டிய கட்டாய நிலை ஏற்படுகிறது. வெளியார் தலையீட்டினால் வளர்ச்சியின் வேகம் கணிசமான அளவு அதிகரிப்பதோடு அதன் போக்கும் தகுந்த வழியில் மாற்றியமைக்கப்படுகிறது. திட்ட நிபுணர்கள் நவீனமுறையில் சிக்கன நடவடிக்கைகளை மேற்கொள்வதோடு நுகர்ச்சியை ஓரளவு குறைக்கவும் வகைசெய்கின்றனர். மூலதன வளங்களைத் தகுந்த முறையில் முதலீடு செய்ய நீண்டகாலத் திட்டத்தையும் கையாளுகின்றனர். சிறந்த கல்வியும், சீரான பயிற்சியும் பெற்ற தகுதிவாய்ந்த தொழிலாளர்கள் மூலதன வளங்களை அதிக அளவில் திறம்படப் பயன்படுத்தவும் திட்டம் வகை செய்கிறது. இதன் விளைவாகத் தேசிய உற்பத்தி சமச்சீராக எல்லோருக்கும் பங்கிடப்பட்டு நாட்டில் சமூகப் பாதுகாப்பும், அமைதியும் தோன்றுகிறது. எனவே, திட்டமென்பது எல்லாவற்றையும் உள்ளடக்கிய நிலையான, சீராக்கப்பட்ட ஒரு முழுவகை அமைப்பாகும். தனியார் நடவடிக்கைக்கு வழிகாட்டுதல், கட்டுப்படுத்துதல், வகைப்படுத்துதல், ஆகியவைகளோடு பொதுத்

துறையின் நடவடிக்கைகளை அதிகரித்தலும், அமைப்புவழிச் செயல் முறைகளின் ஒரு பகுதியாகும்.[1]

## வளர்ச்சியுரு நாடுகளின் வெற்றிதரும் திட்டத்திற்கான முன் தேவைகள்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஒரு திட்டத்தின் செயல் முறைகள் வெற்றிதர வேண்டுமானால், சில முன் நிபந்தனைகள் பூர்த்தி செய்யப்படவேண்டும். இதை வெற்றி தரும் பொருளாதாரத் திட்டத்தின் நடவடிக்கை முறைகள் (Process of Successful Economic Planning) என்றும் கூறலாம். அவைகள் பின்வருமாறு :

### 1. புள்ளிவிவரங்களைச் சேகரித்தல்

சிறந்த திட்டத்தின் ஒரு முக்கிய முன் தேவை வளங்களைப் பற்றிய ஒரு முழுக் கணக்கீடாகும். ஒரு நாட்டில் இருந்துவரும், மேலும் பெறத்தக்க ஆக்க வளங்கள், அவைகளின் பற்றுக்குறை, ஆகியவைகளைப் பற்றிய ஒரு முழுக் கணக்கீடு இன்றியமையாததாகும். பேகோவ் குறிப்பிடுவது போல், "திட்டத்தின் ஒவ்வொரு செயல் முறையும் பிரம்மாண்டமான பெரிய மாளிகைகளை எழுப்புவது மட்டுமல்ல. இருக்கும் வளங்களைப்பற்றி ஒரு முழு அடிப்படை ஆய்வுதான் முக்கிய நடவடிக்கையாகும்."[2] அத்தகைய ஒரு கணக்கீடு இருக்கும் மொத்த மூலப்பொருள்கள், மூலதனம், மனித வளங்கள் போன்ற நாட்டின் அம்சங்களின் செய்திகளையும், புள்ளி விவரங்களையும் சேகரிக்க இன்றியமையாததாக விளங்குகிறது. இருக்கும், மேலும் பெறத்தக்க இயற்கை வளங்களைப் பற்றிய. விவரங்களுடன் அவைகள் எந்த அளவு வேளாண்மை, தொழில் உற்பத்தி, போக்குவரத்து, தொழில் நுட்பப் பணியாள்கள் போன்ற அம்சங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளன என்பதைப் பற்றி அறிந்தால்தான் திட்டத்தில் இலக்குகளையும், முதலிடம் தரவேண்டிய அம்சங்களையும் நிர்ணயிக்க முடியும். எனவே, புள்ளி விவரங்களைச் சேகரிக்கத்தக்க பல்வேறு அமைப்புகளைக் கொண்ட ஒரு மத்திய புள்ளிவிவர நிறுவனம் திட்டத்தைச் செயல்படுத்துவதற்குப் பெருந்துணை புரிகிறது. ஒரு நாட்டில் ஏற்கெனவே ஒரு திட்டமிருந்தால் அடுத்த திட்டத்திற்கான தேசிய வருவாய், முதலீடு, சேமிப்பு, நுகர்வு, மக்கட் தொகை ஆகியவைகளில் தகுந்த மாற்றங்களை

[1] D. R. காட்கில், 'இந்தியாவில் திட்டமும் பொருளாதாரக் கொள்கையும், ப 88.

[2] பேகோவ், 'சோவியத் பொருளாதாரமுறையின் வளர்ச்சி' ப. 427.

ஏற்படுத்தப் புள்ளி விவரங்கள் இன்றியமையாதனவாய் விளங்குகின்றன. காலப்போக்கில் திட்டத்தின் நடவடிக்கைகளை மதிப்பிடவும், ஆண்டுதோறும் பொருளாதாரக் கணக்கீட்டை வெளியிடவும், புள்ளி விவரங்கள் பயன்படுகின்றன.

## 2. இலக்குகளையும் சிறப்பு முதலிடங்களையும் குறித்தல் (Fixing Targets and Priorities)

திட்டத்தில் தீட்டப்பட்ட குறிக்கோள்களைச் சாதிக்க இலக்குகளையும், சிறப்பு முதலிடங்களையும் குறித்தல் அடுத்த பிரச்சினையாகும். இலக்குகள் உறுதிகொண்டவைகளாயும், பொருளாதாரத்தின் ஒவ்வொரு அம்சத்தையும் உள்ளடக்கியதாயும் இருத்தல் அவசியமாகும். இலக்குகள் என்பது சான்றாக உணவுப் பொருள்கள் நிலக்கரி போன்றவைகளில் எத்தனை மில்லியன் டன் அதிகரிப்பது, எவ்வளவு கிலோவாட் மின்சக்தி உற்பத்தித்திறனை அதிகரிப்பது போன்ற அளவுசார் உற்பத்தி இலக்குகளை (Quantitative Production Targets) குறிப்பதைக் குறிக்கிறது. அத்தகைய இலக்குகள் அரசாங்க நிறுவனங்களுக்கும், பெரிய தனியார் நிறுவனங்களுக்கும் குறிக்கப்பட வேண்டும். இதனால் பற்றாக் குறையுடைய மூலப்பொருள்களைத் தீர்மானிக்கப்பட்ட நோக்கத்திற்காகச் சிக்கனத்துடன் பயன்படுத்த முடியும்.[1] இலக்குகள் ஒன்றையொன்று முரண்பாடில்லாமல் ஒத்திருந்தால்தான் பொருளாதாரத்தில் ஒரு குறிப்பிட்ட வளர்ச்சி வீதத்தைச் சாதிக்க முடியும். இதற்கு ஒவ்வொரு துறையிலும் முதலிடம் பெற்றவைகளை நிர்ணயிக்க வேண்டியது அவசியமாகும். கிடைக்கும் மூலப்பொருள்கள், மூலதனம், மனித வளங்கள், ஆகியவைகளைக் கருத்தில் கொண்டு பொருளாதாரத்தின் குறுகியகால, நீண்டகாலத்தேவையினடிப்படையில் சிறப்பிடங்களைத் (Priorities) தீர்மானிக்க வேண்டும். முதலில் நடைமுறைப்படுத்த வேண்டிய திட்டங்களுக்கு உயர் சிறப்பிடம் அளிக்க வேண்டும். சாதாரணத் திட்டங்களுக்குக் கீழ்ச்சிறப்பிடம் அளிக்கப்பட வேண்டும். நாட்டின் தேவைகளுக் கேற்றாற்போல் சிறப்பிடம் அளிக்கும் முறையும் (Scheme of Priorities) கடுமையான கண்டிப்பு இல்லாமல் மாற்றமடையத் தக்கதாக இருக்க வேண்டும். சான்றாக இந்திய முதல் திட்டத்தில் வேளாண்மை, நீர்ப் பாசனம், ஆக்கச் சக்தி ஆகியவைகளின் வளர்ச்சிக்கு உயர் மேல் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. இதில் மதிப்பிடப்பட்ட முதலீடு மொத்த முதலீட்டில் 44 சதவீதமாகும். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் தொழில்,

[1] O. K.கோஷ் (Ghosh), 'இந்தியப் பொருளாதாரத் திட்டப்பிரச்சினை' ப 61.

தாதுப்பொருள் வளர்ச்சிக்கு உயர் சிறப்பிடம் அளித்தது. இதில் மதிப்பிடப்பட்டச் செலவு மொத்த மூதலீட்டில் 20 சதவீத மாகும். இது முதல் திட்டத்தில் 4 சதவீதமாக இருந்தது. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் வேளாண்மை, தொழில் வளர்ச்சிக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. இதில் மதிப்பிடப் பட்ட முதலீடு முறையே 36 சதவீதமும் 20 சதவீதமும் ஆகும். 1962-ல் சீனப்படையெடுப்பால் துறைச் சிறப்பிடங்களின் ஒழுங்கு மாற்றப்பட்டுப் பாதுகாப்பு உற்பத்தி, சாலை வளர்ச்சி ஆகியவை களுக்கு உயர் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. 1965-ல் இந்தோ-பாகிஸ்தான் போரினுல் பாதுகாப்புத் தேவைகளைப் பூர்த்தி செய்ய, வேளாண்மை, தொழிலுற்பத்தி ஆகியவைகளுக்கு உயர் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. எனவே, அரசின் திறமையான திட்டம் பொது முதலீட்டிற்காக அறிவாற்றலுடன் சிறப்பிடங் களைத் தீர்மானித்து, உணர்வாற்றலுடன் பொதுக் கொள்கைகளை அமைத்து, தனியார் துறை வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டும்.

## 3. தகுந்த சமநிலைகளை நிலைநாட்டுதல்

ஒருதலைப்பட்ட வளர்ச்சி, பல்வேறு தடைகள், பற்றுக் குறைகள் ஆகியவைகளை விலக்கிப் பொருளாதாரத்தில் தக்க சமநிலைகளை யேற்படுத்துதல் வெற்றிகரமான திட்டத்தின் தலை சிறந்த பணியாகும். நுகர்வு, உற்பத்திப் பொருள் துறை, தனியார் துறை, பொதுத்துறை, சமூக பொருளாதார நலனை மேம்படுத்தும் அமைப்பு, உள்நாட்டு வெளிநாட்டு வர்த்தகம், உள்நாட்டு நிதிவசதி, வெளிநாட்டுச் செலாவணி, முதல்செறிவு உற்பத்தி முறை, தொழிலாளர் செறிவு உற்பத்தி முறை ஆகியவை களுக்கிடையே ஒரு தகுந்த சமநிலை இருக்க வேண்டும். வேளாண் மையைச் சீரமைக்க நிலச்சீர்திருத்தங்களை அமுலாக்குதல், கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தல், உள்நாட்டுத் தொழில்களை ஊக்குவித்தல் ஆகிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். போதிய சமூக பொருளாதார நலனை மேம்படுத்தும் அமைப்பு களையும், அடிப்படைப் பிரதான தொழில்களையும் (Key Industries) அரசு ஏற்படுத்தவேண்டும். உள்நாட்டு வெளிநாட்டு வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தி ஒழுங்காக்கி வெளிநாட்டுச் செலா வணித் தொல்லைகளைப் போக்க வேண்டும். ரஷ்யாவிலும், சீனுவிலும், இச் சம நிலைகள் உண்மையில் வரவுசெலவுத் திட்டங் களாகவே (Budget) உள்ளன. பல்வேறு தேவைகளும், கிடைக்கும் வளங்களும் எதிரெதிராக வைத்துக் கணக்கிடப்படுகின்றன. இதனுல் சமநிலைகள் அல்லது பட்ஜெட்டுகள் ஆயப்பட்டு, மறு ஆய்வும் நடத்தப்பட்டு, தேவைகளும் கிடைக்கும் வளங்களும் ஒன்றை

யொன்று சமநிலையை அடையச் செய்யப்படுகின்றன. சான்றுகப் பொருளாதாரம் முழுவதற்கும் தேவைப்படும் சிமெண்டைத் திட்டகாலத்திற்கு நிர்ணயிக்கப்படுகிறது. இதன்பின் பல்வேறு வழிகளிலிருந்து கிடைக்கும் சிமெண்டு அளிப்பும் அதன் மொத்தத் தேவையும் எதிரெதிராக வைக்கப்பட்டுச் சமநிலை ஏற்படுத்த ஆராயப்படுகிறது. கூடுதல் உற்பத்தியினுலோ அல்லது கூடுதல் வெளி நாட்டு அளிப்பினுலோ மதிப்பிடப்பட்ட அளிப்பு, தேவையுடன் சரிசெய்யப் படவேண்டும். இல்லையென்றால் தேவையைக் குறைத்து விடவேண்டும். இவ்விரண்டில் எந்த நடவடிக்கையும் எஃகு, வெளிநாட்டுச் செலாவணி, உள்நாட்டுப் பணம், போன்ற மற்றபொருள்களின் தேவையைப் பாதிக்கும். எனவே, பல்வேறு உற்பத்திப் பிரிவுகளில் எதிரெதிரான சமநிலை ஏற்படும் வரைக்கும் ஒப்பிட்டுச் சரிபார்த்தலும் மறு ஒப்பீடும் பல்வேறு துறைகளில் தொடர்ந்து நடைபெற வேண்டும். பொருளாதாரத்திற்கு மிகவும் அவசியமாக விளங்கும் சமநிலைகளை O. K. கோஷ் அவர்கள் கீழ்க் கண்ட முறையில் வரிசைப்படுத்துகிறார்: உள்நாட்டு நிதி, வெளி நாட்டுச் செலாவணி, மனித சக்தி, மூலப் பொருள்கள், வெளிநாட்டு வர்த்தகம், ஒவ்வொரு தொழில் துறையிலும் மூலதன முதலீடு, ஆகியவைகளாகும்.[1]

## 4. ஊழலற்ற, திறமையான நிர்வாகம்

வெற்றிகரமான பொருளாதாரத் திட்டத்திற்கு மிகவும் இன்றியமையாத அமைப்பாக விளங்குவது சக்திவாய்ந்த, திறமையான, ஊழலற்ற நிர்வாகமாகும். வளர்ச்சியுறு நாடுகளில் இவ்வியல்புகள் நிர்வாகத் துறையில் பெரும்பாலும் காணப்படுவதில்லை. பேராசிரியர் W.A. லூயிஸ், "ஒரு திட்டத்தின் மகத்தான வெற்றிக்கு அடிப்படை முதல் நிபந்தனையாக விளங்குவது வலுப்பெற்ற, தகுதி கொண்ட, ஊழலற்ற நிர்வாகம்" என்று கூக்குரலிடுகிறார்.[2] வளர்ச்சி குறைந்த நாடுகளின் மைய அமைச்சரவை (Central Cabinet) தொழில் நுட்ப ஆலோசகர்களால் பரிசீலிக்கப்பட்டுப் பரிந்துரைக்கப் படாமலேயே மிக முக்கியப் பொருளாதாரத் தீர்மானங்களை அவசரமாகத் தீர்மானித்துவிடக்கூடாது. செயல் திட்டத்தைத் தொடங்குமுன் சம்பந்தப்பட்ட செயல் திட்டங்களின் (Proposed Projects) நடைமுறை அறிக்கை (Feasibility report) ஒன்றை முதலில் தயாரிக்க ஒவ்வொரு அமைச்சரகத்திலும் தகுதி வாய்ந்த நிர்வாகப் பணியாள்கள் நியமிக்கப்படவேண்டும். அவர்கள் திட்டமுறை, செயல்திட்டத்தை ஆரம்பித்தல், திட்டப் பட்டியல்

[1] O. K. கோஷ் 'இந்தியப் பொருளாதாரத் திட்டப் பிரச்சினை.' ப. 65.
[2] W. A லூயிஸ், 'பொருளாதாரத் திட்டத்தின் கோட்பாடுகள்' ப. 121.

களைத் தயாரித்தல், எதிர்பார்க்காத சூழ்நிலையினால் அவைகளைத் திருத்துதல், காலந்தோறும் திட்டத்தை மதிப்பீடு செய்தல் போன்றவைகளில் தகுந்த அனுபவமும், திறமையும் பெற வேண்டும். அத்தகைய நிர்வாக அமைப்பில்லாத ஒரு வளர்ச்சி குறைந்த நாட்டில் வளர்ச்சித் திட்டங்கள் தோன்ற எவ்வித உரிமையும், தகுந்த காரணமும் இல்லை. "அத்தகைய சீரான நிர்வாகத்துறை காணப்படாத நாடுகளில் அரசாங்கங்கள் திட்டமிடுவதாகப் பாசாங்கு செய்வதற்குப் பதிலாக, தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிப்பதே சாலச் சிறந்ததாகும்" என்று W. A. லூவிஸ் பெரிதும் வலியுறுத்திக் கூறுகிறார். ரஷ்யப் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களின் மகத்தான, மாபெரும் வெற்றிக்குத் தலையாய காரணமாக விளங்குவது கம்யூனிஸ்ட் கட்சியின் "மேம்பட்ட பயிற்சியும், ஒழுக்கமும் கொண்ட சமய குருவைப் போன்ற ஒழுங்கு முறையே" ஆகும். "ஒரு திட்டத்தை வரையும் போது கொள்கைக்கு முதலிடம் அளித்து, நுட்பச் செயல் முறையை (Technique) துணை அம்சமாகவே கருதவேண்டும். நுட்பச் செயல்முறையைத் திட்டமிடும் போது வெளிப்படுத்தினும் திட்டமுறை முழுவதிலும் கொள்கைக்கே சிறப்பிடம் அளிக்கப்பட்டு வலியுறுத்தப்படவேண்டும். வளர்ச்சிப் பொருளாதாரம் சிக்கல் மிக்கதாய் இல்லை; வெற்றிகரமான திட்டங்களின் ரகசியம், உணர்வாற்றல் மிக்க அரசியல் கொள்கைகளிலும், செயல் ஆற்றல் பெற்ற பொது நிர்வாகத்திலுமே பெரும்பாலும் உள்ளது" என்று W. A. லூவிஸ் முழக்கமிடுகிறார்.[1]

## 5. தகுந்த வளர்ச்சிக் கொள்கை

ஒரு வளர்ச்சித் திட்டத்தில் வெற்றிகாண்பதற்கு ஒரு தகுந்த வளர்ச்சிக் கொள்கையை அரசு அமைத்து, அதனால் வளர்ச்சிச் செயல் முறைகளின் போது இலக்குகளுக்கும் சாதனைகளுக்குமிடையே இடைவெளி ஏற்படுவதைத் தவிர்க்கவேண்டும். ஒரு வளர்ச்சிக் கொள்கை கீழ்க்கண்ட முக்கிய அம்சங்களைப் பெற்றிருக்க வேண்டும்மென்று பேராசியர் லூவிஸ் விளக்கியுள்ளார். 1. வளர்ச்சியின் ஆக்கச் சக்திகளைப் பரிசீலித்தல்: இதில் தேசிய வளங்களைப் பற்றிய கணக்கீடு, விஞ்ஞான ஆராய்ச்சி, அங்காடி ஆராய்ச்சி ஆகியவைகள் அடங்கும். 2. பொது அல்லது தனியார் பதிலாள்களால் நீர், ஆக்கசக்தி, போக்குவரத்து, செய்தித் தொடர்பு போன்ற பொருளாதார சமூக நலனை மேம்படுத்தும்

[1] W. A. லூவிஸ், 'பொருளாதாரத் திட்டத்தின் கோட்பாடுகளும், வளர்ச்சித் திட்டமும்.'

அமைப்புகளைப் போதுமான அளவு ஏற்படுத்துதல். 3. சிறப்புப் பயிற்சி வசதிகள், போதிய பொதுக்கல்வி, ஆகியவைகளை அளித்து தேவையான திறனை ஏற்படுத்துதல் 4. பொருளாதார நடவடிக்கையில் சட்ட அமைப்பு அம்சங்களைச் சீர்படுத்துதல். முக்கியமாக நிலக்குத்தகை, கழகங்கள் (Corporations), வர்த்தக நடவடிக்கைகள், ஆகியவைகள் சம்பந்தப்பட்ட சட்டங்களைச் சீர்ப்படுத்துதல். சீரான சந்தைகள் ஏராளமான அளவில் ஏற்பட உதவிபுரிதல். இதில் பொருள் சந்தைகள், பாதுகாப்பு மாற்றுக் கூடங்கள் (Security Exchanges), வங்கித் தொழில், காப்பீட்டு, கடன் வசதிகள் ஆகியவைகளும் உள்ளடங்கும். 6. உள்நாட்டு, வெளி நாட்டு ஆக்கத்திறன் கொண்ட தொழில் துணிவோர்களைக் கண்டறிந்து அவர்களுக்குத் துணைபுரிதல். 7. வளங்களைச் சீரான முறையில் பயன்படுத்துவதை மேம்படுத்துதல். இதில் துர் உபயோகத்தைத் தடுக்கக் கட்டுப்பாடு விதித்தலும் ஊக்கிகளை அளித்து வளங்களைப் பயன்படுத்துவதை மேம்படுத்துவதும் உள்ளடங்கும். 8. தனியார், பொதுச் சேமிப்பு அதிகரிப்பைப் பெருக்க வகை செய்தல் ஆகியவைகளாகும். வளர்ச்சித் திட்டத்தின் வெற்றிகளைப் பரிசோதிக்க, மேற்குறிப்பிட்ட பல்வேறு அம்சங்களின் சாத்தியக் கூறுகளைப் பரிசீலிக்க வேண்டும். சிறப்பான கொள்கைகள் திட்டத்திற்குத் துணைபுரியும். ஆனல், அவைகள் வெற்றிதரும் என்று உறுதியாகக் கூறமுடியாது. பேராசிரியர் லூவிஸ் வளர்ச்சித் திட்டத்தை ஒரு மருந்தாக உருவகிக்கிறார். நல்ல மருத்துவரின் கையில் உள்ள மருந்து பயனுள்ள தந்திரச் செயல் புரிவதற்கு பயன்படும். "ஆனல் அதே மருந்து வாழவேண்டிய அநேக பிணியாளர்களை இறக்கச் செய்யவும், இறக்கவேண்டிய அநேக நோயாளிகளை உயிர் வாழச் செய்யவும் முடியும்."[1] எனவே, சக்தி வாய்ந்த திறமையான நிர்வாகத்தைக் கொண்ட அரசால் நடைமுறைப் படுத்தப்படும் வளர்ச்சித் திட்டங்கள் மாபெரும் வெற்றியைத் தேடித் தரமுடியு மென்பது வெளிப்படையாகும்.

## 6. நிர்வாகச் சிக்கனம்

நிர்வாகத்தில் பல்வேறு சிக்கனங்களை உட்புகுத்தப் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். முக்கியமாக அமைச்சரகங்கள், அரசுதுறைகள், ஆகியவைகளின் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். பேராசிரியர் ஸ்ரீமன் நாராயண் (Shriman Narayan) அவர்கள் குறிப்பிடுவதுபோல், "வரிவிதிப்பு,

[1] W. A. லூவிஸ், 'வளர்ச்சித் திட்டம்' ப. 22—23.

கடன்வாங்கல் இவைகளின் மூலமாக மக்களிடமிருந்து பெற்ற ஒவ்வொரு பைசாவும் தகுந்த முறையில் தங்கள் நலனுக்காகவும் வளர்ச்சிக்காகவும் செலவிடப்படுகிறது; வீணை வழியில் சிதறவில்லை என்று மக்கள் நம்பிக்கை உணர்வு கொள்ள வேண்டும்"[1]

## 7. பரவலான கல்விமுறை

நேர்மையும் திறமையும் கொண்ட நிர்வாகத்தைப் பெற ஒரு நிலையான கல்வி அமைப்பு மிகவும் இன்றியமையாததாகும். திட்டம் வெற்றியடைய மக்களிடம் நேர்மையும், அறநெறிப் பண்புகளும் அதிகரிக்கின்றனவா என்பதை அரசு கண்டறிய வேண்டும் மக்களிடம் சீர்மையும், நற்பண்பும், அறநெறி இயல்பு களும் அதிக அளவில் இருந்தாலொழிய நிர்வாகத்தில் சிக்கனத்தை யும் திறமையையும் எதிர்பார்க்க முடியாது. இதற்குப் பொது, தொழில் நுட்பக் கல்விபோதனையை அதிகரிக்க, ஏராளமான கல்வி நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டு ஒரு சக்திவாய்ந்த கல்விமுறை அமைப்பு உருவாக வேண்டும். பேராசிரியர் ஸ்ரீமன் நாராயண் அவர்கள் குறிப்பிடுவது போல், "நாட்டில் நேர்மையும், திறமையும் கொண்ட மக்களை உருவாக்காமல் பொருளாதாரத் திட்டத்தைப் பேரளவில் கையாண்டு நடைமுறைப்படுத்தச் சாத்தியப்படாது."

## 8. பொதுமக்களின் ஒத்துழைப்பு

மக்களாட்சியை அடிப்படையாகக் கொண்ட நாட்டில் பொது மக்களின் ஒத்துழைப்பே திட்டத்தின் வெற்றிக்கு எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு முக்கிய நெம்புகோல் கருவியாகக் கருதப்படுகிறது. திட்டத்திற்கு மக்களின் தாராளமான ஒத்துழைப்பு இன்றியமை யாததாக விளங்குகிறது. பொருளாதாரத் திட்டம் கட்சி அரசியலுக்கு அப்பாற்பட்டதாக இருக்கவேண்டும். ஆனால், அதே நேரத்தில் அது எல்லாக் கட்சிகளாலும் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். அதாவது மக்களின் பிரதிநிதிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு திட்டத்தைத் தேசியத் திட்டம் என்று கருதலாம். ஏனெனில் பொது மக்களின் ஆதரவு பெறாத எந்த ஒரு திட்டமும் வெற்றியடைய முடியாது. பேராசிரியர் லூயிஸ் குறிப்பிடுவதுபோல், "பொது மக்களின் ஆர்வம் திட்டத்திற்கு எந்திரத்தின் சுழற்சியை எளிதாக்கும் எண்ணெய் போலவும், பொருளாதார வளர்ச்சிக்கு மோட்டார் வாகனத்தின் பெட்ரோல் சக்தி போலவும் அமைந்து, எல்லாவற்றையும் சாதிக்க வல்ல ஒரு

1 ஸ்ரீமன் நாராயண், 'இந்தியத் திட்டதின் போக்கு' ப. 36,

இயங்கும் சக்தியாக (Dynamic Force) உள்ளது."[1] இச் சக்தியை இங்கிலாந்தில் உலகப் போரின் போதும், ரஷ்யாவில் 1930-39-க்கும் இடைப்பட்ட காலத்திலும் நடைமுறையில் காண முடிந்தது. எனவே, மிகவும் பிற்பட்ட நாடுகளிலும் இந்த இயக்க சக்தியை, அரசு அதிகரிப்பதற்கு எந்தெந்த முறைகளைக் கையாள வேண்டுமென்பதை அறிந்தால், பொருளாதாரத் திட்டங்கள் சிறப்பான வெற்றியைப் பெறமுடியும்.

## 9. குறிக்கோள்களையும், சிறப்புக் கொள்கைகளையும் அமைத்தல் (Setting Goals and Strategies)

ஒரு திட்டமென்பது வேண்டிய ஒரு குறிக்கோளையோ அல்லது குறிக்கோள்களையோ சாதிக்க வரையப்படுவதாகும். பொருளாதார வளர்ச்சிக்குத் திறமையுடன் திட்டமிடத் திட்ட நிபுணர்களும், கொள்கை வகுப்பவர்களும் பொருளாதார வளர்ச்சியைப் பற்றிய தெளிவான கருத்தை நன்முக அறிந்திருக்க வேண்டும். இது அவ்வளவு எளிதான காரியமன்று. பொருளாதார அறிஞர்கள் பொருளாதார வளர்ச்சியென்பது (Economic Development) எல்லாத் துறைகளின் முழு அளவு பொருளாதார வளர்ச்சி (Economic Growth) என்று கருதுகின்றனர். அதாவது மக்கட் தொகை வளர்ச்சியைவிடப் பொருள்கள், பணிகளின் மொத்த உற்பத்தி அதிகரிப்பதாகும். பொருளாதார வளர்ச்சிக்கு (Development) வகை செய்யும் பல்வறு காரணிகளில் ஒரு முக்கியக் காரணியாக விளங்குவது முழு அளவுப் பொருளாதார வளர்ச்சி (Growth) யாகும். வளர்ந்து வரும் நாடுகளுக்கு வளர்ச்சி என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. பல்வேறு அம்சங்கள் வளர்ச்சிகளின் குறிக்கோள்களிலே இடம் பெற வேண்டிய நிலை உள்ளது. மேற்கத்திய நாடுகளில் உள்ள எந்திரங்கள், தொழில் நுட்பம் ஆகியவைகளை இந் நாடுகளிலும் பயன்படுத்துவது, பசியைப் போக்குதல், வறுமை, நோய் ஆகியவைகளை நீக்குதல், பொருளாதார நீதி, சமத்துவம் சமுதாயத்தில் விரிவாக்கப்படல், ஒரு சில பராமரிப்புப் பொருள்களையே நம்பியிருப்பதிலிருந்து விடுதலைப் பெறுதல், செய்பொருள் தொழில்களை வளர்ச்சியடையச் செய்தல், நாட்டில் வெளியார்களின் ஆதிக்கத்தை நீக்குதல் போன்ற பல்வேறு குறிக்கோள்கள் வளர்ச்சித் திட்டத்தில் இடம் பெற வேண்டிய நிலை உள்ளது. வளர்ச்சியென்பது சமதர்ம சமுதாயத்தை அடையச் செய்யும் குறிக்கோள்களையும் உள்ளடக்குகிறது.

[1] W. A. லூவிஸ், 'பொருளாதாரத் திட்டக் கோட்பாடுகள்' ப. 128.

## வளர்ச்சிக் குறிக்கோள்களில் முரண்பாடு
(Conflict in Development Golas)

ஒவ்வொரு நாடும் அது சாதிக்க வேண்டிய குறிக்கோள்களை முதலில் தீர்மானிக்க வேண்டும். சில வளர்ந்து வரும் நாடுகள் பல்வேறு குறிக்கோள்கள் ஒத்தியைந்து வருகின்றனவா என்பதையும், அவைகளிடையே முரண்பாடு ஏற்பட்டால் அதைத் தீர்ப்பதற்கு வழி முறைகளையும் கண்டறிவதில்லை. பல்வேறு குறிக்கோள்களைச் சாதிக்க முயலும்போது வளர்ச்சியின் குறிக்கோளுடன் மற்றக் குறிக்கோள்கள் ஒத்தியைவதில்லை. சான்றாக மேற்கத்திய நாடுகளின் வாழ்க்கை முறையை விரைவாகச் சாதிக்க வேண்டுமென்ற குறிக்கோள் பேரார்வமும் நடை முறைக்கு ஒவ்வாததுமான திட்டத்தைத் திட்ட வேண்டிய நிலையை ஏற்படுத்தும். இதன் விளைவாக வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகள் பண வீக்கம், திறமை குறைந்த செயல்முறை ஆகியவைகள் ஏற்படலாம். ஆராயாமல் அமுலாக்கப்பட்ட தொழில் மயத்தின் விளைவாக அநேகச் சிக்கனமற்ற, நிர்வகிக்க முடியாத செயல் திட்டங்களும் உருவாகின்றன. மேலும், இதனால் மிக முக்கியத்துவம் வாய்ந்த வேளாண்மை, மற்ற முதல்நிலைத் தொழில்கள் ஆகியவைகளின் பெருக்கம் புறக்கணிக்கப்படுகிறது. பொருளாதார நீதியை ஏற்படுத்த அவசரப்பட்ட, திறன் குறைந்த வரிச் சீர்திருத்தங்கள் மக்களிடம் முதலீட்டுச் சக்தியையும் ஊக்கத்தையும் கெடுத்து விடுகிறது. எனவே, பொருளாதார வளர்ச்சியின் சிக்கல் மிக்க குறிக்கோள்களை உள்ளுணர்வுடனும் அறிவாற்றலுடனும் ஒத்தியையச் செய்தால் பல்வேறு தொல்லைகள் குறைந்து பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகள் மகத்தான வெற்றியைத் தரும்.

### வளர்ச்சியின் சிறப்புக் கொள்கைகள்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொரு வளர்ச்சித் திட்டமும் ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட சிறப்புக் கொள்கைகளின் அடிப்படையில் செயல் புரிகிறது. முதலில் வளர்ச்சியில் தனியார் துறை, பொதுத்துறை ஆகியவைகளின் பங்கை மிகக் கவனத்துடன் நிர்ணயிக்க வேண்டும். அரசாங்கமே சுய ஊக்கத்துடன் வளர்ச்சியின் செயல் முறையை வேகப்படுத்தும் பொறுப்பை முழுவதுமாக ஏற்றுக் கொள்வதா அல்லது அங்காடியின் நடைமுறைகளின் போக்கிலேயே வளர்ச்சியை விட்டுவிடுவதா என்ற சிறப்புக் கொள்கையைத் தீர்மானிக்க வேண்டும். இங்குதான் மிக முக்கிய கவனம் தேவைப்படுகிறது. வளர்ந்து வரும் நாடுகள் தீவிர உணர்வுடன் வளர்ச்சியைத் தோற்றுவிக்கும் பெரும் பணியை தேர்ந்தெடுத்து

மேற்கொள்ள வேண்டியது அவசியமாகும். பொதுவாக இக் கொள்கையைத் தீர்மானிப்பதில்தான் தவறுகள் ஏற்படுகின்றன. தனியார் துறையின் ஆற்றல் குறைவாக மதிப்பிடப்பட்டு, அது வளர்ச்சி நடவடிக்கையில் மேற்கொள்ள வேண்டிய சிறப்பான தொண்டு வீணடிக்கப்பட்டு விடுகிறது. இது நாட்டில் சேதத்தை ஏற்படுத்தும், ஒரு குறையாகும். ஆற்ற வேண்டிய பணி மிகப் பெரியதாக இருப்பதால் அரசே தனியாக இப் பெரும் பணியை ஆற்றிவிட முடியாது. தனியார் துறையும் பெருமளவு வளர்ச்சியில் பங்கு பெற வேண்டும். திட்டங்களை நடைமுறைப்படுத்துவதில் அரசு தலையாய பங்கைப் பெற வேண்டும். அரசே முழுவதுமாக எல்லாப் பணிகளையும் மேற்கொண்டால் நிர்வாக நடைமுறையில் பெருஞ் சுமை சுமத்தப்படுவதால் செயல் நடவடிக்கைகள் திறமையுடன் செயலாற்றப்பட முடிவதில்லை.

அதிகபட்ச உற்பத்தியைப் பெறுவது வளர்ச்சியின் பிரதான குறிக்கோளாக இருந்தால், வளர்ச்சியின் சிறப்புக் கொள்கை அதிகபட்ச உற்பத்தியைச் சாதிக்கவல்லதாக அமைக்கப்பட வேண்டும். தனியார் அல்லது பொது முதலீடு நீர்ப்பாசனம், ஆக்கசக்தி, சாலைகள், போக்குவரத்து, ஆலைகள், வீட்டுவசதி, பள்ளிக் கூடங்கள், மருத்துவ மனைகள், போன்றவைகளில் சமமாக அதிகரிக்க வேண்டியது இன்றியமையாததாகும். இதற்குச் சேமிப்பும் கணிசமான அளவு அதிகரிக்க வேண்டும். முதலீட்டால் மட்டும் அதிகபட்ச உற்பத்தியைச் சாதித்து விட முடியாது. செய்யப்படும் முதலீட்டிலிருந்து அதிகபட்ச பலன் (Return) கிடைக்க வேண்டியதுடன் முதலீடல்லாத காரணிகளாகிய (Non investment factors) மக்களின் ஆக்க மனப்போக்கு, சீரான நிர்வாகம், சரியில்லா வரி, சுங்கவரி அமைப்புகளை மாற்றியமைத்தல் போன்றவைகளால் உற்பத்தி பெருமளவு அதிகரிக்கும். எனவேதான் ஒரு நாட்டின் மூலதனச் செயல் திட்டங்களின் எளிமையான பட்டியலால் போதிய அளவு வளர்ச்சியைச் சாதிக்க முடிவதில்லை. அது தகுந்த வளர்ச்சித் திட்டமாகவும் அமைய முடியாது.

வேளாண்மை, மற்றப் பிரித்தெடுக்கும் தொழில்கள் (Extractive industries) ஆகியவைகளில் வளர்ந்து வரும் நாடுகளின் பெரும்பாலான மக்கள் ஈடுபட்டிருப்பதால், இத் தொழில்களில் மிகக் குறைந்த செலவுடைய எளிய நுட்பமுறைகளை உட்புகுத்தினால், உற்பத்தியை வியக்கத்தக்க வகையில் பெருமளவில்

அதிகரிக்க முடியும். இது எந்த ஒரு வளர்ச்சியின் சிறப்புக் கொள்கைக்கும் மிகவும் அடிப்படையான கருத்தாகும். இச் சிறப்புக்கொள்கை வேளாண்மை, மற்றப் பிரித்தெடுக்கும் தொழில்களில் மட்டும்தான் பயனளிக்கும் என்று எண்ணுவது தவறாகும் சிற்றளவுத் தொழில், போக்குவரத்துச் செய்தித் தொடர்பு, ஆக்க சக்தி, உள்நாட்டு வெளிநாட்டு வர்த்தகம், வீடுகள், மற்றக் கட்டட அமைப்புகள் போன்றவைகளிலும் இத்தகைய எளிமையான நுட்ப உற்பத்தி நடவடிக்கைகளை மேற்கொள்வது சிறந்த பயனளிக்கும். இருந்துவரும் நிர்வாகம், சொத்துரிமை, ஆகியவைகளின் அடிப்படையில் இத்தகைய எளிய முறையில் புத்தாக்கமும், சீரமைப்பும் பெருமளவில் அதிகரிக்கும். எனவே, இத் தொழில்களிலும் வேளாண்மைத் துறையைப் போலவே விலை உயர்ந்த உற்பத்தி முறைகள் தேவைப்படுவதில்லை. மேற்குறிப்பிட்ட சிறப்புக் கொள்கைகள் தனியாகச் செயல்படுபவைகளல்ல. அவை ஒவ்வொன்றும் ஒன்றை ஒன்று சார்ந்தே செயல்படுகின்றன. எனவே, அவைகளனைத்தும் பொருளாதார வளர்ச்சியின் ஒரு பரந்த நடைமுறைக் கொள்கைக்குள் ஒத்துவருபவைகளாய் அமையவேண்டும். வளர்ச்சியில் சிறப்புக்கொள்கைகளை அமைப்பதில் காணப்படும் ஒரு குறை ஏற்கெனவே ஆரம்பிக்கப்பட்டுச் செயல்புரிந்து வரும் நடவடிக்கைகளையும், நிறுவனங்களையும் மேலும் வளர்ச்சியடையச் செய்யத் தவறுவதாகும். இந் நடவடிகைகளையும் நிறுவனங்களையும் பணி ஆர்வம், விடாமுயற்சி, திடமான உறுதி, இவைகளைக் கொண்ட சிறப்புக் கொள்கையின் மூலம் மேலும் சீர்திருத்த வழிமுறைகளைக் கையாளவேண்டும். இவைகள் பொருளாதார உயர்வுக்கும் (Growth) வளர்ச்சிக்கும் (Development) மிகவும் இன்றியமையாதவைகளாய் விளங்குகின்றன. பெரும்பாலான வளர்ச்சி குறைந்த நாடுகள் தங்கள் வளர்ச்சிக்கு வெளிநாட்டு முதலீடுகள், உதவித்தொகைகள், கடன்கள் ஆகியவைகளையே பெருமளவு நம்பியுள்ளன. இக் கொள்கை சிறந்ததன்று. பொருளாதார வளர்ச்சியை விரும்பும் நாடுகள் தங்கள் சொந்த முயற்சியால் மூலதன வளங்களைச் சேகரிக்க உறுதி கொண்டு தொடர்ந்து விடாமுயற்சியுடன் அரும்பாடு படவேண்டும்.

வளர்ச்சியின்போது சமச்சீரான கொள்கையைப் பின்பற்றுவதா அல்லது சமச்சீரில்லா சிறப்புக் கொள்கையைப் பின்பற்றுவதா என்பதை அரசு சூழ்நிலைக்கேற்பத் தீர்மானிக்க வேண்டும். இதைப் பற்றி ஏற்கெனவே பிறிதோரிடத்தில் ஆராயப்பட்டுள்ளது. முதல் செறிவு நுட்ப முறையைப் பின்பற்றுவதா அல்லது தொழிலாளர் செறிவு நுட்ப முறையைக் கையாளுவதா என்பதைப் பற்றியும் அரசு தீர்மானிக்கவேண்டும்.

## 10. வளங்களையும் முதலீடு இலக்குகளையும் அமைத்தல்
(Setting the Resource and Investment Targets)

வளர்ச்சித் திட்டத்திற்குத் தேவையான நிதி பல்வேறு வழிகளின் மூலம் கிடைக்கிறது. முதலாவதாக, நடப்பு நுகர்விலிருந்து நிதி ஒதுக்கப்படுகிறது. இது நடப்புக் கணக்கு, தனியார் சேமிப்பு, ஆகியவைகளிலிருந்து கிடைக்கும் அரசாங்க உபரி நிதியாகும். இரண்டாவதாக, கடந்தகால வெளிநாட்டுச் செலாவணி எச்ச இருப்புகளின் சேர்க்கையிலிருந்து கிடைக்கும் நாட்டின் சேமிப்பாகும். மூன்றாவதாக, வெளி நாடுகளிலிருந்து கிடைக்கக் கூடிய உதவித் தொகைகள், கடன்கள், முதலீடுகள் ஆகியவைகளாகும். நடப்புக் கணக்கில் அரசாங்க உபரி என்பது வரவு செலவுத் திட்டத்தின் உபரி மட்டுமல்ல. அது அரசு ஈடுபட்டுள்ள எல்லா வகை நிதி நடவடிக்கைகளிலிருந்து கிடைக்கும் நிகர உபரியாகும். அதாவது பொதுத்துறை முழுவதிலிருந்தும் கிடைக்கும் உபரியாகும். தொழிலாளர் உழைப்பு, கருவிகள், இயந்திரம், மற்ற மூலதன வசதிகள், மூலப் பொருள்கள் போன்ற உண்மையாய் உற்பத்தியை அதிகரிக்கும் வளங்கள். உற்பத்திக் காரணிகளைப் பெறப் பயன்படும் நிதி, ஆகியவைகளுக்கிடையே வேற்றுமை உண்டு. நிதிமுறை வளங்கள், பொருள், பணிகளை உற்பத்தி செய்வதில்லை. அவைகள் உண்மை வளங்களைப் பெறவும், பணிகளில் பயன்படுத்தவும் துணைபுரிகின்றன. எனவேதான் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் அரசு உருவாக்கும் நிதிமுறை வளங்கள் விலைகள் அதிகரிப்பதற்குக் காரணமாக இருக்கிறதே தவிர உண்மை உற்பத்தி வளங்களை அதிகரிக்கப் பயன்படுவதில்லை.

### முதலீடு, உற்பத்தி விகிதத்தைக் கணக்கிடல்

ஆண்டுக்கு 5 முதல் 7 சதவீத மொத்த உற்பத்தி அதிகரிப்பைப் பெற மொத்த முதலீடு சுமார் 3 மடங்காக அதிகரிக்க வேண்டும். அதாவது பொருளாதாரத்தின் தன்மைகள், முதலீட்டின் ஒதுக்கீடு, திறன் ஆகியவைகளின் அடிப்படையில் முதலீடு, மொத்தத் தேசிய உற்பத்தியில் 15 முதல் 20 சதவீதமாக இருக்க வேண்டும். மேலும் முதலீடு, உற்பத்தி, ஆகியவைகளுக்கிடையே அமைந்த பழைய விகிதங்களையும் ஆராய வேண்டும். நடைமுறைக்கேற்ற தாற்காலிக விகிதத்தை ஏற்படுத்தப் பொருளாதாரம் முழுவதற்குமாகவும், துறைவாரியாகவும், முதலீடு—உற்பத்தி விகிதங்களை ஆராய வேண்டும். உறுதியான முடிவு கிடைக்கும்வரை திட்டத்தில் உள்ளடக்கிய செயல்முறைகள், திட்டங்கள் ஆகியவைகளின் செலவு, கிடைத்த நன்மைகள் ஆகியவைகளைப் பற்றித் தனித் தனியாக மதிப்பிட வேண்டும். பொதுவாகச் செலவீடுகள்

குறைவாகவே மதிப்பிடப்படுகின்றன. எதிர்பாராத சூழ்நிலையால் திட்டங்கள் திருத்தப்படுவதாலும், திட்டத்திற்கும் நடைமுறைக்கும் இடையில் செலவுகள் அதிகரிக்கலாம். அத்தகைய செலவுகள் உதிரிப் பகுதிகள், மூலப்பொருள்கள், சாதனங்கள், தேவையான நடப்பு முதல் போன்றவைகளின் செலவுகளைப் போதிய அளவு மதிப்பிட்டு உள்ளடக்குவதில்லை. முதலீடு, நிதி தேவைகள் ஆகியவைகளை மதிப்பிடும்போது அத்தகைய நிலைமைகளுக்கு வகை செய்யக் குறைந்த அளவு 10 அல்லது 15% இருப்பை வைத்துக் கொள்ள வகை செய்வது நல்லது.

## முதலீட்டில் வெளிநாட்டு உதவியின் பங்கு

மொத்த உற்பத்தி, வருவாயில் 15 முதல் 20% கூடச் சேகரிப்பது ஒரு வளர்ச்சி குறைந்த நாட்டிற்கு மிகவும் கடினமாகும். எனவே தான் வளர்ந்த நாடுகளும், பன்னாட்டு நிதி நிறுவனங்களும் இந் நாடுகளுக்கு உதவித் தொகைகளை வழங்குகின்றனர். வளர்ந்து வரும் நாடுகளின் வளர்ச்சித் திட்டங்களின் ஒரு பகுதிக்கு நிதியளிக்க வெளிநாட்டு முதல் பயன்படுகிறது. மொத்த முதலீட்டில் 40 முதல் 50% உள்நாட்டிலிருந்து நிதியாகக் கிடைக்க வேண்டும். உள்நாட்டு நிதி சேகரிப்பாக மொத்தத் தேசிய உற்பத்தியில் 8 முதல் 10% இருக்க வேண்டும். இதைக்கூட ஏழ்மை நாடுகள் சேகரிக்க முடிவதில்லை. எனவே, ஏழ்மை நாடுகள் பெருமுயற்சியுடனும் உண்மை உறுதியுடனும் இதைச் சாதிக்க முயல வேண்டும். இம் முயற்சி மிகவும் அவசியமானதாகும். ஏனெனில் வளர்ச்சித் திட்டங்களில் உள்ள வெளிநாட்டுச் செலாவணி, செலவுகளுக்கு மேல் வெளி நாட்டிலிருந்து உதவியாகக் கிடைக்காது. மேலும், அது உள்நாட்டு நிதியைப் பெறுவதில் ஒரு நாட்டிடம் உள்ள சுய உதவி முயற்சிகளைச் சோதனை செய்வதுபோல் உள்ளது. மேலும், வெளிநாட்டுக் கடன்களும், உதவித் தொகைகளும் உள்நாட்டு நிதியில் உள்ள பற்றுக் குறையைப் பதிலீடு செய்வதற்காக மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும். எனவே, வெளி நிதியைத் தவிர்க்க இயலாச் சூழ்நிலைகளில் மட்டும் எதிர் பார்க்க வேண்டும். வளர்ச்சிக்கான உள்நாட்டுச் செலவு, வெளிநாட்டுச் செலாவணிச் செலவு ஆகியவைகளுக்கு நிதியிட, வெளிநாட்டு உதவியையே பயன்படுத்தினால், நாடு தன் 'பொருளாதார தசைகளை' (Economic Muscles) சீராக வளர்ச்சியடையச் செய்வதில் தவறிவிடும். அல்லது தன் சொந்த எதிர்கால வளர்ச்சிக்கு வகை செய்யச் வேண்டிய ஆக்க சக்தியை இழந்துவிடும். உதவி நிறுத்தப் பட்டால் நாடு தானாகவே மேற்கொண்டு வளர்ச்சிக்கு நிதி செய்யச் செயலற்றுப் போகும்.

வளர்ச்சிக்கு வேண்டிய உள் நாட்டு நிதி வசதியை வலுப்படுத்த, வளர்ச்சி குறைந்த நாடுகள் ஆரம்ப கம்யூனிஸ முறையையோ அல்லது ஆரம்ப முதலாளித்துவ முறையையோ பின்பற்ற முடியாது. முதல் வகையில் தேவையான முதலீட்டிற்கு நிதி செய்ய அரசு உள்நாட்டு நுகர்ச்சியைக் கடுமையாகக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கும். இரண்டாம் வகையில் அதே காரணத்திற்காகத் தனியார் முதலாளிகள் கடுமையாகத் தொழிலாளர்களைச் சுரண்ட வேண்டியிருக்கும். இன்றைய வளர்ந்து வரும் நாடுகளில் நுகர்ச்சியைக் குறைத்தல் நிச்சயமாகவே விரும்பத் தக்கதல்ல. உள்நாட்டு வளங்களைச் சேகரித்துப் பொருளாதார வளர்ச்சிக்கு நிதி செய்ய வீண் செலவுகள், நீக்கப்பட்டும், பொது, தனியார் நிறுவனங்களின் திறமை, அதிகரிக்கச் செய்தும் தேவையான வரிகளை விதித்தும் சுயமான தொழிலாளர்களை ஆக்கத்தில் பயன்படுத்தியும், தனியார் சேமிப்பு முதலீட்டிற்குப் போதிய ஊக்கிகள் அளித்தும் வேண்டிய வசதிகளைச் செய்யவேண்டும். ஏனெனில் திட்டச்செயல் முறையின்போது கிடைக்கக் கூடிய வெளிநாட்டு நிதி உதவியின் அளவை உறுதியாகக் கணக்கிடுவது மிகவும் கடினமாகும். சான்றாக டிசம்பர் 1971-ல் நடைபெற்ற இந்தோ-பாகிஸ்தான் போரின்போது, இந்தியா எதிர்பார்த்த வெளி நாடுகளிலிருந்து நிதி உதவி கிடைக்கவில்லை. அமெரிக்கா இந்தியாவிற்கு அளித்து வந்த நிதி உதவியைத் திடீரென்று நிறுத்திவிட்டது. இது இந்தியாவிற்கு நடைமுறையில் ஏற்பட்ட மனநெகிழ்ச்சி தரும் அனுபவமாகும்.

வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலைப் பிரச்சினை

நிதியாக்கத்தின் விளைவாக ஏற்படும் பண வீக்கத்தின் மூலம் உள்நாட்டு நிதித் தேவைகளை ஓரளவு நிவர்த்தி செய்ய முடிந்த போதிலும், வெளி நாட்டுச் செலாவணித் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடிவதில்லை. வளர்ச்சி முறைகளிலே வெளி நாட்டுச் செலாவணித் தேவைகள் எப்போதும் பெருமளவில் அதிகரித்தே வருகின்றன. அத் தேவைகள் வருமாறு:- எந்திரம், உதிரிப் பகுதிகள் போன்ற முதல் பொருள்கள், கடன் பராமரிப்புச் செலவு, வெளிநாட்டுத் தொழில் நுணுக்காற்றல் மிக்கவர்கள் (Technicians), மற்ற வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவையான அம்சங்கள், உள்நாட்டில் அதிக வருவாயால் வாங்கும் திறன் அதிகரிப்பதன் விளைவாக ஏற்படும் அதிகமான வெளிநாட்டு நுகர்வுப் பொருள்களின் தேவை போன்ற அம்சங்களால் வெளி நாட்டு உதவியின் தேவை அதிகரித்துக்கொண்டே யிருக்கிறது. எனவே, வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக் குறையை நீக்க ஏற்றுமதி ஊதியத்தை அதிகரிக்க, ஏற்றுமதியை அதிகரித்துத் தேவையில்லாத இறக்குமதிகளைக் குறைக்க வேண்டும். இறக்குமதி

பதிலீட்டுத் தொழில்களை வளர்ச்சியடையச் செய்து வெளிநாட்டுப் பொருள்களின் இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியின் அளவை அதிகரித்து ஏற்றுமதி ஊதியத்தைப் பெருக்கத் திட்டத்தில் வகை செய்ய வேண்டும்.

## 11. பொருளாதாரக் கொள்கைகளை அமைத்தல் (Formulating Economic Policies)

பொருளாதாரத்தின் மொத்த உற்பத்தி முதலீட்டின் அளவினால் மட்டும் நிர்ணயிக்கப் படுவதில்லை. இருக்கும் ஆக்க வளங்களைத் திறம்படப் பயன்படுத்துவதாலும் மொத்த உற்பத்தி அதிகரிக்கிறது. ஆக்க வளங்களைத் திறம்படப் பயன்படுத்தத் தகுந்த பொருளாதாரக் கொள்கைகள் அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும். பொருளாதாரக் கொள்கைகள், பொருளாதார நடவடிக்கை என்னும் இயந்திரத்திற்கு அதிக வேகத்தைத் தரவல்ல எரி சக்தியாகவும் அல்லது நடவடிக்கை களின் வேகத்தைக் குறைக்கத் தடுப்பானாகவும் துணை புரிகின்றன. அக் கொள்கைகளைப் பொருளாதார நடவடிக்கை என்னும் சாலையில் நிலையாக அழைத்துச் செல்லும் பொருளாதாரமென்னும் வாகனத் தின் பெயர்ச்சியைக் கட்டுப்படுத்தும் வழி இயக்க ஆழிக்கு (Steering Wheel) ஒப்பிடலாம். எனவே, ஆற்றல் மிக்க கொள் கைகள் சாதாரணப் பொது முதலீட்டினால் ஏற்படும் வருமான விளைவுகளைப் பெருமளவில் பெருக்கிப் பொருளாதாரத்தை வலுப் பெறச் செய்கின்றன. இதற்கு மாறாக ஆற்றல் குறைந்த தீங்கு விளைவிக்கும் கொள்கைகளால் பொது முதலீட்டின் விளைவாக ஏற்படும் வருமான விளைவுகளைப் பெருமளவில் வலிமை குன்றச் செய்கின்றன. சான்றாக அரசாங்கத்திற்குத் தேவையான நிதியைப் பெற உதவும் வரிக் கொள்கை முதலீட்டை தூண்டச் செய்யவோ அல்லது முதலீட்டை ஒரு துறையிலிருந்து மற்றொரு துறையில் பயன்படுத்தவோ அல்லது தேவையானபடி நுகர்ச்சிப் பாங்கை மாற்றியமைக்கவோ பயன்படுகிறது. கவனமாக அமுலாக்கப்பட்ட சுங்கவரிக் கொள்கை நுகர்வுக்குப் பதிலாக முதலீட்டை அதிகரிக்கவோ, ஆடம்பர நுகர்விற்குப் பதிலாக இன்றியமையாத பொருள்களின் நுகர்வைச் சீராக்கவோ, உள்நாட்டுத் தொழில்களை வளர்ச்சியடையச் செய்யவோ பெருமளவில் பயன்படுகிறது.

குறிப்பிட்ட பொருள்களின் விலைகள் அரசால் குறைக்கப் பட்டால் போதிய ஊதியம் உற்பத்தியாளர்களுக்குக் கிடைக்காத தால், அவர்கள் உற்பத்தியைக் குறைத்து விடுவதால், தேவையான அளவிற்கு உற்பத்தி அதிகரிக்காமலும் போய்விடலாம். அரசு தனியார் துறைக்கு அயல்நாட்டுச் செலாவணி அளிக்காமலோ

அல்லது வெளியார் தொழில் நுட்ப நிபுணர்கள், திறன்கொண்ட தொழிலாளர்கள் வளரும் நிறுவனங்களுக்குக் கிடைக்காமல் செய்து விட்டாலும் வளர்ச்சி தடைபடுகிறது. அதிக நலனை அளிக்க அதிகத் தொழிலாளர்களுக்கு வேலையளிக்கப்பட்டால், தொழிலாளர் உற்பத்தித் திறனைவிடக் கூலிகள் மட்டம் அதிகமாகி விடுகிறது. எனவே, உற்பத்தியிலிருந்து இடைக்கும் சமூக இலாபம், சமூகச் செலவுகளுக்குச் சமமாக இருக்க முடியாது. அரசு தொழில்களை நாட்டுடைமையாக்கத் தீர்மானித்தால் புது அல்லது விரிவான தொழில்களில் தனியார் மூதலீடு ஏற்படாது. தொழில்களைப் பராமரிக்கத் தேவையான செலவினங்களும் குறையும். இதன் விளைவாக நடப்பு உற்பத்தியும் (Current Production) பெருமளவில் குறையும். எனவே, தெளிவில்லாத கொள்கையினால் நாட்டிற்குப் பல்வேறு தீங்குகள் ஏற்படலாம்.

மேற்குறிப்பிட்ட காரணங்களால் பொருளாதார வளர்ச்சித் திட்டம் பரந்த பொருளாதாரக் கொள்கைகளை உள்ளடக்க வேண்டும். இக் கொள்கைகள் நாட்டின் வளர்ச்சியையும் அதற்கேற்ற குறிக்கோள்களையும் மேம்படுத்தப் பெருந்துணை புரிகிறது. இக் கொள்கைகள் தெளிவாகத் தொடர்ந்து ஆராயப்பட்டு, காலந்தோறும் சூழ்நிலைகேற்பத் திருத்தியமைக்கப்பட வேண்டும். இக் கொள்கைகள் திட்டத்தின் மற்ற அம்சங்களைப் போலவே காலத்திற்குக் காலம் நெகிழ்ச்சியடையத் தக்கதாய் அமைய வேண்டும். சான்றாக இறக்குமதிக் கொள்கை காலந்தோறும், ஏற்றுமதி ஊதிய மாற்றத்திற்கேற்பவும், உள்நாட்டுப் பண அளிப்பு, விலைமட்டம் ஆகியவைகளுக்கேற்பவும் வெளிநாட்டுச் செலாவணி இருப்புகளுக்கு ஏற்றாற்போலவும் சரி செய்யப்பட வேண்டும். வளர்ச்சித் திட்டங்களுக்கு ஏற்றாற்போல் அமைய வேண்டிய அடிப்படைக் கொள்கைகளில் சிலவற்றைக் கீழே ஆராயலாம்.

## வளர்ச்சிக் கொள்கைகள்
## (Development Policies)

### (1) வரவு-செலவுத் திட்டக் கொள்கை (Budgetery Policy)

இக் கொள்கை நடப்புச் செலவுக்கு மேல் நடப்பு வருவாய் கணிசமான அளவு அதிகரிக்கச் செய்ய முயலுகிறது. இதனால் திட்டத்தில் குறிப்பிட்டுள்ள மூலதன மூதலீடுகள் ஏற்பட வகை கிடைக்கிறது. அரசின் வருவாய், செலவினங்களை, விளக்கும் முழு வரவு செலவுத் திட்டம், பட்ஜெட்டிலடங்காத நடப்பு மூலதனம், பட்ஜெட்டிலடங்கிய மூலதனம் ஆகியவைகளுக்கிடையே தகுந்த சமநிலையை ஏற்படுத்த வகை செய்கிறது. நடப்புச் செலவினங்கள் வீணானவைகளாக இருந்தால் உடனே நீக்கப்பட வேண்டும்.

## (2) வரிக் கொள்கை
## (Tax Policy)

வரிக் கொள்கை அரசிற்குத் தேவையான வருவாயை அளிக்கத் தக்கதாக இருக்க வேண்டும். வரியளிக்கும் சக்தியின்படி வரிச்சுமையைப் பொதுவாகப் பங்கிடவும் வகைசெய்ய வேண்டும். மேலும், அது வீணான ஆடம்பர நுகர்வைக் கண்டித்துச் சேமிப்பு, வேண்டிய முதலீடு இவைகள் அதிகரிக்க ஊக்கமளிக்க வேண்டும். வரிக் கொள்கையின் மிகவும் கடுமையான பணி வரியளிக்கும் சக்திக்கும், சேமிப்பு, முதலீடு இவைகளைப் போதிய அளவு அதிகரிப்பதற்குத் தேவையான ஊக்கத்திற்கும் இடையே வரி உடன் இயைவை ஏற்படுத்துவதாகும். இதற்கு உணர்வாற்றலும் கவனமும் அதிகம் தேவை.

## (3) கடன் கொள்கை
## (Credit Policy)

இக் கொள்கை பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளுக்குக் குறைந்த வட்டிக்கு போதிய அளவு கடனையளிக்க வகைசெய்கிறது. வளர்ந்து வரும் நாடுகளில் வேளாண்மை, சுயதேவைக் கடன்கள் ஆகியவைகளுக்கு அதிக வட்டி கிடைப்பதால் இருக்கும் மூலதனம் இக் கடன்வகைகளிலேயே சுழல்கிறது. செய்பொருள் தொழில்களுக்கு அதிகக் கடன் கிடைப்பதில்லை. எனவே வேளாண்மை, சுயதேவைக் கடன்கள் ஆகியவைகளின் அளிப்பைப் போதுமான அளவு அதிகரிக்கத் தகுந்த புதிய கடன் நிறுவனங்களை ஏற்படுத்தி நியாயமான வட்டிக்குக் கடன் கிடைக்குமாறு செய்ய வேண்டும். இதன் விளைவாக மூலதனம் ஆக்க வேலைகளிலேயே பெருமளவு சுழலும்.

## (4) வெளி வர்த்தகமும், நாணய மாற்றுக் கொள்கையும்
## (Foreign Trade and Exchange Policy)

இக் கொள்கை வெளிநாட்டு உதவியின் மூலம் பெற்ற பணத்தோடுகூட, நடப்பு இறக்குமதி, வர்த்தகமல்லாத அம்சங்கள் ஆகியவைகளுக்காகக் கொடுக்க வேண்டிய வெளிநாட்டுச் செலாவணியைப் போதுமான அளவு பெற வகை செய்கிறது. உள்நாட்டுப் பணத்தின் மதிப்பு, பொருள் போன்ற அம்சங்களோடு சமமாயிருப்பது அரசு மாற்று வீதத்தில் உண்மையாக அறியப்பட வேண்டும். நிலையான மாற்றுவீதம் இருந்தால் செலவுக் கணக்கீடுகளும், வளங்களின் ஒதுக்கீடும் சீரான முறையிலிருக்கும். வாங்கப்பட்ட வெளிநாட்டுக் கடனின் அளவை துல்லியமான முறையில் கணக்கிட

வேண்டியது அவசியமாகும். மேலும் காலாவதியாகும் கடன் பத்திரங்கள், வட்டி வீதங்கள் ஆகியவைகளைப் பற்றிய ஒரு சரியான கணக்கீடு தேவையாகும். இவைகளை அறிந்தால்தான் வெளிநாடு களிலிருந்து பெறும் ஏற்றுமதி ஊதியத்தால் எதிர் காலத்தில் கடன் களைப் பராமரிக்க முடியுமா என்பதை உறுதிப்படுத்த முடியும்.

### (5) சுங்கவரிக் கொள்கை
### (Tariff Policy)

இறக்குமதி ஏற்றுமதிக் கொள்கைகளை ஒருங்கிணைக்கும் ஆற்றல் வாய்ந்த சுங்கவரிக் கொள்கை தேவையில்லாத பொருள்களின் இறக்குமதியைக் குறைக்கவும், இன்றியமையாத பொருள்களின் இறக்குமதியைப் பராமரிக்கவும் துணைபுரிய வேண்டும். சுங்கவரிக் கொள்கை இன்றியமையாத நுகர்வு, முதல் பொருள்கள், கச்சாப் பொருள்கள், உதிரிப் பகுதிகள், போன்றவைகளின் இறக்குமதியை ஊக்குவிக்குவிக்கலாம். ஆடம்பரப் பொருள்களின் இறக்குமதியைத் தடுக்க வேண்டும். அப்போதுதான் வளர்ச்சியடையா இளந் தொழில் (Infant Iudustries) களுக்குச் சரியான பாதுகாப்புக் கிடைக்கும். இதன் விளைவாக இத் தொழில்கள் வலுப்பெற்று முழு வளர்ச்சி அடைந்தபின் தொழிற் பாதுகாப்பு (Protection) இல்லாமலே தொடர்ந்து மேலும் வளர்ச்சியடையும்.

### (6) விலைக் கொள்கை
### (Price Policy)

விலைக் கொள்கை சந்தையில் சுதந்திரமாக விற்பனையாளர்கள் போட்டி விலைகளை நிலைநாட்ட வகை செய்யவேண்டும். பொது மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு சர்வாதீன விலைகள் சீர்படுத்தப் படவேண்டும். வர்த்தகர்கள், உற்பத்தியாளர்கள் மேற்கொள்ளும் கூட்டு ஒப்பந்த விலை (Collusive Price) நடவடிக்கைகள் கடுமையாகக் கண்டிக்கப்படவேண்டும். அரசு நிறுவனங்களின் விலைகள் பொதுவாக உற்பத்திச் செலவைப் பெறும் வகையிலோ அல்லது சிறிதளவு இலாபத்தைக் கொடுப்ப தாகவோ இருக்கலாம். இன்றியமையாத பொருள்களை விற்பதி லிருந்து மிகக் குறைந்த இலாபத்தையே எதிர்பார்க்கவேண்டும். சர்க்கரை, புகையிலை, மதுபானம், போன்ற அதிக முக்கியமில்லாப் பொருள்களிலிருந்து ஓரளவு அதிகமான இலாபத்தை உற்பத்தி யாளர்கள் பெறும்வகையில் விலைக் கொள்கை அமையவேண்டும். பணவீக்கம் பெருமளவில் ஏற்படாவண்ணம் தடுக்கவும் தகுந்த விலைக் கொள்கையை நடைமுறைப்படுத்த வேண்டும். சாதாரண மக்களுக்கு இன்றியமையாத தரமான பொருள்கள் குறைந்த

விலைக்குக் கிடைக்கத் தக்க வகையில் விலைக் கொள்கை அமைவது போற்றத்தக்கதாகும். விலைகள் ஒரு குறித்த அளவுக்குக் கீழ் குறைந்து விடாமல் அரசு உதவிக்கொடைகள், மானியங்கள் போன்றவைகளை அளித்து உற்பத்தியாளர்களை ஊக்குவிக்க வேண்டும். சான்றாகத் தமிழக அரசு உழவர்களுக்கு உதவிக் கொடைகளை அளித்து உற்பத்தியை ஊக்குவிக்கவும், ஏழைகளுக்குக் குறைந்த விலையில் உணவுப் பொருள்கள் கிடைக்கவும் வகை செய்தது.

## (7) கூலிக் கொள்கை
## (Wage Policy)

கூலிக் கொள்கையை நடைமுறையில் தொழிலாளர்களின் உரிமைகளைப் பாதுகாக்கத் தனியார் துறையில் மட்டும் பெருமளவில் பயன்படுத்தப்படவேண்டும். கூலிக் கொள்கை தொழிலாளர்களுக்குக் கூட்டுப் பேர உரிமையை அளித்து முதலாளிகளின் கடும் சுரண்டலைத் தடுத்துப் போதிய குறைந்த பட்சக்கூலியை ஏற்படுத்த வகை செய்யவேண்டும். மேலும், சமூக நிலைக்கேற்ப வருவாய்த் தரங்களைப் பணியாளர்களுக்கு உறுதி செய்யவேண்டும். அக்கொள்கை தொழிலாளரின் உற்பத்தித் திறனுக்கு மேல் தொழிலாளர்களுக்குக் கூலியை அளிக்க வற்புறுத்தக் கூடாது. திறமையும், தேவையான நற்பண்பும் கொண்ட பணியாள்களுக்குப் பொது அரசு துறைகளில் போதிய ஊதியம் அளித்து, அவர்களைத் துறையின்பால் ஈர்த்து, நிலையாக இருக்கச்செய்யக் கூலிக்கொள்கை வகைசெய்ய வேண்டும். அவர்களின் அந்தஸ்திற்கேற்றபடி அவர்கள் தங்கள் குடும்பங்களைக் காப்பாற்றும் சக்திபெறும் வகையில் அவர்களுக்குக் கூலிகள் அளிக்கப் படவேண்டும். அவர்களிடம் சுரண்டல், ஊழல் போன்ற நடவடிக்கைகள் குறையத் தக்க வகையில் அவர்களுடைய முறையான வருவாயை அதிகரிக்கவேண்டும். மேலும், தகுதியுள்ளவர்களுக்கு அதிக வருவாய் அளித்து, தகுதியில்லாதவர்களைப் பணியிலிருந்து விலக்கவேண்டும். பொதுப்பணியல்லாத மற்ற அரசு நிறுவனங்களில் கூலிகள், உற்பத்தித் திறனின் அடிப்படையில் அமைந்து தனியார் துறை அளிக்கும் கூலிகளுக்குச் சமமாக இருக்கவேண்டும்.

## (8) மனித சக்திக் கொள்கை
## (Man Power Policy)

தேவையான தொழில் திறமையும் ஆக்கசக்தியும் கொண்ட பணியாள்களின் அளிப்பை அதிகரிக்கத் தக்கவகையில் மனித சக்திக் கொள்கை அமையவேண்டும். தொழிலாளர்களின் சக்தியை முழு அளவில் தக்கமுறையில் பயன்படுத்த வகையேற்படவேண்டும்.

கல்வித் திட்டம், மனிதச் சக்திக் கொள்கையுடன் ஒன்றுசேர்க்கப் பட்டுத் தேவையான தொழில் திறமையில் தொழிலாளர்கள் பயிற்சிபெற, வாய்ப்புகளை அளித்து ஊக்குவிக்கவேண்டும். பணிகள், தொழிற்கல்வி, முதியோர்கல்வி, மற்றத்துணைப் பயிற்சி களில் பயிற்சிபெறுவோரை ஊக்குவிக்கத் திட்டங்கள் மேற்கொள் ளப் படவேண்டும். உள்ளூர், வெளியூர், சிறுபான்மை வகுப்பினர் என்ற பேதங்கள் இன்றி எல்லோருக்கும் பயிற்சியும், கல்வி வசதியும் அளிக்கப்பட மனித சக்தித் திட்டம் (Manpower Planning) உருவாக்கப்படவேண்டும். இதன் மூலம் சில இன்றியமையாத தொழில் துறைகளில் காணப்படும் நுட்பத் தொழில் ஆற்றல் கொண்டவர்களின் பற்றுக் குறையை நீக்கித் தொழிற்கல்வி பெற்ற எல்லோருக்கும் வேலைவாய்ப்புக் கிடைக்க வகை செய்யவேண்டும். பொதுக்கல்வி கற்றவர்களும் வேலையின்மை, வேலைக்குறைவு போன்றவைகளால் தொல்லைப்படுவது குறைக்கப்பட வேண்டும். தொழிலோடு இயைந்த கல்வியையே (Job-oriented education) நாட்டில் பரவலாக்கச் செய்யவேண்டும். அப்போதுதான் சமுதாயத்தில் எல்லோருக்கும் தகுதிக்கேற்ற வேலைவாய்ப்புகள் கிடைத்து, பாதுகாப்பும் அமைதியும் ஒழுங்கும் ஏற்படும்.

### (9) நாட்டுடைமைக் கொள்கை (Nationalisation Policy)

நாட்டுடைமைக் கொள்கை தெளிவாகவும், குழப்பமில்லா மலும் விளக்கமாய் அறிவிக்கப்பட வேண்டும். அரசின் உள்ளக் கிடக்கை எதுவாக இருந்தாலும் அது மக்களுக்குத் தெளிவாக விளக்கப்பட வேண்டும். இருந்துவரும் சில நிறுவனங்களையோ அல்லது தொழில்களையோ அரசு நாட்டுடைமையாக்கக் கருதினால் அக் கொள்கை மக்களிடம் வெளிப்படையாக அறிவிக்கப்பட வேண்டும். அப்போதுதான் தனியார் தொழில் துணிவோரும், நிறுவனங்களும், வெளிநாட்டு முதலீட்டாளர்களும் அக் கொள் கைக்கு ஏற்றாற்போல் தங்கள் முதலீடுகளைத் தீர்மானிக்க முடியும். திடீரென்று முறையில்லாமல் சில தொழில்கள் தேசியமயமாக்கப் பட்டால் அத் தொழில்களில் சீர்குலைவும், திறமையின்மையும் அதிகரிக்கும்.

மேல் குறிப்பிடப்பட்டுள்ள தேர்ந்த சில பரந்த பொருளா தாரக் கொள்கைகளோடுகூட வேறு பல கொள்கைகளும் தேவையானபடி சரிசெய்யப்பட்டு, பல்வேறு சூழ்நிலைகளுக்குத் தக்கபடி சீராக்கப்பட வேண்டும். அத்தகைய சீராக்கமும், நடைமுறையும், தொழில்நுட்பத் தகுதியும் பொருளாதாரவாத நுணுக்கமும் பெற்றுள்ளவர்களால்தான் அமைக்க முடியும்.

இதை அனுபவமில்லா அரசியல் தலைவர்களிடம் பெரும்பாலும் எதிர்பார்க்க முடியாது.[1] எனவே, இத் துறையில் அனுபவமும் ஆற்றலும் கொண்ட பணியாள்கள் (Professional Staff) பொருளாதாரக் கொள்கைகளை உருவாக்கி அதைத் தீர்மானிப்பவர்களிடம் தங்களுடைய பரிந்துரைகளுடன் சமர்ப்பிக்க வேண்டும். கொள்கை அமுலாக்கப்பட வேண்டிய காலம், அதன் விவரங்கள், அதை நடைமுறைப் படுத்தும் வகை, ஆகியவைகளைப் பற்றி விவரமாகப் பரிந்துரைகளில் குறிப்பிட வேண்டும். இவ்வாறு உருவாக்கப்பட்ட கொள்கையைத் தீர்மானிப்பவர்கள் அக் கொள்கையால் பாதிக்கப்படக்கூடிய வகுப்பினரிடமிருந்து அபிப்பிராயங்களையும், கருத்துரைகளையும் வரவழைத்து அவைகளைப் பரிசீலிக்க வேண்டியது மிகவும் விரும்பத் தக்கதாகும். இவ்வாறு இத் துறையில் சுய ஆற்றல் மிக்கவர்களால் தயாரிக்கப்பட்டு, அதில் சம்பந்தப்பட்ட வகுப்பினரின் எதிரெதிர் எண்ணங்களும் வரவழைக்கப்பட்டு, கொள்கையைத் தீர்மானிப்பவர்கள் நல்ல தீர்ப்பையும், நல்லெண்ணத்தையும் தோற்றுவிக்க வகை செய்ய வேண்டும். இதற்காக எல்லாவகைக் கொள்கை ஆயுதங்களையும் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

## 12. திட்டத்தைப் பரிசோதித்தலும் கையாளுதலும்
## (Testing and Adopting The Plan)

கவனமாகத் தயாரிக்கப்பட்ட திட்டம் ஏராளமான நகல்களின் மூலம் திருத்தப்பட வேண்டும். இறுதிப் பார்வைக்கும் தீர்ப்புக்கும் திட்டம் அனுப்பப்படுமுன்பே திருத்தங்கள் செய்யப்பட்டுவிட வேண்டும். கடைசிப் பார்வைக்கும் சோதனைக்கும் அரசின் உயர் மட்டத்திற்கு வந்தபின் திட்டம் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும். இக் கட்டத்தில்தான் அரசியல், நிர்வாக, மேற்பார்ப்பு ஆகிய சோதனைகள் நடத்தப்படுகின்றன. இக் கட்டத்தில்தான் முக்கிய குறிக்கோள்கள் ஒவ்வொன்றும் ஒத்தியைகின்றனவா என்பதைக் கண்டறிய வேண்டும். இத் திட்டம் போதுமான முன்னேற்ற ஆர்வம் கொண்டுள்ளதா என்பதைச் சோதித்து, அது நாட்டின் சக்திக்கேற்றதாக உள்ளதா அல்லது அதற்கு மேலும் சாதனையைப் பெறமுடியுமா என்பதைக் கண்டறிய வேண்டும். திட்டங்களும் கொள்கைகளும் குறிக்கோள்களுடன் ஒத்து இயைகின்றனவா என்பதையும் அறிய வேண்டும். வெற்றிகரமான நடைமுறை வசதிகளைப்பெறத் தேவையான கொள்கைகளைப் பயன்படுத்தத் திட்டம் வகை செய்துள்ளதா என்பதையும் சோதிக்க வேண்டும்.

[1] B. கிஷோர், B. P. சிங், 'திட்டத்தின் கண்ணோட்டத்தில் இந்தியப் பொருளாதாரம்' ப. 94.

சிறப்புத் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களின் பற்றுக்குறையை நீக்கவும் திட்டம் வகை செய்துள்ளதா என்பதையும் ஆராய வேண்டும். வளங்களை முழு அளவில் பயன்படுத்தி நாட்டில் 'பொருளாதாரத்தசைகளை' வளர்க்கத் திட்டத்தில் செயல்முறைகள் தீட்டப்பட்டுள்ளனவா என்பதும் ஆராயப்பட வேண்டும். இவ்வம்சங்கள் அனைத்தும் முக்கியமானவைகளாய் இருந்தாலும் அவைகளைக் கண்டறிவது மிகவும் கடினமாகும். எந்த அளவு உள்நாட்டுச் சேமிப்பு, பற்றுக்குறை நிதியாக்கம், வெளிநிதியுதவி, திட்டத்திற்குக் கிடைக்குமென்பது உறுதியாகக் கூறமுடியாது. திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நிர்வாக அமைப்பின் திறமையை உறுதியாகவும், துல்லியமாகவும் கணக்கிட முடியாது. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவைகள் வருமாறு :—

அனுபவமும், ஆற்றலுமில்லாத தலைவர்கள், சக்தியற்ற அமைப்பு, நேரத்தை வீணடிக்கும் திறமையற்ற செயல் முறைகள், துறைகளில் போதிய அளவு பணியாட்கள் இன்மை, தகுந்த ஊதியமும், நெறிமுறையும் இல்லாத பொதுப்பணி (Civil Service) போன்ற பல்வேறு பிற்பட்ட பொது இயல்புகள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் வளர்ச்சித் திட்டங்களைத் திறம்பட அமுலாக்குவதற்கு பெருந்தடைகளாக உள்ளன. இத்தகைய இன்னல்களையும், அபாயங்களையும் தீர அறிந்து அவைகளைச் சரி செய்யத் தீவிரமாக வழி முறைகளை மேற்கொண்டாலன்றிச் செய்யப்படும் முதலீடு பெருமளவில் வீணடிக்கப்பட்டுவிடும். மிகக் குறைந்த பொருளாதார வளர்ச்சியையே அடைய முடியும். வளர்ச்சி பெறவேண்டுமென்ற ஆர்வத்தோடு கூடவே திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நிர்வாக அமைப்பும், அரசின் பணிகளும் சக்திபெறச் செய்து சீராக்கப்பட வேண்டும் என்ற உணர்வும் உடனடியாக ஏற்படவேண்டும். இதற்கு அரசு துறைகள், நிறுவனங்கள், ஆகியவைகளில் சீரமைப்பு நடவடிக்கைகள் தீவிரமாக மேற்கொள்ளப்படவேண்டும். சான்றாக அமைச்சரவையை மாற்றியமைத்தல், அரசியல் செல்வாக்கிற்குப் பதிலாகத் திறமை, தகுதி ஆகியவைகளின் அடிப்படையில் தலையாய பொறுப்புள்ள பணிகளுக்குப் பணியாள்களை தேர்தெடுக்க வேண்டும். நிர்வாக, சட்ட, ஒழுங்குக் கட்டுப்பாடுகளை எளிமையாக்க வேண்டும். பொறுப்புகளையும் அதிகாரங்களையும் பெருமளவில் பரவலாக்குதல், அரசு ஊழியர்களின் ஊதியத்தை அதிகரித்தல் போன்ற நடவடிக்கைகளையும் மேற்கொள்ளலாம். அத்தகைய நடவடிக்கைகள் நாட்டில் தீவிர அரசியல், நிதி, போன்ற பிரச்சினைகளை ஏற்படுத்தும். மேலும் தலைமைகளின் தரம், மனப்பக்குவம், ஆகியவைகளையும், வளர்ச்சித் திட்டத்தின் சாத்தியக் கூறுகளையும் சோதிக்குமென்பதில் ஐயமில்லை. ஆனால் இத்தகையு

நடவடிக்கைகளை மேற்கொள்ளாவிட்டால் திட்டத்தின் குறிக்கோள்களைச் சாதித்து மகத்தான வெற்றியை அடையமுடியாது.

## 13. திட்டத்தில் மனிதவளங்களின் முக்கியத்துவம்

டாக்டர் H. W. சிங்கர் (Singer) அவர்கள் சக்தி வாய்ந்த பொருளாதாரத் திட்டத்தை அடைய வளர்ந்து வரும் நாடுகள் பின்பற்ற வேண்டிய ஒருங்கிணைந்த வழி முறைகளை மிகத் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.[1] அவைகளை மூன்று சிறப்பான பகுதிகளாகப் பிரிக்கலாம்.

(1) பேரளவு முதலீட்டிற்கு முன் மேற்கொள்ள வேண்டிய முதலீட்டு முன் நடவடிக்கைகளின் (Pre-investment Work) முக்கியத்துவம்.

(2) வளர்ந்துவரும் (Developing) பொருளாதாரங்களுக்கும், உண்மையில் வளர்ச்சிகுறைந்த (Truly underdeveloped) பொருளாதாரங்களுக்குமிடையே உள்ள தீவிர வேறுபாட்டை ஆராய்தல்.

(3) பொதுத்துறையில் நிதி முதலீடுகளை மட்டும் திட்டமிடுவதோடு மனிதவளங்களின் பயனை அறிந்து திட்டமிடுதலும், மிகவும் இன்றியமையாததாக விளங்குகிறது.

### முதலீட்டு முன்நடவடிக்கைகளின் முக்கியத்துவம் (Importance of Preinvestment work)

முதலீட்டு முன் நடவடிக்கையென்பது பொருளாதார வளர்ச்சிக்கு அடுத்தடுத்துத் தேவைப்படும் அடிப்படையைத் தயாரிக்கும் பல்வேறு ஆரம்ப நடவடிக்கைகளைக் குறிக்கிறது. அவைகள் பின்வருமாறு: — நாட்டின் இயற்கைவளங்களின் அளவைக் கணக்கீடு செய்தல்; தொழில் துறையின் சாத்தியக்கூறு ஆய்வுகளை மேற்கொள்ளுதல்; பணிபுரியும் தொழில், வேளாண்மைத் துறை, மக்களுக்குப் புதுத் தொழில் திறன், ஆக்க அறிவு, போன்றவைகளைக் கற்பித்தல்; தேசிய, பிராந்திய நிறுவனங்களைத் தோற்றுவித்தல்; வளர்ச்சித் திட்டத்தைச் சீரமைத்தல் ஆகியவைகளாகும். இத்தகைய நடவடிக்கைகள் பொருளாதாரப் பெருக்கம், முதலீடு செய்த ஒவ்வொரு மூலதன அளவின் உற்பத்தித்திறனை அதி

[1] டாக்டர். H. W. சிங்கர் (Singer) 'பன்னாட்டு வளர்ச்சி: வளர்ச்சியும் மாற்றமும்' ப 18.

கரித்தல் ஆகியவைகளை அடுத்தடுத்து மேலோங்கச் செய்யச் சுலப மாக வழிவகுக்கிறது. துரதிஷ்டவசமாகப் பேரளவு முதலீட்டுக்கு முன் இத்தகைய நடவடிக்கைகளை வளர்ந்துவரும் நாடுகள் எப் போதும் புறக்கணித்து விடுகின்றன. கடனளிக்கும் நாடுகளைப் போலவே ஏழ்மை நாடுகளின் அரசுகள் பொருளாதார விளைவுகளைத் திடீரென்று மிக விரைவாகக் காண்பிப்பதற்குத் தொல்லைப்படுத்தப் படுகின்றனர். இதன் விளைவுகள் உடைந்த அணைக்கட்டுகளிலும், தகுதியில்லாத நிலத்திற்கு நீரளிக்கும் நீர்ப்பாசனப் பணிகளிலும், போதிய போக்குவரத்து வசதிகள், மூலப்பொருள்கள், பயிற்சி பெற்ற தொழிலாளர் ஆகியவைகள் இல்லாத ஆலைகளிலும் மிகத் தெளிவாகக் காணலாம்.[1]

## 'வளர்ந்துவரும் நாடுகளுக்கும்' 'உண்மையில் பின்தங்கியிருக்கும் நாடுகளுக்கு'மிடையே உள்ள வேறுபாடு

பொருளாதார வளர்ச்சிக் கருத்துகளில் 'வளர்ந்துவரும்' நாடுகள், 'உண்மையிலேயே பிற்பட்ட நிலை'யிலிருக்கும் நாடுகள் ஆகிய இரு வேறுபட்ட நாடுகளுக்கிடையே உள்ள பேதங்கள் விளக்கப்படுவதில்லை. 'வளர்ந்துவரும்' நாடுகளில் வளர்ச்சி நடவடிக்கைகளை உண்டாக்க இன்றியமையாததாக விளங்கும் குறைந்தபட்சத் தொழிலை மேம்படுத்தும் அமைப்பு (Industrial infrastructure), நிர்வாகத்துறை, குறைந்தபட்ச அடிப்படை, இயற்பொருள்சார் (Physical) மனித வளங்கள் ஆகியவைகள் இருப்பதால் இவைகள் ஓரளவு வளர்ச்சியைச் சாதித்து வளர்ச்சிப் பாதையில் மேல் நோக்கிச் செல்ல வாய்ப்பைப் பெற்றுள்ளன. சான்றாக இந்தியா, பாகிஸ்தான், சில லத்தீன் அமெரிக்க நாடுகள் ஆகியவைகள் அங்காடி நடவடிக்கைகளிலும், சமூக மாற்றத்தைப் பெற்றுள்ள மனித வளங்களின் செயல்முறைகளிலும் குறைந்த பட்ச முன்னேற்றத்தைப் பெற்றுள்ளதால், இவைகளை 'வளர்ந்து வரும் நாடுகள்' என்று கூறலாம். ஆனால், மற்ற ஏராளமான பிற்பட்ட நாடுகளில் இத்தகைய குறைந்தபட்ச அமைப்புகள் இல்லாததால் இவைகளை 'உண்மையிலேயே வளர்ச்சி குறைந்த பொருளாதாரங்கள்' எனலாம். இந் நாடுகளில் ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டம் எந்த அளவு ஒரு குறிப்பிட்ட துறையில் செய் யப்படும் முதலீடு அதிகபட்சப் பொருளாதார பலன்களை அளிக்கும் என்பது ஆராயப்படவேண்டும்.

[1] H. W. சிங்கர், 'பன்முட்டு வளர்ச்சி: வளர்ச்சியும் மாற்றமும்,' ப. 21.

## நிதிமுறைமுதலீடு, உண்மை வளங்களில் முதலீடு ஆகியவைகளின் முக்கியத்துவம்

இன்றைய பெரும்பாலான வளர்ச்சி குறைந்த நாடுகளில் 'கலப்புப் பொருளாதார முறை' பின்பற்றப்படுவதால், இந் நாடுகளில், பொதுத்துறை நிதிவழி முதலீட்டோடு (Financial investment) கூட, பொது, தனியார் துறைகளில் பயன்படுத்தப்படும் மொத்த உண்மை (Real) வளங்களிலும் சீரான திட்டம் தேவைப்படுகிறது. பொதுத்துறையில் சில தொழில்களும், தனியார் துறையில் மற்றப் பிரதான தொழில்களும் வளர்ச்சியடைந்து வரும் பொழுது, பொதுத் துறைத் தொழில்களில் முதலீட்டை அதிகரித்தால் வளங்கள் தனியார் துறையிலிருந்து பொதுத் துறைக்குப் பெயர்ச்சியடைந்து தீயவிளைவுகள் ஏற்படும். இதன் விளைவாக தனியார் துறையில் திறமையுடன் பயன்படுத்தப்பட்டுப் பொருளாதாரத்தில் சமச்சீரான வளர்ச்சியை நிலைநாட்ட முடிவதில்லை, டாக்டர் சிங்கர் அவர்கள் உண்மைத் (மனிதவள) திட்டத்திற்கும். (Real planning) நிதிமுறை திட்டத்திற்கும் (Financial Planning) தகுந்த ஒருங்கிணைப்பு இருக்க வேண்டுமென்று பெரிதும் வலியுறுத்தியுள்ளார். இத்தகைய ஒருங்கிணைந்த திட்டத்தால் வளர்ந்து வரும் நாடுகளில் பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் சிறந்த பலனை அளிக்குமென்பதில் ஐயமில்லை.

பேராசிரியர் J. K. கால்பிரேய்த் (Galbraith) குறிப்பிடுவது போல், "திட்டத்தின் வெற்றிக்குத் திறமையான அரசு, கல்வி, சமூக நிதி ஆகியவைகள் மிகவும் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. அநேக நாடுகளில் வளர்ச்சியின் தடைகளைச் சரியாக ஆராயாமல் விட்டுவிடுவதே பெரும் பிரச்சினைகளை ஏற்படுத்துகிறது. இத்தகைய சமூக, பொருளாதாரத்தடைகள் நீக்கப்படும்வரைக்கும் மூலதன முதலீடு, தொழில் நுட்ப உதவி ஆகியவைகளால் மிகக் குறைந்த அளவு பொருளாதார பலனே கிட்டும். திட்டங்கள் காகிதங்களில் பெரியவைகளாக இருந்தபோதிலும் விளைவுகளை ஏற்படுத்துவதில் மிகச் சிறியவைகளாக உள்ளன." [1] எனவே, ஒரு வளர்ச்சித் திட்டம் முழு வெற்றியடையப் பண்பாட்டு அம்சங்களும், பண்புகளும், மக்களின் மன நோக்கும் இன்றியமையாதவைகளாய் விளங்குகின்றன.

[1] J. K. கால்பிரேய்த் (Galbraith), 'நீண்டகாலத் தோற்றப் பொருளாதார வளர்ச்சி' ("Economic Development in Persective") 1962 ப. 9-10.

## திட்டஅமைப்பு
## (Planning Framework)

மேற்குறிப்பிட்ட திட்ட நடவடிக்கைகளை நடைமுறைப் படுத்த (Plan Execution) சில இன்றியமையாத அம்சங்கள் தேவையாகும். அவைகளாவன:—நடைமுறைக்கேற்ற குறிக்கோள்களும் திட்டங்களும், சிறப்பாற்றல் மிக்க அரசு, உறுதியும் ஊக்கமும் கொண்ட நல்ல தலைமை (Good Leadership), பொறுப்புமிக்க எதிர்க்கட்சி அரசியல் தலைவர்கள், மிகத் திறமையான பொது நிர்வாகம், வளர்ச்சியில் தனியார் துறையின் தகுந்த பங்கேற்பு போன்றவைகளாகும். இந்த இன்றியமையாத (Essentials) அம்சங்களைச் சாதிப்பதற்குப் பொருளாதார விவகாரங்களில் அரசின் தலையீடு இன்றியமையாததாக விளங்குகிறது. பொருளாதாரத்திட்டங்களை அமுலாக்குவதில் எந்த அளவு அரசுதலையிட வேண்டுமென்பது ஒரு தீராப் பிரச்சினையாகும். பல் வேறுநாடுகளில் அவைகளின் வசதிக் கேற்ப நாடுகள் சில திட்ட முறைகளைக் கையாண்டு வருகின்றனர். அவைகளை இனி ஆராய்வோம்.

## திட்டத்தின் நுட்ப முறைகள்
## (Techniques of Planning)

### I. வழி காட்டல் திட்ட முறையும் ண்டுதல் திட்ட முறையும்
### (Planning by Direction and Planning by Inducement)

திட்டத்திற்கு வளங்களைச் சேகரிப்பதற்காக இருவகைத் திட்டமுறைகள் உள்ளன. அவைகளைப் பேராசியர் W. A. லூயிஸ் அவர்கள் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகிறார்.[1] வழிகாட்டல் திட்டமுறை (Planning by Direction) என்பது சோவியத் ரஷ்யா போன்ற சமதர்ம சமுதாயங்களில் ஒரு ஒருங்கிணைந்த பகுதியாகவேயிருக்கிறது. இதன் அடிப்படை நிபந்தனை பொருளாதார விவகாரங்களில் அரசு நேரடியாகத் தலையிட்டு வளர்ச்சியை அதிகரிக்க அனுமதிப்பதாகும். இதனால் தலையிடாக் கொள்கை முழு அளவில் கைவிடப்பட்டுவிடுகிறது. இம் முறையில் ஒரு மத்திய அமைப்பே திட்டத்தை உருவாக்கி, வழி நடத்தி நடைமுறைப்படுத்துகிறது. ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்ட இலக்குகள், துறைச்சிறப்பிடங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் திட்டம் அமுலாக்கப்படுகிறது. அத்தகைய திட்டம் முழு

[1] W. A. லூயிஸ் 'பொருளாதாரத் திட்டத்தின் கோட்பாடுகள்' ப. 128.

அளவினதாக அமைந்து பொருளாதாரத்தின் எல்லா துறைகளையும் உள்ளடக்குகிறது. டாக்டர் ஆஸ்கர் லன்ஜ் குறிப்பிடுவதுபோல், "ஒரு தேசியத் திட்டத்தில் சமதர்ம சமுதாய முறையைக் கொண்ட துறைகளில் வழிகாட்டும் முறையே பெரும்பாலும் பின் பற்றப் படுகிறது. தேசியத் திட்டத்தின் இலக்குகளும், நிதி ஒதுக்கீடும், பல்வேறு அமைச்சரகங்களும், தொழில் நிறுவனங் களும், எந்த அளவு மத்திய அமைப்பின் உத்தரவுகளைச் செயல் படுத்த வேண்டுமென்று அறிந்திருக்க வேண்டும். திட்டத்தின் வழிகாட்டிகளை அவைகள் செயல்படுத்துவது கடமையாகும்." தனியார் தொழில், வேளாண்மை, வங்கித்தொழில், போக்கு வரத்து ஆகிய தொழில்களை அரசு நாட்டுடமையாக்கித் தன்னதி காரத்திற்குள் அடக்கிவைத்துக் கொள்கின்றது. அத்தகைய அதிகாரக்குவிப்பு அரசிடம் இல்லாவிட்டால் திட்டத்தின் பணிகளைச் செவ்வனே நடைமுறைப்படுத்த முடியாது. திட்டத்தின் இலக்குகள். உண்மையகவே சாதிக்கப்பட உத்தரவாதமில்லாமல் வீண் ஆர்வங்களாகவே இருந்துவிடும்.[1] ரஷ்யாவில் அரசு இத் திட்ட முறையையே எல்லாத் துறைகளிலும் பின்பற்றி வருகிறது. சான்றாக பால் உற்பத்திக்கு அரசு உதவிக் கொடைகள் அளிக்கிறது. தேவைப்பட்டால் பால் உற்பத்தியை அதிகரிக்கச் சட்டமும் இயற்றுகிறது. அரசு பண்ணைகளும், அரசாங்கத்தால் ஏற்படுத்தப்படுகின்றன. இத் திட்ட முறைகளால் கூடுதல் உற்பத்தி ஏற்படுகிறது. மக்களை அதிகப் பாலை வாங்கும்படி அரசு உத்தரவும் பிறப்பிக்கிறது. பால் உற்பத்தியாளர்களை அதிகப் பால் உற்பத்தி செய்யும் படியும் அரசு ஆணையிடுகிறது.

### வழிகாட்டும் திட்டமுறையின் குறைபாடுகள்

(1) வழிகாட்டும் திட்டத்தில் அரசாங்க வர்க்கங்களும் சர்வாதிகார ஆணவப் போக்கும் ஆட்சி செய்கிறது. நுகர்வோரின் சுதந்திர உரிமை முழுவதுமாக மறைந்து விடுகிறது. மக்கள் அவர்கள் விருப்பம் போல் செலவிடவோ, நுகரவோ அனுமதிக்கப் படுவதில்லை. ஒருவர் விரும்பும் தொழிலைத் தேர்ந்தெடுக்கக் கூட உரிமையளிக்கப்படுவதில்லை. நுகர்வு அங்காடியும், தொழிலாளர் அங்காடியும், திட்ட அதிகார அமைப்பாலேயே நிர்ணயிக்கப் படுகிறது. சமபங்கீடும் விலைக்கட்டுப்பாடும் இத் திட்டத்தின் பிரதான அம்சங்களாக விளங்குவதால் இம் முறையில் ஊழலும் உற்றார் உறவினருக்குச் சலுகையளித்தலும் போன்ற சீர்கேடுகள் தோன்றுகின்றன.

[1] டாக்டர் ஆஸ்கர் ல்ன்ஜ் (Oskar Lang) "பொருளாதாரத் திட்டக் கட்டுரைகள்" ப. 14-16,

(2) நவீன பொருளாதார முறை மிகுந்த சிக்கல்கள் நிறைந்த வைகளாயிருப்பதால் வழிகாட்டும் திட்டம் திருப்திகரமாக எப்போதும் செயல்பட முடிவதில்லை. ஒரு பொருளின் உற்பத்தி அதிகரிக்க மற்ற நிறைவுசெய்யும் பொருள்களின் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும், அல்லது பதிலீட்டுப் பொருள்களின் உற்பத்தியைக் குறைக்கவேண்டும். ஏராளமான பொருள்களுக்கு இத்தகையத் தீர்மானங்கள் மேற்கொள்ளபடும்போது திட்டத்தின் இலக்குகளைச் சாதிப்பது மிகவும் கடினமாகிவிடுகிறது. பேராசிரியர் லூயிஸ் குறிப்பிடுவதுபோல், "வழிகாட்டும் திட்ட முறையின் விளைவாகச் சில பொருள்களுக்குப் பற்றுக் குறையும், மற்றபொருள்களில் உற்பத்தி அதிகரிப்பும் ஏற்படுகிறது."

(3) வழிகாட்டும் திட்டமுறை எப்போதும் நெகிழ்ச்சியற்றதாகவேயிருக்கிறது. திட்டம் வரையப்பட்டவுடனேயே தேவைக்கேற்றுற்போல் அதன் எந்தப் பகுதிகளையும் மாற்ற முடிவதில்லை. ஏனெனில் முழுத் திட்டத்தையும் மாற்றுமல் திட்டத்தின் ஒரு பகுதியைமட்டும் திருத்துவது மிகவும் கடினமாகும். எனவே, பல்வேறு குறைபாடுகள் இருந்தபோதிலும் திட்டம் ஒரு ஒருங்கிணைந்த முழுப் பகுதியாகவே அமுல்படுத்தப்படவேண்டும்.

(4) வழிகாட்டும் திட்டம் காலந்தாழ்த்தும் போக்கை அதிகரிக்கிறது. இத் திட்டமுறை ஒரேதரமான பொருள்களை உற்பத்தி செய்வதால் பல்வேறு தரமும், சிறப்பும் கொண்ட பொருள்கள் தயாரிக்கப்படுவதில்லை. பேராசிரியர் லூயிஸ் விளக்குவதுபோல் ஒரே தரமுள்ள பொருளை உற்பத்தி செய்வது முன்னேற்றத்திற்கு எப்போதும் எந்திரம் போல் நன்மையளித்த போதிலும் அது மகிழ்ச்சிகரமான வாழ்க்கைக்கு எதிரியாகவும், வெளிநாட்டு வர்த்தகத்தில் பல தீவிர விளைவுகளையும் தோற்றுவிக்கும். ஒரே தரமும் வகையுமுள்ள பொருளை உற்பத்தி செய்வதால் சுய ஆற்றலும் தொழில் துணிவும் தடுக்கப்பட்டு, வளர்ச்சி பாதிக்கப்படுகிறது. எனவேதான் புத்தாக்கங்களை ஏற்படுத்த வகையில்லாமல் போய்விடுகிறது.

(5) கடைசியாக வழிகாட்டும் திட்டமுறை மிகவும் அதிகரிக்கும் செலவினங்களைக் கொண்டதாக உள்ளது. அம்முறைக்கு ஏராளமான எழுத்தர்கள், புள்ளிவிவர நிபுணர்கள், பொருளியல் அறிஞர்கள், மற்றப் பயிற்சி பெற்ற பணியாள்கள் அதிக அளவில் தேவைப்படுகின்றனர். ஏராளமான கணக்கீடுகள், ஆய்வுகள், ஆகியவைகள் நடத்த ஏராளமான பணம் செலவிட வேண்டியுள்ளது.

மேலும் சீரான நடைமுறை இன்மையாலும், தொல்லைகள் ஏற்படுகின்றன. இத் திட்டத்தில் பல்வேறு குறைகளிருப்பினும் சோவியத் ரஷ்யாவில் இத் திட்டம் பொருளாதார வளர்ச்சியை மிக விரைவாக வேகப்படுத்தியிருப்பது இத் திட்டத்தின் வெற்றிக்குச் சான்றாகும்.

## தூண்டுதல் திட்டமுறை
(Planning by Inducement)

தூண்டுதலின் மூலம் திட்டமிடுதல் என்பது சந்தையின் நடவடிக்கைகளின் போக்கைத் தேவையானபடி மாற்றிக்கொள்வதாகும். தூண்டுதல் முறையில் பொருளாதார அமைப்பையும், நிறுவனங்களையும் வலுக்கட்டாயப்படுத்துவதற்குப் பதிலாக இணங்குவித்தல் முறை பின்பற்றப்படுகிறது. மக்களுக்குத் தொழில் சுதந்திரம், நுகர்வுச் சுதந்திரம், உற்பத்திச் சுதந்திரம் அளிக்கப்படுகிறது. ஆனால் 'இச் சுதந்திரங்கள்' அரசின் கட்டுப் பாட்டிற்கும், ஒழுங்குக்கும் கட்டுப்பட்டவைகளாகும். அரசின் பணவழி, நிதிமுறை நடவடிக்கைகளின் மூலம் ஒரு குறிப்பிட்ட முறையில் மக்கள் செயல்படத் தூண்டப்படுகின்றனர். ஒரு பொருளின் உற்பத்தி நாட்டில் அதிகரிக்கப்பட வேண்டுமானால், நிறுவனங்களுக்கு உதவிக் கொடைகள் (subsidy) அளித்துத் திட்டக் குழுபோன்ற திட்ட அதிகார அமைப்பு அப் பொருளின் உற்பத்தியை ஊக்குவிக்கிறது. நாட்டில் சில பொருள்களுக்குப் பற்றாக்குறை யேற்பட்டால், அப் பொருள்களுக்கு விலைக்கட்டுப் பாடும், சமப் பங்கீட்டு முறையும் உட்புகுத்தலாம். முதலாக்க வீதத்தை அதிகரிக்கத் திட்ட அதிகார அமைப்பு பொதுத்துறையில் முதலீட்டை அதிகரிக்கலாம் அல்லது தனியார் முதலீட்டை ஊக்குவிக்கலாம். தகுந்த பணமுறைக் கொள்கையைப் (Monetary policy) பயன்படுத்திப் பண அளிப்பு விலையேற்றம் போன்ற இன்னல்களைக் கட்டுப்படுத்தி, அதே சமயத்தில் வரிக்கொள்கையின் (Taxation policy) மூலம் மூலதனத்தை ஊக்குவிக்கவும் நுகர்ச்சியைத் தடுக்கவும் முடியும். எனவே, தூண்டுதல் திட்ட முறையிலும் வழிகாட்டும் திட்டமுறையால் பெறக் கூடிய அதே பலன்களைப் பெற முடியும். ஆனால், தூண்டுதல் முறையில் தனியொருவரின் தனிப் பொருளாதார உரிமையில் இழப்பு மிகக் குறைவானதாகும். ஏனெனில் அரசின் கட்டுப்பாடு இம் முறையில் மிகக் குறைவாகும். கூடுமானவரையிலும் சுதந்திர அங்காடி முறையே (Free Market Mechanism) ஆதரிக்கப்படுகிறது. கட்டுப் பாடுகள், ஒதுக்கீடுகள் (Allocation) ஆகியவைகளை அமுல்படுத்தத்

தேவையான அமைப்புத்துறையை இந்தத் திட்ட முறை ஏற்படுத்துவதில்லை.

வெளிநாட்டு வர்த்தகத்தில், உள்நாட்டு நுகர்ச்சியின் அளவைக் குறைத்து ஏற்றுமதியை அதிகரிக்க அரசு ஊக்குவிக்க விரும்பினால், அது அநேக தூண்டுதல் முறைகளைப் பின்பற்றுகிறது. இத் திட்ட முறையினால் நுகர்ச்சியைக் குறைத்து முதலாக்கத்தை (Capital Formation) அதிகரிக்கச் செய்யவும் இயலும்.

தூண்டுதல் திட்டமுறையின் குறைபாடுகள்

தூண்டுதல் திட்டமுறையைப் பின்பற்றுவதில் அநேக தொல்லைகள் இருக்கின்றன. இதனால் இம் முறை முதலில் கூறிய முறையோடு ஒப்பிடும்போது அவ்வளவு சிறந்ததாகவும் வெற்றிகர மானதாகவும் இல்லை.

1. உற்பத்தியாளர்கள், நுகர்வோர் ஆகியவர்களுக்கு அளிக்கப்படும் ஊக்கிகள் (Inventives) அரசு விரும்பும் முறையில் அவர்களின் செயல்களை மாற்றப் போதாததாக இருக்கலாம். இதன் விளைவாக அரசாங்கத்திட்டங்கள் செயலிழந்து போய்விடலாம்.

2. திட்டத்தின் உண்மைச் செயல்முறைகளை அங்காடிச் சக்திகளே ஏற்படுத்துகின்றபடியால் நாட்டில் சில பொருள்களில் தட்டுப்பாடோ அல்லது உபரியோ ஏற்படலாம். தேவை, அளிப்பு ஆகியவைகளிடையே தகுந்த சமநிலையை ஏற்படுத்துவது மிகவும் கடினமாகும். சில பொருள்களுக்குத் தட்டுப்பாடு ஏற்படும் சமயத்தில் விலைகட்டுப்பாட்டையும், சம்பங்கீட்டு முறையையும் பின்பற்ற வேண்டியநிலை ஏற்படும். இவ்வாறு கட்டுப்பாடுகளை மேற்கொள்வது வழிகாட்டித் திட்ட முறையின் அம்சமாகும். அத்தகைய சூழ்நிலையில் தூண்டுதல் திட்டமுறையும் வழிகாட்டித் திட்ட முறையும் இரண்டறக் கலந்துவிடுகின்றன.

3. முதலாக்க வீதத்தை அதிகரித்துப் பணமுறை, நிதிமுறை நடவடிக்கைகளின் மூலம் மட்டுமே பொருளாதாரத்தில் தூண்டப்பட்ட பொருளாதார வளர்ச்சியைத் தோற்றுவிக்க முடியாது. வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டில் வருவாய், சேமிப்பு மட்டங்கள் மிகக் குறைவாய் இருப்பதால், முதலாக்க வீதத்தை அதிகரிப்பது மிகவும் கடினமென்பது வெளிப்படையான உண்மையாகும். மக்கள் தங்கள் சேமிப்பை ஆக்கத்திற்குப் பயன்படா ஆடம்பரப் பொருள்கள் போன்ற வழிகளில் செலவழித்து வீணடிக்கின்றனர். இவ்வகையில் வழிகாட்டிப் பொருளாதார வளர்ச்சித் திட்டத்தை மிகவும் பயனுள்ளதாகக் கருதலாம்.

4. பொருளாதாரச் சுதந்திரம் அளிக்கப்பட்ட பொருளாதாரத்தில் உழைப்பாளர், மூலதனம் போன்ற வளங்கள் சுலபமாகப் பெயர்ச்சியடைவதில்லை. அரசின் கட்டுப்பாடில்லாவிட்டால் பல்வேறு வளங்கள் வளர்ச்சியடையாமல் பெயர்ச்சி இன்றி உத்தம அளவில் பயன்படுத்தப் படுவதில்லை.

ஒரு நாடு வழிகாட்டும் திட்ட முறையைக் கையாளுவதோ அதன் அரசியல் அமைப்பு முறையைப் பொறுத்ததாகும். முழுமையாகவே சமதர்மக் கொள்கையைப் பின்பற்றும் நாடு வழிகாட்டும் திட்டமுறையைப் பின்பற்ற முடியும். அதற்கு மாருக முதலாளித்துவ நாடுகளில் தூண்டுதல் திட்டமுறை சிறந்ததாக அமையும்.

ஆனல் இவ்விரண்டு திட்டமுறைகளும் ஒன்றையொன்று நிறைவு செய்பவைகளாய் (Complementary) உள்ளன. இரண்டும் தனித்தனியாகத் தனி இயல்புகளுடன் செயல்படுபவைகளாய் இருப்பதில்லை. இரண்டுமே வளர்ச்சி குறைந்த ஒரு நாட்டுக்கு இன்றியமையாதவைகளாய் விளங்கியும் நடைமுறைக்கு உகந்ததாகவும் உள்ளன. ஏனெனில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் அரசே வளர்ச்சியை அதிகரிக்கச் செய்வதற்கு சக்தியற்றதாய் உள்ளது. அதனிடம் போதிய நிதிவசதியும் நிர்வாக வசதியும் இல்லை. எனவே, அதன் கட்டுப்பாட்டின்கீழ் தனியார் துறையைச் செயல் புரியச் செய்து வளர்ச்சியடையச் செய்யலாம். இதற்கு உதவிக் கொடைகள், வரிச்சலுகைகள், போன்ற ஊக்கிகளைத் தனியார் துறைக்கு அளித்து வளர்ச்சியைத் தூண்டச் செய்யலாம். சேமிப்பு, முதலீடு, நுகர்வு, உற்பத்தி ஆகியவைகளின் போக்கை நேர்வழியில் செலுத்தலாம். பற்ருக்குறை நிதியாக்கம், கடன் வாங்குதல், வரிவிதித்தல், ஆகியவைகளின் மூலமாக நிதி வளங்களை அரசு பெற முடியும். அடிப்படை, கனரகத் தொழில்கள் ஆகியவைகளை ஏற்படுத்தி அரசு தொழில் வளர்ச்சியை அதிகரிக்கலாம். மேலும், சமூக, பொருளாதார நலனை மேம்படுத்தும் அமைப்புகளையும் ஏற்படுத்த அரசால் முடியும். எனவே, தூண்டுதல் திட்டமுறையையும், வழிகாட்டும் திட்டமுறையையும் சரியான முறையில் ஒன்று சேர்த்து நிலையான வளர்ச்சியை ஏழ்மை நாடுகள் பெற முடியும்.

அத்தகைய நடுத்தரச் செயல் முறையை இந்தியா அதன் வளர்ச்சித் திட்டங்களில் கடைப்பிடித்து வருகின்றது. இந்தியாவின் கலப்புப் பொருளாதாரத்தில் வழிகாட்டும் திட்டமுறையும், தூண்டுதல் திட்டமுறையும் தகுந்த இடத்தைப் பெற்றுள்ளன.

## II. நிதிசார் திட்டமும் இயற்பொருள்சார் திட்டமும் (Financial and Physical Planning)

நிதிசார் திட்டமென்பது வளங்கள் பண மதிப்பின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்படும் திட்டமுறையாகும். இயற்பொருள்சார் திட்டமென்பது வளங்கள், உழைப்பாளர்கள், பல்வேறு மூலப்பொருள்கள், இயந்திரம், ஆகியவைகளின் அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்படும் திட்டமுறையாகும்.

### நிதிசார் திட்டம்

பொருளாதாரத் திட்டத்திற்குப் பிரதானதிறவுகோலாக விளங்குவது நிதிவசதியாகும். போதிய அளவுநிதி கிடைத்தால் இயற்பொருள் இலக்குகளைச் சாதிப்பதில் எவ்விதச் சிரமமும் இருக்காது. குறிப்பிட்ட அளவு நிதிவசதி கிடைக்காவிட்டால் திட்டத்தைக் கடைசிவரையிலும் வெற்றிகரமாகச் செயல்முறைப்படுத்த முடியாது. அளிப்பிற்கும் தேவைக்கும் இடையே ஏற்படும் துர்மாற்றங்களைப் போக்க நிதிசார் திட்டம் மிகவும் அவசியமாக விளங்குகிறது. பல்வேறு திட்டங்களில் செலவினங்களையும் பலன்களையும் கணக்கிடவும் அது இன்றியமையாததாக விளங்குகிறது. இந்தியத் திட்டக்குழு குறிப்பிடுவதுபோல் நிதிசார் திட்டத்தின் சாரமாவது, "பேரளவு விலை மாற்றங்கள் இல்லாமல் தேவைகளும் அளிப்புகளும் சமமாக்கப்பட்டு இயற்பொருள் ஆக்கவள்ங்களை முழு அளவில் உறுதியாகப் பயன்படுத்துவதேயாகும்."[1] நிதிசார் திட்டத்தில் மூலதன முதலீடு பண அளவின் அடிப்படையில் குறிக்கப்படுகிறது. தேசிய வருவாய் வளர்ச்சி, நுகர்வு, இறக்குமதி போன்ற பல்வேறு அனுமானங்களின்படி மதிப்பீடுகள் செய்யப்படுகின்றன. இம் மதிப்பீடுகளை நடைமுறைப்படுத்தத் தேவையான நிதி வரியிடுதல், சேமிப்பு, பண இருப்பின் அதிகரிப்பு ஆகியவைகளால் சரிசெய்யப்படுகிறது. எனவே, நிதிசார் திட்டம் தேவைக்கும் அளிப்புக்கும் இடையே சமநிலையை ஏற்படுத்தவும் பணவீக்கத்தை நீக்கிப் பொருளாதார நிலைபேராக்கத்தை ஏற்படுத்த வகை செய்கிறது ஆனல் வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிதிசார் திட்டத்தின் செயல்முறைகளில் சில குறைபாடுகளும் காணப்படுகின்றன.

### குறைபாடுகள்

*(1)* வரிவிதிப்பதின் மூலம் நிதிவளங்களைச் சேகரிக்கும் நடவடிக்கைகளில், சேமிப்பு நாட்டம் கடுமையாகப் பாதிக்கப்படுகிறது. *(2)* வளர்ச்சி குறைந்த நாடுகளில் பரந்த பணம்

[1] 'இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்' ப. 16.

புழங்காத பராமரிப்புப் பணத்துறையும் (Subsistence non-monetized) சிறிய அமைப்புடைய பணத்துறையும், (Organized money Sector) உள்ளது. பணம் புழங்காத துறையில் பண்ட மாற்றுதல் முறையே பின்பற்றப்படுகிறது. அமைப்புடைய பணத்துறை, எல்லாப் பகுதிகளிலும் பரவலாக ஏற்படுவதில்லை. இதன் விளைவாக இவ்விரண்டு துறைகளுக்கிடையே சமநிலையின்மையும் ஏற்றத்தாழ்வும் ஏற்படுகின்றன. இதனால் அளிப்பில் பற்றாக் குறை ஏற்பட்டுப் பொருள்களின் விலைகள் பெருமளவு உயரும். இதன் விளைவாக இயற்பொருள்சார் இலக்குகள் (Physical targets) செயலிழந்துவிடும். (3) அளிப்புப் பற்றாக்குறையைப் போக்க வெளி நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்யலாம். ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஏற்கெனவே வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலைத் தொல்லைகள் அதிகமாய் இருப்பதால் இறக்குமதியை அதிகரிக்க இயலாது. (4) நிதிசார் திட்டம் வெற்றிகரமாகச் செயல்பட அது பணவீக்க, விலை உயர்வு போன்ற எல்லாத் தடைகளிலிருந்தும் விடுதலை பெற வேண்டும். இத் திட்டத்தை ஒருங்கிணைந்த பல்துறைத் திட்டமுறையைக் (Overall Planning) காட்டிலும் துறைசார் திட்டமுறை (Sectoral Planning) யில் பயன்படுத்துவது மிகப் பொருத்தமாகும். (5) கடைசியாக வளர்ச்சி குறைந்த நாட்டில் இத் திட்டமுறை மக்களிடையே ஆக்கவருவாயில் இழப்பை ஏற்படுத்துவதோடு சமச்சீர் சமூக வளர்ச்சி இயல்பையும் அச்சுறுத்துவதாக இருப்பதால் இந் நாடுகளுக்குத் தகுந்த முறையாக இல்லை. இதன் விளைவாக மக்கட் தொகை அதிகரிப்பினால் சராசரி கூலிகளில் போதிய வேலை வாய்ப்பு அதிகரிப்பதில்லை. இதனால் வேலைவாய்ப்புப் பெற உரிமையுடையவர்களுக்கும், வேலை, வருவாய், கிடைக்காதவர்களுக்குமிடையே ஏற்றத்தாழ்வுகள் அதிகரிக்கின்றன.

### இயற்பொருள்சார் திட்டம்

பொருள்சார் திட்டமென்பது "உற்பத்திக் காரணிகளின் ஒதுக்கீடு, உற்பத்திப் பலன் ஆகியவைகளின் அடிப்படையில் வளர்ச்சி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருவாய், வேலை வாய்ப்பு ஆகியவைகளைப் பெருமளவு அதிகரிக்கும் செயல் முறைகளைக் குறிக்கிறது."[1] இக் குறிக்கோளை அடைவதற்குச் சாதனமாக அமைவது நிதிசார் திட்டமாகும். பண வசதியின்மையால் ஒரு திட்டத்தில் முதலீட்டை மேற்கொள்ள முடியாமலிருப்பது இயற்பொருள் வளங்கள் இன்மையால்தான் என்று கருத இயலாது. உண்மை வளங்களைத் தகுந்த முறையில் பயன்

[1] 'இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்.'

படுத்தாததனால்தான் வளர்ச்சிக் குறைந்த நாட்டில் நிதிவசதி அதிகரிப்பதில்லை. இயற்பொருள்சார் திட்டத்தில் கிடைக்கும் உண்மை வளங்களின் ஒரு முழு மதிப்பீடு செய்யப்பட்டுத் திட்டம் நடைமுறைப் படுத்தப்படும்போது, முட்டுக்கட்டைகள் குறுக்கிடா வண்ணம் வளங்களை எப்படிப் பெறுவதென்றும் ஆராயப்படுகிறது. இயற் பொருள்சார் திட்டத்தில் வேளாண்மை, தொழிலுற்பத்தி, சமூக–கலாச்சார, போக்குவரத்துப் பணிகள், நுகர்வுமட்டம், வேலை வாய்ப்பு, வருவாய், முதலீடு ஆகியவைகளில் இயற்பொருள் இலக்குகள் நிர்ணயிக்கப்படுகின்றன. திட்டத்தின் பல்வேறு இலக்குகளில் தக்க சமநிலைகள் ஏற்படுத்தப்பட வேண்டும். மேலும், இயற்பொருள் திட்டம் குறுகியகாலத் திட்டமென்பதை விட நீண்டகால ஒருங்கிணைந்த திட்டமென்றே கருதப்பட வேண்டும். பேராசிரியர் 'பலோவ்' (Balogh) அவர்களின் கருத்துப்படி, "அரசியல் பலமும், நிதிசார் பொறுப்பும் கொண்ட சிறப்புக் கொள்கையானது குறித்த அளவு இயற்பொருள் வளங்களைப் பெற நிலையாக மேற்கொள்ளும் நடவடிக்கைகளாகும்." இம் முறையில் துல்லியமான துறைசார் சமநிலையும், அளிப்பு முட்டுக்கட்டைகள் தோன்றினால் அவைகளை நீக்கும் நடவடிக்கை களும் இடம் பெறுகின்றன. ஒரு திட்டத்தின் சக்திப்பாட்டை அது ஏற்படுத்தும் சிரமங்களைச் சோதிப்பதால் அறிய முடியும். சிரமங்கள் குறைதலாலும், வெளிநாட்டு இருப்புப் போன்ற அம்சங்கள் சேர்வதாலும் ஒரு திட்டமுறை அதன் பொருள்சார் சக்தியின் உச்சநிலை வரைக்கும் இயக்கப்படவில்லை என்பது பொருளாகும்.[1]

குறைபாடுகள்

*(1)* வளர்ச்சி குறைந்த நாடுகளில் இருந்துவரும் இயற் பொருள்சார் வளங்களின் புள்ளிவிவரங்களும், தெளிவான விவரங் களும், போதிய அளவில் கிடைக்காதது பெரும் பிரச்சினையை ஏற்படுத்துகிறது. துல்லியமற்ற விவரங்களின் அடிப்படையில் கிடைக்கும் உண்மை வளங்களுக்குமேல் இயற் பொருள்சார் இலக் குகள் குறிக்கப்பட்டால் பொருளாதாரத் திட்டம் பெருந் தோல் வியில் முடிவடைகின்றது.

*(2)* பொருளாதாரத்தின் பல்வேறு பிரிவுகளிடையே சம நிலையை ஏற்படுத்துவதும் சிறிது கடினமாகும். வளர்ச்சி குறைந்த நாட்டில் பல்வேறு உள்ளார்ந்த அமைப்புசார் தொல்லைகளால் பல் வேறு துறைகளினிடையே மிக உயர்ந்த ஒத்தியைவைப் பெறுவது சுலபமல்ல. தீர்மானிக்கப்பட்ட இலக்குகளைச் சாதிக்கத் தேவை

[1] பலோவ் (Balogh), 'இந்தியப் பொருளாதாரச் சிறப்புக் கொள்கையின் விளக்கம்.'

யான தொழில் நுட்ப நிலையை நாடு அடையாமல் இருக்கலாம். எதிர்பாராப் பாதக அறுவடைகளால் வேளாண்மைப் பொருள்களின் அளிப்புக் குறையலாம்; அல்லது ஆக்கசக்தி அளிப்பின் பற்ருக் குறையினுல் தொழிலுற்பத்தி கூடக் குறைந்து விடலாம். டாக்டர் ஆஸ்கர் லன்ஜ் அறிவுறுத்துவது போல் அத்தகைய எதிர்பாராச் சூழ்நிலைகளைச் சமாளிக்க உள்ளிடு-வெளியிடு உற்பத்தி முறை (input—output) யிலும், நுகர்ச்சியிலும், சமநிலைகளை ஏற்படுத்தத் திட்டமிடும் பொழுது சில இருப்புச் சரக்குகளையும் (Reserve Stocks) தனியாக ஒதுக்கீடு செய்து கொள்வது சிறந்ததாகும்.[1]

(3) இயற்பொருள் இலக்குகளில் ஏற்படும் அத்தகைய பற்ருக்குறைகள் பொருள்களின் விலைகளை அதிகரித்துப் பணவீக்க அழுத்தங்களை ஏற்படுத்துகின்றன. ஏற்கெனவே வருமான சேமிப்பு மட்டங்கள் மிகக் கீழ்நிலையில் இருக்கும் வளர்ச்சி குறைந்த நாட்டில் பணவீக்கம் மிகப்பெரும் தீங்குகளை விளைவிக்கும். அத்தகைய சூழ்நிலையில் இயற்பொருள் கட்டுப்பாடுகளும், ஒதுக்கீடுகளும் செய்யப்பட வேண்டுமென்று இந்தியத் திட்டக்குழு அறிவுறுத்துகிறது. கட்டுப்பாடு, சம பங்கீடு ஆகியவைகளை நடைமுறைப் படுத்துவதில் நிர்வாகச் சீர்கேடுகளும் இன்னல்களும் ஏற்படுவதால் இம்முறையோடு கூடவே அளிப்பை அதிகரிக்கும் மற்ற நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டுமென்று அக் குழு பரிந்துரைக்கிறது.[2]

(4) நிதிசார் திட்டமில்லாமல் பொருள்சார் திட்டத்தை மட்டும் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பின்பற்றுவது எப்போதும் திட்ட முறைக்கு எதிராகவே இருக்கிறது. கிடைக்கக் கூடிய நிதி வளங்களைக் கருத்தில் கொள்ளாமல் பொருள்சார் வளங்களின் அடிப்படையில் திட்டங்களைத் தீட்டினுல் திட்ட இலக்குகளை ஒருபோதும் சாதித்துவிட முடியாது. சான்ருக, இந்திய இரண்டாம் திட்டத்தின் முடிவு ஆண்டில் போதிய நிதி வளங்கள் கிடைக்காமையால் இந்தியாவில் திட்டத்தின் அளவு ரூ. 200கோடியளவுக்குக் குறைக்கப்பட்டது.

### சமதர்ம நாட்டில் திட்டம்

ஒரு நாட்டின் அரசியல் அமைப்பைப் பொறுத்துத்தான் நிதிசார் திட்டமோ அல்லது பொருள்சார் திட்டமோ செயல்பட முடியும். ரஷ்யா போன்ற சமதர்ம நாடுகளில் இயற்பொருள்சார் திட்டமே, பின்பற்றப்படுகிறது. அங்குத் தனியார் சொத்துரிமை நீங்கி எல்லா வளங்களும் அரசின் பொறுப்பிலிருப்பதால் நிதிவசதி ஒரு முட்டுக்கட்டையாக எப்போதும் இருந்ததில்லை. "மூலதன

[1] டாக்டர் ஆஸ்கர் லன்ஜ், 'பொருளாதாரத் திட்டக் கட்டுரைகள்' ப. 6.
[2] "இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்" ப. 39.

முதலீட்டின் திட்டத்தைச் செயற்படுத்த நிதியில்லா நிலை ஏற்படுவதற்குக் காரணம் இயற்பொருள் வளங்கள் இன்மையாகும். திட்டத்தில் நிதியின் பங்கு சமதர்ம நாட்டில் சமூக வளங்களின் கணக்கீட்டுக் கருவியாகவே உள்ளது."[1] நிதித்திட்டம் உள்ளீடுகள், உற்பத்தி வெளியீடுகள் (inputs and outputs) ஆகியவைகளின் மதிப்புகளைப் பண அலகில் மாற்றி உணர்த்தி உற்பத்திச் செலவு, இலாபம், வருவாய், விலைகள் ஆகியவைகளைத் துல்லியமாகக் கணக்கிட வகை செய்கிறது.

முதலாளித்துவ நாட்டில் திட்டம்

முதலாளித்துவ நாடுகளில் நிதித் திட்டமும், பொருள் திட்டத்தைப் போன்றே மிக முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. இவ்விரண்டுமே ஒன்றையொன்று நிறைவு செய்பவைகளாயும், ஒத்து இயைபவைகளாயும் உள்ளன. பேராசிரியர் மஹாலனோபிஸ் தம் திட்ட நகலில் குறிப்பிட்டதுபோல், "உற்பத்தியின் பொருள்சார் இலக்குகள் மூலப் பொருள்கள், இயந்திரம், ஆக்கசக்தி, போக்குவரத்துப் போன்ற இயற்பொருள் சார் அளவுடனும், மனித சக்தி, பணத்தின் பரிவர்த்தனை, போன்ற அம்சங்களுடனும் சமச் சீராக்கப்பட வேண்டும். உற்பத்திச் செயல் முறைகளிலேயே வருமானங்கள் இயக்குவிக்கப்படுகின்றன. அங்காடி நடவடிக்கைகளின் மூலம் அளிப்புகளைப் பயன்படுத்திக் கொள்ளவும் முடியும். மொத்த வருவாயுடன் செலவினங்களும், சேமிப்புடன் முதலீடுகளும், தனிப் பொருள்களின் தேவை—அளிப்புகளுக்கும், பணத்திற்குமிடையே சமச்சீரான நிலையை ஏற்படுத்திப் பணவீக்கத்தையும் விலைகளின் மாற்றத்தையும் திட்ட முறையின்போது நீக்க வேண்டியது இன்றியமையாததாகும். பொருள்சார் திட்டமும், நிதிசார் திட்டமும், ஒரே மரத்தின் இரு கிளைகளைப் போன்றவைகளாகும். எனவே, வளர்ச்சித் திட்டத்தில் இரு முறைகளையும் ஒருங்கிணைக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். பொருள்சார் இலக்குகள், கிடைக்கும் நிதிசார் வளங்களோடு சரிசமப்படுத்தப்பட வேண்டும். அப்போது பொருள்சார் இலக்குகளைப் பூர்த்திசெய்து வளர்ச்சியின் வேகத்தை அதிகரிக்கப் பெருமளவு நிதிவளங்கள் சேகரிக்கப்பட வேண்டும்.

## III. நீண்டகால எதிர்நோக்குத் திட்டம்
## (Perspective Planning)

'எதிர்நோக்குத் திட்டமென்பது' 15 அல்லது 20 அல்லது 25 ஆண்டுக் காலத்திற்காக முன் கூட்டியே நீண்டகால எல்லை

[1] டாக்டர் ஆஸ்கர் லன்ஜ், 'பொருளாதார திட்டக் கட்டுரைகள்' ப. 4

இலக்குகளைத் தீர்மானித்து, அவைகளை அடையச் செயல்முறைகள் தீட்டப்பட்ட நீண்டகாலப் பொருளாதாரத் திட்டமாகும். இந்திய திட்டக் குழுவின் விளக்கத்தின்படி, “ஒரு எதிர்நோக்குத் திட்டமென்பது நீண்ட காலத்தில் அடையவேண்டி வளர்ச்சிகளைப் பற்றிய நகல் திட்டமாகும்.” எதிர்நோக்குத் திட்டமென்பது 15 அல்லது 20 ஆண்டுகளுக்குமே ஒரே திட்டம் வரையப்படுவதில்லை. எதிர்நோக்குத் திட்டத்தைப் பல்வேறு குறுகியகாலத் திட்டங்களாகப் பிரித்துப் பரந்த குறிக்கோள்களையும், இலக்குகளையும் குறிப்பிட்ட காலத்திற்குள் சாதிக்க முற்படவேண்டும். ஒவ்வொரு ஐந்தாண்டுத் திட்டமும் வருடாந்திரத் திட்டங்களாக மேலும் பிரிக்கப்பட்டு ஐந்தாண்டுத் திட்டத்தின் பரந்த அமைப்பு முறையோடு பொருந்தி இயைகின்றது. இவ்விருவகைத் திட்டங்களில் ஒன்று மேலும் பிராந்தியத் திட்டங்களாகவும், துறைசார் திட்டங்களாகவும் பிரிக்கப்படுகின்றன. பிராந்தியத் திட்டங்கள், பிராந்தியங்கள், மாவட்டங்கள், உள்ளூர்கள் ஆகியவைகளுக்காகத் தீட்டப்பட்டு மேலும் வேளாண்மை, தொழில், வெளிநாட்டு வர்த்தகம், போக்குவரத்துப்போன்ற அம்சங்களின் வளர்ச்சிக்காகப் பகுதிசார் திட்டங்கள் (Sectional plans) மேலும் ஒவ்வொரு துறைக்கும் துணைத் திட்டங்களாகப் (Sub—plans) பிரிக்கப் படுகின்றன. சான்றாக உணவுத் தானியங்களுக்கான திட்டம், இரும்பு எஃகுக்கான திட்டம், ஏற்றுமதிக்கான திட்டம், என்று துணைத்திட்டங்கள் பல பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. இத் திட்டங்களும் துணைத் திட்டங்களும் எதிர்நோக்குத் திட்டத்தின் அடிப்படையிலேயே செயற்படுகின்றன. ஒரு எதிர்நோக்குத் திட்டம் நீண்டகால இலக்குகளை உணர்த்துகிறது. அதேபோல் நடப்புத் திட்டங்களும் (Current plans) துணைத்திட்டங்களும் (Sub-plans) எதிர்நோக்குத் திட்டத்தின் இலக்குகளைச் சாதிக்க இன்றியமையாததாக விளங்குகிறது. இந்தியத் திட்டக் குழுவின் விளக்கத்தின்படி, “திட்டமென்பது ஒரு தொடர்ச்சியான செயல் முறையைக் குறிக்கிறது. அது குறுகிய காலத்திற்காகத் தனியாகப் பிரிக்கப்படக்கூடாது. எனவே, தற்போதுள்ள நான்காம் ஐந் தாண்டுத் திட்டம் முன்னைய திட்டங்களின் தொடர்ச்சியும் எதிர் நோக்குமாகும். மேலும் அது பின்பு அடுத்தடுத்து வரும் திட்டங் களுக்கு வகை செய்யும் திட்டம் ஒரு தொடர்ந்த இயக்கமாக அமைந்து, விரும்பிய குறிக்கோள்களை அடைவதற்குத் துணைபுரி கிறது. இதனால் எல்லாத் தலையாய தீர்மானங்களும் குறிக்கோள் களும் சமூக காரணங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. ஐந் தாண்டுத் திட்டங்களிலும் கூட நீண்டகால முன்னோக்குத் திட்ட முறை எப்போதும் கருதப்படுகிறது. “உண்மையில் ‘எதிர் நோக்குத்

திட்டம்' திட்டச் செயல் முறைகளின் சாரமாக அமைகிறது."[1] எனவே, எதிர்நோக்குத் திட்டத்தின் அடைப்படை நோக்கம் குறுகிய காலத்திட்டங்களுக்கு வகைசெய்து நீண்டகாலப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு வழிமுறைகளைக் கையாளுவதாகும்.[2]

எதிர்நோக்குத் திட்டக்கருத்து 1920-ல் ரஷ்யாவில் மின்சக்தி அதிகரிப்பதற்கான முதல் நீண்டகாலத் திட்டத்தில் கையாளப் பட்டது. அதுவே கீர்த்திவாய்ந்த கோஇல்ரோ (Goelro) திட்ட மாகும். 1958 வரைக்கும் ரஷ்யா அதன் பொருளதார வளர்ச்சிக் காக ஐந்தாண்டுத் திட்டங்களைக் கடைப்பிடித்துவந்தது. ஆனால், 1959-ல் ஒரு இருபது ஆண்டுகளுக்கான (1960—80) திட்டம் தீட்டப்பட்டது. 1959—1965-க்கு இடைப்பட்ட கால இலக்குகள் பொருளாதார வளர்ச்சியின் நீண்டகாலத்திட்டத்தில் ஒரு ஒருங்கிணைந்த அம்சமாகக் கருதப்படவேண்டும். இந்தியா விலும் ஐந்தாண்டுத் திட்டங்கள் பொருளாதார வளர்ச்சிப் பிரச்சினையை நீண்டகால நோக்குடனேயே அணுகிவருகின்றன.

## வளர்ச்சி குறைந்த நாடுகளில் எதிர்நோக்குத் திட்டத்தின் அவசியம்
## தொழில் மயமும் எதிர்நோக்குத் திட்டமும்
## (Industrialisation and Perspective planning)

வளர்ச்சி குறைந்த நாடுகளில் திட்டத்தின் பிரதான குறிக் கோளாக இருப்பது விரைவான தொழில் மயத்தின் மூலம் வேலை வாய்ப்பு, தலாவருவாய், வாழ்க்கைத்தரம் ஆகியவைகளை உயர்த்து வதாகும். திட்டமானது, ஒருதொடர்ச்சியான செயல் முறையாக இருப்பதால் வருமானம் நுகர்வுப் பொருள்கள் ஆகியவைகளின் நீண்டகால இலக்குகளை மக்கட் தொகையின் ஒரு குறித்தகால வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு அமைக்க வேண்டியது இன்றி யமையாததாகும். தலாவருவாயின் அளவு அதிகரிப்பதற்கேற்ப நுகர்வுப் பொருள் உற்பத்தித் துறையையும் தொடர்ந்து விரிவாக்க வேண்டியது அவசியமாகிறது. இவையிரண்டும் விரை வான தொழில் மயத்தைப் பொறுத்துத்தான் அமையும். விரை வான தொழில் மயமும், ஒரு நீண்டகால நடவடிக்கை முறையாக அமைந்து எதிர் நோக்குத் திட்டத்தின் அடிப்படையில் அதிகரிக்க வேண்டிய நிலையில் உள்ளது.

நடைமுறைத் திட்டத்தில் சமநிலையின்மை (Inbalances அல்லது துறைகளிடையே ஏற்றதாழ்வுகள் தோன்றுவது பொது வான இயல்பாக உள்ளது. எனவே, வேளாண்மைத் துறைக்கும் தொழில் துறைக்குமிடையே, சமூக பொருளாதாரப் பொதுநல

1 ''மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்''

2 J டின்பர்ஜன். (J. Tinbergen) ''வளர்ச்சித்திட்டம்'' ப. 6.

அமைப்புகளுக்கிடையே, நாட்டின் பல்வேறு பிராந்தியங்களுக்கிடையே, உள்நாட்டு வெளிநாட்டு வளர்ச்சி வளங்களுக்கிடையே ஒரு சரிசமமான வளர்ச்சியை ஏற்படுத்த எதிர்நோக்குத் திட்டம் (Perspective Planning) இன்றியமையாததாகும்.

### வேளாண்மை வளர்ச்சியும் எதிர்நோக்குத் திட்டமும்

வேளாண்மைத் துறையின் வளர்ச்சி ஒரு நீண்டகால நடவடிக்கை முறையாகும். எதிர்கால உணவுத்தேவை, தொழில்களுக்கு வேண்டிய கச்சாப் பொருள்களின் தேவை ஆகியவைகளைக் கருத்தில் கொண்டு வேளாண்மை வளர்ச்சி திட்டமிடப்படவேண்டும். குறுகிய காலத்தில் வேளாண்மை உற்பத்தித் திறனை அதிகரிக்கப் பல்வேறு நிலச்சீர்திருத்தங்கள், புனரமைப்பு நடவடிக்கைகள் ஆகியவைகளைத் தீவிரமாகக் கடைப்பிடிக்க வேண்டும். பொருளாதாரத்தின் குறுகியகாலத் தேவைகளைப் பூர்த்தி செய்ய நிலகுத்தகைச் சீர்திருத்தங்கள், விரிவாக்கப்பட்ட நீர்ப்பாசன வசதிகள், கருவிகள், சீரானவிதைகள், தரமுள்ள உரங்கள் ஆகியவைகளின் அளிப்பு போன்ற நடவடிக்கைகள் பெருந்துணை புரியும். நீண்ட காலத்தில் அதிகரிக்கும் மக்கட் தொகையின் தேவைகளைப் பூர்த்திசெய்ய உணவுப் பயிர்கள், பதனப்பட்ட பொருள்கள், மீன், கோழி வளர்ப்புப் போன்றவைகளின் வளர்ச்சியை அதிகரிக்க வேண்டியது இன்றியமையாததாகும். தொழில்துறை, ஏற்றுமதித்துறை ஆகியவைகளின் தேவைகளைப் பூர்த்திசெய்ய வர்த்தகப் பயிர்களின் வளர்ச்சியை அதிகரிக்க வேண்டியது அவசியமாகும். எந்த ஒரு வேளாண்மை வளர்ச்சித் திட்டமும் ஒரு தொடர்ந்த செயல் நடவடிக்கையாகும். எனவே, விஞ்ஞான, சீரமைக்கப்பட்ட கருவிகள், சாதனங்கள், உற்பத்தி முறை, ஆகியவைகளைத் தொடர்ந்து எப்போதும் பின்பற்ற வேண்டியது அவசியமாகிறது. இவை எல்லாவற்றிற்கும் நீண்ட கால எதிர் நோக்கு வேளாண்மைத் திட்டம் தேவைப்படுகிறது.

### நுகர்வுப் பொருள் துறையும் எதிர்நோக்குத் திட்டமும்

செய்பொருள் நுகர்வுப் பொருள்களின் ஒரு குறிப்பிட்ட காலத்தின் தேவை அதிகரிப்பிற்கேற்ப அவைகளின் திட்டமிட்ட அளிப்பும், இணையாக அதிகரிக்க வேண்டும். மதிப்பிடப்பட்ட தேவைக்கும், திட்டமிடப்பட்ட எதிர்காலத் தேவைக்குமிடையே ஏற்றதாழ்வு ஏற்படாமல் இருக்கச்செய்ய நுகர்வுப்பொருள் தொழில்களுக்கானத் திட்டமும், இயற்பொருள் கட்டுப்பாடு அல்லது பணமுறை, நிதிமுறை நடவடிக்கைகள் ஆகியவைகள் தேவைப்படுகின்றன. இவ்விரண்டிற்குமிடையே சமநிலை ஏற்பட்டால்தான் பொருளாதாரத்தில் பணவீக்க அழுத்தங்கள்

தோன்றுமல் இருக்கச் செய்யமுடியும். நுகர்வுப்பொருள் துறையின் வளர்ச்சி, விரைவான தொழில் பெருக்கத்தைப் பொறுத்ததாகும். அதற்கு ஏராளமான ஆக்க சக்தியும், எந்திரங்களும் தேவைப்படுகின்றன. எனவே, முதல்பொருள் துறை, (Capital goods sector), ஆக்கசக்தி, போக்குவரத்து வசதிகள் ஆகியவைகளின் பெருக்கமும் அதற்கு இன்றியமையாததாக விளங்குகிறது. ஆனல், இத்தகைய துறைகளில் ஏராளமான அளவு (lumpy) முதலீடு தேவைப்படுகிறது. அத்தகைய முதலீடுகளை வளர்ச்சி குறைந்த நாடுகளில் நீண்டகாலத்தில்தான் பெறமுடியும். எனவே, எஃகு, உலோகம், நிலக்கரி, மின்சக்தி, எண்ணெய், மின்சாதனப் பொருள்கள், இரசாயனப் பொருள்கள், உரவகைகள், எந்திரக் கட்டுமானம், போக்குவரத்துப் போன்ற எல்லாவகைத் தொழில் அம்சங்களுக்கும் முழுவதுமாக நீண்ட எதிர்நோக்குத் திட்டம் மிகவும் அவசியமாகிறது.

உற்பத்தித் திறனும் எதிர்நோக்குத் திட்டமும்

பொருளாதாரம் முழுவதிலும் உற்பத்தித் திறனின் மட்டத்தை (Level of productivity) அதிகரிப்பதற்கு நீண்டகால எதிர்நோக்குத் திட்டம் மிகவும் இன்றியமையாததாகும். உற்பத்தித் திறன் மட்டம் நாட்டின் சமூக நலனை, மேம்படுத்தும் மூலதன (Social Overhead Capital) வளர்ச்சியைப் பொறுத்ததாகும். கல்வி, சுகாதாரம், தொழில் நுட்ப, விஞ்ஞானப் பயிற்சி நிறுவனங்களின் தோற்றத்திற்கான செயல் திட்டங்கள் (Programmes) ஆகியவைகளின் மூலமாக மனித வளங்களை (Human resources) வளர்ச்சிடையச் செய்யவேண்டும். இதற்கு அடிப்படைச் சிறப்புத் தொழில்களின் தோற்றத்திற்கு வேண்டிய காலத்திற்கும் அதிகமான காலம் தேவைப்படுகிறது. விரைவான தொழில் மயத்திற்குத் தேவையான தொழில் நுட்ப ஆற்றல் கொண்டவர்கள், பொறியியலாளர்கள், ஆராய்ச்சி நிபுணர்கள், ஆகியவர்களின் அளிப்பு ஏற்பட இருபது ஆண்டுகளோ அல்லது ஒரு தலைமுறைக் காலமோ தேவைப்படலாம். இதற்கு நீண்டகால, தொழில் நுட்ப விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடங்களுக்கான திட்டம் தேவைப்படுகிறது. இவைகள் நுகர்வுப் பொருள், முதற் பொருள், ஆகிய தொழில்களின் தேவைகள் ஏற்படுவதற்கு முன்னதாகவே வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும். இதற்கு நீண்டகால எதிர் நோக்குத் திட்டம் சிறந்த கருவியாகப் பயன்படுகிறது.

மக்கட்தொகை வளர்ச்சியும் திட்டமும்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஒரு தலையாய பிரச்சினையாக இருப்பது அதிகரிக்கும் உற்பத்தியில் பெரும்பகுதியை நுகரும் விரை

வான மக்கட் தொகை வளர்ச்சியாகும். அதிகமான மக்கட் தொகை வளர்ச்சி வீதத்தின் காரணமாகச் சேமிப்பு வீதத்தை அதிகரிப்பது மிகவும் கடினமாக உள்ளது. சேமிப்பு வீதம்தான் அதிகத் தேசிய உற்பத்தித் திறனும் வருவாயும் பெறுவதற்கு வகை செய்கிறது. எனவே, வளர்ச்சித் திட்டத்தை வெற்றிகரமானதாக்க ஒரு நியாய மான கால எல்லைக்குள் மக்கட் தொகை வளர்ச்சி வீதத்தைச் சமநிலைப்படுத்த வேண்டியது மிகவும் அவசியமாக உள்ளது. குடும்பத் திட்டத்தின் செயல் முறைகள் தொடர்ச்சியானவை களாகவும், நீண்டகால அளவைக் கொண்டதாகவும் உள்ளன. ஏனெனில் குடும்பக் கட்டுப்பாட்டுக் கலையில் மக்களுக்குத் தீவிர மான கல்வியறிவை நீண்டகாலத்தில் தொடர்ச்சியாக அளிக்க வேண்டியுள்ளது. இதற்கும் எதிர்நோக்குத் திட்டம் முதுகெலும் பாக விளங்குகிறது.

## வெளிநாடுச் செலாவணியும் திட்டமும்

வளர்ச்சி குறைந்த நாடுகள் கணிசமான அளவு வெளி உதவியையே நம்பியிருக்கும் நிலை உள்ளதால் தொடர்ச்சியாக வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகள் உள்ளன. வெளிநாட்டுச் செலாவணிச் சிக்கலும், வளர்ச்சித் திட்டமும் நெருங்கிய தொடர் புடையவைகளாய் உள்ளன. இச் சிக்கலைப் போக்க வளர்ச்சித் திட்டம் வகை செய்தேயாக வேண்டும். எனவே, ஏற்றுமதித் துறையை வளர்ச்சியடையச் செய்து நீண்ட காலத்தில் ஏற்றுமதி தொடர்ச்சியாக அதிகரிக்க நீண்டகால எதிர்நோக்குத் திட்டம் இருதயமாக அமைகிறது. எதிர்நோக்குத் திட்டம் ஏற்றுமதித் துறையை விரிவாக்கி, உற்பத்திச் செலவுகளைக் குறைத்து, உற்பத்தித் திறனை அதிகரித்து, ஏற்றுமதியைப் பெருக்கும் உபரியை பெருமளவில் அதிகரிக்கிறது.

## சமச்சீரான பிராந்திய வளர்ச்சியும் திட்டமும்

பரந்த, வேறுபட்ட அமைப்பைக் கொண்ட ஒரு நாட்டில் பல்வேறு பிராந்தியங்களிடையே சமச்சீரான பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டியது மிகவும் அத்தியாவசியமான தாகும். இதற்கு நீண்டகாலச் செயல்முறைகள் தேவைப்படு கின்றன. பிராந்திய வளர்ச்சித் திட்டங்கள் நீண்டகாலத் தேசிய வளர்ச்சித் திட்டங்களுடன் ஒருங்கிணைய வேண்டியது அவசிய மாகும்.

ஒரு வளர்ச்சி குறைந்த நாட்டில் திட்ட நிர்வாகத்தின் (Planning authority) தீர்மானங்கள், நடைமுறைச் செயல் முறைகள் ஆகியவைகளின் மேன்மைகள், தவறுகள், ஆகியவைகளை அறிந்து தகுந்த முறையில் வழிகாட்ட எதிர்நோக்குத் திட்டம்

பெரிதும் பயனுள்ளதாக உள்ளது. சேமிப்பு, முதலீடு, வருவாய், வேலைவாய்ப்பு, போன்ற வளர்ச்சிக் காரணிகளுடன் பொருளாதாரத்தின் வளர்ச்சி வீதத்தைக் (Rate of Growth) கணக்கிட நீண்டகால ஆய்வும், ஆய்த்தமும் தேவை. எதிர்நோக்குத் திட்டத்தின் இலக்குகளோடு குறுகியகால இலக்குகள், சாதனைகள், ஆகியவைகளை ஒப்பிட்டுப் பார்த்துத்தான் விரைவான பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான உயர்ந்த நிலையான வளர்ச்சிவீதம் ஒரு பொருளாதாரத்தில் இருக்கின்றதா என்பதைத் தீர்மானிக்க முடியும். பேராசிரியர் கட்கில் குறிப்பிடுவதுபோல் "திட்டமென்பது ஒரேயடியாக முடிந்துவிடும் செயல்முறை அல்ல. வளர்ச்சி குறைந்த நாட்டில் அது பிரபலியமடைந்து மக்களிடம் நல்லெண்ணத்தை ஏற்படுத்த அது வருடக் கணக்கில் தொடர்ச்சியாகவும், நிலையான ஒருங்கமைவு உடையதாகவும், முன்னேக்கி செயல் புரியத் தக்கதாகவும், சுயஉறுதி உடையதாகவும் இருக்க வேண்டும்."[1] தமிழ் நாட்டுத் திட்டக் குழுவும் நீண்டகால எதிர்நோக்குத் திட்டத்தை வரைந்து அதைச் செயல்படுத்த முயன்று வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

## முடிவுரை

மாறுத சர்வாதிகாரத் திட்ட முறையிலோ அல்லது நெகிழ்ச்சியுடைய ஜனநாயகத் திட்ட முறையிலோ பின்பற்றப்படும் நுட்பத் திட்டமுறை இரண்டுக்கும் பெரும்பாலும் பொதுவானதாகவே உள்ளது. விஞ்ஞானத் திட்டமுறை சில குறிப்பிட்ட கருத்துகள், பாங்குகள், ஆகியவைகளின் அடிப்படையில் அமைவதால் அரசியல் அமைப்பு முறையால் திட்டமுறை பெரிதும் பாதிக்கப்பட்டுவிட முடியாது. பொருளாதாரத் திட்டத்தின் பொதுக் கருத்துகள் எந்தப் பொருளாதாரத் திட்டத்திற்கும் பொதுவாக அமைந்துள்ளன. எனவே, புள்ளிவிவரங்களைச் சேகரித்தல், இலக்குகளையும் சிறப்பு முதலிடங்களையும் குறித்தல், துறைகளிடையே தகுந்த சமநிலைகளை நிலைநாட்டுதல், ஊழலற்ற திறமையான நிர்வாகம், தகுந்த வளர்ச்சிக் கொள்கை, நிர்வாகச் சிக்கனம், பரவலான கல்வி முறை, பொது மக்களின் ஒத்துழைப்பு, குறிக்கோள்களையும் சிறப்புக் கொள்கைகளையும் அமைத்தல், வளங்களையும் முதலீட்டு இலக்குகளையும் அமைத்தல், பொருளாதாரக் கொள்கைகளை அமைத்தல், திட்டத்தைச் சோதித்தலும் கையாளுதலும், மனித வளங்களின் முக்கியத்துவத்தை உணர்தல், போன்ற திட்டச்

[1] D. R. கட்கில் (Gadgil), 'இந்தியாவின் திட்டமும் பொருளாதாரக் கொள்கையும்' ப. 88.

செயல் முறைகள் எல்லா நாடுகளுக்கும் பொதுவானவைகளே யாகும். எனினும் திட்டங்களுக்கு நிதியிடுதல், (Financing of the Plans) வளர்ச்சிக்கான ஊக்கிகளை அளித்தல், திட்டத்தின் நிர்வாகச் செயல்முறை. அமைப்பு, நடைமுறை போன்ற நடவடிக்கைகளில் நாடுகளிடையே வேறுபாடு ஏற்படுகிறது. சுதந்திரத் தொழில் முறையைக் கொண்ட பொருளாதாரங்களில் மறைமுகமான திட்டக் கொள்கை பின்பற்றப்படுகிறது. இத் திட்டமுறை பெரிதும் பரந்த நிலையுடையதாக உள்ளது. சுதந்திரத் தொழில் பொருளாதாரங்களில் திட்டமிடுதல் மிகவும் சிக்கலானதாக உள்ளது. எனவே, திறமையும் தீவிர சிந்தனையும் கொண்ட நிபுணர்களைப் பெருமளவில் தோற்றுவித்தால்தான் வளர்ச்சி குறைந்த நாடுகளில் வளர்ச்சித் திட்டங்களின் மூலம் சுயமான மேலெழு நிலையை (Take-off stage) விரைவில் சாதித்துப் பொருளாதார முதிர்ச்சியையும், உயர்பெரும் நுகர்வையும் பெற முடியும்.

# 39. இந்தியப் பொருளாதாரத் திட்டத்தின் வரலாறும் குறிக்கோளும்

## (History and Objectives of Planning in India)

இந்தியப் பொருளாதாரத் திட்டத்தின் தலையாய குறிக்கோள் பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகளைத் தோற்றுவித்து, அதன் மூலம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி, அவர்களுக்கு உயர்ந்த, பல்வேறு வசதிகளைக் கொண்ட வாழ்க்கை முறையை அளிப்பதாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் வளர்ச்சியை அதிகரிக்கச் சமுதாயத்தின் ஆக்க வளங்களை முழு அளவில் சிக்கன மாகத் திறமையுடன் ஆக்கத்திற்காகப் பயன்படுத்துவது மிகவும் சிக்கல் நிறைந்த நடவடிக்கையாகும். எனவேதான் இந்தியா போன்ற நாடுகளில் பொருளாதாரத் திட்டத்தை நடைமுறைப் படுத்த வேண்டிய கட்டாய நிலை உள்ளது. ஒரு நாட்டின் பரந்த சமூகச் சூழ்நிலை, அமைப்பு ஆகியவைகளின் அடிப்படையில்தான் ஒரு குறித்த காலத்தில் நாட்டின் பொருளாதார நிலைமையும் அமையும். எனவே, பொருளாதாரத் திட்டமென்பது வளங்களை வளர்ச்சியடையச் செய்யும் குறுகிய நடவடிக்கைகளோடு முடிந்து விடாது. இயற்பொருள் வளங்களை வளர்ச்சியடையச் செய்வ தோடு மனித வளங்களையும் சீர்படுத்தி, வளர்ச்சியடையச் செய்ய சமூக நிறுவன அமைப்புகளையும் மாற்றி அமைக்க வேண்டிய ஒருங்கிணைந்த செயல் முறைகளைப் பொருளாதாரத் திட்டம் உள்ளடக்குகிறது. மக்களின் தேவைகள், ஆர்வங்கள் ஆகியவை களுக்கேற்ற நிறுவன அமைப்புகளைத் திட்டத்தின் மூலம்தான் ஏற்படுத்த முடியும்.

திட்டத்தின் செயல்முறைகளின்போது தொழில் நுட்ப அம்சங்களுக்கும், சமூக அம்சங்களுக்குமிடையே ஒரு நெருங்கிய ஒருங்கியைவை ஏற்படுத்தினால்தான் திட்டம் மகத்தான வெற்றி யடைய முடியும். மக்களும் சமூக மாற்ற அம்சமே திட்டத்தின் ஒருங்கிணைந்த வெற்றிக்கு அடிப்படையான கருவி என்று உணர்ந்து அதைத் தகுந்த முறையில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் சீர்படுத்தத் துணைபுரிய வேண்டும். திட்டத்தின் செயல் முறைகள்

மக்களின் வாழ்க்கைத் தரத்தை இரு மடங்காக்குதல் போன்ற குறித்த அல்லது மாறு நிலையில் (Static point) முடிவடைந்து விடும் ஒரு நடவடிக்கை முறை அல்ல. அது இயங்கு சக்தியை (Dynamism) பொருளாதாரத்தில் தோற்றுவித்து, மக்களின் பொருள்சார் நலம், அறிவாற்றல், பண்பாட்டின் உன்னதநிலை ஆகியவைகளைத் தொடர்ந்து மேம்படுத்தத் தகுந்த வழிமுறை களை எப்போதும் கையாள வேண்டும்.

இந்தியாவில் தற்போது இருந்துவரும் மக்களின் வாழ்க்கைநிலை மிகவும் கீழ்நிலையிலேயே உள்ளது. இந்தியாவில் உற்பத்தி செய்யப் படும் பொருள்கள் மக்களின் குறைந்தபட்சத் தேவைகளையும் பூர்த்தி செய்யப் போதுமானதாக இல்லை. மக்களில் பெரும் பாலோர்க்கு நல்வாழ்வு அளிப்பதற்குத் தேவையான பணிகள், வசதிகள் ஆகியவைகளை ஏற்படுத்தப் பெரும் இடர்ப்பாடுகளை மேற் கொண்டு அவைகளை வளர்ச்சியடையச் செய்ய வேண்டியநிலை உள்ளது. நாட்டில் ஒரு சில பகுதிகள் அல்லது பிராந்தியங்கள் வளர்ச்சியடைந்தவைகளாக இருக்க மற்றப் பெரும்பாலான பகுதிகள் மிகவும் பிற்பட்ட நிலையிலேயே உள்ளன. மக்களில் பெரும்பாலான வகுப்பினர்க்கு நவீன முற்பட்ட கருத்துகளும் நுட்பத்தொழில் முறையும் அறியப்படாத நிலையிலேயே உள்ளன.

1934-ல் திரு M. விஸ்வேஸ்வரையா என்பவர் 'இந்தியா விற்குத் திட்டமிட்ட பொருளாதாரம்' (Planned Economy for India) என்ற நூலை முதன்முதலில் எழுதினார். அவரே இந்தியாவிற்குத் திட்டம் வேண்டும் என்ற கருத்தை முதன்முதலில் வெளியிட்டார். 1937-ல் இந்திய தேசிய காங்கிரஸ் முதல் முதலாக இந்தியாவிற்குத் திட்டம் மிகவும் இன்றியமையாதது என்று கருதி, பண்டித ஜவஹர்லால் நேருவைத் தலைவராகக் கொண்ட ஒரு திட்டக்குழு (Planning Committee)வை நியமித்தது. இக் குழு நாடு முழுவதிற்குமாக ஒரு முழு விவரங்களடங்கிய பொருளாதாரத் திட்டத்தைத் தீட்டவேண்டிய நிலையில் இருந்தது. ஆனால், நாட்டில் அரசியல் குழப்பம் ஏற்பட்டதால் இக் குழுவின் பணிகள் தடைபட்டன. அதற்குப்பின் பேராசிரியர் K. T. ஷா என்பவர் தடைபட்ட பணியை மீண்டும் தொடங்கி ஏராளமான அறிக்கைகளை அச்சடித்து வெளியிட்டார். மாகாண அரசாங்கங்களும் தங்கள் கிராமச் சீரமைப்புத் திட்டங்களைத் தீட்டினர். சான்றாகப் பம்பாய் மாகாணக் கிராமங்களின் வளர்ச்சிக் காக ரூ 60 கோடி திட்டமொன்று தீட்டப்பட்டது. அதேபோல் மத்திய அரசின் பல்வேறு துறைகளும் தனித்தனியாகத்திட்டங்கள் தீட்டின. 1944-ல் திரு. எ. தலால் (A. Dalal) அவர்களின் பொறுப்பிலும், பேராசிரியர் C. N. வக்கீல் அவர்கள் பொருளாதார

நிபுணராகவும் வீற்றிருந்த திட்டம், வளர்ச்சிக்கான துறை (Department of Planning and Development) ஒன்று ஏற்படுத்தப் பட்டது. மத்திய அரசால் ஒரு புனராக்கக் குழுவும் (Reconstruction Committee) நிறுவப்பட்டது திட்ட காலத்திற்கு. முன் தொழிலதிபர்களால் ரூ. 10,000 கோடி மதிப்புடைய 'பம்பாய்த் திட்டம்' (Bomboy Plan) என்ற பெயருடைய திட்டமும், திரு. M. N. ராய் (Roy) அவர்களின் 'மக்களுக்கான திட்டமும், (People's plan) ஆகிய இரு முக்கியத் திட்டங்கள் வரையப்பட்டன. திரு. G. D· பிர்லா அவர்களும் ஐந்தாண்டுத் திட்டமொன்றைத் தயாரித்தார்.

இந்தியத் திட்டத்தின் வரலாறு

வளர்ச்சிச் செயல் முறைகளைத் தோற்றுவித்து வழிகாட்ட' அரசு தகுந்த பங்கேற்றுத் திட்ட நடவடிக்கைகளின் மூலம் பொருளாதார, சமூக அம்சங்களைச் சீர்படுத்த வேண்டுமென்பதை உணர்ந்து இந்திய அரசு ஏற்றுக்கொண்டது. விடுதலைப் போராட்ட காலங்களிலும், பொருளாதார, சமூக மாற்றத்தைப் பெறத் திட்டமே ஒருமிகச் சிறந்த திறம்பட்ட முறையாகக் கருதப்பட்டது. ரஷ்யா பொருளாதாரத் திட்டங்களின் மூலம் தன் பொருளா தாரத்தைச் சீரமைத்துப் புனராக்கம் செய்வதில் வெற்றி கொண் டதை அறிந்த இந்திய மக்களின் சிந்தனையும் திட்டத்தில் மேலும் வலுப்பெற்றது. இருபதாம் நூற்றுண்டின் 1930-க்கும் 1940-க்கும் இடைப்பட்ட காலத்தில் இந்தியாவில் திட்ட உணர்வின் அலைகள் எல்லா மக்களின் உள்ளங்களிலும் எழுச்சியை ஏற்படுத்தியது.

(1) பம்பாய்த் திட்டம் (Bombay Plan)

இத் திட்டம் 15 ஆண்டுகளில் ஆண்டுக்கு மக்கட் தொகையின் அதிகரிப்பு வீதம் 5 மில்லியனுக அதிகரிக்கும் என்ற எண்ணத்தில் தலா வருவாயை இரு மடங்காக்கும் குறிக்கோளைப் பெற்றிருந்தது. இத் திட்டத்தின் மதிப்பிடப்பட்ட செலவு ரூ. 10,000 கோடி யாகும். இதில் தொழிலுக்கு ரூ. 4,480 கோடியும், வேளாண் மைக்கு ரூ. 1,240 கோடியும், செய்தித் தொடர்புக்கு ரூ. 94 கோடியும், மீதி, கல்வி, வீட்டுவசதி, சுகாதாரம் போன்றவைகளுக் காகவும் ஒதுக்கப்பட்டது. இதற்கு வேண்டிய நிதிவசதியை உள்நாட்டிலும், வெளிநாட்டிலுமாக முறையே ரூ. 2,600 கோடியும், ரூ. 7,400 கோடியும் பெறுவதற்கு வகை செய்யப் பட்டது. இத் திட்டம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஐந்தாண்டுக் காலத் திட்டத்தை உள்ளடக்கி

இருந்தது. இத் திட்டம் நிகர வருமானத்தைக் கீழ்க்கண்டபடி அதிகரித்திருக்கும் என்று கருதப்படுகிறது.[1]

| | 1931—32ல் நிகரவருவாய் | 15 ஆண்டுகளுக்குப் பிறகு நிகர வருவாய் | சதவீத அதிகரிப்பு |
|---|---|---|---|
| தொழில் துறையில் | 374 கோடி | 2,240 கோடி | 500% |
| வேளாண்மைத் துறையில் | 1,166 கோடி | 2,670 கோடி | 130% |
| பணித் துறைகளில் (From Services) | 484 கோடி | 1,450 கோடி | 200% |

(2) மக்களின் திட்டம் (People's Plan)

பம்பாய்த் திட்டத்திற்கு ஒப்பாகத் தீவிர ஜனநாயகக் கட்சியின் திரு. M. N. ராய் அவர்கள் இத் திட்டத்தைத் தயாரித்தார். இத் திட்டம் ரூ. 15,000 கோடி எதிர்பார்க்கப்பட்ட செலவில் 10 ஆண்டுகளில் உடை, உணவு, இருப்பிடம், ஆகிய மக்களின் அடிப்படைத் தேவைகளைத் பூர்த்தி செய்யும் நோக்கத்தைக் கொண்டிருந்தது. ரஷ்ய, ஜெர்மானியத் திட்டங்களின் மகத்தான வெற்றியைக் கண்டு ஆவேசம் கொண்ட திரு. M. N. ராய் வேளாண்மையைத் தேசிய மயமாக்க வேண்டுமென்றும், கிராமக் கடன்களைத் தீர்த்துக் கட்ட வேண்டுமென்றும் வாதாடினர்.

15 ஆண்டுகளுக்கான மூலதன வருவாய் அம்சங்களின் குறிக்கப்பட்ட முதலீடு:

| | | ரூபாய்களில் |
|---|---|---|
| வேளாண்மை | ... | 2,950 கோடி |
| செய்தித் தொடர்பு | ... | 1,500 கோடி |
| சுகாதாரம் | ... | 760 கோடி |
| கல்வி | ... | 1,440 கோடி |
| வீட்டுவசதி | ... | 3,150 கோடி |

[1] B. கிஷோர். B. P. சிங், 'திட்டத்தின் கண்ணோட்டத்தில் இந்தியப் பொருளாதாரம்' ப. 107.

(3) காந்தியத் திட்டம் (Gandhian Plan)

முதல்வர் S. N. அகர்வால் (முன்னாள் திட்டக்குழு உறுப்பினர்) காந்தியத் திட்டமென்ற மாற்றுத் திட்டமொன்றைத் தயாரித்தார். அது ரூ. 3,500 கோடி மதிப்பிடப்பட்ட செலவைக் கொண்ட ஒரு சிறிய சாதாரணத் திட்டமாக இருந்தது. அதன் அடிப்படை நோக்கம் சுய நிறைவைக் கொண்ட கிராமங்களுடன் பரவலாக்கப்பட்ட ஒரு பொருளாதார அமைப்பை ஏற்படுத்துவதாகும். தொழிலைவிட வேளாண்மைக்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. தொழில்களிலும் பேரளவுத் தொழில்களைக் காட்டிலும் சிற்றளவுத் தொழில்களுக்கே சிறப்பிடம் அளிக்கப்பட்டது.

(4) போருக்குப் பிந்திய சீரமைப்புத் திட்டங்கள்
(Post - war Reconstruction Plans)

1944-ல் இந்திய ஆங்கிலேய அரசு திரு. அர்டேசிர் தலால் (Ardeshir Dalal) என்பவரைத் தலைவராகக் கொண்ட ஒரு திட்டத் துறையை (Planning Department) ஏற்படுத்தியது. இத் துறை ஏராளமான வளர்ச்சித் திட்டங்களை இரண்டாம் உலகப் போர் முடிவுற்றப்பின் செயற்படுத்த வேண்டிய நிலையில் இருந்தது. பல்வேறு குறுகிய கால, நீண்டகாலத் திட்டங்களைப் போருக்குப்பின் இத் துறை செயலாற்ற வேண்டியிருந்தது.

1946-ல் இடைக்கால அரசாங்கம் ஆலோசனைத் திட்டச் சபை ஒன்றை (Advisary Planning Board) ஏற்படுத்தித் திட்டப் பிரச்சினைகள் முழுவதையும் ஆராயச்செய்து மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை அரசுக்குப் பரிந்துரைக்க வேண்டியிருந்தது.

(5) இந்தியாவிற்குக் கொழும்புத் திட்டம்
(The Colombo Plan for India)

மார்ச் 1950-ல் இந்திய அரசு பிரதம மந்திரியைத் தலைவராகக் கொண்ட ஒரு திட்டக்குழுவை (Planning Commission) நியமித்தது. இந்தியாவிற்குக் கொழும்புத் திட்டமொன்றைத் தீட்டும்படி இக் குழுவை அரசு கேட்டுக்கொண்டது. இத் திட்டம் பிறகு தென் கிழக்கு ஆகிய நாடுகளுக்கான பரந்த திட்ட அமைப்புடன் பொருந்துமாறு செய்யப்பட்டது. கொழும்புத் திட்டம் ஒரு ஆறு வருடத்திற்கான திட்டமாகும். அதன் குறிக்கோள், உணவு தானியங்கள், தொழில் மூலப்பொருள்கள், வினைமுடிந்த பொருள்கள், ஆகியவைகளின் உற்பத்தியை அதிகரித்துத் தென் கிழக்கு ஆசிய மக்களின் வாழ்க்கைத் தரத்தைச் சீராக்குவதாகும். இந்தியாவில் இத் திட்டத்தில் 1951—56-க்கும் இடைப்பட்ட காலத்தில்

வளர்ச்சித் திட்டங்களுக்காக ரூ. 1839 கோடி செலவிடத் தீர்மானிக்கப்பட்டது. கொழும்புத் திட்டம் இந்தியாவில் நடைமுறைப் படுத்தப்படவில்லை. அதனால் அதன் முக்கிய வளர்ச்சித் திட்டங்கள் பின்பு இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டாக இணைக்கப்பட்டன.

திட்டக்குழு (Planning Commission)

அரசாங்கக் கொள்கையின் வழிகாட்டி நெறிமுறைகளின் (Directive Principles of State Policy) அடிப்படையில் இந்தியத் திட்டக்குழு தோன்றியது. இக் கொள்கையின் அடிப்படைத் தத்துவம் நீதி, சமூக, பொருளாதார, அரசியல், சமூக ஒழுங்கைத் திறம்படப் பாதுகாத்து மக்களின் நலனை மேம்படுத்துவதாகும். மார்ச் 1950-ல் திட்டக்குழு அமைக்கப்பட்டது.

அதன் முக்கியப் பணிகள் பின்வருமாறு

(i) நாட்டின் மூலப் பொருள்கள், மூலதனம், நுட்பத்தொழிற் பணியாள்களை உள்ளடக்கிய மனிதவளங்கள், ஆகியவைகளின் மதிப்பைக் கணக்கிட்டு இவ் வளங்களை, மேலும் பெருக்குவதற்கான வழி முறைகளைப் பரிசீலிப்பதாகும்.

(ii) நாட்டின் வளங்களைச் சரிசமமாகவும், மிகத்திறம் படவும் பயன்படுத்துவதற்கான திட்டத்தை வகுத்தலாகும்.

(iii) பொருளாதார வளர்ச்சியைத் தடுக்கும் இயல்புடைய காரணிகளைக் கண்டறிந்து, இருந்துவரும் சமூக, பொருளாதார நிலைமைக் கேற்ற வகையில் வளங்களை அமைத்துத் திட்டத்தை வெற்றிகரமாக நடைமுறைப் படுத்துவதாகும்.

(iv) திட்டத்தின் நடைமுறையின் ஒவ்வொரு கட்டத்திலும் சாதித்த முன்னேற்றத்தை அவ்வப்போது மதிப்பீடுசெய்து, கொள்கைக்கும் நடவடிக்கைகளுக்குமிடையே தேவையான ஒருங்கியைவை மதிப்பிட்டு அரசிற்குப் பரிந்துரைத்தலாகும். திட்டக்குழுவின் ஓர் உயர் மேல் அங்கமாகத் தேசிய வளர்ச்சிச் சபை (National Development Council) அமைந்துள்ளது. முதலீட்டைப் பற்றிய எல்லாத் தீர்மானங்கள், பல்வேறு துறைகளில் எதிர்கால வளர்ச்சிப் பாங்கு (Pattern of future growth) ஆகியவைகளை இவ் வளர்ச்சிச் சபை தீர்மானிக்கிறது. திட்டக்குழுவிற்கு அரசியல் அமைப்புச்சார் (Constitutional) அல்லது சட்ட முறையான (statutory) நிர்வாக அதிகாரம் ஒன்றும் அளிக்கப்படவில்லை. அது அரசுக்கு ஒரு அடிப்படை ஆலோசனை சபையாகவே செயல்புரிகிறது. திட்டக் குழு ஒரு பல் உறுப்பினர் (Multi-

member) களைக்கொண்ட அமைப்பாகும். அது ஏராளமான பல்வேறு துறைகளின் பொறுப்பைப் பெற்றுள்ள முழு நேர உறுப்பினர்களையும் (Full time members) மேல் வரிசையிலிருக்கும் அமைச்சரவையின் அமைச்சர்களையும் இக் குழு தன் உறுப்பினர்களாகப் பெற்றுள்ளது. ஆரம்பத்திலிருந்தே இந்தியப் பிரதமர் திட்டக் குழுவின் தலைவராக இருந்துவருகிறார். அரசு கொள்கையின் வழிகாட்டித் தத்துவக் கொள்கைகள் டிசம்பர் 1954-ல் துல்லியமாக விளக்கப்பட்டு, 'சமதர்ம சமுதாய முறை'யே (Socialistic pattern of society) சமூகப் பொருளாதாரக் கொள்கையின் முக்கிய நோக்கமாக அரசு பின்பற்றி வருகிறது. எனவே, ஜனநாயக சமதர்ம (Democratic socialism) அமைப்பின் அடிப்படையில் திட்டமிட்ட வளர்ச்சி முறையைச் சாதிப்பதற்காகத் திட்டக்குழு முயன்று வருகிறது.

திட்டத்தின் அடிப்படைத் தத்துவம்
(Philosophical Basis of Planning)

திட்டமிட்ட வளர்ச்சியின் முறையை வர்ணிக்கும் போது இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம் கீழ்க்கண்டவாறு குறிப்பிட்டது. "இருந்துவரும் சமூக, பொருளாதார நிறுவன அமைப்புகளின் அடிப்படையில் சிறந்த பலன்களைப் பெறுவது மட்டுமே ஒரு வளர்ச்சிகுறைந்த நாட்டின் திட்டப்பணியாக இல்லை. ஆனால், இந் நிறுவனங்களைச் சீர்படுத்தி மறுவடிவம் தந்து, அவைகள் பரந்த உன்னத சமூக இயல்புகளைத் திறம்பட ஏற்படுத்தவும் வகை செய்ய வேண்டும்."[1]

"இவ்வியல்புகள் அல்லது அடிப்படைக்குறிக்கோள்களே 'சமதர்ம சமுதாயமுறை' என்னும் தொடரில் அடங்கியுள்ளன. அத்தகைய ஒரு சமுதாயத்தின் இன்றியமையாத அம்சங்களை இந்தியத் திட்டக்குழு மூன்றும் திட்டத்தில் சிறப்பாகத் தொகுத்துரைத்துள்ளது." [2]

"முன்னேற்ற வழிகளை நிர்ணயிக்கும் அடிப்படைத் தத்துவமாக விளங்குவது தனியார் இலாபமல்ல, ஆனல் சமூக இலாபமாகும். சமூகப் பொருளாதார உறவுகளின் அமைப்பு தகுந்த முறையில் திட்டமிடப்படுவதின் விளைவாகத் தேசிய வருவாயும் வேலைவாய்ப்பும் குறிப்பிடத் தக்க வகையில் அதிகரித்து வருமான, செல்வங்களில் சமநிலையேற்பட வேண்டும். உற்பத்தி, பகிர்வு, நுகர்வு, முதலீடு ஆகியவைகளைத்

1 இந்திய அரசு. திட்டக்குழு: இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் ப. 22.
2 இந்திய அரசு, திட்டக்குழு மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் ப. 5

தீர்மானிப்பவர்கள் சமூகக் குறிக்கோளை அறிந்த நடுவர்களாக இருக்க வேண்டும். பொருளாதார வளர்ச்சியின் நன்மைகள் சமுதாயத்தில் மிகக் கீழ் நிலையில் இருப்பவர்களுக்குப் பெருமளவில் பயன்படவேண்டும். வருமான, செல்வ, பொருளாதாரச் சக்தியின் குவிப்பு படிப்படியாகக் குறைக்கப்பட வேண்டும். நாட்டின் வளர்ச்சியில் இதுகாறும் குறைந்த ஆர்வத்தைப் பெற்றிருந்த சிறிய மனிதர்கள் தங்களது வாழ்க்கைத் தரம் உயர்வதற்காகவும், நாட்டில் செழிப்பு அதிகரிப்பதற்காகவும், ஒருங்சமைந்த முயற்சிகளை மேற்கொள்ளச் செய்ய வேண்டும். இந் நடைமுறைகளின் மூலமாக அச்சிறு மனிதர் தன் பொருளாதார சமூக அந்தஸ்தை உயர்த்த முடிகிறது.''

எனவே, சமதர்ம சமுதாயம் உற்பத்தியை அதிகரித்துப் பொருளாதார சமூக ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க வகை செய்யும் என்று கருதப்படுகிறது இவ்விரண்டும் சமதர்ம சமுதாய முறைக்கு அடிப்படைக் கற்களாக உள்ளன. இத் தத்துவத்தின் அம்சங்களைத் தெளிவாக அறியக் கீழ்க்கண்ட சமதர்ம சமுதாய முறை இயல்புகளை ஆராயவேண்டும்.

## சமதர்ம சமுதாய முறையின் முக்கிய அம்சங்கள்

### 1. குறைந்த பட்ச அடிப்படை வாழ்க்கைத் தரத்தை அளித்தல்

உணவு, உடை, உறைவிடம், கல்வி, சுகாதாரம், மருத்துவ வசதிகள் போன்ற அடிப்படைத் தேவைகளை மக்களுக்கு அளிப்பதற்குப் பொருளாதாரத்தின் வளர்ச்சி அவசியமாகிறது. பணி புரியும் வாய்ப்பை அதிகரிப்பதின் மூலமாகவோ, குறைந்த பட்ச வருமான மட்டத்தை உறுதியாக்குவதன் மூலமாகவோ இதைச் சாதிக்க முடியும்.

### 2. பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை குறைத்தல்

இந்தியாவில் திட்டத்தின் மூலம் ஆக்கவளங்களனைத்தையும் தகுந்த முறையில் ஒருங்கமைத்து, சமூக உறவுகளைச் சீரமைத்து வளர்ச்சியை மேம்படுத்துவது மிகவும் சிக்கலானதாக உள்ளது. எனவே, ஐந்தாண்டுத் திட்டங்கள் வளர்ச்சியை அதிகரிப்பதோடு கூடவே சமூக, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையும் குறைக்க வேண்டும். தற்போது இந்தியாவில் தீவிரமான ஏற்றத்தாழ்

வுகள் காணப்படுகின்றன. எனவே, திட்ட நடைமுறையின் போது இவ்வேற்றத் தாழ்வுகளைக் குறைக்க வகை செய்ய வேண்டும். மேலும், வளர்ச்சியின் போது புதிதாக ஏற்றத்தாழ்வுகள் தோன்றி இருந்துவரும் ஏற்றத்தாழ்வுகளின் இடைவெளியை மேலும் அதிகரித்து விடாதவண்ணம் கண்காணிக்க வேண்டும். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதுபோல், "ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கும் நடவடிக்கை இருவகைப் பட்டதாகும். அது கீழ் மட்டத்திலுள்ளவர்களின் வருவாயை உயர்த்தி, மேல்மட்டத்திலுள்ளவர்களின் வருவாயையும் அதே சமயத்தில் குறைக்க வேண்டும். முன்னைய முறை, அடிப்படையிலேயே மிகவும் முக்கியமான செயல் முறையாகும். ஆனால், பின்னைய அம்சத்திலும் தகுந்த குறிக்கோளைக் கொண்ட நடவடிக்கை காலம் தாழ்த்தாது மேற்கொள்ளப்பட வேண்டும். ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கும் நடவடிக்கைகளால் ஆக்கச் செயல் முறை (Productive system) சிறிதும் பாதிக்கப்பட்டு விடாமல் கண்ணும்கருத்துமாய்த் திட்டமிட வேண்டும். ஏனெனில் அவ்வாறு செய்யாவிட்டால் வளர்ச்சியே அபாயகரமான முறையில் சீர்குலைந்துவிடும். இதன் விளைவாக ஜனநாயக மாற்ற முறையே வலுப்பெறுவதற்குப் பதிலாகச் சீர்கெட்டுவிடும். ஆனால், ஜனநாயக ஒழுங்குமுறையைக் கொண்ட மாற்றம் இருக்க வேண்டுமென்பதற்காக இருந்துவரும் அல்லது புதிதாகத் தோன்றும் ஏற்றத்தாழ்வுகளை அனுமதிக்கலாகாது."[1]

## 3. பொருளாதாரசக்திக் குவிப்பும், சர்வாதீனப் போக்கின் வளர்ச்சியும் தடுக்கப்படல்

கடந்த பத்தாண்டுகளாகத் தனியார் துறை நிறுவனங்களின் வளர்ச்சியிலிருந்து சர்வாதீனப்போக்கும், பொருளாதார சக்திக்குவிப்பும், இல்லாமல் பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்கும் வழிமுறைகளை வெளிப்படையாக ஆராயமுடிகிறது. விரைவான பொருளாதார வளர்ச்சியின்போது நிலையான நிறுவனங்கள் தங்கள் அளவைப் பெருக்கவும், புதுத் தொழில் நிறுவனங்களை ஆரம்பிக்கவும் பெருமளவில் வாய்ப்பு அதிகரிக்கிறது. நிலையான தொழில் நிறுவனங்கள் சிறுதொழில்களைவிட அல்லது புது நிறுவனங்களைவிடப் பல வசதிகளைப் பெற்று விரைவாக வளர்ச்சியடைகின்றன. அவர்களுக்குச் சிறந்த தொழில் அமைப்பும் அனுபவமும், முதல் அங்காடியிலிருந்து நிதிபெற வாய்ப்பும், வெளிநாட்டுத் தொழில் ஒத்துழைப்பைப் பெறும்

1 இந்திய அரசு, திட்டக்குழு, இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், ப. 33.

திறமையும், வளங்களைச் சீராகப் பயன்படுத்தும் ஆற்றலும் இருக்கிறது. தனியார் நிறுவனத்துறையில்தான் தொழில் துறையின் முதலீட்டில் பெருமளவு முதலீடு செய்யப்படுகின்றது. இதனால் புதிதாகத் தோன்றும் நிறுவனங்களைவிட ஏற்கெனவே இருக்கும் நிலையான நிறுவனங்கள் விரைவான வளர்ச்சியைப் பெறுகின்றன. பேரளவு நிறுவனங்கள் தொழில் நுட்ப உற்பத்தி முறையினால் உற்பத்திச் செலவையும் மூலதனச் செலவையும் குறைத்துச் சேமிப்பை அதிகரிக்கவும் முடிகிறது. இதனால் வளர்ச்சியின் நடை முறையில் சில சிக்கல்கள் தோன்றுகின்றன. ஐந்தாண்டுத் திட்டங்களில் குறிக்கப்படும் இலக்குகளையும் சிறப்பு முன்வரிசை (Priorities) துறைகளையும் பேரளவு நிறுவனங்கள் உற்பத்தியளவுச் சிக்கனங்களைப் பயன்படுத்திச் சாதித்துப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிகின்றன. ஆனால் இத்தகைய சில நிறுவனங்களிடம் மிதமிஞ்சிய பொருளாதார சக்தி குவிந்து விடுவதால் மக்களாட்சியில் சமமான சக்தி குலைக்கப்பட்டுச் சமுதாய அமைப்பில் புதிய சச்சரவுகளையும், சிரமங்களையும் ஏற்படுத்திப் பொருளாதார சந்தர்ப்பங்கள் எல்லோருக்கும் பரவலாக்கப் படுவது தடுக்கப்பட்டுவிடுகிறது. இதைப் போக்குவதற்கு வளர்ச்சி பாதிக்கப்படாத முறையில் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

## 4. சமூக நன்மைக்காக உற்பத்தியைப் பெருக்குதல்

சமதர்மக் கொள்கையின் மூலம் பொருளாதார நடவடிக்கைகளின் குறிக்கோள் இலாபமீட்டுவதைக் காட்டிலும், சமூக நன்மையை அதிகரிப்பதாக இருக்கச் செய்யவேண்டும். இரண்டாம் திட்ட அறிக்கை குறிப்பிட்டிருப்பதுபோல், ''வளர்ச்சியின் போக்கைத் தீர்மானிக்கும் அடிப்படைக் கருத்தாக இருக்கக் கூடியது, தனியார் இலாபமாக இருக்காமல் சமூக நன்மையாக இருக்க வேண்டும். வளர்ச்சியின் பாங்கு, சமூக, பொருளாதார உறவின் அமைப்பு ஆகியவைகள் சீராகத் திட்டமிடப்பட்டு, தேசிய வருவாயும், வேலை வாய்ப்பும் குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்து, வருமான, செல்வச் சமத்துவத்தை அதிகப்படுத்த வேண்டும். உற்பத்தி, பகிர்வு, நுகர்வு, முதலீடு, ஆகிய பிரதான அம்சங்களைத் தீர்மானித்தல்—உண்மையில் சமூக, பொருளாதார உறவைச் சீரமைத்தல்—ஆகியவைகளைச் சமூகக் குறிக்கோளைக் கொண்ட பதிலாள்கள் நடைமுறைப்படுத்த வேண்டும்.''[1] இதை அடைவதற்குத் தேவையான வளங்களைச் சேகரிப்பதோடு, ஒரு வகை நுகர்ச்சிமுறை, வளங்களை முறையுடன் பயன்படுத்தும் வழி

[1] இந்திய அரசு, திட்டக்குழு, இரண்டாம் ஐந்தாண்டு திட்டம், ப. 22

முறைகள். ஆகியவைகளையும் மேம்படுத்த வேண்டும். பொருளாதார வளர்ச்சி முறையில், தனியார், பொது, ஆகிய இரு துறைகளும் தகுந்த பங்கினைப் பெற்றுச் செயல் புரியும்போது தக்க பொருளாதாரக் கொள்கைகளுக்கான குறிக்கோள்களின் அடிப்படையில் தனியார் துறையில் வளங்கள் ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும். ஏனெனில் தனியார் மூதலீடுகளைக் கண்காணிக்காவிட்டால் அவைகள் செலவு, வருவாய்க் கணக்கைப் பார்த்து, இலாபம் அதிகமாகக் கிடைக்கும் தொழில்களில் மட்டுமே முதலீடு செய்யப்படும். பொதுத்துறை முதலீடுகளைப்போல், பொருளாதாரத்தின் நீண்டகால முழு எதிர்நோக்குத் தேவைகளைக் கருத்தில் கொண்டு தனியார் துறை முதலீடு செய்வதில்லை. வளங்களை நேரடியாகக் கட்டாயப்படுத்திப் பயன்படுத்துவது ஜனநாயகத் திட்டமுறைக்கு எதிரானதாகும். வளங்களின் ஒதுக்கீடு பெரும்பாலும் விலை நடவடிக்கை முறை (Price mechanism) யின் மூலமே ஜனநாயகத் திட்ட முறையில் நடைபெறுகிறது. இக் குறிக்கோளை இருவகைகளில் அடைய முடியும். முதலாவதாக, பணமுறைக் கொள்கை, நிதிமுறைக் கொள்கைகளின் மூலம் பொருளாதார நடவடிக்கைகள் முழுவதையும் ஒழுங்குபடுத்த வேண்டும். இரண்டாவதாக, ஏற்றுமதி, இறக்குமதிக் கட்டுப்பாடு, தொழில்கள் அல்லது வர்த்தகத்திற்கு உரிமம் வழங்குதல், விலைக்கட்டுப்பாடு, குறிப்பிட்ட சில துறைகளில் பொருளாதார நடவடிக்கைகளைச் சீராக்க வளங்களை ஒதுக்கீடு செய்தல் போன்ற செயல்முறைகளாலும் மேற்குறிப்பிட்ட குறிக்கோள்களை அடைய முடியும். பணமுறை, நிதிமுறை, நடைமுறைகளின் மூலம், பொருளாதார நடவடிக்கைகளில் ஏற்றத்தாழ்வுகளை ஒழுங்குபடுத்தி, வளங்களை ஒரு குறிப்பிட்ட போக்கில் பயன்படச் செய்யவும் முடிகிறது. இம் முறைகளின் மூலமாகமட்டும் சிறப்பிடம் பெற்றுள்ள துறைகளை வளர்ச்சியடையச் செய்யவும், முதலீட்டை அதிகரிக்கவும் இயலாது. எனவே, இரண்டாம் வகை முறைகளையும் பின்பற்ற வேண்டும்.

பொருளாதார வளர்ச்சியின்போது திட்ட முதலீட்டால் தோன்றும் புதிய வருவாய்க்கும், பொருள்களின் அளிப்பு அதிகரிப்புக்கும் இடையே எப்போதும் ஓர் இடைவெளி இருந்து கொண்டேயிருப்பதால் பணவீக்க அழுத்தங்கள் தோன்றுகின்றன. இப் பற்றுக் குறையைத் தீர்க்கப் பொருள்களின் அளிப்பை அதிகரிப்பது இன்றியமையாததாகும். உள்நாட்டு அளிப்பின் பற்றுக் குறையைச் சரிசெய்ய இறக்குமதி மிகவும் அவசிமாகிறது. ஆனால், இறக்குமதியையே முழுவதுமாக நம்பியிருக்க முடியாது. ஏனெனில் தேவையான இறக்குமதிப் பொருள்கள் கிடைக்காமல் போகலாம் அல்லது வளங்கள் முக்கியமான உபயோகத்திலிருந்து

திசை திருப்பப்பட வேண்டிய நிலையேற்படலாம். அதே போல் உள்நாட்டு வளங்களும் முதலீட்டிலிருந்து நுகர்வுத் துறைக்குத் திசைத் திருப்பப்படலாம். இதற்காகத் திட்டம் முழுவதையும் சிரமத்திற்குள்ளாக்காமல் பொருள் கட்டுப்பாடுகளை (Physical Control) மட்டும் மேற்கொள்ளுதல் மிகவும் அவசியமாகும். எனவே, சில குறிப்பிட்ட சமயங்களில் இன்றியமையாத நுகர்வைக் கட்டுப்படுத்தாமல் இருக்க முடியாது. இக் கட்டுப்பாடுகளே நிலைமையைச் சீர்படுத்தப் போதுமானதாக இருக்க முடியாது. இம் முறைகளோடு கூடவே அளிப்பை அதிகரிக்கும் நடவடிக்கை களையும் ஒரே சமயத்தில் மேற்கொள்ள வேண்டும்.

## 5. தனி ஒருவனின் தனித் திறமையை முழு வளர்ச்சியடைய வகை செய்தல்

பொருளாதார வளர்ச்சி சாதி, மத, வகுப்புப் பேதமின்றி நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் தங்கள் தனித் திறமையை முழு அளவில் வளர்ச்சியடையச் செய்ய வாய்ப்பும், தேசிய நலனுக்கு அவர்கள் தங்களாலன சேவையைச் செய்யவும் வகை செய்ய வேண்டும். சரிசமமான சந்தர்ப்பத்தை அடையவும், தேசிய குறைந்தபட்ச வசதி, வாய்ப்பைப் பெறவும் முதலில் இன்றியமை யாததாக விளங்குவது வேலை தேடும் ஒவ்வொருவருக்கும் இலாப கரமான வேலை வாய்ப்பை உறுதிப்படுத்துவதாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொருளாதார அமைப்பில் காணப்படும் சில அடிப்படைப் பற்றுக்குறைகளால் முழு வேலை வாய்ப்பை அளிக்க முடிவதில்லை. கல்வி, மற்றச் சமூகப் பணிகள், வளர்ச்சியை அடைந்து மிகவும் வலுவான தொழில் அடிப்படை அமைப்பு ஏற்பட்டாலொழிய எல்லோருக்கும் வேலை வாய்ப்பை அளிக்கத்தக்க வளர்ச்சி வீதத்தைப் பொருளாதாரம் சாதிக்க இயலாது. இலவச, சலுகைக் கல்விமுறை, சமூகக் காப்பீட்டு நன்மைகள் போன்ற மற்றச் சமூக பணிகள் ஆகியவைகளை நாட்டில் அதிகரித்தால் படிப்படியாக நாட்டில் எல்லோருக்கும் சரிசமமான சிறந்த வாய்ப்புகளும், பெருமளவு சமூகப் பெயர்ச்சியும் ஏற்படும்.

## 6. ஜனநாயகப் பண்புகள் வலியுறுத்தப்படல்

ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாகச் சீரான சமூகப் பொரு ளாதார அமைப்பை அடைய மக்களாட்சி, சாதி வேறுபாடின்மை, சட்டத்தை மதித்தல், ஆகிய தத்துவங்கள் அடிப்படையாக விளங்குகின்றன. அதாவது ஊக்கமும், சீரான முறையும்

கொண்ட தொழில் பரவலாக்கப்படும் செயல் முறையில், அமைதியான ஜனநாயக முறையைப் பின்பற்றிப் பொருளாதார சமூகக் குறிக்கோள்களைச் சாதிப்பதே இத் தத்துவத்தின் அடிப்படை நோக்கமாகும். சமதர்ம சமுதாய முறையென்பது நெகிழ்ச்சியற்ற, மாறா முறையல்ல. அது ஒரு குறித்த தத்துவத்தின் அடிப்படையில் ஏற்படவில்லை. இம் முறையைச் செயற்படுத்தப் பொருளாதாரம் மாறா, ஒரே அமைப்பையும், சிறிதளவு செயல் முறைகளை மட்டும் பெற்றிருக்க வேண்டுமென்பது அல்ல—பொருளாதாரம் பெற்ற அனுபவத்தின் அடிப்படையில் பொருளாதார சமூகக் கொள்கைகள் காலத்திற்கேற்ற வடிவம் பெற்று நடைமுறைப்படுத்தப் படவேண்டும்.

முடிவாக, சமதர்ம சமுதாய, முறையில் சில முக்கிய அம்சங்கள் உள்ளடங்கியுள்ளன. அவைகளாவன :- நேரிடைக் குறிக்கோள்களைச் சாதித்தல், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல், எல்லோருக்கும் சம வாய்ப்புகளை விரிவாக்குதல், பிற்பட்ட வகுப்பினரிடையே தொழிலார்வத்தை மேம்படுத்துதல், சமுதாயத்தின் எல்லாப் பகுதி மக்களினிடையேயும் தோழமை உணர்வை உருவாக்குதல், ஆகியவைகளாகும். இந் நேரிடைக் குறிக்கோள்களே பொருளாதாரத்தின் அடிப்படைத் தீர்மானங்களை ஏற்படுத்த வழிகாட்டும் கருத்துகளாக உள்ளன. ஜனநாயக சமத்துவ வழிகளில் பொருளாதார முன்னேற்றத்தை அடைய, பொருளாதாரக் கொள்கைகளையும் நிறுவன மாற்றங்களையும் அதற்கேற்ற வகையில் திட்டமிட வேண்டும். ஜனநாயகமென்பது ஒரு குறித்த நிறுவன அமைப்பு என்பதைவிட அதை ஒருவகை வாழ்க்கை முறை என்று கூறலாம். அதே விளக்கம் சமதர்மச் சமுதாய முறைக்கும் பொருந்தும்.[1]

## ஜனநாயக சமதர்ம முறையின் குறிக்கோள்களும் நடவடிக்கைகளும்

மேற் குறிப்பிட்ட குறிக்கோள்களைச் சமதர்ம முறையில் சாதிக்கக் கீழ்க்கண்ட வகையில் செயல் முறைகள் மேற்கொள்ளப் படவேண்டும்.

### 1. வேளாண்மை நடவடிக்கைகள்

வளர்ச்சிக்குப் பெருந் தடையாக இருப்பது வேளாண்மையாதலால், ஓர் ஏக்கர் நில உற்பத்தித் திறனை அதிகரிக்கத் தகுந்த

[1] இந்திய அரசு, திட்டக்குழு 'மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்,' ப. 5-6.

பொருளாதாரக் கொள்கையை உடனடியாகப் பின்பற்ற வேண்டும். இக் குறிக்கோளைச் சாதிக்க, (i) நில ஒருங்கிணைப்பு ஏற்படாத மாநிலங்களில் நிலங்களை ஒருங்கிணைக்கச் சிறப்புத் திட்டங்களை மேற்கொள்ள வேண்டும். (ii) சொந்த உடைமைகளின் அளவின் அடிப்படையில் வளர்வீத நிலவரி முறையைப் பின்பற்ற வேண்டும். (iii) ஓர் ஏக்கர் நில உற்பத்தித் திறனைக் காலந்தோறும், மதிப்பிட்டுக் குறைவான உற்பத்தித் திறனைக் கொண்ட நிலங்களில் நிர்வாக நடவடிக்கைகளின் மூலம் உற்பத்தித் திறனை அதிகரிக்கக் கட்டாயப்படுத்த வேண்டும். (iv) உரங்களை அதிக அளவில் விரைவாகக் குறைந்த விலைக்கு அளிக்கும் திட்டத்தைச் செயற்படுத்த வேண்டும். (v) உணவு தானியங்களுக்குத் தகுந்த குறைந்த பட்ச விலைகளை நிர்ணயித்து அறுவடை காலத்தில் இதே விலைக்கு உணவு தானியங்களை அரசு உடனடியாக வாங்க உறுதியளிக்க வேண்டும்.

## 2. தொழில் நடவடிக்கைகள்

தனியார் தொழில் நிறுவனங்களை நாட்டுடைமையாக்காமலேயே பொதுத்துறை எந்தத் தொழில் நிறுவனத்திலும் அதன் நடவடிக்கைகளை விரிவாக்கச் சுதந்திரம் பெறவேண்டும். அதிக இலாபம் கிடைக்கும் தொழில் துறைகளில் பொதுத்துறை விரிவாக வளர்ச்சியடையச் செய்யப் பங்கேற்க வேண்டும். சான்றாக நகர வீட்டுவசதி, மருந்துத்தொழில், போன்றவைகளில் பொதுத்துறை தனியார் நிறுவனங்களுடன் போட்டியிட வேண்டும். இதனால் தனியார் நிறுவனங்கள் குறித்த சந்தை நிலவரத்தைச் சுரண்டாமல் தடுக்கமுடியும். மேலும் நாட்டுடைமையாக்குமுன், பொதுத்துறை பெறவேண்டிய நிர்வாகத் திறமை, முற்பட்ட மனநோக்கு ஆகியவைகளை உருவாக்கவும் இது துணைபுரியும். பொது நிறுவனங்களின் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பெருமளவில் பங்கேற்கத்தக்க சோதனை முறைகளையும் மேற்கொள்ளவேண்டும். பொதுத்துறை நிறுவனங்களின் உன்னதநிலை திறமையை அதிகரிப்பதோடு சமுதாயத்தில் உள்ள எல்லோரும் அதிக வாய்ப்புகளைப் பெற்று முன்னேற்றமடையச் செய்யவும் வகைசெய்யவேண்டும்.

தற்போதைய நிலைமையில் தொழில் துறையில் கீழ்க்கண்ட தொழில் வகைகளில் மட்டுமே நாட்டுடைமைக் கொள்கையை அமுலாக்கலாம். (i) பொருளாதார சக்திக் குவிப்பில் சரிசமமின்மையை ஏற்படுத்தும் தொழில்கள், திட்டமிட்ட வளர்ச்சிக்கு எதிராகச் செயல் புரியும் தொழில்கள், ஆகியவைகளை நாட்டுடைமையாக்கலாம் (ii) தனியார் துறையில் திறமையில்லாமல் செயல்படும் தொழில்கள், அல்லது நாட்டுடைமையாக்காமல் பிரச்சினைகள்

தீர்க்கப்படாத தொழில்கள், ஆகியவைகளை நாட்டுடைமை யாக்கலாம். தொழில் துறையின் குறைபாடுகளைத் தேசிய மயத்தினுல் மட்டும் போக்கிவிட முடியாது. ஆனுல், அதனுல் வருமானவரி ஏய்ப்பு, வெளிநாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடு, முதலிடம் பெருத பயன்களுக்குக் கடன்வசதி அளிக்கப்படல், ஆகியவைகளைத் தடுக்க வகை கிடைக்கும்.

தனியார் துறையைக் கட்டுப்படுத்தல்

தனியார்துறை செயல் புரியவேண்டிய தொழில்பகுதிகளைத் தீரமானித்தபின் வெளிப்படைத் தொழில் போட்டியின் நன்மைகள் ஏற்படுகின்றனவா என்பதை உறுதிப்படுத்த வேண்டும், இல்லையென்ருல் வளர்ச்சித் திட்டச் சிறப்பு வரிசைகளின்படி வளர்ச்சியைச் சாதிக்கக் கட்டுப்பாடுகளை மேற்கொள்ளவேண்டும். இதற்காக இருக்கும் கட்டுப்பாடு களுக்கு மறுவடிவம் தந்து அவைகள் வளர்ச்சியின் சிறப்பு வரிசைகளைச் செயல்படுத்தத் தேவையான அளவுக்குமட்டும் பயன்படுத்தப்பட வேண்டும் பற்ருக் குறையுள்ள பொருள்களைச் சுதந்திர அங்காடியின் ஒதுக்கீட்டின் படியே விட்டுவிடுவது நல்லதாகும். விலைக்கட்டுப்பாடு திறம்படத் தீவிரமாகச் செயல் படுத்தப்பட்டால்தான் பயனுள்ளதாக விளங்கும். தீவிர நிர்வாகச் சிரமங்கள் ஏற்படும் பொழுது உணவு தானியங்கள், துணிபோன்ற சில பொருள்களை ஏழை வகுப்பினருக்கு நியாயமான விலையில் அளிக்கும் செயல் மட்டுமே தீவிரமாக்கப்படவேண்டும்.

## 3. சமூக, பொருளாதார வசதிகள்

தற்போதைய சமூகத்தில் இருக்கும் வருமான, செல்வ ஏற்றத் தாழ்வுகளைக் குறுகிய காலத்தில் போக்க முடியாததாகையாலும், சுதந்திர அங்காடி அமைப்பை இன்னும் சில காலம் சார்ந்திருகக வேண்டியிருப்பதாலும், திட்டத்தின் வளர்ச்சியின் குறிக்கோள் வசதி குறைந்த வகுப்பினருக்கு வேலை வாய்ப்புகள், கல்வி, சுகாதார வசதிகள், குறைந்த வாடகை வீடுகள், போன்றவைகளைத் தகுந்த திட்டங்களின் மூலம் அளித்து அவர்களின் சக்தியற்ற நிலையை நீக்கும் இயல்பு கொண்டதாக இருக்கவேண்டும்.

## 4. கூட்டுறவு இயக்கம்

கூட்டுறவு விற்பனை, பகிர்வு, ஆகியவைகளின் வளர்ச்சிக் கட்டத்தில் கூட்டுறவியக்கத்தை வலுப்பெறச் செய்யவேண்டும். இதனுல் வேளாண்மைப் பொருள்களுக்கு குறைந்தபட்ச விலைகளை

உறுதிப்படுத்தவும், நியாயமான விலையில் ஏழை வகுப்பினருக்கு உணவு, உடைபோன்ற அடிப்படைத் தேவைகளை அளிக்கவும் நல்ல வாய்ப்புக் கிடைக்கிறது. உற்பத்தியாளர் கூட்டுறவு அமைப்புகள், நுகர்வோர் கூட்டுறவு அமைப்புகள், ஆகியவை களுக்கிடையே ஓர் இணைப்பாக அரசு வர்த்தக முறையை வளர்ச்சியடையச் செய்யவேண்டியது இன்றியமையாத தாகும். அரசு வர்த்தக முறையைச் செயற்படுத்த இன்றியமையாததாக விளங்கும் கிட்டங்கிகளைக் கிராமப் பகுதிகளில் பரவலாகக் கட்டும் செயல் முறைக்கு மிக உயர் சிறப்பிடம் அளிக்க வேண்டியது அவசியமாகும். இந்திய ரிசர்வ் வங்கியின் ஆதரவால் அளிக்கப் படும் தற்போதைய கூட்டுறவுநிதி பெரும்பாலும் ஏற்கெனவே பெரும் நிலக்கிழார்களாக இருப்பவர்களுக்கே குறைந்த வட்டிக்கு அளிக்கப்பட்டு வருகிறது. ஏழைக் குடியானவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய நிதிவசதி பெரும் நிலக்கிழார்களின் நலனை மேம் படுத்தவே பயன்படுகிறது. ரிசர்வ் வங்கியால் அளிக்கப்படும் நிதியின் வட்டிக்குமேல் அதிகமான வட்டியைக் கடன் கூட்டுறவுச் சங்கங்கள் விதிக்கவேண்டும். மேலும், தற்போது அளிக்கப்பட்டு வரும் உதவிக்கொடைகள் நீக்கப்பட வேண்டும். அரசியல் இயக்கத்தால் ஆதரிக்கப்படாத ஒரு பொருளாதாரக் கொள்கை சமதர்ம சமுதாயப் பாதையில் மக்களை அழைத்துச் செல்ல முடியாது என்று டாக்டர் K. N. ராஜ் குறிப்பிடுகின்றார். சமதர்மக் குறிக்கோள்களை ஏற்றுக் கொண்டுள்ள கட்சிகள் அதைச் சாதிப்பதற்கான அரசியல் சக்திகளை ஒருங்கமைப் பதில் இதுவரைக்கும் தீவிரமான எந்தவிதச் சுயமுயற்சியும் மேற் கொள்ளாதது வருந்தத்தக்கதாகும். அத்தகைய அரசியல் சக்திகளை ஒருங்கிணைக்க வாய்ப்பிருந்தும் சீரமைப்பு ஏற்படாதது பெரும் குறையாகும். நிலத்தில் மிதமிஞ்சிய வாரம் விதிப்பதை எதிர்த்தல், கொள்ளை விலைக்குப் பொருள்களை விற்கும் கடைகளை விலக்கீடு செய்தல், வரி ஏய்ப்பவர்களைக் காட்டிக் கொடுத்தல், சமூக விரோதச் செயல்களைப் பகிஷ்கரித்தல், ஆடம்பர நுகர்வைத் தடுத்தல் போன்றவைகளைச் செயற்படுத்த நடைமுறைக்கு உகந்த அமைதியான முறைகளில் போராட்டம் நடத்தவேண்டும். வரி ஏய்ப்பைத் தடுக்கச் சட்டமியற்றினுல் மேற்கொண்டு சமூகக் குறிக்கோள்களைச் சாதிக்கத் தீவிரமான நடவடிக்கைகளை மேற் கொள்ளத் தகுந்த சூழ்நிலை உருவாகும்.

### நிறைவேற்றப்பட்ட நடவடிக்கைகள்

சமதர்மப் பாங்குக் கருத்துகள் பின்பற்றப்பட்டதிலிருந்து அக் கருத்துகளை நடைமுறைப்படுத்த அரசு ஏராளமான செயல் முறைகளை மேற்கொண்டு வருகிறது. நாட்டின் வருமான,

செல்வ ஏற்றத்தாழ்வுகளின் அடிப்படைக் காரணங்களை நீக்க அரசே தொழில் துறையில் பங்கேற்றுள்ளது. விரைவான தொழில் மயத்தை ஏற்படுத்தவும் அரசு வகைசெய்து வருகிறது, சமூகத்தில் உற்பத்தி, நுகர்வு, பங்கீடு, ஆகியவைகளில் சமத்துவத்தை ஏற்படுத்தப் பல்வேறு தீர்மானங்களும் சட்டங்களும் இயற்றப்பட்டுள்ளன. சான்றாக, நிலக்குத்தகைச் சட்டங்கள் (Tenancy Legislations), ஜமீன்தாரி ஒழிப்பு, நில உடைமை உச்ச வரம்பு, நில ஒருங்கிணைப்பு, கூட்டுறவுப்பண்ணையை உட்புகுத்தல், சமுதாயத் திட்டங்களின் வளர்ச்சி, வட்டார வளர்ச்சி, அதிக வட்டிச் சட்டங்கள் நிறைவேற்றப்படல் போன்ற சில முக்கிய நடவடிக்கைகளால் வெகு நாட்களாகக் கிராம மக்களுக்குத் தொல்லைகளையும், சிரமங்களையும் அளித்துவரும் சிக்கல்கள் நீக்கப் பட்டுள்ளன.

ஒவ்வொரு துறையிலுமுள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க அரசு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. சான்றாக வருமான உச்சவரம்பு, குறைந்தபட்ச வரம்பு ஆகியவைகளைக் குறித்தல், முதல், இலாபவரி, தோட்டவரி, முக்கிய அடிப்படைத் தொழில்களைத் தேசிய மயமாக்குதல், நிதிக்கழகங்களை ஏற்படுத்தல், ஏராளமான அரசு நிறுவனங்களை ஆரம்பித்தல், போன்ற பல்வேறு நடவடிக்கைகளால் ஏற்றத் தாழ்வுகள் குறைக்கப்படவும், தன்னிறைவைப் பெறும் குறிக்கோளைச் சாதிக்கவும், பொதுநல அரசை ஏற்படுத்தவும் வகைசெய்யப்பட்டுள்ளது.

1948-ல் ஆலைகள் சட்டம் திருத்தங்களுடன் நிறைவேற்றப் பட்டது. அது ஆலை எல்லைக்குள் சீரான வேலை நிலைமைகளைப் பெறுதல், குறைந்தமணி நேரவேலை, சுகாதாரம், மின்விளக்கு, சிற்றுண்டி நிலையங்கள், பொழுதுபோக்கு அம்சங்கள், போன்றவைகளை ஏற்படுத்த வகைசெய்தது. குறைந்த பட்சக் கூலிச்சட்டம், ஏழை உழைப்பாளர்கள் சில முதலாளிகளால் சுரண்டப்பட்டுவிடாமல் பாதுகாக்கிறது. அச் சட்டத்தின்படி உழைப்பாளர்கள் குறைந்தபட்ச கூலிகளைப் பெறவும், அவர்களின் வாழ்க்கைத் தரத்தைச் சீர்ப்படுத்தவும் வகைசெய்யப்பட்டுள்ளது. உழைப்பாளர்களின் காப்பீட்டுத் திட்டம் கீழ்க்கண்ட முக்கிய நன்மைகளை உழைப்பாளர்களுக்கு அளிக்க வகைசெய்துள்ளது.

(i) மருத்துவ வசதி (ii) இயலாமைக்கால உதவிகள் (iii) சார்ந்து வாழும் காலநன்மை (dependence benefit) (iv) நோய்க்கால உதவி (v) மகப்பேறு நல உதவிகள். மேற்குறிப்பிட்ட குறிக்கோள்களைச் சாதிக்க இம்பீரியல் வங்கி, ஆயுள்

காப்பீட்டுக் கழகம், பெரிய வணிக வங்கிகள், நாட்டுடைமையாக்கப்பட்டுள்ளன.

திட்டமிட்ட வளர்ச்சியின் குறிக்கோள்கள்

ஏழ்மை, வருவாய், செல்வ, சந்தர்ப்ப ஏற்றத் தாழ்வுகளை நீக்கப் பொருளாதார, சமூக மாற்றத்தை நாட்டில் தோற்றுவிப்பது தற்போது மிகவும் அவசியமாகும். இருக்கும் செல்வத்தை மறுபங்கீடு செய்வதால் மட்டும் ஏழ்மையைப் போக்கிவிட முடியாது என்பது வெளிப்படையாகும். இருக்கும் ஏற்றத் தாழ்வுகளை உற்பத்தியை உயர்த்துவதால் மட்டும் சாதித்துவிட முடியாது. இவ்விரண்டுமே ஒன்றாக இணைந்து ஒரே சமயத்தில் இவ்விரு அம்சங்களும் செயல்பட்டால், வளர்ச்சியை மேம்படுத்தத் தேவையான சூழ்நிலை சமுதாயத்தில் உருவாகும். பொருளாதார நடவடிக்கையை இருக்கும் சமூக, பொருளாதார அமைப்பில் ஒருங்கிணையுமாறு செய்வதால் மட்டும் பிரச்சினை தீர்ந்துவிடாது. அச் சமூக பொருளாதார அமைப்பே மறுவடிவம் பெற்று மக்களின் அடிப்படை ஆர்வங்களுக்கு இடமளிக்கும் வகையில் சீரமைக்கப் படவேண்டும். இவ்வடிப்படை ஆர்வங்கள் பணிபுரியும் உரிமை, போதிய வருவாய் பெறும் உரிமை, கல்வி உரிமை, வயோதிகம், மற்ற உடற்கேடுகளுக்கு எதிராகக் காப்பீடு செய்தல் ஆகியவைகளில் பிரதிபலிக்கின்றன. எனவே, இத்தகைய எதிர்நோக்கு அம்சங்களைச் சாதிக்கத் திட்டப்பணிகள் இன்றியமையாததாக விளங்குகின்றன.

இந் நூற்றாண்டின் முதற்பாதியில் இந்தியத் தொழில் வளர்ச்சியினூடே நகரமயமும், வாணிபமும் அதிகரித்து வருகிறது. பெரிய நகரங்களும், ஊர்களும் வளர்ச்சியடைந்து போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் பெருமளவில் விரிவாக்கப்பட்டுள்ளது. இந்தியத் தொழில் ஆற்றல் கணிசமான அளவு மேம்பட்டுள்ளது. நவீன வர்த்தகம், தொழில், நிதி ஆகிய துறைகளில் நாடு தற்போது கணிசமான அளவு அனுபவத்தைப் பெற்றுள்ளது. ஆனால், நாட்டின் தேவைகள், ஆக்கவளங்கள் ஆகியவைகளைக் கருத்தில் கொண்டு ஆராய்ந்தால், நாடு பெற்றுள்ள வளர்ச்சி மிகக் குறைவானதாக உள்ளது. தொழில் மயமும், நவீன உற்பத்தி முறைகளும் பொருளாதாரத்தின் ஒரு சில வகுப்பினரிடையே மட்டுமே பரவியுள்ளது, இன்னும் மக்கட்தொகையில் 7 சதவீதத்தினருக்குமேல் வேளாண்மையையே தங்கள் வாழ்க்கையின் முக்கியத் தொழிலாகக் கொண்டுள்ளனர். இத் துறையில் உற்பத்தித் திறனும் மிகக் குறைவாக உள்ளது. வேளாண்மை நில உடைமைகளின் அளவு படிப்படியாகக் குறைந்து வருகிறது.

பழைய குடிசை, சிறுதொழில்கள் அழிந்து வருகின்றன. மொத்த மக்கட் தொகையில் 83% கிராம மக்கள் நீண்ட கால வேலைக்குறைவு, (under employment), குறைந்த வருமானங்கள், ஆகியவைகளால் துன்பப்படுகின்றனர். கடந்த 50 ஆண்டுகளாக மக்கட் தொகை 50% மேலாக அதிகரித்துள்ளது. ஆனால், மாற்றுத் தொழில்களின் வளர்ச்சி கிராமப் பகுதிகளிலோ அல்லது நகரங்களிலோ அதிகரிக்கும் மக்கட்தொகையை ஏற்றுக் கொள்ளத்தக்க அளவில் அதிகரிக்கவில்லை. பெருக்கமடைந்துள்ள குறித்த சில துறைகளில் உற்பத்தித் திறனும், வருவாயும் இயற்கையாகவே அதிகரித்துள்ளன. ஆனால், கடந்த 20 ஆண்டு களில் பொருளாதார வளர்ச்சி எல்லா மக்களின் வாழ்க்கைத் தரம், வேலைவாய்ப்பு ஆகியவைகளைக் குறிப்பிடத் தக்கவகையில் சீர்ப்படுத்தவில்லை. மேலும், அது வருமான, செல்வ ஏற்றத் தாழ்வுகளை ஓரளவு அதிகரிக்கச் செய்துள்ளது. நாடு அரசியல் விடுதலை அடைந்த பொழுது நாட்டில் ஒரு வலுவில்லாத் தொழில் அமைப்பு இருந்தது. பெருமளவு ஏழ்மையும். பூர்த்தியாகாத் தேவைகளும். அதிகமாக இருந்தன. நாட்டுப் பிரிவினை ஏராளமான மக்களை நிலைதடுமாறச் செய்து பொருளாதார வாழ்க்கையைச் சீர்குலைத்தது. வேளாண்மையிலும், தொழிலிலும் உற்பத்தித்திறன் மிகக் குறைவான மட்டத்தில் இருந்தது. எனவே, அரசியல் சுதந்திரம் உண்மையிலேயே பொருள் உள்ள தாயும் நிலையானதாயும் இருக்கக் கிராமப் பொருளாதாரத்தைக் புனராக்கம் செய்து, மிகவும் வலுவுள்ளதாக்கிப் பொருளாதார அடிப்படையைப் பலம் பொருந்தியதாக்க வேண்டும். மேலும், தொழில் விஞ்ஞான முன்னேற்றத்தை தோற்றுவித்துக் கல்வி, மற்றச் சமூகப் பணிகளை விரிவாக்க வேண்டும். இதற்காகத் தேசிய அளவில் திட்டமிட்டுச் சமூகப் பொருளாதார வாழ்வின் எல்லா அம்சங்களையும் உள்ளடக்கி வளங்களைச் சேகரித்துச் சிறப்பு வரிசை களையும், குறிக்கோள்களையும் நிர்ணயித்துப்பெருமளவு மாற்றத்தை யும், தொழில் நுட்ப முன்னேற்றத்தையும் ஏற்படுத்தி, திட்டத்தைச் செயலாற்ற வேண்டும். எனவே, திட்டமிட்ட வளர்ச்சியினால் மிக விரைவாக உயர்ந்த வளர்ச்சி வீதத்தையும், பொருளாதார சமூக நிறுவனங்களின் சீரமைப்பையும் மேற்கொள்ள முடியும். போகப் போகத்தான் தேசிய வளர்ச்சிப் பணிகளில் மக்களின் ஆக்கச் சக்தியை மேலும் அதிகரித்துப் பயன்படுத்த முடியும்.

வெற்றிக்கான நிபந்தனைகள்

வெற்றிகரமான திட்டத்திற்கு இன்றியமையாத அரசியல் நிர்வாக நிலைமைகள் கீழே சுருக்கமாக விளக்கப்பட்டுள்ளன. அவைகளாவன: (i) சமுதாயத்தில் பொருளாதாரக் கொள்கை

களின் முடிவைப் பற்றிய கருத்தில் ஒருமித்த மனப்பான்மை எல்லோரிடையேயும் ஏற்படுதல் (ii) மக்களின் சக்தி வாய்ந்த கூட்டுறவின் அடிப்படையில் அரசிடம் திறமையான நிர்வாக அதிகாரம் கொடுக்கப்படல். இக் குறிக்கோள்களை அடைவதற்கு அரசு தன் அதிகாரத்தை ஆர்வமுடனும், தீர்மானத்துடனும் பயன் படுத்துதல். (iii) தேவையான சக்தியும், திறமையும் கொண்ட பணியாள்களைப் பெற்ற ஒரு திறமையான நிர்வாக அமைப்பு.

ஒரு தேசியத் திட்டமென்பது சமுதாயத்தின் அடிப்படை நோக்கங்களையும் ஆர்வங்களையும் வெளிப்படுத்துவதாக இருக்க வேண்டும். இத்தகைய ஒருமித்த நோக்கம்தான் திட்டத்திற்கு உடந்தையாக இருந்து ஆக்கச் சக்தியை அளித்துச் சமூகத்தின் உறுப் பினரிடையே தேவையான தியாகத்தையும், செயல் முறைகளையும் ஏற்படுத்துகிறது. இத்தகைய ஒருமித்த நோக்கும் திறமையான அதிகாரமும் அரசுக்குக் கிடைத்து, விடா முயற்சியுடனும், தீர்மானத்துடனும் உறுதியாக்கப்பட்ட குறிக்கோள்களை அடைய அரசு அச் சக்திகளைப் பயன்படுத்த வேண்டும். இத்தகைய சக்தியை ஆக்க ரீதியில் பயன்படுத்த நிர்வாகத்தில் பொறுப்பும், திறமையும், நேர்மையும், அதிகரிக்க வேண்டும். பொருளாதார சமூக வளர்ச்சிக்குத் தேவையான இத்தகைய அடிப்படை முன் தேவைகளை உருவாக்கிப் பராமரிக்க தொடர்ந்து மிகக் கவனத்துட னும், அக்கறையுடனும் அரசு திட்ட ரீதியில் செயலாற்ற வேண்டும்.

## முடிவுரை

இந்தியப் பொருளாதாரத் திட்டங்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தத் தேவையான பல்வேறு சமூக, பொருளாதார, அரசியல், தொழில் நுட்ப மாற்றங்களை ஏற்படுத்தும் குறிக்கோளு டன் நடைமுறைப் படுத்தப்பட்டு வருகின்றன. தொழில வேளாண்மை மந்தநிலை மறைந்து, பொருளாதாரம் இயக்கச் சக்தி பெற்று, பழமைச் சமூகப் பண்பாட்டு, பொருளாதார, தொழில் நுட்ப, முறைகளைத் தகர்த்தெறிந்து முன்னேக்கி வளர்ச்சியை மேம்படுத்தத் திட்டங்கள் வகை செய்து வருகின்றன. பம்பாய்த் திட்டம், மக்களின் திட்டம், காந்தியத் திட்டம், போருக்குப் பின் ஏற்பட்ட திட்டங்கள், கொழும்புத் திட்டம், போன்றவைகள் இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு அடிக கற்களாக அமைந்தன. இந்திய அரசாங்கக் கொள்கையின் வழி காட்டி நெறிமுறைகளின் அடிப்படையில் தோன்றிய அடிப் படைத் தத்துவங்கள் இந்தியத் திட்டக் குழுவால் திறம்படச் செயலாற்றட பட்டு வருகின்றன. அவ் வழிகாட்டி நெறிமுறை

களின் அடிப்படைத் தத்துவமே இந்தியாவில் சமதர்ம சமுதாய முறையை ஏற்படுத்த அடிகோலியது. ஜனநாயக சமதர்மக் கொள்கையைச் சாதிப்பது மிகவும் சிக்கலான காரியமாகும். ஜனநாயகத்தில் எல்லோருக்கும் பல்வேறு உரிமைகள் அளிக்கப்படுகின்றன. ஆனால், சமதர்ம அமைப்பில் மக்களிடையே சமத்துவத்தை ஏற்படுத்த அரசு பல்வேறு கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டி உள்ளது. இவ்விரண்டு வேறுபட்ட கருத்துகளையும் ஒருங்கிணைத்து வளர்ச்சியை மேம்படுத்துவதே இந்தியத் திட்டத்தின் அடிப்படைத் தத்துவமாகும். சமதர்ம சமுதாய முறையின் மூலம் மக்களுக்குக் குறைந்த பட்ச அடிப்படை வாழ்க்கைத் தரத்தை அளிக்கவும், பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்கவும், பொருளாதாரச் சர்வாதிகாரச் சக்தி தடுக்கப்படவும், சமூக நன்மைக்காக உற்பத்தியைப் பெருக்கவும், கொள்ளை இலாப மனபோக்கைத் தடுக்கவும், தனியொருவனின் தனித் திறமையை முழு வளர்ச்சியடையச் செய்யவும், ஜனநாயகப் பண்புகளை வலியுறுத்தவும். வாய்ப்புக் கிடைக்கிறது. எனவேதான் இந்தியத் திட்டங்களின் நடவடிக்கைகள் சமதர்ம சமுதாய முறையை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றன. சமதர்ம சமுதாய முறையைச் சாதிக்கப் பலதரப்பட்ட வேளாண்மை நடவடிக்கைகளும், தொழில் நடவடிக்கைகளும், சமூக பொருளாதாரச் சந்தர்ப்பங்களும், கூட்டுறவு இயக்க வளர்ச்சியும், சிறந்த பங்கினைப் பெற்று முக்கியத்துவம் பெற வேண்டும். திட்ட காலத்தில் பல்வேறு நடவடிக்கைகள் கையாளப்பட்டன. திட்டமிட்ட வளர்ச்சியில் ஏற்றத் தாழ்வுகள் குறைக்கப்பட்டு ஏழ்மை விரட்டியடிக்கப்பட்டு, வேளாண்மையும், தொழில் மயமும், உன்னத நிலையடைந்து வேலை வாய்ப்பும் வருமானமும், உற்பத்தித் திறனும் அதிகரிக்க வேண்டும். அரசியல் சுதந்திரமும், பொருளாதார சுதந்திரமும் பேணிக் காக்கப்பட சமூக பொருளாதார நிறுவனங்களும் தொழில் நுட்ப முறையும் உன்னத நிலையை அடைய வேண்டும். அதற்காக அரசு சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், தேசிய விரிவாக்கப் பணிகள், நிலச் சீர்திருத்தங்கள், கூட்டுறவு உற்பத்தி முறை போன்றவைகளை வலுப் பெறச்செய்துள்ளது. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியை நிலையாகத் தொடர்ந்து பெற மக்களிடையே ஒருங்கிணைந்த உயர் மனப்போக்கும், அரசிடம் திறமையான நிர்வாக அதிகாரமும், திறமையான பணியாளர்களைக் கொண்ட நிர்வாக அமைப்பும் மிகவும் இன்றியமையாதனவாக விளங்குகின்றன.

# 40. முதல் ஐந்தாண்டுத் திட்டம்

## செயல் முறைகளும் முன்னேற்றமும்

## (First Five year Plan: Programmes and Progress)

## (1951-52 to 1955-56)

இந்தியப் பொருளாதாரத் திட்டங்களின் பிரதான குறிக்கோள் தொடர்ந்த பல்வேறு திட்டங்களின் மூலம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாகும், விடுதலைக்குப்பின்பு எத்தகைய பொருளாதாரச் சூழ்நிலையின் மத்தியில் திட்டம் உருவாக்கப் பட்டது என்பதை அறியவேண்டியது அவசியமாகும். விடுதலைக்குப் பின்பு நாட்டில் உணவிற்கும், கச்சாப் பொருள்களுக்கும் மிகக் கடுமையான பற்றுக்குறை ஏற்பட்டது. ஜூன் 1950-ல் ஏற்பட்ட கொரியப் போரினாலும் 1950-51-ல் பயிர் விளைச்சல் பெருமள வில் தவறியதாலும் நிலைமை மிகவும் சீர்கேடடைந்தது. 1951-ல் இந்தியா 4·7 மில்லியன் டன் உணவு தானியங்களை இறக்குமதி செய்தது. நாட்டில் பணவீக்க அழுத்தங்கள் அதிகரித்தன; 1951 மார்ச் மாத முடிவில் மொத்த விலைகளின் குறியீட்டு எண் 450 (1939 = 100) ஆக இருந்தது. 1951-52-ல் நடப்புக் கணக்கில் செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 163 கோடியாகும். போக்குவரத்து முறையும் தீவிரமாகப் பாதிக்கப்பட்டிருந்தது. பாகிஸ்தானை விட்டு வெளியேறி இந்திய எல்லைக்குள் குடிபுகும் ஏராளமான மக்களுக்குப் புனர்வாழ்வு அளிப்பது பெரும் பிரச்சினை யாக இருந்தது.

1948-49-ல் இந்திய தேசிய வருவாய் (காரணிகளின் செலவில் நிகரதேசிய உற்பத்தி) ரூ. 8710 கோடியாக இருந்ததென்று இந்திய தேசிய வருவாய்க்குழு கணக்கிட்டது. 1948-ல் இந்திய மக்கட் தொகை 341 மில்லியனாகக் கணக்கிடப்பட்டதால் தலா தேசிய வருவாய் ரூ. 255 ஆக இருந்தது. மற்ற வளர்ந்த அல்லது வளர்ச்சி குறைந்த நாடுகளின் தலா வருவாயைக் காட்டிலும் இது மிகக்குறை வானதாகும். உகாண்டா, பர்மா, ஆகிய இருநாடுகளைத்தவிர மற்ற எல்லா உலக நாடுகளின் தலாவருவாயைக் காட்டிலும் இந்தி யாவின் தலாவருவாய் மிகக் குறைவானதாகும். அமெரிக்கா,

கனடா ஆகிய நாடுகளோடு ஒப்பிடும் போது இந்தியாவின் தலா வருவாய் முறையே 30-ல் ஒரு பங்கும், 20-ல் ஒரு பங்குமாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளாகிய இஸ்ரேல், மலேசியா, இலங்கை, ஆகியவைகளோடு ஒப்பிட்டால் இந்தியாவின் தலா வருவாய் முறையே 8-ல் ஒன்றாகவும், 5-ல் ஒன்றாகவும், இரண்டில் ஒன்றாகவும் உள்ளது. 1948-49-ல் இந்தியாவின் தேசிய வருவாய் தொழில் வாரியாகப் பிரிக்கப்பட்டிருப்பது கீழ்க்காணும் அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது.

1948-49-ல் இந்தியாவின் தேசிய வருவாய் (தொழில் ரீதியாக)

| அம்சங்கள் | நிகர உற்பத்தி (ருபாய் கோடிகளில்) | நிகர உற்பத்தி (சதவீதத்தில்) | ஈடுபட்டிருப்போரின் எண்ணிக்கை (இலட்சங்களில்) | ஒரு நபர் நிகர உற்பத்தி (ஆயிரம் ரூபாய்களில்) |
|---|---|---|---|---|
| 1. வேளாண்மை | 4150 | 47·6 | 905 | 0·5 |
| 2. சுரங்கம், செய்பொருள் தொழில்களும் நிலவர்த்தகமும் | 1500 | 17·0 | 187 | 0·8 |
| 3. வர்த்தகம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு | 1700 | 19·5 | 107 | 1·6 |
| 4. பணிகள் | 1360 | 15·9 | 128 | 1·1 |
| 5. காரணி விலைகளில் நிகரதேசிய உற்பத்தி | 8710 | 100·0 | — | — |

ஆதாரம்:- தேசிய வருவாய்க்குழு, முதல் அறிக்கை, ஏப்பிரல் 1951.

இந்தியப் பொருளாதாரத்தில் வேளாண்மை பெற்றுள்ள பெருமளவு முக்கியத்துவத்தை ஏராளமான மக்கள் (905 இலட்சம்)

வேளாண்மையில் ஈடுபட்டிருப்பதிலிருந்தும், அவர்கள் உற்பத்தி செய்யும் ரூ. 4150 கோடி மதிப்புள்ள பொருள்களிலிருந்தும் தெளிவாக அறிய முடிகிறது. அதாவது மொத்த தேசிய வருவாயில் சுமார் 48% வேளாண்மையிலிருந்தே கிடைக்கிறது. இவ்வாறு இருந்தும் வேளாண்மையில் ஒரு நபர் உற்பத்தித்திறன் மிகக் குறைவாக (0·5) இருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது. இதற்கு அடுத்த படியாக முக்கியத்துவம் பெற்று விளங்குவது வர்த்தகம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவைகளாகும். இவ்வம்சங்கள் மொத்தத் தேசிய வருவாயில் சுமார் 20% சதவீதத்தை அளிக்கின்றன. ஆனால் சுரங்கம், செய்பொருள் (manufacturing) தொழில்களில் ஏராளமானவர்கள் ஈடுபட்டிருந்த போதிலும் மொத்தத் தேசிய வருவாயில் 17 சதவீதம்தான் அவைகளிலிருந்து கிடைக்கிறது. வேளாண்மையே மிகமுக்கியமான தொழிலாக இருந்தும் இங்கிலாந்து போன்ற தற்போதைய முன்னேறிய நாடுகளில் ஏற்பட்டதைப்போல் தொழிற்புரட்சிக்கு முன்னோடியாக விளங்கும் வேளாண்மைப் புரட்சி இந்தியாவில் தோன்றவில்லை. எனவே, எந்த ஒரு முழு மறைத் திட்டத்திலும் வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டையுமே வளர்ச்சியடையச் செய்ய முயற்சிகளை மேற்கொள்ள வேண்டியது அவசியமாகிறது. வேளாண்மையையோ அல்லது தொழிலையோ வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்பதில்லை. இரண்டையுமே ஒரேசமயத்தில் சமச்சீராக வளர்ச்சியடையச் செய்ய வேண்டியது சாலச் சிறந்ததாகும். வளர்ச்சியைத் தூண்டுவதற்கு ஆக்கசக்தி திட்டங்கள், போக்குவரத்து சாதன வளர்ச்சி, மற்றச் சமூக நலனை அதிகரிக்கும் அமைப்புகள் ஆகியவைகளை மேம்படுத்தினால் வேளாண்மையும், தொழிலும் ஒருங்கிணைந்து சரிசமமாக வளர்ச்சியடைய ஒரு வலுவான அடிப்படை ஏற்படும்.

ஜூலை 1951-ல் இந்தியத் திட்டக் குழு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் (1950–51 முதல் 1955-56)நகல் ஒன்றைச் சமர்ப்பித்தது. இந் நகல் திட்டம் இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது. முதல் பகுதியில் ரூ. 1493 கோடி மதிப்புடைய செலவுகள் உள்ளடங்கியிருந்தன. இத் தொகை ஏற்கெனவே நடைமுறைப் படுத்தப்பட்டிருந்த திட்டங்களில் (Projects) செலவிடுவதற்காக ஒதுக்கப்பட்டிருந்தது. இரண்டாம் பகுதியில் ரூ. 300 கோடி மதிப்புடைய செலவினங்கள் உள்ளடங்கியிருந்தன. வெளி உதவி கிடைத்தால்தான் இத் தொகை திட்டத்தில் நடைமுறைப்படுத்தப்பட முடியும் என்ற நிலையிலிருந்தது. அதன் பிறகு, பொதுமக்களிடமிருந்தும், மத்திய, மாநில அரசுகளிடமிருந்தும் மதிப்புரைகளும், பல திறப்பட்ட கருத்துரைகளும் வந்ததால் முடிவான திட்டமொன்றைத் திட்டக்குழு தயாரித்து டிசம்பர் 1925-ல் வெளியிட்டது.

## முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் நிபந்தனைகள்

முதல் திட்ட முதலீட்டுப் பாங்கும், எதிர்பார்க்கப்பட்ட வருமான வளர்ச்சி வீதமும் கீழ்க்கண்ட நிபந்தனைகளை அடிப்படையாகக்கொண்டு தீர்மானிக்கப்பட்டன.

(1) மக்கட்தொகை தொடர்ந்து ஆண்டொன்றுக்குச் சுமார் 1 25 சதவீத வளர்ச்சி வீதத்தைப் பெற்றிருக்கும் என்று கருதப்பட்டது.

(ii) பொருளாதாரம் முழுவதற்கும் மூலதன உற்பத்தி விகிதம் (capital-output ratio) 3:1 என்ற விகிதத்தில் இருக்குமென்றும் எண்ணினர். அதாவது ஒருமடங்கு தேசிய உற்பத்தியும், வருவாயும் அதிகரிக்கச் செய்ய மூலதனத்தைச் சுமார் மூன்று மடங்கு அதிகரிக்கவேண்டியது அவசியமாகிறது.

(iii) முதலீடுசெய்த மூன்று ஆண்டுகளுக்குப் பின்புதான் முதலீட்டிலிருந்து உற்பத்தி அதிகரிக்குமென்றும் நம்பப்பட்டது.

(iv) ஒவ்வோர் ஆண்டும் கூடுதல் வருவாயில் சுமார் 20சத விகிதமாக முதலாக்கம் அதிகரிக்குமென்றும் எண்ணப்பட்டது. அதாவது இறுதிநிலைச் சேமிப்பு வீதம் 20 சதவிகிதமாகவும், சராசரி சேமிப்பு வீதம் 5 சதவீதமாகவும் இருக்குமென்றும் கருதப்பட்டது. 1950-51-ல் தேசிய வருவாய் ரூ 9,000 கோடி என்றும், சராசரிச் சேமிப்பு வீதம் மொத்த வருவாயில் 5 சதவீதமாக இருக்குமென்றும் நம்பப்பட்டது, ஆண்டுதோறும் கூடுதல் வருவாயில் 20 சதவிகிதம் முதலாக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்டால் இந்திய தேசியவருவாய் 1955-56-க்குள் ரூ. 10,000 கோடியாக அதிகரிக்கு மென்றும் எண்ணப்பட்டது 1968-69க்குப்பின் முதலீட்டிற்காக ஒதுக்கப்பட்ட வளங்கள் பேரளவில் அதிகரித்தபோதும் முதலாக்க வீதம் தேசிய வருவாயில் 20 சதவீதத்திற்கு மேல் உயர்த்தவும் முடியாது. இந்த நிபந்தனைகளின்படி தலாவருவாயை 1977-க்குள் இருமடங்காக அதிகரிக்க வேண்டுமென்றும், நுகர்வுத் தரமும் முதல் திட்டத்திற்குப் பின் 70 சதவீதத்திற்கு மேல் அதிகரிக்கு மென்றும் நம்பப்பட்டது. முதல் திட்டத்தின் எதிர் நோக்கு நடவடிக்கைகள் பின்பு திருத்தியமைக்கப்பட்டன.

## முதல் திட்டத்தின் குறிக்கோள்கள்

முதல் ஐந்தாண்டுத் திட்டம் இருவகைக் குறிக்கோள்களைப் பெற்றிருந்தது.

1. போரினுலும், நாட்டுப் பிரிவினையினுலும் பொருளாதாரத்திற்கு ஏற்பட்ட சமநிலையின்மையைச் சரிசெய்வதே இத் திட்டத்தின் முதல் நோக்கமாக இருந்தது.

2. இத் திட்டம் எல்லாத் துறைகளிலும் சமச்சீரான வளர்ச்சியை ஒரே சமயத்தில் உருவாக்கித் தேசிய வருமானத்தை அதிகரித்து, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் மக்களின் வாழ்க்கைத் தரத்தை நிலையாகச் சீர்படுத்தும் நோக்கத்தைப் பெற்றிருந்தது.

3. உடனடியான குறிக்கோள்களையும், வளங்களையும் பயன்படுத்தத் தக்க முதலீட்டு முறையை இத் திட்டத்தின் மூலம் செயலாற்ற வேண்டும் என்று கூறப்பட்டது. வளங்களைச் சேகரித்து வளர்ச்சியடையச் செய்வதற்கு நீண்டகாலக் குறிக்கோளைக் கொண்ட திட்டமும் மேற்கொள்ளப்பட வேண்டிய நிலையில் இருந்தது இருக்கும் சமூக, பொருளாதார அமைப்பைக் கொண்டே திட்டமிடுவது அரசின் நோக்கமல்ல. ஆனுல், இவ்வமைப்பைப் படிப்படியாக மேம்படுத்த ஜனநாயக முறைகளையே பின்பற்ற வேண்டும். முதல் ஐந்தாண்டுத் திட்டம் இவ்வகையில் ஒரு புதுச் செயல்முறையைத் தோற்றுவித்தது. இம் முறையினுல் அரசு வளர்ச்சியை மேம்படுத்தவும், பொதுத்துறை, தனியார் துறை ஆகியவைகளில் வளர்ச்சி நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கவும் இத் திட்டம் வகை செய்யும் என்று கூறப்பட்டது. 1948 ன் தொழிற்கொள்கைத் தீர்மானத்தின் அடிப்படையில் ஒவ்வொரு தனியார்துறை நிறுவனமும் அரசால் ஆதரிக்கப்பட்டு ஊக்குவிக்கப்படும். அரசு இவைகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி, பொருளாதார, வர்த்தகக் கொள்கைகளின் மூலம் பொருளாதார வளர்ச்சியைப் பெற வகைசெய்யப்பட்டது. எனவே, முதல் திட்டத்தில் கிடைக்கும் வளங்களை முழு அளவில் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருமளவு பெருக்க வேண்டுமென்பது மூன்ருவது குறிக்கோளாக இருந்தது. மேலும் வருமானம், செல்வம், வாய்ப்பு ஆகியவைகளிலுள்ள ஏற்றத்தாழ்வைக் குறைத்து மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த வேண்டுமென்றும் கூறுரைக்கப்பட்டது. உணவுத் தட்டுப்பாட்டையும், பணவீக்க நிலைமையையும் போக்கவும் செயல் திட்டங்கள் மேற்கொள்ளப்படும் என்றும் கூறப்பட்டது.

### திட்டத்தின் முக்கிய அம்சங்கள்

ஆரம்பத்தில் முதல் திட்டக் காலத்தில் பொதுத்துறையில் ரூ. 2069 கோடி முதலீடு செய்யப்படுமென்று முன் மொழியப்பட்டது. ஆனுல், அதன்பின் ரூ. 2378 கோடியாக முதலீடு உயர்த்தப்பட்டது. திட்டத்தில் ஒதுக்கப்பட்ட தொகைக்கும்

குறைவாகவே திட்டக்காலத்தில் செலவிடப்பட்டது. திட்டக் குழுவின் முதல் ஐந்தாண்டுத் திட்ட மறு ஆய்வில் இத் திட்டத்தின் ஐந்தாண்டுக் காலத்தில் ரூ. 2012 கோடி முதலீடு செய்யப்படு மென்று குறிப்பிடப்பட்டது. முதல் திட்டக் காலத்தில் ஏற்பட்ட விலை மாற்றங்களைக் கருத்தில் கொண்டால் அத் திட்டக் காலத்தில் பொதுத்துறையில் உண்மையாகச் செலவிடப் பட்ட தொகை ரூ. 1960 கோடியாகும்.

இந்த எளிமையான முதலீட்டுத்திட்ட நடைமுறையிலேயே முதல் திட்டத்தின் ஒருங்கிணைந்த சாதனையால் தேசிய வருவாய் ரூ. 18 சதவீதம் அதிகரித்தது; அதாவது தேசிய வருவாய் ரூ. 1950-51ல் ரூ. 9,110 கோடி ஆக இருந்ததிலிருந்து 1955-56ல் ரூ. 10,800 கோடியாக அதிகரித்தது. அதேபோல் தலாவருவாய் 11 சதவீதமாக அதிகரித்தது; அதாவது 1950-51-ல் ரூ. 255 ஆக இருந்ததிலிருந்து 1955-56-ல் ரூ. 281 ஆக உயர்ந்தது. தனி நபர் நுகர்வு 9 சதவீதமாக அதிகரித்தது. மேற் குறிப்பிட்ட காலத்தில் முதலீட்டு வீதம் தேசிய வருவாயில் ஒரு சதவீதமாக 5 சதவீதத்தி லிருந்து 7·3 சதவீதமாக உயர்வடைந்தது. மொத்த விலைகளின் குறியீட்டுஎண் மார்ச் 1951-ல் (அடிப்படை ஆண்டு ஆகஸ்டு, 1939=100) 450 ஆக இருந்ததிலிருந்து மார்ச்சு 1956-ல் 387 3 ஆகக் குறைந்தது.

பொருளாதாரப் பாங்கு

முதல் திட்டக் காலத்தில் இந்தியப் பொருளாதாரம் இரு பிரிவுகளாக்கப்பட்டது. பொதுத்துறை, தனியார் துறை ஆகிய ஒவ்வொன்றுக்கும் உற்பத்தியில் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டன. பொதுத்துறை நிறுவனங்கள் மத்திய, மாநில அரசுகளால் உரிமை யாக்கப்பட்டும் கட்டுப்படுத்தப்பட்டும் நிர்வகிக்கப்பட்டன. பொதுத்துறை, தொழில், வர்த்தக, வாணிப நிறுவனங்கள் தனியார் நிறுவனங்களால் உரிமையாக்கப்பட்டும், ஒழுங்கு படுத்தப்பட்டும் நிர்வகிக்கப்பட்டன. பொதுத் துறையைவிடத் தனியார் துறையின் அளவு அதிகமாக இருந்தது.

சிறப்பு வரிசை அமைப்புத் திட்டங்கள் (Scheme of Priorities)

திருத்தப்பட்ட முதல் ஐந்தாண்டுத் திட்டம் ரூ. 2356 கோடியை மத்திய, மாநில அரசுகளின் மொத்த வளர்ச்சி முதலீடாகப் பெற்றிருந்தது. சிறப்புரிமை அளிக்கப்பட்ட வளர்ச்சித் துறை களில் முதலீட்டின் பங்கீட்டைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

## முக்கிய வளர்ச்சித் துறைகளின் திட்ட முதலீட்டின் பங்கீடு
## (Distribution of Plan Outlay by Major heads of Development)

| துறைகள் | திட்ட முதலீடு (ரூபாய் கோடிகளில்) | சதவீதம் | உண்மைச் செலவு (ரூபாய் கோடிகளில்) | சதவீதம் |
|---|---|---|---|---|
| 1. வேளாண்மையும் சமுதாய வளர்ச்சியும் | 357 | 15 1 | 299 (291) | 14·8 (15) |
| 2. நீர்ப்பாசனமும் ஆக்க சக்தியும் | 661 | 28·1 | 585 (570) | 29 1 (29) |
| 3. போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் | 557 | 23·5 | 532 (523) | 26 4 (27) |
| 4. தொழில்களும் சுரங்கத் தொழிலும் | 179 | 7·6 | 100 (117) | 5·0 (6) |
| 5. சமூகப் பணிகள் | 533 | 26 6 | 423 (459) | 21·0 (23) |
| 6. இதரத் துறைகளில் | 69 | 3 0 | 74 | 3·7 |
| மொத்தம் | 2,356 | 100·0 | 2,013 (1,960) | 100·0 (100·0) |

அடைப்புக்குள் கொடுக்கப்பட்டிருக்கும் எண்கள் திட்டக்கால விலைமாற்றங்களோடு சரிசெய்யப்பட்ட உண்மைத் திட்டக்காலச் செலவினங்களாகும்.

ஆதாரம்: இந்திய அரசு, திட்டக்குழு, இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம். ப. 51-52; மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் ப. 333.

சிறப்பு வரிசைகளின் தன்மை (Nature of Priorities)

(i) வேளாண்மை உற்பத்தித்திறன் அதிகரிப்பு, கிராமத்தின் அடிப்படை நிலையை வலுப்பெறச் செய்தல் ஆகியவைகளுக்காக இந்திய வேளாண்மைப் பொருளாதார அமைப்பைச் சீரமைக்க வேண்டிய தன் அவசியத்தை உணர்தல்.

(ii) விடுதலைக்குப் பிற்பட்ட காலத்தில் பொருளாதாரச் சமநிலையை நிலைநாட்ட வேண்டியதின் அவசரமும் அவசியமும் கருத்தில் கொள்ளப்பட்டது.

(iii) ஊக்கமும் பேரார்வமும் கொண்ட எதிர்காலத் திட்டங்களை மேற்கொள்ளுவதற்குத் தகுந்த அடிப்படையாக முதல் திட்டத்தைத் தயாரிக்க வேண்டியதன் அவசியம் உணர்த்தப்பட்டது.

## 1. வேளாண்மை

முதல் திட்டத்தில் வேளாண்மைக்கு உயர் மேல் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. மொத்தத் திட்ட நிதி ஒதுக்கீட்டில் 42 சத வீதத்திற்கு மேல் வேளாண்மைக்கும் வேளாண்மை சார்ந்த தொழில்களுக்கும் ஒதுக்கப்பட்டது உணவு, மூலப் பொருள்கள் ஆகியவைகளின் உற்பத்தி கணிசமான அளவு உயர்ந்தாலொழிய தொழில் வளர்ச்சியைப் பெருமளவில் நிலையாக மேலோங்கச் செய்ய இயலாது என்று திட்டக்குழு உணர்ந்து வேளாண்மைக்கு முதலிடம் அளித்தது. பொருளாதாரத்தின் அடிப்படை அமைப்பை முதலில் வலுப்பெறச் செய்து வேளாண்மைத் துறையிலிருந்து உபரிப் பொருள்களைப் பெருமளவில் அதிகரிக்க வேண்டுமென்றும், மற்றத் துறைகளில் நிலையான வேலை வாய்ப்பை ஏற்படுத்த வேண்டுமென்றும் கருதப்பட்டு வேளாண்மைக்குச் சிறப்பிடம் அளிக்கப் பட்டது. இத் துறையில் சமுதாய வளர்ச்சி, பல்நோக்கு, நீர்ப்பாசன, ஆக்கச்சக்தித் திட்டங்கள் ஆகியவைகளும் உள்ளடங்குகின்றன. இத் துறைகளில் உற்பத்தி சுமார் 18% அதிகரிக்கும் என்று கணக்கிடப்பட்டது. அதனால் வேளாண்மைத் திட்டம் சீரானதாகவும், முழுப் பயிர்த்திட்டங்களை (Crop Planning) உட்கொள்ளாததாகவும் இருந்தது. முதல் திட்டத்தின் வெற்றிக்கு அடிப்படைக் காரணமாக இருந்தது சாதகமான பருவகால மழையாகும்.

## 2. போக்குவரத்து, ஆக்கசக்தி

இத் துறையில் மொத்தத் திட்ட முதலீட்டில் 51 சதவிகிதத்திற்கு மேல் முதலீடு செய்யப்படுமென்று கூறப்பட்டது.

இத் துறைக்கு இரண்டாம் இடம் அளிக்கப்பட்டது. இத் துறையில் ரூ 661 கோடி செலவிடப்படுமென்று எதிர்பார்த்தும் உண்மையில் விலை மாற்றத்திற்குப்பின் ரூ. 570 கோடிதான் செலவிடப் பட்டது.

## 3. சமூகப் பணிகள்

இத் துறையில் கல்வி, சுகாதாரம், வீட்டு வசதி, மற்ற சமூகத் திட்டங்கள் உள்ளடங்குகின்றன. மொத்த முதலீட்டில், இதில் 26.6 சதவீதம் செலவிடப்படுமென்று எதிர்பார்க்கப்பட்டது. அதாவது ரூ. 533 கோடி இத் துறைக்குச் செலவிடப்படுமென்று கணக்கிடப்பட்டிருந்த போதிலும் உண்மைச்செலவு ரூ. 459 கோடி யாகத்தான் இருந்தது.

## 4. தொழில் திட்டங்கள்

இத் துறையில் சுமார் 8 சதவீதம் முதலீடு செய்யப்படு மென்று குறிப்பிடப்பட்டது. அதாவது ரூ. 179 கோடி செலவிடப் படுமென்று எதிர்பார்த்தும் உண்மையில் ரூ. 117 கோடிதான் செலவிடப்பட்டது. அதாவது பேரளவுத் தொழில்கள், சுரங்கத் தொழில், விஞ்ஞான ஆராய்ச்சி ஆகியவைகளில் ரூ. 139 கோடியும், கிராம, சிற்றளவுத் தொழில்களுக்கு ரூ. 49 கோடியும் செலவிடப் படுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், இவ்விரண்டிற்குமாகச் சேர்த்து ரூ 117 கோடிதான் செலவிடப்பட்டது.

## தனியார் துறை

தனியார் துறையில் 42 தொழில்கள் இருந்தன. தொழில் வளர்ச்சி, கட்டுப்பாடு, சட்டத்தின் அடிப்படையில் 51 தொழில்கள் மொத்தம் ரூ. 600 கோடியைத் தனியார் துறையில் முதலீடு செய்தனர். தொழிலுற்பத்தியின் குறிப்பெண் 1950-ல் 105 ஆக இருந்ததிலிருந்து 1955-ல் 161 ஆக உயர்ந்தது.

தொழில் துறைக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புரிமை கீழ்க்கண்டவைகளின் அடிப்படையில் தீர்மானிக்கப்பட்டன:

(i) சணல், போன்ற முதற்பொருள் தொழில்கள், பருத்தி நெசவு, சர்க்கரை, சோப்பு, வனஸ்பதி, போன்ற நுகர்வுப்பொருள் தொழில்கள், ஆகியவைகளின் இருக்கும் ஆக்க சக்தியை முழு அளவில் பயன்படுத்துதல்.

(ii) இரும்பு எஃகு, அலுமினியம், சிமிண்டு, உரம், கனரக இரசாயனம், இயந்திரக் கருவிகள், போன்ற மூலதன ஆக்கத் திற்கு வேண்டிய பொருள் தொழில்களின் ஆக்கச் சக்தியைப் பெருக்குதல்.

(iii) ஏற்கெனவே முதலீடு செய்த தொழில் பகுதிகளை முழுவளர்ச்சி நிலைக்குக் கொண்டு வருதல்.

(vi) ஜிப்சத்திலிருந்து (Gypsum) கந்தகம் தயாரித்தல், ஒரு வகையான கூழிலிருந்து ரேயான் தயாரித்தல் போன்ற தொழில் களில் புதுத் தொழிற்பகுதிகளை நிறுவிப் பேரளவுத் தொழில் களுக்கு அடிப்படைத் தேவையான முக்கிய மூலப்பொருள்களை அளித்தல்.

## முதல் திட்ட நிதியாக்கம்
## (Financing the First Plan)

முதல் திட்டக்காலத்தில் ரூ. 2013 கோடி நிதி முதலீடு செய்ய வேண்டுமென்று முதலில் கூறப்பட்டது. ஆனல், 1955-56-ல் விலைகளில் ஏற்பட்ட மாற்றத்தினுல், உண்மை முதலீடு ரூ. 1960 கோடியாக இருந்தது. கீழ்க்கண்ட பல்வேறு வகையான வழிகளில் திட்ட முதலீடாகிய ரூ. 1960 கோடியும் கிடைக்கப்பெற்று நிதியிடப்பட்டது.

| | ரூ (கோடிகளில்) | % மொத்த முதலீட் டின் சத விகிதம் |
|---|---|---|
| வரிவிதித்தல், ரயில்வேக்களின் உபரி.......... | 752 | 38 |
| அங்காடிக் கடன் வகைகள்.......... | 205 | 10 |
| சிறுசேமிப்பும் இதரக் கடன்களும்... | 304 | 16 |
| மற்ற முதல் வரவுகள்,........ ...... | 91 | 5 |
| வெளிநாட்டு உதவி..... .. .......... | 188 | 10 |
| பற்ருக்குறை நிதியாக்கம்........... | 420 | 21 |
| மொத்தம் | 1,960 | 100·0 |

திட்டக் காலத்தில் மத்திய அரசால் பெறப்பட்ட கூடுதல் வரிவிதிப்பு வருவாய் ரூ. 175 கோடியாகும். இதில் ஏற்றுமதி வரிகள் சேர்க்கப் படவில்லை. ரயில்வேக்களின் நடப்புவருவாயி லிருந்து ரூ. 115 கோடிதான் கிடைத்தது. திட்டத்தின் ஆரம் பத்தில் ரூ. 170 கோடி கிடைக்குமென்று எதிர்பார்த்தனர். ஆனால், அந்த அளவு கிடைக்கவில்லை. ஐந்து ஆண்டுக் காலத் திற்கு மாநில அரசுகளின் வருவாயிலிருந்து ரூ. 410 கோடி கிடைக்குமென்று கணக்கிடப்பட்டது. ஆனால், உண்மையில் 34% குறைவாக மொத்தம் ரூ. 269 கோடிதான் கிடைத்தது. திட்டத்தில் மாநிலங்களால் கூடுதல்வரி ரூ 230 கோடியாக இருக்குமென்று இலக்கிடப்பட்டது. ஆனால் உண்மையில் மாநில அரசுகளால் மேற்கொள்ளப்பட்ட 5 வருட எல்லா வரி நடவடிக் கைகளில் மொத்த வரவு ரூ 80 கோடிகளாகத்தான் இருந்தது. முதல் திட்ட மறு ஆய்வில் குறிப்பிட்டதுபோல், "மாநிலங்களின் கூடுதல் வரிவிதிப்பு, செயல்களின் முன்னேற்றம், திட்டங்களின் தேவைகளுக்கு இணையாக ஏற்படவில்லை என்பது வெளிப் படையான முடிவாகும்"[1]

பொதுமக்களிடமிருந்து பெற்ற கடன்தொகை, அங்காடிக் கடன்களின் திட்ட இலக்கைவிட, ரூ. 89 கோடி அதிகமாகக் கிடைத்தது. அதேபோல் திட்டக்காலத்தில் சிறுசேமிப்பின் அளவு நிலையாக அதிகரித்தது. திட்ட இலக்காகிய ரூ. 225 கோடிக்குப் பதிலாக ரூ. 237 கோடி சிறுசேமிப்பாகக் கிடைத்தது. ஐந்தாண்டுக் காலத்தில் மொத்தத் திட்ட முதலீட்டில் சிறுசேமிப்புகள் சுமார் 12% நிதியிட வகைசெய்தது. குறிப்பிடத் தக்கதாகும். திட்டக் காலத்தில் கிடைக்கக் கூடிய வெளி உதவி ரூ. 296 கோடியாக இருக்குமென்று கருதப்பட்டது. இதில் 142 கோடி ரூபாய் கடன் களாகவும், மீதி 154 கோடி ரூபாய் மானியங்களாகவும் அளிக் கப்பட வேண்டியிருந்தது. மொத்த வெளி உதவியாக ரூ 296 கோடியில் ரூ. 188 கோடிகள்தான் முதல் திட்டக்காலத்தில் பயன்படுத்தப் பட்டன. மீதி ரூ. 108 கோடிகள் அடுத்த திட்டத் திற்காக எடுத்துவைக்கப்பட்டது. வெளியுதவி முக்கியமாகக் கோதுமை, எஃகு போன்ற பொருள்கள், பல்வேறு வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவையான சாதனங்கள் ஆகியவைகளைப் பெறுவதற்காகப் பயன்படுத்தப்பட்டது. திட்டத்தின் ஆரம்பத்தில் பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலம் ரூ. 290 கோடி பெறவேண்டு மென்று கணக்கிடப்பட்டது. ஆனால், உண்மையில் மொத்தப் பற்றுக்குறை நிதியாக்கம் ரூ. 420 கோடியாக இருந்தது. இது மொத்த முதலீட்டில் 21 சதவீதமாகும். திட்டத்தின் கடைசி

1 முதல் ஐந்தாண்டுத்திட்டத்தின் மறுஆய்வு, ப. 27.

இரண்டாண்டுகளில் பற்றுக்குறை நிதியாக்கத்தில் 60 சதவீதத்திற்கு மேற்பட்ட நிதி உருவாக்கப்பட்டது.

## திட்டத்தின் திறனாய்வு

முதல் திட்டம் அறிவிக்கப்பட்டபோது பல்வேறு வகையான குறைபாடுகள் எடுத்துக் கூறப்பட்டன. அவைகளுள் முக்கியமானவை வருமாறு:

(i) 1951-56 வரை ஒவ்வோர் ஆண்டிலும் கூடுதல் வருவாயில் 20 சதவீதம் முதலாக்கத்திற்காகத்திருப்பப்படும் என்று முதலில் அறிவிக்கப்பட்டது. மேலும், 1956-க்கும் 1968-க்கும் இடைப் பட்ட காலத்தில் முதலாக்கத்திற்காகக் கூடுதல் வருவாயிலிருந்து 50% ஒதுக்கப்பட முடியும் என்றும் கூறப்பட்டது. இக் கருத்து திறனாய்வாளர்களால் கடுமையாகக் குறைகூறப்பட்டது. அவர்களின் கருத்துப்படி இந்திய மக்களில் பெரும்பாலோர் பரம ஏழைகளாய் இருப்பதால் கூடுதல் வருவாயில் மிக அதிக விகிதத்தை மறு முதலீடாகப் பயன்படுத்த முடியாது. ஆனால், மிக விரைவான பொருளாதார வளர்ச்சியை மிக்க் குறுகிய காலத்திலேயே பெற வேண்டுமென்ற குறிக்கோளைச் சாதிக்க வளர்ச்சியின் ஆரம்பக்கட்டத்திலாவது நுகர்வுச் செலவைக் குறைத்து, மிகக்கடுமையான சிக்கன நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது. விரைவான வளர்ச்சியை அடைய வேண்டுமென்ற ஆர்வத்தில் கூடுதல் வருவாயில் பெரும் பகுதி மீண்டும் மறு முதலீடாகப் பயன் படுத்தப்படவேண்டுமென்பது உயர் கருத்தாகும்.

(ii) முதல் திட்டம் மிக எளிமையான திட்டமென்றும் போதிய அளவு உயர் குறிக்கோள்களைப் பெறவில்லையென்றும் குறை கூறப்பட்டது. இத் திட்டம் மக்கள் போருக்கு முன் பெற்றிருந்த நுகர்வுப் பொருள்களின் அளவை மீண்டும் நிலைநாட்ட வேண்டும் என்ற குறிக்கோளைப் பெற்றிருந்ததாக இடித்துரைக்கப்பட்டது. வெளிப்படையாகவே இவ்வளவு பெரிய நாட்டிற்கு மிகவும் மதிப்பிற்குரிய குறிக்கோள்கள் முன்வைக்கப் படாதது ஒரு பெரும் குறையாகும்.[1] இரண்டாம் உலகப் போருக்குமுன் இந்தியா பெற்றிருந்த வாழ்க்கைத்தரத்தை மீண்டும் நிலைநாட்ட வேண்டுமென்பது இத் திட்டத்தின் குறிக்கோளாக இருந்தது. தேசத்தின் தேவைகளுக்கேற்றபடி திட்டத்தின் மொத்த ஒதுக்கீடு மதிப்பிடப்படவில்லை. முதல் திட்டம் நாட்டில் இருக்கும் வளர்ச்சித்

1 பேராசிரியர் பேரன் (Baren) வளர்ச்சியின் அரசியல் பொருளாதாரம். ப. 224.

திட்டங்களின் ஒரு சாரமாகவே இருந்தது. அத் திட்டங்களில் சில, ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலேயே தீட்டப்பட்டவை களாகும். எனவே, திட்டத்தின் செயல் நடவடிக்கைகளில் ஊக்கம் ஏற்படவில்லை சான்ருக, கடுமையாக நோய்வாய்ப்பட்ட ஒருவனுக்கு ஆரம்ப கட்டத்தில் மிகத்தீவிரமான, சக்தி வாய்ந்த மருந்துகளை அளித்தால்தான் அவன் கொடுமையான நோயிலிருந்து தப்பி விரைவாக மீட்சியடைய முடியும். இக் கருத்தைத் திட்ட நிபுணர்கள் நடைமுறைப்படுத்தத் தவறியதால் முதல் திட்டம் குறிப்பிடத்தக்க வகையில் தக்க சாதனைகளைத் தோற்றுவிக்கவில்லை.

(iii) முதல் திட்டம் தொழில் துறையைப் புறக்கணித்து விட்டு வேளாண்மைக்கே சமச்சீரில்லா வகையில் மிக முக்கியத்துவம் அளித்தது. வலுவான வேளாண்மை அடிப்படை இருந்தால் தான், உணவு தானியங்களையும், தொழில்சார் மூலப்பொருள் களையும் நிலையாகப் பெற்று, அடுத்தடுத்துத் தொழில் வளர்ச்சியை மேம்படுத்த முடியும் என்று திட்டக்குழு கருதியது. அப்போதிருந்த வேளாண்மை வளர்ச்சி நிலையின்படி இந்தியத் தொழில்கள் ஏற்கெனவே முழு வளர்ச்சியடைந்திருந்தாக நம்பப்பட்டது. ஆனல், இந் நம்பிக்கை முற்றிலும் தேவையற்றதாகவும், மிக அநீதி கொண்டதாகவும் இருந்தது. திட்டக்குழு தீர்மானித்த தொழில் வளர்ச்சித் திட்டங்களுக்கும் மிக அதிமான அளவு வளர்ச்சி தேவை என்பதை அப்போதிருந்த வேளாண்மை வளர்ச்சி தெளிவாக வெளிப்படுத்தியிருந்தும், தொழில்துறை கடுமையாகப் புறக்கணிக்கப்பட்டது. சான்ருக, நீர்ப்பாசன சாதனங்கள், மின்சக்தித் திட்டங்கள், உரங்கள், போன்ற வேளாண்மைக்குத் துணையான சில கனரகத் தொழில்களைத் திட்ட நிபுணர்கள் முதல் திட்டத்தில் சேர்க்கத் தவறிவிட்டனர்.

(iv) தொழில் துறை முழுவதுமே தனியார் துறையிடம் ஒப்படைக்கப்பட்டது மிகவும் வேதனையைத் தரும் அம்சமாகும். அரசின் பங்கு மிகவும் கீழ் நிலையில் முக்கியத்துவம் அற்றதாக இருந்தது. தனியார் நிறுவனங்கள் நாட்டின் தொழில்சார் ஆக்க வளங்களை முன்பு முழு அளவில் வளர்ச்சியடையச் செய்யத் தவறியிருக்கிறது என்று அறிந்தும் அதனிடம் தொழில் துறையில் பெரும் பங்கு ஒதுக்கப்பட்டது. இவைகள் நாட்டிற்கு முக்கியமாகத் தேவையான தொழில்களில் அக்கறை செலுத்தாமல் குறுகிய காலத்தில் அதிக இலாபம் தரும் தொழில்களிலேயே நாட்டம் செலுத்தின. இவ்வாறு தொழில் துறை முழுவதையும் தனியார் தொழிலதிபர்களிடம் ஒப்படைத்தது ஒரு மாபெரும் தவருகும். இக் கண்மூடித்தனமான செயலினுல்தான் முதல்

திட்டக் காலத்தில் ஒரு சில தொழிலதிபர்களிடம், செல்வம் பொருளாதார சக்தி, பெருமளவு குவிவதற்கு வழியேற்பட்டது. சுருங்கக் கூறின் திட்டமிட்டோரிடம் தெளிவான சமூகக் குறிக்கோள்கள் தோன்றவில்லை. அவர்கள் இருக்கும் பண்டைப் பரம் பரைச் சமூக-பொருளாதார அமைப்பை வலுப்படுத்தி நிலைநாட்ட வேண்டுமென்ற எண்ணத்தைப் பெற்றிருந்தனர்.

(v) முதல் திட்டத்தில் நீண்டகால நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு மிதமிஞ்சிய முக்கியத்துவம் அளித்தது மற்றொரு குறையாகும். பொருளாதாரத்தின் ஆரம்பக் கட்டத்தில் உடனடியாகப் பலனளிக்கும் குறுகிய காலத்திட்டங்களில் முதலீடு செய்திருந்தால் வேலையின்மையைப் போக்கவும், பணவீக்க அழுத்தங்களைக் குறைக்கவும் பெருமளவில் துணைபுரிந்திருக்கும்.

(vi) எந்த ஒரு பொருளாதாரத் திட்டத்தின் வெற்றியும் நிர்வாக அமைப்பின் திறமையை அடிப்படையாகக் கொண்டது என்பதைத் திட்டமிட்டோர் அறியவில்லை. எனவே, திட்டத்தைத் திறமையுடன் செயலாற்றத் தேவையான எந்த ஒரு சிறப்பு அமைப்பையும் அவர்கள் உருவாக்க முயலவில்லை. ஏற்கெனவே நேரமில்லாமல் பெருஞ்சுமைகளை மேற்கொண்டிருக்கும் மாவட்ட அதிகாரிகளிடமே திட்டங்களைச் செயற்படுத்தும் பணியும் ஒப்படைக்கப்பட்டது. எனவே, திட்டங்களை உண்மையில் நடைமுறைப்படுத்தும் போது பெருமளவு துர் நிர்வாகம் ஏற்படுவதில் வியப்பில்லை. இந்தியப் பொருளாதாரப் பணித்துறை (Indian Economic Service) போன்ற தனிப் பணிப் பிரிவுகளை அரசு உருவாக்கியிருந்தால் நலமாக இருந்திருக்கும்.

## முதல் திட்டச் சாதனைகள்

### 1. தேசிய வருவாய்

ஐந்தாண்டுக் காலத்தில் தேசிய வருவாய் சுமார் 17·5 சதவீதமாக அதிகரித்தது. இந்த அதிகரிப்பு எல்லா ஆண்டுகளிலும் நிலையாக ஏற்படவில்லை. 1953-54, 1954-55 ஆகிய ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தி பெருமளவு அதிகரித்ததின் விளைவாகத் தேசிய வருவாய் அதிகரித்தது. வேளாண்மை, அதனோடு இணைந்த துறைகள் ஆகியவைகளின் நிகர உற்பத்தி 14·7 சதவீதமாகவும், சுரங்கம் செய்பொருள், சிறுநிறுவனங்கள் ஆகியவைகளில் 18·2 சதவீதமாகவும் அதிகரித்தது. வாணிபம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, ஆகியவைகளில் அதிகரிப்பு 18·6 சதவீதமாகவும், மற்ற பணிகளில் 23·7 சதவீதமாகவும் இருந்தது. இத்

திட்டக் காலத்தில் தலா வருவாய் 10·5 சதவீதமாக அதிகரித்தது. தனிநபர் நுகர்வின் அளவு சுமார் 8 சதவீதமாக அதிகரித்தது.

2. முதலீடும் உற்பத்தியும்

இத் திட்டம், முதலீடு தேசிய வருவாயில் 5 சதவீதத்திலிருந்து சுமார் 7 சதவீதமாக அதிகரிக்குமென்று கணக்கிட்டது. ஐந்தாண்டுகளுக்கு மொத்த முதலீட்டின் இலக்காக ரூ. 3500–3600 கோடிகளாக மதிப்பிடப்பட்டது திட்டக் காலத்தில் மொத்தப் பொதுத்துறை முதலீடு ரூ. 1500 கோடியாகவும், தனியார்துறை முதலீடு சுமார் ரூ. 1600 கோடியாகவும், ஐந்தாண்டுக் காலத்தில் மொத்தம் ரூ 3100 கோடியாகவும் இருந்தது. முதலீட்டுச் செலவின் போக்கு ஒரே சீரானதாக இருக்கவில்லை. முதல் கட்டத்தில் பொது, தனியார் முதலீட்டின் அளவு மிகக் குறைவாக இருந்தது. ஆனால், இரண்டாம் கட்டத்தில் அது குறிப்பிடத் தக்கவகையில் அதிகரித்தது. திட்டத்தின் கடைசி இரண்டாண்டுகளில் பொதுத் துறை முதலீடு 50% மேல் அதிகரித்தது. 1953, 1954 ஆகிய ஆண்டுகளில் அதிர்ஷ்டவசமாக நல்ல பருவகால மழையால் உற்பத்தி அதிகரித்தது வெளிப்படையான உண்மையாகும். முதலீட்டிற்கும் உற்பத்திக்கும் இடையே எந்த ஒரு நேர் தொடர்பையும் இந்தியப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக் கட்டத்தில் ஏற்படுத்த முடியவில்லை. ஏனெனில், திட்டத்தின் பிற் பகுதியில் முதலீடு பெருமளவில் முறையாக அதிகரித்தபோது உற்பத்தி முழுவதுமாகக் குறைந்தது.

3. வேலை வாய்ப்பு

1953-ல் முக்கியமாக நகரப் பகுதிகளில் வேலை வாய்ப்பு நிலைமை சீர்கேடடைந்தது. இதனால் திட்டத்தின் மொத்த முதலீட்டில் ரூ. 300 கோடி அதிகமாக்கப்பட்டது. இதன் விளைவாக வேலைவாய்ப்பு நிலை குறிப்பிடத் தக்கவகையில் சீரடையவில்லை. தொழிலாளர் சக்தி அதிகரிப்புக்கு இணையாக இத் திட்டக் காலத்தில் வேலை வாய்ப்புகள் பெருகவில்லை. எனவே, இத் திட்டக் காலத்தில் நாட்டில் வேலையின்மையும், வேலைக் குறைவும் குறிப்பிடத் தக்கவகையில் குறையவில்லை. ஆனால், வேலை வாய்ப்பு நிலைமையில் தரச் சீரமைப்புகள் ஏற்பட்டன. திட்டத்தின் பிற் பகுதியில் சில துறைகளில் பகுதி திறமை பெற்ற நுட்பத் தொழில் பணியாள்களின் தட்டுப்பாடு அதிகரித்தது.

4. பணமும் விலைகளும்

இத் திட்டக் காலத்தில் மொத்தப் பண அளிப்பு ரூ. 1979 கோடியிலிருந்து ரூ 2184 கோடியாக அதிகரித்தது. இது 10%

அதிகரிப்புக்கும் சிறிது அதிகமாகும். விலைமட்டம் திட்ட ஆரம்பத்தி லிருந்ததைவிடத் திட்டமுடிவில் 13% குறைவாக இருந்தது. இம் மாற்றம் இரு கட்டங்களில் ஏற்பட்டது. முதல் கட்டத்தில் பண அளிப்பும், விலைமட்டமும் குறையத் தொடங்கியது. ஆனால், இரண்டாம் கட்டத்தில், பொது, தனியார் முதலீடு அதிகரித்த தால் பண அளிப்பும், விலைமட்டமும் அதிகரிக்கத் தொடங்கின. எனவே, அமுலாக்கப்பட்ட வளர்ச்சித் திட்டங்கள் பொருளா தாரத்தில் பணவீக்க அழுத்தங்களைக் குறிப்பிடத்தக்கவகையில் ஏற்படுத்தவில்லை இதற்கு முக்கியக் காரணம் திட்டத் தின் மத்திய காலத்தில் முக்கியமாக வேளாண்மைத்துறையில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க உற்பத்தி அதிகரிப்பாகும். 1956-ம் ஆண்டின் துவக்கத்தில் ஓரளவு பணவீக்கம் வெளிப்படையாகத் தெரிந்தது.

5. செலுத்து இருப்பு நிலை

முதலில் எதிர்பார்த்ததை விட வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலையின் போக்கு திருப்திகரமாக இருந்தது. ஆரம்பத்தில் சராசரி வருடாந்திரப் பற்றுக்குறை ரூ. 180-200 கோடியாக இருக்கும் என்று திட்டக்குழு கணக்கிட்டது. ஆனால், உண்மையில் ஐந்தாண்டுக் காலத்தில் பற்றுக்குறை சுமார் ரூ. 30 கோடிக்கும் அதிகமாகவில்லை. முதல் திட்ட ஆரம்பத்தில் ரூ. 290 கோடி மதிப்புள்ள ஸ்டெர்லிங் இருப்புகள் திரும்பப் பெறவேண்டி யிருக்கும் என மதிப்பிடப்பட்டது. ஆனால் உண்மையில் ரூ. 138 கோடி மதிப்புடைய ஸ்டெர்லிங் தொகைதான் வாங்கப் பட்டது.

6. உற்பத்தியின் போக்கு

முதல் திட்டத்தில் உற்பத்தித் துறையின் சாதனை திருப்தி கரமாக இருந்தது. முக்கியமான உற்பத்தித் துறைகளில் திட்டத் திற்கு முன், திட்டத்திற்குப் பின் உற்பத்தி மட்டங்களைக் கீழ்க் கண்ட அட்டவணை விளக்குகிறது. (பார்க்க. பக்கம். 145)

திட்டக்காலத்தில் வேளாண்மை உற்பத்தி வியக்கத்தக்க வகையில் சீரடைந்தது. 1955-56-ல் உணவு தானிய உற்பத்தி 64·8 மில்லியன் டன்களாக அதிகரித்தது. இது திட்டத்தில் குறிக்கப்பட்ட இலக்கைவிட 3 மில்லின் டன்கள் அதிகமாகும் 1953-54 ல் உற்பத்தி 68·8 மில்லியன் டன்களாக மிக உயர் நிலையில் இருந்தது. 1954-55லும் உற்பத்தி இதற்கு இணையா கவே இருந்தது. பருத்தி, சணல், எண்ணெய்வித்துகள் ஆகியவை களின் உற்பத்தி கணிசமான அளவு அதிகரித்தது. திட்ட இறுதியில்

முதல் திட்ட உற்பத்தி அதிகரிப்பு

| | 1950-51 | 1955-56 | 1955-56ல் அதிகரிப்பு (சதவீதங்களில்) |
|---|---|---|---|
| 1. வேளாண்மை உற்பத்தி | | | |
| (i) உணவு தானியங்கள் (மில்லியன் டன்களில்) ... | 50·0 | 64·8 | 29·6 |
| (ii) பருத்தி (லட்சம் டன்களில்) .. | 29·1 | 40·0 | 37·5 |
| (iii) சணல் (லட்சம் பேல்களில்) .. | 32·8 | 42 0 | 28·0 |
| (iv) கரும்பு (லட்சம் டன்களில்) ... | 56·2 | 58·6 | 4·3 |
| (v) தேயிலை (மில்லியன் பவுண்டுகளில்) ... | 607·0 | 668 0 | 10·5 |
| 2. தொழில் உற்பத்தி | | | |
| (i) வினை முடிந்த எஃகு (ஆயிரம் டன்களில்) ... | 976 | 1274 | 30·5 |
| (ii) இரும்புப் பாளங்கள் (ஆயிரம் டன்களில்) .. | 1572 | 1787 | 13·7 |
| (iii) சிமெண்டு (ஆயிரம் டன்களில்) ... | 2689 | 4592 | 70·8 |
| (iv) உரங்கள் (ஆயிரம் டன்களில்) ... | | | |
| (a) அம்மோனியம் சல்பேட் ... | 46 | 394 | 756·5 |
| (b) சூபர் பாஸ்பேட்டுகள் ... | 55 | 71 | 29·1 |
| (v) ரயில் எஞ்சின்கள் (எண்ணிக்கை) ... | 3 | 179 | ...... |
| (vi) மோட்டார் வாகனங்கள் (எண்ணிக்கை) ... | 16519 | 25272 | 53·0 |
| (vii) அலுமினியம் (டன்களில்) ... | 3677 | 7333 | 99·4 |
| (viii) ஆலைத் துணி (மில்லியன் கஜங்களில்) ... | 3718 | 5102 | 37·2 |
| (ix) கைத்தறித் துணி (மில்லியன் கஜங்களில்) ... | 810 | 1449 | 79·0 |
| (x) சணல் செய்பொருள்கள் (ஆயிரம் டன்களில்) .. | 824 | 1054 | 28·0 |
| (xi) துவிச்சக்கர வண்டிகள் (ஆயிரங்களில்) ... | 101 | 513 | 407·9 |
| (xii) சர்க்கரை (ஆயிரம் டன்களில்) ... | 1064 | 1701 | 59 9 |
| (xiii) தையல் எந்திரங்கள் (ஆயிரங்களில்) .. | 33 | 111 | 236·3 |
| (xiv) வனஸ்பதி (ஆயிரம் டன்களில்) ... | 153 | 276 | 80·4 |
| (xv) காகிதமும் காகித அட்டையும் (ஆயிரம டன்களில்) ... | 114 | 187 | 4.0 |

ஆதாரம்: இந்திய அரசு, திட்டக்குழு, முதல் ஐந்தாண்டுத் திட்ட மறு ஆய்வு.

வேளாண்மை உற்பத்தியின் குறிப்பெண் (Index of Agricultural Production) திட்டத்தின் ஆரம்பத்தில் இருந்ததை விடச் சுமார் 19% அதிகமாக இருந்தது.

தொழில்சார் உற்பத்தி, திட்டக்காலத்தில் நிலையாகச் சுமார் 40 சதவீதமாக அதிகரித்தது. மூலப்பொருள்கள் பெருமளவில் கிடைத்ததாலும், இதுவரை பயனின்றி வீணாக இருந்த ஆக்கசக்தி முழு அளவில் பயன்படுத்தப் பட்டதாலும், புதிய முதலீடுகள் அதிக அளவில் அதிகரித்ததாலும், தொழில்சார் உற்பத்தி பொதுவாகப் பெருகியது. முதல் முறையாகப் பல்வேறு புதிய ரகப் பொருள்கள் இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டன. முதல்திட்டத்தில் எண்ணெய் சுத்திகரிப்பு, கப்பல் கட்டுதல், ஆகாயவிமானத் தொழில், ரெயில்வே பெட்டிகள், பென்சிலின் (penicilin) போன்ற ஏராளமான புதுவகைத் தொழில்கள் இந்தியாவில் உருவெடுத்தன. இதற்கு எதிராக, எதிர்பார்க்கப்பட்ட இரும்பு, எஃகு ஆலை, கனரக மின்சாதன ஆலை (heavy electrical equipment) ஆகியவைகள் இத் திட்டத்தில் துவக்கப்பட முடியவில்லை. சில மாநிலத் தொழில் நிறுவனங்களும் எதிர்பார்த்த முன்னேற்றத்தைப் பெற முடியவில்லை.

7. பொருளாதார நலனை மேம்படுத்தும் துறைகள்
(Economic Over heads)

இத் திட்டக்காலத்தில் ஆக்க இயங்கு சக்தி (Capacity for Power generation) 2·3 மில்லியன் கிலோ வாட்டிலிருந்து 3·4 மில்லியன் கி. வா. ஆக அதிகரித்தது. ரெயில்வேக்களின் அடிப்படை அமைப்புக் கணிசமான அளவு வலுப்பெறச் செய்யப்பட்டது. இரண்டாம் உலகப் போரின்போது சேதமடைந்த சுமார் 430 மைல் நீளமுள்ள இருப்புப்பாதை செப்பனிடப்பட்டது; 380 மைல் நீளமுள்ள புதிய பாதைகளும் போடப்பட்டன; 46 மைல்கள் நீளமுடைய குறுகிய பாதை (narrow guage)யை அகலப் பாதையாக (metre gauge) மாற்றினர். உள்நாட்டு உற்பத்தியில் ரெயில் எஞ்சின்களின் உற்பத்தி 1951-52-க்கும் 1955-56-க்கும் இடைப்பட்ட காலத்தில் 27 லிருந்து 179 ஆகவும், ரெயில் பெட்டிகள் 3,707 லிருந்து 14,317 ஆகவும், பாரவண்டிகள் (Coaches) 673 லிருந்து 1221 ஆகவும் அதிகரித்தது. சாலை அமைத்தல், சாலைப் போக்குவரத்து ஆகியவற்றிற்கான திட்டங்கள் ஏறக்குறைய முழுவதுமாக அமுலாக்கப்பட்டன. துறைமுகங்கள், கப்பல் போக்குவரத்து ஆகியவைகளுக்கான முதலீட்டில் தட்டுப்பாடு ஏற்பட்டதால், இவைகளின் வளர்ச்சி கணிசமான அளவு அதிகரிக்கவில்லை.

8. சமூகப் பணிகள் (Social services)

முதல் திட்டக் காலத்தில் சமூகப் பணிகள் பெருமளவில் விரிவாக்கப்பட்டன. ஆரம்பப் பள்ளிகளில் கல்வி கற்கும் குழந்தை

களின் எண்ணிக்கை சுமார் 33 சதவீதம் அதிகரித்தது. பயிற்சி பெற்ற பணியாள்களின் எண்ணிக்கையை அதிகரிக்க ஏராளமான நுட்பத் தொழில் பயிற்சி நிலையங்கள் துவக்கப்பட்டன. சுகாதாரத் திட்டங்களின் செயல் முறையினால் மருத்துவமனைகளும், மருத்துவ நிலையங்களும் ஓரளவு அதிகரித்தன. மலேரியா, பிலேரியா போன்ற நோய்களைக் கட்டுப்படுத்தும் பேரளவுச் செயல் திட்டங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டன.

சுருங்கக் கூறின், "முதல் ஐந்தாண்டுத் திட்டம், வேளாண்மை, தொழில் ஆகிய இரு துறைகளில் உற்பத்தியின் அளவைப் பெருமளவில் அதிகரிக்கத் தகுந்த கருவியாகவே இருந்தது."[1]

## முடிவுரை

உற்பத்தியில் குறிப்பிடத்தக்க அதிகரிப்பு இருந்தபோதிலும் திட்டத்தின் செயல்முறையில் சில குறைகள் காணப்பட்டன. முதலாவதாக, முதல்திட்டம் வேலையின்மையைப் போக்கத் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை. உண்மையில் திட்டத்தின் மத்திய காலத்தில் வேலையின்மை நிலைமை மிகவும் சீர்கேடு அடைந்தது. முதலீட்டு வளர்ச்சிவீதம், நாட்டில் அதிகரிக்கும் தொழிலாளர் சக்தி வளர்ச்சிவீதத்திற்கு இணையாக அதிகரிக்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. எனவே, முதல் திட்ட முதலீட்டின் செயல் திட்டம் மிகவும் எளிமையாக இருந்தது என்பதை உணரலாம். இத் திட்டக் காலத்தில் தொழிலாளர் சக்தி 10 மில்லியனாக அதிகரித்திருந்ததற்கு 4.5 மில்லியன் தொழிலாளர்களுக்குத்தான் வேலை கிடைத்தது. இரண்டாவதாக, இத் திட்டத்தின் சமதரும சமூகக் குறிக்கோள்கள் (Social objectives) தகுந்த முறையில் வெற்றி பெறவில்லை. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் குறைந்திருக்க வேண்டியதற்குப் பதிலாக பெருமளவில் அதிகரித்து ஏழைகளுக்கும் பணக்காரர்களுக்கும் இடையே இருந்த இடைவெளியை மேலும் தீவிரமாக அதிகரித்தது. பேராசிரியர் கட்கில் (Gadgil) ஆய்ந்துரைத்திருப்பதுபோல், பணக்காரர்கள் மேன்மேலும் பணக்காரர்களாகவும், ஏழைகள் மேலும் ஏழையர்களாகவும் ஆக்கப்பட்டனர். "முதல் திட்டக்காலம் இந்தியசர்வாதீனத் தொழிலதிபர்களுக்கு மகிழ்ச்சியான காலமாக இருந்தது. அநேக நிறுவனங்கள் தங்களாலேயே நம்ப முடியாத அளவுக்குப் பெருமளவு இலாபத்தைப் பெற்றனர். அநேக தொழில் நிறுவனங்கள் ஒரே ஆண்டிலேயே, தங்கள் மொத்தச் செலுத்தப்பட்ட மூலதனத்திற்கும் (Paid up Capital) மிக அதிகமான இலாபத்தைப் பெற்

[1] முதல் ஐந்தாண்டுத்திட்ட மறு ஆய்வு (Review of the First Five-year plan) ப. 18.

றனர்.'' தொழில் அமைப்பின் உயர் மேல்மட்ட வர்க்கத்தில் பொருளாதார சக்தியின் குவிப்பு அதிர்ச்சியடையத் தக்கவகையில் அதிகரித்தது. எனவே, முதல் திட்டச் செயல் முறையின் இத்தகைய நிலை சமூகத்தில் அநீதியை ஏற்படுத்தியது. அரசு இதைத் தகுந்த முறையில் கண்டறிந்து தேசிய வருவாயில் ஏற்படும் புதிய கூடுதல் வருவாயை எல்லோரிடமும் சமமாகப் பகிர்ந்தளிக்கப்பட முக்கிய நடவடிக்கைகளை நடைமுறைப் படுத்தியிருக்க வேண்டும். மூன்றாவதாக, பேராசிரியர்கள் வக்கீலும், பிரஹ்மானந்த் அவர்களும் குறிப்பிடுவதுபோல், அரசின் நிர்வாக அமைப்புமுறை நெகிழ்ச்சியின்றி ஒரே நிலையில் இருந்ததால் முதல் திட்டக் காலத்தில் இந்தியப் பொருளாதாரத்திற்குச் சாதகமான இயற்கைக் காரணிகளால் ஏற்பட்ட உபரிவளங்கள் போதிய அளவு திறம்பட முழுவதுமாகப் பயன்படுத்தப்படவில்லை.[1] சில ஆண்டுகளில் கிடைத்த உபரி உணவுப் பொருள்களை எதிர்கால வளர்ச்சிக்காகத் தகுந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளும் ஆற்றலை முதல் திட்டம் பின்பற்றவில்லை. ''எச்ச உணவுப் பொருள்களினால் கிடைக்கும் வருவாய் மறு முதலீட்டிற்காகப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்பட்டது.'' உணவுப் பொருள்களும் சேமிக்கப்படாமல் நுகர்வுக்காகவே முழுவதும் பயன்படுத்தப்பட்டன. ''இதன் விளைவாகப் பொருளாதாரத்தில் தேசிய வருவாய் அதிகரித்தபோதிலும் சேமிப்பு தானாகவே அதிகரிக்கவில்லை'' நான்காவதாக, திட்டத்தின் செயல்முறையின் அடிப்படையிலேயே ஏதோ ஒரு குறை இருந்ததால்தான் ஒதுக்கப்பட்ட மூலதனம் முழுவதும் செலவழிக்க முடியாமல் போயுள்ளது. ஐந்தாண்டுகளுக்குத் திருத்தப்பட்ட மொத்த மூலதன ஒதுக்கீடு ரூ. 2378 கோடியாகும். ஆனால், உண்மை முதலீடு ரூ. 1960 கோடியாய்க் குறைந்ததால் செலவில் ரூ. 418 கோடி துண்டுவிழ நேர்ந்தது. மத்திய அரசு, பல்வேறு மாநில அரசுகளின் செலவீன வீதம் மிகக் குறைவாக இருந்தது. இதற்குக் காரணம் நிர்வாக நெகிழ்ச்சியின்மையும், மூலப் பொருள்கள், உற்பத்தி சாதனங்கள், பயிற்சி பெற்ற பணியாள்கள் ஆகிய அம்சங்களின் தட்டுப்பாடு போன்ற இயற்பொருள்சார் தடைகளும் ஆகும். இத்தகைய தொல்லைகளை முன்கூட்டியே ஆய்ந்தறிந்து அவைகளைத் தக்க தருணத்தில் போக்க நடவடிக்கைகளைத் திறமையுடன் செயற்படுத்தி இருக்க வேண்டும். இருப்பினும், முதல் திட்டம் அடுத்தடுத்து வரும் திட்டங்களுக்கு ஒரு வலுவான அடிப்படை அமைப்பை ஏற்படுத்தியது என்பது வெளிப்படையான உண்மையாகும்

[1] வக்கீல், பிரஹ்மானந்த், 'ஒரு வளரும் பொருளாதாரத்திற்கான திட்டம்' (Planning for an Expanding Economy) ப. 6.

# 41. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்

## (The Second Five year Plan)

## (1956-57 to 1960-61)

முதல் ஐந்தாண்டுத் திட்டம் இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படையை (Base) வலுப்பெறச் செய்து, எதிர்காலத்தில் விரைவான வளர்ச்சியைப் பெற வகை செய்யும் நிறுவன மாற்றங்களை உருவாக்கி, உலகப் போர், நாட்டுப் பிரிவினை ஆகியவைகளால் ஏற்பட்ட சில அவசரப் பிரச்சினைகளைத் தீர்த்து, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் ஓரளவு முன்னேற்றம் கண்டது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் முதல் திட்டத்தின் செயல் முறைகளையும் பணியையும் தொடர்ந்து செயலாற்றி வளர்ச்சி ஏற்படுத்த வேண்டிய பொறுப்பைப் பெற்றது. அது உற்பத்தி, முதலீடு, வேலை வாய்ப்பு ஆகியவை களில் பெருமளவு அதிகரிப்பைச் சாதிக்க வேண்டிய சூழ்நிலையில் இருந்தது. அது நாடு பொருளாதார, சமூக ரீதியில் அதிக இயக்க நிலையும் முன்னேற்றமும் பெறச் செய்யப் பல்வேறு நிறுவன மாற்றங்களை ஒரே சமயத்தில் துரிதப்படுத்த வேண்டிய நிலையில் இருந்தது. ஒவ்வொரு திட்டமும் குறுகிய காலத்தில் நீண்ட காலத்திற்குத் தேவையான நிலையான செயல்முறைகளைத் தோற்று விக்கப் பயன்படுகிறது. முன்னேற்றத்தின் ஒவ்வொரு படியும் புது நோக்குடைய கருத்துகளை உருவாக்கி, புதிய பிரச்சினைகளை ஏற்படுத்தி, அவைகளைத் தீர்க்கவேண்டியுள்ளது. எனவே, ஒவ்வொரு குறித்தகாலத் திட்டமும் நீண்டகால எதிர்நோக்குத் திட்டத்தின் அடிப்படையில் செயல் திட்டங்களைச் சரிசெய்து கொள்ளவும், பின் பற்றவும் தயாராக இருக்க வேண்டும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டம் 31, மார்ச் 1956-ல் முடிவுற்றது. முதல் திட்டம் முடிவடைவதற்கு முன்பே இரண்டாம் திட்டத்தின் அம்சங்கள் தயாரிக்கப்பட்டன. இந்தியப் புள்ளிவிவரப் பயிற்சி நிலையத்தின் (Indian Statistical Institute, Calcutta) பேராசிரியர் P. C. மஹாலனோபிஸ் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் நகல் திட்டத்தை வரையும் (Draft plan-frame) பணியை மேற்கொண்டு

மார்ச் 17, 1955-ல் அதைத் திட்டக் குழுவிடம் சமர்ப்பித்தார். இந் நகல் திட்டத்தின் அம்சங்கள் அரசாங்கத்திலும், வெளியிலும் சிறப்பாக ஆலோசிக்கப்பட்டன பின் அது திருத்தப்பட்டு, மாற்றி வரையப்பட்டு, இரண்டாம் திட்டத்தின் அடிப்படை அம்சமாக்கப்பட்டது. அது கடைசியாக மே 1956-ல் இந்திய நாடாளுமன்றத்தில் நிறைவேறி, ஏப்ரல் 1, 1956-ல் பின்னோக்கிய கால விளைவுடன் அமலுக்கு வந்தது. முதல் திட்டத்தின் வெற்றியால் திட்டக்குழு பேரார்வமுடைய திட்டத்தை 1956-57 முதல் 1960-61 வரைக்குமான காலத்திற்காகத் தீட்டி வெளிப் படுத்தியது. இத் திட்டத்திலும் சமதர்ம சமுதாய முறையைச் சாதிக்கும் குறிக்கோளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இதைப் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன் இரண்டாம் திட்டத்தில் நிறுவன மாற்றங்கள் போன்ற திட்ட எதிர்நோக்குச் செயல் திட்டங்களில் ஒரு சீராக்கத்தை (reorintation) ஏற்படுத்த வேண்டியது இன்றியமையாததாக இருந்தது. அத்தகைய மறு வடிவம் பெற்ற எதிர்நோக்குத் திட்டத்தின் அம்சங்களை இனி ஆராயலாம்.

## திட்டக்குழுவின் மாதிரி எதிர்நோக்கு வளர்ச்சித் திட்டம்
(Planning Commission's Perspective Growth Model)

இரண்டாம் திட்டத்திற்கு அடிப்படையாக விளங்கிய மாதிரி வளர்ச்சித் திட்டம் (Growth Model) பின் வருமாறு:—

[வருவாய் முதலீடுகளில் எதிர்பார்க்கும் வளர்ச்சி— பார்க்க. பக்கம். 151]

இரண்டாம் திட்டம், மொத்த தேசிய வருவாய் 1955-56-ல் ரூ. 10,800 கோடியிலிருந்து 1960-61-ல் ரூ. 13,480 கோடியாக (1952-53 விலைகளின்படி) அதிகரிக்குமென்று எதிர்பார்த்தது. இது இரண்டாம் திட்டக் காலத்தில் 25 சதவீத அதிகரிப்பை உணர்த்து கிறது. தலாவருவாய் 1955-56ல் ரூ. 281 ஆக இருந்ததிலிருந்து 1960-61ல் ரூ. 331 ஆக அதிகரிக்குமென்றும் எதிர்பார்க்கப் பட்டது. "முதல் திட்ட அறிக்கையில் 1955-56விருந்து இறுதிநிலைச் சேமிப்பு வீதம் 50 சதவீதமாக அதிகரிக்குமென்று கருதப்பட்டது. இதன் அடிப்படையில் 1968-69-ல் பொருளாதாரத்தின் முதலீடு வீதம் தேசிய வருவாயில் 20 சதவீதமாக அதிகரித்து அதே வீதத்தில் நிலையாக இருக்கும்." இவைகள் தற்போது உயர் மிதமிஞ்சிய எதிர்நோக்குக் கணக்கீடுகளாக உள்ளன. மேற் குறிப்பிட்டுள்ள எதிர்நோக்குத் திட்டத்தில் முதலீட்டு குணகம் (Investment co-efficient) 1955-56-ல் 7 சதவீதமாக இருந்தததி லிருந்து 1960-61-ல் சுமார் 11 சதவீதமாக அதிகரிக்குமென்றும்

# வருவாய், முதலீடுகளில் எதிர்பார்க்கும் வளர்ச்சி[1]

*1951-56 முதல் 1971-76 வரை (1952-53 ன் விலைகளில்)*

| அம்சம் | முதல் ஐந்தாண்டுத் திட்டம் | இரண்டாம் திட்டம் | மூன்றாம் திட்டம் | நான்காம் திட்டம் | ஐந்தாம் திட்டம் |
|---|---|---|---|---|---|
| 1. கால முடிவில் தேசிய வருவாய் (ரூ. கோடிகளில்) | 10,800 | 13,480 | 17,260 | 21,680 | 27,270 |
| 2. மொத்த முதலீடு (ரூ. கோடிகளில்) | 3,100 | 6,200 | 9,900 | 14,800 | 20,700 |
| 3. திட்ட முடிவில் தேசிய வருவாயின் சதவீதமாக முதலீடு | 7·3 | 10·7 | 13·7 | 16·0 | 17·0 |
| 4. கால முடிவில் மக்கட் தொகை (மில்லியன்களில்) | 384 | 408 | 434 | 465 | 500 |
| 5. கூடும் முதல் உற்பத்தி விகிதம் | 1·8:1 | 2·3:1 | 2·6:1 | 3·4:1 | 3·7:1 |
| 6. கால முடிவில் தலா வருவாய் (ரூபாய்களில்) | 281 | 331 | 396 | 466 | 546 |

[1] டாக்டர் M. L. சேத், 'பொருளாதாரத் திட்டத்தின் கோட்பாடும் நடைமுறையும்' ப. 397.

1965-66ல் 14 சதவீதமாகவும், 1970-71-ல் 16 சதவீதமாகவும் அதிகரிக்குமென்று நம்பப்பட்டது. எனவே, 1975-76-ல் அது 17 சதவீதமாக உயர்ந்து நெகிழ்ச்சியின்றி மாறுமல் இருக்கும்.'' திட்டக்குழு கருதியதுபோல், ''தேசிய வருவாயில் 16 அல்லது 17 சதவீத நிகர முதலீட்டு வீதத்தைப் பெற முடியுமென்ற போதிலும், அது மிக அதிகமானதே ஆகும்.''[1] மற்ற நாடுகளோடு ஒப்பிடும் போது 1960-61-ல் இருக்குமென்று எதிர்பார்த்த 11 சதவீத முதலீட்டு வீதம் நம் சக்திக்கு மீறிய பேரார்வமுடையதாக இல்லை. சான்ருக, மேற்கத்திய நாடுகளில் பொருளாதார வளர்ச்சியைத் தூண்ட அது 10·15 சதவீதமாகவும், ரஷ்யாவில் 15·20 சதவீதமாகவும், ஜப்பானில் 24-30 சதவீதமாகவும் உளளது. எனவே, இந்தியாவிலும் உயர்ந்த முதலீட்டு வீதத்தைச் சாதிக்க முடியுமென்பதில் ஐயமில்லை.

முதல் திட்டம் நாட்டில் போருக்கு முன்பிருந்த நுகர்வு மட்டங்களை (Levels of Consumption) நிலைநாட்ட வேண்டுமென்ற குறிக்கோளைப் பெற்றிருந்தது. இரண்டாம் திட்டம் ஒருபடி மேல் சென்று இத் திட்ட இறுதிக்குள் மொத்த நுகர்வைச் சுமார் 20 சதவீதமும், தனிநபர் நுகர்வை 12 முதல்-13 சதவீதமும் உயர்த்த வேண்டுமென்ற நோக்கத்தைப் பெற்றிருந்தது. முதல் திட்ட இறுதியில் இந்தியாவில் சராசரி பருத்தித் துணி நுகர்வு போருக்கு முன்பிருந்த தனி நபர் ஆண்டொன்றுக்கான மட்டமாகிய 15 கஜமாக இருந்தது. 1960-61-க்குள் இதை 18 கஜமாக அதிகரிக்க வேண்டுமென்ற குறிக்கோளை இரண்டாம் திட்டம் பெற்றது.

குறிக்கோள்கள்

இரண்டாம் திட்டத்தில் பொதுத்துறை முதலீடு ரூ. 4800 கோடியாகவும், தனியார் துறை முதலீடு ரூ. 2400 கோடியாகவும் இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. இம் முதலீடு மற்றும் சமூக-பொருளாதார அமைப்பின் அடிப்படையில் நாடு இரண்டாம் திட்டக் காலத்தில் அடையவேண்டிய குறிக்கோள்கள் கீழ்க்கண்டவாறு குறிக்கப்பட்டன

(1) ''நாட்டின் தேசிய வருவாயைக் கணிசமான அளவு அதிகரித்து மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதே'' இரண்டாம் திட்டத்தின் அடிப்படை நோக்கமாகும். தேசிய வருவாய் மொத்தத்தில் 25 சதவீதமாகவும், ஆண்டொன்றுக்கு 5 சதவீதமாகவும் அதிகரிக்குமென்றும் நம்பப்பட்டது. ஆனால், முதல் திட்ட இலக்கு மொத்தத்தில் 15 சதவீதமாக மட்டுமே இருந்தது. தேசிய வருவாய் அதிகரிப்பினல் தலாவருவாய் 1955-56-ல் ரூ. 281

[1] இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம். ப. 10.

ஆக இருந்ததிலிருந்து ரூ. 331 ஆக உயரும் என்றும், இது முதல் திட்டத்தில் ஒரு சதவீத அதிகரிப்பாக இருக்க இரண்டாம் திட்டத்தில் 18 சதவீத அதிகரிப்பாக இருக்குமென்றும் குறிப்பிடப்பட்டது.

(2) "அடிப்படை, கனரகத் தொழில்களின் வளர்ச்சிக்கு முதலிடம் அளித்து நாட்டை விரைவாகத் தொழில் மயமாக்குதே" தலையாய குறிக்கோளாக இருந்தது. தொழில் வளர்ச்சிக்காக மொத்த முதலீட்டில் சுமார் 56 சதவீதம் நிதியாக ஒதுக்கிடப் பட்டது. இது முதல் திட்டத் தொழில்சார் முதலீட்டைவிட 400 சதவீதம் ஆதிகமாகும். முதல் திட்டத்தில் தொழில்சார் உற்பத்தி 391 சதவீதமாக அதிகரித்ததற்குப்பதிலாக இரண்டாம் திட்டத்தில் 597 சதவீதம் அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப் பட்டது. புதிய தொழில் தேவை இரண்டாம் திட்டக்குறிக் கோள்கள் ஆகியவைகளுக்கேற்ப 1948-ன் தொழிற்கொள்கையும் திருத்தியமைக்கப் பட்டது.

(3) "வேலை வாய்ப்புகளைப் பலவழிகளிலும் பெருமளவு பெருக்கவும" இத் திட்டம் வகை செய்யும் என்று குறிப்பிடப்பட்டது இத் திட்டம் முடிவுறும் முன் 80 லட்சம் புதிய வேலைகளை ஏற்படுத்த முடியும் என்றும் கணக்கிடப்பட்டது.

(4) "வருவாய், செல்வ ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்து, பொருளாதார சக்தியை எல்லோருக்கும் சரிசமமாகப் பங்கீடு செய்வது" மற்றொரு குறிக்கோளாக இருந்தது. ஏற்றத்தாழ்வு பேதங்களை நீக்க இருவகை முறைகளைப் பின்பற்ற வேண்டும். ஒரே சமயத்தில் சமூகத்தில் கீழ்மட்டத்திலிருப்போரின் வருவாயை அதிகரிக்கச் செய்து, உயர்மேல் மட்டத்திலிருப்போரின் வருவாயைக் குறைக்க வேண்டும். இதைச் சாதிக்க இரண்டாம் திட்டத்தில் பல்வேறு வகையான செயல்முறைகள் மேற்கொள்ளப் படுமென்றும் கூறப்பட்டது. நிதிமுறை நடவடிக்கைகள், வளங்களைச் சேகரித்தல், சமூகப் பணிகளை விரிவாக்குதல், வேளாண்மை, தொழில் நிர்வாக அமைப்பில் நிறுவன மாற்றங்களை ஏற்படுத்துதல், சிற்றளவுத் தொழில்களை வளர்ச்சியடையச் செய்தல் போன்றவைகளே அச் செயல் முறைகளாகும்." நிலக்கிழார் முறையை ஒழித்தல், நிர்வாகப் பதிலாள் முறையைச் சீர்திருத்துதல், கம்பெனிகளின் சட்டத்தைத் திருத்துதல், முக்கியத் தொழில்களை நாட்டுடைமையாக்குதல், பொதுத்துறை, கூட்டுறவு இயக்கம் ஆகியவற்றை விரிவுபடுத்துதல் ஆகிய செயல்முறைகளிலும் இத் திட்டத்தில் கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று திட்ட நிபுணர்கள் கருதினர்.

திட்டத்தின் சிறப்புக் கொள்கை (Second Plan Strategy)

இரண்டாம் திட்டத்தின் சிறப்புக் கொள்கை அடிப்படை, முதல் பொருள்களின் தொழில்களுக்குச் சிறப்பிடம் அளித்து, மிகக் குறுகிய காலத்தில் விரைவான தொழில் மயத்தைச் சாதிக்க வேண்டுமென்ற குறிக்கோளைப் பெற்றிருந்தது. அடிப்படை முதல் பொருள்களின் தொழில்களுக்கு முதலில் ரூ. 60 கோடி ஒதுக்கப் பட்டது. பின்பு அது ரூ. 890 கோடியாக அதிகரிக்கப்பட்டது. வேலையின்மையையும், பண வீக்க அழுத்தங்களையும் குறைக்கக் குடிசைத்தொழில், சிற்றளவுத் தொழில்களுக்குத் தகுந்த இடம் அளிக்கப்படுமென்றும் கூறப்பட்டது. இதற்காக ரூ. 200 கோடி முதலில் ஒதுக்கப்பட்டது. இக் குறிக்கோள்கள் அனைத்துமே அடிப் படையில் ஒன்றையொன்று சார்ந்துள்ளன. வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது நாட்டைத் தொழில் மயமாக்கும் அளவைப் பொறுத்ததாகும். முக்கியமாக அடிப்படைப் பிரதான தொழில் களின் வளர்ச்சியினால்தான் தொழில் மயத்தை அதிகரிக்க முடியும். தொழில்களில் முதலீட்டை அதிகரித்தால் நுகர்வுப் பொருள்களின் தேவை அதிகரிக்கிறது. இதனால் வேலை வாய்ப்பு அதிகரிக்கிறது. கிடைக்கும் உழைப்பாளர்கள் அனைவரையும் வேலையில் அமர்த்த முடிகிறது. இத்தகைய வளர்ச்சி முறையினால் சமதர்ம சமுதாயத் தின் சாரமாகிய வருவாய், செல்வம் ஆகியவைகளில் சமத்துவம் ஏற்படத்தக்க வகையில் ஏழை, பணக்காரர்களிடையே இருக்கும் இடைவெளி குறைகிறது.

சமதர்ம சமுதாய முறையைச் சாதிக்கப் பொதுத்துறையின் பங்கு பொருளாதார நடவடிக்கைகளில் அதிகரிக்க வேண்டும். அப்போதுதான் சமூக நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட பதிலாள்கள் உற்பத்தி, பங்கீடு, நுகர்வு, முதலீடு போன்ற பொருளா தார அம்சங்களைத் திறம்படத் தீர்மானிக்க முடியும். தொழில் நுட்ப முறை உற்பத்தியினால் பொருளாதார சக்தி, செல்வம் ஆகியவைகள் குவியும் உற்பத்தித் துறைகளில் முக்கியமாகப் பொது உடைமையும், பொதுக் கட்டுப்பாடும் மிகவும் இன்றியமை யாததாக விளங்குகிறது என்பதைத் திட்டக் குழு உணர்ந்தது.

திட்டநகல் (Plan in Outline)

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் பொதுத் துறையில் ரூ. 4,800 கோடியும், தனியார் துறையில் ரூ. 2,400 கோடியும் மொத்தமாகச் செலவு (Total outlay) செய்யப்பட வேண்டுமென்று முதலில் அறிவிக்கப்பட்டது. மொத்தப் பொதுத்துறைச் செல வாகிய ரூ. 4800 கோடியில் முதலீட்டிற்காக ரூ. 3800 கோடியும் நடப்பு வளர்ச்சிச் செலவினங்களுக்காக ரூ. 1,000 கோடியும்

ஒதுக்கீடு செய்யப்பட்டது. எனவே, பொது, தனியார் துறைகளில் திட்டக் காலத்தில் மொத்தம் ரூ. 6,200 கோடி முதலீடு செய்யப்படு மென்று கூறப்பட்டது. மொத்தப் பொதுத்துறை முதலீடாகிய ரூ 4,800 கோடியில் மத்திய மாநில அரசுகள் முறையே ரூ. 2,559 கோடியும் ரூ. 2,241 கோடியும் தங்களுக்குள்ளே பங்கிட்டுக் கொள்ளவேண்டிய நிலையில் இருந்தன. வளர்ச்சித் துறைகளின் வாரியாக மொத்தச் செலவினம் (Total Outlay) பங்கீடு கீழ்க்கண்ட அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது :

## வளர்ச்சித் துறைகளின் ரீதியில் திட்டச் செலவின் பங்கீடு

(Distribution of Plan Outlay by major heads of development)

(ரூ. கோடிகளில்)

| அம்சம் | முதல் திட்ட மொத்த ஒதுக்கீடு | % | இரண்டாம் திட்ட மொத்த ஒதுக்கீடு | % |
|---|---|---|---|---|
| 1. வேளாண்மையும், சமுதாய வளர்ச்சியும் | 357 | 15 | 568 | 12 |
| 2. நீர்ப் பாசனமும் வெள்ளக் கட்டுப்பாடும் | 401 | 17 | 486 | 10 |
| 3 ஆக்க சக்தி | 260 | 11 | 427 | 9 |
| 4. தொழில்களும், கனி வளங்களும் | 179 | 7 | 890 | 18 |
| 5. போக்குவரத்தும், செய்தித் தொடர்பும் | 557 | 24 | 1,385 | 29 |
| 6. சமூகப் பணிகள், வீட்டு வசதி, புனர் வாழ்வு | 533 | 23 | 945 | 20 |
| 7. இதர செலவினங்கள் | 69 | 3 | 99 | 2 |
| மொத்தம் | 2,356 | 100 | 4,800 | 100 |

ஆதாரம் : இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், ப. 51-52.

மேற்காணும் திட்டச் செலவின் ஒதுக்கீட்டிலிருந்து முதல் திட்டத்திற்கும் இரண்டாம் திட்டத்திற்குமிடையே உள்ள சிறப்பு வரிசைகளின் (Priorities) வேற்றுமைகளை அறியலாம். சிறப்பு வரிசைகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை மேற்கண்ட அட்டவணையிலுள்ள சதவீதங்கள் தெளிவுபடுத்துகின்றன. இரண்டாம் திட்டத்தில் தொழில்களுக்கும், சுரங்க வேலைகளுக்குமாக மொத்தப் பொதுத்துறைச் செலவுகளில் 19 சதவீதம் ஒதுக்கப்பட்டது; முதல் திட்டத்தில் இதற்காக 8 சதவீதம்தான் ஒதுக்கப்பட்டது; மேலெழுந்த விலைகளின் (absolute terms) அடிப்படையில் இது 400 சதவீத அதிகரிப்பாகும். முதல் திட்டத்தில் இதன்படி இத் துறையில் 50 சதவீதத்திற்கும் குறைவாகத்தான் உண்மை முதலீடு இருந்தது. எனவே, இரண்டாம் திட்டத்தில் இத் துறையில் மிக அதிகமான முதல் முதலீடு செய்யப்பட நிதி, ஒதுக்கப்பட்டது. தொழில்கள், சுரங்கவேலை, ஆகியவைகளுக்கான மொத்த முதலீடாகிய ரூ. 890 கோடியில் பேரளவுத் தொழில்கள், சுரங்கத் தொழில் ஆகியவைகளுக்கு ரூ. 690 கோடியும், குடிசை, சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்காக ரூ. 200 கோடியும் ஒதுக்கப்பட்டன.

திட்டக் கால மொத்த முதலீட்டில் 29% போக்குவரத்து, செய்தித் தொடர்புக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டது. மத்திய மாநில அரசுகளின் மொத்த முதலீட்டில் 19% நீர்ப்பாசன ஆக்க சக்திக்காகவும், 12% வேளாண்மை, சமுதாய வளர்ச்சி, ஆகியவைகளுக்காகவும் ஒதுக்கப்பட்டன. இவ்விரு துறைகளிலும் மொத்த முதலீடு, ரூ. 1481 கோடியாக இருக்குமென்று கணக்கிடப்பட்டது. சமூகப் பணிகளுக்காக முதல் திட்டத்தில் 23% ஒதுக்கப்பட்டதிலிருந்து, இரண்டாம் திட்டத்தில் 20 சதவீதமாகக் குறிக்கப்பட்டது. கல்வி, சுகாதாரம், வீட்டு வசதி, ஆகியவைகளுக்காக ஒதுக்கிடப்பட்ட தொகை ஏறக்குறைய முதல் திட்ட ஒதுக்கீட்டிற்குச் சமமாகவே இருந்தது.

உண்மைச் செலவு (Actual Outlay)

இரண்டாம் திட்டத்தின் ஆரம்பத்தில் மொத்தச் செலவு ரூ. 4,800 கோடியாக இருக்குமென்று கூறப்பட்டதற்குப் பதிலாக, உண்மையான செலவு ரூ. 4,600 கோடியாக இருந்தது. அதைக் கீழ்க்கண்ட அட்டவணை தெளிவாக விளக்குகிறது.

## முதலீட்டின் பங்கீடு

ரூபாய் கோடிகளில்

| | மொத்த ஒதுக்கீடு | சதவிகிதம் | செலவீடு | சதவிகிதம் |
|---|---|---|---|---|
| 1. வேளாண்மை, சமுதாய வளர்ச்சி | 568 | 12 | 530 | 11 |
| 2. பெரிய, நடுத்தர, நீர்ப்பாசனம் | 486 | 10 | 420 | 9 |
| 3. ஆக்க சக்தி | 427 | 9 | 445 | 10 |
| 4. குடிசை, சிறு தொழில்கள் | 200 | 4 | 175 | 4 |
| 5. தொழில்களும், கனிவளங்களும் | 890 | 18 | 900 | 20 |
| 6. போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் | 1,385 | 29 | 1,300 | 28 |
| 7. சமூகப் பணிகளும் இதர செல வினங்களும் | 1,044 | 22 | 830 | 18 |
| மொத்தம் | 4,800 | 100 | 4,600 | 100 |

ஆதாரம் : இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம். ப. 51-52.
மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம். ப. 33.

## இரண்டாம் திட்ட நிதியாக்கம்
### (Financing in Second Plan)

பொதுத்துறை வளர்ச்சித் திட்டங்களுக்காக ஆரம்பத்தில் ரூ. 4,800 கோடி ஒதுக்கப்பட்டிருந்ததால் அத் தொகையைப் பல்வேறு நிதிவழிகளின் மூலம் பெற முடியுமென்று திட்டக்குழு எதிர்பார்த்தது. இரண்டாம் திட்டக்காலத்தில் உண்மையாக நிதி கிடைத்த ஒவ்வொரு வகைகளும் கீழ்க் கண்ட அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளன

## பொதுத்துறை நிதியாக்கம்

ரூபாய் (கோடிகளில்)

| கிடைத்த வழிகள் | | ஆரம்ப மதிப்பீடு | உண்மையான நிதி |
|---|---|---|---|
| 1. நடப்பு வருவாயின் உபரி | ... | 800 | 1,002 |
| (a) (1955-56) இருக்கும் வரி வீதங்களில் | ... | 350 | —50 |
| (b) கூடுதல் வரி | ... | 450 | 1,052 |
| 2. பொது மக்களிடமிருந்து பெற்ற கடன் | ... | 1,200 | 1,180 |
| (a) அங்காடிக் கடன்கள் | ... | 700 | 780 |
| (b) சிறு சேமிப்பு | ... | 500 | 400 |
| 3. மற்றவரவு செலவுத் திட்டவழிகளில் | ... | 400 | 380 |
| (a) வளர்ச்சித் திட்டங்களுக்கு ரயில்வேக்களின் அளிப்பு | ... | 150 | 150 |
| (b) காப்பு நிதி, மற்ற வைப்புகள் | ... | 250 | 230 |
| 4. வெளிநாடுகளின் நிதிஉதவி | ... | 800 | 1,090 |
| 5. பற்றுக்குறை நிதியாக்கம் | ... | 1,200 | 948 |
| 6. நிதிபற்றுக்குறை — உள்நாட்டு நிதி வளங்களை உயர்த்தும் கூடுதல் செயல் முறைகளின் மூலம் | ... | 400 | (a)* |

* (a) வழிகள், 1 முதல் 3-ல் உள்ளடங்கியுள்ள அம்சங்களின் மூலம் நிதியை அதிகரித்தல்.

ஆதாரம்:— இரண்டாம், ஐந்தாண்டுத் திட்டம். ப. 77-78.
மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் ப. 95.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் நிதிசார் திட்டத்தைவிட இயற் பொருள்சார் திட்டமாகவே இருந்தது. இத் திட்டத்தில் உள்நாட்டு வளங்களைத் தேசிய வருவாயின் 7 சதவீதத்திலிருந்து 10 சதவீதமாக அதிகரிக்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது.

1. வரிவிதித்தல்

தொழில் வேளாண்மைத் துறைகளில் கிடைக்கும் சேமிப்பைச் சேகரிக்க பல்வேறு வரிகள் விதிக்கப்படவேண்டுமென்று

குறிப்பிடப்பட்டது. நேர்முக வரிகள், மறைமுக வரிகள் ஆகியவைகளின் மூலம், பொது வருவாயை அதிகரிக்க வகை செய்யப்பட்டது. நேர்முக வரியின்மூலம், முதலாக்கம் பாதிக்கப் பட்டுவிடாமல் இருக்கத் தகுந்த ஊக்கிகளையும் அளிக்கவேண்டு மென்று கூறப்பட்டது. திட்டத்தின் தேவைகளுக்கேற்ப வரி அமைப்பையும் சரிசெய்ய வேண்டுமென்று திட்ட நிபுணர்கள் குறிப்பிட்டனர். வருமானவரி, செல்வவரி, செலவீன வரிகள், போன்ற வரிகளின் வீதத்தை விரிவாக்கவேண்டும் என்றும் கருதப் பட்டது. கிராமத் துறையில் தகுந்த வரிமுறைகளை விரிவுபடுத்த வேண்டுமென்றும் கூறப்பட்டது.

2. கடன் பெறுதல்

அங்காடிக் கடன்களாக உண்மையில் 780 கோடி ரூபாயும், சிறு சேமிப்பாக ரூ. 400 கோடியும், மக்களிடமிருந்து கடனாகப் பெறப்பட்டது. இரண்டாம் திட்டத்தில் உள்நாட்டு நிதி வளங்கள், 55.7 சதவீதம் குறைவாக அளிக்கப்பட்டன. பற்றாக் குறை நிதியாக்கமும், 26·4 சதவீதத்திலிருந்து 20·6 சதவீதமாகக் குறைந்தது. ஆனால், இதன் மேலெழுந்த தொகை இருமடங்காக அதிகரித்தது. வெளிநாட்டு உதவி 10 சதவீதத்திலிருந்து 23·7 சதவீதமாக அதிகரித்தது. கூடுதல் வரிவிதிப்பு முதல் திட்டத்தில் 12·7 சதவீதமாக இருந்ததிலிருந்து இரண்டாம் திட்டத்தில் 22·9 சதவிகிதமாக அதிகரித்தது.

## இரண்டாம் திட்டச் சாதனைகள்

இரண்டாம் திட்டச் சாதனைகளை இருவகைகளாகப் பிரிக்கலாம்:

(i) பொதுச் சாதனைகள்.

(ii) குறித்த சாதனைகள்.

பொதுச் சாதனைகள்

முதல் திட்டக் கால இறுதியில் மொத்தத் தேசிய வருவாயில் ஒரு விகிதமான முதலீடு சுமார் 7·5 சதவீதமாக அதிகரித்தது இரண்டாம் திட்ட இறுதியில் இது 11 சதவீதத்திற்கும் சிறிது அதிகமாக உயர்ந்தது. இரண்டாம் திட்டக் காலத்தில் தேசிய வருவாயின் ஒரு விகிதமான சேமிப்பு 7·6 சதவீதத்திலிருந்து 8·5 சதவீதமாக அதிகரித்தது. சேமிப்பு, முதலீடு வீதங்களுக்கிடையே ஏற்பட்ட இடைவெளி இந்திய ஸ்டெர்லிங் இருப்புகள், வெளி நாட்டு முதல், போன்றவைகளைப் பெறுவதன்மூலம், நிதியிடப்

பட்டது. எனவே, இரண்டாம் திட்டக் காலத்தில் முதலீடு விகித அதிகரிப்பைச் சரிசெய்ய இந்திய வெளிநாட்டுச் செலாவணி இருப்புகளும், வெளிநாட்டு உதவியும், பயன்படுத்தப்பட்டது. தனியார், பொது வருடாந்திர மொத்த முதலீடு முதல் திட்ட ஆரம்பத்தில் ரூ. 500 கோடியாக இருந்தது இரண்டாம் திட்ட இறுதியில் ரூ. 1,600 கோடியாக அதிகரித்தது.

தேசிய வருவாய் 25 சதவீதம் அதிகரிக்கும் என்று எதிர்பார்த்த தற்குப் பதிலாகச் சுமார் 20 சதவீதம் அதிகரித்தது. இதற்குக் காரணமாக இருந்தது முதல் உற்பத்தி விகிதத்தின் உன்னத நிலையாகும். இத் திட்டக் காலத்தில் தொழிலாளர் செறிவுத் திட்டங்களை விட நீண்டகால இடைவெளியைக் (Long gestation period) கொண்ட முதல் செறிவுத் திட்டங்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப் பட்டது. இத் திட்டக் காலத்தில் தலாவருவாய் 8 சதவீதம் அதிகரித்தது. திட்டத்தின் இப் பொது முன்னேற்றத்தைப் பல் வேறு தலைப்புகளின்கீழ் இனி ஆராய்வோம்.

## வேளாண்மை உற்பத்தி

இரண்டாம் திட்டக் காலத்தில் உணவு தானியங்களின் உற்பத்தி 65·8 மில்லியன் டன்களிலிருந்து 76 மில்லியன் டன்களாக அதிகரித் தது. கரும்பு உற்பத்தி 6 மில்லியன் டன்களிலிருந்து 8 மில்லியன் டன்களாகவும், எண்ணெய் வித்துகள் 5·6 மில்லியன் டன்களி லிருந்து, 7·1 மில்லியன் டன்னுகவும், பஞ்சு 4 மில்லியன் பேல்களி லிருந்து 5·1 மில்லியன் பேல்களாகவும் அதிகரித்தது.

நீர்ப் பாசன வசதி அளிக்கப்பட்ட நிகர நிலப்பரப்பு 1950-51-ல் 51·5 மில்லியன் ஏக்கர்களாக இருந்ததிலிருந்து 1960-61-ல் சுமார் 70 மில்லியன் ஏக்கர்களாக அதிகரித்தது. 1960-61 ஆம் ஆண்டு இறுதியில் சுமார் 4 மில்லியன் ஏக்கர் நிலம் சீர்படுத்தப்பட்டது. இயந்திரச் சாகுபடி 0·5 மில்லியன் ஏக்கர் களில் விரிவாக்கப்பட்டது. சுமார் 1.5 மில்லியன் ஏக்கர் நிலத்தில் நிலச்சீரமைப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. சுமார் 4000 விதைப் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டுச் சீரான விதைகள் நாட்டின் எல்லாச் சாகுபடி செய்யப்பட்ட பகுதிகளுக்கும் அளிக்கப் பட்டன. நைட்ரஜன் உரங்களின் நுகர்வு 55,000 டன்களிலிருந்து 2,30,000 டன்களாகவும், பாஸ்பேட்டு உரங்கள் 7,000 டன்களி லிருந்து 70,000 டன்களாகவும், 1950-51 க்கும் 1960-61 க்கும் இடைப்பட்ட காலத்தில் அதிகரித்தது. இரண்டாம் திட்ட இறுதி யில் சுமார் 11.8 மில்லியன் ஏக்கர் நிலங்களுக்குப் பச்சை உரம் இடப் பட்டது. சுமார் 2.7 மில்லியன் ஏக்கர் நிலத்தில் நிலப் பாதுகாப்பு

நடவடிக்கைகள் (Soil Conservation measures) மேற்கொள்ளப்பட்டன. கால்நடை, மீன்பிடித்தல், பால் விநியோகம், காய்கறி, பழங்கள் சாகுபடி, போன்றவைகளில் வளர்ச்சி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. சான்றுகப் பால் உற்பத்தி 17 மில்லியன் டன்களிலிருந்து 22 மில்லியன் டன்களாகவும், மீன் பிடிப்பு 0·7 மில்லியன் டன்களிலிருந்து 1·4 மில்லியன் டன்களாகவும் அதிகரித்தன. வனப் பாதுகாப்பு நடவடிக்கைகள் சுமார் 0·5 மில்லியன் ஏக்கர் நிலத்தில் மேற்கொள்ளப்பட்டன.

வளர்ச்சி நடவடிக்கைகளைத் தீர்மானித்து அமுல்படுத்திய தோடுகூட முதல், இரண்டாம், திட்டங்கள் வேளாண்மை அமைப்பு முறையைப் புனரமைக்கவும், வகைசெய்தன. ஜமீன்தார்கள், ஜாகிர்தார்கள் போன்ற நடுவர்களை ஒழித்தல், நிலக் குத்தகை உரிமைகளைப் பாதுகாத்துச் சீரமைத்தல், நில உடைமைகளுக்கு உச்சரம்பு விதித்தல், போன்ற நடவடிக்கைகள் இவ்வகையைச் சேர்ந்தவைகளாகும். பல்வேறு மாநிலங்களில் நில உடைமை ஒருங்கிணைப்பை ஊக்குவிக்கவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

வேளாண்மை பொருளாதார வளர்ச்சியில் மிகச்சிறந்த அம்சமாக விளங்கியது, நாடு முழுவதும் விரிவாக்கப் பணிகளை சமுதாய வளர்ச்சி இயக்கத்தின் ஒரு ஒருங்கிணைந்த பகுதியாகவும், கிராம வளர்ச்சிப் பணியை ஜனநாயகப் பரவலாக்கப்பட்ட முறையாகவும் உட்புகுத்தியதேயாகும். இரண்டாம் திட்ட இறுதியில் சமுதாய வளர்ச்சி இயக்கம் சுமார் 3,70,000 கிராமங்களையும் நாட்டின் கிராம மக்கட்தொகையில் அரைவாசிக்கு மேற்பட்டவர்களையும் உள்ளடக்கியிருந்தது. கடைசிப் பத்தாண்டுகளில் கூட்டுறவு இயக்கம் சிறந்த முன்னேற்றத்தைப் பெற்றது. இரண்டாம் திட்ட இறுதியில் 2,10,000 முதல்நிலை வேளாண்மைச் சங்கங்கள் இருந்தன. இது 1950-51-ல் இருந்ததைவிட ஏறக்குறைய இருமடங்கு அதிகமான எண்ணிக்கையாகும். சுமார் 1870 கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும் (Co-operative marketing socities) 41 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளும் நிறுவப்பட்டன.

## தொழில் உற்பத்தி

இரண்டாம் திட்டக்காலத்தில் தொழில் வளர்ச்சி வீதத்திலும். பாங்கிலும் ஒரு மகத்தான முன்னேற்றம் காணப்பட்டது, தொழில் உற்பத்திக் குறிப்பெண் (1950—51 = 100) 1960-61-ல் 194 ஆக உயர்ந்தது. அதாவது தொழில் உற்பத்தி வளர்ச்சிவீதம்

ஆண்டொன்றுக்கு 7 சதவீதமாக அதிகரித்தது. கீழ்க்கண்ட தொழில் உற்பத்திக் குறிப்பெண்கள் தொழிலுற்பத்தியின் போக்கை விளக்குகின்றன.[1]

## தொழிலுற்பத்தியின் குறிப்பெண்

*(1950-51 = 100)*

| தொழில் வகுப்பு | 1955-56 | 1960-61 |
|---|---|---|
| பொதுக் குறிப்பெண் | 139 | 194 |
| பருத்தி, நெசவுத்துணி, | 128 | 133 |
| இரும்பு, எஃகு | 122 | 238 |
| எந்திரங்கள் (எல்லா வகை) | 192 | 503 |
| இரசாயனங்கள் | 179 | 288 |

ஆதாரம்: இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்.

தொழிலுற்பத்தியின் குறிபெண் தொடர்ந்து ஆண்டொன்றுக்கு 7 சதவீத வளர்ச்சி வீதத்தைப் பெற்றிருந்தது. மேற்குறிப்பிட்டுள்ள குறிப்பெண்களைவிட உண்மை உற்பத்தி அதிகமாகவே இருந்தது. ஏனெனில் இக் குறிப்பெண்கள் ஏராளமான புதிய தொழில்களின் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை உள்ளடக்கவில்லை. வளர்ச்சியின் போக்கும் மிகவும் சிறப்பு வாய்ந்ததாகவே இருந்தது. இரண்டாம் திட்டத்தில் முதல், உற்பத்திப் பொருள் தொழில்களில் புதிய தொழில்கள் தோற்றுவிக்கப்பட்டு வளர்ச்சியடையச் செய்யப்பட்டன. இத் தொழில்கள் அதிவிரைவான தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன. இதன் மூலம் சுயச்சார்புடைய பொருளாதாரத்தை ஏற்படுத்த வகையேற்பட்டது.

இரண்டாம் திட்டத் தொழில் வளர்ச்சியின் பிரதான அம்சமாக விளங்குவது பொதுத்துறையில் மூன்று புதிய எஃகு ஆலைகளை ஏற்படுத்தியதும், தனியார் துறையில் இரு தொழில் பகுதிகளை விரிவாக்கியதுமே யாகும். இப் புதிய தொழில் பகுதிகள் உற்பத்தி செய்யும் கட்டத்தை அடைந்துள்ளன. 1950-51-ல் எஃகு வார்ப்பு (Steel ingots) உற்பத்தி 1·4 மில்லி

[1] B. கிஷோர் B. P. சிங், 'திட்டங்களின் கண்ணோட்டத்தில் இந்தியப் பொருளாதாரம்' ப. 114.

யன் டன்களாக இருந்து 1960-61-ல் 3·5 மில்லியன் டன் களாகவும், எஃகுப்பாள (Pig-iron) உற்பத்தி 3·5 லட்சம் டன்களிலிருந்து 9 இலட்சம் டன்களாகவும் அதிகரித்தது அலுமினியம். சிமெண்டு, கனரக இரசாயன, வர்ணப்பொள்ருகள், போன்ற இன்றியமையாத தொழில்சார் மூலப்பொருள்கள், நிலக்கரி, பெட்ரோலியம், மின்சக்தி, போன்ற எரி பொருள்களின் உற்பத்தியும் 1950-51-ல் இருந்ததை விடக் கணிசமான அளவு அதிகரித்தது.

## தேர்ந்த சில தொழில்களின் உற்பத்தி

| அம்சங்கள் | அலகு | 1955-56 | 1960-61 |
|---|---|---|---|
| எஃகு வார்ப்பு | மில்லியன் டன்களில் | 1·7 | 3·5 |
| அலுமினியம் | ... டன்களில் | 7·3 | 18·5 |
| டீசல் என்ஜின்கள் | ... எண்ணிக்கைகளில் | 10·0 | 40·0 |
| நைட்ரஜன் உரங்கள் | ... டன்களில் | 79·0 | 110·0 |
| பாஸ்பேட் உரங்கள் | ... டன்களில் | 12·0 | 55·0 |
| சிமெண்ட் | மில்லியன் டன்களில் | 2·7 | 8·5 |
| பருத்தி நெசவுத் துணி கள் (ஆலைகளில் நெய்யப்பட்டது) | மில்லியன் கெஜங்களில் | 5102 | 5127 |
| சர்க்கரை | மில்லியன் டன்களில் | 1.86 | 3·0 |
| காகிதமும் காகித அட்டைகளும் | ... டன்களில் | 187 | 350 |
| துவிச்சக்கர வண்டிகள் (Bicycles) | ... எண்ணிக்கைகளில் | 513 | 1050 |
| மோட்டார் வாகனங் கள் (Automobiles) | .. எண்ணிக்கைகளில் | 25·3 | 53·5 |

மேற்கண்ட பட்டியலின் மூலம் இரண்டாம் திட்டக் காலத்தில் முதல், நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியில் ஏற்பட்ட முன்னேற்றத்தை ஓரளவு அறிந்து கொள்ள முடிகிறது. இரண்டாம் திட்டக் காலத்தில் இயந்திர நிர்மாணத் தொழில்கள் (Machine-building industries) மிகவிரைவாக வளர்ச்சியடைந்தன. தற்போது இந்தியாவில் வேளாண்மை, போக்குவரத்துப் போன்ற துறைகளில் பயன்படுத்தத் தேவையான எந்திரக் கருவிகள் (Machine tools), பெரிய இயந்திரங்கள், பெருமளவு தயாரிக்கப் படுகின்றன. இரசாயன, மருந்து செய்யும் தொழில்களுக்குத் தேவையான இயந்திரங்களும், கருவிகளும்கூடத் தற்போது இந்தியாவிலேயே தயார் செய்யப்படுகின்றன. பருத்தி நெசவு, சணல், சிமெண்டு, தேயிலை, சர்க்கரை, மாவு, எண்ணெய்

ஆலைகள், காகிதம், சுரங்கம் போன்ற தொழில்களுக்குத் தேவையான இயந்திரங்களும் கருவிகளும் உள்நாட்டிலேயே தயாரிக்கப்படுகின்றன. நாட்டில் தயாரிக்கப்பட்ட சிலவகை இயந்திரக் கருவிகளின் மதிப்பு 1950-51-ல் ரூ. 34 இலட்சமாக இருந்ததிலிருந்து 1960-61-ல் ரூ. 550 இலட்சமாக அதிகரித்தது. ராஞ்சி என்னுமிடத்தில் ஒரு கனரக எந்திர நிர்மாண ஆலையையும், பட்டறைத் தொழில் அமைப்பையும், துர்க்காபூர் என்ற இடத்தில் நிலக்கரிச்சுரங்க எந்திர ஆலையையும் ஏற்படுத்தச் சமீபத்தில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பல்வேறு வகைத் தொழில் இயந்திரங்கள், முதல் பொருள்கள் ஆகியவை களின் மொத்த மதிப்பு 10 ஆண்டுகளுக்கு முன் இருந்ததைவிட 11 மடங்கு அதிகரித்தது. இரசாயனத் தொழில்கள், மருந்து தயாரிக்கும் தொழில்கள், கனரக இரசாயனம், உரம், ஆகிய தொழில்களின் முன்னேற்றம் குறிப்பிடத் தக்க வகையில் இருந்ததை மேற்கண்ட பட்டியல் தெளிவுபடுத்துகிறது. சணல், பருத்தி நெசவு, சர்க்கரை, போன்ற முக்கியமான தொழில்களில் நவீன மயமும், புணர் சாதனங்களும், முன்னேற்றமான முறையில் உட்புகுத்தப் பட்டன. இத் திட்டக் காலத்தில் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட தொழில்சார் பொருள்களில் உள்நாட்டு மூலப் பொருள்களே பெருமளவில் பயன்படுத்தப்பட்டன.

இக்காலத்தில் இரயில் என்ஜின்கள், பெட்டிகள், பாரவண்டிகள், ஆலை இயந்திரங்கள், மற்ற இயந்திரக் கருவி வகைகள், டிராக்டர்கள் சில வகை மருந்துகள், டி. டி. டி (D. D. T), அச்சு இயந்திரம், மோட்டார் சைக்கிள்கள், ஸ்கூட்டர்கள் போன்ற ஏராளமான புதிய தொழில் அம்சங்களின் உற்பத்தி, இந்தியத் தொழில் வளர்ச்சி குறிப்பிடத் தக்க வகையில் முன்னேற்ற மடைந்துள்ளது என்பதைத் தெளிவாக உணர்த்துகிறது.

நுகர்வுப் பொருள் தொழில்களின் முன்னேற்றம் கணிசமான அளவு அதிகரித்தது. பருத்தி நெசவு, சர்க்கரை போன்ற பழைய தொழில்களில் உற்பத்தி பெருமளவு அதிகரித்தது. மேலும், மோட்டார் வாகனங்கள், துவிச்சக்கர வண்டிகள், மோட்டார் சைக்கிள்கள், மின் விசிறிகள், ரேடியோக்கள், மின் விளக்குகள், தையல் இயந்திரங்கள் போன்ற உறுதியான பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களில் உற்பத்தி பெருமளவு அதிகரித்தது.

குடிசை, சிறு தொழில்கள் உள் நாட்டு வளங்களை முழு அளவில் பயன்படுத்தி, நுகர்வுப் பொருள்களின் தேவையைப்

பூர்த்தி செய்து, வேளாண்மைக்கும், பேரளவுத் தொழிலுக்கும் இடையே ஒரு முக்கியத் தொடர்பை ஏற்படுத்தி, கிராம, நகரப் பகுதிகளில் வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப் பட்டது. முதல் இரு திட்டங்களிலும் இத் தொழில்களின் வளர்ச் சிக்காக அரசு ரூ. 218 கோடி செலவு செய்தது. சிற்றளவுத் தொழில்கள், கைத்தறித் தொழில், கதர், கிராமத் தொழில்கள், கைவினைத் தொழில்கள் போன்ற தொழில்களின் வளர்ச்சிக்கான ஒருங்கிணைந்த திட்டங்களை வகுத்து வழிகாட்டி ஓரளவு அமுல் படுத்தவும், அகில இந்தியக் கழகங்கள் (All India Boards) ஏற்படுத் தப்பட்டன. ஒரு தொழில் விரிவாக்கப் பணி (Industrial extension service) வளர்ச்சியடையச் செய்யப்பட்டது. ஒவ்வொரு மாநிலத் திலும் சிறு தொழில் பணிப் பயிற்சி நிலையங்கள் (Small Industries Service Institutes) ஏற்படுத்தப்பட்டன. மேலும், 53 விரிவாக்க நிலையங்களும் (Extension Centres) அமைக்கப்பட்டன. ஆக்க சக்தியைப் பயன்படுத்தும் சுமார் 1000 சிறு ஆலைகளைக் கொண்ட ஏறக்குறைய 60 தொழிற் பேட்டைகள் (Industrial Estates) ஏற்படுத்தப்பட்டன. கடன் வசதி, நுட்பத் தொழில் ஆலோசனை, மூலப்பொருள்கள், ஆகியவைகளை அளிக்கவும், கடன்தவணை முறையில் உள்நாட்டு, இறக்குமதி செய்யப் பட்ட இயந்திரங்களை அளிக்கவும், சிறப்பு முயற்சிகள் எடுக்கப்பட்டன. முதல் பத்தாண்டுகளில் நாட்டில் ஆற்றல் வாய்ந்த சிறுதொழில் துணிவோர்கள் ஏராளமானவர்கள் தோன்றினர். இரண்டாம் திட்டக்காலத்தில் இயந்திரக் கருவிகள், தையல் இயந்திரங்கள், மின்சார மோட்டார்கள், மின்விசிறிகள், வீடுகட்டுமான சாதனங்கள், கைவேலைக் கருவிகள், துவிச் சக்கர வண்டிகள், போன்ற ஏராளமான தொழில்களில் உற்பத்தி 25 முதல் 50 சதவீதம் வரை அதிகரித்தது. கைத்தறித்துணி உற்பத்தி 742 மில்லியன் கெஜத்திலிருந்து 1090 மில்லியன் கெஜ மாகவும், கதர் 7·3 மில்லியன் கெஜத்திலிருந்து 74 மில்லியன் கெஜ மாகவும், கச்சாப்பட்டு (raw-silk) 2·5 மில்லியன் பவுண்டிலிருந்து 3·6 மில்லியன் பவுண்டுகளாகவும் 1950-51 க்கும் 1960-61 க்கும் இடைப்பட்ட காலத்தில் அதிகரித்தன.

ஆக்க சக்தி (power)

பேரளவு, சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்கு மிகவும் அடிப்படையான தேவைகளுள் ஒன்றாய் விளங்குவது போதிய ஆக்கசக்தியின் அளிப்பாகும். இக்காலத்தில் ஏராளமான மின் இயக்க, அனல்மின்சாரத் திட்டங்கள் (Hydro-electric and thermal power projects) நிர்மாணிக்கப்பட்டன. திட்டத்தின் கடந்த பத்தாண்டுகளில் மின் இயக்க சக்தியின் அமைக்கப்பட்ட ஆக்க

சக்தி 0·56 மில்லியன் கிலோவாட்டிலிருந்து 1·93 மில்லியன் கிலோ வாட்டாகவும், அனல்சக்தி 1·74 மில்லியன் கி. வாவிலிருந்து 3·77 மில்லியன் கி. வா. வாக அதிகரித்தது. எனவே, மொத்த அமைக்கப்பட்ட ஆக்கசக்தி 1950-ல் 2·3 மில்லியன் கி. வாட்டாக இருந்ததிலிருந்து 1960-61-ல் 5·7 மில்லியன் கி. வாட்டாக அதிகரித்தது. ஆனால், இது எதிர்பார்க்கப்பட்ட இலக்காகிய 6·9 மில்லியன் கிலோவாட்டிற்கும் குறைவாகவேயிருந்தது. இப் பற்றுக் குறைக்குக் காரணம் வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகளாகும். கிராமப் பொருளாதாரத்தை நவீனப்படுத்தி வளர்ச்சியடையச் செய்ய மிகவும் இன்றியமையாததாகக் கருதப் பட்டதால் கிராமப் பகுதிகளுக்கு மின் சக்தியை விரிவாக்குவதில் சிறப்புக் கவனம் செலுத்தப்பட்டது. 1950-51-ல் மின்னோட்டம் பெற்ற நகரங்கள், கிராமங்களின் மொத்த எண்ணிக்கை 3,687 ஆக இருந்ததிலிருந்து 1960-61-ல் 23,000 ஆக அதிகரித்தது.

### தாதுப் பொருள்கள் (Minerals)

முதல் இரண்டு திட்டக் காலங்களில் தாதுப் பொருள்களைக் கண்டறிந்து முழு அளவில் பயன்படுத்தக் கவனம் செலுத்தப் பட்டது. நிலக்கரி, இரும்புத்தாது, பாக்ஸைட், போன்ற பிரதான தாதுப் பொருள்களைச் சிறப்பாகக் கண்டறிந்து பயன்படுத்தவும் வகை செய்யப்பட்டது. நிலக்கரி உற்பத்தி 1950-51-ல் 32·3 மில்லியனாக இருந்ததிலிருந்து 1960-61-ல் 54·6 மில்லியன் டன்களாகவும், பாக்ஸைட் 64,000 டன்களாக இருந்தது 3,77,000 டன்களாகவும் அதிகரித்தது. இரண்டாம் திட்டக்காலத்தில் இப் பொருள்கள் பெருமளவு அதிகரித்தன.

### போக்குவரத்தும் செய்தித்தொடர்பும்

வேளாண்மை, தொழில் துறைகளின் வளரும் தேவைகளைப் பூர்த்திசெய்யப் போக்குவரத்துச் சாதனங்களின் அளவை அதிகரிக்க வும், புதிய போக்குவரத்து வழிகளை நிர்மாணிக்கவும், இரண்டாம் திட்டக் காலத்தில் வசதிகள் செய்யப்பட்டன. சாலைப் போக்கு வரத்து, கப்பல் போக்குவரத்து, ஆகாய விமானப் பணிகள், ஆகியவைகள் கணிசமான அளவு விரிவாக்கப்பட்டன. 1960-61-க் குள் 800 மைல் நீளமுள்ள புதிய வழிகள் சேர்க்கப்பட்டன. உறுதியான சாலைகள்(Surfaced Roads) 1955-56-ல் 1,22,000 மைல் நீளமுள்ளதாக இருந்ததிலிருந்து 1960-61ல் 1,44,000 மைல் நீளமுள்ளதாக அதிகரித்தது. உறுதியில்லாச் சாலைகள் (unsurfaced roads) இதே காலத்து 1,95,000 மைல்களிலிருந்து 2,50,000 மைல் களாக அதிகரித்தன. இதே காலத்தில் கப்பல் போக்குவரத்துப்

பொருள்களின் பாரமும் 4·8 இலட்சம் மொத்தப் பதிவான டன்களிலிருந்து (Gross Registered tons) 9 இலட்சம் மொத்த பதிவான டன்களாக அதிகரித்தது. இந்திய முக்கியத் துறைமுகங் களின் கொள்சக்தி (Handling Capacity) 25 மில்லியன் டன்களி லிருந்து 37 மில்லியன் டன்களாக அதிகரித்தது.

இதே காலத்தில் தபால் நிலையங்களின் எண்ணிக்கை 36,000 லிருந்து 77,000 மாகவும், தொலைபேசிகளின் எண்ணிக்கை 1,68,000லிருந்து 4,60,000மாக அதிகரித்தது. ஒலிபரப்பு முறை யிலும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டது. ஒவ்வொரு மொழிப் பகுதியிலும் ஒரு ஒலிபரப்பும் நிலையம் அமைக்கப்பட்டது 1960-61-ல் இந் நிலையங்கள் 28 ஆக அதிகரித்தன.

சமூகப்பணிகள்

திட்டமிட்ட வளர்ச்சியின் பிரதான குறிக்கோள்களில் ஒன்றாக விளங்குவது நாட்டில் உள்ள மனிதவளங்களின் தக்க வளர்ச்சியாகும். எனவே, கல்வி, சுகாதாரம், சமூக நலன் போன்ற பல்வேறு வசதிகளின் மூலம் மனிதவளங்களின் தன்மையையும் அளவையும் அதிகரிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அவற்றை ஓரளவு விரிவாகக் கீழே காணலாம்.

(i) கல்வி

முதல்நிலைப் பள்ளிகளின் எண்ணிக்கை 2,10,000லிருந்து 3,42,000மாகவும், உயர்நடுத்தரப் பள்ளிகள் 7,300லிருந்து 17,000 மாகவும் அதிகரித்தன. பல்கலைக் கழகங்களின் எண்ணிக்கை 27லிருந்து 46 ஆகவும், பட்டப்படிப்பைக் கொண்ட கல்லூரிகளின் எண்ணிக்கை 542லிருந்து 1,050 ஆகவும் அதிகரித் தன. இத் திட்டக் காலத்தில் தொழில் நுட்பக் கல்விக்கான வசதிகளை வளர்ச்சியடையச்செய்ய தனிக் கவனம் செலுத்தப் பட்டது. விஞ்ஞான, தொழில் நுட்ப ஆராய்ச்சியை மேம் படுத்தும் நடவடிக்கைகளுக்கு உயர் முக்கியத்துவம் அளிக்கப் பட்டது. எனவே, ஏராளமான புதிய ஆராய்ச்சி நிலையங்கள் (Research Institutions) தோற்றுவிக்கப்பட்டன. இவைகளுள் 20 தேசிய ஆய்வுக் கூடங்களும் (Laboratories), மூன்று பிராந்திய ஆராய்ச்சி நிலையங்களும் (Regional Research Centres) உள்ள டங்கும். அணுக்கரு விஞ்ஞானத் (Nuclear Science)தில் அடிப் படை நடைமுறை ஆய்வுக்கான வசதிகள் பெருமளவு அதிகரித்தன. மின்சக்தியைச் சமாதான காரியங்களுக்குப் பயன்படுத்த வகை செய்யப்பட்டது. நாட்டில் வலுவான, விஞ்ஞானத், தொழில் நுட்ப அமைப்பு ஏற்படுத்தப்பட்டது.

(ii) சுகாதாரம்

சுகாதாரப் பணிகள் இக் காலத்தில் பெருமளவு விரிவடைந்தன. ஏராளமான புது மருத்துவமனைகள், மருந்துக் கூடங்கள், சுகாதாரப் பிரிவுகள், மகப்பேறு, குழந்தை நல நிலையங்கள், ஏற்படுத்தப் பட்டன. மேலும், குடிநீர் அளிப்பு, சுகதாரம், தொற்றுநோய்க் கட்டுப்பாடு, பயிற்சி வசதிகள் பெருக்கம், ஆகியவைகளுக்கான சிறப்புச் செயல் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டன. 1950-51ல் 8,600 மருத்துவ நிலையங்கள் இருந்தன. இவைகளில் சுமார் 1,13,000 படுக்கைகள் இருந்தன. ஆனல், 1960-61-ல் 12,600 மருத்துவமனைகளும் 1,85,600 படுக்கைகளும் இருந்தன. இதற்குமேல் 2,800 ஆரம்ப மருத்துவமனைகள் திறக்கப்பட்டன. மருத்துவக் கல்லூரிகளின் எண்ணிக்கை 30லிருந்து 57 ஆகவும், ஊழியத்திலிருந்த மருத்துவர்களின் எண்ணிக்கை 56,000லிருந்து 70,000 மாகவும் அதிகரித்தன. இத்தகைய நடவடிக்கைகளின் விளைவாக இந்தியரின் சராசரி வாழ்வின் ஆயுட்காலம் சுமார் 10 ஆண்டுகள் அதிகரித்தது.

1960-61-க்குள் குடும்ப நலத்திட்டப் பணியில் ஈடுபட்ட நகர நிலையங்களின் எண்ணிக்கை 549 ஆகவும், கிராம நிலையங்களின் எண்ணிக்கை 1,100 ஆகவும் அதிகரித்தன. குடும்ப நலத்திட்டப் பணியில் ஈடுபட்ட ஏராளமான தனியார் அமைப்புகளுக்கு Non-official organisations) சிறப்பு நிதியும், தொழில் நுட்ப உதவியும் அளிக்கப்பட்டன.

(iii) பின்தங்கிய வகுப்பினரின் நலன்

பட்டியலில் இடப்பட்ட மலைச்சாதியினர், அரிஜனங்கள், மற்றப் பின்தங்கிய வகுப்பினரின் நலனை மேம்படுத்தச் சிறப்புநலச் செயல் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. சில தொல்லைகளைப் பெற்றுள்ள இவ் வகுப்புகளின் உறுப்பினர்களுக்கு நிதி உதவியும், கல்வி வசதிகளும், வேலை வாய்ப்புகளும், அளிப்பதன் மூலமாக அவர்களின் துயர் துடைக்கப்பட்டது, இதன்மூலம் அவர்களின் சமூகப் பொருளாதார நிலையைச் சீர்படுத்திச் சமுதாயத்தின் மற்றவர்களோடு ஒருங்கிணைந்து வாழ்வதற்கு வகை செய்யப்பட்டது. இதற்காக இரண்டாம் திட்டத்தில் ரூ. 79·41 கோடி செலவிடப் பட்டது.

(iv) வீட்டு வசதி

குடிசை மாற்றம், சீரமைப்பு, ஆகிய நடவடிக்கைகளுக்கும் ஆலைத் தொழிலாளர்களுக்கும், குறைந்த வருமான வகுப்பினர்

களுக்கும் வீட்டுவசதிகளை அளிக்கவும் வகை செய்யப்பட்டது. கிராம வீட்டுவசதிப் பிரச்சினையைத் தீர்க்க ஓரளவு நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டன. எனினும் வீட்டுப் பிரச்சினை முக்கியமாக நகரப் பகுதிகளில் தீவிரமாகவே யிருந்தது.

(v) புனர் வாழ்வு (Rehabilitation)

இரண்டாம் திட்டக் காலத்திலும் பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளின் மறு வாழ்வுப் பணிகள் தொடர்ந்து அதிகரித்தன. இரண்டாம் திட்டத்தில் மொத்தம் ரூபாய் 63·41 இலட்சம் செலவிடப்பட்டது. இத் தொகையானது வீட்டு வசதி, கல்வி, தொழிற்பயிற்சி, வேளாண்மை, வர்த்தகம், தொழில், ஆகியவைகளுக்கான கடன் போன்ற பல்வேறு புனர்வாழ்வு அம்சங்களுக்காகச் செலவிடப்பட்டது. இரண்டாம் திட்டக்காலத்தில் கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வெளியேற்றப்பட்ட விவசாயிகளின் குடும்பத்தினருக்கு மறு குடியிருப்பு வசதி வழங்கத் தண்டகாரண்யப் பகுதியை (Dandakaranya area) வளர்ச்சியடையச் செய்யும் நடவடிக்கைகளும் ஆரம்பிக்கப்பட்டன.

(vi) வேலைவாய்ப்பு

இரண்டாம் திட்டக்காலத்தில் உண்டாக்கப்பட்ட கூடுதல் வேலை வாய்ப்புகளின் எண்ணிக்கை சுமார் 8 மில்லியனாக கணக்கிடப்பட்டது. இதில் 6·5 மில்லியன் வேளாண்மைத்துறைக்கு வெளியே உண்டாக்கப்பட்ட பணிகளாகும். இரண்டாம் திட்ட இறுதியில் வேலையின்மையின் இடைவெளி சுமார் 9 மில்லியனாகக் கணக்கிடப்பட்டது.

இரண்டாம் திட்ட நடைமுறையின் மதிப்புரை

1. மேற்குறிப்பிட்ட இரண்டாம் திட்டத்தின் சாதனைகள் அரசாங்க அறிக்கைகளின்படி வெற்றிகரமானதாக இருந்த போதிலும் பொதுவாக அதன் முன்னேற்ற சாதனைகளில் அதிருப்தி காணப்பட்டது. தேசிய வருவாயின் இலக்கைச் சாதிக்க முடியவில்லை. இரண்டாம் திட்டத்தில் தேசிய வருவாய் அதிகரிப்பு 25 சதவிகிதம் அதிகரிக்க வேண்டியதற்குப்பதிலாக 20 சதவிகிதம்தான் அதிகரித்தது. திட்டத்தில் குறிப்பிடப்பட்ட அளவு பொதுத் துறை முதலீடு அதிகரிக்கவில்லை. திட்டத்தில் குறிக்கப்பட்ட ரூ. 4,800 கோடிகளுக்குப் பதிலாக உண்மை முதலீடு ரூ. 4,600 கோடியாக மட்டுமே இருந்தது. எஃகு இலக்கும் எதிர்பார்க்கப் பட்ட அளவு உற்பத்தி செய்யப்படவில்லை. மூன்று பொதுத்துறை எஃகு ஆலைகளின் உற்பத்தி இலக்கு 2 மில்லியன் டன்களாக இருக்கு

மென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனுல், உண்மை உற்பத்தி 0·6 மில்லியன் டன்களாக மட்டுமேயிருந்தது. அதேபோல் தாதுப் பொருள்கள், ஆக்கசக்தி, எந்திர நிர்மாணத் தொழில் போன்றவை களின் இலக்குகளும் எதிர்பார்த்த அளவுக்கு சாதிக்கப்பட முடிய வில்லை. வேளாண்மை உற்பத்தியில் முக்கியமாக உணவு தானியங் களில் பற்ருக்குறை ஏற்பட்டு இறக்குமதி தீவிரமாக அதிகரிக்க வேண்டிய நிலையேற்பட்டது. வேளாண்மை உற்பத்தித்திறனை அதிகரிக்கவல்ல உரங்களின் உற்பத்தி எதிர்பார்த்ததைவிட மிகத் தீவிரமாகக் குறைந்தது. இவை எல்லாவற்றின் விளைவாக எதிர் பார்த்ததைவிட மிகக் குறைவாகப் பொருளாதார வளர்ச்சிவீதம் இருந்தது. இரண்டாம் திட்டக்காலத்தில் திட்ட நிபுணர்கள் எதிர் பார்த்த வருடாந்திரப் பொருளாதார வளர்ச்சி வீதமாகிய 5 சத வீதத்திற்கும் குறைவாக உண்மைப் பொருளாதார வளர்ச்சிவீதம் ஆண்டொன்றுக்கு சுமார் 3·5 சதவீதமாகத்தான் இருந்தது. இவ்வருடாந்திர உண்மை வீதமாகிய 3·5 சதவிகிதம், சீனுவின் வளர்ச்சிவீதத்தில் மூன்றில் ஒரு பகுதியாகும். சீனுவின் வளர்ச்சி வீதம் ஆண்டிற்கு 9·5 சதவீதமாகும். இத்தகைய குறைந்த வளர்ச்சிவீதத்தைக் கொண்டு இந்திய வறுமைப் பிரச்சினையைத் தீர்ப்பது மிகக் கடினமானதாகும். இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளுக்குப் பொருளாதார வளர்ச்சிவீதம், குறைந்தது 7 சதவீதத்திற்கும் 8 சதவீதத்திற்கும் இடைப்பட்ட நிலையில் இருக்கவேண்டும். இவ் வீதத்தை தொழில் நுட்ப ரீதியிலும் மனித ஆற்றலின் ரீதியிலும் சாதிக்க முடியும்.

2. இரண்டாம் திட்டத்தின் மற்றொரு குறைபாடு தேசியச் செல்வப்பங்கீட்டில் நிலையாக அதிகரித்த தீவிர ஏற்றத்தாழ்வு களாகும். இரண்டாம் திட்டக்காலத்தில் பொருளாதாரக் குவிப்பு நடைமுறை மிகவும் வேகமாக அதிகரித்தது. நாடு சமதர்ம சமூகத்தின் குறிக்கோளை ஒரு சிறிதும் சாதிக்க முடியவில்லை. ஓரளவு நிலக்கிழாரி முறை ஒழிக்கப்பட்டதைத் தவிர இத் திட்டக் காலத்தில் எந்த ஓர் உண்மையான நிறுவன மாற்றமும் தோன்ற வில்லை. விலைகளின் ஏற்றத்தினுல் தொழிலதிபர்கள், தொழில் துணிவோர்கள், பெரிய வியாபாரிகள், மற்ற உரிமை பெற்ற வகுப் பினர்கள் பெருமளவு நன்மையடைந்தனர். இந்திய வளர்ச்சித் திட்டங்கள் ஏழைக் குடியானவர்கள், நிலமில்லாக் கூலிகள், போன்ற புறக்கணிக்கப்பட்ட வகுப்பினருக்கும் ஏழைகளுக்கும் நடைமுறை யில் ஒருவித நன்மையும் செய்யவில்லை. ஆலைத் தொழிலாளர்களும் தேசிய வருவாய் அதிகரிப்பினுல் எந்த ஓர் உண்மையான நன்மையையும் பெற முடியவில்லை. அவர்களின் உண்மைக் கூலிகள் 1955லிருந்து எந்தவித மாற்றமுமில்லாமலேயே இருந்தன

நடுத்தர வகுப்பினர் பெரும் துயரடைந்தனர். இரண்டாம் திட்டக் காலத்தில் தொழிலதிபர்கள், தொழில் துணிவோர், ஆகியோரின் நுகர்வு பெருமளவில் அதிகரித்தது.[1]

"பத்தாண்டுத் திட்டமிட்ட வளர்ச்சியின் பலனை நாட்டில் உள்ள ஒரு சிலரே பெற்று இன்புற, ஏனைய எல்லா மக்களின் வாழ்க்கைத்தரம், கீழ்நிலைக்குச் சென்றுகொண்டிருந்தது." இதற்குப் பல சான்றுகள் உள்ளன முதலாவதாக, திட்டத்தின் கடைசிப் பத்தாண்டுகளில் மறைமுக வரி நிலையாக அதிகரித்து வந்தது. 1951-52க்கும் 1960-61க்கும் இடைப்பட்ட காலத்தில் தேசிய வருவாய் ரூ 9,970 கோடியிலிருந்து ரூ. 16,000 கோடியாக அதிகரிக்க வருமான வரியிலிருந்து கிடைக்கும் வருவாயின் சதவீதம் 1·96லிருந்து 1·83 சதவீதமாகக் குறைந்தது. 1951-52-ல் வருவாய், சொத்தின்மேல் விதிக்கப்பட்ட நேர் முகவரிகளிலிருந்து (மொத்த வரி வருவாயில்) 32·6 சதவீதமாகக் கிடைத்தது. ஆனால், 1960-61-ல் இவ் வருவாய் 29·5 சதவீதமாகக் குறைந்தது. ஆனால், இதற்கு மாறாகப் பொருள்கள், பணிகள் ஆகியவைகளின் மேல் விதிக்கப்பட்ட மறைமுக வரிகளின் சதவிகிதம் (மொத்த வரி வருவாயில்) 59·3லிருந்து 62·7 சதவீதமாகப் பத்தாண்டுகளில் அதிகரித்தது. நாட்டில் செல்வக் குவிப்பு விரைவாக அதிகரித்து வரும் பொழுது செல்வ வரி, நன்கொடை வரி (gift tax), ஆகிய வரிகளிலிருந்து வரும் வருவாய் நிலையாகக் குறைந்து கொண்டே வந்தது. சான்றாக 1959-60-ல் செல்வ வரி மூலமாகக் கிடைத்த வருவாய் ரூ. 1,211 இலட்சமாக இருந்ததிலிருந்து 1960-61-ல் ரூ. 750 இலட்சமாகக் குறைந்தது. எனவே, நாட்டில் சமதர்ம முறையை ஏற்படுத்துவதற்குப் பதிலாக முதலிரு திட்டங்கள் ஏற்றத் தாழ்வுகளை அதிகரித்தன.

3. திட்டத்தின் கடைசிச் சில ஆண்டுகளில் பிராந்திய ஏற்றத் தாழ்வுகளும் அதிகரித்தன. இத் திட்டக் காலத்தில் சமச் சீரான பிராந்திய வளர்ச்சிக் கொள்கையை நடைமுறைப்படுத்த திட்டக் குழு தகுந்த செயல் முறைகளை மேற்கொள்ளவில்லை. உத்திரப் பிரதேசம் போன்ற சில மாநிலங்கள் பொருளாதார ரீதியில் உண்மையில் கீழ் நிலையிலேயே இருந்தன. மிதமிஞ்சிய மக்கள் தொகை வளர்ச்சியினால் உள் வருவாயில் ஏற்பட்ட அதிகரிப்பு இம் மாநிலங்களில் உண்மையான பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்தவில்லை. ஆனால், இந்தியாவின் தேசிய வருவாய்

1 தாமஸ் பலோவ், (Thomas Balogh) "மூன்றும் திட்டத்திற்கான பொருளாதாரச் சிறப்புக் கொள்கை" '1961-ன் பொருளாதார வாரசந்திர வெளியீட்டின் வருடாந்திர ஆய்வு.'

திட்டத்தின் பத்தாண்டுகளில் 42 சதவீதமாகவும், தலாவருவாய் 20 சதவீதமாகவும், ஒரு நபர் நுகர்வு சுமார் 16 சதவீதமாகவும் அதிகரித்தன. நாட்டின் நிகர உற்பத்தி 1951 ஆம் ஆண்டிலிருந்து ஆண்டிற்கு 3·5 சதவீதமாக அதிகரிக்க, சில மாநிலங்களின் உள் உற்பத்தி ஆண்டிற்கு 2 சதவீதத்திற்கும் குறைவாக அதிகரித்தது. இதற்கு மாறாக, பஞ்சாபில் மாநில உள் உற்பத்தி ஆண்டிற்கு 10 சதவீதமாக அதிகரித்தது. 1950-51-ல் தேசிய வருவாய்க்கு உத்திரப் பிரதேசத்தின் அளிப்பு 18·4 சதவீதமாக இருந்ததிலிருந்து 1958-59-ல் 16 சதவீதத்திற்கும் குறைந்தது. இதேபோன்று கேரள மக்களும் இரண்டாம் திட்டத்தில் சமச் சீரான பிராந்திய வளர்ச்சிக் கொள்கை புறக்கணிக்கப்பட்டுவிட்டதென்று குறை கூறினர். கேரள மக்களும் அரசும் இரண்டாம் திட்டக் காலத்தில் மத்திய அரசால் பேதம் காட்டப்பட்டுப் புறக்கணிக்கப்பட்டன ரென்று எடுத்துக்கூறினர்.

சமச்சீரான பிராந்திய வளர்ச்சிக் கொள்கை பொருளாதார ரீதியில் நடைமுறைப் படுத்த வேண்டியது மிகவும் இன்றியமை யாததாக விளங்குகிறது. ஆனால், இதற்கு மாறாகத் திட்டக்குழு அரசியல் குறிக்கோளுடன் சில வளர்ச்சித் திட்டங்களை நடை முறைப்படுத்தியது. சான்றாக அஸ்ஸாமில் நுண்மதி எண்ணெய் சுத்திகரிப்பு (Nunmati Refineri) ஆலை அரசியல் நோக்குடன் அப் பகுதி மக்களைத் திருப்திசெய்ய அமைக்கப்பட்டது. பொருளாதார ரீதியில் அங்கு ஏற்படுத்துவது சாத்தியப்படாத நிலையில் இருந்த போதிலும் அது அங்கு அமைக்கப்பட்டது. பேராசிரியர் தாமஸ் பலோவ் அவர்களின் அறிவுரைப்படி, "குறைந்த வளர்ச்சி கொண்ட பகுதிகளின் பிரச்சினையைத் தீர்க்கக் கிராம உற்பத்தித் திறனை அதிகரிக்கும் செயல் முறைகளை மேற்கொள்ள வேண்டும். தகுதி யில்லாத இடங்களில் புதுத் தொழில்களை ஏற்படச் செய்து வளர்ச்சியடையச் செய்ய நடவடிக்கைகளை எடுப்பது சிறந்த தாகாது." கிராம உற்பத்தித் திறனை அதிகரிப்பதோடு கூட' கல்வி, சுகாதாரம், போன்ற சமூகப் பணிகளையும் அதிகரித்து, பிற் பட்ட பகுதிகளைத் தொழில் வளர்ச்சிக்குத் தகுந்தவைகளாக உருவாக்க வேண்டும்.

4. இரண்டாம் திட்டத்தின் செயல் முறைகள் பொருள்களின் விலைகளைத் திறம்படக் கட்டுப்படுத்த முடியவில்லை. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் விலைமட்டம் ஆண்டுக்கு 6 சத வீதமாகவும் ஐந்தாண்டுகளுக்கு 30 சதவீதமாகவும் தொடர்ந்து அதிகரித்தது. இவ்வாறு விலைகள் உயர்ந்ததால் வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண் பெருமளவு அதிகரித்தது. இரண்டாம் திட்டக் காலத்தில் அதிகமான அளவு பற்றுக்குறை நிதியாக்கத்தின்

மூலம் பொருளாதாரம் நிர்வகிக்கப்பட்டது. இரண்டாம் திட்டக் காலத்தில் பற்றுக்குறை நிதியாக்கம் ரூ. 1100 கோடியாகவும் ஆண்டிற்கு ரூ. 200 கோடிகளுக்கு அதிகமாகவும் இருந்தது. இத்தகைய அதிக அளவுப் பற்றுக்குறை நிதியாக்கம் விலை மட்டத்தைப் பெருமளவு அதிகரிக்கச் செய்தது. விலைமட்ட அதிகரிப்பைத் தடுக்கத் திறமையான முறையில் கட்டுப்படுத்த அரசு தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை. இதன் விளைவாகத் திட்டத்தின் கடைசி ஐந்தாண்டுகளில் இந்திய ரூபாயின் மதிப்பு கால்பாகம் குறைந்தது. விலை அதிகரிப்பு நாட்டின் ஏற்றுமதி அதிகரிப்பு நடவடிக்கைகளுக்குப் பெரிதும் தடையாக விளங்கியது. திட்டக் குழுவின் எல்லா வகைச் செலவுக் கணக்கீடு களும் தவறானவைகளாகி விட்டன. இதனால்தான் முக்கிய இயற் பொருள் இலக்குகளின் சாதனைகளில் தீவிரப் பற்றுக்குறை ஏற்பட்டது.

5. இரண்டாம் திட்டம் நாட்டின் வேலையின்மைப் பிரச்சினை யைத் தகுந்த முறையில் தீர்க்க வழிகாட்டவில்லை. இரண்டாம் திட்டக் காலத்தில் திட்ட நிபுணர்களால் வேலையின்மை, வேலைக் குறைவு, ஆகியவைகளின் பிரச்சினைகளை, முக்கியமாகக் கிராமப் பகுதிகளின் வேலைப் பிரச்சினைகளைத் தீர்க்கத்தகுந்த வழிகாண முடிய வில்லை. இரண்டாம் திட்டக் கால முடிவில் வேலையில்லாதோரின் எண்ணிக்கை முதல் திட்டத்தைவிட அதிகமாகச் சுமார் 9 மில்லி யனாக இருந்தது. எனவே, இரண்டாம் திட்டக் காலத்தில் வேலை யின்மை நிலை உண்மையில் மிகவும் சீர்கேடு அடைந்தது. மேலும், கிராமப் பகுதிகளில் புலனாகா வேலையின்மையால் துன்பப்படும் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்க எந்த ஒரு செயல் முறையும் மேற்கொள்ளப்படவில்லை. கிராமப் பகுதிகளில் உள்ள உபரி தொழிலாளர்களுக்கு, சாலை அமைத்தல், சிறு நீர்ப்பாசனம், வீடு கட்டுதல், சீராக்குதல், நிலச் சீரமைப்பு, வனப் பாதுகாப்புப் போன்ற திட்டங்களில் வேலைவாய்ப்புகளை அதிகரித்திருந்தால் சீனாவில் ஏற்பட்ட வியத்தகு விளைவுகளைப் போன்று இந்தியாவிலும் ஏற்பட்டிருக்கலாம்.

6. இரண்டாம் திட்டம் வேளாண்மைத் துறையில் சில சாதனைகளையும் பெற்றிருந்தது. முதலாவதாக மாநில அரசுகள் அவ்வப்போது நிறைவேற்றிய நிலச் சீர்திருத்தச் சட்டங்களை அமுல் படுத்துவதில் தகுந்த அக்கறை காட்டவில்லை. இச் சட்டங்கள் சிறந்த குறிக்கோள்களுடன் நிறைவேற்றப்பட்டிருந்த போதிலும், குடியானவர்களுக்கு நன்மையளிக்கத் தக்க வகையில் வலியுறுத்தி அமுல்படுத்தப்படவில்லை. சுயமாக நிலத்தை ஒப்படைத்தல், நிலத்தில் மறு உரிமை பெறுதல், போன்ற

நடவடிக்கைகளை அமுல்படுத்துவதில் அநேகச் சட்ட நிர்வாகக் குறைபாடுகள் ஏற்பட்டன. அதேபோன்று சில மாநிலங்களில் தான் நில உச்ச வரம்புச் சட்டங்கள் நடைமுறைப் படுத்தப் பட்டன. நில நிர்வாகம், சாகுபடி, ஆகியவைகளில் உயர்தரத்தை ஏற்படுத்த இரண்டாம் திட்டத்தில் மாநில அரசுகள் சட்டமியற் றும்படி வலியுறுத்தப்பட்டன. இரண்டு மாநிலங்களிலும் ஒரு மத்திய நிர்வாகப் பகுதியிலும் மட்டுமே இச் செயல் முறைகள் மேற்கொள்ளப்பட்டன. இத் திட்டக் காலத்தில் நில உடைமை ஒருங்கிணைப்புப் பணிகளையும் மேற்கொள்ளும்படி மாநில அரசுகள் வலியுறுத்தப்பட்டன. இத் துறையில் அமுலாக்கப்பட்ட செயல் முறைகளின் முன்னேற்றம் மிகவும் குறைவாக இருந்தது. 1960-மார்ச் மாத இறுதியில் 23 மில்லியன் ஏக்கர் நிலம் மட்டுமே உண்மையில் ஒருங்கிணைக்கப்பட்டதென்று கணக்கிடப்பட்டது.

இரண்டாவதாக திட்டக் காலத்திலும் அதற்கு முன்பும் நிர்மாணிக்கப்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களின் நன்மைகள் முழு அளவில் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்பட்டன. இதற்குக் காரணம், தகுந்த பங்கீட்டு வழிமுறைகள் தயாராக இல்லாமை யாகும். மேலும், உழவர்கள் நீரைப் பயன்படுத்த ஆயத்தமான நிலையிலும் இல்லை. 1959-60, ஆம் ஆண்டில் சில பயிர்களில் மொத்த நீர்ப் பாசன வளங்களில் சுமார் 54 சதவீத நீர்ப்பாசன வளங்கள் பயன்படுத்தப்படாமல் இருந்தன. இது திட்டத்தின் குறைபாடுகளுக்கு ஒரு சான்றாகும். எனவேதான் தற்போது சிறு நீர்பாசனத் திட்டங்களை நடைமுறைப்படுத்தும் அமைப் புகளைச் சீர்படுத்தி நீர்ப்பாசன வளங்களை முழு அளவில் பயன்படுத்த வழிவகைகளை மேற்கொள்ளும்படி மாநில அரசுகளைத் திட்டக்குழு அறிவுறுத்தியது. வேளாண்மை நன்நோக்கு வரிகளை (Betterment levies) அமுல் படுத்துவதில் சில மாநிலங்கள் மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்தன. இரண்டாம் திட்டக் காலத்தில் நன்நோக்குக் கட்டணங்களிலிருந்து கிடைக்கும் தொகை ரூ. 47 கோடியாக இருக்குமென்று முதலில் கணக்கிடப்பட்டது. ஆனால், அது உண்மையில் ரூ. 3·5 கோடிகளாக மட்டுமே இருந்தது. ஆறு மாநில அரசுகள் மட்டுமே வெள்ள நிவாரண வரிச் சட்டங்களை நடைமுறைப் படுத்த முயன்றன. இச் சட்டத்தை உண்மையில் நடைமுறைப் படுத்தியது திருப்திகரமாக இருந்தது.

மூன்றாவதாக இரண்டாம் திட்டக் காலத்தில் சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் ஆக்கப் பணிகள் திருப்திகரமாகச் செய லாற்றப்படவில்லை. நிறைவேறா உறுதி மொழிகளால் விவசாயிகள் மனத்தளர்ச்சியடைந்தனர். சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் தவறான சிறப்பு வரிசைகளின் அடிப்படையில் செயற்பட்டன.

சான்றாக நீர்ப்பாசனக், கால்வாய்களுக்கு உடனடியாகத் தேவைப் படும் சிமெண்டானது சாலைகள் அமைப்பதற்காகப் பெருமளவில் வீணாக்கப்பட்டது. வேளாண்மைச் சீரமைப்பிற்கு இத் திட்டங்கள் சரியான வழி வகுக்கவில்லை. நிலச் சீரமைப்பு, பயிர்களின் நோய்களை நீக்குதல் போன்ற செயல் திட்டங்கள் எதிர் பார்த்த அளவு நடைமுறைப் படுத்தப்படவில்லை. உரங்கள், சீரான விதைகள், ஆகியவைகளின் பங்கீட்டு முறையில் குறை பாடுகள் இருந்தன. சுகாதாரம், கல்வி, ஆகியவைகளின் வளர்ச்சி திருப்திகரமானதாக இல்லை. இத் திட்டங்கள் பங்கீட்டு நன்மை களில் பெரிய ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தின. இச் சமுதாய வளர்ச்சித் திட்டங்களால் பெரிய, நடுத்தர விவசாயிகளே பெரு மளவில் நன்மையடைந்தனர். சிறிய விவசாயிகளும், நிலமில்லாக் கூலியாள்களும் இத் திட்டங்களால் நன்மை பெறவில்லை. இது ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோளாகிய சமதர்ம சமுதாய முறைக் கொள்கைக்கு எதிரானதாக இருந்தது. மேலும், பஞ்சாயத்துகளும், கூட்டுறவுச் சங்கங்களும் இத் திட்டங்களின் கீழ் திருப்திகரமாகச் சிறிதும் செயல் புரியவில்லை. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் கிராம வாசிகளிடையே ஊக்கத்தை ஏற்படுத்தத் தேவையான சுய உதவி, சுயச் சார்பு, கூட்டுறவு முயற்சியின் மூலம் தங்கள் நிலையை உயர்த்துதல் போன்ற சீரிய எண்ணங்களை உருவாக்கத் தவறிவிட்டன. கிராம மக்கள் இச் செயல் முறைகள் அரசின் விவகாரங்கள் என்று கருதி தங்கள் முயற்சிகளை முழு அளவில் அதிகரித்து அரசுடன் ஒத்துழைக்கவில்லை.

7. இரண்டாம் திட்டத்தின் செயல்முறையில் அநேக அமைப்புமுறைக் குறைபாடுகளும், பலவீனங்களும் காணப்பட்டன. மத்திய, மாநில அரசுகளின் நிர்வாக அமைப்பில் கொள்கை வகுப்பதிலும் அதை அமுல்படுத்துவதிலும் பல்வேறு குறை பாடுகள் காணப்பட்டன. மத்திய, மாநில அரசுகளுக்கிடையே ஒரு நெருங்கிய தொடர்பும், ஒருங்கிணைந்த உறவும் இல்லாம லிருந்தது. திட்டக்குழு மாநிலங்களின் திட்டநடைமுறைகளைத் திறம்பட கண்காணிக்கவில்லை. மத்திய, மாநில அரசுகளின் பரந்த நிர்வாக அமைப்பு முக்கியமான செயல் திட்டங்களை விரை வாகவும், திறமையாகவும் அமுல்படுத்தவில்லை. இரண்டாம் திட்ட இறுதிக்குள் முழு உற்பத்தியையும், ஆரம்பித்திருக்க வேண்டிய நங்கல் (Nangal), நெய்வேலி (Neiveli), ரூர்கேலா (Rourkela), ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்பட்ட மூன்று புதிய பொதுத்துறை உர ஆலைகள் இரண்டாண்டுகள் காலம் தாழ்த்தியே உற்பத்தியைத் தொடங்கின. அரசு வர்த்தகக் கழகமும், அரசாங்க வர்க்கத்தின் குறைபாடுகளால், மங்கனீசு ஏற்றுமதியைப் பெரு

மளவில் அதிகரிக்கவில்லை. பொதுத்துறை நிறுவனங்களின் செயல்முறைகளில் ஊழலும், விருப்பப்பட்டோருக்குச் சலுகைகள் அளித்தலும் பெருமளவில் காணப்பட்டன.[1] இத்தகைய சீர்கேடுகளை அரசு நீக்காவிட்டால் பொதுத்துறை நிறுவனங்கள் மக்களின் நல்லெண்ணத்தை இழக்க நேரிடும். மேலும், திட்ட நிபுணர்களிடம் அனுபவமின்மையால் செலவுக் கணக்கீடுகளில் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. ஆரம்பக் கணக்கீடுகளும், இலக்குகளும், அடையமுடியாமல் போனதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கமுடியும். இரண்டாம் திட்டக் காலப் பெரிய தொழில் நடவடிக்கைகளுக்குத் தேவையான தொழில் நுட்பப் பணியாள்களின் பற்றுக் குறையை முன்கூட்டியே அறியத் தவறியது மற்றொரு அமைப்புசார் குறைபாடாகும். கடைசியாகத் திட்டத்திற்கு மிகவும் இன்றியமையாததாக விளங்கும் திட்ட விளம்பரப் பணிகளை (plan publicity work) திட்டக்குழு முக்கியத் துவம் அளிக்காமல் புறக்கணித்தது. திரு. S. கேசவ ஐயங்கார் குறிப்பிடுவதுபோல், "சீனு, ரஷ்யாவோடு ஒப்பிடும்போது இந்தியாவில் திட்டத்தின் விளம்பரப் பணிகள் மிகக் கீழ்நிலை யிலேயே உள்ளன. இன்றும்கூடத் திட்டத்தின் உயர் குறிக்கோள் களையும் அதன் நன்மைகளையும் கிராமத்தினர் அறியாத நிலையி லேயே உள்ளனர். எனவே, கிராம வாசிகள் திட்டத்தை அமுல் படுத்துவதில் தங்கள் பங்கையும் கடமையையும் உணராமல் திட்டத்தில் அக்கறையில்லாமலேயே உள்ளனர்."[2] திட்ட விளம்பரத்தோடு கூடவே மக்களின் ஆர்வத்தையும் தட்டி எழுப்பத்தக்க வகையில் வளர்ச்சிக்காகத் தங்களை அர்ப்பணிக்கத் தக்க பணியாள்களை ஆளும் கட்சியாகிய காங்கிரஸ் கட்சி உருவாக்கத் தவறிவிட்டது.

இரண்டாம் திட்டத்தை வகுக்கும்போது தொழில், வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்தினால் திட்டக் காலத்தில் ஏற்படும், போக்குவரத்து முட்டுக்கட்டைகளை முன்கூட்டியே சரியானமுறையில் கண்டறியத் திட்டக்குழு வகைசெய்யவில்லை இதன் விளைவாக இரண்டாம் திட்டக் காலத்தில் இரயில்வே பார வண்டிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் பெரும் பற்றுக் குறையேற்பட்டு நிலக்கரி உற்பத்தியைப் பாதித்ததோடு தொழில் சார் உற்பத்தியும் பாதிக்கப்பட்டது. நிலக்கரியைக் கொண்டு செல்ல நாளொன்றுக்கு 7,500 பார வண்டிகள் தேவைப்பட்டன.

[1] டாக்டர் M. L. செத் (M. L. Seth), 'பொருளாதாரத் திட்டத்தின் கோட்பாடும் நடைமுறையும்' ப. 432.

[2] S. கேசவ ஐயங்கார். 'திட்டமிட்ட பொருளாதாரத்தின் பத்தாண்டு கள்.' (1961) ப. 96.

ஆனால், இரயில்வேக்கள் நாளொன்றுக்கு 5,000 பார வண்டிகளுக்கு மேல் ஒதுக்கமுடியவில்லை. போக்குவரத்துத் தடைகளால் ஏற்பட்ட நிலக்கரி நெருக்கடி துரதிஷ்ட வசமாகத் தொழில்சார் உற்பத்தியை அதிகரிக்கும் முயற்சிகளுக்கு இடையூருக அமைந்தது. சமச்சீரில்லாத் திட்டத்தினுலும், கொள்கை மாற்றங்களினுலும், இந்நிலையேற்பட்டது. எனவே, இக் குறைகளுக்குத் திட்டக்குழுவே பொறுப்பாகும்.

## முடிவுரை

இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம் இந்திய வறுமையைப் போக்கத்தகுந்த சூழ்நிலையை உருவாக்கவில்லை. திட்டக் காலத்தில் உண்மையில் மக்களின் வாழ்க்கைத்தரம் சீர்கேடு அடைந்தது. பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் பெருமளவு அதிகரித்தன. சமுதாயத்தின் அடித்தளத்தில் வாழும் மக்களுக்கு எந்தவிதப் பொருளாதார நன்மையும் கிடைக்கவில்லை. சமதர்மக் குறிக்கோள் பின்நோக்கிச் சென்றவாறு இருந்தது. பிராந்திய ஏற்றத்தாழ்வுகள் தீவிரமாக அதிகரித்தன. பணவீக்கச் சக்திகள் பலம் பொருந்தியவைகளாய் விளங்கி அதிகரித்துக்கொண்டே சென்றது. பொருள்களின் விலைகள் கடுமையாக உயர்ந்தன. இந்திய வேளாண்மை ஏறக்குறைய ஒரேநிலையில், மாருமல் தேக்கமடைந்திருந்தது. நீர்ப்பாசன வளங்கள் முழு அளவில் பயன்படுத்தப்படாமலேயிருந்தன. நிலச்சீர்திருத்தங்கள் அநேக மாநிலங்களால் புறக்கணிக்கப்பட்டன. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் பல்வேறு குறைகளுடன் செயல்பட்டன. ஏராளமான அமைப்புசார் குறைபாடுகள் திட்ட நடைமுறையை அவ்வப்போது தடுத்து நிறுத்தின. போக்குவரத்து முட்டுக்கட்டைகள் தீவிரமான நிலக்கரி நெருக்கடியை ஏற்படுத்தின. உணவுப்பற்ருக்குறை, விலையேற்றம், வெளிநாட்டுச் செலவாணி நெருக்கடி, வேலையின்மை, போன்ற சமச்சீரில்லா நிலைகளை அபாய அறிகுறிகள் என்று தீவிரமாக ஆராய்ந்து, இக் குறைகளைப் போக்கத்தக்க வகையில் எதிர்காலத்திட்டங்கள் அமையவேண்டுமென்பதைத் திட்டக்குழு உணரவில்லை.

# 42. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்

## (The Third Five year Plan)

## (1961-62 to 1965-66)

வேளாண்மைத் துறையில் தேவையான அளவு உபரி ஏற்பட்டாலொழியத் தொழில்துறை சுயச்சார்புடன் வளர்ச்சியடைய முடியாது என்பதை உணர்ந்த திட்ட நிபுணர்கள், பொருளாதாரச் சமநிலையை நிலைநாட்டும் எண்ணத்துடன், மூன்றும் திட்டத்தில் வேளாண்மைக்கு மீண்டும் சிறப்பிடம் அளித்தனர். மூன்றும் திட்டத்தை வகுக்க இரண்டாம் திட்டத்தின் நடைமுறையும்அனுபவமும் மிகவும் பயனுள்ளவைகளாக இருந்தன. வேளாண்மைக்கு உயர்சிறப்பிடம் அளிக்கப்பட்ட போதிலும் அடிப்படைக் கனரகத் தொழில்கள் புறக்கணிக்கப்படவில்லை. இரண்டாம் திட்ட இறுதியில் பொருளாதாரம் தானுக இயங்கும் மேலெழு நிலையை (Take-Off) அடையும் ஆரம்பக்கட்டத்தில் இருந்ததாகச் சிலர் கருதினர். எனவே, மேலெழு நிலையை முறையாகவும், சுலபமாகவும், பெறுவதற்குத் தகுந்த முன்னெச்சரிக்கையும், விழிப்புணர்ச்சியும் தேவைப்பட்டன. மூன்றும் திட்டத்தின் சிறப்புக் கொள்கை வேளாண்மைத் துறையைத் தீவிரமாகச் செயல்படச் செய்வதும், மூலதன அடிப்படையை வலுப்பெறச் செய்வதுமே யாகும். இதன் அடிப்படையில் இந்தியாவின் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய அம்சங்களை இருவகைகளாகப் பிரிக்கலாம்.

### 1. வளர்ச்சியின் பரந்த சிறப்புக் கொள்கை

### (Broad Strategy of Development)

அடுத்த மூன்று திட்டங்களில் பொருளாதார வளர்ச்சியை முழு அளவில் அதிகப்படுத்துவதற்குத் தேவையான எல்லாவகை அம்சங்களையும் திறம்பட ஒன்றுதிரட்ட எல்லாவித நடவடிக்கை

களையும், மேற்கொள்வதே எதிர்காலத் திட்டங்களின் அடிப்படைக் கொள்கையாகும். இதைச் சாதிக்கப் பொருளாதாரம் விரைவாக வளர்ச்சியடைந்து மிகக் குறுகிய காலத்திலேயே சுய உறுதியும், சுய இயங்கு நிலையும் (Self-generating) உறுதியாக அடையத்தக்க பரந்த சிறப்புக் கொள்கையை வகுக்கவேண்டியது மிகவும் அவசியமாக விளங்கிற்று. எனவே, மூன்றும் திட்டச் சிறப்புக் கொள்கை, வேளாண்மைக்கும் தொழிலுக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும், சமூக வளர்ச்சிக்கும், தேசிய வளர்ச்சிக்கும், பிராந்திய வளர்ச்சிக்கும், உள்நாட்டு வளங்களின் சேகரிப்பிற்கும், வெளிநாட்டு வளங்களுக்குமிடையே, தகுந்த கூட்டுச் சார்பை (Interdependence) ஏற்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தியது. உயர் வளர்ச்சி வீதத்தை நிலையாகப் பெறத்தக்க சுய உறுதிகொண்ட பொருளாதாரத்தை அமைப்பதற்குப் போதிய அளவு உள்நாட்டு முதலாக்கமும், ஏற்றுமதியைப் பெருக்கும் அதிகபட்ச முயற்சிகளும், இக்கட்டான நிலையில் வெளிநாட்டு உதவியும், போதிய அளவு கிடைக்க வேண்டியது அவசியமாகும். வளர்ச்சியின் சிறப்புக் கொள்கையின் அடிப்படைக் குறிக்கோள் வெளி உதவியை நம்பியிருக்கும் நிலையைக் கூடிய சீக்கிரத்தில் மாற்றியமைக்கத் தக்க சூழ்நிலையை உருவாக்குவதாகும்.

## 2. நீண்டகால வளர்ச்சி மாதிரி (1961-71)
### (Longterm Growth Model)

மூன்றும் திட்டத்தில் ஒரு நீண்டகால வளர்ச்சி மாதிரியை (1961-71) திட்டக்குழு வரைந்தது. அதன்படி 1960-61 விலைகளில் தேசிய வருவாய் இரண்டாம் திட்ட இறுதியில் ரூ. 14,500 கோடியும், மூன்றும் திட்ட இறுதியில் ரூ. 19,000 கோடியும் நான்காம் திட்ட இறுதியில் ரூ. 25,000 கோடியும், ஐந்தாம் திட்ட இறுதியில் ரூ. 33,000 கோடி முதல் ரூ. 34,000 கோடியாக அதிகரிக்குமென்று கருதப்பட்டது. மக்கட்தொகை அதிகரிப்பு ஆண்டுக்குச் சுமார் 2 சதவீதமாக இருக்குமென்று கணக்கிட்டு தலாவருவாய் 1960-61 ஆம் ஆண்டின் இறுதியில் ரூ. 330 ஆக இருந்ததிலிருந்து 1966, 1971, 1976, ஆகிய ஆண்டுகளில் முறையே ரூபாய் 385, ரூ. 450, ரூ. 530 ஆக உயருமென்றும் கணக்கிடப்பட்டது.

மேற்குறிப்பிட்ட இலக்குகளைச் சாதிப்பதற்குத் தேசிய வருவாயில் ஒரு விகிதமான நிகர முதலீடு 1960-61-ல் 11 சதவீதமாக இருந்ததிலிருந்து மூன்றும், நான்காம், ஐந்தாம் திட்டங்களில்

முறையே ஆண்டுக்கு 14 முதல் 15 சதவீதமாகவும், 17-18 சதவீதமாகவும், 19-20 சதவீதமாகவும் அதிகரிக்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது. அதாவது மூன்றும் திட்ட நிகர முதலீடாகிய 10,500 கோடி ரூபாயுடன் ஒப்பிடும்போது நான்காம், ஐந்தாம் திட்டக் காலங்களில் நிகர முதலீடு முறையே ரூ. 17,000 கோடியாகவும், ரூ. 25,000 கோடியாகவும் இருக்கவேண்டுமென்றும் கூறப்பட்டது. உள்நாட்டுச் சேமிப்பும் அதற்கேற்றாற்போல் 1960-61-ல் 8·5 சதவீதமாக இருந்ததிலிருந்து மூன்றும், நான்காம், ஐந்தாம் திட்ட இறுதியில் உள்நாட்டுச் சேமிப்பு தேசிய வருவாயில் முறையே 11·5 சதவீதம், 15 முதல் 16 சதவீதம், 18-19 சதவீதமாக அதிகரிக்க வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது. எனவே, ஐந்தாம் திட்ட இறுதியில் பொருளாதாரம் வெளி உதவியின்றிச் சுயச் சார்புடன் நல்ல வலுப்பெற்றுத் திருப்திகரமாக வளர்ச்சியடைய வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது.

திட்டத்தின் நோக்கங்களும் குறிக்கோள்களும்

சுயபலம் கொண்ட வளர்ச்சியை அடையப் பொருளாதாரத்தில் சேமிப்பும் முதலீடும் போதிய அளவு அதிகரித்து ஓர் உயர் வருமான வளர்ச்சிவீதம் தொடர்ந்து சாதிக்கப்பட வேண்டும். இக் கருத்தை மனத்தில் கொண்டு மூன்றும் திட்டத்தில் உள்நாட்டுச் சேமிப்பு, தேசிய வருவாயில் $8\frac{1}{2}$ சதவீதம் முதல் $11\frac{1}{2}$ சதவீதம் ஆண்டொன்றுக்கு உயரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. நிகர முதலீட்டு வீதமும் தேசிய வருவாயில் 11 சதவீதத்திலிருந்து 14%—15% மாகவும் அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. இப் பரந்த குறிக்கோள்களை அடைய மூன்றும் திட்டம் கீழ்க்கண்ட பிரதான நோக்கங்களைப் பெற்றிருந்தது.

(1) ஆண்டொன்றுக்கு தேசிய வருவாயில் 5% சதவீத அதிகரிப்பை அடையத் தக்கவகையில் முதலீட்டுப் பாங்கு அமைய வேண்டும். அடுத்தடுத்த திட்டங்களில் இவ் வளர்ச்சி வீதத்தை நிலையாகப் பெறத்தக்க முதலீட்டு முறையை வகுத்தல்.

(2) உணவு தானியங்களில் தன்னிறைவைச் சாதித்தலும், தொழில்துறை, ஏற்றுமதித்துறை ஆகியவைகளின் தேவைகளைப் பூர்த்தி செய்யத் தக்கவகையில் வேளாண்மை உற்பத்தியை அதிகரித்தல்.

(3) எஃகு, இரசாயனம், எரிபொருள், ஆக்கசக்தி போன்ற அடிப்படைத் தொழில்களை விரிவாக்கி, இயந்திர நிர்மாணச்

சக்தியை ஏற்படுத்தி, உள்நாட்டு வளங்களைக் கொண்டே சுமார் பத்தாண்டுக் காலத்திற்குள் கூடுதல் தொழில்மயத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்தலாகும்.

(4) நாட்டின் மனித சக்திவளங்களை முழு அளவில் பயன்படுத்துதலும், வேலை வாய்ப்புகளைக் கணிசமான அளவு உறுதியாகப் பெருக்குவதுமாகும்.

(5) சமமான வாய்ப்புகளைத் தொடர்ச்சியாக ஏற்படுத்தலும், வருமான, செல்வ ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்துப் பொருளாதார சக்தியைச் சரிசமமாகப் பங்கீடு செய்தலும் ஆகும்.

(6) ஆண்டொன்றுக்குச் சுமார் 6 சதவீத ஒருங்கிணைந்த வளர்ச்சிவீதத்தைச் சாதிப்பதன் மூலம் தேசிய வருவாயை இரு மடங்காகவும், தலாவருவாயை 6 சதவீதமாகவும் அதிகரித்தலாகும்.

ஆண்டுதோறும் 5% மேற்பட்ட ஒருங்கிணைந்த வளர்ச்சி வீதத்தைச் சாதிக்க, நிகர முதலீடு தேசிய வருவாயில் 14% மேற்பட்டு (இரண்டாம் திட்டக்காலத்திலிருந்த 11·5 சதவீதத்திற்கும் அதிகமாக) இருக்கவேண்டியது இன்றியமையாததாகக் கருதப்பட்டது. இதற்காக உள்நாட்டுச் சேமிப்பு வீதத்தை மூன்றும் திட்ட இறுதிக்குள் 8·5 சதவீதத்திலிருந்து சுமார் 11·5 சதவீதமாக அதிகரிக்க வேண்டியது அவசியமாகும்.[1] மூன்றும் திட்டம் வேளாண்மைப் பொருளாதாரத்தை வலுவானதாக்கி, தொழில், ஆக்கசக்தி, போக்குவரத்து, ஆகியவைகளை வளர்ச்சியடையச் செய்து, தொழில், தொழில் நுட்ப மாற்ற நடவடிக்கைகளை வேகப்படுத்தி, சமவாய்ப்புக்களையும் சமதர்ம சமுதாயத்தையும் சாதித்து, எல்லாத் தொழிலாளர்களுக்கும் வேலை வாய்ப்புகளை அளிக்கத் தக்கவகையில் வழிகாட்டப்பட வேண்டிய நிலையில் இருந்தது.

மூன்றும் திட்டக்கால வளர்ச்சியில் வேளாண்மைக்கு முதல் சிறப்பு வரிசை அளிக்கப்பட்டது. மூன்றும் திட்ட நோக்கங்களில் முக்கியமானதாக விளங்கியது கிராமப் பகுதிகளில் கிடைக்கும் மனித சக்திவளங்களை முழு அளவில் பயன்படுத்துவதாகும்.

மூன்றும் திட்டத்தில் விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்கும், எஃகு, எரிபொருள், ஆக்கசக்தி, எந்திர

[1] மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம், ப. 51,

நிர்மாணம், இரசாயனத் தொழில்கள் போன்ற அடிப்படைத் தொழில்களை வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்றும் கூறப் பட்டது.

## திட்டத்தின் முதலீடும் ஒதுக்கீடுகளும்

மூன்றும் திட்டத்தில் மொத்தச் செலவு ரூ. 11,600 கோடியாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. இதில் பொதுத்துறையில் ரூ. 7,500 கோடியும், (நடப்புச் செலவாகிய ரூ. 1,200 கோடி உள் பட), தனியார் துறையில் ரூ. 4,100 கோடியும், செலவிடப்படுமென் றும் கருதப்பட்டது. கீழ்க்கண்ட பட்டியலில் இரண்டாம், மூன்றும் திட்டங்களின் செலவினங்களும், முதலீடும் ஒப்பிடப்பட்டுள்ளது.

### திட்டச்செலவும் முதலீடும் *
(Plan Outlay and Investment)

ரூபாய் (கோடிகளில்)

| | | இரண்டாம் திட்டம் | மூன்றும் திட்டம் |
|---|---|---|---|
| A. முதலீடு | ... | 6,750 | 10,400 |
| (i) பொதுத்துறை | ... | 3,650 | 6,300 |
| (ii) தனியார்துறை | ... | 3,100 | 4,100 |
| B. பொதுத்துறையில் செலவு | ... | 4,600 | 7,500 |
| (i) முதலீடு | ... | 3,650 | 6,300 |
| (ii) நடப்புச் செலவு | ... | 950 | 16,200 |

ஆதாரம் : மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்.

* சீனப் படையெடுப்பால் ஏற்பட்ட அவசர நிலைமையினால் பின்பு திட்டத்தின் பொருள்சார் இலக்குகளைச் சாதிக்கத் தக்கவகையில் மொத்தச் செலவு தாற்காலிகமாக ரூ. 12,700 கோடியாக உயர்த்தப்பட்டது. (பொதுத் துறைக்கு ரூ. 8,600 கோடியும், தனியார் துறைக்கு ரூ. 4,100 கோடியும் ஒதுக்கப்பட்டன )

மேற்குறிப்பிட்ட முதலீட்டுச் செயல் திட்டங்களின் விளக்கம் கீழ்க்கண்ட பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளது.

## இரண்டாம், மூன்றும் திட்டங்களின் முதலீடு

(ரூபாய் கோடிகளில்)

| துறைகள் | இரண்டாம் திட்டம் | | மூன்றும் திட்டம் | | | |
|---|---|---|---|---|---|---|
| | மொத்தம் (பொது + தனியார் துறை) | சதவீதம் | பொதுத் துறை | தனியார் துறை | மொத்தம் | சதவீதம் |
| 1. வேளாண்மையும் சமுதாய வளர்ச்சியும் | 835 | 12 | 660 | 800 | 1,460 | 14 |
| 2. பெரிய, நடுத்தர நீர்ப் பாசனம் | 420 | 6 | 650 | * | 650 | 6 |
| 3. ஆக்க சக்தி | 485 | 7 | 1,012 | 50 | 1,062 | 10 |
| 4. அமைப்புள்ள தொழிலும் தாதுப் பொருள்களும் | 1,545 | 23 | 1,520 | 1,050 | 2,570 | 25 |
| 5. குடிசை, சிறு தொழில்கள் | 265 | 4 | 950 | 275 | 425 | 4 |
| 6. போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் | 1,410 | 21 | 1,486 | 250 | 1,736 | 17 |
| 7. சமூகப் பணிகளும் இதர செலவுகளும் | 1,290 | 19 | 622 | 1,075 | 1,697 | 16 |
| 8. பட்டியலில் இடப் பட்ட சரக்குகள் | 500 | 8 | 200 | 600 | 800 | 8 |
| மொத்தம் | 6,750 | 100 | 6,300 | 4,100† | 10,400 | 100 |

* இது வேளாண்மை, சமுதாய வளர்ச்சியுடன் சேர்க்கப் பட்டுள்ளது.

† இது பொதுத் துறையிலிருந்து தனியார் துறைக்கு மாற்ற மடைந்த தொகையை உள்ளடக்கவில்லை.

ஆதாரம் மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்; ப.59.

மூன்றும் திட்டம் மொத்த முதலீடு சுமார் 54% அதிகரிக்க வகை செய்தது. இதில் 70% பொதுத் துறை முதலீடாகவும், 32% தனியார் முதலீடாகவும் இருந்தது.

மூன்றும் திட்ட முதலீட்டுப் பாங்கு வேளாண்மைத் துறையின் வளர்ச்சிக்கு உயர் சிறப்பு வரிசை (Highest Priority) அளிக்கப் பட்டது. வேளாண்மை, சமுதாய வளர்ச்சி, நீர்ப்பாசனம், ஆக்க சக்தி, ஆகியவைகளில் முதலீட்டுச் செலவு இரண்டாம் திட்டத்தில் 25 சதவீதமாக இருந்தது. ஆனால் மூன்றும் திட்டத்தில் இது மொத்த முதலீட்டில் 30 சதவீதமாக ஒதுக்கப்பட்டது. போக்கு வரத்து, செய்தித் தொடர்பு ஆகியவைகளில் முதலீடு இரண்டாம் திட்டத்தில் இருந்ததைவிடக் குறைவாக இருந்தது. இரண்டாம் திட்டத்தில் இது 21 சதவீதமாக இருக்க, மூன்றும் திட்டத்தில் மொத்த முதலீட்டில் 17 சதவீதம்தான் ஒதுக்கப்பட்டது. முழுமையான அளவின்படி (Absolute terms) மூன்றும் திட்டத்தில் இந்த அம்சத்தில் முதலீடு இரண்டாம் திட்டத்தி லிருந்த முதலீடாகிய ரூ. 1,410 கோடிக்கும் அதிகமாக ரூ. 1,736 கோடியாக இருந்தது. மற்ற அம்சங்களின் சதவீத அளவு இரண்டாம் திட்டத்திற்கு ஓரளவு இணையாகவே இருந்தது.

## மூன்றும் திட்ட நிதியாக்கம்

பொதுத்துறையில் ரூ. 7,500 கோடி செலவிட வேண்டு மென்று முதலில் தீர்மானிக்கப்பட்டது. ஆனால், சீனப்படை யெடுப்பாலும், பாகிஸ்தானிடம் சச்சரவு ஏற்பட்டதாலும், திட்டத்தை நடைமுறைப்படுத்தத் தேவையான மொத்த நிதிவளங்களின் அளவு சுமார் ரூ. 8,500 கோடியாகத் திருத்தி யமைக்கப்பட்டது. அதைக் கீழ்க்காணும் அட்டவணை விளக்கு கிறது.

(அட்டவணை : பக்கம் 185 பார்க்க)

மத்திய, மாநில அரசுகள், அவைகளின் நிறுவனங்கள் மூன்றும் திட்ட மதிப்பீடுகளை விட அதிகமான கூடுதல் நிதி வளங்களை ரூ. 1182 கோடி கூடுதலாகச் சேகரித்தனர். 1962, 1965, ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட போர் நடவடிக்கைகளாலும், விலைகளின் உயர்வாலும், திட்டத்திற்குள் அடங்காத செலவினங்கள் அதிகரித் ததால் மத்திய, மாநில அரசுகளின் நடப்புவருவாயின் இருப்பு நிதியில், ரூபாய் 969 கோடி குறைந்தது. செயல்முறைகளின் அதிக செலவீனங்களால் பொது நிறுவனங்களின் உபரியில் ரூ. 115 கோடி படிப்படியாகக் குறைந்தது. இவற்றையெல்லாம் கணக்கில் கொண்டால், மத்திய, மாநில அரசுகளாலும், அவை களின் பொது நிறுவனங்களாலும், அதிகரிக்கப்பட்ட நிகர

## மூன்றும் திட்ட நிதியாக்கம்

(ரூபாய் கோடிகளில்)

| | | ஆரம்ப நிதியாக்கத் திட்டம் | உண்மை நிதியாக்கம் |
|---|---|---|---|
| A. | உள்நாட்டு வரவு செலவுத் திட்ட நிதி வளங்கள்: | | |
| 1. | 1960-61ன் வரி வீதத்தில் நடப்பு வருவாயிலிருந்து கிடைக்கும் உபரி நிதி | 550 | 419 |
| 2. | 1960-61ன் இரயில்வே கட்டண வீதங்களில் இரயில்வேக்களின் அளிப்பு | 100 | 62 |
| 3. | 1960-61ன் பொருள்களின் விலைகளில் மற்றப் பொது நிறுவனங்களின் உபரி நிதி | 450 | 373 |
| 4. | பொது மக்களிடமிருந்து பெற்ற கடன் நிதி | 800 | 823 |
| 5. | சிறு சேமிப்பு | 600 | 565 |
| 6. | நிதியில் அடங்காக் கடன்-அரசு காப்பீட்டு நிதி | 265 | 336 |
| 7. | கட்டாய வைப்புகள், வருடாந்திர வைப்புகள், பரிசுப் பத்திரங்கள், தங்கப் பத்திரங்கள் | — | 117 |
| 8. | எஃகு சமப்படுத்தும் நிதி | 105 | 34 |
| 9. | இதர மூலதன வரவுகள் | 170 | 238 |
| 10. | கூடுதல் வரி விதிப்பு, (பொது நிறுவனங்களின் உபரியை அதிகரிக்க மேற்கொண்ட நடவடிக்கைகள் உள்பட, | 1,713 | 2,892 |
| | உள்நாட்டு நிதி வளங்களின் மொத்தம் | 4,750 | 5,021 |
| B. | வெளிநாட்டு நிதி வளங்கள் | | |
| 11. | வெளி உதவியின்படி வரவு செலவுத் திட்ட நிதி வரவுகள் | 2,200 | 2,423 |
| C. | நிதி வளங்களின் பற்றுக்குறை | | |
| 12. | பற்றுக்குறை நிதியாக்கம் | 550 | 1,123 |
| | எல்லாவகை நிதி வளங்களின் மொத்தம் | 7,500 | 8,577 |

ஆதாரம்: நான்காம் ஐந்தாண்டுத் திட்டம், 1969—74 நகல், ப. 78.

நிதிவளங்களின் அளவு ரூ. 98 கோடியாக மட்டும் அதிகரித்தது. இத்துடன்கூட உள் நாட்டுக் கடன்களின் அதிகரிப்பு ரூ. 173 கோடியும், வெளி உதவியின் படி வரவு செலவுத்திட்ட நிதிவரவுகளாகிய ரூ. 223 கோடியும், பற்றுக்குறை நிதியாக்கத்தினுல் கிடைத்த ரூ. 583 கோடியும், ஒன்றுசேர்ந்து திட்டத்தின் ஆரம்பத்தில் கணக்கிட்ட நிதிவளங்களைவிட ரூ. 1,077 கோடி அதிகமாகச் சேகரிக்கப்பட்டது.

திட்டத்தின் சாதனைகள்

மூன்ரும் திட்டத்தில் 1965-66 ஆம் ஆண்டின் இறுதிக்குள் வேளாண்மையில் 30 சதவீத வளர்ச்சியும், தொழில் துறையில் 70 சதவீத வளர்ச்சியும், தேசிய வருவாயில் 30 சதவீத வளர்ச்சியும் சாதிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனுல், திட்டத்தின் நடைமுறையில் எதிர்பார்த்த சாதனைகளைவிட மிகக் குறைவான பலனே கிடைத்தது. திட்டத்தின் ஆரம்ப ஒதுக்கீடு ரூ. 7,500 கோடியாக இருந்ததிலிருந்து, நிதிசார் முதலீடு ரூ. 8,577 கோடியாக அதிகரிக்கப்பட்டது. ஆனுல், இயற்பொருள் சார் முன்னேற்றத்தோடு ஒப்பிடும் போது இந்தக் கூடுதல் முதலீடு நியாயமானதாக இல்லை. மூன்ரும் திட்டம், வருடாந்திரத் திட்டங்கள், ஆகியவைகளின் ஒருங்கிணைந்த செயல் முறைகளைக் கருத்தில் கொண்டு, கீழ்க்கண்ட அட்டவணை தேசிய வருவாய் விவரங்களையும், வேளாண்மை, அமைப்புடைய தொழில் ஆகியவைகளின் உற்பத்தி (1960-61 முதல் 1968-69) விவரங்களையும் விளக்குகிறது. (அட்டவணை : 187 பக்கம் பார்க்க)

தேசிய வருவாய்

1960-61 விலைகளில் தேசிய வருவாய் (திருத்தியமைக்கப் பட்டபடி) மூன்ரும் திட்டத்தின் முதல் நான்கு ஆண்டுகளில் 20 சதவீதமாக அதிகரித்துக் கடைசி ஆண்டில் 5·7 சதவீதமாகக் குறைந்தது. கூட்டு வளர்ச்சி வீதம் ஆண்டொன்றுக்கு 6 சதவீதமாக வளர்ச்சியடைவதற்குப் பதிலாக, சராசரியாக ஆண்டொன்றுக்கு 3·2 சதவீதமாக மட்டுமே அதிகரித்தது. 1961-62-ல் தேசிய வருவாய் ரூ. 14, 490 கோடியாக இருந்ததிலிருந்து 1964-65-ல் ரூ. 16, 630 கோடியாக அதிகரித்தது. ஆனுல், 1965 66-ல் அது ரூ. 15, 930 கோடியாகக் குறைந்தது. தலாவருவாய் 1961-62-ல் ரூ. 326 ஆக இருந்ததிலிருந்து 1964--65-ல் ரூ. 348 ஆக அதிகரித்து 1965-66-ல் (எல்லாவகையிலும் கீழ்த்தரமான ஆண்டு) ரூ. 325 ஆகக் குறைந்தது. இவ்விவரங்களும் 1960-61-ன் விலைகளின் அடிப்படையில்தான் கணக்கிடப்பட்டன. தேசிய வருவாய்

## தேசிய வருவாய் வளர்ச்சி

1960-61 முதல் 1968-69 வரை

| வரிசை எண் | 1960-61 (ரூ. கோடிகளில் 1960-61 விலைகளில்) | (குறியீட்டு எண் 1960-61=100) 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 |
|---|---|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) | (5) | (6) |
| 1. மொத்த தேசிய வருவாய் ... | 13,272 | 103·9 | 106·0 | 112·1 | 120·1 | 113·3 |
| 2. தேசிய வருவாயில் வேளாண்மையும் அதோடு இணைந்த தொழில்களும் ... | 6,785 | 101·6 | 98·9 | 101·7 | 110·9 | 94·5 |
| 3. சுரங்கம், பேரளவு செய்பொருள் தொழில் ... | 1,213 | 109·2 | 120·1 | 132·0 | 141·3 | 146·0 |

ஆதாரம்:- நான்காம் ஐந்தாண்டுத் திட்டம். 1969-74 நகல் ப. 5.

16 சதவீதமாக மட்டுமே அதிகரிக்க, தலாவருவாய் உண்மையில் குறைந்தது.

வேளாண்மை உற்பத்தி

திட்டங்களின் கடைசி எட்டு ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தியின் போக்கு சீரானதாக இருக்கவில்லை. மூன்றும் திட்டத்தின் முதல் மூன்றுண்டுகளில் இருந்த தேக்க நிலைக்குப்

பிறகு 1964-65-ல் வேளாண்மை உற்பத்தி அதிகரித்தது. இவ்வாண்டில் வேளாண்மை உற்பத்தியின் இணைந்த குறிப்பெண் 158·5 (1945-50 = 100) ஆக அதிகரித்தது. இது 1960-61-ல் இருந்ததை விடச் சுமார் 11 சதவீதம் அதிகமாகும். இதற்கு அடுத்த இரண்டு ஆண்டுகளில் கடுமையான வறட்சி ஏற்பட்டதால் உற்பத்தி குறைந்தது. அதன்பிறகு வேளாண்மை உற்பத்தி அதிகரித்து வருகிறது. 1967-68-ல் உணவு தானியங்களின் உற்பத்தி 95·6 மில்லியன் டன்களாக அதிகரித்தது. திட்டத்தின் கடந்த எட்டு ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தி சராசரியாக ஆண்டொன்றுக்கு 3·2 சதவீதமாக உயர்வு பெற்றது. வர்த்தகப் பயிர்களின் உற்பத்தி உணவு தானியங்களின் உற்பத்தியைவிடத் துரிதமாக இருந்தது. பஞ்சு உற்பத்தியில் வளர்ச்சி வீதம் ஆண்டொன்றுக்கு 4·4 சதவீதமாகவும், கரும்பின் வளர்ச்சி வீதம் 4·6 சதவீதமாகவும், நிலக்கடலையின் உற்பத்தி 4. 2 சதவீதமாகவும் இருந்தது. சில எண்ணெய் வித்துகள், சணல், புகையிலை ஆகியவைகள் மிகக்குறைவான வளர்ச்சி வீதத்தைப் பெற்றிருந்தன. வர்த்தகப் பயிர்களின் உற்பத்தி பெருகியதற்குக் காரணம், அவைகள் பெரும்பாலான பகுதிகளில் பயிரிடப் பட்டதேயாகும். வேளாண்மை உற்பத்தி வளர்ச்சி வீதம் குறைவாக இருந்ததாலும், பொருளாதாரத்தின் வளர்ச்சி வீதம் மிகத் தேக்க நிலையில் இருந்ததாலும், உணவு தானியங்கள், தொழில்களுக்குத் தேவைப் பட்ட மூலப் பொருள்களாகிய மற்ற வேளாண்மைப் பொருள்கள் ஆகியவைகளுக்காக, வெளிநாட்டு இறக்கு மதியையே பெருமளவில் சார்ந்திருக்க வேண்டிய நிலையேற்பட்டது. மூன்றும் திட்டக் காலத்தில் இந்தியாவில் 25 மில்லியன் டன் உணவு தானியங்கள், 3·9 மில்லியன் பேல் பருத்தி, 1·5 மில்லியன் பேல் சணல் ஆகியவைகள் இறக்குமதி செய்யப்பட்டன. இதற்கு அடுத்த ஆண்டுகளிலும் இறக்குமதி தொடர்ந்து பெருமளவில் அதிகரித்தது.

தொழில் வளர்ச்சி

மூன்றும் திட்டக் காலம், அதையடுத்த மூன்று வருடாந்திரத் திட்டங்கள், ஆகியவைகளை உள்ளடக்கிய எட்டாண்டுகளில் தொழில் முன்னேற்றம் ஒரேசீராக இருக்கவில்லை. முதல் நான்கு ஆண்டுகளில் தொழில் முதலீடும் வளர்ச்சியும் சாதகமான முறையில் இருந்தன. அவற்றால் முன்னேற்றமும், குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்தது. அதன் பின் சுமார் மூன்றுண்டுகளுக்குப் பொருளாதாரத்தில் அநேக சிரமங்களும், தொல்லைகளும் ஏற்பட்டதால் தொழில் உற்பத்தியின் வளர்ச்சி வீதம் மிகவும் படிப் படியாகக் குறைந்து, முடிவில் தேக்க நிலையை அடைந்தது.

தொழில் உற்பத்தியின் குறிப்பெண்களின் மூலம், இத் துறையின் முன்னேற்றத்தை அறியமுடியும். (1960ஐ அடிப்படையாகக் கொண்ட) தொழில் உற்பத்தி அதிகரிப்புக் கீழ்க்கண்ட வகையில் இருந்தது:

| வருடம் | சதவீதம் |
|---|---|
| 1961—62 | 8·2 |
| 1962—63 | 9·6 |
| 1963—64 | 9·2 |
| 1964—65 | 8·3 |

இதன்பின் உற்பத்தி வளர்ச்சி வீதம், கடுமையாகக் குறைந்தது.

| | |
|---|---|
| 1965—66 | 4·3% |
| 1966—67 | 1·7% |
| 1967—68 | 0·3% |

ஆதாரம்:- நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் நகல் ப. 229.

கடைசி மூன்றுண்டுகளில் ஏற்பட்ட தளர்ச்சிக்கு முக்கியக் காரணமாக இருந்தது, பருத்தி நெசவு, உணவுப் பொருள் தொழில்கள், உலோக, இயந்திரத் தொழில்கள், ஆகியவைகளின் குறைந்த வளர்ச்சி வீதமாகும். இத் தொழில்களில் பெரும் பாலானவற்றில் முழுமையான உற்பத்தி (Absolute Output) மிகவும் குறைந்தது.

தொழில் வளர்ச்சியின் தளர்ச்சிக்குப் பல்வேறு காரணங்கள் இருந்தன. அவற்றுள் மிக முக்கியமானவைகளாக விளங்கியவை 1965-ல் ஏற்பட்ட போர் நடவடிக்கைகளால் உண்டான தொல்லை களும், அடுத்தடுத்து ஏற்பட்ட இரு வறட்சி நிலைகளுமே யாகும். 1965-ல் ஏற்பட்ட வெளி உதவித் தட்டுப்பாட்டினுல் ஏற்பட்ட மூலப்பொருள்கள், துணைப் பொருள்களின் பற்றுக்குறையினுல் அநேக தொழில்கள் கடுமையாகப் பாதிக்கப்பட்டன. இரு பிற் பட்ட வேளாண்மை ஆண்டுகளால் நாட்டில் சேமிப்பு, முதலீடு வாங்கும் திறன் ஆகியவை குறைந்தன. தொழில் உற்பத்திக்குத் தேவையான வேளாண்மை மூலப் பொருள்களின் தட்டுப்பாடு மிகவும் அதிகரித்தது.

1967-68ல் வேளாண்மை உற்பத்தி சீரடைந்ததால் தொழில் உற்பத்தியும் முதலீடும் படிப்படியாக அதிகரித்தன. ஓரளவு தொழில்வளர்ச்சி சீரான நிலையை அடைந்த போதிலும், நுகர்வுப்

பொருள் தொழில்களின் வளர்ச்சி கணிசமான அளவு அதிகரிக்கவில்லை. இத் தொழில்களின் முதலீடுஅதிகரித்தால்தான் ஆக்கசக்தியை முழு அளவில் பயன்படுத்த முடியும்.

இத் திட்டக் காலத்தில் சீரான தொழில் நடவடிக்கைகள் இல்லாதிருந்த போதிலும் பரவலாக்கப்பட்ட தொழில் சார் அமைப்பு சாதிக்கப்பட முடிந்தது. அநேக புதிய துறைகளில் ஆக்கசக்தி கணிசமான அளவு உருவாக்கப்பட்டது. எதிர்கால வளர்ச்சிக்குத் தேவையான வலுவான அடிப்படை அமைக்கப்பட்டது. பெரும்பாலும் உள்நாட்டு வளங்களைக் கொண்டே கனரக, பொறியியல், இயந்திர நிர்மாணத் தொழில்கள், இரும்பு எஃகு சுரங்கத் தொழில், ஆக்கசக்தி உற்பத்தி போன்ற தொழில்களில் உற்பத்தி எதிர்காலத்தில் அதிகரிக்க வகை செய்யப்பட்டது. போக்குவரத்துத் செய்தித் தொடர்புத் துறைகளில் பல்வேறு சாதனங்களின் அளிப்பில் தன்னிறைவு பெறவும் வாய்ப்புக் கிடைத்தது. பருத்தி நெசவு, சர்க்கரை, சிமெண்டு, போன்ற தொழில்களுக்குத் தேவையான எந்திரங்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யவும் வகையேற்பட்டது. பெட்ரோலியம், உரங்கள், பெட்ரோல், இரசாயனத் தொழில்கள் ஆகிய தொழில்களின் ஆக்கசக்தியில் பெருக்கம் ஏற்பட்டது. மூன்றும் திட்ட ஆக்கசக்தி இலக்குகளை 1965-66க்குள் முழுவதுமாக அடைய முடிந்த தொழில்கள் அலுமினியம், மோட்டார் வாகனங்கள், மின்மாற்ற இயந்திரங்கள், பருத்தி நெசவு இயந்திரங்கள், இயந்திரக் கருவிகள், சர்க்கரை, சணல்நெசவு, போன்ற தொழில்களாகும். இதற்கு மாறாக எஃகு, உரம், போன்ற முக்கிய சில தொழில்களில் உற்பத்தி எதிர்பார்த்த அளவு ஏற்படாமல் பற்றாக்குறை யேற்பட்டது. மூன்றும் திட்ட வினைமுடிந்த எஃகு உற்பத்தியின் இலக்கு 6·8 மில்லியன்டன்களாகக் குறிக்கப்பட்டிருந்தது ஆனால், 1968-69ல் இதன் உற்பத்தி உண்மையில் 4.6 மில்லியன் டன்களாக மட்டும் இருந்ததென்று கணக்கிடப்பட்டது. அதேபோல் நைட்ரஜன் உரங்கள் 8,00,000 டன் அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்பட்டதிற்குப் பதிலாக 5,50,000 டன் மட்டுமே உற்பத்தி செய்யப்பட்டது.

சிற்றளவுத் தொழில்கள்

திட்டத்தின் கடைசிப் பத்தாண்டுகளில் நவீன, சிறிய தொழில்கள் வளர்ச்சியடைந்தன. 1962ஆம் ஆண்டின் துவக்கத்தில் சிற்றளவுத் தொழில்களின் எண்ணிக்கை 37,000மாக இருந்ததிலிருந்து 1,20,000 ஆக அதிகரித்தது. 1960-61-ல் கடன் தவணை முறையில் அளிக்கப்பட்ட இயந்திரங்களின் மதிப்பு ரூ. 1·8 ஆக இருந்ததிலிருந்து 1967-68ல் ரூ. 3·8 கோடிகளாக அதிகரித்தது.

சிறிய தொழில்களிலிருந்து மத்திய அரசுத் துறைகள் வாங்கிய பொருள்களின் மதிப்பு 1960-61-ல் ரூ. 6·5 கோடிகளாக இருந்ததிலிருந்து 1967-68-ல் ரூ. 26·2 கோடிகளாக அதிகரித்தது.

இத் தொழில்களின் அளவு அதிகரித்ததோடு பொருள்களின் தரமும், சீராக்கப்பட்டது. பாதுகாப்புத்துறை, இரயில்வேக்கள், அநேக பேரளவுத் தொழில்கள் ஆகியவைகள் நிர்ணயித்த தரத்திற்கேற்ற பொருள்கள் இத் தொழில்களால் உற்பத்தி செய்யப்பட்டன. இயந்திரக் கருவிகள், மோட்டார் வாகனங்கள், துவிச்சக்கர வண்டிகள், போன்றவைகளை உற்பத்திசெய்யும் பெரிய தொழில்களுக்குத் தேவையான உதிரிப் பொருள்கள், துணைப் பொருள்கள் ஆகியவைகளை ஏராளமான சிற்றளவுத் தொழில் நிறுவனங்கள் உற்பத்தி செய்கின்றன. இத் தொழில்களில் சில நிறுவனங்களின் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

1960-61-ல் தொழிற்பேட்டைகள் 66ஆக இருந்ததிலிருந்து 1967-68ல் சுமார் 360 ஆக அதிகரித்தன. இப் பேட்டைகளில் நிறுவப்பட்ட சிறிய நிறுவனங்கள் சுமார் 70,000 தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பளித்தது. அவைகளின் வருடாந்திர உற்பத்தியின் மதிப்பு ரூ. 92 கோடியாக இருந்தது. இத் திட்ட நடவடிக்கைகள் கிராமப் பகுதிகளைவிட நகரப்பகுதிகளில்தான் வெற்றியுடன் செயல்பட்டன. கிராமப் பகுதிகளிலும் சிற்றூர்களிலும், ஒருங்கிணைந்த திட்டம், விற்பனை வசதிகள், இல்லாமையாலும், மூலப் பொருள்களின் தட்டுப்பாட்டினாலும், இத் திட்டங்கள், வளர்ச்சியடையவில்லை.

நீர்ப்பாசனம்

1960 முதல் 1969 வரையிலும் பயன்படுத்தப்பட்ட மொத்த நீர்ப்பாசன வளங்களின் அளவும், பெரிய, நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்களின் இலக்குகளும், சாதனைகளும் கீழ்க்கண்ட அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளன.

## பெரிய, நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்களின் ஆக்கவளங்களும், அவைகளைப் பயன்படுத்திய அளவும்

மில்லியன் ஹெக்டார்களில்

| ஆண்டு | ஆக்கவளங்கள் இலக்கு | சாதனை | பயன்படுத்திய இலக்கு | அளவு சாதனை |
|---|---|---|---|---|
| 1960-62 | 16·6 | 14·4 | 15·1 | 13·1 |
| 1968-69 (மதிப்பிடப் பட்ட) | 19·0 | 18·6 | 17·5 | 17·0 |

ஆதாரம்: நான்காம் ஐந்தாண்டுத் திட்டம். நகல். ப. 184.

மூன்றும் திட்டச் செயல்முறைகளில் நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு ரூ. 641 கோடி ஒதுக்கப்பட்டிருந்தது. மூன்றும் திட்டத்தின் முதல் ஆண்டிற்கு ரூ. 100 கோடி ஒதுக்கப்பட்டது. 1966-69 ஆகிய இடைப்பட்ட காலத்தில் சிறு நீர்ப்பாசனத் திட்டங்கள் வளர்ச்சியடைந்தன. மூன்றும் திட்ட இறுதியில் தனியார் குழாய்க் கிணறுகள் 64,000 இருந்தன. மேற்குறிப்பிட்ட காலத்தில் 1,60,000 குழாய்க்கிணறுகள் புதிதாக ஏற்படுத்தப்பட்டன. மூன்றும் திட்ட இறுதியில் 5,50,000 நீரிறைக்கும் இயந்திரங்கள் இருந்ததற்குப் பதிலாக மேற்குறிப்பிட்ட காலத்தில் 7,00,000 ஆக அதிகரித்தன. மூன்றும் திட்டக்காலத்தில் ரூ. 100 கோடி அமைப்பு சார் நிதிவளங்களின் மூலமாக நீர்ப்பாசன வசதிகள் அதிகரித்தன. மேற்குறிப்பிட்ட காலத்தில் வேளாண்மைசார் கழகம், நில வளர்ச்சி வங்கி போன்ற நிறுவனங்களிலிருந்து ரூ. 200 கோடி நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு அளிக்கப்பட்டது.

ஆக்கசக்தி

இத் திட்டக்காலத்தில் மின்சக்தி உற்பத்தியின் முன்னேற்றம் சிறப்பானதாக இருந்தது. சராசரி ஆக்கசக்தியின் வருடாந்திர வளர்ச்சிவீதம் மூன்றும் திட்டக்காலத்தில் 12·5 சதவீதமாகவும், மூன்று வருடாந்திரத் திட்டகாலங்களில் 12·6 சதவீதமாகவும், இருந்தது. அமைக்கப்பட்ட ஆக்கசக்தியின் மூன்றும் திட்ட இலக்கு 12·69 மில்லியன் கிலோவாட்டாக இருந்தது. ஆனால் உண்மையாக உண்டாக்கப்பட்ட ஆக்கசக்தியின் அளவு 10·17 மில்லியன் கிலோவாட்டாக இருந்தது.

கிராம மின்னேட்டம் (Rural Electrification) இத் திட்டக் காலத்தில் முக்கியத்துவம் பெற்றது. இரண்டாம் திட்ட முடிவில் 25,630 கிராமங்கள் மின்சாரவசதி பெற்றன. 1969 மார்ச் மாத இறுதிக்குள் 69,000 கிராமங்களுக்கு மின்வசதி கிடைக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. 1960-61ஆம் ஆண்டு இறுதியில் ஒரு நபர் மின்சார நுகர்வு 38 கிலோவாட் மணி (Kwh)யாக இருந்ததிலிருந்து மூன்றும் திட்ட இறுதியில் 61·4 கிலோவாட் மணியாக அதிகரித்தது. இது 1968-69 ஆம் ஆண்டின் இறுதியில் 77.3 கி வாட் மணியாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது தொழில்துறைதான் அதிகமான அளவு மின்சக்தியைப் பயன்படுத்தி வருகிறது. கடந்த ஐந்தாண்டுகளாக வேளாண்மைத்துறையும் அதிகமான அளவு மின்சக்தியைப் பயன்படுத்திவருகிறது.

போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்

மூன்றும் திட்டக் காலத்திலும் அதையடுத்த ஆண்டுகளிலும் போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் நிலையான முன்னேற்றத்

தைப் பெற்றன. பல்வேறு வகைப் போக்குவரத்து, செய்தித் தொடர்புத் துறைகளின் முன்னேற்றம் கீழ்க்கண்ட பட்டியலில் விளக்கப்பட்டுள்ளது.

## துறைவாரியான முன்னேற்றம்
1960-61—1965-66

| வரிசை எண் | அம்சங்கள் | அலகு | 1960-61 | 1965-66 |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| | இரயில்வேக்கள் | | | |
| 1. | வழி நீளம் | கிலோமீட்டர் | 56,247 | 58,399 |
| 2. | பார வண்டிகளின் பாதையின் நீளம் | ஆயிரம் மில்லியன் கி. மீ. | 156 | 203 |
| 3. | பயணி வண்டிகள் சென்றதூரம் | ஆயிரம் மில்லியன் கி. மீகளில் | 78 | 96 |
| | சாலைகள் | | | |
| 4. | மெருகிடப்பட்ட சாலைகள் | ஆயிரம் கி. மீ. | 236 | 287 |
| 5. | சாலைகளில் செல்லும் வர்த்தக மோட்டார் வாகனங்கள் | ஆயிரம் எண்ணிக்கைகளில் | 225 | 333 |
| 6. | கப்பல் போக்குவரத்து | ஆயிரம் மொத்தப் பதிவான டன்களில் | 857 | 1,540 |
| | பெரிய துறைமுகங்கள் | | | |
| 7. | கையாளப்பட்டப் போக்குவரத்து | மில்லியன் டன்களில் (Tonnes) | 40 | 50 |
| | செய்தித் தொடர்பு | | | |
| 8. | தொலைபேசிகள் | ஆயிரம் எண்ணிக்கைகளில் | 465 | 881 |
| 9. | தபால் நிலையங்கள் | ஆயிரம் எண்ணிக்கை | 77 | 97 |
| | ஒலிபரப்பு | | | |
| 10. | ஒலிபரப்பும் சாதனங்கள் | எண்ணிக்கைகளில் | 59 | 110 |

ஆதாரம்: நான்காம் ஐந்தாண்டுத் திட்டம், 1969-74. ப. 266.

போக்குவரத்து வளர்ச்சிக்காகக் கணிசமான அளவு தொகை முதலீடு செய்யப்பட்டும் அவ்வப்போது வளர்ச்சியில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்றபட்டன. மூன்றும் திட்டத்தின் ஆரம்ப ஆண்டு

களில் வங்காளம், பீஹாரில் உள்ள நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து நாட்டின் வடக்கு, மேற்கு, தெற்குப் பகுதிகளுக்கு நிலக்கரியைக் கொண்டு செல்வதில் போக்குவரத்துத் தொல்லைகள் ஏற்பட்டன. இத் திட்டக் காலத்தில் இரயில்வேக்களின் பாரம் ஏற்றிச்செல்லும் சக்தி அதிகரிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

கல்வி

திட்டத்தின் கடைசி எட்டாண்டுகளில் கல்வியின் எல்லா மட்டங்களிலும் பெருக்கம் ஏற்பட்டது ஒன்று முதல் ஐந்து வகுப்புகளுக்கு (I-V classes) சேர்க்கப்பட்டோரின் எண்ணிக்கை 1960-61-ல் 35 மில்லியனாக இருந்ததிலிருந்து 1968-69-ல் 56 மில்லியனாக அதிகரித்தது; வகுப்புகள் VI-VIII-ல் சேர்ந்தோரின் எண்ணிக்கையும் 7 மில்லியனிலிருந்து 13 மில்லியனாக அதிகரித்தது; வகுப்புகள் IX—XI ல் சேர்க்கப்பட்டோரின் எண்ணிக்கை 3 மில்லியனிலிருந்து 7 மில்லியனாக அதிகரித்தது. பல்கலைக்கழகக் கல்வி கட்டத்தில் (கலை, விஞ்ஞானம், வாணிபம் ஆகிய துறைகளில்) கல்வி கற்போரின் எண்ணிக்கை 0·74 மில்லியனிலிருந்து 1·69 மில்லியனாக அதிகரித்தது. பொறியியல், தொழில் நுட்ப நிறுவனங்களில் அனுமதிக்கப்படுவோரின் எண்ணிக்கை பட்டப் படிப்பு மட்டத்தில் 14 ஆயிரத்திலிருந்து 25 ஆயிரமாகவும், டிப்ளமோ கல்வி மட்டத்தில் கற்போரின் எண்ணிக்கை 26,000-லிருந்து 48,600 ஆகவும் அதிகரித்தது. கல்விமுறையைச் சீர்திருத்த செய்ய மூன்றும் திட்டத்தில் தீவிரமாக ஆராயப்பட்டது. கல்விக்குழுவின் (1964-66) பரிந்துரைகளின் அடிப்படையில் தேசியக் கல்விக்கொள்கை (National Policy on Education) வகுக்கப் பட்டது. அதுவே நான்காம் திட்டத்தின் கல்விச்செயல் திட்டங்களை வகுக்க அடிப்படையாக அமைந்தது.

கல்விக்காக எல்லாவகையிலும் செலவு செய்யப்பட்டதொகை 1960-61-ல் ரூ. 344 கோடியாக இருந்ததிலிருந்து 1968-69-ல் ரூ. 850 கோடியாக அதிகரித்ததென்று கணக்கிடப்பட்டது. இதே காலத்தில் இதற்கான அரசின் செலவு ரூ. 234 கோடியிலிருந்து (மொத்தச் செலவில் 68 சதவீதம்) ரூ. 640 கோடியாக (75 சதவீதம்) அதிகரித்ததென்று கணக்கிடப்பட்டது. கல்வி வளர்ச்சிக்கான இயற்பொருள் வசதிகளும், ஆசிரியர்களும், போதுமான அளவு இல்லாமலேயே கல்வி கற்போரின் எண்ணிக்கை விரைவாகப் பெருகியது. இதனால் ஆரம்ப மட்டத்தில் தேக்கமும், வளங்களில் வீணடிப்பும் ஏற்பட்டது. நடுத்தர, பல்கலைக்கழக மட்டத்தில் தோல்வியுறுவோரின் விகிதாச்சாரம் அதிகரித்தது. பட்ட மேற்கல்வி (post-Graduate Education) ஆராய்ச்சி,

விஞ்ஞானக் கல்வி, ஆகியவைகளின் தரம் உயர்த்தப் படவேண்டு மென்று குறிப்பிடப்பட்டது. தொழிற் கல்வியில் கல்வி நிறுவனங் களுக்கும், தொழில் துறைக்குமிடையே ஒத்துழைப்பைத் திறம்பட ஏற்படுத்த வேண்டுமென்றும் கூறப்பட்டது.

மனித சக்தி (Man power)

ஒரு சிறந்த கல்வி வளர்ச்சிமுறையில் மேல்மட்டத்தில் கல்வி கற்ற உழைப்பாளர்களுக்கு எதிர் காலத்தேவையின் அளவுக் கேற்பவும், வேலைகளுக்கு ஏற்றனவாயும், கல்விமுறை அமைய வேண்டும். இது தனி நபர்களுக்கும், சமூகத்துக்கும் மிகவும் அவசியமாகும். அப்போதுதான் தனி நபர் இலாபகரமான வேலையைப் பெறுவதற்கும், சமுதாயம் கற்ற உழைப்பாளர் எல்லோருக்கும் தகுந்த வேலையை அளிப்பதற்கும் முடியும். உழைப்பாளர்கள் ஒரே சீரான தகுதியைப் பெறுதவர்களாய் இருப்பதால் மனிதசக்தித் திட்டத்தின் மூலம் (Manpower-planning) மருத்துவர்கள், நர்சுகள், பொறியியலார்கள், வேளாண்மைப் பட்டதாரிகள், கைவினைஞர்கள் போன்ற பல்வேறு வகுப்பினருக்கேற்ற சிறப்புத் தேர்ச்சியையும், கல்வி மட்டத்தை யும், அளிக்க வேண்டியது அவசியமாகிறது.

மருத்துவப் பணியாள்கள்

1961ஆம் ஆண்டில் இந்தியாவில் மருத்துவக் கல்லூரிகள் 66ஆக இருந்ததிலிருந்து 1966ல் 89 ஆகவும் 1968ல் 93 ஆகவும் அதிகரித்தன. அதேபோல் மருத்துவக் கல்விக்கு அனுமதிக்கப் பட்டோரின் எண்ணிக்கை 1961ல் 7,008 ஆக இருந்ததிலிருந்து 1966ல் 11,079 ஆகவும், 1968ல் 11,500 ஆகவும் அதிகரித்தது. மருத்துவர்களின் எண்ணிக்கை 1960-61ல் 70,000மாக இருந்ததி லிருந்து 1965-66ல் 86,000 மாகவும், 1968-69ல் 1,02,000 மாகவும் அதிகரித்தது[1]. 1968-69ல் மருத்துவர்-மக்கள் தொகை விகிதம் (Doctor—Population Ratio) சுமார் 1 : 5,200 ஆக இருந்தது.

வேளாண்மைத்துறைப் பணியாள்கள்

வேளாண்மை வளர்ச்சியை மேம்படுத்த வேளாண்மை, கால்நடைப் பட்டதாரிகளுக்குச் சிறப்பான பயிற்சிகள் அளிக்க வசதிகள் விரைவாக அதிகரிக்கப்பட்டன. 1960-61ல், 51 வேளாண்மைக் கல்லூரிகளும், அவைகளில் அனுமதிக்கப்பட் டோரின் எண்ணிக்கை 5,634 ஆகவும் இருந்தது. 1966-67ல்

[1] நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் 1969-74. நகல் ப. 291.

வேளாண்மைக் கல்லூரிகளின் எண்ணிக்கை 70 ஆகவும் அதில் அனுமதிக்கப்பட்டவர்களின் வருடாந்திர எண்ணிக்கை 8,407 ஆகவும் அதிகரித்தது. அதேபோல் அந்தக் காலத்தில் கால்நடை மருத்துவக் கல்லூரிகளின் எண்ணிக்கை 17 ஆகவும், அதில் அனுமதிக்கப்பட்டவர்களின் வருடாந்திர எண்ணிக்கை 1,301 ஆக இருந்ததிலிருந்து முறையே 20 ஆகவும், 1,500 ஆகவும் அதிகரித்தது. அதே காலத்தில் வேளாண்மை, கால்நடைக் கல்விப் பட்டதாரிகளின் எண்ணிக்கை முறையே 14,000, 5,000 மாக இருந்ததிலிருந்து முறையே 32,000 மாகவும், 9,300 ஆகவும் அதிகரித்தது.

சுகாதாரம்

வருடாந்திரத் திட்டங்களையும் உள்ளடக்கிய எட்டாண்டு களில் 70, 100 படுக்கைகள் அரசு மருத்துவ மனைகளில் அதிகரிக்கப் பட்டன. இதனால் மொத்தப் படுக்கைகளின் எண்ணிக்கை 2, 55,700 ஆக இருந்தது. மூன்றும் திட்ட இலக்காகிய 54,500 படுக்கை களும் சாதிக்கப்பட்டன. மூன்றும் திட்டக் காலத்தில் 5,200 ஆரம்பச் சுகாதார நிலையங்கள் ஏற்படுத்தப்படுமென்று எதிர் பார்க்கப் பட்டது. ஆனால், 1966 மார்ச் மாத இறுதியில் 4, 631 நிலையங்களே அமைக்கப்பட்டன. 1968 செப்டம்பர் மாத முடிவில் 4,840 ஆரம்பச் சுகாதார நிலையங்கள் ஏற்படுத்தப் பட்டன. தற்போது 351 சமுதாய வளர்ச்சி வட்டாரங்களில் மட்டுமே ஆரம்பச் சுகாதார நிலையங்கள் இல்லாமலிருக்கின்றன. மூன்றும் திட்டத்தில் குடும்ப நலத்திட்டத்திற்காக (Family planning) ரூ. 27 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால், உண்மையில் ரூ. 24·86 கோடிகளே செலவிடப்பட்டன. மூன்றும் திட்ட இறுதியில் 3,676 கிராமக் குடும்ப நலத்திட்ட நிலையங்களும், 7,081 கிராமத் துணை நிலையங்களும், 1,381 நகர குடும்ப நலத்திட்ட நிலையங்களும் அமைக்கப்பட்டிருந்தன. இந் நிலையங்கள் குடும்பத் திட்ட ஆலோசனையும், சேவைகளும், அளிப்பதோடு, அதற்கான சாதனங்களையும் அளிக்கின்றன. மூன்றும் திட்டக் காலத்தில் அறுவை முறையில் கருத்தடைச் செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை 1·33 மில்லியனாக இருந்தது. 1967-68-ல் சுயமாக அறுவைமுறைக் கருத்தடைச் செய்து கொண்டவர்களின் எண்ணிக்கை 1·8 மில்லியனுக்கும் அதிகமாக இருந்தது. சுமார் 22 அகில இந்திய வானொலி நிலையங்களில் குடும்பத் திட்ட ஒலி பரப்பு அமைப்பாளர்களின் பிரிவுகள் (Family planning programming Cells) அமைக்கப்பட்டன. படக்காட்சிகள், பொருட் காட்சிகள், சுவர் விளம்பரங்கள், போன்றவைகளின் மூலம், பரந்த கல்விச் செயல் திட்டங்கள் பரவலாக்கப்பட்டன.

வீட்டுவசதி (Housing)

மூன்றும் திட்டக் காலத்தில் சமுதாயத்தின் சில முக்கிய வகுப்பினருக்கும் அரசு ஊழியர்களுக்கும் நன்மை பயக்கத் தக்க வகையில் வீட்டு வசதி பெருக, அரசு நடவடிக்கைகளை மேற்கொண்டது. மத்திய, மாநில அரசுகளின் வீட்டு வசதிக்கான திட்ட நிதி வளங்கள், பற்ருக்குறை உடையதாக இருப்பதால், ஆயுள் காப்பீட்டுக் கழகத்திலிருந்தும் கடன் வாங்கப்படுகின்றது. மூன்றும் திட்டக் காலத்தில் பொதுத்துறை நிறுவனங்களிலும், இரயில்வேக்கள், தபால், தந்தி, துறை போன்ற மத்திய மாநில அரசுகளின் துறைகளிலும், வீட்டு வசதிக்காகச் செலவழிக்கப்பட்ட முதலீடு ரூ. 300 கோடி என்று கணக்கிடப்பட்டது. இத் திட்டக் காலத்தில் தனியார் துறையில் ரூ. 1,400 கோடி முதலீடு செய்யப்பட்டதென்றும் மதிப்பிடப்பட்டது.

திட்டத்தின் குறைபாடுகள்

1. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கியமான தோல்விகளில் ஒன்ருக விளங்குவது கட்டுப்படுத்தப்படாத கடுமையான விலை உயர்வாகும். இத் திட்டக் காலத்தில் முதல் இரண்டு திட்டங்களில் இருந்த விலையேற்றத்தைவிட மிகவும் அதிகமாக விலைகள் உயர்ந்தன. இத் திட்டக் காலத்தில் பொது விலைகளின் குறியீட்டு எண் 36% அதிகரித்தது. இதற்குக் காரணமாக இருந்தது நுகர்வுப் பொருள்களின் உள்நாட்டு உற்பத்தியில் தட்டுப்பாடாகும். மேலும், பொது, தனியார் துறைகளின் முதலீடு மிக அதிகமான பாதுகாப்புச் செலவினங்கள் ஆகியவைகளினுல் மக்களிடையே வாங்கும் சக்தி அதிகரித்தது. இக் காலத்தில் உணவுப் பொருள்களின் விலைகளின் குறியீட்டு எண் 48·4%மாகவும், தொழில்சார் மூலப் பொருள்கள், செய் பொருள்கள் ஆகியவைகளின் குறியீட்டு எண் முறையே 32·6%மாகவும், 22·1% மாகவும் அதிகரித்தது. இந்தியாவில் பெரும்பாலான நுகர்வுப் பொருள்கள் வேளாண்மையிலிருந்தே கிடைப்பதால் வேளாண்மைப் பொருள் விலைகளின் அதிகரிப்பு, அதிகமான வாழ்க்கைச் செலவில் காணப்பட்டது. இதன் விளைவாகக் கூலிகள், பஞ்சப்படி, வர்த்தக இலாபங்கள் போன்றவைகளும் அதிகரித்தன. விலைகளின் உயர்வால் செயல் திட்டங்களின் செலவும் அதிகரித்ததால், திட்ட நிதி ஒதுக்கீட்டை விட உண்மை நிதி முதலீடு மிகவும் அதிகரித்தது. எனவே, திட்ட ஒதுக்கீட்டின்படி நிதி முதலீட்டுச் செயல் திட்டங்கள் அமைந்திருந்தால் இந்தியாவில் பணவீக்க அழுத்தங்கள் ஏற்பட்டிருக்காது. ஆரம்பத்தில் பற்ருக்குறை நிதியாக்கம் மிகக் குறைவாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனுல், உண்மையில் பற்ருக்குறை நிதியாக்கம் எதிர்

பார்த்ததை விட இருமடங்கு அதிகரித்து, சுமார் ரூ 1,150 கோடியாக அதிகரித்தது. இதனால் பணவீக்க அழுத்தங்கள் நாட்டில் அதிகரித்தன.

2. மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் வேலை வாய்ப்புகளை அதிகரிப்பதில் வெற்றியடைய முடியவில்லை. மக்கள் தொகையின் வளர்ச்சியின்படி இத் திட்டக் காலத்தில் சுமார் 17 மில்லியன் உழைப்பாளர்கள் வேலையில்லாதவர்களாய் இருப்பார்களென்று இந்தியத் திட்டக்குழு கணக்கிட்டது. இதில் இரண்டாம் திட்ட இறுதியில் வேலையில்லாதிருந்த 9 மில்லியன் உழைப்பாளர்கள் சேர்க்கப்படவில்லை. இவர்களையும் சேர்த்துக் கொண்டால் மூன்றும் திட்டக்காலத்தில் வேலை தேடுவோரின் மொத்த எண்ணிக்கை 26 மில்லியனாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டது. மூன்றும் திட்டம் 14 மில்லியன் புதிய வேலைகளை ஏற்படுத்த வேண்டு மென்ற குறிக்கோளைப் பெற்றிருந்தது. ஆனால், உண்மையில் சாதனை இதைவிடக் குறைவாகத்தான் இருந்தது.

திறனாய்வு

நாடு சுயபலம் கொண்ட பொருளாதாரக் கட்டத்தைப் பெற வேண்டுமென்று மூன்றும் திட்டத்தில் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், அதை எந்த அளவு, எவ்வாறு உண்மையில் பெறுவது என்பதைப் பற்றித் திட்டவட்டமாக விளக்கவில்லை. 1960-61 ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்டு 15 ஆண்டுகளில் சாதிக்கத் தக்கவற்றை மூன்றும் திட்டத்தில் வரையப்பட்ட நீண்டகால எதிர் நோக்குத்திட்டம் அடையமுயன்றது. ஆனால், சாதிக்கப் பட்டவைகளையும், தோல்விகளையும் ஆராயுமிடத்து எதிர்நோக்குத் திட்டத்தின் மூலம், எதிர்பார்க்கப்பட்ட இலக்குகளைச் சாதிக்க முடியவில்லை என்பதை உணரமுடிகிறது.

மூன்றும் திட்ட ஒருங்கிணைந்த நடவடிக்கைகள் திருப்தி கரமானதாய் இருக்கவில்லை. சராசரி வளர்ச்சி வீதம் ஆண் டொன்றுக்கு மூன்று சதவீதமாக மட்டுமே இருந்தது. இது இலக்காகிய 5 சதவீதத்திற்கும் இரண்டு சதவீதம் குறைவான தாகும். இதற்கு அநேக காரணங்களிருப்பினும் அவைகளுள் முக்கியமானவைகள் வருமாறு :

முதலாவதாக, இந்தியா போன்ற வேளாண்மை நாடுகளில் தேசிய வருவாயின் அதிகரிப்பு பெரும்பாலும் வேளாண்மை உற்பத்தி வளர்ச்சி வீதத்தைப் பொறுத்தே அமைகிறது. மூன்றும் திட்டக்காலத்தில் துரதிஷ்டவசமாக வேளாண்மைத்துறை சீராக வளர்ச்சியடையவில்லை. நிலச்சீர்திருத்தங்கள், சமுதாய

வளர்ச்சித் திட்டங்கள் போன்றவைகளின் மூலம் உற்பத்தியைப் பெருக்குவதற்கு மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் வெற்றி பெற வில்லை.

இரண்டாவதாக, இக்காலத்தில் தொழில்சார் உற்பத்தியும் எதிர்பார்த்த அளவு அதிகரிக்கவில்லை. திட்டத்தில் தொழில் உற்பத்தியின் சராசரி அதிகரிப்பு ஆண்டொன்றுக்கு 11 சதவீதமாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. உண்மையில் தொழில் உற்பத்தி மேற்குறிப்பிட்ட அளவு அதிகரிக்கவில்லை. 1961-62-ல் தொழிலுற்பத்தி 8 சதவீதமாகவும், 1962-63-ல் 7·7 சதவீதமாகவும், 1963-64-ல் 8·5 சதவீதமாகவும், 1964-65-ல் 7 சதவீதமாகவும், 1965-66-ல் 7·3 சதவீதமாக மட்டும்தான் அதிகரித்தது. குறிக்கப்பட்ட இலக்காகிய 11 சதவீதத்தைத் தொழிலுற்பத்தி அடைய முடியவில்லை. திட்டத்தின் முதல் இரண்டாண்டுகளில் நிலக்கரி, ஆக்கசக்தி, போக்குவரத்து போன்றவைகளில் ஏற்பட்ட கடுமையான பற்றுக் குறைகளினால் தொழில் உற்பத்தி வளர்ச்சி மிகவும் குறைவாக இருந்தது.

மூன்றுவதாக, முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் விளைவாக ஒரு சிலரிடமே செல்வம் பெருமளவில் குவிந்ததால் வளர்ச்சி வீதம் மூன்றும் திட்டத்தில் குறைந்தது. இத் திட்டங்கள் இந்தியப் பொருளாதாரத்தில் சர்வாதீனத்தையும், பொருளாதாரச் சக்தியையும், ஒரு சிலரிடம் வலுப்படுத்திப் பெருமளவில் ஊக்குவித்தது.

நான்காவதாக, மூன்றும் திட்டத்தில் சமச்சீரான பிராந்திய வளர்ச்சியைச் சாதிக்க வேண்டுமென்று பெரிதும் வலியுறுத்தப் பட்டிருந்தது. ஆனால், மூன்றும் திட்டம் பிராந்திய ஏற்றத் தாழ்வுகளை அகற்றும் பணியில் தகுந்த வெற்றி பெறமுடியவில்லை. செல்வ மாநிலங்களுக்கும் ஏழை மாநிலங்களுக்குமிடையே வருவாய் ஏற்றத்தாழ்வுகள் பெருமளவில் அதிகரித்தன. இது உண்மையில் 100 சதவீதத்திற்கும் அதிகமாக இருந்ததென்று திரு. K. N பட்டச்சார்யார் குறிப்பிடுகிறார்.[1]

ஐந்தாவதாக, மூன்றும் திட்டம் கீழ் மட்டத்திலிருந்து மேல் மட்டம்வரை ஆராயப்பட்டுத் தயாரிக்க பட்டதென்று கூறப் பட்டது. அதாவது திட்டம் கிராம மட்டத்திலிருந்து துவங்கி மாவட்ட மட்டம், மாநில மட்டம், ஆகிய கட்டங்களில் ஆராயப் பட்டு, பின் திட்டக்குழுவால் ஒருங்கிணைக்கப்படுமென்றும் கருதப் பட்டது. ஆனால், நடைமுறையில் முதலிரு திட்டங்களைப்

[1] K. N. பட்டச்சாரியார், இந்தியாவின் நான்காம் திட்டம்—வளர்ச்சி முறைத்தன்மையில் சோதனை, ப 29.

போலவே மூன்றும் திட்டம் திட்டக்குழுவால் நாட்டின்மீது திணிக்கப்பட்டது. இதன் விளைவாக இத் திட்டம் மக்களின் ஆர்வத்தையும் ஒத்துழைப்பையும் பெறத் தவறிவிட்டது.

ஆனால், தோல்விகளும் குறைபாடுகளும் காணப்பட்ட போதிலும், பொருளாதாரத்தில் சில அமைப்புச்சார் மாறுதல்கள் ஏற்பட்டதை நாடு உணர்ந்தது. ஜனநாயகத் திட்டத்தை (Democratic planning) நடைமுறைப் படுத்துவதன்மூலம் மக்களின் வாழ்க்கை நிலையைச் சீர்படுத்த நாடு போராடிக் கொண்டிருப்பதை மக்கள் உணரும் நிலையேற்பட்டது.

# 43. வருடாந்திரத் திட்டங்கள்

## (Annual Plans)

மூன்றும் திட்டம் முடிவுற்றதிலிருந்து இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்கள் தாற்காலிகமாக நிறுத்திவைக்கப் பட்டன. இந்தியப் பொருளாதாரத்திற்குத் திட்ட விடுமுறை (Plan holiday) அளிக்கப்பட்டது. முறையான ஐந்தாண்டுத் திட்டங் களுக்குப் பதிலாக தாற்காலிகமான வருடாந்திரத் திட்டங்கள் நடைமுறையில் கொண்டுவரப்பட்டன.

## I. வருடாந்திரத் திட்டம் (1966-67)

வருடாந்திரத் திட்டம் நாடாளு மன்றத்திற்கு ஏப்ரல் 7, 1966-ல் சமர்ப்பிக்கப்பட்டது. வருடாந்திரத் திட்டத்தைத் தீட்டும் போது மூன்றும் திட்ட முன்னேற்றத்தில் "போதிய வளர்ச்சி யடையாத", "எதிர்பார்த்ததிற்கும் குறைவான வளர்ச்சியடைந்த" அம்சங்களைத் திட்டக்குழு கருத்தில் கொண்டது. வருடாந்திரத் திட்டம் வளர்ச்சித் திட்டம் என்பதைவிட ஓர் ஒருங்கிணைப்புத் திட்டமாகவே இருந்தது. தொடர்ந்து நடைமுறையில் இருக்கும் திட்டங்களுக்காக ஒவ்வொரு துறையிலும் பெருமளவு நிதி ஒதுக்கப்பட்டது.

1966-67ன் திட்டத்திற்காக ரூ. 2,080 கோடி மொத்த முதலீடாக ஒதுக்கப்பட்டது. இத் தொகையில் மத்தியத் துறைக்கு ரூ. 1,155 கோடியும், மாநிலங்களின் துறைகளுக்கு ரூ. 976 கோடியும் செலவு செய்யப்பட நிதி ஒதுக்கப்பட்டது. வேளாண்மையிலும் தொழில் துறையிலும், வளர்ச்சியடைந்து முடிவுறும் நிலையிலிருக்கும், திட்டங்களுக்கு இவ் வருடாந்திரத் திட்டம் சிறப்பிடம் அளித்தது.

### திட்ட நிதியாக்கம்

உள்நாட்டு வரவு—செலவுத் திட்ட வளங்களின் மூலம் சுமார் ரூ. 1,488 கோடி இத் திட்டத்திற்கு கிடைக்குமென்று கூறப்

பட்டது. வெளியுதவியின் மூலமாகச் சுமார் ரூ. 581 கோடி பெற முடிவுமென்றும் கருதப் பட்டது. பற்றுக் குறை நிதியாககத்தின் மூலம் ரூ 12 கோடி மட்டுமே பெற வேண்டுமென்றும் கூறப் பட்டது. கூடுதல் வரி விதிப்பு, பொதுத் துறை நிறுவனங்களின் உபரி நிதி, ஆகியவைகளின் மூலம் ரூ. 422 கோடிகளைச் சேகரிக்க முடியுமென்றும் மொழியப்பட்டது. திட்டத்தின் அடுத்த 7 முதல் பத்தாண்டுகளுக்குள் பெருமளவு வெளிநாட்டு உதவியைக் குறைத்து விடவேண்டுமென்றும் திட்டக் குழு பெரிதும் வலியுறுத்தியது.

## திட்டச் சாதனைகளின் ஆய்வுரை

1966-67-ல் தேசிய வருவாய் (உண்மை மதிப்பில்) மிகவும் குறைந்த அளவாகிய 0·9 சதவீதமாக மட்டுமே அதிகரித்தது. இவ்வருடாந்திரத் திட்டம் 95 முதல் 97 மில்லியன் டன் உணவுத் தானியங்களைப் பெற வேண்டுமென்ற இலக்கைப் பெற்றிருந்தது. இதற்காகச் சுமார் 6 மில்லியன் ஏக்கர் நிலத்தில் அதிக விளைச்சல் வகைத் திட்டங்களை மேற்கொள்ள வேண்டுமென்றும், 1 லட்சம் டன் உரங்களையும் கூடுதலாக இறக்குமதி செய்யவேண்டுமென்றும், மொழியப்பட்டது. உழவர்களுக்குக் கடன் வசதிகளை விரிவாக்க வேளாண்மைக் கடன் கழகத்தின் கிளைகளை அதிகரிக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது.

வருடாந்திரத் திட்டம் எல்லா விதத்திலும் மிகச் சிறிய திட்டமாக இருந்தது. அத்தகைய ஒரு சிறு திட்டத்திற்கும், மாநில அரசுகள் ரூ. 21 கோடி கூடுதல் வருவாயைச் சேகரிக்க ஆர்வமின்றி இருந்தனர். இத் திட்டக்காலத்தில் சமூகப் பணித் துறை புறக்கணிக்கப்பட்டது. கல்வி வளர்ச்சிக்காக மிகச் சிறிய தொகையே ஒதுக்கப்பட்டது.

நிதி முதலீட்டில் இலக்குகள் எதிர்பார்த்ததைவிட அதிகமாகச் சாதிக்கப்பட்டன. முதலில் ஒதுக்கப்பட்ட முதலீடாகிய ரூ. 2,081 கோடிக்குப் பதிலாக திட்டக்காலத்தில் உண்மை முதலீடு ரூ. 2,228 கோடியாக இருந்தது. ஆனல் அநேக இயற்பொருள்சார் இலக்குகளில் அதிகப் பற்றுக் குறையேற்பட்டது. சான்ருக உணவுத் தானியங்களின் இலக்கு 97 மில்லியன் டன்களாகக் குறிக்கப் பட்டிருந்தது. ஆனல், திட்டக்கால இறுதியில் உண்மை உற்பத்தி 76 மில்லியன் டன்களாக இருந்ததென்று கணக்கிடப்பட்டது. எனவே, உண்மை உற்பத்தி எதிர்பார்த்த உற்பத்தியைவிட 21 மில்லியன் டன் குறைந்தது பாதகமான தட்பவெப்ப நிலைகளினல் இந் நிலையேற்பட்டது. இக் காலத்தில் நாட்டின்

அநேக பகுதிகளில் வளர்ச்சி நிலை இருந்துவந்தது. பீஹார், உத்திரப் பிரதேசம். ஆகிய மாநிலங்களில் வறட்சிநிலை கடுமையாக இருந்தது. இத் திட்டக்காலத்தில் கூடுதல் நீர்ப்பாசன வசதிகளின் இலக்கு 6·5 மில்லியன் ஏக்கர்களாக (பெரிய, நடுத்தரத் திட்டங்கள்) குறிக்கப்பட்டது. ஆனால் உண்மைச் சாதனை 5.5 மில்லியன் ஏக்கர்கள் என்று கணக்கிடப்பட்டது. இத் திட்டக் காலத்தில் (அதிக விளைச்சல் ரக) சீரான உணவு தானிய விதைகளைப் பயன்படுத்திய நிலப்பரப்பின் அளவு 1965-66-ல் 120 மில்லியன் ஏக்கர்களாக இருந்ததிலிருந்து 1966-67-ல் 140 மில்லியன் ஏக்கர்களாக அதிகரித்தது. இந்த வகையில் முன்னேற்றம் மிகவும் திருப்திகரமானதாக இருந்தது.

தொழில் துறையிலும் முன்னேற்றம் ஆர்வமளிப்பதாக இருக்கவில்லை. இக் காலத்தில் எஃகுப்பாளங்களின் இலக்கு 7 மில்லியன் டன்களாகக் குறிக்கப்பட்டது. ஆனால், எஃகுப் பாளங்களின் உற்பத்தி 1965-66ல் 6·2 மில்லியன் டன்களாக இருந்ததிலிருந்து 1966-67-ல், 6·4 மில்லியன் டன்களாக மட்டுமே அதிகரித்தது. சிமெண்டு, நிலக்கரி, துணி, போன்ற மற்ற அநேக அம்சங்களின் உற்பத்தியிலும் பற்றுக்குறையேற்பட்டது. சிமெண்டு உற்பத்தியின் இலக்கு 12·5 மில்லியன் டன்களாகக் குறிக்கப்பட்டிருந்தது. ஆனால் உண்மை உற்பத்தி 11·05 மில்லியன் டன்களாக இருந்ததென்று கணக்கிடப்பட்டது. இவ்வருடாந்திரத் திட்டக்காலத்தில் (1666-67) தொழில் பின்னிறக்கம் (Industrial recession) ஏற்பட்டது. இதனால் வேலையின்மைப் பிரச்சினை தீவிரமாக அதிகரித்தது.

## II. வருடாந்திரத் திட்டம் (1667-68)

1967-68க்கான திட்டத்தில் மொத்த முதலீடு முதலில் 2,246 கோடியாகக் குறிக்கப்பட்டது. அதன்பின் இத் தொகை 2,240 கோடியாகத் திருத்தப்பட்டது. ஆனால், இத் திட்டக்கால உண்மைச் செலவு ரூ. 2,100 கோடியாக இருந்தது. இத் தொகையில் மத்திய, மாநில அரசுகள், மத்திய அதிகாரப் பகுதிகள் (Union Territories) ஆகியவைகளுக்கு முறையே ரூ. 1,030 கோடி, ரூ. 1,022 கோடி ரூ. 58 கோடி ஒதுக்கப்பட்டது. 1967—68 ஆம் ஆண்டில் உண்மைத் திட்டச்செலவு மேலும் குறைந்தது. 1966—67ன் திட்டத்தைப் போலவே இவ்வருடாந்திரத்திட்டமும், ஏற்கெனவே நடைமுறையில் இருந்த திட்டங்களைத் தொடர்ந்து வளர்ச்சியடையச் செய்து முடிவுறச் செய்யப் பெருமளவு தொகையை முதலீடு செய்தது.

## சிறப்பு வரிசைகளும் திட்டச்செலவின் பங்கீடும்

ஏற்றுமதிப் பெருக்கம், இறக்குமதிப் பதிலீடு ஆகிய கொள்கைகளுக்கேற்ற வகையில் இத் திட்டக் காலத்தில் திட்டங்களும், நடவடிக்கைகளும், தேர்ந்தெடுக்கப்பட்டன. வேளாண்மை உற்பத்தி, அதைச் சேர்ந்த செயல் திட்டங்கள், சமூகப் பணிகள், குடும்ப நலத்திட்டம் ஆகிய துறைகளுக்குச் சிறப்பு வரிசை அளிக்கப்பட்டது. ஆக்க சக்தி, 'போக்குவரத்து, செய்தித் தொடர்பு, போன்ற சமூக நல அமைப்பு வசதிகளை விரிவாக்கவும் இத் திட்டம் வகைசெய்தது. தொழில், சுரங்கத் துறைகளில், தொழிலடிப் படையை ஒருங்கிணைக்கவும், ஓரளவு வளர்ச்சியை ஏற்படுத்தவும் வகைசெய்யப்பட்டது.

1967-68-ல் செலவிடப்பட்ட மொத்தத் திட்டத் தொகையின் பங்கீடு கீழ்க்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

### திட்டச்செலவின் பங்கீடு

| அம்சங்கள் | | சதவீதம் |
|---|---|---|
| 1. வேளாண்மைத் திட்டங்கள் | ... | 11·87 |
| 2. சமுதாய வளர்ச்சியும் கூட்டுறவும் | ... | 3·34 |
| 3. பெரிய, நடுத்தர, நீர்ப்பாசனம் (வெள்ளக் கட்டுப்பாடு உட்பட) | ... | 6·92 |
| 4. ஆக்க சக்தி | ... | 18·74 |
| 5. தொழிலும் சுரங்க வேலையும் | ... | 22·60 |
| 6. கிராம, சிறு தொழில்கள் | ... | 2·10 |
| 7. போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் | ... | 18·83 |
| 8. சமூகப் பணிகள் | ... | 14·14 |
| 9. மற்றத் திட்டங்கள் | ... | 1·50 |
| | | 100·00 |

திட்டத்திற்கான நிதியாக்கம்

மத்திய, மாநில அரசுகளின் 1967-68-ற்கான உள்நாட்டு வரவு செலவுத்திட்ட நிதிவளங்கள் சுமார் ரூ. 896 கோடியாக இருந்தன. இது இவ்வருடத்திற்கான மொத்தத் திட்டச் செலவில் 42·9 சதவீதமாகும். வெளி உதவிகளின்படி வரவு-செலவுத்

திட்ட முறை வழியாக ரூபாய் 970 கோடி கிடைத்தன. இது மொத்தத் திட்டச் செலவில் 46·4 சதவீதமாகும். திட்டச் செலவில் பற்றுக்குறையுடையத் தொகையாகிய ரூ. 224 கோடி. (மொத்த செலவில் 10·7 %) யைச் சரிசெய்ய பற்றுக்குறை நிதியாக்கம் மேற்கொள்ளப்பட்டது. 1966—67ல் மத்திய, மாநில அரசுகள் மேற்கொண்ட நடவடிக்கைகளால் 1967—68-ல் ரூ. 167 கோடி கூடுதல் நிதிகிடைத்தது. 1967—68-ல் மாநில அரசுகளால் சேகரிக்கப்பட்ட நிகர கூடுதல் நிதி ரூ. 22·6 கோடியாக இருந்தது. அதே காலத்தில் மாநிலத் திட்டங்களுக்குக் கிடைத்த மத்திய நிதி உதவி ரூ. 580 கோடியாகும். இவ்வாண்டில் மாநில அரசுகள் தங்கள் அதிகப்பற்றுக் கடன்களைத் (Overdrafts) தீர்க்க மத்திய அரசு தாற்காலிகக் கடனாக ரூ. 118 கோடியை மாநில அரசுகளுக்கு அளித்தது.

திட்டத்தின் முன்னேற்றம்

1967-68ல் தேசியவருவாய், உண்மை மதிப்பில் 8·9 சதவீதம் அதிகமாக இருந்தது. ஆனால், இது 1965—66ல் 5·6 சதவீத மாகக் குறைந்தும் 1966-67-ல் 0·9 சதவீதம் அதிகரித்தது. 1966-67-ல் உண்மை வருவாயின் அளவு மிகவும் தேக்கமடைந் திருந்ததால் 1967—68-ல் வளர்ச்சி வீதம் அதிகரித்தது. இவ் வருடாந்திரத் திட்டத்தின் இரண்டாம் பகுதியில் வேளாண்மை உற்பத்தியின் அளவு மிகவும் அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப் பட்டது. அதாவது உணவு தானியங்களின் உற்பத்தி இத் திட்டத் தில் 95 மில்லியன் டன்களாக இருக்குமென்று கணக்கிடப்பட்டது. ஆனால், இது 66—67ன் இறுதி கணக்கீட்டின்படி 75 மில்லியன் டன்களாகவும், இருந்தது. இது 26·7 சதவீத அதிகரிப்பைக் குறிக்கிறது.

அக்டோபர் 1967-ன் மத்திய காலம் வரைக்கும் பொருள் களின் விலைகள் தொடர்ந்து அதிகரித்தன. புதிய கோடை அறுவடையினால் உணவு தானியங்களின் அளிப்பு அதிகரித்ததால், பொருள்களின் விலைகள் ஓரளவு குறைந்தன. அளிப்பு அதிகரித்த தால் வேளாண்மைப் பொருள்கள், வேளாண்மை சார்ந்த தொழில் பொருள்கள் ஆகியவைகளின் ஏற்றுமதி சீரடைந்தது. புதுவகைப் பொருள்களின் ஏற்றுமதி அதிகரித்தது. பின்னிறக்கம் தொடர்ந்து ஏற்பட்டதால், சில தொழில்களில் இறக்குமதி குறைந்து இறக்குமதிப் பதிலீட்டு நடவடிக்கைகள் மேலும் சீரடைந்தன. இதன் விளைவாகச் செலுத்து இருப்பு நிலையில் நிலைமை முன்னைய காலத்தைவிடச் சீரடைந்தது.

தேசியவருவாய் வளர்ச்சி வீதம் கணிசமான அளவு அதிகரித்த போதிலும் உள் நாட்டுச் சேமிப்பு வீதம் மேலும் குறைந்தது. பொருளாதாரத்தின் முதலீட்டு வீதம் 1966—67-ல் 11·8 சதவீத மாக இருந்ததிலிருந்து 1967—68-ல் 11·3 சதவீதமாகக் குறைந்தது. 1967—68-ல் வெளி உதவி மொத்தத் தேசிய வருவாயில் 3·5 சதவீதமாக இருந்தது. 1966—67-ல் இது 3·6 சதவீதமாக இருந்தது.

## III. வருடாந்திரத் திட்டம் (1968-69)

1968—69-க்கான வருடாந்திரத் திட்டத்தில் ரூ. 2,337 கோடி மொத்தச் செலவாக குறிக்கப்பட்டது. இதில் மத்திய, மாநில அரசுகள், மத்திய அதிகாரப் பகுதிகள், ஆகியவைகளுக்கு முறையே ரூ. 1319·73 கோடி, ரூ 952·33 கோடி, ரூ. 65·37 கோடி ஒதுக்கப் பட்டு மொத்த முதலீடு ரூ. 2,337·43 கோடியாக இருந்தது.

இத் திட்டத்தின் முக்கியமான அம்சம், உணவுதானிய இருப் பபை (Buffer-Stock) ஏற்படுத்துவதற்காக ரூ. 140 கோடி தனியாக ஒதுக்கப்பட்டதாகும். 1967—68-ல் இருந்த தேசிய வருவாய் (உண்மை மதிப்பில்) 1966—67-ல் இருந்த உண்மை வருவாயைவிட 9 சதவீதம் அதிகமாகும். சாதகமான தட்ப வெப்ப நிலையும், தொழில் உற்பத்தியின் மீட்சியும், எதிர்பார்த்தபடி ஏற்பட்டால் 1968—69ல் 5 சதவீத வளர்ச்சி வீதத்தை அடைய முடியுமென்று குறிப்பிடப்பட்டது.

எனவே, உணவு தானிய உற்பத்தியில் எதிர் பார்க்கப்பட்ட வளர்ச்சிவீதம் 7·4 சதவீதமாகவும், தொழில் துறையில் 5 முதல் 6 சதவீதமாகவும் திட்டமுடிவில் இருக்குமென்று கணக்கிடப் பட்டது. உள்நாட்டுச் சேமிப்புவீதம், மொத்தத் தேசியவருவாயில் 8·5 சதவீதமாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. இதற்கு மாறாக வெளி உதவி தேசிய வருவாயில் 3 சதவீதம் குறைவாக இருக்குமென்றும் கணக்கிடப்பட்டது.

திட்டத்தின் ஒருங்கிணைந்த குறிக்கோள் பணவீக்க அழுத் தங்களை ஏற்படுத்தாமல் முறையான வளர்ச்சி வீதத்தைப் பெறுவ தாகும். வளங்களின் நிலை கடினமாக இருந்ததால் சமூக நலனை மேம்படுததும் அமைப்புகளை முழு அளவில் பயன்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும் கூறப்பட்டது.

## சிறப்பு வரிசைப்பாங்கும் செலவினங்களின் பங்கீடும்
## (Priority Pattern and Distribution of outlay)

1968—69க்கான திட்டத்தில் வளர்ச்சி துறைவாரியாக ஒதுக்கப்பட்ட முதலீட்டின் பங்கீடு கீழ்க்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

### செலவினங்களின் பங்கீடு

| துறைகள் | | ரூபாய் கோடிகளில் |
|---|---|---|
| 1. வேளாண்மை, கூட்டுறவு, சமுதாயவளர்ச்சி | ... | 327·73 |
| 2. நீர்ப்பாசனமும் ஆக்க சக்தியும் | ... | 493·49 |
| 3. அமைப்புடைய தொழிலும் தாதுப் பொருள்களும் | ... | 539·33 |
| 4. கிராம, சிறுதொழில்கள் | ... | 41.41 |
| 5. போக்கு வரத்தும் செய்தித் தொடர்பும் | ... | 426·16 |
| 6. சமூக பணிகள் | ... | 347·39 |
| 7. மற்றச் செலவினங்கள் | ... | 21·85 |
| 8. தானிய இருப்புச் சரக்கு | ... | 140·00 |
| | மொத்தம்— | 2,337.36 |

வேளாண்மை, வேளாண்மை வளர்ச்சிக்கு நேரடியாக வகை செய்யும் வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு உயர்சிறப்பிடம் அளிக்கப் பட்டது. 1966-67-ல் உட்புகுத்தப்பட்ட புது வேளாண்மைக் கொள்கை (Agricultural Strategy) இத் திட்டக் காலத்திலும் தொடர்ந்து பின்பற்றப்பட்டது. அதாவது செறிந்த முறைத் திட்டங்கள், அதிக விளைச்சல் ரக, பல் நோக்குப் பயிர்த்திட்டங்கள், போன்ற தீவிர வேளாண்மை நடவடிக்கைகளின் மூலம், வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கத் தகுந்தத் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. விரைவாகப் பலனளிக்கும். சக்தி உள்ள நீர்ப்பாசனத் திட்டங்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. கிராம மின்வசதியோடு இணைந்த சிறு நீர்ப்பாசனத் திட்டங்களில் அதிக கவனம் செலுத்தப்பட்டது. பருவகால மழை தவறுவ தால் வேளாண்மை உற்பத்தி குறைந்து விடாமல் இருப்பதைத் தடுக்க இத்தகைய நடவடிக்கைகள் மிகவும் இன்றியமையாதவை களாக விளங்குகின்றன.

இத் திட்டக் காலத்தில் தொழில்களை விரைவாக வளர்ச்சியடையச் செய்வதே உடனடியான செயல் திட்டமாகக் கருதப்பட்டது. திட்டத்திற்கு முற்பட்ட இரண்டாண்டுகளில் தொழில் வளர்ச்சி மிகவும் குறைவாக இருந்ததால் இவ் வருடாந்திரத் திட்டக் காலத்தில் இத் துறையில் கவனம் செலுத்தப்பட்டது. இக் குறிக்கோள்களைச் சாதிக்க 1968-69-ல் தொழில்களின் நடப்பு ஆக்க சக்தியை முழு அளவில் பயன்படுத்த முயற்சிகள் எடுக்கப்பட்டன. பொதுத்துறைத் திட்டங்களின் செயல் முறைகளையும் திறமையையும் சீர்படுத்தவும், உரங்கள், டீசல் இயந்திரங்கள், டிராக்டர்கள், கிருமி நாசினிகள், போன்ற வேளாண்மை உள்ளீடுகளை உற்பத்தி செய்யும் தொழில்களில் முதலீட்டை அதிகரிக்கவும், வகை செய்யப்பட்டது.

ஆக்க சக்தி, போக்குவரத்து, செய்தித் தொடர்பு போன்ற முக்கிய சமூக நலத் துறைகளில் ஏற்கெனவே அமுலிலிருந்த திட்டங்களை வெகு விரைவில் முழுமையாக்க வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. குடும்பநலத் திட்டத்தின் நடவடிக்கைகளை அதிகரிக்க செலவினங்கள் அதிகரிக்கப்பட்டன.

### நிதியாக்கம்

இவ் வருடாந்திரத் திட்டத்திற்கு நிதியிட மத்திய, மாநில அரசுகள், உள்நாட்டு வரவு செலவுத்திட்ட நிதிவளங்களின் மூலம் சுமார் ரூ. 1,154 கோடியைப் பெற முடியுமென்று எதிர்பார்க்கப்பட்டது. வெளி உதவியின்படி வரவு செலவுத் திட்ட வருவாய் மூலம் ரூ. 876 கோடி கிடைக்குமென்று கணக்கிடப்பட்டது. மொத்தத் திட்டச் செலவில் ஏற்பட்ட பற்றுக் குறையாக ரூ. 307 கோடி பற்றுக் குறை நிதியாக்கத்தின் மூலம் சரிசெய்யப்படுமென்று எதிர்பார்க்கப்பட்டது.

### இயற்பொருள் இயக்கம் (Physical Targets)

1968-69-க்கான எதிர்பார்க்கப்பட்ட முக்கிய இலக்குகளும் 1967-68-ன் அடைந்த கணக்கீடும், கீழ்க்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன. (அட்டவணை: பக்கம் 209 பார்க்க)

### திட்டத்தின் முன்னேற்றம்

இத் திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப்பட்ட உணவு தானிய உற்பத்தியின் இலக்கு 102 மில்லியன் டன்களாக இருந்ததற்குப் பதிலாக உண்மை உற்பத்தி 96 மில்லியன் டன்களாகவே இருந்தது. எனவே, இவ்வாண்டில் உணவு தானியங்களின் உற்பத்தி 6 மில்லியன் டன் குறைந்தது. தொழில் துறையிலும்

| | அம்சங்கள் | அலகு | அடையப்பட்ட கணக்கீடுகள் (1967-68) | இலக்கு (1968-69) |
|---|---|---|---|---|
| 1. | உணவுதானியங்கள் | மில்லியன் டன்களில் | 96 | 102 |
| 2. | கரும்பு | ,, | 9·90 | 12·50 |
| 3. | அதிகவிளைச்சல் தரும் ரகங்களின் திட்டங்கள் | மில்லியன் ஏக்கர்களில் | 15 | 21 |
| 4. | எஃகு பாளங்கள். | மில்லியன் டன்களில் | 6·35 | 7·5 |
| 5 | சிமெண்டு | ,, | 71 | 75 |
| 6. | சர்க்கரை | இலட்சம் டன்களில் | 22·2 | 29·0 |

கூட எதிர்பார்த்த இலக்குகள் சாதிக்கப்படவில்லை. சான்றாக எதிர்பார்க்கப்பட்ட 7·5 மில்லியன் டன் இரும்புப்பாள உற்பத்திக்குப் பதிலாக உண்மை உற்பத்தி 6·4 மில்லியன் டன்களாக இருந்தது. அதேபோல் நிலக்கரியின் உற்பத்தி 75 மில்லியன் டன்களாக இருக்க வேண்டியதற்குப் பதிலாக உண்மை உற்பத்தி 69·5 மில்லியன் டன்களாக மட்டுமேயிருந்தது.

# 44. நான்காம் ஐந்தாண்டுத் திட்டம்

## 1969—74

## (Fourth Five-year Plan)

இந்தியாவின் ஆரம்ப நான்காம் திட்டம் (1966-71) மே, 1964-ல் தீட்டப்பட்டது. ஆனல், இந்தியா-பாகிஸ்தான் சச்சரவு, ரூபாய்-நாணய மதிப்புக் குறைப்பு, அடுத்தடுத்துத் தோன்றிய வறட்சி நிலை (droughts), பின்னிறக்கங்கள் (recessions) ஆகியவை களால் அவ்வப்போது தடைகள் ஏற்பட்டு இத் திட்டம் ஒரு முடிவான கட்டத்தைப் பெறவில்லை. அதன்பின் ஆரம்பத் திட்டத்தை விடுத்துப் புதிய நான்காம் திட்டத்தைத் திட்டக்குழு தீட்ட முனைந்தது. இக் குழு நான்காம் திட்ட நகலை '1969-74-ற் கான நான்காம் திட்ட நோக்க முறைகள்' என்ற பெயருடன் தயாரித்து வெளியிட்டது. பின்பு, இந் நகல் சம்பந்தப்பட்டவர் களால் விவாதிக்கப்பட்டு, 1968-ல் தேசிய வளர்ச்சிச் சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இந் நகலை அடிப்படையாகக் கொண்டு திருத்தப்பட்ட நான்காம் திட்டக் குறிப்பீட்டைத் திட்டக்குழு தயாரித்தது. மாநிலத் துறைகளின் திட்டங்கள் மேலும் பெரிய அளவு இருக்கவேண்டுமென்று கோரப்பட்டதால் இந்த நகல் திட்டம் மேலும் அதிகரிக்கப்பட்டுத் திருத்தப்பட்ட நான்காம் திட்டம் கடைசியில் தேசிய வளர்ச்சிச் சபையால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, மே 18, 1970-ல் நாடாளுமன்றத்தில் சமர்ப்பிக்கப் பட்டது.

### 1980-81 ன் எதிர் நோக்குத் திட்டம்

### (Perspective plan)

நான்காம் திட்டக் குறிப்பீடுகளுடனேயே ஒரு நீண்ட கால எதிர்நோக்கு ஆய்வும் (1980-81) மேற்கொள்ளப்பட்டது. அதன் படி நான்காம் திட்டக்கால நடவடிக்கைகள், முதலீடுகள், ஆகியவை களின் அளவைப் பொறுத்துத்தான் ஐந்தாம் திட்ட (1974-79) உற்பத்தி அதிகரிப்புத் தீர்மானிக்கப்படமுடியும் என்று அறியப்

பட்டது. அதன்படி பல்வேறு அம்சங்களைக் கருத்தில் கொண்டு ஆராய்ந்தால் ஐந்தாம் திட்டத்தில் ஆண்டொன்றுக்கு 6·6 சதவீத வளர்ச்சியைச் சாதிக்கமுடியுமென்றும் கருத்துத் தெரிவிக்கப் பட்டது. இவ்வாய்வின்படி (1968-69 விலைகளில்) 1980-81–க்குள் நிகர உள்நாட்டு உற்பத்தி (Net domestic product) ரூ. 58,200 கோடியாக இருக்கும் என்றும் கணக்கிடப்பட்டது. இது 1968-69-ன் அளவைவிட இருமடங்கு அதிகமாகும். அதே காலத்தில் மூன்றில் ஒரு பகுதியாக மக்கட்தொகை அதிகரிக்கு மாதலால் 1980-81-ல் ஒரு நபர் உற்பத்தி (Per Capita output) ரூ. 844 ஆக அதிகரிக்கும். இது 1968-69-ல் ரூ. 552 ஆக இருந்தது; இது 53% அதிகரிப்பைக் குறிக்கிறது.

நான்காம் திட்டத்தைப் போலவே ‘நிலையான வளர்ச்சியை’ (Growth with stability) அடைய வேண்டுமென்பதே எதிர் நோக்குத் திட்டத்தின் குறிக்கோளாகும். அதாவது நுகர்வுப் பொருள்களின் தேவைகளின் அதிகரிப்பிற்கேற்ப இப் பொருள் களின் அளிப்பை அதிகரிக்கக் குறிப்பிட்ட முதலீட்டின் அளவை நிலைநாட்ட வேண்டியது இன்றியமையாததாகும் இவ்வாய்வின் படி நுகர்வுப் பொருள்களின் தேவை ஆண்டொன்றுக்கு 4·7 சதவீதம் என்ற வீதத்தில் அதிகரிக்கும். எனவே, பண்ணைப் பொருள்களின் உற்பத்தியை ஆண்டொன்றுக்கு 5 சதவீதமாக அதிகரிக்க வேண்டியதும் மிகவும் அவசியமாக விளங்குகிறது.

இவ்வாய்வின்படி சுரங்கம், செய்பொருள் ஆகிய தொழில் களின் நிகர உற்பத்தி ஆண்டொன்றுக்கு 9 சதவீதமாக ஒருங் கிணைந்த அதிகரிப்பைப் பெறவேண்டும் என்றும் கணக்கிடப் பட்டது. நீண்டகால வளர்ச்சித் திட்டங்கள் 1980-81-க்குள் வெளிநாட்டு உதவியைச் சார்ந்திருக்கும் நிலையை நீக்குவதற்குப் பெரும் துணைபுரியும்.

## நான்காம் திட்டத்தின் பொதுக் குறிக்கோள்கள்

திருத்தப்பட்ட நான்காம் திட்டத்தின் பிரதான குறிக்கோள் நிலைபேறுடையதும், சமூக நீதியைக் கொண்டதுமான பொருளா தார வளர்ச்சியைப் பெறுவதாகும். நிலைபேறு என்பது பல்வேறு அம்சங்களைக் குறிக்கிறது. அவைகளுள் மிக முக்கியமானது விலை நிலைபேறாகும் (Price stability). விலைகளில் பணவீக்க அதிகரிப்பு இல்லாத பொருளாதார வளர்ச்சியை மிக விரைவாக அடைவதே திட்டத்தின் குறிக்கோளாகும். ஏனெனில் விலைகளின் ஏற்றம் நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியின் போக்கை எப்போதும் சீர்குலைக்கச் செய்கின்றது. நிலையான விலைகளோடு

கூடவே சமூக நீதியையும் நிலைநாட்ட வேண்டுமென்று நான்காம் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது. திட்டக் குறிப்பீட்டில் கூறப்பட்டிருப்பதுபோல், "இந்தியத் தேசியத் திட்டத்தின் குறிக்கோள் தலாவருவாயை அதிகரிப்பது மட்டுமல்ல; திட்டத்தின் நன்மைகள் எல்லோருக்கும் சமமாகப் பங்கிடப்பட்டு, வருமான, வாழ்க்கை ஏற்றத்தாழ்வுகள் மேலும் அதிகரித்து விடாமல் குறைக்கச் செய்வதுமாகும். அப்போதுதான் ஜனநாயக நாட்டில் சமூகப் பூசல்கள் ஏற்பட்டு பொருளாதார வளர்ச்சிமுறை தடைபடாமல் இருக்கமுடியும்." நிதிமுறை, மற்றக் கொள்கைகள் செல்வக் குவிப்பு, ஆடம்பர நுகர்வு, ஆகியவைகளைத் தடுத்துச் சேமிப்பைப் பெருக்க வகைசெய்யவேண்டும். "பொது நிதிசார் மற்ற நிறுவனங்களின் கொள்கைகளும், நடவடிக்கைகளும், திட்டத்தின் நன்மைகள் எல்லோருக்கும் பரவலாக்கப்பட வகை செய்யவேண்டும்." எனவே வருமான, செல்வப் பங்கீட்டில் காணப்படும் தீவிர ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க வேண்டுமென்ற நோக்கத்தை இத் திட்டம் பெற்றுள்ளது மிகவும் பொருத்தமான தாகும்.

கிடைக்கும் நுட்பத்தொழில், நிதிகள் ஆகிய வளங்களைக் கொண்டு ஓர் உயர்வளர்ச்சி வீதத்தை அடையத்தக்க வகையில் நான்காம் திட்ட வளர்ச்சித் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இருக்கும் ஆக்கசக்தி, உருவாக்கத்தக்க புதிய ஆக்கசக்தி ஆகியவை களைக் கொண்டு பெறத்தக்க உற்பத்தி அதிகரிப்பை அடிப்படை யாக கொண்டு இத் திட்டத்தில் மொத்தத் தேசிய உற்பத்தியில் சராசரியாக ஆண்டொன்றுக்குச் சுமார் 5·5சதவீத அதிகரிப்பு இருக்குமென்று கருதப்பட்டது. மக்கட் தொகை ஆண் டொன்றுக்கு 2·5 சதவீதம் அதிகரிக்கும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் தலாவருவாய் ஆண்டொன்றுக்கு சுமார் 3 சதவீத மாக அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. மக்களின் வாழ்க்கைத் தரத்தின் துல்லியமான குறிப்பெண்ணைக் விளங்கும் ஒரு நபர் உண்மை நுகர்வு (Per capital real consumption) மிகவும் குறைந்த அளவாகிய 2·5 சதவீதமாக அதிகரிக்குமென்றும் கணக்கீடு செய்யப்பட்டது.

கூட்டு வளர்ச்சி வீதமாகிய 5.5 சதவீதத்தை அதிக வேளாண்மை, தொழில் உற்பத்தி மூலமும், சீரான நிதிமுறை நிர்வாகத்தின் மூலமும், விலைகளை நிலையாகச் சமப்படுத்துவதன் மூலமும் சாதிக்க முடியுமென்று எதிர்பார்க்கப்பட்டது. நான்காம் திட்ட இறுதியில் உள்நாட்டுச் சேமிப்பு வீதம் தற்போதைய 8·8 சதவீதத்திலிருந்து 13·2 சதவீதமாக (தேசிய வருவாயில் ஒரு பகுதி

யாக) உயருமென்றும் குறிப்பிடப்பட்டது. அதிக உற்பத்தி, நுகர்வுக் கட்டுப்பாடு, வருவாய், ஆடம்பர நுகர்வு ஆகியவைகளின் மேல் அதிக வரி விதித்தல் ஆகியவைகளின் மூலம் சேமிப்பு வீதத்தை அதிகரிக்க வகை செய்யப்படும். அதைப்போலவே முதலீட்டு வீதமும் தற்போதைய 11·3 சதவீதத்திலிருந்து 14·5 சதவீதமாக உயருமென்று எதிர்பார்க்கப்பட்டது, நான்காம் திட்டத்தின் தலையாய குறிக்கோள் ள் பின் வருமாறு:

திட்டத்தின் முக்கிய குறிக்கோள்கள்

1. உள்நாட்டு நிகர உற்பத்தி வளர்ச்சி வீதம் ஆண்டொன்றுக்கு 5·5 சதவீதமாகவும், வேளாண்மை உற்பத்தி 5 சதவீதமாகவும், தொழில் உற்பத்தி 8 முதல் 10 சதவீதமாகவும் அதிகரிக்கச் செய்தல்.

2 கிடைக்கும் மூலதனத்தின் தரம், முதலீட்டுப் பாங்கு ஆகியவைகளைக் கொண்டு தேசிய வருவாயை அதிகரிக்கச் செய்து முதலீட்டு வருவாய் விகிதத்தை (Investment-Income ratio) 1968-69-ல் 11·3 சதவீதமாக இருந்ததிலிருந்து 1973-74-ல் 14·5 சதவீதமாக அதிகரிக்கச் செய்தல்.

3. நான்காம் திட்ட இறுதிக்குள் வெளிநாட்டு உதவியையும் வட்டி செலுத்தும் தொகையையும் குறைத்தல். இதற்காக ஆண்டொன்றுக்கு 7 சதவீத ஏற்றுமதி அதிகரிப்பும், உணவல்லாத மற்றப் பொருள்களின் இறக்குமதி ஆண்டொன்றுக்கு சுமார் 5·5 சதவீதமாகக் குறைக்கவும் வகை செய்தல் 1971-க்குள் பொதுக் கடன் 480-ன் கீழ் பெறும் உணவு தானிய இறக்குமதியை நீக்கிவிட வேண்டுமென்றும் கூறப்பட்டது.

4. 1968-69-ல் 8·8 சதவீதமாக இருக்கும் சேமிப்பு – வருவாய் விகிதத்தை 1973-74 ல் 13·2 சதவீதமாக அதிகரிக்க வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டது.

நான்காம் திட்டத்தில் நிலையான விலை மட்டத்தை நிலைநாட்டுதல், பிராந்திய, தனி நபர் மட்டத்தில் ஏற்படும் வருமான ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்தல், அதிகரிக்கும் அளவில் வேலை வாய்ப்புகளை உருவாக்குதல், ஆகியவைகளின் மேல் தனிக் கவனம் செலுத்தப் படுமென்றும் குறிப்பிடப்பட்டது.

## நான்காம் திட்டத்தின் அளவு

பொதுத் துறை முதலீட்டை அதிகரிக்கவும், தொழில் உற்பத்தி இலக்குகளை ஓரளவு மாற்றியமைக்கவும், நகல் திட்டம் திருத்தப்பட்டு, திருத்தப்பட்ட நான்காம் திட்டம் ஐந்தாம் நிதிக்

குழுவின் பரிந்துரைகளையும், வங்கிகள் தேசிய மயமாக்கப்பட்ட தால் ஏற்பட்ட மாற்றங்களையும் உள்ளடக்கியது.

திருத்தப்பட்ட திட்டத்தில் மொத்தச் செலவு ரூ. 24,882 கோடியாகக் குறிக்கப்பட்டது. இதில் ரூ. 15,902 கோடி பொதுத் துறைக்காகவும் ரூ. 8,980கோடி தனியார் துறைக்காகவும் ஒதுக்கப் பட்டது. திட்ட நகலைக் காட்டிலும் திருத்தப்பட்ட திட்டத்தில் (Revised Plan) பொதுத் துறையில் ரூ. 1,504 கோடி அதிகமாகவும், தனியார் துறையில் ரூ. 1,020 கோடி குறைவாகவும் குறிக்கப் பட்டது. பொது, தனியார் துறைகளிடையே மாற்றியமைக்கப் பட்ட நிதி ஒதுக்கீடுகளைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

ரூபாய் கோடிகளில்

| | திட்ட நகலில் இருந்தபடி | திருத்தப்பட்ட திட்டத்தின் படி | மாற்றம் |
|---|---|---|---|
| பொதுத்துறை ………… | 14,398 | 15,902 | +1,504 |
| மத்திய அரசு | 7,934 | 8,871 | + 937 |
| மாநிலங்கள் | 6,066 | 6,606 | + 540 |
| யூனியன் பிரதேசங்கள் | 398 | 425 | + 27 |
| தனியார் துறை …… | 10,000 | 8,980 | —1,020 |
| மொத்தச் செலவு | 24,398 | 24,882 | + 484 |

மேற்கண்ட பட்டியலின்படி மத்தியத் துறையில் செலவு ரூ. 937 கோடி அதிகரித்தது. இதில் ரூ. 260 கோடி மாநிலங்களில் நிதி நிறுவனங்களுக்கு மத்திய உதவியாகவும், ரூ. 54 கோடி மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டங்களுக்கும் அளிக்கப்படும். அதே போல் மாநிலத் துறைகளிலும் மொத்தச் செலவு ரூ. 540 கோடி அதிகரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாநிலங்களின் செலவுத் தொகையும் திருத்தப்பட்ட திட்டத்தின்படி அதிகரித்தது. அதிகரிக்கப்பட்ட தொகை முழுவதும் 1 வேளாண்மைத் திட்டங்கள், சிறு நீர்ப்பாசனம், 2. கூட்டுறவு வளர்ச்சி, 3. நீர்ப் பாசனம், ஆக்க சக்தி, வெள்ளக் கட்டுப்பாடு, 4. சாலை அமைத்தல், 5. கிராம நீர் வசதி, 6. பிற்பட்ட வகுப்பினர் நலம் போன்றவை களுக்காக மாநிலங்களில் செலவிடப்படும்.

வேளாண்மை, சுகாதாரம், குடும்பக்கட்டுப்பாடு. பிற்பட்ட வகுப்பினர் நலம் போன்ற மத்திய அரசின் ஆதரவு பெற்ற திட்டங்

களுக்காக மாநிலத் திட்டங்களின் செலவுகளுக்கு ரூ. 781 கோடி துணை நிதியாகவும் அளிக்கப்படும். சிறு குடியானவர்கள், வேளாண்மைக் கூலிகள், பகுதி வளர்ச்சி போன்ற மாநிலங்களுக்கு நேரடிப் பயன்தரும் ஒரு சில திட்டங்களுக்காக மத்தியத் துறைத் திட்டங்களில் கூடுதல் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. மாநிலத்திட்டங்களில் சேர்க்கப்பட்டுள்ள வளர்ச்சித் திட்டங்களுக்குப் பெரும் ஆதரவாய் இருக்கத்தக்க வகையில் கூடுதல் நிதியின் (additional outlay) பெரும் பகுதி பயன்படுத்தப்படும்.

முக்கிய வளர்ச்சித் துறைகளின்படி, மாநில திட்ட நிதி ஒதுக்கீட்டை விளக்கும் அட்டவணை கீழே தரப்பட்டுள்ளது.

ரூபாய் கோடிகளில்

| வரிசை எண் | வளர்ச்சித் துறைகள் | மூன்றாம் திட்டம் | வருடாந்திரத் திட்டங்கள் 1966-69 | நான்காம் திட்டம் |
|---|---|---|---|---|
| 1. | வேளாண்மையும் அதைச் சார்ந்த துறைகளும் (Agriculture and Allied Sectors) ... | 972 | 779 | 1,426 |
| 2. | நீர்ப்பாசனம், வெள்ளக்கட்டுபாடு (Irrigation and Flood Control) ... | 655 | 448 | 1,050 |
| 3. | ஆக்க சக்தி (Power) ... | 1,139 | 970 | 1,919 |
| 4. | தொழில், தாதுக்கள் (Industry and Minerals) ... | 203 | 146 | 312 |
| 5. | போக்குவரத்து, செய்தித்தொடர்பு (Transport and Communications) ... | 294 | 210 | 483 |
| 6. | சமூகப் பணிகள் (Social Services) ... | 884 | 456 | 1,324 |
| 7. | மற்றத் திட்டங்கள் (Other Programmes) ... | 58 | 43 | 92 |
| 8. | மொத்தம் ... | 4,165 | 3,052 | 6,606 |

துறைகளைச் சரிசெய்வதன் மூலம் தனியார் துறையில் ஆரம்பத்தில் செலவு ரூ. 10,000 கோடியாக இருந்ததிலிருந்து ரூ. 8,980 கோடியாகக் குறைக்கப்பட்டது. வளர்ச்சி இலக்குகளுக்குள் Growth targets) ஏற்றுற் போல் மொத்த முதலீடு (Over-all-

Investment) ரூ. 22,635 கோடியாகக் குறிக்கப்பட்டது. பொதுத் துறை நடப்பு நிதி ஒதுக்கீடாகிய (Current outlay) ரூ. 2,247 கோடியையும் சேர்த்து நான்காம் திட்டத்தின் மொத்த மூதலீட்டின் அளவு ரூ. 24,882 கோடியாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

முன்னைய திட்டங்களைப் போல், நான்காம் திட்டத்திலும் பொதுத்துறை முதலீடு அதிக அளவில் இருக்கும். அதன் பங்கு ஏறக்குறைய 64% அளவில் இருக்கும். திட்ட முதலீட்டில் 88 சதவீதத்திற்கு மேல் உள்நாட்டுச் சேமிப்பிலிருந்தே நிதியிடப்படும். அது இரண்டாம் மூன்றாம் திட்டத்தைக் காட்டிலும் அதிகமான அளவாகும். அதைப் போன்றே வெளிநாட்டு நிதி உதவியின் அளவு மூன்றாம் திட்டத்தில் 21·6 சதவீதமாக இருந்ததிலிருந்து நான்காம் திட்டத்தில் 11·7 சதவீதமாகக் குறையும் என்றும் எதிர் பார்க்கப்பட்டுள்ளது.

பொதுத்துறை நிதி ஒதுக்கீட்டின் பகிர்வு
(Distribution of Public Sector Outlay)

திருத்தியமைக்கப்பட்ட, பொதுத்துறை நிதி ஒதுக்கீட்டின் பகிர்வு கீழ்க்கண்ட அட்டவணையில் குறிக்கப்பட்டுள்ளது :

(ரூபாய் கோடிகளில்)

| | வளர்ச்சித் துறைகள் | | மொத்தச் செலவு |
|---|---|---|---|
| 1. | வேளாண்மையும் அதைச் சார்ந்த தொழில்களும் | ... | 2,728·18 |
| 2. | நீர்ப்பாசனம், வெள்ளக் கட்டுப்பாடு | ... | 1,086·57 |
| 3. | ஆக்க சக்தி | ... | 2,447·57 |
| 4. | கிராம, சிறு தொழில்கள் | ... | 293 13 |
| 5. | தொழில், தாதுப் பொருள்கள் | ... | 3,337 71 |
| 6. | போக்குவரத்து, செய்தித்தொடர்பு | ... | 3,237·26 |
| 7. | கல்வி | ... | 822 66 |
| 8. | விஞ்ஞான ஆராய்ச்சி | ... | 140·26 |
| 9. | சுகாதாரம் | ... | 435·03 |
| 10. | குடும்பக் கட்டுப்பாடு | ... | 315·00 |
| 11. | நீர் அளிப்பு, சுத்த நடவடிக்கைகள் | ... | 405·79 |
| 12. | வீட்டு வசதி, நகர, பிராந்திய வளர்ச்சி | ... | 237·03 |
| 13. | பிற்பட்ட வகுப்பினர் நலம் | ... | 142·38 |
| 14. | சமூக நலன் | ... | 41·38 |
| 15. | தொழிலாளர் நலம், கைவினைஞர் பயிற்சி | ... | 39 90 |
| 16. | மற்றத் திட்டங்கள் | ... | 192·31 |
| | மொத்தம் | | 15,902·16 |

மொத்த நிதி ஒதுக்கீட்டில், தொழில், தாதுப்பொருள்கள் ஆகியவைகளுக்கு ரூ 3,337·71 கோடி ஒதுக்கப்பட்டது. இது மற்ற எல்லாத் துறை நிதி ஒதுக்கீட்டைக்காட்டிலும் அதிகமாகும். இதில் ரூ. 3,150·86 கோடி மத்தியத் துறையிலும், ரூ. 186·85 கோடி மாநில அரசுகளாலும் செலவிடப்படும். எனவே, தொழில், தாதுப்பொருள் துறை பெரும்பாலும் மத்திய மாநிலத் துறைகளாலேயே நிர்வகிக்கப்படும். இதற்கு அடுத்தபடியாக போக்குவரத்து, செய்தித் துறைக்கு அதிக நிதியாகிய ரூ. 3,237·26 கோடி ஒதுக்கப்பட்டது. இதில், ரூ 2,664 கோடி மத்திய அரசால் செலவிடப்படும். போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் பொருளாதாரத்தின் சமூக நலனை மேம்படுத்தும் அமைப்புகளில் ஒன்றுதலால் ரூ. 3,237·26 கோடி ஒதுக்கப்பட்டது நியாயமானதாகும். வேளாண்மைக்கும் அதோடு தொடர்புடைய துறைகளுக்கும் ரூபாய் 2,728·18 கோடி ஒதுக்கப்பட்டது. இது மாநிலத் துறையைச் சேர்ந்த அம்சமாக இருந்த போதிலும். இத் துறையில் மத்திய அரசு ரூ. 1,302·67 கோடியும், மாநில அரசுகள், 1,425·51 கோடியும் செலவிடத் தீர்மானித்துள்ளன. நீர்ப்பாசனம், வெள்ளக் கட்டுப்பாடு ஆகியவைகளையும், வேளாண்மைத் துறையில் சேர்த்தால் மொத்தம் ரூ. 3,814·75 கோடி, இத்துறைக்கே ஒதுக்கப்பட்டது இது ஓர் அம்சமாகிய வேளாண்மை வளர்ச்சிக்கே செலவிடப்படும் அதிகமான தொகையாகும். அடுத்தபடியாக ஆக்க சக்திக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இதற்கு நான்காம் திட்டத்தில் ரூ. 2,447·57 கோடி செலவிடப்படும். இதில் ரூ. 1,919·07 கோடி மாநிலத் துறையிலும், மீதி, ரூ. 528·50 கோடி மத்தியத் துறையிலும் செலவிடப்படும். விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு ஆக்கச் சக்தியின் முக்கியத்துவத்தை உணர்ந்து, திட்ட நிபுணர்கள் ரூ, 2,447·57 கோடியை நான்காம் திட்டத்தில் ஒதுக்கியது வரவேற்கத் தக்கதாகும். குடிசை, சிறு தொழில்களுக்குப் போதிய அளவு நிதி ஒதுக்கப்படவில்லை என்று கூறப்படுகின்றது. இத் துறைக்கு ரூ 293·13 கோடி மட்டுமே ஒதுக்கப்பட்டது. இதில் ரூ. 128·97 கோடியே மாநில அரசுகள் செலவிடும். மேலும் கல்விக்காக ரூ. 822·66 கோடி மட்டுமே ஒதுக்கப்பட்டது. இதில் ரூ. 499·89 கோடியை மாநில அரசுகள் செலவிடும். பொருளாதார வளர்ச்சிக்குக் கல்வியின் முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு ஆராய்ந்தால், இத் தொகையாகிய ரூ. 822·66 கோடி மிகவும் குறைவானதாகும். விஞ்ஞான ஆராய்ச்சிக்கு ரூ. 140·26 கோடி மத்திய அரசால் செலவிடப்படும். சுகாதாரத்துக்காக ஒதுக்கப்பட்ட மொத்த நிதியாகிய ரூ. 435·03 கோடியில் ரூ. 249·28 கோடியை மத்திய அரசு செலவிடும். குடும்பக் கட்டுப்பாடு நான்காம் திட்டத்தில் ஒரு தனி அந்தஸ்தைப்

பெற்றுத் தேசியத் திட்டத்தில் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. குடும்பக் கட்டுப்பாட்டிற்காக ஒதுக்கப்பட்ட மொத்த நிதியாகிய ரூ. 315 கோடியையும் மத்திய அரசே செலவிடும். நான்காம் திட்டத்தில் காணப்படும் மற்றொரு அம்சம், நீர் விநியோகமும், சுத்த நடவடிக்கை (Water Supply and Sanitation)களுமாகும் இதற்காக ஒதுக்கப்பட்ட ரூ. 405·79 கோடியில் ரூ. 356·66 கோடியை மாநில அரசுகளே செலவிடும். வீட்டுப் பிரச்சனையைக கருத்தில் கொண்டு திட்ட நிபுணர்கள் இதற்காக ரூ. 237·03 கோடியை ஒதுக்கியுள்ளனர். மேலும், பிற்பட்ட வகுப்பினர் நலனுக்காக ரூ. 142·38 கோடியும், சமூக நலனுக்காக (Social) welfare) ரூ. 41·38 கோடியும், தொழிலாளர் நலன், கைவினைஞர் பயிற்சிக்காக ரூ. 39·90 கோடியும், மற்றத் திட்டங்களுக்காக ரூ. 192·31 கோடியும், நான்காம் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளது.

பொதுத் துறை மொத்த நிதியாகிய ரூ. 15,902 கோடியில் முதலீட்டிற்காக (investment) ரூ. 13,655 கோடியும், நடப்புச் செலவிற்காக (Current-outlay) ரூ. 2,247 கோடியும் ஒதுக்கப் பட்டன. நான்காம் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள முதலீட்டுத் திட்டத்தின் அடிப்படையிலும், 1973—74க்குள் பல்வேறு துறைகளில் எதிர்பார்க்கப்படும் உற்பத்தியின் அளவை அடிப் படையாகக் கொண்டும் நான்காம் திட்ட ஒருங்கிணைந்த மொத்த வளர்ச்சி வீதம் (Overall rate of Growth) சுமார் $5\frac{1}{2}$ சதவீதம் இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. இது முன்னைய திட்டங் களிலிருந்து கிடைத்த வளர்ச்சி வீதமாகிய 2·6—4·0 சதவீதத்தை விட அதிகமாகும். இவ் வளர்ச்சி வீதம் 2:1 கூடுதல்-முதல் உற்பத்தி விகிதத்தை (Capital-output ratio) அளிக்கும். இது முதல் மூன்று திட்டக் காலங்களில் 2·4:1 சராசரி விகிதமாக இருந்தது.

ஒரு கணக்கீட்டின்படி இத் திட்டத்தின் ஐந்தாண்டுக் காலங் களில் மக்கள் தொகை ஆண்டொன்றுக்கு 2·5 சதவீதம் என்ற வீதத்தில் வளர்ச்சியடையும் என்று எதிர்பார்க்கப்பட்டுள்ளது. இத் திட்டக் காலத்தில் தலா வருவாய் அதிகரிப்பு ஆண்டொன் றுக்குச் சுமார் 3 சதவீதமாக இருக்குமென்று கருதப்பட்டுள்ளது. குறிப்பிட்ட வளர்ச்சி வீதத்தை அடைய உள்நாட்டுச் சேமிப்பு வீதமும் முதலீடும் அதிகரிக்க வேண்டும். உள்நாட்டுச் சேமிப்பு வீதம் 1968—69-ல் 8·8 சதவீதமாக இருந்ததிலிருந்து 13·2 சதவீத மாகவும், முதலீடு-11·3 சதவீதத்திலிருந்து 14·5 சதவீதமாக நான்காம் திட்ட இறுதிக்குள் அதிகரிக்க வேண்டியது அவசிய மாகும். திட்டத்தில் எதிர்பார்க்கப்படும் உணவு தானிய உற்பத்தி அதிகரிப்பு சலுகையுடன் கிடைக்கும் உணவு இறக்குமதியை 1971க்குள் நீக்குவதற்கு வகை செய்யும்.

## பொதுத்துறை முதலீட்டின் நிதியாக்கம்
(Financing of the public-sector outlay)

நான்காம் திட்டத்தில் பொதுத் துறைக்காக செலவிடப்படும் ரூ. 15,902 கோடியை முக்கியமாக மத்திய அரசின் கூடுதல் நிதி சேகரிப்பிலிருந்தும், நிதி நிறுவனங்களின் ஆதரவுடன் சந்தையிலிருந்து கடன் பெறுவதிலிருந்தும், சரிசெய்யத் தீர்மானிக்கப் பட்டுள்ளது. மத்திய அரசின் கூடுதல் நிதி சேகரிப்பு ரூ. 500 கோடியாக இருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டுள்ளது. திட்டத்தின் திருத்தப்பட்ட நிதியாக்கத் திட்டத்தின்படி 1969-70ன் வரி அளவின் படி உள்நாட்டு வரவு-செலவுத் திட்டத்திலிருந்து ரூ. 8,734 கோடியும், மத்திய, மாநில அரசுகளின் கூடுதல் நிதி சேகரிப்பிலிருந்து ரூ. 3,198 கோடியும், ஆயுள் காப்பீட்டுக்கழகக் கடன், அங்காடியிலிருந்து பெறும் கடன் (Market borrowings) ஆகியவைகளிலிருந்து ரூ. 506 கோடியும், நிகர வெளிநாட்டு உதவியாக ரூ. 2,614 கோடியும் கிடைக்கும். பற்றுக்குறை நிதியாக்கம் (Deficit financing) முன்பும், பின்பும் ரூ. 850 கோடிக் குள்ளாகவே நிறுத்தப்பட்டது. நிதி வளங்களின் நிலைமையை கீழ்க் கண்ட அட்டவணை தொகுத்து விளக்குகிறது.

ரூபாய் கோடிகளில்

| கிடைக்கும் வழி | | திட்ட நகலின் படி | இறுதித் திட்டப்படி |
|---|---|---|---|
| 1. 1969-70ன் வரி மட்டத்தில் உள்ளநாட்டு வரவு செலவுத் திட்ட நிதி | ... | 7,982 | 8,734 |
| 2. கூடுதல் நிதி சேகரிப்பு (Additional resource mobilisation) | ... | 2,709 | 3,198 |
| 3. ஆயுள் காப்பிட்டுக் கழகக் கடன், அங்காடியின் கடன் | ... | 343 | 506 |
| 4. பற்றுக்குறை நிதியாக்கம் | ... | 850 | 850 |
| 5. வெளிநாட்டு உதவி | ... | 2,514 | 2,614 |
| மொத்தம் | | 14,398 | 15,902 |

திட்ட நகலிலிருந்ததைக் காட்டிலும் இறுதித் திட்டத்தில் (Final plan) உள்நாட்டு வரவு-செலவுத் திட்டநிதி ரூ. 752 கோடி

அதிகரித்துள்ளதை மேற்கண்ட அட்டவணை உணர்த்துகிறது. அதே போன்று இறுதித் திட்டத்தில் ரூ. 488 கோடி கூடுதல் நிதி சேகரிப்பு அதிகமாகக் கிடைக்குமென்றும் தெரிகிறது. ஆயுள் காப்பீட்டுக் கழகக் கடன், அங்காடியின் கடன் ஆகியவைகள் திட்ட நகலைக் காட்டிலும் இறுதித் திட்டத்தில் ரூ. 163 கோடி அதிகமாகக் கிடைக்க வகைசெய்யுமென்று எதிர்பார்க்கப் பட்டுள்ளது. நாட்டில் ஏற்கெனவே இருந்துவரும் பணவீக்க நிலைமையைக் கருத்தில் கொண்டு, பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவை இறுதித் திட்டத்தில் அதிகரிக்கலாகாதெனத் தீர்மானிக் கப்பட்டது. எனவே, அது ரூ. 850 கோடிகளாகவே நிறுத்தி வைக்கப்பட்டது. வெளிநாட்டு உதவி, இறுதித் திட்டத்தில் ரூ. 100 கோடி அதிகமாகக் குறிக்கப்பட்டது. இது பன்னாட்டு அமைப்புகள், வெளிநாட்டு அரசுகள் ஆகியவைகளிடமிருந்து கிடைக்கும் பொருளுதவியைக் (Commodity aid) குறிக்கிறது. பொதுக்கடன் 480 அல்லாத மற்ற நிகர உதவி ரூ. 2,234 கோடி யாகவும் பொதுக் கடன் 480-ன் உதவி ரூ. 380 கோடியாகவும் குறிக்கப்பட்டது.

இறுதித் திட்டத்தில் மத்திய அரசின் திட்டத்தின் அளவில் ரூ. 964 கோடி நிகர அதிகரிப்பாக இருந்தது. இக் கூடுதல் தொகையைச் சரிசெய்ய, மத்திய அரசு அதிக வரிகளின் மூலம் ரூ. 500 கோடியும் நேரடி அங்காடிக் கடன்களிலிருந்து ரூ. 150 கோடியும், மறைமுகக் கடன், வெளி உதவி, உள்நாட்டு வரவு செலவுத் திட்டநிதி, ஆகியவைகளின் நிகர அதிகரிப்பிலிருந்து ரூ. 314 கோடியும் பெறும்.

மேற்குறிப்பிட்டதைப் போலவே மாநில அரசுகளின் நிதி வளங்களும் இறுதித் திட்டத்தில் ரூ. 540 கோடி அதிகரித்தன. இக் கூடுதல் தொகையைச் சரிசெய்ய மாநில அரசுகள் திட்டக் காலத்தில் அதிக வரி விதித்தல் போன்ற முறைகளை மேற் கொள்ளும். இதில் நிகர கூடுதல் அங்காடிக் கடனாகிய ரூ. 201 கோடியும், நிகர கூடுதல் உள்நாட்டு வரவு செலவுத் திட்ட நிதியாகிய ரூ 339 கோடியும் உள்ளடங்கும். மாநிலங்களுக்குத் திட்டத்திற்காக மத்திய உதவி ரூ. 3,500 கோடிகள் கிடைக்கும்.

## நான்காம் திட்ட இலக்குகளும் மதிப்பீடுகளும்
## (Targets and Estimates)

தேர்ந்தெடுக்கப்பட்ட சில இலக்குகளும் மதிப்பீடுகளும் கீழ்க் கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன.

| வரிசை எண் | அம்சங்கள் | அலகு | 1968-69 (மதிப்பிடப்பட்ட) | 1973-74 இலக்குகள் மதிப்பீடுகள் |
|---|---|---|---|---|
| 1. | உணவு தானியங்கள் | மில்லியன் டன்களில் | 98 | 129 |
| 2. | கரும்பு | ,, | 12·0 | 15 |
| 3. | எண்ணெய் வித்துகள் | ,, | 8·5 | 10·5 |
| 4. | பருத்தி | மில்லியன் பேல்களில் | 6 | 8 |
| 5. | சணல் | ,, | 6·2 | 7·4 |
| 6. | புகையிலை | ஆயிரம் டன்களில் | 350 | 450 |
| 7. | நைட்ரஜன் உரங்கள் | ,, | 1,145 | 3,200 |
| 8. | பாஸ்பேட் உரம் | ,, | 391 | 1,400 |
| 9. | பெரிய, நடுத்தர நீர்ப்பாசனம் | மில்லியன் ஹெக்டர்களில் | 16·9 | 20·8 |
| 10. | சிறுநீர்ப்பாசனம் | ,, | 19 | 22·2 |
| 11. | எஃகு பாளங்கள | மில்லியன் டன்கள் | 6·5 | 10·8 |
| 12. | தனி எஃகு | ஆயிரம் டன்களில் | 43 | 220 |
| 13. | அலுமினியம் | ,, | 125·3 | 220 |
| 14. | எந்திரக் கருவிகள் | கோடி ரூபாய்களில் | 20 | 65 |
| 15. | பெட்ரோலியம் | மில்லியன் டன்களில் | 6·06 | 8·5 |
| 16. | பிளாஸ்டிக் | ஆயிரம் டன்களில் | 58·1 | 225 |
| 17. | சிமெண்டு | மில்லியன் டன்களில் | 12·2 | 18 |
| 18. | ஆலைத் துணி | மில்லியன் மீட்டர்களில் | 4,597 | 5,100 |
| 19. | கைத்தறி, விசைத்தறி, காதி | ,, | 3,596 | 4,250 |
| 20. | இரும்புத்தாது | மில்லியன் டன்களில் | 28·1 | 46 |
| 21. | நிலக்கரி | ,, | 69·5 | 93·5 |
| 22. | ஆக்கசக்தி | மில்லியன் கி. வாட்களில் | 14·29 | 22·07 |
| 23. | சீரான சாலைகள் | ஆயிரம் கி மீட்டர் களில் | 325 | 385 |

| | | | |
|---|---|---|---|
| 24. பள்ளிகளில் மாணவர்கள் | மில்லியன் எண்களில் | 74·3 | 96·4 |
| 25. தொழிற்கல்வி பட்ட வகுப்பு மாணவர்கள் | ஆயிரம் எண்களில் | 25·0 | 25 0 |
| 26. தொழிற்கல்வி டிப்ளமா மாணவர்கள் | ,, | 48·6 | 48·6 |
| 27. மருத்துவமனைப் படுக்கைகள் | ,, | 255·7 | 281·6 |
| 28. பணிபுரியும் மருத்துவர்கள் | ,, | 102·5 | 137 9 |
| 29. குடும்பக் கட்டுப்பாடு கிராம நிலையங்கள் | எண்களில் | 4,326 | 5,225 |
| 30. கிராமத் துணை நிலையங்கள் | ,, | 22,826 | 31,752 |
| 31. நகர நிலையங்கள் | ,, | 1,797 | 1,856 |

வேளாண்மை

நான்காம் திட்டக் காலத்தில் வேளாண்மைத்துறை இரு முக்கிய குறிக்கோள்களுடன் செயல்படும். முதலாவதாக, அடுத்த பத்தாண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 5 சதவீத நிலையான வளர்ச்சியை அதிகரிக்க அது வகை செய்யும் இரண்டாவதாக, கிராம மக்களில் பெரும்பாலோர் பொருளாதார வளர்ச்சியில் பங்கேற்று அதன் நன்மைகளைப் பகிர்ந்துகொள்வதற்கு வகை செய்தல். ஐந்து சதவீத வேளாண்மை உற்பத்தி வளர்ச்சியைப் பெற புது வேளாண்மைச் சிறப்புக் கொள்கையை (New Strategy மேலும் விரிவாக்க வகை செயயப்படும். அதிக விளைச்சல்தரும் விதைகள், உரங்கள், பூச்சி மருந்துகள், பண்ணை எந்திரங்கள், சீரான பண்ணை நடைமுறைகள், போன்ற நவீன உள்ளீடுகளைப் பெருமளவு பயன்படுத்துவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படும். புதுச் சிறப்புக் கொள்கைக்கு ஆதரவளிக்க உள்நாட்டு உற்பத்தி அதிகரிப்பின் மூலம் போதிய உள்ளீடுகளை அளிக்க வகை செய்டப் படும். சிறிய விவசாயிகளுக்குச் சரியான காலத்தில் போதிய அளவு உரங்களை அளிக்க உரக்கடன் உறுதிக் கழகம் .(Fertilizer Credit guaruntee Corporation) ஒன்றை ஏற்படுத்தவும் இத் திட்டம் வகை செய்தது. சிறிய விவசாயிகளுக்கு அதிக அளவு கடன்வசதி கிடைக்க நிதிநிறுவனங்களின் கொள்கைகள் மறுசீர்ப்படுத்தப் பட்டன. பல்வேறு உள்ளீடுகளை முழு அளவில் பயன்படுத்தி வேளாண்மை உற்பத்தியைப் பன்மடங்கு அதிகரிக்க முழு

முயற்சிகள் மேற்கொள்ளப்படும். இத் திட்டக் காலத்தில் அதிக விளைச்சல் ரகத்திட்டம் (High-yielding Variety Programme) மேலும் விரிவாக்கப்படும். நான்காம் திட்ட இறுதியில் சுமார் 24 மில்லியன் ஹெக்டார் நிலங்களில் அதிக விளைச்சல் தானிய வகைகள் பயிரிடப்படும். நீர்ப்பாசன வசதியில்லா நிலங்களில் உற்பத்தியை அதிகரிக்கப் புன்செய்ப்பண்ணைகளைச் சீரமைத்து நிலப்பாதுகாப்பு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படும். நான்காம் திட்டக் காலத்தில் 5·6 மில்லியன் ஹெக்டார் நிலங்களில் நிலப்பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும். இத் திட்டக் காலத்தில் உணவுதானியங்கள் 129 மில்லியன் டன்களாகவும், சணல் 7·4 மில்லியன் பேல்களாகவும், பருத்தி 8 மில்லியன் பேல்களாகவும், எண்ணெய் வித்துகள் 10·5 மில்லியன் டன்களாகவும், கரும்பு 15 மில்லியன் டன்களாக வும் அதிகரிக்கும் என்று எதிர்ப்பார்க்கப்பட்டுள்ளது. இத் திட்டக் காலத்தில் வேளாண்மைக்கான பொதுத்துறை முதலீடுபோக, தனியார் முதலீடு ரூ. 1,600 கோடியாக இருக்கு மென்றும் எதிர் பார்க்கப்பட்டுள்ளது. இத் திட்டக்காலத்தில் சிறு விவசாயிகளுக் கும், வேளாண்மைக் கூலிகளுக்கும் வசதிகள் விரிவாக்கப்படும். இதற்காக இத் திட்டத்தில் நேரடியாக ரூ. 115 கோடி பயன் படுத்தப்படும்.

நீர்ப்பாசனம் (Irrigation)

நான்காம் திட்டக் காலத்தில் நீர்ப்பாசனத்தின் அளவு 4·8 மில்லியன் ஹெக்டார் நிலங்களில் புதிதாக அதிகரிக்கப்படும். சுமார் 3·9 மில்லியன் ஹெக்டார் நிலங்களில் நீர்ப்பாசனம் பயன் படுத்தப்படுமென்றும் எதிர்பார்க்கப்படுகிறது. நான்காம் திட்ட இறுதியில் நீர்ப்பாசன வசதி அளிக்கப்பட்ட பகுதி 43 மில்லியன் ஹெக்டார்களாக இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. மேல் மட்ட, ஆழமான, பகுதிகளின் நீர்வளத்தினுல் 82 மில்லியன் ஹெக்டார் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கு மென்றும் மதிப்பிடப்பட்டுள்ளது. நான்காம் திட்டக் காலத்தில் நீர்ப் பாசனத்திற்காக ரூ. 1,470 கோடிகள் ஒதுக்கப்பட்டுள்ளன. சிறு நீர்ப்பாசனங்களுக்காக மாநிலங்களில் 501·5 கோடி ரூபாய்களும், யூனியன் பிரதேசங்களில் 6·2 கோடி ரூபாய்களும், மத்திய அரசால் 8 கோடி ரூபாயும் செலவிடப்படும்.

ஆக்கசக்தி (Power)

ஆக்கசக்திக்காகப் பொதுத்துறையில் ரூ. 2,455·83 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இது திட்ட மொத்தப் பொதுத் துறை முதலீட்டில் சுமார் 32 சதவீதமாகும். தனியார் துறையில்

இதற்காகச் சுமார் 75 கோடி ரூபாய்கள் செலவிடப்படு மென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதன்படி 23 மில்லியன் கிலோ வாட் நிகர உள்ளார்ந்த ஆக்கச்சக்தி சாதிக்கப்படும். இத் திட்டத் தின் இறுதிக்குள் ஏராளமான மின் இயக்க, அனல் திட்டங்கள் அமைக்கப்படும். மத்தியத் திட்டத்தில் மின் ஆக்கத் திட்டங்களுக் காக ரூ. 210 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. கிராம மின்வசதிக்காக இத் திட்டக் காலத்தில் முக்கியத்துவம் அளிக்கப்படும்,

கிராம, சிறுதொழில்கள் (Village and Small industries)

நான்காம் திட்டத்தில் கிராம, சிறுதொழில் வளர்ச்சிக்காகப் பொதுத்துறையில் ரூ. 293 கோடி செலவிடப்படுமென்று எதிர் பார்க்கப்படுகிறது. பொதுத்துறை முதலீட்டுடன் கூட, நிதி, வங்கி நிறுவனங்களை உள்ளடக்கிய தனியார் துறை முதலீடு இத் துறைக்காக ரூ. 560 கோடியாக இருக்கும் எனவும் கருதப்பட் டுள்ளது. எனவே, நான்காம் திட்டத்தில் சிறு தொழில்களின் வளர்ச்சிக்காக மொத்தம் ரூ. 850 கோடி செலவிடப்படுமெனத் தெரிகிறது.

திட்டத்தின் குறிக்கோளில் சிறு தொழில்களின் வளர்ச்சிக்காகப் பல சீரமைப்புகளை மேற்கொள்ள வேண்டுமென்று குறிப்பிடப் பட்டுள்ளது. உற்பத்தி முறைகளைச் சீர்படுத்துதல், சிறு தொழில் களைப் பரவலாக்கி பன்மடங்கு பெருகச் செய்தல், வேளாண்மை சார் தொழில்களின் (Agro-based industries) எண்ணிக்கையை அதிகரித்தல் போன்ற சீரமைப்பு முறைகள் மேலும் தீவிரமாக்கப் படும். இத் தொழில்களை நவீனப்படுத்தி, தொழிலாளர்களின் திறமையைப் பெருக்கித் தரமான பொருள்கள் தயாரிக்க வகை செய்யப்படும். உற்பத்திக்கு ஊக்கமளிக்கும் ஊக்கிகளை அளித்தல் தேவையான தடுப்பு முறைகளைப் (Disincentives) பின்பற்றுதல் போன்றவைகளின் மூலம் தொழில்களைப் பரவலாக்கி, பேரளவுத் தொழில்களின் போட்டியைக் குறைக்கவும் தகுந்த நிதிவழி (Fiscal) மற்ற முறைகள் பின்பற்றப்படும்.

சிறு தொழில்களை ஆக்கத்திற் சிறந்தவைகளாக்குவதற்குத் தாராளக் கடன் வசதிகள், போதிய கச்சாப் பொருள் அளிப்பு, தொழில்நுட்ப உதவி, சீரான கருவிகள் வினியோகம், வரிச் சலுகைகள், வேறுபாடுள்ள சுங்க வரிகள் போன்ற வசதிகள் அளிக்கப்படும். பேரளவுத் தொழில்களின் வளர்ச்சிக்காக அளிக் கப்படும் நிதி, வரி ஊக்கிகள் சிறு தொழில்களுக்கும் அளிக்கப்படும். ஆராய்ச்சி, உற்பத்தி முறைச் சீரமைப்பு, தர அமைப்பு வளர்ச்சி, தொழில் விரிவாக்கப் பணிகள் போன்றவைகளுக்காக வசதிகள் அளிக்கப்படும்.

இத் தொழில்களில் இருந்துவரும் ஆக்கசக்தியை முழு அளவில் பயன்படுத்தவும், சில தொழில்களில் தீவிர வளர்ச்சியை மேற் கொள்ளவும் கிராம, பிற்பட்ட பகுதிகளில் இத் தொழில்களை வளர்ச்சியடையச் செய்யவும் நான்காம் திட்டம் வகை செய்யும். பேரளவுத் தொழில்களால் சிறு தொழில்களுக்கு ஏற்படும் போட்டியைத் தவிர்க்கச் சிறுதொழில்களுக்குச் சில பொருள்களின் உற்பத்தியைத் தனியாக ஒதுக்கும் முறை தொடர்ந்து அமுலில் இருக்கும். திறமையும், தொழில்நுட்பப் பயிற்சியும் பெற்றவர்கள் தனியே தொழில்களை ஏற்படுத்த நிதிபோன்ற வசதிகள் தாராளமாக அளிக்கப்படும் கிராம, பிற்பட்ட பகுதிகளிலும் சிறிய நகரங்களிலும் தொழிற்பேட்டைகளை ஏற்படுத்தும் திட்டம் விரிவாக்கப்படும். கூட்டுறவுத் தொழிற்பேட்டைகள் ஏற்பட (Co-operative industrial estates) ஊக்க மளிக்கப்படும்.

## தொழிலும் தாதுப்பொருள்களும்

நான்காம் திட்டத்தில் தொழில் நடவடிக்கைகளும் கொள்கைகளும், தொழில் அமைப்பில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளைச் சரி செய்தல், ஏற்கெனவே உள்ள ஆக்கசக்தியை முழு அளவில் பயன்படுத்துதல், ஆகிய குறிக்கோள்களைப் பெற்றுள்ளன. தொழில் துறை முதலீட்டில் குறிக்கோள்கள் பின்வருமாறு 1. ஏற்கெனவே துவக்கப்பட்ட தொழில் நடவடிக்கைகளின் முதலீட்டை முழு அளவில் மேற்கொள்ளுதல். 2. தற்போதும் எதிர்காலத்துக்கும் தேவையான வளர்ச்சியைப்பெறப் பெருமளவுக்கு இருக்கும் ஆக்க சக்தியை அதிகரித்து, இன்றியமையாத பொருள்களின் உள்நாட்டு அளிப்பைப் போதிய அளவு அதிகரித்தல். 3. உள்நாட்டு வளர்ச்சியைச் சாதகமாக வைத்துக்கொண்டு, புதுத் தொழில்களையும், புதுத்தொழில் அடிப்படைகளையும் ஏற்படுத்துதல். வேளாண்மை உற்பத்தி வளர்ச்சி வீதம் 5 சதவீதமாகக் குறிப்பிடப்பட்டதைப் போல் சுரங்கத் தொழில், செய்பொருள் தொழில் ஆகியவைகளின் மொத்த வளர்ச்சி வீதம் அடுத்த பத்தாண்டுகளுள் சுமார் 9 சதவீதமாக அதிகரிக்குமென்றும் எதிர்ப்பார்க்கப்படுகிறது.

சர்வாதீனம், தொழிலில் குவிப்பு ஆகியவைகள் அதிகரிப்பதைத் தடுக்க அரசின் தொழில் உரிமைக் கொள்கையை மாற்றி அமைத்துப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட ஆலோசனை கூறப்பட்டுள்ளது. பேரளவுத் தொழில்களுக்கும், சிறு தொழில்களுக்குமிடையே ஒரு ஒருங்கிணைந்த வளர்ச்சியை ஏற்படுத்தத் துணைத் தொழில்களை ஊட்டும் தொழில்களாக (Feeder industries) வளர்ச்சியடையச் செய்து, இவ்விரண்டிற்குமிடையே போட்டியைத் தவிர்க்க வகைசெய்யப்படும்.

பிற்பட்ட பகுதிகளில் தொழில்களை வளர்ச்சியடையச் செய்யப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். மாநிலங்களிலும் யூனியன் பிரதேசங்களிலுமுள்ள எல்லாப் பிற்பட்ட பகுதிகளிலும் உள்ள தொழில்களுக்குப் பொதுச் சலுகைகளுடன் நிதி, கடன் நிறுவனங்கள் நிதிவசதியளிக்க வகை செய்யப்பட்டுள்ளது. பிற்பட்ட பகுதிகளில் தொழில் அமைப்புகளை ஏற்படுத்த மத்திய அரசு உதவிக் கொடைகளையும் அளிக்கும்.

நான்காம் திட்டத்தில் அமைப்புடைய தொழில், (Organised industry), சுரங்கத் தொழில் (Mining) ஆகியவைகளில் சுமார் 5,298 கோடி ரூபாய்கள் முதலீடு செய்யப்படுமென்று எதிர் பார்க்கப்படுகிறது. இதில் பொதுத் துறையின் மூலம் 3,048 கோடி ரூபாயும், தனியார், கூட்டுறவுத் துறைகளின் மூலம் 2,250 கோடியும் செலவிடப்படும். தனியார் கூட்டுறவுத் துறைகளுக்கு கொடுக்கப்பட்ட ரூ. 250 கோடியும் சேர்த்து மொத்தம் 3,338·47 கோடி ரூபாய்களைப் பொதுத்துறை முதலீடு உள்ளடக்குகிறது. மொத்தப் பொதுத்துறை ஒதுக்கீடாகிய 3,338·47 கோடி ரூபாயில் மத்தியத் துறையில் (Central sector) ரூ. 3,150·86 கோடி ரூபாயும், மாநிலங்கள், யூனியன் பிரதேசங்கள் ஆகியவைகளின் மூலம் ரூ. 187·67 கோடி ரூபாயும் செலவிடப்படும். புது முதலீடுகள் அனைத்தும் பொதுத்துறையிலேயே தொடர்ந்து மேற்கொள்ளப் படும். நான்காம் திட்ட மொத்த முதலீட்டில் சுமார் 60 சதவீதம் பொதுத் துறையிலேயே முதலீடு செய்யப்படும். உரம், பூச்சி மருந்துகள், இரசாயன உலோகங்கள் போன்ற முதலிடம் பெற் றுள்ள துறைகளில் புதுச் செயல் திட்டங்களை (Projects) மேற் கொள்ள வகை செய்யப்பட்டுள்ளது.

இரும்பும் எஃகும்

இத் திட்டக் காலத்தில் பிலாய் எஃகு ஆலை விரிவாக்கப்பட்டு, பொகாரோ ஆலை 1·7 மில்லியன் டன்கள் ஆக்கச் சக்தியைப் பெற்று முதல் கட்ட வளர்ச்சியை முழு அளவில் பெறும். இத்தகைய திட்டங்களின் அடிப்படையில் இந்த ஆக்கச் சக்தியின் அளவு 1968-69-ல் 9 மில்லியன் டன்களாக இருந்ததிலிருந்து 1973-74-ல் 12 மில்லியன் டன் எஃகாக அதிகரிக்குமென்று எதிர் பார்க்கப்பட்டுள்ளது. வார்ப்பிரும்பின் உற்பத்தி 1973-74--க்குள் 3·8 மில்லியன் டன்களாக அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப் படுகிறது. கூடுதல் எஃகு சக்தியை ஏற்படுத்துவதில் அதிக கால தாமதம் ஏற்படுவதால், வருங்கால எஃகு, வார்ப்பிரும்புத் தேவைகளைப் பூர்த்திசெய்ய இத் திட்டக்காலத்தில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இதற்காக ரூ. 110 கோடிகள் ஒதுக்கப்

பட்டுள்ளன. ஹோஸ்பேட், சேலம், விசாகப்பட்டினம், ஆலைகளைப் பற்றிய விரிவான ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

உரங்கள்

உரங்களுக்கு ஏற்பட்டு வரும் அதிகத் தேவையைப் பூர்த்தி செய்ய 1973-74-ல் 3 மில்லியன் டன் நைட்ரஜன் உரங்கள் உற்பத்தி செய்யப்பட வேண்டுமென்று இலக்குக் குறிக்கப் பட்டுள்ளது. ஏற்கெனவே நடைமுறையில் இருக்கும் திட்டங்கள் சுமார் 2·54 மில்லியன் டன் உரங்களை அளிக்கும் சக்தியை உடையவைகளாயிருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. பொதுத் துறையில் 0·95 மில்லியன் டன் சக்தியுடைய 6 செயல் திட்டங்கள் இத் திட்டத்தில் அமுலாக்கப்படும். பொதுத் துறையில் புதிய உர ஆலைகளை ஏற்படுத்த ரூ. 262 கோடிகள் ஒதுக்கப்பட்டுள்ளன.

நிலக்கரி

1973-74-ல் நிலக்கரித் தேவை 93·5 மில்லியன் டன்களாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. 93·5 மில்லியன் டன் இலக்கில் பொதுத் துறையில் 32 மில்லியன் டன்கள் உற்பத்தி செய்யப்படுமென்று எதிர் பார்க்கப்படுகிறது. மத்தியத் துறையில் இதற்காக 110·53 கோடி ரூபாய்கள் ஒதுக்கப்பட்டுள்ளன.

இரும்புத் தாது

1973-74-ல் இரும்புத் தாதுவின் தேவை 51 மில்லியன் டன் களாக இருக்கும். இதில் ஏற்றுமதித் தேவை 1968-69-ல் 13 மில்லியன் டன்களாக இருந்ததிலிருந்து 31 மில்லியன் டன்களாக அதிகரிக்கும். மொத்த இரும்புத் தாது உற்பத்தியாகிய 51 மில்லியன் டன்களில் தேசிய தாது வளர்ச்சிக் கழகம் (National-Mineral Development Corpration) சுமார் 14 மில்லியன் டன்களை அளிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

போக்குவரத்தும் செய்தித் தொடர்பும் (Transport and Communication)

போக்குவரத்து செய்தித் தொடர்பிற்குப் பொதுத் துறையில் மொத்தம் 3,245 கோடி ரூபாய்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. இதில் மத்தியத் துறையில் 2,672 கோடி ரூபாயும், மாநில யூனியன் பிரதேசத் திட்டங்களில் 581 கோடி ரூபாயும், மத்திய ஆதரவு பெற்ற திட்டங்களில் 42 கோடியும் ஒதுக்கப்பட்டுள்ளன.

இரயில்வேக்களின் வளர்ச்சி

இரயில்வே வளர்ச்சித் திட்டங்களுக்காக ரூ. 1,000 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. நகர இரயில்வே போக்குவரத்து வளர்ச்சிக்

காக ரூ. 50 கோடியும் ஒதுக்கப்பட்டுள்ளது. உள்நாட்டு உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டு இரயில்வே பொருள் களைப் பயன்படுத்தத் திட்டமி ..ப்பட்டுள்ளது. 1973-74-ல் டீசல் வண்டிகளின் போக்குவரத்து தூரம் 19,200கி. மீட்டரிலிருந்து 22,000கி. மீட்டர்களாக விரிவாக்கப்ப ெம். இதே காலத்தில் மின்சார இரயில் போக்குவரத்துச் சாலே 29,00 கி. மீட்டரிலிருந்து 46,00 கி மீட்டராக மேலும் விரிவாக்கப்படும். நான்காம் திட்டக் காலத்தில் 250 கி. மீ. தூரமுள்ள குறுகிய இரயில் பாதைகள் (Metregauge lines) அகலப் பாதைகளாக (Broad-gauge lines) மாற்றியமைக்கப்படும். மேலும், 1800 கி. மீ. தூரத்தில் இரட்டைப்பாதைகள் (Doubling of track) அமைக்கப்படும்.

சாலைத் திட்டங்கள்

மத்தியத் துறையில் (Central sector) இதற்காக ரூ. 418 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இருக்கும் தேசியப் பெருஞ்சாலைகளை சீரமைக்கத் தடைபட்டுள்ள எல்லா சாலை வழிகளையும் சரி செய்ய வகை செய்யப்பட்டுள்ளது. மாநிலங்களும், யூனியன் பிரதேசங் களும் சாலை வளர்ச்சித் திட்டங்களுக்காக நான்காம் திட்டக் காலத் தில் ரூ. 458 கோடியைச் செலவிடும். கிராமச் சாலைகளை வளர்ச்சி யடையச் செய்ய சிறப்புக் கவனம் செலுத்தப்படும். மாநில அரசு களின் மொத்தப் போக்குவரத்து வளர்ச்சிச் செலவில் சுமார் 25 சதவீதம் கிராம சாலைகளின் வளர்ச்சிக்காகச் செலவிடப்படும். சீரான சாலைகளின் நீளம் 1973-74-ல் 3,85,000 கி. மீட்டர்களாக அதிகரிக்கும். மாநிலங்களில் நாட்டுடைமையாக்கப்பட்ட போக்கு வரத்து வாகனப் பணிகளை ஊக்குவிப்பதற்காக ரூ. 91 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. தனியார் துறையில் சாலைப் போக்குவரத்து முதலீடு ரூ. 935 கோடியாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது.

செய்தித் தொடர்பு

செய்தித் தொடர்பிற்காக நான்காம் திட்டத்தில் ரூ. 520 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் தந்திச் செய்தித் தொடர் பிற்காக (Tele-Communication) ரூ. 466·25 கோடியும், தபால் பணிகளுக்காக 26 கோடியும் ஒதுக்கப்பட்டுள்ளது. கடல் வழிச் செய்தித் தொடர்பு வசதிகளை அதிகரிக்கவும் வகை செய்யப் பட்டுள்ளது. இத் திட்டக் காலத்தில் ஒலிபரப்புத் திட்டங்களுக்காக (Broadcasting Programmes) மொத்தம் ரூ. 45 கோடி ஒதுக்கப் பட்டுள்ளது. டெல்லியிலிருக்கும் டெலிவிஷன் நிலையத்தைப் பலப் படுத்துவதோடு பம்பாய், கல்கத்தா, சென்னை, கான்பூர், லக்னோ, ஸ்ரீநகர் ஆகிய இடங்களிலும் டெலிவிஷன் நிலையங்கள் ஏற்படுத்தப்படும்.

கல்வி

நான்காம் திட்டத்தில் சமூகப் பணிகளின் வளர்ச்சிகாக ரூ. 1,818 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் கல்வி, சுகாதாரம், குடும்பக்கட்டுப்பாடு, பிராந்திய வளர்ச்சி, வீட்டு வசதி, நீர் விநியோகம் ஆகியவைகள் அடங்கும். இதில் கல்விக்காக 822·66 கோடி ரூபாய் செலவிடப்படும். இத் திட்ட க்காலத்தில் பிற்பட்ட பகுதிகளில் ஆரம்பக் கல்வியை விரிவாக்கவும், மகளிர் கல்வியை அதிகரிக்கவும் முதலிடம் அளிக்கப்படும். இளைஞர் பணிகளும், வளர்ச்சியடைய வகை செய்யப்படும். இத் திட்டக் காலத்தில் உயர் கல்வியைப் பொறுத்தமட்டிலும் நூலக, சோதனைச் சாலை வசதிகள், போதிய பணியாளர்கள் ஆகியவைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படும்.

பொதுச் சுகாதாரம் (Public Health)

சுகாதாரத்திற்காக நான்காம் திட்டத்தில் ரூ 435·03 கோடிகள் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால், இது மூன்றும் திட்டத்தில் ரூ. 225·86 கோடியாக மட்டுமேயிருந்தது. இத் திட்டக்காலத்தில் கிராமப் பகுதிகளில் சுகாதாரப் பணிகளைச் சீர்படுத்த ஆரம்பச் சுகாதார நிலையங்களை (Primary Health Centres) வலுப்பெறச் செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு வட்டாரத் திற்கும் ஒரு ஆரம்ப சுகாதார நிலையம் இருப்பதற்காக 340 வட்டா ரங்களில் 508 ஆரம்பச் சுகாதார நிலையங்களை ஏற்படுத்தத் தீர்மானிக்கப்பட்டது.

குடும்பக்கட்டுப் பாடு (Family Planning)

நான்காம் திட்டத்தில் குடும்பக் கட்டுப்பாட்டிற்கு உயர் மேல் சிறப்பிடம் (Priority) அளிக்கப்பட்டுள்ளது. பொருளாதார வளர்ச்சியினால் எல்லோருக்கும் நன்மைகள் கிடைக்க அடுத்த 10-12 ஆண்டுகளில் பிறப்பு வீதத்தை 1000-க்கு 39 ஆக இருப்பதிலிருந்து 1000-க்கு 25 ஆகக் குறைக்கத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. 1980 வரைக்கும் குடும்பக்கட்டுப்பாடு மத்திய ஆதரவு பெற்ற செயல் திட்டமாகத் தொடர்ந்து இருந்து வரும். இதற்கான எல்லாச் செலவினங்களையும் மத்திய அரசே மேற்கொள்ளும். குடும்பக் கட்டுப்பாட்டுச் செயல் திட்டங்களுக்காக நான்காம் திட்டக் காலத்தில் ரூ. 315 கோடி செலவிடப்படும்.

சமூக நலன் (Social Welfare)

சமூக நலத் திட்டங்களுக்காக ரூ. 41 38 கோடிகள் ஒதுக்கப் பட்டுள்ளன. மூன்றும் திட்டத்தில் இது 1 ·41 கோடி ரூபாயாக மட்டுமேயிருந்தது. கிராமங்களில் குடும்பம், குழந்தை நலத்

திட்டங்கள் மேற்கொள்வதே சமூக நலத் திட்டத்தின் முக்கிய அம்சமாகும். பள்ளிக் குழந்தைகளுக்குச் சத்துணவு பற்றாக்குறை ஏற்படுவதைத் தடுக்க முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இதற்காக ரூ. 8 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது

பிராந்திய வளர்ச்சி (Regional Development)

கல்கத்தா நகரப் பகுதியில் ஒருங்கிணைந்த நகர வளர்ச்சிக்காக 'மேற்கு வங்காளத் திட்டம்' தீட்டப்பட்டது. இதற்காக ரூ. 40 கோடி ஒதுக்கப்பட்டது. இத் திட்டத்தின் மூலம் நீர் விநியோகம், சாலைவசதிகள், சேரிச் சீரமைப்பு வீட்டு வசதி, நகர வளர்ச்சி ஆகியவைகளில் கவனம் செலுத்தப்படும்.

வீட்டுவசதி (Housing)

வீட்டு வசதி, நகர வளர்ச்சி ஆகியவைகளுக்காக மொத்தம் ரூ. 216·60 கோடி ஒதுக்கப்பட்டது. இதில் மத்தியத் துறை ரூ. 48·60 கோடியும், மீதி ரூ. 168 கோடியை மாநிலங்கள், யூனியன் பிரதேசங்கள் செலவிடும்.

வேலை வாய்ப்பு (Employment)

வேளாண்மை, கிராம நலனை மேம்படுத்தும் அமைப்பு, மின்வசதி, கிராமத் தொழில்கள், போக்குவரத்து இணைப்பு, கிராம-நகர வீட்டுவசதி, போன்றவைகளில் முதலீடு செய்வதன் மூலமாக, தொழிலாளர் செறிவுத் திட்டங்களுக்கு (Labour Intensive Programmes) நான்காம் திட்டத்தில் முக்கியத்துவம் அளிக்கப் பட்டுள்ளது. தொழில் நுட்பக் காரணங்களாலும், சில துறைகளில் தொழிலாளர் செறிவு முறை மேற்கொள்ளப்பட முடியாத காரணத்தாலும் மட்டுமே பேரளவு முதல் செறிவு முதலீடுகள் (Capital intensive investments) மேற்கொள்ளப்படும். வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் சமயத்தில் போதிய திறமையின் அடிப் படையில் ஆக்கத்திற்கு உகந்த வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தக் கவனம் செலுத்தப்படும். நான்காம் திட்டத்தில் தொழிலாளர் நலன், கைவினைஞர் பயிற்சித் திட்டங்கள், ஆகியவைகளுக்காக 37·11 கோடி ரூபாய்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. இதில் மத்தியத் துறை 9·2 கோடி ரூபாயும், மாநிலத் துறைகள் 25·12 கோடி ரூபாயும், யூனியன் பிரதேசங்கள் ரூ. 2·79 கோடியும் செலவிடும். நான்காம் திட்டக் காலத்தில் எந்த அளவு புதிய வேலை வாய்ப்புக் களையும், பணி புரிவோரின் ஊதியங்களை அதிகப்படுத்தவும், முடியுமென்பதைத் திட்டக்குழு துல்லியமாகக் கணக்கிடமுடிய வில்லை. ஆனால்,வேலை வாய்ப்புகளை அதிகரிப்பதைத் தடுக்கும் கட்டுப் பாட்டுக் கொள்கைகளைப் போக்குவதற்குத் தகுந்த வழிகள் மேற் கொள்ளப்படவேண்டுமென்று திட்டக் குழு உணர்த்தியுள்ளது.

நான்காம் திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்
(Salient features of the Fourth Plan)

இத் திட்டத்திற்கு முன்னைய மூன்றாண்டுகளிலிருந்த திட்ட விடுமுறையை நான்காம் திட்டம் முடிவுறச் செய்தது. இது பொருளாதாரத்தின் தேக்க நிலையைப் போக்கி எதிர்காலத்துக்கு புதிய ஊக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. பொருளாதாரத் திட்டத்திற்குப் பல்வேறு எதிர்ப்புகள் இருந்த போதிலும் அரசு ஊக்கத்துடன் இத் திட்டத்தை மேற்கொண்டுள்ளது வரவேற்கத் தக்கதாகும். நான்காம் திட்டத்தின் முக்கிய அம்சங்கள் வருமாறு.

## 1. பெரிய அளவுத் திட்டம் (Large size of the plan)

*1969*-ன் நான்காம் திட்ட நகலைவிட இறுதி நான்காம் திட்டம் (Final fourth plan) மிகவும் சிறப்புடையதாகும். இறுதித் திட்டத்தில் நிதி ஒதுக்கீடு ரூ. *484* கோடி அதிகரிக்கப்பட்டு ரூ. *24,882* கோடியாக இருந்தது. ஆனால், இது *1969*-ன் நகல் திட்டத்தில் (Draft plan) ரூ. *24,398* கோடியாக மட்டுமே இருந்தது. இந்த அளவில் இறுதித் திட்டம் பெரிய அளவுத் திட்டமாக மாறியது. மேலும், இறுதித் திட்டத்தில் முன்னைய திட்டத்தைவிடப் பொதுத் துறைக்கு அதிகச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. பொதுத் துறை நிதி ஒதுக்கீடு நகல் திட்டத்தில் *14,398* கோடி ரூபாயாக இருந்தது. இறுதித் திட்டத்தில் இது *15,902* கோடி ரூபாயாக அதிகரிக்கப்பட்டது. எனவே, பொதுத் துறை ஒதுக்கீடு இறுதித் திட்டத்தில் **1504** கோடி ரூபாய் அளவில் அதிகரித்தது. நாடு சமதர்மப் பாதையை நோக்கி முன்னேற வேண்டுமானால் தேசியப் பொருளாதாரத்தில் பொதுத் துறையின் பங்கு கணிசமான அளவு அதிகரிக்க வேண்டியது இன்றியமையாததாகும். இறுதித் திட்டத்தில் தனியார் துறையின் முதலீட்டின் அளவும், குறைக்கப்பட்டது. நகல் திட்டத்தில் தனியார் துறைக்கு ரூ. **10,000** கோடி ஒதுக்கப்பட்டிருந்தது ஆனால் இறுதித் திட்டத்தில் அது ரூ. *8,980* கோடியாக குறைக்கப்பட்டது. அதாவது தனியார் துறையின் நிதி ஒதுக்கீடு ரூ. *1,020* கோடி அளவில் குறைந்தது. திருத்தப்பட்ட தனியார் துறைமுதலீடாகிய *8,980* கோடி ரூபாயும் அதிகமானதென்றே நிபுணர்கள் கருதுகின்றனர்.

## 2. நிலைபேறுடன் வளர்ச்சி
(Growth with Stability)

விரைவான பொருளாதார வளர்ச்சியோடு கூடவே நிலைபேறுடைய பொருளாதார நிலையும், நிச்சயமின்மையைப் போக்கும்

வழி முறைகளும், கையாளப் படவேண்டுமென்று இறுதித் திட்டம் வலியுறுத்துகிறது. நிலைபேறின்மையும், நிச்சயமின்மையும், இந்தியப் பொருளாதாரத்தில் ஏற்படுகின்றன. இதற்குக் காரணம் உணவுத் துறையில் காணப்படும் வலுவின்மையும், வெளிநாட்டு உதவியில் மிதமிஞ்சிய சார்புமேயாகும். எனவே, இத்தகைய சம நிலையின்மையைப் போக்க வேளாண்மை உற்பத்தியில் ஏற்படும் குறைகளைப் போக்கி, வெளி உதவியில் ஏற்படும் நிச்சயமின்மைக்குப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் நான்காம் திட்டம் அமையும். உணவு தானியங்களின் விலைகள், பொது விலைகள், நிலையாக இருப்பதற்காக இத் திட்டம் எச்ச இருப்புகளை (Buffer Stocks) கணிசமான அளவு ஏற்படுத்த வகை செய்கிறது. வெளிநாட்டு உதவியை எதிர்பார்க்காமல் சுயச்சார்புடன் வளர்ச்சியை மேற்கொள்ள இத் திட்டம் வகை செய்யும். இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொருளாதார நிலை பேறின்மையால் ஏற்படும் தொல்லைகள் அதிகம். எனவே, நான்காம் திட்டத்தின் முக்கிய குறிக்கோள் நிலைபேறுடைய வளர்ச்சியைச் சாதிப்பதாகும்.

பொருளாதாரச் சமநிலைக் குறிக்கோளுடன் நிலைபேறான விலைகளையும் (Price-stability) அடைய வேண்டுமென்று இத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்காகப் பல்வேறு உற்பத்தி இலக்குகளும், திட்டத்தின் நிதிமுறைகளும் ஒழுங்குபடுத்தப்பட்டன. வேளாண்மை உற்பத்தி இலக்குகள் இதைக் கருத்தில் கொண்டே குறிக்கப்பட்டன. பணவீக்கமில்லா முறையில் முதலீட்டுச் செயல் திட்டங்கள் மேற்கொள்ளப்படும். பொருளாதாரத்தில் தற்போது அதிகப் பணவீக்கமிருப்பதால் வரி விதித்தல், கடன் பெறுதல் ஆகியவைகளின் மூலமாகவே நான்காம் திட்ட முதலீட்டுச் செயல் திட்டங்களுக்கு நிதியிடத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. பற்றுக்குறை நிதியாக்கத்தின் மூலமாக ரூ. 850 கோடிகள் மட்டுமே நிதியிடப் படும். இது திட்டத்தின் மொத்த நிதியில் 5·3 சதவீதமாகும். நாட்டில் ஏற்கெனவே விலைகள் கடுமையாக அதிகரித்து வருவதால் பற்றுக்குறை நிதியாக்கம் 850 கோடி ரூபாயைவிட அதிகமானல் விலைகளின் போக்கு மேலும் சீர்கேடு அடையும்.

மூன்றும் திட்டக் காலத்திலும், வருடாந்திரத் திட்டக் காலங்களிலும், விலைகள் கடுமையாக அதிகரித்ததற்கு ஒரு காரணம் மிதமிஞ்சிய பற்றுக் குறை நிதியாக்கமாகும். மூன்றும் திட்ட ஆரம்ப நிதியாக்கம் ரூ. 550 கோடிகளாக இருக்குமென்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனல், உண்மையில் மூன்றும் திட்டக் காலத்தில் பற்றுக்குறை நிதியாக்கம் 1,133 கோடியாக இருந்தது. வருடாந்திரத் திட்டங்களிலும் பற்றுக்குறை நிதியாக்கம் 335

கோடி ரூபாயாக இருக்குமென்று எதிர்பார்த்ததற்குப் பதிலாக உண்மையில் 682 கோடி ரூபாயாக இருந்தது. மத்திய, மாநில அரசுகள் நான்காம் திட்டத்தில் பற்றுக் குறை நிதியாக்கம் 850 கோடி ரூபாய்க்கு மேல் அதிகரிக்காம லிருக்கச் செய்வார்கள் என்று நம்பப்படுகிறது.

## 3. வெளிநாட்டு உதவியைக் குறைத்தல்

படிப்படியாக, வெளிநாட்டு உதவியைச் சார்ந்திருத்தலை நான்காம் திட்டத்தில் குறைக்கத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. நான்காம் திட்டத்தின் முக்கியக் குறிக்கோள்களுள் இதுவும் ஒன்றாகும். வெளி உதவியைச் சார்ந்திருப்பதால்தான் நாட்டில் பொருளாதார நிலைபேறின்மை ஏற்படுகிறதென்பதை எல்லோரும் அறிந்துள்ளனர். வெளி உதவியை நம்பி வளர்ச்சிக்காகத் திட்ட மிடுதல் மிகவும் கடினமான செயலாகும். சில பொருளாதார, அரசியல் நிலைமைகள் பூர்த்தி செய்யப்பட்டால்தான் செல்வந்த மேர்கத்திய நாடுகள் வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு உதவி செய்ய முன்வருவர். அவைகள் அளிக்கும் உதவி முழுவதும் நிபந்தனைகளை யுடையதாகவே உள்ளது. மேலும், நீண்டகால நிதிவசதி யளிக்காமல் குறுகிய கால நிதி வசதிகளையே அவைகள் அளிக்கின்றன. எனவே, நான்காம் திட்ட இறுதிக்குள் வெளிநாட்டு உதவியின் அளவைக் கூடுமான வரையில் குறைக்கத் திட்டக் குழு தீர்மானித்துள்ளது.

## 4. சமத்துவமும் சமூக நீதியும்
(Equality and Social justice)

நான்காம் திட்டத்தில் மற்றொரு சிறப்பு அம்சம் சமத்துவத்தையும் சமூக நீதியையும் மேம்படுத்தலாகும். இவற்றை மேம்படுத்த அரசாங்கத்தால் தீவிர முயற்சிகள் எடுக்கப் படா விட்டால் செல்வமும் வருவாயும் ஒரு சிலரிடமே பெருமளவில் குவிந்து, சரிசமமில்லா பிராந்திய வளர்ச்சியேற்படுமென்பதைத் திட்டத்தின் அறிக்கை குறிப்பிடுகின்றது எனவே, நான்காம் திட்டத்தில் விரைவான பொருளாதார வளர்ச்சியுடன்கூடவே சமத்துவமும் சமூக நீதியும் தொடர்ந்து ஏற்படப் பெரிதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இதைச் சாதிக்க முதலில் பொருளாதாரக் குவிப்பைக் குறைக்கும் நடவடிக்கைகளும், செல்வ, வருமான பொருளாதாரக் குவிப்புப் பரவலாக்கும் முயற்சிகளும் மேற்கொள்ளப் படவேண்டும். அடுத்தபடியாக, பொது மனிதனின்

நிலைமையைச் சீரமைக்கவும், கல்வி வசதிகளையும், வாய்ப்புகளையும் ஏழை மக்களுக்கு விரிவடையச் செய்யவும் முயற்சிகள் மேற்கொள்ளப்படும். வரிக் கொள்கைகள், தொழில் உரிமம் வழங்குதல், சர்வாதீனச் சட்டப்படி நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல், பொதுத்துறை நடவடிக்கைகளை மேலும் விரிவாக்குதல், பிற்பட்ட பகுதிகளில் தொழில்களைப் பரவலாக்குதல், பணத்துறை, மற்றநடவடிக்கைகளை மேற்கொள்ளுதல், நிலஉச்ச வரம்பு போன்ற சீர்திருத்தங்களை அமுலாக்குதல். போன்றவை களின் மூலம் சமத்துவத்தையும் சமூக நீதியையும் மேம்படுத்த இத் திட்டம் வகை செய்யும்.

## 5. பிராந்திய ஏற்றத்தாழ்வுகளை நீக்குதல்

சமத்துவத்தை மேம்படுத்துவதற்கான வழிகளில் பிராந்திய ஏற்றத்தாழ்வுகளைச் சரிசெய்தலும் ஒன்றாகும். இத் திட்டத்தில் இதற்காகத் திட்டவட்டமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும். மத்திய அரசு கீழ்க்கண்ட வழிகளில் இச் செயல் முறைக்குத் துணைபுரியும்.

1. மத்திய உதவியை ஒதுக்கீடுசெய்தல் 2. மத்திய செயல் திட்டங்களைப் பிராந்தியங்களில் நிறுவுதல் 3. தேசியநிதி, மற்ற நிறுவனங்களின் கொள்கைகளையும், நெறிமுறைகளையும் ஒழுங்கு பெறச்செய்தல் ஆகிய வழிகளை மத்திய அரசு மேற்கொள்ளும். பிராந்திய ஏற்றத் தாழ்வுகளைச் சரிசெய்யும் நோக்கத்துடன் செப்டம்பர் 1970-ல் திட்டக்குழு நிதிச்சலுகைகளை அளித்துச் சிறு, நடுத்தரத் தொழில்களை ஆரம்பிப்பதற்காக பதினன்கு மாநிலங்களில் உள்ள 78 தொழிலில் பின் தங்கிய மாவட்டங் களைத் தேர்ந்தெடுத்தது. பொதுத்துறை நிறுவனங்களால் அளிக் கப்பட்ட சலுகைகளில் குறைந்த வட்டிவீதங்கள், நீண்டதவணைக் காலம் ஆகியவைகளும் உள்ளடங்கும்.

## 6. வேலை வாய்ப்புகளை அதிகரித்தல்

நான்காம் திட்டம் வேலை வாய்ப்பை அதிகரிக்கும் நோக்கத்தோடு அமைக்கப்பட்ட திட்டமாகும். கிராம-நகரத்துறை களில் வேலை வாய்ப்புகளை பெருமளவில் அதிகரிப்பதே இத் திட்டத்தின் தலையாய குறிக்கோளாகும். வேளாண்மைச் செயல் திட்டங்கள், கிராமத் தொழில், கிராம பொதுநலன் அமைப் புகள் (Infra-structure) ஆகியவைகளை வளர்ச்சியடையச்செய்தல், கிராம நகர, வீட்டு வசதித் திட்டங்கள், ஆகியவைகளுக்கு இத் திட்டத்தில் முக்கியத்துவம் தரப்பட்டுள்ளதால் வேலைவாய்ப்

புகள் பெருமளவில் அதிகரிக்க வகை செய்யப்பட்டுள்ளது. தொழிலாளர் செறிவு நுட்பமுறை, பயன்படுத்த முடியாத பகுதிகளிலும் திட்டங்களிலும் மட்டுமே முதல் செறிவு செயல் திட்டங்கள் மேற்கொள்ளப்படும். தொழில் வேளாண்மை நடவடிக்கைகளில் ஏற்பட்டுள்ள விரைவான வளர்ச்சியின் விளைவாகச் சாலைப்போக்குவரத்துபோன்ற மூன்றும் நிலைப் பணித்துறைகளில் (Tertiary Sector) வேலை வாய்ப்புகள் பெருமளவில் அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## 7. தேசியக் குறைந்தபட்ச வருவாய்

நான்காம் திட்டக்காலத்தில் அதிகரிக்கும் வருவாயைத் தகுந்த முறையில் பகிர்வு செய்வதன் மூலமாக, தேசியக் குறைந்த பட்ச கூலியையும், ஏற்படுத்த முடியுமென்று திட்டத்தில் வலியுறுத்தப் பட்டுள்ளது. அடுத்த இரண்டு திட்டக் காலங்களில் எதிர்பார்க்கப் பட்ட தேசிய வருவாய் வளர்ச்சிஏற்பட்டால், பத்தாண்டுகளின் இறுதியில் நியாயமான அளவு சராசரி தலாவருவாயைப் பெற முடியுமென்று திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால், தற்போதுள்ள வருமானப் பகிர்வு முறைகளை மாற்றினாலன்றி ஏழை மக்களின் நுகர்வுத்தரம் (Consumption Standards) கீழ்நிலையிலேயே இருக்கும். தேசியக் குறைந்த பட்ச வருமானங்களை அடைய ஏராளமான செயல் முறைகள் இத் திட்டத்தில் சேர்க்கப் பட்டுள்ளன.

## 8. நிலச்சீர்திருத்தங்கள்

சமூகப் பொருளாதார அம்சங்களை உள்ளடக்கிய மக்களாட்சியை வலுப்பெறச்செய்யப் பல்வேறு நிறுவனங்களை மாற்றியமைக்க நான்காம் திட்டத்தில் தீர்மானிக்கப்பட்டுள்ளது. முக்கியமாகக் குடியானவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவல்ல நிலச்சீர்திருத்தங்களை இத் திட்டம் பெரிதும் வலியுறுத்தும். நிறைவேற்றும் சட்டங்களுக்கும் செயல் முறைகளுக்கும் இடையே உள்ள இடைவெளியைக் குறைப்பதற்காக நடவடிக்கைகள்மேற்கொள்ளப்படும். பல்வேறு நிலச்சீர்திருத்தங்களை மிகத்திறமையுடன் அமுலாக்குவதற்கு இத் திட்டம் வகை செய்யும்.

## 9. நல்லவிலைக் கொள்கை

பொதுஉற்பத்தி நிறுவனங்களால் அளிக்கப்படும், பொருள்களுக்குத் தகுந்த விலைகளைத் தீர்மானிக்க நான்காம் திட்டத்தில்

ஒரு சிறப்பு விலைக்கொள்கை திட்டப்பட்டுள்ளது. வேளாண்மைப் பொருள்களின் அளிப்பிற்காகத் தரப்படும் பொது உதவிக் கொடைகளை நிறுத்த வேண்டுமென்று குறிப்பிடப்பட்டுள்ளது. பொது உற்பத்தி நிறுவனங்கள் தங்கள் பொருள்களுக்கு தகுந்த விலைகளைக் குறிக்க வேண்டும். இந் நிறுவனங்கள் இலாபத்தைப் பெற முயற்சிக்க வேண்டியதோடு, மேற்கொண்டு முதலீட்டை அதிகரிக்க எச்ச இலாபத்தையும், பெறுவதற்கு வகை செய்ய வேண்டும்.

## 10. கீழ்மட்டத்திலிருந்து திட்டமிடுதல்
(Planning from Below)

நான்காம் திட்டத்தின் மற்றொரு முக்கிய அம்சம் திட்டத்தைப் பரவலாக்கும் நடவடிக்கைகளாகும். கீழிருந்து மேல் திட்டமிடும் முறையை இத் திட்டம் ஊக்குவித்தது. இதற்காக உள்ளூர், மாவட்ட மட்டங்களில் திட்டங்களைத் தோற்றுவிக்கப் பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து சமிதிகள, போன்ற பஞ்சாயத்து ஆட்சி அமைப்புகளைப் பயன்படுத்த வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டுள்ளது. இத்தகைய நடவடிக்கைத் திட்டம் அதிக அளவில் மத்திய மயமாக்கப்படுவதைத் (Over-Centralisation) தடுக்கத் துணைபுரியும். இது திட்டத்தின் மெய்யான நடைமுறைகளில் உள்ளூர் மக்கள் பங்கேற்கத் தக்க வாய்ப்புகளை ஏற்படுத்தும்.

மேற்குறிப்பிட்ட அம்சங்களோடு கூட நான்காம் திட்டத்தில் பொதுத்துறையின் சீரமைப்பு, நுட்பத் தொழிலாளிக்கு மரியாதைக்குரிய தகுதியளித்தல், போன்ற அம்சங்களும் உள்ளடங்கும். பொதுத்துறை நிறுவனங்களில் செயல்திறனைச் சீரமைக்க நிர்வாகத்தில் தகுந்த சீர்திருத்தங்கள் இத் திட்டத்தில் மேற்கொள்ளப்படும். இதற்கு முதலில் பொதுத்துறை நிறுவனங்களிடையே அதிக ஒத்துழைப்பும் ஒருங்கிணைப்பும் தேவை. இரண்டாவதாக ஒவ்வொரு நிறுவனங்களின் பகுதிகளில் தீர்மானம் மேற்கொள்ளுதல், திறமையுடன் பரவலாக்கப் படவேண்டும். பொதுத்துறை நிறுவனங்களின் கட்டுப்பாடு மத்திய மயமாக்கப்பட்டுள்ளதால் அவைகளின் வளர்ச்சி கடுமையாக தடைபடுகிறது. எனவே, கட்டுப்பாடு பரவலாக்கப்பட வேண்டுமென்று இத் திட்டத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது. பொதுத்துறை நிறுவனங்களில் நுட்பத் தொழிலாளிக்கும், நிபுணருக்கும் மரியாதைக்குரிய இடத்தை அளிக்க வேண்டுமென்றும் இத் திட்டத்தில் வலியுறுத்தப் பட்டுள்ளது. நுட்பத் தொழிலாளிகள் புறக்கணிக்கப் பட்டதால், இந் நிறுவனங்களின் திறமையான பணி பாதிக்கப்பட்டுள்ளது.

## நான்காம் திட்டத்தின் ஆய்வுரை

நான்காம் திட்டம் பல்வேறு வழிகளில் குறை கூறப்பட்டுள்ளது. முதலாவதாக, நான்காம் திட்டத்தை இறுதி நிலைக்குக் கொண்டுவருவதில் பெரிதும் காலதாமதம் ஏற்பட்டது. இரண்டாவதாக, மூன்றும் திட்டத்தின் குறைகளைத் தெளிவாக ஆராயாமல் நான்காம் திட்டம் வரையப்பட்டது. கடந்தகாலக் குறைகளையும் தோல்விகளையும் அறிந்து செயல்பட்டால்தான், எதிர்காலத்தில் சீராகத் திட்டமிடமுடியும். மூன்றுவதாக, நீண்டகால மாதிரித் திட்டம் நடைமுறைக்கு உகந்ததாக இல்லை. நீண்டகால நிபந்தனைகளும், இலக்குகளும், உண்மைக்கு அப்பாற்பட்டவைகளாய் உள்ளன. நான்காவதாக, குறைந்த வளர்ச்சி வீதம் குறிக்கப்பட்டிருப்பது நான்காம் திட்டத்தின் மிகப்பெரிய குறையாகக் கருதப்பட்டுள்ளது. மொத்த வளர்ச்சி வீதம் ஆண்டொன்றுக்கு 5·5 சதவீதமாகக் குறிக்கப்பட்டுள்ளது மிகக்குறைந்த வளர்ச்சி வீதமாகும். இதனடிப்படையில் ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆண்டொன்றுக்கு வளர்ச்சி இலக்கு 6 சதவீதமாக எதிர்நோக்கப்பட்டுள்ளது மிகவும் பிற்பட்ட கணக்கீடாகும். ஐந்தாவதாக, மற்ற வளர்ச்சி வீதங்களும், நடைமுறைக்கு ஏற்றவைகளாக இல்லை. வேளாண்மை வளர்ச்சிவீதம் ஆண்டொன்றுக்கு 5 சதவீதமென்றும், தொழில் வளர்ச்சி வீதம் 8 - 10 சதவீதம் என்றும் ஏற்றுமதி ஆண்டொன்றுக்கு 7 சதவீதம் வளர்ச்சியடையுமென்றும், குறுக்கப்பட்டுள்ளது ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இல்லை என்று நிபுணர்கள் குறைகூறுகின்றனர். ஆறுவதாக, நான்காம் திட்டம், அளவில் சிறியதாக இருப்பதாகக் குறைகூறப்பட்டுள்ளது. மொத்த முதலீடு மூன்றும் திட்டத்தில் 11,319 கோடி ரூபாயாக இருந்ததைக் காட்டிலும் நான்காம் திட்டத்தில் 22,635 கோடி ரூபாயாக அதிகரித்த போதிலும், 1965-66லிருந்து விலைமட்டம் நிலையாக அதிகரித்து வருவதால் நான்காம் திட்டத்தின் உண்மையளவு மிகவும் சுருங்கியதாக இருக்கும். ஏழாவதாக, நான்காம் திட்டத்தில் குறைந்த அளவு உற்பத்தி இலக்குகள் குறிக்கப்பட்டுள்ளதென்றும் குறை கூறப்பட்டுள்ளது. எட்டாவதாக, இத் திட்டம், சமதர்மக் கருத்தை உள்ளடக்க வில்லை யென்றும் குறை கூறப்பட்டுள்ளது. ஒன்பதாவதாக, இத் திட்டம் சுய ஊக்கம் இல்லாத திட்டமாக உள்ளது என்றும் குறைகூறப்பட்டுள்ளது. பத்தாவதாக, தீவிர உற்பத்திக்கொள்கைகளின் சமூக அம்சங்கள் முழுவதுமாக உணரப்படவில்லை. அடுத்தபடியாக இத் திட்டத்தில் நிலச்சீர்திருத்தங்கள் புறக்கணிக்கப்பட்டுள்ளன. தீவிரமான முறையில் இவைகள் அமுலாக்கப்படத் திட்டம் எதுவும் குறிப்பிடப்படவில்லை. அடுத்தபடியாக முதலீட்டின் பாங்கில்

ஏற்பட்டுள்ள மாற்றங்களை நிபுணர்கள் ஏற்றுக்கொள்ள வில்லை. மாதிரியாக, கிராமச் சிறு தொழில்களுக்காக ஒதுக்கப் பட்ட முதலீட்டுத் தொகையின் அளவு மிகவும் குறைவானதாகும். இவைகள் தொழிலாளர் செறிவுடைய தொழில்களாதலால், இவை களால் வேலை வாய்ப்புகளைப் பெருக்க முடியும். இத்தொழில் களின் பங்கைப் புறக்கணித்திருப்பது மிகவும் வருந்தத் தக்கதாகும். மேலும், கூடுதல் நிதிவளங்களைச் சேகரிக்கும் அளவும் போதிய அளவில் அமையவில்லை. இதனால் திட்டத்திற்கு நிதியிடுவதில் பற்றாக் குறையேற்படும். அடுத்தபடியாக, 'மனித சக்தித் திட்டம்' (Man-Power Planning) முழு அளவில் நடைமுறைப் படுத்தப் படாமல் ஓரளவே திட்டத்தில் இடமளிக்கப்பட்டுள்ளது. இத் திட்டத்தில் திட்டவட்டமான வேலைவாய்ப்புக் கொள்கை தீட்டப் படாதது மிகப் பெரிய குறையாகும். இளைஞர்களில் பெரும் பாலோர் தெருக்களில் வேலையின்றி அலைகின்றனர். தற்போது, வேலையின்மைப் பிரச்சினை இந்தியாவின் முதலிடம் வகிக்கும் கடுமையான பிரச்சினையாக இருந்து வருகிறது. இத் தீவிரமான பிரச்சனைக்குத் தீர்வுகாணத் தெளிவான, திட்டவட்டமான வேலைக் கொள்கையை வகுக்கத் திட்ட நிபுணர்கள் தவறி விட்டனர். அமைப்புடைய தொழிலளர்களுக்குச் சிறப்பான எதிர்காலம் எது வும் ஏற்படும் வகையில் வேலைக்கொள்கையும், தொழிலாளர் கொள் யும் தீட்டப்படவில்லை. கடைசியாக நான்காம் திட்டத்தில் விரிவான, தெளிவுடைய, முழுமைப் பெற்ற விலைக்கொள்கையும் வகுக்கப்படவில்லை. கடந்தகால அனுபவத்திலிருந்து திட்ட நிபுணர்கள் சரியான பாடம் எதுவும் கற்றுக் கொள்ளவில்லை என்பது நான்காம் திட்ட விலைக்கொள்கையிலிருந்து தெரிகிறது" என்று நிபுணர்கள் குறை கூறுகின்றனர். வேலையின்மைப் பிரச் சினையையும், பொருள்களின் விலை ஏற்றத்தையும், குறைப் பதற்காக நான்காம் திட்டம் திறம்படச் செயலாற்றுமானால் மேற்குறிப்பிட்ட குறைபாடுகள் தீவிர விளைவுகளை உடனடியாக ஏற்படுத்தாது என்பது திண்ணமாகும்.

# 45. இந்தியாவில் பணவீக்கமும் விலைக் கொள்கையும்

## (Inflation in India and Price Policy)

இந்தியாவில் இரண்டாம் உலகப் போரின் காலத்திலிருந்து பணவீக்கம் இருந்துவருகிறது. பணவீக்கம் என்பது, "பொருள் களின் அளிப்பு வேண்டிய அளவு அதிகரிக்காமல் இருக்கும் நிலையில் நுகர்வோர்களிடம் வாங்கும் திறன் அதிகரிப்பதால் ஏற்படும் விலை களின் ஏற்றத்தைக்" குறிக்கின்றது. டிசம்பர் 1956-ல் மொத்த விலைகளின் பொதுக் குறிப்பெண் (index) 421·8 ஆக இருந்தது. இது இந்தியாவில் பணவீக்கம் ஏற்பட்டிருப்பதற்கு அடையாளம் ஆகும். மேலும், கடந்த 15 ஆண்டுகளாக இந்தியாவில் பண வீக்கம் ஏற்பட்டிருப்பதை மற்றப் பொருளாதாரக் காரணிகளாலும் அறியலாம். பொதுவாக, மக்கள் அதிகப் பணத்தைக் கொடுத்துக் குறைந்த அளவு பொருள்களை வாங்குவது வழக்கமாகியிருக்கின்றது. உண்மையில் பணவீக்கம் கட்டுக்கடங்காமல் அதிகரித்து வருவது இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒரு வகையில் பெருந் தடையாய் உள்ளது.

இந்தியாவில் சீரான பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமை யாததாக விளங்குவது தகுந்த விலைக் கொள்கையாகும். விலை களின் மாற்றங்களைத் துல்லியமான முறையில் அறிந்தால்தான் நாட்டின் பொதுவான பொருளாதார நிலைமையை அறிந்து, தகுந்த கொள்கையை ஏற்படுத்தமுடியும். இந்தியா போன்ற வேளாண்மை நாடுகளில் விலைகளைக் கட்டுப்படுத்தித் தீட்டப்பட்ட திட்டங்களைச் சிறப்பாக அமுலாக்க விலைக்கொள்கை முக்கியமான தாய் விளங்குகிறது. விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு ஓர் அளவு குறைந்த பட்ச பணவீக்கம் அவசியமாகும் என்பது ஒருசாரார் கருத்தாகும். அதாவது விலைகள் அதிகரித்தால் லாபமும் அதிகரித்து உற்பத்தி, முதலீடு வேலை வாய்ப்பு ஆகியவை களும் அதிகரிப்பதால், ஓர் அளவு பொருளாதார வளர்ச்சி அதிகரிக் கிறது. ஆனால், விலைகள் அதிகரிப்பதால் பணத்தின் வாங்கும்

சக்தி குறைந்து நடுத்தர, குறைந்த வருமானம் பெறும் வகுப்பைச் சேர்ந்தவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். எனவே, அரசு நாட்டிற்குத் தகுந்த கட்டுப்பாடுகள்மூலம் விலைக் கொள்கையை அமுலாக்க வேண்டும்.

## திட்டக்காலத்திற்கு முன் விலைகள்

இரண்டாம் உலக யுத்தக் காலத்தில் இந்தியாவில் பணவீக்கம் தோன்றியது. யுத்தத்தினால் உணவு தானியங்கள் போன்ற அடிப்படை நுகர்வுபொருள்கள், மற்றும் அநேகப் பொருள்களுக்கு பற்றாக்குறை ஏற்பட்டு விலைகள் அதிகரித்தன. மேலும், அரசின் போர்ச் செலவுகள், அதன் விளைவாக மக்களிடம் ஏற்பட்ட வருவாய் அதிகரிப்பு, பொருள்களின் தேவையை அதிகரித்தது. அதற்கு மேலாக மக்களிடம் பணப் புழக்கம் அதிகரித்தது. உதாரணமாக 1938-39-ல் ரூபாய் 182 கோடி மதிப்புடைய பணம் புழக்கத்தில் இருந்தது. ஆனால், 1945-46-ல் இது 600% அதிகரித்து ரூபாய் 1,163 கோடியாக இருந்தது. விலைகளைக் கட்டுப்படுத்த அரசு விலைக்கட்டுப்பாட்டையும் பங்கீட்டு முறையையும் பின்பற்றியும் நல்ல பலன் இல்லாமல்போய் விட்டது. எனவே, 1938-39க்கும், 1945-46க்கும் இடைப்பட்ட காலத்தில் விலை மட்டம் $2\frac{1}{2}$ மடங்கு அதிகரித்து, பொது விலைகளின் குறிப்பெண் 245 ஆக இருந்தது. யுத்தம் முடியும் காலத்தில் இன்றியமையாத பொருள்களில் பற்றாக்குறை, பொருள் குவிப்பு, கொள்ளை லாபம் பெறுதல் போன்ற காரணங்களால் விலைகள் அதிகரித்தன. போர் முடிந்தும் விலைகள் தொடர்ந்து அதிகரித்துவந்தன. இதன் முக்கிய காரணங்களாவன :- 1. 1947-ல் ஏற்பட்ட நாட்டுப் பிரிவினையும் அதனால் ஏற்பட்ட பாகிஸ்தானியர் வருகையும் 2. கட்டுப்பாடுகள் நீக்கமும் விலைகள் அதிகரிப்பும் 3. செப்டம்பர் 1949-ல் ஏற்பட்ட ரூபாய் நாணய மதிப்புக் குறைவும் அதனால் ஏற்பட்ட விலை ஏற்றமும் 4. ஜூன் 1950-ல் ஏற்பட்ட கொரியப் போரும் அதனால் ஏற்பட்ட பன்னாட்டு விலைகள் அதிகரிப்பும் 5. மக்கள் தொகை வளர்ச்சியினால் அதிகரித்த பொருள்களின் தேவை. இத்தகைய காரணங்களால் இரண்டாம் போருக்குப் பிறகும் விலைகள் அதிகரித்தன.

## திட்டக்காலத்தில் விலைகளின் போக்கு

ஆரம்பக் காலத்தில் பணத்தின் அளிப்பு அதிகரித்ததால் இந்தியாவில் பணவீக்கம் ஏற்பட்டது. ஆனால், சமீப காலத்தில் பணவீக்கத்தின் தன்மை வேறுபட்டுள்ளது. அது முற்றிலும் பணவியல் காரணிகளால் ஏற்படுகிறது என்று கூற இயலாது.

தற்போது ஐந்தாண்டுத் திட்டங்களுக்காக அரசு ஏராளமான பணத்தை முதலீடு செய்வதால் நாட்டில் பணப்புழக்கம் அதிகரித்து, காலப்போக்கில் விலைமட்டம் அதிகரிக்கிறது. தொழிலாளர்களின் கூலிகள், உணவுப் பொருள்கள், மூலப்பொருள்கள், ஆகியவைகளின் விலைகள் அதிகரித்து, பணவீக்கத்தை அதிகப்படுத்துகின்றன. உற்பத்தியாளர்கள் உற்பத்திச் செலவைக் குறைத்து உற்பத்தியின் அளவை அதிகரித்தாலொழிய இந்தியாவில் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாது.

முதல் திட்டம் (1951-56)

மார்ச் 1951-ல் முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிக்கப் பட்டது. பணவீக்க அழுத்தங்களைக் கட்டுப்படுத்துவது முதல் திட்டக் குறிக்கோள்களில் ஒன்றாகும். இத் திட்டக் காலத்தில் பயிர்ச்சாகுபடி சிறந்த முறையில் இருந்ததால், இக் குறிக்கோளைச் சாதிக்க முடிந்தது. முதல் திட்ட இறுதியில் மொத்த விலைகளின் குறிப்பெண் மார்ச்சு 1951-ல் இருந்ததைக் காட்டிலும் சுமார் 22% குறைவாக இருந்தது. 1950-ம் ஆண்டோடு ஒப்பிடும்போது விலைகளின் பொதுக் குறிப்பெண் சுமார் 8% ஆகக் குறைந்து இருந்தது. கொரியப்போர் முடிந்ததும் அரசு மேற்கொண்ட பணவியல், நிதியியல் நடவடிக்கைகளால் 1951-ல் பொருள்களின் விலைகள் குறைந்தன. 1953, 1954 ஆகிய ஆண்டுகளில் ஏற்பட்ட அதிகப் பயிர்ச் சாகுபடியினால் பொருள்களின் விலைகள், முக்கியமாக உணவு தானியங்களின் விலைகள் குறைந்தன. எனவேதான் முதல் திட்ட ஒதுக்கீட்டுத் தொகையின் அளவு அதிகரிக்கப்பட்டது. மேலும் அரசாங்கத்தின் கணக்கில் உணவு தானியங்கள் வாங்கப் பட்டன. ஜூலை 1955 லிருந்து விலைகள் அதிகரிக்கத் தொடங்கின. பொதுவாக வேளாண்மைத் திட்டங்கள் சிறப்புடன் அமுலாக்கப் பட்டதால் முதல் திட்டக் காலத்தில் விலைகளின் போக்கு சாதகமாக இருந்தது.

இரண்டாம் திட்டம் (1956-61)

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் விலைகள் தொடர்ந்து அதிகரித்துவந்தன. ஐந்தாண்டுக் காலத்தில் மொத்த விலைகளின் பொதுக் குறிப்பெண் சுமார் 30% ஆகவும், உணவுப் பொருள்களின் விலைகள் 27% ஆகவும், தொழிற்சாலை மூலப் பொருள்களின் விலைகள் 45% ஆகவும், செய்பொருள்களின் விலைகள் 25% மேலாகவும் உயர்ந்தது. இத் திட்டத்தின் ஆரம்ப கட்டத்தில் இருந்த உணவு தானியங்களின் பற்றாக்குறை, விலைகள் அதிகரிப்பதற்குக் காரணமாய் இருந்தது. திட்டத்தின் பிற்பகுதியில் வேளாண்மை மூலப் பொருள்களின் பற்றாக்குறையால் விலைகள்

உயர்ந்தன. 1960-ல் தொழிற்சாலை மூலப்பொருள்கள், செய் பொருள்கள் ஆகியவைகளின் விலைகள் அதிகரித்ததை எல்லோரும் உணர்ந்தார்கள். இதன் விளைவாகப் பொதுக் குறிப்பெண் அதிகரித்தது. இத் திட்டக்காலத்தில் மக்கட்தொகை வளர்ச்சி, அதிகப் பண வருவாய் ஆகியவைகளால் மொத்த விலைகள் தொடர்ந்து அதிகரித்தன. அளிப்பும் போதிய அளவு இல்லாமல் போயிற்று. உதாரணமாக, 1957-58-ல் முன்னைய ஆண்டைவிட உணவுதானிய உற்பத்தி 6 மில்லியன் டன் குறைந்தது. அதே போல் பஞ்சு, சணல், எண்ணெய் வித்துகள் ஆகியவைகளின் உற்பத்தியும் குறைந்தது. வேளாண்மை உற்பத்தியில் ஏற்பட்ட மாற்றங்களும் பற்றாக் குறையும் விலைமட்டத்தைப் பெரிதும் பாதித்தது. பொதுக்கடன் 480-ன் அடிப்படையில் உணவுப் பொருள்கள் ஏராளமாக இறக்குமதி செய்யப்பட்டதால் உணவு தானியங்களின் விலைகளை ஓரளவு நிலையாக்க முடிந்தது. இரண்டாம் திட்டக் காலம் முழுவதும் தொழிலாளர் வகுப்பு வாழ்க்கைச் செலவுக் குறிப்பெண் மேல்நோக்கிச் சென்றது. அது திட்ட ஆரம்பத்தில் 100 ஆக இருந்தது திட்டத்தின் முடிவில் 124 ஆக அதிகரித்தது.

மூன்றும் திட்டம் (1961-1966)

கீழ்க்கண்ட அட்டவணை மூன்றும் திட்டக் காலத்தில் காணப் பட்ட விலைகளின் போக்கைக் காட்டுகிறது.

வகுப்பு வாரியாக மொத்த விலைகளின் குறிப்பெண்
(1952-53 = 100)

| வருடம் | உணவுப் பொருள்கள் | தொழில் மூலப் பொருள்கள் | செய் பொருள்கள் | எல்லா பொருள்களும் |
|---|---|---|---|---|
| 1960-61 | 120 | 145 | 124 | 125 |
| 1961-62 | 120 | 143 | 127 | 125 |
| 1964-65 | 160 | 163 | 137 | 153 |
| 1965-66 | 169 | 189 | 149 | 165 |

ஆதாரம்: இந்திய ரிசர்வு வங்கியின் வெளியீடுகள்.

மூன்றும் திட்டக் காலத்தில் விலைகளின் போக்கு பாதகமான நிலையை அடைந்ததோடு முதல் இரண்டு திட்டங்களிலிருந்து

கிடைத்த நன்மைகளும் நீங்கின. ஆனால், 1961-62-ல் விலைகள் ஏறக்குறைய ஒரேநிலையில் இருந்தன. தானியங்கள், பருப்பு வகைகள், தொழிலுக்குவேண்டிய மூலப்பொருள்கள், ஆகியவை களின் விலைகள் சிறிது குறைந்தன. ஆனால், 1962-ம் ஆண்டின் இறுதியில் ஏற்பட்ட சீனர்களின் படை எடுப்பும், அதன் விளைவாக அதிகரித்த பாதுகாப்புச் செலவும் பொருள்களின் விலைகளை விரை வாக அதிகரிக்கச் செய்தன. பதுக்கல், கொள்ளை இலாபம், பெறுதல் போன்றவைகளால் விலைகள் மேலும் அதிகரித்தன. இத் திட்டக்காலத்தில் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் வெகு வாக அதிகரித்தன. இத் திட்டக் காலத்தில் பொது விலைகளின் குறிப்பெண் 36% ஆகவும், உணவுப் பொருள்களின் குறிப்பெண் மட்டும் 48·4% ஆகவும் அதிகரித்தது. அதன் முக்கிய காரணங்கள் வருமாறு:- உள்நாட்டு உற்பத்தியில் பற்றாக்குறை ஏற்பட்டதோடு பொது, தனியார் துறைகளில் மொத்தச் செலவு அதிகரித்தது. செய்பொருள்களின் உற்பத்தி பொதுவாக மிகக் குறைந்திருந்தது. வேளாண்மை உற்பத்தி குறைந்ததால் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் அதிகரித்தன. வேளாண் மைப் பொருள்களின் விலைகள் அதிகரித்ததால் வாழ்க்கைச் செலவும் அதிகரித்தது. கூலிகள், வர்த்தக லாபங்கள், போன்ற வைகளும் அதிகரித்தன. ஏப்ரல் 1963-க்கும் 1968-க்கும் இடைப் பட்ட காலத்தில் மொத்தவிலைக் குறிப்பெண் 139·8 இருந்து 204·5 ஆக உயர்ந்தது. இது ஆண்டுக்கு 13% விலை உயர்வு வீதத்தைக் குறிக்கிறது. குறையுள்ள வேளாண்மைத் திட்ட முறை, மக்கட் தொகை அதிகரிப்பு, போன்ற காரணங்களால் இந்தியாவில் விலைகள் அதிகரித்து வருகின்றன. தேவைக் காரணிகளாலும் உற்பத்திச் செலவுக் காரணிகளாலும் பணவீக்க அழுத்தங்கள் ஏற்பட்டுள்ளன. 1967-68 ஆகிய ஆண்டுகளில் இந்தியப் பொருளாதாரத்தில் பண வீக்கம் ஒரு பக்கமும், துறைகளின் பின்னிறக்கம் மற்றொரு பக்கமும் தோன்றி முரண்பாடான நிலை ஏற்பட்டது.

## விலை அதிகரிப்பதன் காரணங்கள்

சமீபத்தில் விலைகள் அதிகரித்து வருவதற்கு தேவை, அளிப்பு ஆகியவைகளே காரணமாக இருக்கின்றன.

தேவைக் காரணிகள் (Demand Factors)

### 1. அதிகமான மக்கட்தொகை வளர்ச்சி

இந்தியாவில் மக்கட்தொகை நிலையாக தொடர்ந்து அதிகரித்து வருகின்றது. 1951-க்கும் 1961-க்கும் இடைப்பட்ட காலத்தில் மக்கட் தொகை வளர்ச்சிவீதம் ஆண்டுக்கு 2·2 சதவிகிதமாக

அதிகரித்தது. 1961-ல் 439 மில்லியனாக இருந்த மக்கட்தொகை 1971 ஏப்ரலில் 547 மில்லியனாக உயர்ந்தது. பத்தாண்டுகளில் மக்கட் தொகை 108 மில்லியனாக அதிகரித்தது. இந்தியாவில் முக்கியமாக உணவுப் பொருள்களின் விலைகள் உயர்வதற்கு அடிப் படைக் காரணமாக இருப்பது மக்கட் தொகை மிகுதியே. ஒரு சிலரின் கருத்துப்படி இந்தியாவில் உற்பத்தியின் அளவு மக்கட் தொகை வளர்ச்சியைவிட அதிகமாக இருக்கின்றது. எடுத்துக் காட்டாக 1951-61 க்கும் இடைப்பட்ட காலத்தில் மக்கட்தொகை 22% அதிகரித்தது. ஆனால், தேசிய வருவாய் 44% ஆகவும், உற்பத்தி 46% ஆகவும், உணவுதானிய உற்பத்தி 50% ஆகவும், வேளாண்மை-தொழில் உற்பத்தி 77% ஆகவும் உயர்ந்துள்ளது. இதன் மூலம் மக்கட் தொகை வளர்ச்சியால் மட்டுமே பணவீக்கம் ஏற்படுகின்றது என்பது தவறாகும். எனினும் மக்கட்தொகை அதிகரிப்பு விலைகளை ஓரளவு பாதிக்கும் என்பது உண்மையாகும்.

## 2. தொழில் துறையில் அதிக முதலீடு

இந்தியா போன்ற வேளாண்மைத் தொழிலையே பிரதான மாகக் கொண்ட நாடுகளில், பொருளாதார வளர்ச்சிக்காக அதிக மான அளவு முதலீடு செய்வதால் நடுத்தர, மற்றும் முதல் பொருள்களின் துறையில் மிஞ்சிய தேவை (Excess Demand) ஏற்படுகிறது. 1951-க்கும் 61-க்கும் இடைப்பட்ட காலத்தில் மொத்த முதலீடு ரூ. 10,100 கோடியாகவும், மூன்றாம் திட்டக் காலத்தில் அரசின் முதலீடு ரூபாய் 8,630 கோடியாகவும் இருந்தது. இத்தகைய பேரளவு முதலீட்டின் விளைவாக முதலாவதாக முதல் பொருள்களின் விலை அதிகரித்து. பிறகு சம்பந்தப்பட்ட மற்றப் பொருள்களின் விலைகளும் அதிகரிக்கின்றன. பணத்தை முதலீடு செய்வதற்கும் பொருள்களை உற்பத்தி செய்வதற்கும் இடையே உள்ள காலம் பொதுவாக அதிகமாக இருப்பதால், இடைப்பட்ட காலத்தில் பணவீக்கம் தோன்றுகிறது.

## 3. அதிகரித்து வரும் பொதுச் செலவு

கடந்த 19 ஆண்டுகளாக அரசாங்கத்தின் பல்வேறு வகையான செலவுகள் கட்டுக்கடங்காமல் அதிகரித்து வருகின்றன. இதன் விளைவாகப் பொதுமக்களிடம் பணவருவாய் அதிகரித்துப் பொருள் களின் தேவை மிகுகிறது. மக்களிடம் வருவாய் அதிகரிப்பதற்கு ஏற்பப் பொருள்களின் உற்பத்தி அதிகரிக்காததால், பணவீக்கம் ஏற்படுகிறது. சீனர்களின் படையெடுப்பாலும், செப்டம்பர்

1965-ல் ஏற்பட்ட பாகிஸ்தான் சச்சரவாலும், தொடர்ந்து இருந்து வரும் அகதிகளின் பிரச்சினையாலும் அரசின் திட்டத்தில் அடங்காத செலவினங்கள் அதிகரிப்பதால் மொத்தத் தேவை அதிகரித்துப் பொருள்களின் விலைகள் அதிகரிக்கின்றன. 1950-51-ல் ரூ. 900 கோடியாக இருந்த மத்திய, மாநில அரசுகளின் வருவாய் முதல் செலவு (Revenue and capital expenditure) 1968-69-ல் ரூ. 5,850 கோடியாக அதிகரித்தது. இதன் விளைவாக மக்களிடம் பணவருவாய் அதிகரித்துப் பொருள்களின் தேவை பெருகியதால் இந்தியாவில் விலைகள் உயர்ந்தன.

## 4. பற்ருக்குறை நிதியாக்கம்

திட்டக்காலத்தின் ஆரம்பக் கட்டத்திலிருந்தே பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான நிதிவசதியைப் பெறும் முறைகளில் ஒன்ருகப் பற்ருக்குறை நிதியாக்கத்தையும் அரசு ஏற்றுக் கொண்டது. இம் முறைப்படி வேறு வழிகளிலிருந்து பெற இயலாத நிதியை மத்திய அரசு மத்திய வங்கியிடமிருந்து கடனுகப் பெறுகிறது. மத்திய வங்கி புதுக் காகிதப் பணத்தை அச்சிட்டு மத்திய அரசிற்குக் கடனுக அளிக்கின்றது. பொருள்களின் உற்பத்தி ஏற்படக் காலதாமதம் ஏற்படுத்துவதால் இடைக் காலத்தில் பொருள்களின் விலைகளை அதிகரித்து, பணவீக்கம் ஏற்படுகின்றது. முதல் திட்டக் காலத்தில் இவ்வகையில் கணக்கில் அடங்காத முறையில் (unaccounted money) தயாரிக்கப் பட்ட தொகை ரூ. 420 கோடியாகும். இரண்டாம் திட்டக் காலத்தில் பற்ருக்குறை நிதியாக்கத்தின் மூலம் ரூ. 950 கோடியும், மூன்ரும் திட்டக் காலத்தில் ரூ. 1,150 கோடியும் திட்டங்களில் முதலீடு செய்ய அரசாங்கங்களுக்குக் கிடைத்தது. இத்தகைய பணம் புழக்கத்திற்கு வருவதால் உற்பத்தி அதிகரிக்காத நிலையில் பொருள்களின் விலைகள் உயர்கின்றன.

## 5. பண அளிப்பு அதிகரித்தல்

இந்தியாவில் பணத்தின் அளிப்பு அதிகரித்து மக்களிடம் பணப் புழக்கம் விரைவாக அதிகரிப்பதாலும் கூடப் பொருள்களின் விலைகள் அதிகரிக்கின்றன. மக்களிடம் இருக்கும் பணம் காகிதப் பணமாகவும், நாணயமாகவும், வங்கிப் பணமாகவும் இருக்கும். பண அளிப்பு அதிகரிப்பைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்கு கின்றது.

## இந்தியாவில் மக்களிடம் பண அளிப்பு

(ரூபாய் கோடிகளில்)

| | 1950-51 | 1960-61 | 1965-66 | 1967-68 |
|---|---|---|---|---|
| மக்களிடம் இருந்த பணம் (Money with public) | 1410 | 2100 | 3035 | 3376 |
| மக்களின் இருப்புப் பணம் (வங்கிப்பணம்) (Money reserve with public) | 610 | 770 | 1495 | 1976 |
| மொத்தம் | 2020 | 2870 | 4530 | 5352 |

ஆதாரம் : இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடுகள்.

மக்களிடம் பணத்தின் அளிப்பு (Supply of Money) முதல் திட்டக் காலத்தில் ரூ. 220 கோடியாகவும், இரண்டாம் திட்டக் காலத்தில் ரூ. 650 கோடியாகவும், மூன்றும் திட்டக் காலத்தில் ரூபாய் 1,660 கோடியாகவும் அதிகரித்தது (net increase). நான்காம் திட்டத்தின் முதல் ஆண்டில் மட்டும் பணத்தின் அளிப்பு ரூ. 430 கோடியாக உயர்ந்தது. 1960-61-க்கும் 1966-67-க்கும் இடைப் பட்ட காலத்தில் மக்களிடம் பணத்தின் அளிப்பு 70% க்கு மேலாக அதிகரித்தது. பற்றுக்குறை நிதியாக்கத்தினலும் பணத்தின் நடவடிக்கைகள் அதிகரித்ததாலும் பணத்தின் அளிப்பு அதிகரித்துப் பொருள்களின் விலைகள் உயர்கின்றன.

அளிப்புக் காரணிகள் (Supply Factors)

1 பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது பொருள்கள், மற்றும் உற்பத்திக் காரணிகள் ஆகியவைகளின் தேவை அதிகரித்து விலைகள் மேல் நோக்கிச் செல்லும். எனினும் விலைகள் உண்மையில் அதிகரிக்க வேண்டும் என்பதில்லை. தேவையின் அதிகரிப்புக்கு ஏற்பப் பொருள்களின் அளிப்பும் அதிகரித்தால் பொருள்களின் விலைகள் அதிகரிக்காது. முதல் திட்டக்காலத்தில் மேற்கூறிய தேவைக் காரணிகளால் விலைகள் அதிகரித்த போதிலும் வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி அதிகரித்ததால் பொருள் களின் விலைகள் உண்மையில் குறைந்தன. 1962-ல் இருந்து வேளாண்மை உற்பத்தி வளர்ச்சி குறைந்து இருப்பது விலைகளின் உயர்வுக்கு ஒரு காரணமாகும்.

2. அதிகரித்து வரும் தேவைக்கு ஏற்ப அளிப்பு அதிகரிக்காத தால் விலைகள் உயர்கின்றன. 1955-61 வரைக்குமான பத்து

ஆண்டுகளில் உணவு தானிய உற்பத்தி அதிகரித்தது. இக் காலத்தில் 54 மில்லியன் டன்களாக இருந்த உணவு தானிய உற்பத்தி 82 மில்லியன் டன்களாக உயர்ந்தது. ஆனால், மூன்றாவது திட்டக் காலத்தின் முற்பகுதியில் உணவு தானிய உற்பத்தி ஒரே நிலையில் இருந்தது. 1964-65-ல், 89 மில்லியன் டன்களாக உற்பத்தி அதிகரித்தது. ஆனால், அதற்குப்பின் பருவமழை தவறிய காரணத்தால் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பஞ்சம் ஏற்பட்டது. எனவே, வேளாண்மை உற்பத்தியின் அளவு குறைந்ததால் அளிப்பு குறைந்து விலைகள் சமீபத்தில் அதிகரித்தன.

3. விவசாயிகள் தானியங்களை சேர்த்து வைப்பதாலும் வர்த்தகர்களும், கொள்ளை லாபம் பெறுவோரும் உணவு தானியங் களைப் பதுக்கி வைத்து யூக வாணிகம் (Speculation) நடத்து வதாலும் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் அதிகரித்து வருகின்றன.

4. சமீப காலத்தில் சிலரிடம் கறுப்புப் பணம் இருப்பதால் பொருள்களின் விலைகள் உயர்வதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. கறுப்புச் சந்தை நடத்துபவர்கள், வருமான வரி ஏய்ப்பவர்கள், ஆகியவர்களிடம் இருக்கும் கணக்கில் வராத பணம் உணவு தானிய வர்த்தகத்தை நடத்தப் பயன்படுகிறது. யூகவாணிகம் நடத்துபவர்கள் கறுப்புப் பணத்தைக் கொண்டு உணவு தானியங் களை வாங்கிப் பதுக்கி வைத்து, செயற்கைத் தேவையை ஏற்படுத்தி விலைகள் அதிகரிக்கும்போது அவற்றை விற்று அதிக லாபம் பெறுவதால் பணவீக்கம் ஏற்படுகிறது.

மேற்கூறிய பல்வேறு வகையான காரணங்களால் இந்தியாவில் பணவீக்கம் தோன்றுகிறதென்றாலும், வேளாண்மைப் பொருள் உற்பத்தியைப் பொறுத்துத்தான் பொது விலை மட்டம் (General price level) அமையும். ஏனெனில் இன்றியமையாத பொருள் களில் பெரும்பாலானவை வேளாண்மைப் பொருள்களைச் சார்ந்த வைகளாக இருப்பதால் வேளாண்மைப் பொருள்களின் விலை உயர்வு தானாகவே பொது விலைகளை அதிகரிக்கச் செய்கின்றது.

## அரசின் விலைக் கொள்கை

(Price Policy of the Government)

திட்டக் காலத்தின் துவக்கத்தில் இருந்து பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தி நிலையாக்க அரசு பல்வேறு வகையான நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. 1961 வரைக்கும் இந்திய ரிசர்வ் வங்கியே தேர்ந்த கடன் கட்டுப்பாடு மூலம் விலை

களையும் பணவீக்க அழுத்தங்களையும் கட்டுப்படுத்தி வந்தது. ஆனால், 1962-ல் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டதிலிருந்து பாதுகாப்பு, வளர்ச்சி ஆகியவைகளின் வளர்ந்து வரும் தேவைகளைப் பூர்த்தி செய்யவும் அரசு பணவியல், நிதியியல் நடவடிக்கைகளை மேற்கொண்டது.

## 1. நிதி இயல் கொள்கை

(Budgetary Policy)

அதிகரித்து வரும் பொதுச் செலவு, பற்றுக்குறை நிதியாக்க முறை ஆகியவைகள் விலை உயர்வதற்கு ஒரு காரணமாக அமைவதால், அரசு தன் வரவு செலவுத் திட்ட கொள்கையைச் சீராக மாற்றி அமைத்துப் பண வீக்கத்தைக் கட்டுப்படுத்த வகை செய்கிறது. அதாவது பற்றுக்குறை நிதியாக்கத்தின் அளவை குறைத்தல், மக்களின் நுகர்ச்சியைக் கட்டுப்படுத்துதல், போன்றவைகள் நிதியியல் கொள்கையில் வலியுறுத்தப்பட்டது. ஆனால், மத்திய, மாநில அரசுகளின் கட்டுக்கடங்காத செலவினங்களால் விலைகளைக் கட்டுப்படுத்துவதில் இக் கொள்கை வெற்றி பெறவில்லை.

## 2. பணவியல் நடவடிக்கைகள்

(Monetary Measures)

அரசின் நிதியியல் நடவடிக்கைகளைப்போல், இந்திய ரிசர்வ் வங்கியும், மக்களிடம் மிதமிஞ்சிய பணம் புழக்கத்தில் இருப்பதைக் கட்டுப்படுத்தவும், யூக வாணிக நடவடிக்கைகளைக் குறைக்கவும் தன்மைக் கடன் கட்டுப்பாடு, தேர்ந்த கடன் கட்டுப்பாடு ஆகிய முறைகளை அவ்வப்போது கையாண்டு வருகிறது. பட்டியலிலுள்ள எல்லா வணிக வங்கிகளும் உணவு தானியங்களுக்கு எதிராக அளிக்கும் கடன் தொகையைக் குறைக்குமாறு ரிசர்வ் வங்கி அவ்வப்போது அறிவித்துவருகிறது.

## 3. விலைக்கட்டுப்பாடும் சமபங்கீடும்

(Price Control and rationing)

அரிசி, கோதுமை, சர்க்கரை போன்ற இன்றியமையாத பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தி உள்நாட்டு அளிப்பைத் தகுந்த நேரத்தில் அதிகரிக்க அரசு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. தனியார் வர்த்தகத்தைக் கட்டுப்படுத்தி, பகிர்வுத்

துறையை விரிவாக்கி, அரசாங்க இருப்பிலிருந்து தகுந்த சமயத்தில் பொருள்களை அளித்து, பொருள்களின் விலைகள் கட்டுக்கடங்காமல் அதிகரிப்பதை அரசு தடுக்கிறது. உணவு தானியங்களில் பதுக்கல் யூக வாணிகம், ஆகியவைகள் ஏற்படுவதைத் தடுக்க எல்லா மாநில அரசுகளும் உணவு தானியங்களின் மொத்த, சில்லரை விலைகளை குறித்துள்ளன. மேலும், குறைந்த பட்சக் கொள்முதல் விலைகளை யும் அரசு தீர்மானித்துள்ளது. உணவு தானியங்களின் விலைகள் உயர்வதைத் தடுக்க அரசு அவற்றை இறக்குமதி செய்து அளிப்பை அதிகரிக்க வகைசெய்கிறது. நியாய விலைக் கடைகள் மூலம் அரசாங்கம் தன் உணவு தானியங்களைக் குறைந்த வருமானமுடைய மக்களுக்குக் குறைந்த விலைக்கு உரிய நேரத்தில் பங்கீடுசெய்கின்றது. ஒரு லட்சம் மக்களுக்கு மேற்கொண்ட நகரங்களில் நிரந்தரப் பங்கீட்டு முறை மத்திய மாநில அரசுகளால் நடைமுறைப் படுத்தப் பட்டு வருகின்றது. பல்வேறு மாநிலங்களில் உணவு தானியங் களில் பதுக்கல், யூக வாணிகம் நடப்பதை நீக்க மொத்த வியாபாரிகளுக்கு உரிமங்கள் (Licenses) வழங்கப்படுகின்றன. மேற்கூறிய நடவடிக்கைகளோடு கூட உற்பத்தியை அதிகரிப்பதற் கான செயல் முறைகளையும் அரசு மேற்கொண்டது. வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கவல்ல உரங்கள், பூச்சி மருந்து, டிராக்டர்கள், சாதனங்கள், நீர்ப்பாசன வசதி போன்ற பலவகை வசதிகளையும் விவசாயிகளுக்கு அரசு அளித்து வருகிறது.

## 4. தொழில் உற்பத்திச் சீரமைப்பு

(Improvement in Industrial production)

தொழில் உற்பத்தியை அதிகரிக்க உற்பத்தியாளர்களுக்குப் பல் வேறு வகையான ஊக்கங்களை அரசு அளித்துவருகிறது. வெளி நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை காரணமாய் இறக்குமதி செய்ய இயலாத மூலப் பொருள்கள், உப கருவிகள் போன்றவைகளால் உள்நாட்டு உற்பத்தி பாதிக்கப்படாமல் அரசு வகை செய்து வருகிறது. தொழில்கள் கூடுதல், ஆக்க சக்தி பெற்று உற்பத்தி அதிகரிக்க அதிக விலை ஊக்கிகளை (Incentives)யும் அரசு அளித்து வருகிறது. பணவீக்கத்தைப் போக்க அரசு அநேக நடவடிக்கை களை எடுத்தும் 1964 செப்டம்பர், அக்டோபர் ஆகிய மாதங்களில் பதுக்குவோர், யூக வாணிகம் நடத்துவோர்களின் தீய நடவடிக்கை களால் வெற்றி கிடைக்கவில்லை. கணக்கில் வராத பணத்தின் (unaccounted money) அளவு அதிகரிப்பதால் பகுதிக் கட்டுப் பாடுகள் (Partial control) ஓர் அளவு அரசு வர்த்தக முறை ஆகிய வைகளால் தகுந்த பலன் கிட்டுவதில்லை.

## வளரும் பொருளாதாரத்தில் விலைக் கொள்கை

(Price policy in a Developing Economy)

பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாததாய் விளங்குவது முதல், நடுத்தரப் பொருள்கள் போன்றவைகளில் மேற்கொள்ள வேண்டிய பேரளவு முதலீடாகும். ஆனால், இந்தியாவில் சேமிப்புப் பற்றாக் குறை, வெளிநாட்டுச் செலாவணித் தட்டுப்பாடு, தொடர்ந்து வரும் பணவீக்க அழுத்தம், போன்ற குறைபாடுகளால் முதலீட்டின் அளவு குறைவாக உள்ளது. பணவீக்கத்தை அனுமதிப்பதன் மூலம் முதலீட்டின் அளவை அதிகரிப்பதில் சமூக அநீதியை ஏற்படுத்தும். ஏனெனில் பணவீக்கத்தால் குறித்த வருமானம் பெறும் வகுப்பினர் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். பணவீக்கம் ஏற்றுமதியைக் குறைத்து இறக்குமதியை அதிகரித்து வெளிநாட்டுச் செலுத்து நிலையில் பாதகநிலை ஏற்படுத்துகின்றது. பணத்தின் மதிப்புக் குறைவதால் மக்களின் சேமிக்கும் விருப்பம் குறைகின்றது. எனவே, பணவீக்கம் வெளிநாட்டுச் செலாவணித் தட்டுப்பாடு, சேமிப்புப் பற்றாக்குறை ஆகிய இருபெரும் பொருளாதாரத் தடைகளை மேற்கொண்டு அதிகரிக்கச் செய்கின்றது. எனவேதான் இந்திய ரிசர்வு வங்கியின் ஆளுநராகிய எல். கே. ஜா, "பணவீக்கம், வளர்ச்சியை ஊக்குவிக்கின்றது என்ற கருத்திற்குச் சரியான ஆதாரம் இல்லை; பணவீக்கம் வளர்ச்சியைப் பாதிக்கச் செய்கின்றது என்பதற்குத் தகுந்த ஆதாரம் உள்ளது"[1] என்று குறிப்பிடுகின்றார்.

சரியான விலைக் கொள்கையைத் தீர்மானிக்கும்போது பற்றாக் குறை நிதியாக்கத்தின் (Deficit Financing) மூலம் திட்டக் காலத்தில் முதலீடு செய்வதை நீக்க வகைசெய்ய வேண்டும். மேலும், விலைகள் தாறுமாறாக மாறுவதைத் தடுத்துநிறுத்த அரசு விலைக் கட்டுப்பாடு மற்ற ஒழுங்குகள் ஆகியவற்றை அமுலாக்க வேண்டும். உணவு அளிப்பு குறைவதால் பணவீக்கம் ஏற்படுவதைத் தடுக்க உணவு அளிப்புக்குத் தகுந்த முறையில் பண வினியோகத்தையும் கட்டுப்படுத்த வேண்டியது அரசின் கடமையாகும். இன்றியமையாத பொருள்களின் விலைகள் அதிகரித்துக்கொண்டே செல்வதால் ஏழை மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவதைத் தடுக்க சரியான விலைக் கொள்கை வகைசெய்யவேண்டும். இறுதியாக இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் பிரச்சினைகளில் ஒன்றாய் இருப்பது குறைந்த முதலீடு ஆகும். சீரான விலைக் கொள்கையின் மூலம் விரைவான முதலீடு அதிகரிப்பைச் சாதிக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

[1] இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடு. ஏப்ரல், 1968,

நான்காம் திட்டத்தில் இந்தியாவிற்குத் தகுந்த விலைக் கொள்கையை அமைத்து அமுலாக்க வேண்டியது அரசின் கடமை யாகிறது.

## வளர்ச்சிக்கேற்ற விலைக் கொள்கையின் வகைகள்

(Kind of price policy for growth)

நான்காம் திட்டக் காலத்தில் செலவிட ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை ரூ. 24,882 கோடிகளாகும். இம் முதலீடு மக்களின் பண வருமானத்தை அதிகரித்துப் பொருள்களின் தேவையை அதிகரிக்கும். அதிக முதலீட்டுத் தொகையை நிதியியல் நடவடிக்கை களின் மூலமாய் அரசு பெறுவதற்கு முயலுவதால் பணவீக்கம் ஏற்படும். மூன்றும் திட்டத்தை விட நான்காம் திட்டத்தில் வெளி நாட்டுச் செலாவணியின் தேவை அதிகரிக்கும். இத்தகைய சூழ்நிலையில் சரியான விலைக் கொள்கையை அரசு பின்பற்ற வேண்டியது அவசியமாகிறது.

நிலையான விலைகளைச் சாதிக்க, கீழ்க்கண்ட ஐந்து முறைகளைப் பின்பற்றலாம்: (1) விலைக் கட்டுப்பாடு (2) இருபான்மை விலைகள் (Dual Prices) (3) வேளாண்மைப் பொருள் விலைக் கட்டுப்பாடு (Control of agricultural Prices) (4) செலவுக் கட்டுப்பாடு (Control of expenditure) (5) அரசு வர்த்தகம், சரக்கை சேர்த்து வைத்தல் (State Trading and buffer stocks)

விலைக் கட்டுப்பாடு, ஒழுங்கு ஆகியவைகளின் மூலம் விற்பனை யாளர்கள் ஏழை மக்களிடம் அதிக விலைக்குப் பொருள்களை விற்காமல் அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும். இந்தியாவின் மிக முக்கியமான பிரச்சினைகளில் ஒன்றாய் விளங்குவது விலைவாசி உயர்வாகும். நான்காம் திட்டக் காலத்தின்போது பற்றாக் குறையான பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்திக் குறைப் பதற்குப் பதிலாக அப் பொருளின் விலையை அதிகரிக்கச் செய்து, அதிக அளிப்புள்ள மற்றப் பொருள்களை நுகரச் செய்வது சிறந்த கொள்கையாகும்.

ஏழை மக்களின் அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக அரசு உற்பத்தியாளர்களுக்கு உதவிக் கொடைகளை (Subsidies) அளித்துவருகிறது. இதனால் அடிப்படைப் பொருள் களின் விலைகளில் இருவகைகள் காணப்படுகின்றன. உதவிக் கொடைகளை அளிப்பதால் ஏழை மக்களுக்குக் குறைந்த விலையில் பொருள்கள் கிடைப்பதோடு உற்பத்தியாளருக்கு உற்பத்தியையும் முதலீட்டையும் அதிகரிக்க ஊக்கம் கிடைக்கிறது. இந்தியாவில் சர்க்கரைக்கு இருபான்மை விலைகள் இருப்பதால் உற்பத்தி

ஊக்குவிக்கப்படுகிறது. நான்காம் திட்டக் காலத்தில் மற்றப் பொருள்களுக்கும் இத்தகைய இருபான்மை விலை முறையைப் பின்பற்றலாம்.

வேளாண்மைப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்தி, ஆக்கத்திற்கு உதவாத பொதுச் செலவுகளையும் தனியார் செலவினங்களையும் ஒழுங்குபடுத்தினால் விலைவாசி ஏற்றத்தைத் தடுக்க நல்ல வாய்ப்புக் கிடைக்கும். எல்லாவற்றிற்கும் மேலாக முக்கியமான வேளாண்மைப் பொருள்களை அரசு கிட்டங்கிகளில் சேர்த்துவைத்து இக்கட்டான காலங்களில் ஏழை மக்களின் துயரத்தைத் துடைக்கப் பயன்படுத்த வேண்டும். உணவு தானியங்களில் அரசு வர்த்தக முறையும் திறமையுடன் செயலாற்றித் தட்டுப்பாடு ஏற்படும் காலங்களில் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்த வகை செய்யவேண்டும்.

## முடிவுரை

நான்காம் திட்டத்தின் பிரதான குறிக்கோள்களில் ஒன்றாக விளங்குவது நிலையான விலைகளைச் (Price Stability) சாதிப்பதாகும். நிலையான விலை என்பது விலைகளை ஒரே நிலையில் மாறாமல் இருக்கச் செய்வது அல்ல; விலை மட்டத்தில் சீரான குறைந்த அளவு ஏற்படும் ஏற்றம் பொருளாதார வளர்ச்சியை அதிகரிக்கச் செய்கின்றது. அதைத்தான் நிலையான விலை என்று கூறமுடியும். குறைந்த அளவு உயரும் பொது விலை மட்டம் வளர்ச்சியை ஊக்குவிப்பதால் ஏற்றுக்கொள்ளத் தக்கதாய் உள்ளது. விலைவாசிகள் கட்டுக்கடங்காமல் உயர்வதைத் தடுக்கவேண்டியது இன்றியமையாததாகும். தற்போது இருக்கும் நிலையான அரசியல் சூழ்நிலையில் நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் தீவிரமான பணவீக்க அழுத்தங்களை ஏற்படுத்தாமல் செயலாக்கப்பட அரசு முயல வேண்டும்.

# 46. இந்திய வளர்ச்சியில் வெளிநாட்டு முதலின் பங்கு

## (Role of Foreign Capital in India's Development)

வளர்ச்சி குறைந்த, பிற்பட்ட நாடுகளில் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த மூலதனம் சேகரிக்கப்படுகிறது. முதலாக்கத்தை வேகப்படுத்தப் பொதுவாக அரசாங்கம் நான்கு முறைகளைப் பின்பற்றுகிறது. 1. வரிவிதிப்பு 2. உள் நாட்டில் கடன் வாங்குதல் 3. பற்றுக் குறை நிதியாக்கம் 4. வெளிநாட்டுக் கடன் பெறுதல் ஆகியவைகளாகும். இவைகளுள் வெளிநாட்டுக் கடன், முதலீட்டில் இறுதிநிலைப் பங்கினைப் பெறுகிறது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் சாதாரணமாகவே நுகர்வு மிகவும் குறைவாய் உள்ளது. அதை மீண்டும் சுருங்கச் செய்வது சிறந்ததாகாது. எனவே, முதல் சேகரிப்பை அதிகப்படுத்தினால் வளர்ச்சி அதிகரித்துப் பொருளாதாரம் தகுந்த மாற்றம் பெறும். உள்நாட்டில் முதல் தட்டுப்பாடு இருக்கும் நிலையில் வெளிநாட்டு முதலால் வளங்களைப் பயன்படுத்திப் பொருளாதார வளர்ச்சியை அதிகப்படுத்த முடிகிறது. விரைவான வளர்ச்சியைச் சாதிக்க வெளி நாடுகளிலிருந்து, பிற்பட்ட நாடுகள் இயந்திரம், கருவிகள், சாதனங்கள், உப பகுதிகள், மூலப்பொருள்கள் போன்றவற்றை இறக்குமதி செய்கின்றன. உள்நாட்டில் எந்த அளவுக்கு மூலதனத்தைச் சேகரிக்க முடியும் என்பதைப் பொறுத்துத்தான் வெளிநாட்டு மூலதனத்தின் அளவு இருக்கும். எனவே, அயல்நாட்டு முதல் பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரியும் கருவியாகப் பயன்படுகிறது என்று பேராசிரியர்கள் பாயர் மற்றும் யாமி குறிப்பிடுகின்றனர்.[1] இன்று பொருளாதார வளர்ச்சியில் மேம்பட்டுள்ள நாடுகளில் பல தங்கள் பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் வெளிநாட்டு மூலதனத்தைப் பெற்றுத் தொழில் வளர்ச்சியைச் சாதித்துள்ளன. 17-ம் 18-ம் நூற்றாண்டுகளில் இங்கிலாந்து,

[1] பி. டி. பாயர், பி. எஸ். யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 142.

ஹாலந்து நாட்டிலிருந்து கடன் வாங்கியது. இங்கிலாந்து இந்தியாவைச் சுரண்டிப் பொருளாதார உபரியைப் பெற்றது. 19-ம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்கா, பன்னாட்டு பணச் சந்தையிலிருந்து ஏராளமான கடன்களைப் பெற்றது. 20-ம் நூற்றாண்டின் முற் பகுதியில் கானடா அதிகமான அளவு வெளி நாட்டு மூலதனத்தை ஏற்றுக்கொண்டது. ரஷியா தன் பொருளாதார வளர்ச்சியின் தொடக்கக் காலங்களில் அமெரிக்க நாட்டின் உதவியைப் பெரிதும் நம்பியிருந்தது. சோவியத் ரஷியா தாராளமாக உதவி புரிந்ததால்தான் சைனு வேகமான வளர்ச்சியைப் பெற முடிந்தது.

நன்மைகள்

பொதுவாக வெளிநாட்டு முதல் இரு முக்கிய வகைகளில் வருகிறது. 1. நேரடித் தொழில் முதலீடு 2. பன்னாட்டுக் கடன்களும் மானியங்களும். ஏழ்மை நாடுகளில் தனியார் வெளிநாட்டு முதல் பெரும்பாலும் ஏற்றுமதிக்கு உதவும் பெட்ரோலியம், சுரங்கத் தொழில் போன்றவைகளில் முன்பு பயன்படுத்தப்பட்டது. இந்தியாவிலும்கூட இத்தகைய நிலை இருந்தது. அதாவது தொழில் வளர்ச்சிக்குப் பரவலாகத் தனியார் முதல் ஏழ்மை நாடு களுக்குப் பெரிதும் துணைபுரியவில்லை. "வெளிநாட்டு முதல் பிற்பட்ட நாடுகளின் தொழில் வளர்ச்சியை இலகுவாக்குவதற்குப் பதிலாகக் கடினப்படுத்தி, இந் நாடுகள் முதல் நிலை உற்பத்தியை அதிகரித்து, ஏற்றுமதி செய்ய மட்டுந்தான் துணைபுரிந்தது" என்று ராக்னர் நூர்க்ஸ் குறிப்பிடுகிறார்.[1] ஜப்பான் அயல்நாட்டுத் தனியார் முதலால் பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்கவில்லை. வெளிநாட்டு தொழில் நிபுணர்களை உள்நாட்டில் வேலைக்கமர்த்தி, ஜப்பானிய மக்கள் அவர்களிடமிருந்து தொழில் நுட்பத்தையும் தொழில் துணிவாற்றலையும் கற்றறிந்தனர். மேலும், உள்நாட்டு மக்களை வெளிநாடுகளுக்கு அனுப்பித் தொழில் நுட்பத்தில் பயிற்சி பெறச் செய்தது. இத்தகைய நடவடிக்கைகளால் ஜப்பான் விரைவான தொழில் வளர்ச்சியைப் பெற முடிந்தது.

*1.* வெளிநாட்டு முதல் பிற்பட்ட நாடுகளில் தொழில் வளர்ச்சியை வேகப்படுத்த வகை செய்கிறது. வளர்ச்சியே இல்லாத நாடுகளில் வெளிநாட்டு உதவி பொருளாதார வளர்ச்சியில் எழுச்சி ஏற்படப் பெரிதும் துணைபுரிகிறது. பேராசிரியர் நம்பியார் குறிப்பிடுவது போல் வெளிநாட்டு முதல், வளர்ச்சியுறு நாடுகளில் உற்பத்தியின் அளவை அதிகரிக்கப் பற்றாக் குறையுள்ள

[1] ராக்னர் நூர்க்ஸ், 'வளர்ச்சியுறு நாடுகளில் முதலாக்கப் பிரச்சினைகள்' ப. 84.

மூலதனம், தொழில் திறன் போன்றவைகளை அளித்துத் தொழில் வளர்ச்சியை மேலோங்கச் செய்கிறது.

2. பொருளாதார வளர்ச்சியின் துவக்கத்தில் வெளிநாட்டு உதவி பல்வேறு வகையான குறைகளையும், துன்பங்களையும் நீக்கி, சாதனங்கள், தொழில் நுட்பப் பணிகள் போன்றவற்றை அளித்து, பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்துகிறது. இதன் மூலம் உள் நாட்டு முதலாக்கம் வேகப்படுத்த முடிகிறது.[1] வெளி நாட்டு உதவி கிடைப்பதால் நுகர்ச்சியை அதிகரித்து, வளர்ச்சிக் கான மூலதனத்தைச் சேகரிக்க முடிகிறது. இதனால் நுகர்ச்சியின் அளவை நிலையாக அதிகரிக்க முடிகிறது.

3. வெளிநாட்டு உதவியால் நாட்டில் பணவீக்க அழுத் தங்கள் ஏற்படுவதைத் தடுக்க முடிகிறது. வளர்ந்து வரும் நாடுகளில் பணவீக்கமில்லாமல் முதலாக்கத்தை ஊக்குவிப்பது கடினமாகும். ஆனால், முதல் பொருள்களாகக் கிடைக்கப்படும் வெளிநாட்டு உதவி பொருளாதார வளர்ச்சியின் போது முக்கியமான பணவீக்கத்திற்கு எதிரான சக்தியாகச் செயல் படுகிறது.

4. வெளிநாட்டு உதவி கிடைப்பதால் பற்றுக் குறை நிதியாக் கத்தை ஓரளவு குறைக்க வகை ஏற்படுகிறது. வெளிநாட்டுக் கடன் பத்திரங்கள். கடன் வகைகள் ஆகியவைகள் கூடுதல் உறுதித் தேவையை ஏற்படுத்தாமல் முதலீட்டிற்குத் தேவையான சாதனங்களை அதிகரிக்கின்றன.

5. வெளிநாட்டு உதவி ஓரளவிற்கு அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலைக் (Balance of Payments) குறைகளைத் தீர்க்க உதவு கிறது. வெளிநாட்டு உதவி அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலையைச் சமப்படுத்தும் கருவியாகப் பணிபுரிகிறது. "பன்னாட்டு வருவாய் வேறுபாடுகள் வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலையில் இடைவெளிகளை ஏற்படுத்துகிறது. பன்னாட்டு வருவாய் மாற்றங்கள் (Transfers) செலுத்து நிலையில் ஏற்படும் இடை வெளிகளை மூடுகின்றன"[2] என்று நூர்க்ஸ் குறிப்பிடுகிறார். வளர்ச்சியுறா நாடுகளில் பொது, தனியார் வெளிநாட்டு உதவி இன்றியமையாததாக விளங்குகிறது. அரசாங்கங்களுக்கிடையே

[1] பி. டி. பாயர், பி. எஸ், யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொருளாதாரம்' ப. 143.

[2] ராக்னர் நூர்க்ஸ், 'வளர்ச்சியுறா நாடுகளில் முதலாக்கம் பற்றிய சிக்கல்கள்' ப. 93.

கிடைக்கும் தொழில்நுட்ப, நிதி உதவி சமூக மூலதன வளங்களை (போக்கு வரத்து, மின் சக்தி, சுகாதாரம்) வளர்ச்சியடையச் செய்ய அவசியமாக விளங்குகிறது.[1] சமூக மூலதன வளங்களின் அல்லது சாதனங்களின் வளர்ச்சி குறைந்த நாடுகளின் முதல் ஈர்க்கும் சக்தியை (Capital absorbtive Power) அதிகப் படுத்தப் பெரிதும் துணைபுரிகிறது. அரசாங்கங்களின் மூலமாகக் கிடைக்கும் உதவி, பொருளாதார வளர்ச்சியை அதிகரிக்கப் பயன் பட்டாலும் உலக தொழில் நிதி நிறுவனங்களின் மூலம் கிடைக்கும் தனியார் முதல்தான் அடிப்படை வளர்ச்சி நிதியாக இருந்து வருகிறது. ஏழ்மை நாடுகளில் விரைவான தொழில் மயம் ஏற்படத் தனியார் முதல் பெரிதும் துணைபுரிந்து வருகிறது.

6. வெளிநாட்டு உதவி பன்னாட்டு வேலைப் பகுப்பை அதிகரிக்கச் செய்து, பன்னாட்டு வாணிகம் சிறப்பாக நடைபெறத் துணை புரிகிறது. இதனால் ஏழ்மை நாடுகளில் சேமிப்பு, முதலீடு உற்பத்தி அதிகரித்து ஏற்றுமதியின் அளவு அதிகரிக்க வாய்ப்பு ஏற்படுகிறது.

7. வளர்ச்சி குறைந்த நாடுகளில் வட்டி வீதத்தைக் குறைத்து முதலீட்டைப் பெருக்க அயல் நாட்டு நிதி உதவி பெருந் துணை புரிகிறது. இதனால் முதல் அங்காடியிலும் பண அங்காடி யிலும் வட்டி வீதங்கள் குறைந்து பொருளாதார வளர்ச்சிக்குக் குறைந்த வட்டிக்கு நிதி கிடைக்கிறது. வெளிநாட்டு உதவி கிடைக்காத பட்சத்தில் சிற்றளவுத் திட்டங்களையே மேற்கொண்டு நாட்டின் பேரளவு வளர்ச்சி தடைபடுகிறது. வெளிநாட்டு உதவி யால் குறித்த சில துறைகள் சீரான வளர்ச்சி பெறச் சிறந்த வாய்ப்புக் கிடைக்கிறது.

8. வெளிநாட்டு உதவி முக்கியமான தொடர் சங்கிலியாக அமைந்து மற்றப் பல்வேறு வகையான தொழில்கள் ஏற்பட வகை செய்கிறது. இத்தகைய நடவடிக்கையால் உள்ளீடுகளின் (Inputs) உற்பத்தி அதிகரித்துப் புதிய தொழில்கள் தோன்றுவதால் சந்தை யின் அளவு விரிவடைகிறது.

வகைகள்

வெளிநாட்டு மூலதனம் தனியார் முதலாகவோ பொது மூலதனமாகவோ ஒரு நாட்டிற்குக் கிடைக்கின்றது. தனியார் வெளிநாட்டு முதல் இருவகைப்படும். ஒன்று நேரடி முதலீடு. இரண்டாவது மறைமுக முதலீடு.

1 பி. டி. பாயர், பி. எஸ், யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 149.

தனியார் நேரடி முதலீடு என்பது மூலதனம் பெறும் நாட்டில் ஏற்படும் கடன் பத்திரங்களின்மேல் முதலீடு செய்யும் நாடு உண்மையான கட்டுப்பாட்டை விதிப்பதை உணர்த்துகிறது. உதாரணமாக முதலீடு செய்யும் நாட்டின் துணை நிறுவனம் (Company) தோன்றுதல்; அல்லது முதலீடு செய்யும் நாட்டின் கம்பெனி அதிகபட்ச பணத்தை அமைக்கப்பட்ட ஒரு நிறுவனத்தில் முதலீடு செய்தல். தனியார் நேரடி முதலீட்டால் ஏற்படும் நன்மைகளாவன : 1. இம் முதலீடு வர்த்தக முறையின் அடிப்படையிலே மேற்கொள்ளப்படுவதால் சிறந்த முறையில் ஆக்கத்திற்காகப் பயன்படுத்தப் படுகிறது. 2. இத்தகைய முதலீட்டால் தொழில் நுட்ப நிர்வாகத் திறன் முதல் பெரும் நாட்டிற்குக் கிடைக்கிறது. 3. இம் முதலீட்டிற்கு ஒரு குறித்த வட்டிக் கட்டணங்கள் இல்லை. முதலீடே வட்டிக் கட்டணங்களைச் சரிசெய்து விடுவதால் பெரும்பாலும் கடன் சுமை உணரப்படுவதில்லை. லாபமும் மீண்டும் முதலீடு செய்யப்படுகிறது. 4. இத்தகைய முதலால் துணைத் தொழில்கள் வளர்ச்சியடைகின்றன. பணவீக்கத்திற்கு எதிரான சக்தியாக அது பயன்படுகிறது. ஆனால், இத்தகைய முதலீட்டால் சில குறைபாடுகளும் உள்ளன. 1. தேவையான பொழுது தேவையான திட்டத்திற்கு இவ்வுதவி கிடைப்பதில்லை. 2. அதிக லாபம் கிடைப்பதால் போட்டி அதிகரிக்கிறது. உள்ளூர்த் தொழில் பாதிக்கப்படுகிறது.

மறைமுக முதலீடுகள் (Portfolio or Rentier Investment) என்பது மாற்றத்தக்க கடன்பத்திரங்கள் (Securities), பங்குகள் அல்லது டிபென்ச்சர்கள் (Debentures) ஆகியவைகளை மற்ற நாடுகளின் தொழில் துறை மக்கள் வைத்திருப்பதைக் குறிப்பிடுகிறது. அதாவது முதலீட்டிற்குத் தேவையான நிதிவசதியை வெளிநாடுகளிலிருந்து பெறக் கடன்பெறும் நாட்டு மக்கள் கடன் பத்திரங்கள், பங்குகள் போன்றவற்றை வைத்திருப்பதை மறைமுக முதலீடு என்கிறோம். இத்தகைய முதலீட்டால் நிதிவசதி அதிகரிக்கிறது; அதிக சாதனங்களைச் சேகரிக்கவும் முடிகிறது. உள்நாட்டுப் பொருளாதாரம் இத்தகைய முதலீட்டின் மேல் கட்டுப்பாடு விதிக்க முடிகிறது. ஆனால், வட்டியை செலுத்துதலும், லாப ஈவுத் தொகையைப் பிரித்துக் கொடுத்தலும் ஒரு சுமையாக விளங்குகிறது. சமீபகாலத்தில் பல்நோக்கு மறைமுக முதலீடுகள் (Multilateral Indirect Investments) அதிகரித்து வருகின்றன. சில வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஒரு குறித்த திட்டத்திற்கு நிதி உதவி அளிக்க உலக வங்கி கடன் எடுப்ப விற்கும் கடன் பத்திரங்களை ஒரு நாட்டின் மக்கள் வாங்குகின்றனர்.

பொது வெளிநாட்டு முதல் கீழ்கண்டவைகளைக் குறிக்கிறது ;

1. இருமுகக் கடன்கள் (Bilateral Hardloans): இந்திய அரசிற்குப் பவுண்டுகளில் பிரிட்டிஷ் அரசு கொடுக்கும் கடன்களை இது குறிக்கிறது.

2. இருமுகக் கடன்கள் (Bilateral Soft loans): பொதுக் கடன் 480ன் அடிப்படையில் இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்கும் உணவு தானியங்களை இது உணர்த்துகின்றது.

3. பல்நோக்குக் கடன்கள் (Multilateral loans): உறுப்பினர் நாடுகளால் இந்திய உதவிசபை (Aid India Club), கொழும்புத் திட்டம் போன்றவைகளுக்குக் கொடுக்கப்படும் உதவித் தொகையை இது குறிக்கிறது. ஐக்கிய நாடுகளின் பல்வேறு நிறுவனங்களாகிய பன்னாட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி, பன்னாட்டு நிதி கார்பொரேஷன், பன்னாட்டு வளர்ச்சி நிறுவனம் (International Development Association) ஆகியவைகளால் அளிக்கப்படும் கடன் தொகையும் இவ்வகையைச் சார்ந்தவைகளாகும். கடந்த பத்தாண்டுகளில் வளர்ந்துவரும் நாடுகளுக்கு எல்லாவகையிலும் வெளிநாட்டு முதலாகக் கிடைத்த தொகை டாலர் 80 பில்லியன் ஆகும். இதில் தனியார் வெளிநாட்டு முதலீடாகிய டாலர் 30 பில்லியனும் உள்ளடங்கும்.

## இந்தியாவில் வெளிநாட்டுத் தனியார் முதலீடு

இந்தியாவில் ஆங்கிலேயர்களின் காலத்தில் தனியார் வெளிநாட்டு முதலீடு பொதுவாக மற்ற வளர்ச்சியுறு நாடுகளில் காணப்பட்ட முறையில்தான் இருந்தது. தனியார் வெளிநாட்டு மூலதனத்தில் பெரும்பகுதி குறுகிய காலத்தில் அதிகமான லாபத்தைத் தரத்தக்க சுரங்கத் தொழில், தோட்டத் தொழில் போன்ற தொழில்களில்தான் முதலீடு செய்யப்பட்டது. இதன் விளைவாக பொருளாதாரத்தில் ஒருதலைப்பட்ட வளர்ச்சி ஏற்பட்டது. முன்பு வெளிநாட்டுத் தனியார் முதலீடு இந்தியாவிற்குப் பெரும்பாலும் பிரிட்டன் நாட்டிலிருந்துதான் கிடைத்தது. இந்தியா இங்கிலாந்துடன் வரலாற்றுத் தொடர்பு கொண்டிருந்ததால் இத்தகைய நிலை ஏற்பட்டது. இந்தியா இங்கிலாந்தின் காலனியாக இருந்ததால் பிரிட்டிஷ் முதலாளிகள், இங்கிலாந்து தங்கள் முதலீட்டிற்குப் பாதுகாப்பு அளிக்கும் என்று எண்ணி இந்தியாவில் முதலீடு செய்தனர்.

1955-ல் இந்திய ரிசர்வ் வங்கி எடுத்த கணக்கீட்டின்படி சுமார் 72 சதவீத தனியார் வெளிநாட்டு முதலீடு இந்தியாவில் தனியார் துறைத் தொழில்களில்தான் முதலீடு செய்யப்பட்டது. 1948-ல்

தொழில் நிறுவனங்களில் ரூ. 286 கோடியாக இருந்த வெளிநாட்டு முதலீடு 1962-ல் ரூ. 736 கோடியாக உயர்ந்தது. இதில் நேரடி முதலீடு சுமார் ரூ. 567·6 கோடி ரூபாயும் மீதி மறைமுக முதலீடாகவும் (Portfolio investment) இருந்தது.

1960-ல் இந்தியாவிற்கு மூலதனம் அளித்த முக்கியமான நாடு இங்கிலாந்தாகும். மொத்த வெளிநாட்டு முதலாகிய ரூ. 78·4 கோடியில் ரூ. 44·5 கோடியை இங்கிலாந்து மட்டும் இந்தியாவிற்கு அளித்தது. இம் மூலதனத்தில் ஏறக்குறைய எல்லாமே தனியார் முதலாகும். இதில் நான்கில் மூன்று பாகம் பெட்ரோலியம் தொழிலில் முதலீடு செய்யப்பட்டது. 1960-ல் அமெரிக்கா ரூ. 28·5 கோடியை இந்தியாவிற்கு அளித்து, இரண்டாவது இடத்தைப் பெற்றது. ஆனல், 1963-64, 1964-65 ஆகிய ஆண்டுகளில் இந்தியாவிற்குப் பெருமளவு மூலதனத்தை அளித்த நாடு அமெரிக்காவாகும். 1963-64-ல் இந்தியாவிற்குக் கிடைத்த மொத்த மூலதனமாகிய ரூ 68 கோடியில் அமெரிக்கா மட்டும் 61 சதவீதமாகிய ரூ. 41 கோடியை அளித்தது அது பெரும்பாலும் அரசாங்கத் துறைகளிலிருந்து கிடைத்த கடன் மூலதனமாக இருந்தது. இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குக் கிடைத்த மூலதனம் பெரும்பாலும் நேரடி முதலீடாக, தனியார் துறை மூலமாக இந்தியாவிற்குக் கிடைத்தது. ஆனல், அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு அரசாங்க வகைகளிலிருந்துதான் பெரும்பாலும் கடன்களாக இந்தியாவிற்குக் கிடைத்தது.

அரசின் கொள்கை

சுதந்திரம் கிடைத்த ஓர் ஆண்டிற்குள் 1948-ல் அரசாங்கம் தன் தொழிற்கொள்கையை வெளியிட்டது. 1948-ன் தொழிற் கொள்கைத் தீர்மானம் வெளிநாட்டுமுதல் இந்தியாவிற்குள் வரத்தகுந்த சூழ்நிலையை உருவாக்கவில்லை. அது வெளிநாட்டு முதல் இந்தியாவிற்கு வரச்சில தடைகளை விதித்தது. மேலும், வெளிநாட்டுத் தொழில்கள் தேசிய மயமாக்கப்படலாம் என்கின்ற அச்சத்தையும் அது ஏற்படுத்தியது. சில அடிப்படைத் தொழில்களைத் தேசிய மயமாக்குவதைப் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு அரசு ஆலோசிக்கும் என்று இக் கொள்கை குறிப்பிட்டது. இக் கொள்கை வெளிநாட்டு முதல் வருவதைத் தடுத்ததோடல்லாமல் இந்தியாவில் வெளிநாட்டு முதலாளிகள் தொழில்களை விரிவாக்குவதையும் தடுத்தது. எனவே அப்போது பிரதம மந்திரியாக இருந்த திரு. ஜவஹர்லால் நேரு 1949-ல் வெளிநாட்டு முதல் பற்றிய அறிக்கை ஒன்றை வெளியிட்டார். 1. அவ் வறிக்கையில் உள்நாட்டு முதலீடு செய்பவர்களுக்கும் வெளிநாட்டு முதலீடு செய்பவர்களுக்கு

மிடையே எந்தவிதப் பேதமும் இருக்காது என்று உறுதியளிக்கப் பட்டது. 2. மேலும், வெளிநாட்டு முதலீடு செய்பவர்கள் இந்தியா வில் கிடைக்கும் லாபத்தை தங்கள் நாடுகளுக்கு அனுப்பவும் அல்லது மூலதனத்தை இந்தியாவிலிருந்து எடுத்துக்கொண்டு செல்லவும் நியாயமான வசதிகள் அளிக்கப்படும் என்று அறிவிக்கப் பட்டது. 3. திடீரென்று தேசியமயம் ஏற்படச் சந்தர்ப்பம் இல்லை என்றும் அவர்களுக்குத் திரு. நேரு உறுதியளித்தார். அப்படியே தேசிய மயம் ஏற்பட்டாலும் நியாயமான தகுந்த இழப்பீட்டுத் தொகை கொடுக்கப்படும் என்றும் உறுதிகொடுக்கப்பட்டது. இந்த அறிக்கை வெளிநாட்டு முதலீட்டாளர்களுக்கு ஓரளவு நம்பிக்கை அளித்தது. இந்தியா கூட்டுச் சேராக் கொள்கையின் அடிப்படையில் தன் வெளிநாட்டுக் கொள்கையை அமைத்திருப் பதால் ஆரம்பக் கட்டத்தில் அமெரிக்காவிலிருந்து இந்தியாவிற்கு மூலதனம் வராமலிருந்ததற்கு அக் கொள்கை ஓரளவு காரணமாக இருந்தது.

சமீப காலத்தில் இந்தியாவிற்கு வெளிநாட்டு முதல் சீரான முறையில் வருவதற்கு இரு முக்கிய காரணங்கள் உண்டு: 1. கடந்த இருபது ஆண்டுகளாக இந்தியாவிலிருந்து வரும் சமாதான சூழ்நிலை. இப் பகுதில் மக்களாட்சியின் அடிப்படையில் நெடுங் காலமாக நிலையான அரசியலை பெற்றிருக்கும் நாடு இந்தியா ஒன்றுதான். 2. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சித் திட்டங் களின் அடிப்படையில் இந்தியா பெற்றுவரும் மெதுவான, ஆனால் நிலையான வளர்ச்சி இரண்டாவது காரணமாகும்.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலிருந்து இந்தியா வின் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை அதிகரித்து வருகிறது. இந் நிலையைப் போக்க இந்திய அரசு வெளிநாட்டவர்களைப் பல்வேறு வகையிலும் ஊக்கமளித்து அவர்களின் முதலீட்டைப் பெருக்க வகை செய்து வருகிறது. அவர்களுக்கு அரசு வரிச் சலுகைகள் அளித்தல் போன்ற சில வசதிகளை அளித்து ஊக்கு வித்து வருகிறது. இந்தியாவில் இந்தியக் கம்பெனிகளின் ஒத்துழைப்பு இல்லாமலேயே அவர்கள் தொழில்களை இந்தியாவில் ஏற்படுத்த அனுமதியும் அளிக்கப்பட்டுள்ளது. தற்போது இறக்கு மதியைச் சேமிக்கும் துறைகளில் வெளிநாட்டு மூலதனம் பெரும்பாலும் வரவழைக்கப் படுகிறது. மூன்றும் திட்டக் காலத்தில் தனியார் வெளிநாட்டு மூலதனம் இந்தியாவில் ரூ. 300 கோடியாக இருக்கும் என்று கருதப்பட்டது. ஆனல், உண்மையில் ரூ. 190 கோடிதான் அவ்வகையில் முதலீடு செய்யப்பட்டது. ஏனெனில் மூன்றும் திட்டக் காலத்தில் பருவகால மழை தவறியது, நாட்டின் சில பகுதிகளில் வரட்சி தோன்றியது,

வேளாண்மையில் தேக்கம், 1962-ல் சீன படையெடுப்பு, இந்தியா-பாக்கிஸ்தான் சச்சரவுகள் போன்றவைகளால் வெளிநாட்டு முதல் இந்தியாவில் வருவது தளர்ச்சியடைந்தது.

## திட்டக் காலத்தில் இந்தியாவில் வெளிநாட்டு முதல்

1948-ல் இந்தியா வெளி நாடுகளிலிருந்து பெற்ற கடன் ரூ. 5,042 மில்லியனாக இருந்தது. அதில் அரசாங்கத் துறையிலிருந்து கிடைத்தது 1,781 மில்லியனாகவும், தனியார் துறையிலிருந்து ரூ. 3,261 மில்லியனாகவும் இருந்தது. தனியார் துறையிலிருந்து பெற்ற கடன் நேரடி முதலீடாகவும், மறைமுக முதலீடாகவும் இருந்தது. இந்தியப் பொதுத் துறையில் முதலீடு செய்யப்பட்ட வெளி நாட்டு முதல் சமூக நலனை அதிகரிக்கும் துறைகளாகிய போக்கு வரத்து, செய்தித் தொடர்பு, மின் இயக்கத் திட்டங்கள் போன்றவைகளில் பெரும்பாலும் பயன் படுத்தப்பட்டது.

இந்தியா சுதந்திரம் பெற்ற காலத்திலிருந்து அரசாங்கத் துறையில் பெறும் வெளிநாட்டு முதல் முழுவதும் திட்டமிட்ட வளர்ச்சிக்காகப் பயன்படுத்தப்படுகிறது. திட்டக்காலத்தில் துவக்கப்படும் பல்வேறு திட்டங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய அயல் நாட்டுச் செலாவணி முக்கியமாகப் பயன்பட்டு வருகிறது. இந்தியாவிற்குக் கிடைக்கும் வெளிநாட்டு முதல் முக்கியமாக ஐக்கிய அமெரிக்கா, உலகவங்கி, இங்கிலாந்து, சோவியத் ரஷ்யா, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகளிலிருந்து கிடைத்து வருகிறது. சமீபத்தில் அமெரிக்காவிலிருந்து கிடைக்கும் உதவி குறைந்துள்ளது.

## முதல் திட்டக் காலத்தில் இந்தியா பெற்ற வெளிநாட்டு முதல்

தற்பொழுது நாம் பெறும் வெளிநாட்டு முதலைக் கடன், மானியம் (Grant), அமெரிக்கப் பொதுச் சட்டத்தின்படி (Public Law) கிடைப்பது என்று மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். மொத்த வெளி முதலில் பொதுவாக 61·4% கடனாகவும், 7·5% மானியமாகவும், சுமார் 31% அமெரிக்கப் பொதுச் சட்ட வரியாகவும் இருக்கிறது. எந்த அளவு வெளி முதலை இந்தியாவில் அனுமதிப்பது என்பது விவாதத்திற்குரிய கருத்தாக இருந்தாலும் சில கட்டுப்பாடுகளோடு வெளி

நாட்டு முதலை ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை இருந்து வருகிறது. பல்வேறு வகையில் கிடைக்கப் பெற்ற மொத்த வெளி உதவியில் முதல் திட்டத்தில் ரூ. 201 கோடியும், இரண்டாம் திட்டத்தில் ரூ. 1,430 கோடியும், 3-ஆம் திட்டத்தில் ரூ. 2,867 கோடியும் இந்தியா பெற்றுள்ளது. 4-ஆம் திட்டக் காலத்தில் இந்தியா சுமார் ரூ. 2,644 கோடியே பெறும் என எதிர்பார்க்கப் படுகிறது. இது இந்திய மொத்த முதலீட்டில் 12% ஆகும். 1951-முதல் 1966 வரையுமுள்ள 15 ஆண்டுகளில் இந்தியா பெற்ற வெளி உதவி 4,500 கோடியாகும். இந்தத் தொகையில் அமெரிக்கா மட்டும் 54% மான 2,445 கோடி அளித்திருக்கிறது. உலக வங்கி மொத்தத்தில் 12·8% மும், மேற்கு ஜெர்மனி 7·6% மும், இங்கிலாந்து 6·5% மும், சோவியத் ரஷ்யா 6·2% மும், ஜப்பான் 2·5% மும், உதவியுள்ளன. ஆனால், நமக்குக் கிடைத்த வெளி நாட்டு உதவியில் முழுவதையும் பயன்படுத்த இயலவில்லை. முதல் திட்டத்தில் 381·8 கோடி ரூபாய் கிடைத்தும், 202 கோடி தான் பயன்படுத்தப்பட்டது. 2-ஆம் திட்டத்தில் 2,761·5 கோடி ரூபாய் கிடைத்தும், ரூ. 1,432 கோடிதான் பயன் படுத்தப் பட்டது. 3-ஆம் திட்டக் காலத்தில் ரூ. 5872·6 கோடி ரூபாய் கிடைத்தும், பயன்படுத்தியது ரூ. 4,514 கோடிதான்.

முதல் திட்டக் காலத்தில் கடனாக ரூ. 142 கோடியும் மானியமாக ரூ. 154·3 கோடியும் கிடைத்தது. முதல் திட்டக் காலத்தில் கிடைத்த மொத்த வெளி முதலில் அமெரிக்க அரசின் கோதுமைக் கடன் மட்டும் ரூ. 90·3 கோடியாக இருந்தது.

## இரண்டாம் திட்டக்காலத்தில் பெற்ற வெளிநாட்டு முதல்

இரண்டாம் திட்டக் காலத்தில் அரசாங்க வகையில் கிடைக்கப் பெற்ற வெளிநாட்டு உதவி ரூ. 2,761·5 கோடியாக இருந்தது. இதில் கடன்மட்டும் 1,391·8 கோடியாகவும், மானியங்கள், மற்ற வகை உதவிகள் மூலமாக 1,369·7 கோடியாகவும் இருந்தது. முதல் திட்டத்தைவிட 8 மடங்கு அதிகமாக 2-ஆம் திட்டக்காலத்தில் வெளி உதவி பயன்படுத்தப்பட்டது. 2-ஆம் திட்டக்காலத்தில் ரஷ்யாவிலிருந்து கிடைத்த கடன் தொகை அதிகரித்தது. மொத்தக் கடன்தொகையில் 70% அமெரிக்கா, ரஷ்யா, மேற்கு ஜெர்மனி, இங்கிலாந்து ஆகிய நாடுகளிலிருந்து கிடைத்தது. ஆனால், அமெரிக்காவிலிருந்து மானியமாகக் கிடைத்த தொகை அதிகமாகும். அனுமதித்த மொத்த வெளி உதவியில் ஏறக்குறைய பாதி உதவிதான் பயன்படுத்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்க தாகும். அரசாங்கத் துறையிலிருந்து கிடைக்கப்பெற்ற வெளி

உதவியும், எஃகு தொழில் போன்ற தனியார் துறையில் பயன் படுத்தப்பட்டது. மொத்த அயல்நாட்டுக் கடன் உதவியால் எஃகுதொழில், இரயில்வே வளர்ச்சி, தொழில் வளர்ச்சி ஆகியவைகள் சுமார் 92% உதவி பெற்றன. வெளிநாட்டு முதல் வரவழைக்கப்பட்டாலும், அது எந்த விதத்தில் முதலீட்டை அதிகரிக்கவும், உண்மை மூலதனத்தைப் பெருக்கவும் காரணமாக இருந்தது என்பதுதான் முக்கியமாகும். இரண்டாம் திட்டக்காலத்தில் பொதுத் துறையிலிருந்து கிடைத்த வெளிநாட்டு முதல் இந்தியப் பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்துவதற்குத் தேவையான சக்திகளை உருவாக்கவும், நாட்டைச் சீரான சுயபலம் கொண்ட வளர்ச்சியைப்பெறச் செய்யவும் துணை புரிந்துள்ளது.

## மூன்றும் திட்டக்காலத்தில் பெற்ற வெளிநாட்டு முதல்

மூன்றும் திட்டக்காலத்தில் தேவைப்படும் மொத்த வெளி நாட்டு உதவி சுமார் ரூ. 3,200 கோடி என்று மதிப்பிடப்பட்டது. இத் தொகையில் திட்டக் காலத்தில் இந்தியாவில் வரவு செலவுத் தேவைகளைப் பூர்த்தி செய்ய ரூ. 2,200 கோடி தேவைப்பட்டது. மேலும், மொத்தத் தொகையாகிய ரூ. 3,200 கோடியில் மூன்றும் திட்டத்தில் காலாவதியாகும் கடன்களைத் திருப்பிக் கொடுக்க ரூ. 500 கோடி தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டது. உலக வங்கி, பன்னுட்டு நிதி கார்பொரேஷன், அமெரிக்க ஏற்றுமதி இறக்குமதி வங்கி போன்றவைகளிலிருந்து கிடைக்கும் கடன் தொகையில் சுமார் 300 கோடி ரூபாய் தனியார் முதலாக தனியார் துறைக்குக் கிடைக்கும் என்று கருதப்பட்டது. இவ் விதமாக வரவு செலவை நிவர்த்தி செய்ய ரூ. 1000 கோடி கிடைத்தது. மொத்த முதலீட்டில் நான்கில் ஒரு பங்கு வெளி நாட்டு உதவியாக அமைந்தது. பொதுத் துறை முதலீட்டில் சுமார் 40 சதவீதம் வெளிநாட்டு முதலாகும். இவ்விதமாக வெளிநாட்டு உதவியை நம்பியிருந்ததால் மூன்றும் திட்டம் வெளி நாட்டு உதவிமயமானது என்று கூறப்பட்டது.

## நான்காம் திட்டக் காலத்தில் வெளிநாட்டு முதல்

நான்காம் திட்டக் காலத்தில் இந்தியப் பொதுத் துறைக்குத் தேவைப்படும் மொத்த வெளிநாட்டு உதவி ரூ. 3,730 கோடி என்று கருதப்பட்டது. இத் தொகையில் வெளி கடன்களைத் திருப்பி அளிக்கத் தேவையான ரூ. 1,216 கோடி போக, நிகர

வெளிநாட்டுதவி ரூ. 2,514 கோடி நான்காம் திட்டத்திற்குக் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

## இந்தியப் பொருளாதார வளர்ச்சியும் வெளிநாட்டு முதலும்

பொதுவாக வெளிநாட்டுதவி மூன்று முக்கிய காரணங்களுக்காக வரவேற்கப்படுகிறது. 1. உள்நாட்டுச் சேமிப்பின் பற்றாக் குறையைப் பூர்த்தி செய்ய 2. வெளிநாட்டுச் செலவாணியின் அளிப்பை அதிகரிக்க 3. தொழில் நுட்ப வசதியை ஒரு நாட்டி லிருந்து மற்றொரு நாட்டிற்கு மாற்றிக் கொள்ள வசதிகளை ஏற் படுத்த வெளிநாட்டு உதவியால் உதவிபெறும் நாட்டில், ஆக்க சக்தி அதிகரித்து நுகர்ச்சிப் பொருள்களின் உற்பத்தி அதிகரித்து நாட்டின் வருமானம், சேமிப்பு, முதலீடு, வளங்களைப் பயன் படுத்தும் திறன் ஆகியவைகள் அதிகரிக்க வகை ஏற்பட வேண்டும். இந்தியாவில் எந்த அளவுக்கு ஆக்க சக்தி அதிகரித்துள்ளது என்பதைத் துல்லியமாக மதிப்பிடமுடியாது. இருப்பினும் வெளி நாட்டு முதல் இந்திய வளர்ச்சிக்குக் கீழ்க்கண்ட வகையில் துணை புரிந்துள்ளது.

### 1. அதிக முதலீடு

முதல் திட்டத் துவக்கத்தில் 5 சதவீதமாக இருந்த முதலீட்டு வீதம் 1960—61-ல் மொத்தத் தேசிய வருவாயில் 11 சதவீதத் திற்கும் அதிகமாக அதிகரித்தது. முதலீட்டு வீதம் அதிகரித்த ததால் வெளிநாட்டுச் செலாவணியின் தேவையும் அதிகரித்தது. 1956–57 லிருந்து இந்தியாவின் வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி அதிகரித்துவந்தது. வெளிநாட்டு உதவியின்றி இத் தகைய நெருக்கடியைத் தீர்க்க இந்தியாவால் இயலாத காரிய மாகும். வளர்ந்து வரும் பொருளாதாரத்தில் வெளிநாட்டுச் செலாவணியில் பற்றாக்குறை ஏற்படுவது இயற்கையாகும். பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்த இன்றியமையாத குறித்த சில சாதனங்களைப் பெறுவதற்கு வெளிநாட்டு உதவி துணைபுரிகின்றது.

### 2. உணவுப்பொருள் விலைகளை நிலைபேருக்கல்

இந்தியா பெற்ற மொத்த உதவியில் சுமார் பாதி உணவுப் பொருள்களை இறக்குமதிசெய்யப் பயன்படுத்தப்பட்டது. இதன் விளைவாக உணவுப் பொருள்களின் விலைகள் அதிகரிக்காமல்

தடுக்கப்பட்டது. மேலும், மூலப் பொருள்கள் இயந்திரங்களின் உபபகுதிகள் ஆகியவைகளும் இறக்குமதி செய்யப்பட்டதால் நாட்டில் உற்பத்தியின் அளவு அதிகரிக்க நல்ல வாய்ப்பு ஏற்பட்டது.

## 3. நீர்ப்பாசனம், மின்சக்தி அதிகரிப்பு

இந்திய விவசாயத் துறையில் ஆக்க சக்தியை அதிகரிக்க வெளிநாட்டுதவி துணைபுரிந்துள்ளது. இரண்டாம் திட்டக்காலத்தில் மட்டும் நீர்ப்பாசன வசதிகள் 7 மில்லியன் ஏக்கர் நிலத்தில் அதிகரித்துள்ளன. பண்ணைத் தொழில், மீன் பிடித்தல் ஆகிய துறைகளில் உற்பத்தியில் நவீன முறையைப் பின்பற்ற வெளியுதவி சாதகமாயிருந்தது. வெளிநாடுகளிலிருந்து இயந்திரங்களும், சாதனங்களும் இறக்குமதி செய்யப்பட்டதால், நாட்டில் மின் சக்தி 1950-ல் 2·3 மில்லியன் K. W. இருந்ததிலிருந்து 1960—61-ல் 5·7 மில்லியன் கிலோ வாட்டாக அதிகரித்தது. மேலும், மொத்த வெளி உதவியில் 16 சதவீதம் போக்குவரத்து வளர்ச்சிக்காகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதில் 12 சதவீதம் இரயில்வே வளர்ச்சிக்காகப் பயன்படுத்தப்பட்டது. ஆரம்பக் கட்டத்தில் வெளிநாட்டு முதல் இரயில்வே போக்குவரத்து வளர்ச்சிக்குப் பெரும் துணை புரிந்துள்ளது.

## 4. எஃகு தொழிலின் வளர்ச்சி

இந்தியத் தொழில்களில் பயன்படுத்தப்பட்ட வெளிநாட்டு உதவியில் 80 சதவீதத்திற்கு மேல் எஃகு தொழிலின் ஆக்க சக்தியை அதிகரிக்கப் பயன்படுத்தப்பட்டது. 1951-ல் இருந்ததைக் காட்டிலும் சுமார் $2\frac{1}{2}$ மடங்கு அதிகமாக எஃகு உற்பத்தி நாட்டில் அதிகரித்துள்ளது. பொதுத் துறையில் மூன்று எஃகு ஆலைகள் மூன்று மில்லியன் டன் மதிப்புள்ள இணைந்த ஆக்க சக்தியுடன் ரூர்கேலா, பிலாய், துர்காபூர் ஆகிய இடங்களில் நிறுவப்பட்டன. இந்த ஆலைகளுக்குத் தேவையான உதவியை முறையே மேற்கு ஜெர்மனி, ரஷ்யா, இங்கிலாந்து ஆகிய நாடுகள் அளித்துள்ளன. தனியார் துறையிலும் இந்திய அரசின் உத்திரவாதத்துடன் உலக வங்கி, எஃகு உற்பத்தியின் அளவை அதிகரிக்க டாடா இரும்பு எஃகு நிறுவனம் இந்திய இரும்பு எஃகு கம்பெனி ஆகியவைகளுக்கு நிதிஉதவி அளித்துள்ளது. ரஷ்ய அரசு சமீபத்தில் பொகாரோ எஃகு ஆலைக்கு உதவி செய்வதாக வாக்களித்துள்ளது.

## 5. தொழில் நுட்பப் பயிற்சி

வெளி உதவியினால் பயிற்சி பெற்றவர்களின் சேவையும் இந்தியத் தொழில் துணிவோருக்குப் பயிற்சியும், தொழிற் கல்வி ஆராய்ச்சியும், நாட்டில் பயிற்சி நிலையங்களும் தோன்ற நல்ல வாய்ப்பு ஏற்படுகிறது. இதனால் பல்வேறு துறைகளில் தொழில் திறன் அதிகரித்து உற்பத்தியும் அதிகரிக்கிறது.

## 6. வெளிநாட்டுச் செலாவணித் தேவைகளைச் சமாளித்தல்

வளர்ந்துவரும் நாடுகளில் வெளிநாட்டுச் செலாவணித் தேவைகளைப் பூர்த்திசெய்ய வெளிநாட்டு உதவி பயன்பட்ட போதிலும், அதிகமான அளவு கடன் வாங்கினால் சில சமயங்களில் கடனைத் திருப்பி கொடுக்க வசதியில்லாமல் போய்விடலாம். எனவே, நாட்டின் திருப்பிகொடுக்கும் சக்தியை அடிப்படையாகக் கொண்டு கடன் சுமையை மதிப்பிட வேண்டும். வெளிஉதவியால் நாட்டின் பொருளாதாரம் பலம் பொருந்திப் பரவலாக வளர்ச்சி பெற்று ஏற்றுமதியின் அளவை அதிகரிக்கும் சக்தியும் பெற்று விளங்கினால், கடன் சுமை கடினமாக இருக்காது. மேலும், வெளி நாட்டு உதவியினால் பொதுத் துறைக்குத் தேவையான நிதிவசதி கிடைப்பதால் சோஷலிஸக் கருத்தை நாட்டில் அமுலாக்க வசதி கிடைக்கிறது. அதோடு கூட உலக வங்கி, பொதுக் கடன் 480ன் அடிப்படையில் கிடைக்கும் நிதி, மேற்கத்திய நாடுகளிலிருந்து கிடைக்கும் உதவி ஆகியவைகள் தனியார்துறை வளர்ச்சிக்கு வகை செய்துள்ளன.

## வெளிநாட்டு மூலதனப் பிரச்சினைகள்

பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் ஒரு நாட்டிற்கு வெளிநாட்டு மூலதனம் பலவகைகளில் துணைபுரிந்து வருகிறது. ஒருநாடு வெளியுதவியைப் பெறுவதில் எந்தவிதத் தவறுமில்லை. ஆனால், வெளியுதவியைப் பெறுவதில் அநேக சிக்கல்கள் இருக்கின்றன.

முதலாவதாக, வெளிநாட்டு உதவி கிடைப்பதில் நிச்சயமற்ற தன்மை அல்லது உறுதியின்மை இருந்துவருகிறது. நம் நாட்டில் பருவகால மழை பெய்வதில் உறுதியின்மை இருப்பதுபோல் வெளி நாட்டு முதலீட்டிலும் உறுதியின்மை காணப்படுகின்றது.

இரண்டாவதாக, வெளிநாட்டு உதவி தேவையான அளவு தகுந்த காலத்தில் கிடைப்பதில்லை. இருபதாம் நூற்றாண்டின்

மத்திய காலத்தில் இந்தியா போன்ற ஒரு சில நாடுகள் மட்டும் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், மேற்கு ஜெர்மெனி போன்ற நாடுகளிலிருந்து வெளிநாட்டு உதவியைப் பெற்றன. ஆனால், கடந்த இருபது ஆண்டுகளில் ஆசியா, ஆப்பிரிக்கா நாடுகளில் அநேக நாடுகள் அரசியல் சுதந்திரம் பெற்றுள்ளன. இந்த நாடுகள் அனைத்தும் அமெரிக்காவிலிருந்து உதவியைப்பெற முயற்சிக்கின்றன. எனவே, அயல்நாட்டு உதவிக்காக ஒதுக்கப்பட்ட தொகையை அநேக நாடுகள் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய சூழ்நிலை உள்ளது. அமெரிக்காவும் கம்யூனிஸ கருத்துகள் பரவ விடாமல் தடுக்க, அநேக நாடுகளுக்கு உதவி அளித்து வருகின்றது.[1]

மூன்றாவதாக, வளர்ந்த செல்வந்த நாடுகள்கூட வெளிநாட்டுச் செலுத்து நிலைப் பிரச்சினைகளைப் பெற்றுள்ளன. எனவே, வளர்ச்சியுறு நாடுகளுக்குச் செல்வந்த நாடுகள் தேவையான உதவியைத் தகுந்த சமயத்தில் அளிக்க முடிவதில்லை. எனவேதான் வளர்ச்சியடைந்த நாடுகள் தங்கள் தேசிய வருவாயில் குறைந்தது 1 சதவீதமாவது வளர்ச்சியுறு நாடுகளுக்கு உதவியாக அளிக்க வேண்டுமென்று மறைந்த அமெரிக்க ஜனாதிபதி திரு. ஜான் F. கென்னடி வற்புறுத்தினார். ஆனால், இந்தக் கருத்தை எல்லா நாடுகளும் ஏற்றுக்கொள்ளவில்லை.

நான்காவதாக, வெளிநாட்டு உதவி கிடைக்கும் போது பெரும்பாலும் அவ்வுதவி சில நிபந்தனைகளுக்குட்பட்டு அளிக்கப்படுகிறது. நமக்குத் தேவையானது நிபந்தனைகள் (Strings) இல்லாத வெளிநாட்டுதவியாகும். ஆனால், எப்போதும் அத்தகைய நிபந்தனைகள் இல்லாத உதவியைப் பெறுவது கடினமாகும். சில அரசியல் அல்லது பொருளாதார நிபந்தனைகளுடன்தான் எப்பொழுதும் வெளிநாட்டு உதவி கிடைக்கிறது.

ஐந்தாவதாக, சில சமயங்களில் அனுமதிக்கப்பட்ட உதவி நிறுத்தப்படலாம் அல்லது முழுவதும் திரும்பப் பெற்றுக் கொள்ளப்படலாம். இத்தகைய நிலை சமீபத்தில் அநேக நாடுகளுக்கு ஏற்பட்டது. எகிப்தில் அஸ்வான் நீர்த்தேக்கத்தைக் கட்டிமுடிக்க முதலில் அமெரிக்கா உதவி அளிப்பதாக வாக்குறுதி அளித்தது. அதன் பிறகு சில கருத்து வேறுபாடுகளால் அமெரிக்கா உதவி செய்வதிலிருந்து பின்வாங்கியது. சில ஆண்டுகளுக்கு முன்பு சிலோனில் சிலோன் அரசு சில எண்ணெய் நிறுவனங்களைத் தேசிய மயமாக்க அறிக்கை விடுத்ததால், அமெரிக்கா சிலோனுக்கு உதவியளிப்பதை

[1] பி டி. பாயர், பி. எஸ் யாமி, 'வளர்ச்சிக் குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 144,

நிறுத்தியது. அங்குப் பெரும்பாலான எண்ணெய்க் கம்பெனிகள் அமெரிக்கர்களுக்குச் சொந்தமானவைகளாயிருந்தன. இந்தியாவில் பொகாரோ எஃகு ஆலை மூன்றும் திட்டத்தில் அமெரிக்க வாக்குறுதியுடன் நிறுவப்பட இருந்தது. ஆனால், மூன்றும் திட்டக் காலத்தில் இந்த ஆலை ஏற்படுத்தப்படவில்லை. இந்த ஆலை நிறுவப்பட்டால் தனியார் துறையிலுள்ள நிறுவனங்கள் உற்பத்தி செய்யும் எஃகு பொகாரோ எஃகுடன் போட்டியிடும். ஆதலால் அமெரிக்கா பொகாரோ எஃகுத் திட்டத்திற்கு உதவிசெய்ய முன்வரவில்லை. நான்காம் திட்டக் காலத்தில் பொகாரோத் திட்டத்திற்கு உதவி செய்ய ரஷ்யா முன்வந்துள்ளது. சமீபத்தில் நடந்த இந்தியா-பாக்கிஸ்தான் போரினல் இரு நாடுகளுக்கும் அமெரிக்கா உதவி செய்வதை நிறுத்தியது. வெளி உதவி எப்பொதும் குறித்த சில திட்டங்களுக்காக மட்டும் அளிக்கப்படுவதால், சில முக்கியமான காரணங்களால் அத் திட்டத்தைச் செயல்படுத்த முடியாவிட்டால், அவ் உதவியை வேறு திட்டங்களுக்குப் பயன்படுத்த முடியாமல் போய்விடுகிறது. இத்தகைய இக்கட்டான நிலை இந்தியாவிற்கு அடிக்கடி ஏற்படுகின்றது.

ஆறுவதாக, சில சமயங்களில் உதவி அளிக்கும் நாடுகள் கடன் தொகையை அனுமதிக்கும் போது கடன் தொகைக்குச் சமமான இயந்திரங்கள் கருவிகள் போன்றவற்றைக் கடனளித்த நாட்டிலேயே வாங்க வேண்டுமென்ற நிபந்தனையை விதிக்கின்றன. அதன் விளைவாக அந்த நாடுகளின் விற்பனையாளர்கள் தங்கள் விலைகளை அதிகரிக்கின்றனர். அதே பொருள்களை வேறு நாடுகளில் குறைந்த விலைக்கு வாங்க முடிந்த போதிலும் கடன் நிபந்தனையின் காரணத்தால் அதிக விலை கொடுத்து உதவி அளித்த நாட்டிலேயே பொருள்களை வாங்க வேண்டிய காட்டாய நிலை ஏற்படுகின்றது.

இறுதியாக, கடன்களைப் பராமரித்தல் கடன்களைத் திரும்பச் செலுத்தும் சுமை ஆகிய பிரச்சினைகள் ஏற்படுகின்றன. கடந்த ஐந்து ஆண்டுகளாக இந்தியாவிற்கு இது ஒரு தீவிரப் பிரச்சினையாக இருந்துவருகிறது. எனவேதான், இந்திய-அரசு ஜப்பான், இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளிடம் கடன் கால அளவை மாற்றி வரையறை செய்யும்படி வற்புறுத்தி வருகிறது. சில ஆண்டுகளுக்குப் பிறகு கடன் தொகையைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய நிலை உள்ளதால் பெற்ற கடனைச் சீரான முறையில் பயன்படுத்திச் சுய பலத்துடன் வளர்ச்சிபெறக் குறுகிய காலத்தில் வேளாண்மை, தொழில் உற்பத்தியை அதிகரிக்க முயல வேண்டியது இன்றியமையாததாகும். எந்த அளவுக்குப் பொருளாதாரம் இத்தகைய மாற்றத்தைப் பெற்றுள்ளதோ அந்த

அளவிற்கு வெளிநாட்டுக் கடனைத் திருப்பிக் கொடுக்கும் சக்தி அமையும்.[1] எனவேதான் ஏழ்மை நாடுகள் வாணிப மாற்று வீதத்தில் (Terms of Trade) சில சலுகைகளை அளிக்கும்படி செல்வந்த நாடுகளை வேண்டிவருகின்றன. கடனாக உதவி பெறுவதைவிடச் செல்வந்த நாடுகளிலிருந்து வர்த்தகச் சலுகைகளைப் பெறுவதால் ஏழ்மை நாடுகள் வர்த்தக இடைவெளியைப் பூர்த்தி செய்ய முடியும். அதோடு அதனால் கடனைத் திரும்பக் கொடுக்கும் பிரச்சினையும் ஏற்படாது.

## இந்திய வளர்ச்சிக்குத் தேவையான நிதி உதவி

ஏப்பிரல், 1969-ல் இந்தியத் தொழில் அதிபர்களுள் ஒரு வகுப்பினர் இந்திய வெளிநாட்டு உதவித் தேவைகளை ஆண்டுக்கு ஒரு பில்லியன் டாலர் (Rs. 750 crores) எனக் கணக்கிட்டனர். தகுந்த பொருளாதார வளர்ச்சி வீதத்தை நிலைநாட்ட அடுத்த பத்து ஆண்டுகளுக்கு ஆண்டொன்றுக்கு 1 பில்லியன் டாலர் தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இத் தொகை உணவு உதவி, திருப்பிக் கொடுக்கும் கடன்பணம் ஆகியவற்றை உள்ளடக்கவில்லை. நிபந்தனைகள் குறைந்த நீண்டகாலத்தில் திருப்பி அளிக்கத்தக்க கடனாக இந்தியா பெறவேண்டுமென்று தொழிலதிபர்கள் எடுத்துக் கூறினர். மேலும், 'கட்டுண்ட வெளி நாட்டுதவி' (Tied Aid) கைவிடப்படவேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினர். ஏனெனில், பொருள்களின் விலைகள் கடன் கொடுக்கும் நாட்டில் அதிகரிக்கின்றன. உதவி அளிக்கப்பட்டால் மூலப் பொருள்களை உலகில் எந்த நாட்டிலிருந்து இறக்குமதி செய்ய வகை ஏற்படவேண்டும். ஏற்றுமதி செய்யும் நிறுவனங்களில் வெளிநாட்டுச் செலவாணித் தேவைகளைப் பராமரிக்க ஒரு ஏற்றுமதி வங்கி நிறுவப்படவேண்டும்.

### வெளிநாட்டு உணவு உதவி

வளர்ச்சியடைந்த நாடுகளின் எச்ச உணவுப் பொருள்களின் ஏற்றுமதி பிற்பட்ட நாடுகளுக்கு முக்கியமான வெளிநாட்டு உதவியாக அமைந்துள்ளது. கடந்த 15 ஆண்டுகளாக, சுலபமாகப் பொதுக்கடன் 480 அடிப்படையில் ஏராளமான அளவு உணவு தானியங்களையும் மற்ற வேளாண்மைப் பொருள்களையும் இந்தியா இறக்குமதி செய்துள்ளது. இந்த உணவுப் பொருள்களை இந்தியப்

[1] பி. டி. பாயர், பி. எஸ். யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 144.

பணமுறையில் ரூபாய்களைச் செலுத்தி இறக்குமதி செய்துள்ளோம். மேலும், இத் தொகை முழுவதும் அமெரிக்காவுக்குச் செலுத்தப் படவில்லை. அத் தொகையில் பெரும் பகுதியை இந்தியாவிலுள்ள தனியார் துறைத் தொழில்களில் முதலீடு செய்ய அமெரிக்கா அனுமதித்துள்ளது. தற்போது இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியுடன் இணைக்கப்பட்டுள்ள மறுநிதிக் கழகத்தின்மூலம் இத் தொகை தனியார் தொழில்களுக்கு வழங்கப்படுகிறது. அமெரிக்கா விலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஏராளமான உணவு தானியங்கள் பஞ்சம், பட்டினி போன்ற துன்பங்களிலிருந்து இந்தியரைப் பாதுகாத்துள்ளது உண்மையாகும். ஆனால், இத்தகைய உணவு தானிய இறக்குமதி இந்திய விவசாயம் ஓரளவு தேக்க நிலையில் இருந்துவந்ததற்குக் காரணமாயிருந்தது என்று சிலர் கருதுகின்றனர். அத்தகைய ஏராளமான இறக்குமதி இல்லாதிருந்தால் உள் நாட்டில் வேளாண்மை உற்பத்தி அதிகரிக்க வேண்டிய கட்டாயச் சூழ்நிலை ஏற்பட்டிருக்கும். அதனால் பண வீக்கமும் குறைந்திருக்கும்.

1965 மார்ச் மாத இறுதி வரைக்கும் இந்தியாவில் மேற் கொள்ளப்பட்ட தனியார் வெளி முதலீட்டின் (Private Foreign investments) மொத்த மதிப்பு ரூ. 940 கோடியாகும். இங்கிலாந்தி லிருந்துதான் மிக அதிகமான முதலீடு மொத்தமாக ரூ. 530 கோடி வரைக்கும் இந்தியாவிற்குக் கிடைத்தது. அதற்கு அடுத்தபடியாக அமெரிக்கத் தனியார் முதலீடு ரூ. 190 கோடியாக இருந்தது. மீதித் தொகை மேற்கு ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, ஜப்பான், கனடா, ஸ்வீடன், ஆகிய நாடுகளால் இந்தியாவில் முதலீடு செய்யப்பட்டது. முதல் மூன்று திட்டக் காலத்தில் தனியார் வெளிநாட்டு மூலதனத்தின் (Private Foreign Capital) மொத்த வரவு ரூ. 625 கோடிகளாகும். மறைமுக முதலீடுகள் (Portfolio investments) குறைந்துகொண்டே வருகின்றன. 1966—67ல் தனியார் வெளி ஆரம்ப முதலீடு (Private Foreign equity investment) ரூ. 4·5 கோடியாகவும் 1967—68-ல் ரூ. 3·6 கோடி களாகவும், 1968-69-ல் ரூ. 1·9 கோடியாகவும் குறைந்தது.

அரசு வெளிநாட்டுத் தனியார் முதலீட்டுக்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கப் பெருமுயற்சி செய்தபோதும் மேற் குறிப்பிட்ட கணக்கீடுகள் அது மிகவும் குறைவாக இருப்பதைத் தெளிவுபடுத்துகின்றன. சமீபத்திய வர்த்தகம், தொழில் வளர்ச்சிக்கான இந்திய- ஜப்பானியக் கூட்டுக் குழு (India-Japan Joint Committee on trade and Industrial Development) இந்தியாவில் வெளிநாட்டு முதலீடு இடம் பெறுவதில் காணப்படும்

சிக்கல்களை ஆராய்ந்தது. ஜப்பானியர்கள் இந்தியாவில் ஜப்பானின் மூலதன முதலீட்டை மேற்கொள்ளுவதால் ஏற்படும் பிரச்சினை களைக் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கூறியுள்ளனர். அவைகள் பொதுவாக இந்தியாவில் வெளிநாட்டுத் தனியார் முதலீடு சுலபமாக வராமல் தடைபடுவதற்குரிய காரணங்களாகும். (i) வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை, பொருள்களின் விலைகள் தொடர்ந்து உயருதல் போன்ற பொருளாதாரச் சிரமங்களால் புதுத் தொழில் துறையில் முதலீடுகளை மேற் கொள்வது கடினமாக உள்ளது. (ii) புதிய நாணய மதிப்புக் குறைப்பு (Devaluation) ஏற்படுமென்ற அச்சம் (iii) அதிக வரி வீதங்கள். சான்றாக, தொழில் முதலீட்டுக்கான உரிமைத் தொகையில் (Royalties) 50% வரியாக விதிக்கப்படுகிறது. (iv) இறக்குமதி தளர்த்தப்பட்டும்கூட இறக்குமதி எந்திரப் பகுதிகள், மூலப் பொருள்கள் ஆகியவைகள் கிடைக்காமை. (v) தொழில் நோக்கத்திற்காக வெளிநாட்டுப் பணியாள்கள் நீண்ட நாள்கள் உள்நாட்டில் தங்க அனுமதி கிடைப்பதில் சிக்கல்கள் ஏற்படுகிறது. (vi) தொழிற் சட்டங்கள், கட்டுப்பாடுகள் ஆகியவைகளைப் பற்றிய அடிப்படை விவரங்களைப் பெறுவதில் சிரமங்கள் ஏற்படுதல். (vii) தொழில் காப்புரிமை மசோதா (Patents Bill) போன்ற காரணங்களாகும். இந்தியாவில் வெளி நாட்டுத் தனியார் முதலீடு கணிசமான அளவு அதிகரிக்க மேற்கண்ட பிரச்சினைகளுக்குத் தகுந்த தீர்வுகளைக் காணச் சூழ் நிலையைச் சீராக்க வேண்டும்.

தனியார் முதலீட்டோடு கூடவே வெளிநாட்டு உதவியும் வெளி நாட்டு அரசுகள், பன்னாட்டு நிறுவனங்கள் ஆகியவைகளி லிருந்து கடனுகவும், மானியத் தொகைகளாகவும், இந்தியாவுக்குக் கிடைக்கிறது. ஏப்பிரல் 1951 லிருந்து செப்டம்பர் 1969 வரை இந்தியாவிற்குக் கடன் கொடுத்த முக்கிய நாடுகளும் அவைகள் அனுமதித்த உதவியும், இந்தியா பயன்படுத்திய நிதி உதவியும், கீழ்க்கண்ட அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளன. (அட்டவணை : பக்கம் 272-ல் பார்க்க)

## முடிவுரை

தொடர்ந்து வெகுநாட்களாக வெளிநாட்டு உதவியால் பராமரிக்கப்படும் பொருளாதார வளர்ச்சி ஒரு நாட்டிற்குச் சிறந்த தாகாது. 1970-ஆம் ஆண்டில் இந்தியா உணவு தானியங்களில் தன்னிறைவு பெறும் என்று திட்டக்குழு கருதியது ஆனல், 1972-ல் அக் கருத்து ஓரளவு நடைமுறையில் உண்மையாக உள்ளது. வளர்ச்சி முறையின் போது தேவையான அளவு உபரிச் சரக்குகளை

## இந்தியாவின் வளர்ச்சிக்கு உதவியளித்த முக்கிய நாடுகள்
## (ஏப்பிரல் 1951—செப்டம்பர் 1969)

| நாடு | உதவியளிக்கும் நாடு அனுமதித்த கடன் தொகை (ரூபாய் கோடிகளில்) | இந்தியா பயன்படுத்திய தொகை (ரூபாய் கோடிகளில்) | பயன்படுத்தப்பட்ட மொத்த வெளி உதவியின் பங்கு (சதவீதங்களில்) |
|---|---|---|---|
| ஐக்கிய அமெரிக்கா | 6,801 | 6,415 | 57·8 |
| ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசு | 865 | 763 | 6·9 |
| இங்கிலாந்து | 697 | 628 | 5·7 |
| சோவியத் ரஷ்யா | 1,031 | 624 | 5·6 |
| கனடா | 618 | 479 | 4·3 |
| ஜப்பான் | 348 | 304 | 2·7 |
| பிரான்சு | 159 | 74 | 0·7 |
| ஆஸ்திரேலியா | 60 | 58 | 0·5 |
| செக்கோஸ்லோவேகியா | 97 | 62 | 0·6 |
| நெதர்லாந்து | 59 | 47 | 0 4 |
| யுகோஸ்லேவியா | 28 | 28 | 0·3 |
| போலந்து | 57 | 24 | 0·2 |
| இத்தாலி | 167 | 109 | 1·0 |
| பெல்ஜியம் | 30 | 21 | 0·2 |
| ஆஸ்திரியா | 21 | 18 | 0·2 |
| நார்வே | 12 | 10 | 0·1 |
| டென்மார்க் | 14 | 10 | 0·1 |
| நியூசிலாந்து | 6 | 5 | 0·05 |
| ஸ்வீடன் | 26 | 13 | 0·1 |
| ஹங்கேரி | 13 | — | — |
| பல்கேரியா | 11 | — | — |
| உலக வங்கியும் பன்னாட்டு வளர்ச்சிச் சபையும் | 1,605 | 1,419 | 12·8 |
| மொத்தம் | 12,761 | 11,134 | 100· |

(Buffer stocks) இருப்பாக வைக்க வேண்டியது இன்றியமையாத தாகும். நடப்பு அளிப்பில் பற்றுக் குறை ஏற்பட்டால் பணமுறை, நிதிமுறை நடவடிக்கைகளை மேற்கொண்டாலும் விலைகள் கடுமை யாக அதிகரிப்பதைத் தடுக்க முடிவதில்லை. "எந்தவித உதவியைப் பெறுகிறோம் என்பதில் குறையேதுமில்லை. ஆனால், அதை எவ்வாறு பயன்படுத்துகிறோம் என்பதில்தான் குறை உள்ளது" என்று டாக்டர் K. N. ராஜ் அவர்கள் குறிப்பிடுகிறார்.[1] வெளிநாடுகளிலிருந்து பெறும் உதவியை மிகவும் இன்றியமையாத ஆக்கப் பணிகளிலேயே பயன்படுத்தும் வழிமுறைகளை இந்தியத் திட்ட நிபுணர்கள் கண்டறிய வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் கடன் பராமரிப்புச் சுமையின் அளவு அதிகரித்துக்கொண்டே செல்லும். நான்காம் திட்டக் காலத்தில் (1969-74) மொத்தக் கடன் பராமரிப்புத் தொகை (Debt Service Payments) ரூ. 2,280 கோடி யாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. இதில் பன்னாட்டுப் பண நிதிக்கு (International Monetary Fund) திரும்பச் செலுத்த வேண்டிய தொகையாகிய ரூபாய் 280 கோடி உள்ளடங்கவில்லை. அதிக அளவு கடன் பராமரிப்பு விகிதம் (Debt service ratio), மொத்த வெளி உதவியின் போக்கில் தொடர்ச்சியின்மை, போன்றவைகளால் இந்தியாவின் செலுத்து இருப்புநிலை மேலும் பாதிக்கப்படுமென்று எதிர்ப்பார்க்கப்படுகிறது. இந்தியா பெறும் வெளி உதவியில் பெருமளவு கட்டுப்படுத்தப்பட்ட உதவியாகக் குறிப்பிட்ட திட்டங்களுக்காகவே, கடன் கொடுப்போர் நாட்டுப் பணத்திலேயே (Creditor Currencies) அளிக்கப்படுகிறது. கட்டுண்ட நிதி முக்கியமான பொருள்களை வாங்குவதில் ஏற்படும் செலவை 30% மேல் உயர்த்துவதாக மதிப்பிடப்பட்டுள்ளது. கடன் கொடுக்கும் நாடு கடன் பராமரிப்புக் கட்டணங்களைக் கீழ்க்கண்ட வகைகளில் குறைக்கலாம். (i) கடனைத் திருப்பிக் கொடுக்கச் சட்டப்படி கால அவகாசம் அளித்தல் (ii) எளிதான நிபந்தனைகளுடன் புதிய கடன்களைத் தோற்றுவிக்கக் கடன்களுக்கு மறுநிதி அளித்தல். (iii) 70 முதல் 80% உதவியை மானியங் களாகவே (grants) அளித்தல் (iv) ஜூலை 1965-ல் வளர்ச்சி உதவிக் குழுவால் (Development Assistance Committee) அறிவுறுத் தப்பட்டப்படி நிபந்தனையற்ற கடன்களை 3% அல்லது அதற்குக் குறைவான வட்டிக்கு 25 ஆண்டு காலத் தவணையுடனும் 7 ஆண்டு காலக் கருணைத் தவணையுடனும் அளிக்க வகை செய்ய வேண்டும். நான்காம் திட்டத்தில் இந்தியா சுயபலத்துடனும், சுய உறுதியுடனும், சுய ஆற்றலுடனும், பொருளாதார வளர்ச்சி யைச் சாதிக்கத் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும்.

1 டாக்டர் K. N. ராஜ், 'இந்தியப் பொருளாதார வளர்ச்சி' (Indian Economic Growth) ப. 21.

1971-ல் ஏற்பட்ட இந்தோ-பாகிஸ்தான் போரின்போது இந்தியா பெற்ற அனுபவத்திலிருந்து இனிமேல் இக்கட்டான காலங்களில் வெளி உதவியை நம்பி ஏமாற்றம் அடையும் நிலை இல்லாமல் ஆக்க வகைசெய்ய வேண்டும். நான்காம் திட்டத்தின் இறுதி ஆண்டிற்குள் எல்லாவகை வெளிநாட்டு உதவிகளையும் முழுவது மாகக் குறைக்கப்படுவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். ஒருங்கிணைந்த செயல் முறைகளின் மூலம் இறக்குமதி யைக் குறைத்து ஏற்றுமதியைப் பெருமளவில் அதிகரிக்க வகை செய்ய வேண்டும். அப்போதுதான் இந்தியா சுய பலத்துடன் பொருளாதார வளர்ச்சியை விரைவாக மேம்படுத்தி மேலெழு கட்டத்தை (Take-off stage) சுலபமாகப் பெற்றுப் பொருளாதார முதிர்ச்சியைச் சாதிக்க முடியும்.

## 47. போக்குவரத்தும் செய்தித் தொடர்பும்

## (Transport and Communications)

### போக்குவரத்தும் பொருளாதார வளர்ச்சியும் (Transport and Economic Development)

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் செழிப்புக்கும் வேளாண்மை, தொழில் போன்ற துறைகள் இன்றியமையா தனவாய் விளங்குவதுபோல் போக்குவரத்து, தொடர்பு வசதிகள் வர்த்தகம் பெருகுவதற்குக் காரணமாய் உள்ளன. வேளாண்மை யும், தொழிலும் பொருளாதாரத்தின் முதுகெலும்பாக அமைந்தால், போக்குவரத்து வசதிகள் நரம்புகளாக அமைந்துள்ளன. போக்குவரத்து வசதிகள் தற்காலத்திய வளர்ந்துவரும் நாடுகளில் சந்தையின் அளவை விரிவு படுத்தவும், வேலைப்பகுப்பின் அடிப்படையில் பேரளவு உற்பத்தியை எளிதாக்கவும் பெரிதும் பயன்படுகிறது.

வேளாண்மை, தொழில், சுரங்கம் போன்ற துறைகள் முழு வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் பெறுவதற்குப் போக்கு வரத்துத்துறை அடிப்படையாக விளங்குகிறது. உற்பத்தி செய்யப்படும் இடத்திற்கு மூலப்பொருள்கள், நிலக்கரி, எந்திரங்கள் சாதனங்கள் போன்றவற்றைக் கொண்டு செல்லவும், செய் பொருள்களைச் சந்தைகளுக்கு எடுத்துச் செல்லவும் போக்குவரத்து வசதிகள் இன்றியமையாதனவாய் விளங்குகின்றன. முக்கியமாக வேளாண்மைத்துறை விளைபொருள்களை விற்பனை அங்காடிகளுக்கு எடுத்துச் செல்லவும், தொழில் துறையில் உற்பத்தி அதிகரிக்கவும் விற்பனைப் பணிகளை மேற்கொள்ளவும் போக்குவரத்து வசதிகள் பெருந்துணையாய் விளங்குகின்றன.

இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் கிராமப்புறங்களில் மக்கள் அறியாமை, மூடநம்பிக்கை, வகுப்பு வாதங்கள், பிற்பட்ட பழக்க வழக்கங்கள் போன்ற சமூக இன்னல்களில் மூழ்கிக்கிடக்

கின்றனர். இதன் விளைவாகத் தொழிலாளர்கள் ஒரு தொழிலி லிருந்து மற்றொரு தொழிலுக்கு மாறுவது தடுக்கப்படுவதோடு பொதுவாக விரைவான பொருளாதார முன்னேற்றம் தடை படுகிறது. இத்தகைய சூழ்நிலையை மாற்றி அமைத்துக் கிராமங் களில் பொருளாதார சிந்தனையும், தற்காலத்திய அறிவியல் கருத்துகளும் பரவுவதற்குப் போக்குவரத்து செய்தித் தொடர்பு வளர்ச்சி பெரும் துணைபுரிந்து வருகிறது. போக்குவரத்து வசதி யினால் சாதி, மத பேதங்கள் நீங்குவதோடு விரைவான பொருளா தார வளர்ச்சிக்கு இடையூறாக இருப்பவைகளும் நீங்க வாய்ப்பு ஏற்படுகின்றது. மேலும், போக்குவரத்து வளர்ச்சியினால் உற்பத்திக்குத் தேவையான வளங்களைப் புதிய நிலப்பகுதிகளி லிருந்து பெறுவதற்கும் வசதி கிடைக்கின்றது. இவ் வளர்ச்சி குன்றினால் மறைந்து கிடக்கும் ஏராளமான வேளாண்மை, கான், கனிவளங்கள் ஆகியவைகள் ஆக்கத்திற்குப் பயன்படா. எனவே, பிற்பட்ட பகுதிகளோடு முன்னேறிய பகுதிகளையும் இணைத்துச் சீராக முழு அளவில் வளங்களைப் பயன்படுத்தப் போக்குவரத்து வளர்ச்சி இன்றியமையாததாய் விளங்குகிறது. இறுதியாக, நாட்டைத் தொழில் மயமடையச் செய்து தேசிய வருவாயை உயர்த்தப் போக்குவரத்து வளர்ச்சி வகைசெய்கின்றது. இரும்பு, எஃகு, நிலக்கரி போன்ற பெரிய கனரகத் தொழில்கள் விரைவான வளர்ச்சியைப் பெறப் போக்குவரத்து வளர்ச்சி காரணமாய் இருக்கின்றது. போக்குவரத்து வளர்ச்சியினால் மோட்டார் வாகனங்கள், கப்பல்கள், இரயில் எஞ்சின்கள் போன்றவைகளின் தேவை அதிகரிப்பதால் அவற்றின் உற்பத்தி அதிகரித்து வருமானம், வேலை வாய்ப்பு, ஆகியவைகள் பெருகும். அதன் காரணமாக வேளாண்மை, தொழில் போன்ற துறைகள் விரை வான வளர்ச்சியைப் பெற்றுப் பொருளாதாரம் மேலோங்கி வளரும்.

## I. இரயில்வே போக்குவரத்து
### (Railway Transport)

இந்தியாவில் உள்ள போக்குவரத்து வசதிகளுள் இரயில்வே போக்குவரத்து பெரும் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றது. நாடு முழுவதும் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குப் பொருள்களைக்கொண்டு செல்வதில் இரயில்வேக்களின் பங்கு 80% ஆகவும், பயணிகளை ஏற்றிச் செல்வதில் அவைகளின் பங்கு 60% ஆகவும் இருக்கிறது. ஏப்பிரல் 1853-ல் துவக்கப்பட்ட இந்திய இரயில்வேக்கள் இன்று நாட்டின் மிகப் பெரிய தொழில் நிறுவன மாக இருந்துவருகிறது. இன்று இந்திய இரயில்வேக்கள்

ரூ. 3600 கோடிக்கு மேற்பட்ட சொத்துகளைக் கொண்டு 13·6 லட்சம் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தி, 13,000 இரயில் எஞ்சின்கள், 3,300 சாமான் ஏற்றிச்செல்லும் பார வண்டிகள் (Coaching Vehicles), 3,80,000 பெட்டிகள் (Wagons) ஆகியவற்றைப் பெற்றுள்ளன. மேலும் நாளொன்றுக்கு 60 லட்சம் பயணிகளையும் 5·5 லட்சம் டன் பொருள்களையும் ஏற்றிச்சென்று, ஆண்டொன்றுக்கு ரூ. 950 கோடியை வருவாயாகப் பெறுகின்றன. 1853-ல் இரயில்வே பாதைகளின் நீளம் 30 கி. மீட்டராக இருந்தது. ஆனால், 1969-ல் அது 59,560 கி. மீட்டராக அதிகரித்துள்ளது. இந்திய இரயில்வேக்கள் ஆசியாவிலேயே மிகப் பெரிய நிறுவனமாக அமைந்துள்ளது. மேலும், அது மிகப்பெரிய ஒற்றை இரயில்வே பாதை அமைப்பில் (Single Railway Network) உலகிலேயே இரண்டாவது இடத்தைப் பெற்றுள்ளது.

இந்திய இரயில்வேக்களை தற்போது ஒன்பது மண்டலமாகப் பிரித்துள்ளனர். இதனால் ஒவ்வொரு மண்டலமும் ஒவ்வொரு பகுதிக்கும் சிறப்பான முறையில் சேவைசெய்ய முடிகிறது. மேலும், திறமையாக இரயில்வேக்களை நிர்வகிக்கவும், சிக்கனமாக நடத்தவும் முடிகிறது. ஒவ்வொரு மண்டலத்திலும் சுமார் 6000 மைல்கள் நீளமுள்ள பாதை உள்ளது. 1951-ல் ஆரம்பிக்கப்பட்ட இரல்வே ஒருங்கிணைப்பு முறை 1966-ல் முடிவுற்றது.

## இரயில்வேக்களின் முக்கியத்துவம்
## (Importance of Railways)

இந்தியப் பொருளாதாரத்தில் இந்திய இரயில்வேக்கள் ஒரு மகத்தான மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன. இன்றைய இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு நாடு முழுவதிலும் உள்ள இரயில்வேப் போக்குவரத்தின் சீரான பணியே காரணமாகும். இந்தியப் பொருளாதாரத்திற்கு இரயில்வேக்கள் அளித்துள்ள சேவைகளைக் கீழே காண்போம்.

(1) இந்தியா தொழில் மயமாக்கப்பட இரயில்வேக்கள் பெருந்துணை புரிந்துள்ளன. அநேக முக்கியமான தொழில்கள் இந்தியாவில் வளர்ச்சி அடைய இரயில்வேக்களின் பெருக்கம் காரணமாய் இருந்துள்ளது. இந்திய இரயில்வேக்களின் துணையுடன் அநேக தொழில்கள் இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டன.

(2) இந்திய இரயில்வே வேளாண்மைத் தொழிலுக்குப் பல்வேறு வகைகளில் பணிபுரிந்துள்ளது. இந்திய வேளாண்மைப்

பொருள்களின் தேவையை அதிகப்படுத்தி அப்பொருள்களுக்கான சந்தையை விரிவடையச்செய்ய இரயில்வேக்கள் காரணமாய் இருந்து வருகின்றன. இரயில்வேக்கள் இந்திய விவசாயிகள் பன்னாட்டுச் சந்தைகளுடன் தொடர்பு கொள்ள வகைசெய்து வருகின்றன. பல்வேறு பகுதிகளில் வேளாண்மைப் பொருள்கள் சீரான முறையில் பங்கிடப்பட அவைகள் துணைபுரிந்து வருகின்றன.

(3) பல்வேறு பகுதிகளுக்கும் நகரங்களுக்கும் இடையே உள்ள இடைவெளியைக் குறைத்து இரயில்வேக்கள் நாட்டை ஒன்றாக இணைத்துள்ளன.

(4) பொருள்களில் ஏற்படும் பல்வேறு வகையான வர்த்தகத்தைப் பெருக்க இரயில்வேக்கள் துணைபுரிந்துள்ளன. இரயில்வே போக்குவரத்தினுல் ஏற்றுமதி, இறக்குமதி சுலபமாகி மீன், முட்டைகள், பால், பழம், காய்கறிகள் ஆகியவைகளின் சந்தை விரிவடைந்துள்ளது.

(5) இந்தியா போன்ற பரந்த நிலப்பரப்பைக் கொண்ட நாட்டிற்கு இரயில்வேக்கள் அநேக அரசியல், நிர்வாக வசதிகளையும் நன்மைகளையும் அளித்துவருகின்றன. உள்நாட்டுக் குழப்பம் அல்லது வெளிநாட்டுப் படையெடுப்பு போன்ற இக்கட்டான காலங்களில் சேனை, போலீஸ் படைகள் விரைவாக ஒரு பகுதியில் இருந்து மற்றொரு பகுதிக்குச் செல்ல இரயில்வேக்கள் உதவுகின்றன. பரந்த எல்லையைக் கொண்ட இந்தியாவில் நிர்வாகத்தைச் சீராகவும் திறமையுடனும் நடத்த அவைகள் துணைபுரிந்துவருகின்றன.

## ஐந்தாண்டுத் திட்டங்களில் இரயில்வேக்களின் வளர்ச்சி

திட்டக் காலத்திற்கு முன் இந்திய இரயில்வேக்கள் பெரும் பாலும் வேளாண்மைத் தொழிலுக்கும், காலனிப் பொருளா தாரத்திற்கும் சேவை செய்துவந்தன. அதாவது கச்சாப் பொருள்களை ஏற்றுமதி செய்யவும் செய்பொருள்களை இறக்குமதி செய்யவும் அவைகள் பயன்பட்டன. ஆனுல், திட்டக் காலத்தில் அவைகளின் பணி முற்றிலும் மாறுபட்ட முறையில் அமைந்தது.

## முதல் ஐந்தாண்டுத் திட்டம்

இத் திட்டக் காலத்தில் இரண்டாம் உலகப்போரில் பழு தடைந்த இரயில்வேக்களைச் செப்பனிடுவதற்கும் புதுமைப்படுத்து

வதற்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரியும் வகையில் இரயில் வேக்கள் சீரமைக்கப்பட்டன. மேலும், இரயில்வேக்கள் சுய வழியையும் தன்னிறைவையும் பெற்று விளங்க முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டன. உண்மையில் 20 எஞ்சின்கள் நீக்குவதற்குப் பதிலாக 1640 இரயில்வே எஞ்சின்கள் திட்டக்காலத் துவக்கத்தில் நீக்க வேண்டிய பிரச்சினை ஏற்பட்டது. செப்பனிடவேண்டிய பாதைகள் அதிகமாக இருந்தன. இத் திட்டக் காலத்தில் பாதை களைச் செப்பனிடவும் எஞ்சின்கள், பெட்டிகள் முதலியவற்றின் எண்ணிக்கையை அதிகப்படுத்தவும் ரூ. 423·73 கோடியை இரயில்வேக்கள் செலவிட்டன. மேலும், 810 மைல்கள் அதிகப் பாதையும் போடப்பட்டது. இதனால் போக்குவரத்து 16% அதிகரித்தது. இக் காலத்தில் 1,000 எஞ்சின்கள், 4,300 பெட்டிகள், 4,200 பார வண்டிகள், அதிகரிக்கப்பட்டன.

பொதுத் துறையில் சென்னை பெரம்பூரில் இரயில் பெட்டித் தொழிற்சாலையும், சித்தரஞ்சன் என்னுமிடத்தில் எஞ்சின் தொழிற் சாலையும் அமைக்கப் பட்டன. முதல் திட்ட இறுதியில் ஆண்டொன்றுக்கு 180 எஞ்சின்களும், 14,300 பெட்டிகளும் 950 பாரவண்டிகளும் உற்பத்தி செய்யப்பட்டன. இரயில்வேக்களின் ஆக்க சக்தி திறமையான சீரமைக்கப்பட்ட முறையால் அதிகரித்தது.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்

இத் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையாகிய ரூ. 1,125 கோடியில் வெளிநாட்டுச் செலாவணியின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக ரூ. 425 கோடி செலவிடப்படும் என்று எதிர்ப் பார்க்கப்பட்டது. இத் திட்டத்தின் முக்கியக் குறிக்கோள் களாவன:- 1. கனரகத் தொழில்களுக்குத் தேவையான போக்கு வரத்து வசதிகளைப் போதுமான அளவு ஏற்படுத்துதல். 2. இரயில் வேக்களின் நிரந்தர, நடமாடும் சொத்துகளைப் புனரமைத்து நவீனப்படுத்துதல். 3. உள்நாட்டு வளங்களைக் கொண்டு சாதனங் களைத் தயாரித்து இரயில்வே வசதிகளில் தன்னிறைவு பெறுவதற்கு முயற்சித்தல்.

## இரண்டாம் திட்டச் சாதனைகள்

1. இரண்டாம் திட்டக் காலத்தில் பொருள்களின் போக்கு வரத்து 50% ஆகவும், பயணிகளின் போக்குவரத்து 20% க்கு மேலும் அதிகரித்தது. 2. இரயில்வே பாதைகளை நவீனப்படுத்த

நீராவி சக்திக்குப் பதில் டீசலும் மின் இயக்கச் சக்தியும் பயன் படுத்த வகை செய்யப்பட்டது. மின் சக்தி திட்டத்தின்கீழ் 1,300 கி. மீட்டரும் டீசல் பயன்படுத்தும் திட்டத்தின் கீழ் 2,000 .கி மீட்டரும் வந்தன. 3. சுமார் 1,300 கி. மீட்டர் புதிய இருப்புப் பாதைகள் கட்டப்பட்டு இரண்டாம் திட்டக் காலத்திலேயே பயன்படுத்தப்பட்டன. சுமார் 270 கி. மீட்டர் நீளமுள்ள குறுகிய பாதை (Metre gauge) அகலமான பாதையாக (Broad gauge) மாற்றி அமைக்கப்பட்டது சுமார் 1,500 கி. மீட்டர் நீளமுள்ள ஒற்றைப் பாதை இரட்டைப்பாதையாக மாற்றி அமைக்கப்பட்டது. 4. சுமார் 12,800 கி. மீட்டர் நீளமுள்ள பழைய இருப்புப் பாதை புதுப்பிக்கப்பட்டது. 5. ரூ. 400 கோடி செலவில் 1,500 எஞ்சின்கள், 11,400 பார வண்டிகள் 10,500 பெட்டிகள் வளர்ச்சிக்காகவும் புனரமைப்புக்காகவும் தயாரிக்கப் பட்டன.

## மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம்

இரண்டாம் திட்டக் காலத்தில் கனரகத் தொழில்கள் அமைக்கப்பட்டதால் மூன்றும் திட்டக் காலத்தில் 245 மில்லியன் டன் பொருள்கள் இரயில்வேக்களால் ஏற்றிச் செல்லப்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. மேலும், பயணிகளைக் கொண்டு செல்வது 15% அதிகரிக்கும் என்றும் மதிப்பிடப்பட்டது. செய் முறைத் திறமையை அதிகரிக்கவும் எஞ்சின்கள், பெட்டிகள், போன்றவைகளை அதிகரிக்கவும் மூன்றும் திட்டத்தில் இரயில் வேக்களுக்காக ரூ. 1, 325 கோடிகள் ஒதுக்கிடப்பட்டது. பொது வாக விலைகள் அதிகரித்ததால் உண்மையாகச் செலவிடப்பட்ட தொகை ரூ. 1,668 கோடி யாகும்.

## மூன்றும் திட்டச் சாதனைகள்

(1) இத் திட்டக் காலத்தில் 19,000 எஞ்சின்கள், 7,400 பாரவண்டிகள், 1,45,000 பெட்டிகள் மேலும் தயாரிக்கப்பட்டன. (2) 2,500 கி. மீட்டர் நீளமுள்ள பாதை மின்சார மயம் (Electrification) ஆக்கப்பட்டது. 7,000 கி. மீட்டர் நீளமுள்ள பாதையில் டீசல் (Diselisation) வண்டிகள் விடப்பட்டன. (3) இந்தியா விலேயே டீசல், மின்சார எஞ்சின்கள் தயார் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டன. (4) சுமார் 3,250 கி. மீட்டர் நீளமுள்ள இருப்புப் பாதை இரட்டைப் பாதையாக மாற்றப் பட்டது. (5) இரும்புத் தாதுவை ஏற்றுமதி செய்வதற்கு வசதியாகப்

புதுப் பாதைகள் அமைக்கப்பட்டன. (6) பொருள்களின் போக்குவரத்துத் திட்டமிட்ட 59% அதிகரிப்புக்குப் பதிலாக 30% தான் அதிகரித்தது. ஆனால், பயணிகள் போக்கு வரத்து திட்டமிட்டபடி 15% அதிகரித்தது.

## நான்காம் திட்டத்தில் இரயில்வேக்கள்
## (Railways in Fourth Plan)

நான்காம் திட்டக் காலத்தில் தொழில், பொருளாதார வளர்ச்சி விரைவாக அதிகரிக்கத் திட்டமிடப்பட்டுள்ளதால் இரயில்வே போன்ற போக்கு வரத்து வசதிகளின் தேவை அதிகரிக்கும். எனவே, அதைக் கருத்தில் கொண்டு இலக்குகள் (Targets) குறிக்கப்பட்டுள்ளன. நான்காம் திட்டக் காலத்தில் 1973-74 க்குள் இரயில் மூலம் பொருள்களின் போக்கு வரத்து 290 மில்லியன் டன்களாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. நான்காம் திட்டம் முடிவுக்குள் பயணிகளின் போக்கு வரத்து 20%க்கு மேல் அதிகரிக்கும் என்றும் மதிப்பிடப் பட்டுள்ளது.

1,259 எஞ்சின்கள், 1,01,532 பெட்டிகள், 6,458 பாரவண்டிகள் அதிகரிக்கு மென்று கணக்கிடப் பட்டுள்ளது. சித்தரஞ்சன், வாரணசித் தொழிற்சாலைகளில் டீசல், மின் இயக்க எஞ்சின்களின் உற்பத்தி சீராக அதிகரிக்கும். இரயில்வே சாதனங்கள் அனைத்தும் உள்நாட்டு மூலப் பொருள்களைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.

1973-74-க்குள் டீசல் வண்டிகளின் போக்கு வரத்து 19,200 கி.மீ. பாதையில் இருந்து சுமார் 22,000 கி. மீட்டர் பாதை வரைக்கும் விரிவாக்கப்படும். மின் இயக்கப் பாதை 2,900 கி. மீட்டர் பாதையிலிருந்து 4,600 கி. மீட்டர் பாதை வரைக்கும் விரிவாக்கப்படும். நான்காம் திட்டக் காலத்தில் 1,500 கி. மீட்டர் குறுகிய பாதை (metre guage) அகலப் பாதை (broad guage) யாக மாற்றப்படும். 1,800 கி. மீட்டர் நீளமுள்ள பாதை இரட்டைப் பாதையாக்கப்படும்.

மேற்குறிப்பிட்டுள்ள குறிக்கோள்களைச் சாதிக்க ரூ. 1,050 கோடியே நான்காம் திட்டக் காலத்தில் இரயில்வேக்கள் செலவிடும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், 525 கோடி இரயில்வேக் களின் தேயுமான இருப்பு நிதி (Depreciation reserve fund) யிலிருந்து எடுத்து இரயில்வே வளர்ச்சிக்குப் பயன்படுத்தப்படும்.

## II. சாலைப் போக்குவரத்து
(Road Transport)

போக்குவரத்து சாதனங்களில் தகுந்த மாற்றமும் விரைவான வளர்ச்சியும் பெற்றுப் பொருளாதார வளர்ச்சிக்குத் துணைசெய்வது சாலைப் போக்குவரத்தாகும். இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளுக்குக் குறைந்த முதலைக் கொண்டு வெளிநாட்டுச் செலாவணியின் தேவையின்றிப் பணிபுரியும் ஸ்தாபனம் சாலைப் போக்குவரத்தாகும். வட்டார வளர்ச்சிக்கும் தேசிய முன்னேற்றத்திற்கும் சாலைப் போக்குவரத்து தகுந்த அமைப்பாக உள்ளது. ஏனெனில் பல்வேறு கிராமங்களை ஒன்று சேர்த்து அவற்றை நகரங்களுடன் ஒருங்கிணைக்கச் சாலைப் போக்குவரத்து பெருந்துணை புரிகிறது. மேலும், சாலைகளின் வளர்ச்சி செய்பொருள்களைச் சீராகப் பங்கீடு செய்யவும், வேளாண்மைப் பொருள்களை உற்பத்தி செய்து விற்பனை செய்யவும் துணைபுரிகிறது. அழுகிப் போகும் (Perishable) பொருள்களை விரைவாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சுமந்து செல்ல சாலைப் போக்குவரத்து இன்றியமையாததாக விளங்குகிறது. இந்தியப் பொருளாதாரம் பின்தங்கிய நிலையில் இருப்பதற்குச் சாலை போக்குவரத்துப் பற்றாக்குறையும் ஒரு காரணமாகும்.

நாட்டின் பாதுகாப்பிற்காகச் சாலைப் போக்குவரத்து மிகவும் அத்தியாவசியமானதாய் விளங்குகிறது. படைகள், டாங்கிகள் மற்றப் போர்ச் சாதனங்கள் ஆகியவைகளை எடுத்துச் செல்ல சாலைப் போக்குவரத்து தகுந்ததாய் உள்ளது. நாட்டின் எல்லைப் பகுதிகளில் பாதுகாப்பை வலுப்படுத்தச் சீரான சாலைகளின் வளர்ச்சி அவசியமாகும். இரயில்வேக்களும் சாலைப் போக்குவரத்தும் போட்டி இன்றி ஒன்றை ஒன்று நிறைவு செய்பவைகளாய் அமைதல் விரும்பத்தக்கதாகும்.

### சாலைகளின் வளர்ச்சி
(Road Development)

இந்தியாவில் சாலைகள் போதுமான அளவு அமைக்கப்படவில்லை. நீண்ட நாட்களாகவே சாலைகளின் பற்றாக்குறை இருந்து வருகிறது. 1950-ல் 12·7 லட்சம் சதுர மைல்கள் கொண்ட இந்தியாவில் 2,56,000 மைல்கள் நீளமுள்ள பாதைதான் போடப்பட்டது. இதில் 97,000 மைல் நீளமுள்ள பாதைதான் உறுதியான நல்ல சாலையாக இருந்தது. சாலைப் போக்குவரத்துச் சீரமைப்புக் குழுவின் அறிக்கையின்படி மற்ற நாடுகளோடு

ஒப்பிடும் போது ஒரு லட்ச மக்கட் தொகை ஒரு சதுரமைல் இடம் ஆகியவைகளின் அடிப்படையில் இந்தியா மிகவும் பிற்பட்ட நிலையில் உள்ளது. அதைக் கீழ்க்கண்ட பட்டியல் தெளிவாக விளக்குகிறது.

சில நாடுகளில் சாலையின் நீள அளவு (Mileage)

| நாடு | ஒரு சதுரமைல் நீளத்தில் சாலையின் நீள அளவு | ஒரு லட்சம் மக்களுக்கான சாலையின் நீள அளவு |
|---|---|---|
| இங்கிலாந்து | 3·24 | 284 |
| பிரான்ஸ் | 3·03 | 1,502 |
| ஐக்கிய அமெரிக்கா | 1·00 | 1,834 |
| இலங்கை | 0·38 | 115 |
| இந்தியா | 0·25 | 82 |

இந்தியாவில் பெரும்பாலான சாலைகள் பாழான நிலையில் உள்ளன. பெரும்பாலான சாலைகள் இரயில் போக்குவரத்தோடு போட்டியிடுகின்றன. பல்வேறு காரணங்களால் இந்தியாவில் சாலை வளர்ச்சியில் கவனம் செலுத்தப்படவில்லை. முதலாவதாக மத்திய, மாநில, உள்ளூர் அரசுகள் சாலை வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளிக்கவில்லை. இரண்டாவதாக, போதிய நிதி வசதியும் கிடைக்கவில்லை. குறிப்பாக நகராட்சிகள், மாவட்டக் கழகங்கள் (District boards) ஆகியவைகளிடம் நிதி வசதி குறைவு. இறுதியாகச் சாலை அமைக்கும் உருளைகள், சிமெண்டு போன்ற சாதனங்களின் பற்றுக்குறையும் ஒரு காரணமாகும். ஆனால், தற்போது இக்குறைபாடுகள் நிவர்த்தி செய்யப்பட்டு வருகின்றன. சாலைப் போக்குவரத்து விரிவாக்கப்பட்டால்தான் வேளாண்மை, தொழில் துறை ஆகியவைகள் அதிகப் பொருள்களை வசதியுடன் குறுகிய காலத்தில் அனுப்பமுடியும்.

நாக்பூர் திட்டம் (Nagpur Plan)

பல்வேறு மாநிலங்களின் பிரதம பொறியியலாளர்கள் (Chief Engineers) 1943-ல் நாக்பூரில் ஒன்றுகூடி ஒரு சாலைத் திட்டத்தைத் தயாரித்தார்கள். அதுவே நாக்பூர் திட்டமாகும். இத் திட்டம் சாலைகளை நான்கு வகைகளாகப் பிரித்தது—தேசிய நெடுஞ்சாலைகள், மாநில நெடுஞ்சாலைகள், மாவட்ட சாலைகள்,

கிராம சாலைகள் என்பனவாகும். பத்தாண்டுக் காலத்தில் திட்டமிடப்பட்ட ஒருங்கிணைந்த முறையில் இந்த நான்கு வகைச் சாலைகளும் வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்று இத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டது. இத் திட்டத்தில் உறுதியான நல்ல சாலைகள் 1,22,000 மைல் நீளமும் சாதாரண சாலைகள் 2,07,500 மைல் நீளமும் போடப்படுமென்று எதிர்பார்க்கப்பட்டது. வளர்ச்சி அடைந்த விவசாயப் பகுதியைக் கொண்ட கிராமம், நெடுஞ்சாலையிலிருந்து ஐந்து மைல்களுக்கு மேற்பட்ட தூரத்தில் இருக்கக் கூடாது என்பது இத் திட்டத்தின் அடிப்படைக் குறிக்கோளாகும்.

## ஐந்தாண்டுத் திட்டங்களும் சாலைப் போக்குவரத்தும்
## (Road Transport and Five Year Plans)

### முதல் திட்டம்

முதல் திட்ட ஆரம்பத்தில் இந்தியாவில் 97,000 மைல் நீளமுள்ள உறுதியான நல்ல சாலைகளும் 1,47,000 மைல்கள் நீளமுள்ள சாதாரண சாலைகளும்தான் இருந்தன. முதல் திட்டக் காலத்தில் சுமார் 10,000 மைல் நீளமுள்ள புதிய உறுதியான சாலைகளும் 20,000 மைல் நீளமுள்ள சாதாரண சாலைகளும் போடப்பட்டன. சுமார் 10,000 மைல் நீளமுள்ள பழைய சாலைகள் சீரமைக்கப்பட்டன. இத் திட்டக் காலத்தில் சாலைகள் வளர்ச்சிக்காக மொத்தம் ரூ. 155 கோடிகள் ஒதுக்கப்பட்டது. தேசிய நெடுஞ்சாலைகளின் வளர்ச்சிக்குத் தகுந்த முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. முதல் திட்ட இறுதியில் சாலைகளில் நடமாடிய மோட்டார் வாகனங்களின் மொத்த எண்ணிக்கை 2,94,000லிருந்து 3,60,000 மாக அதிகரித்தது.

### இரண்டாம் திட்டம்

மத்திய சாலை நிதி(Central Road Fund)யிலிருந்து அளிக்கப்படும் ரூ. 25 கோடியைச் சேர்க்காமல் மொத்தம் ரூ. 246 கோடி இரண்டாம் திட்டக் காலத்தில் சாலை வளர்ச்சிக்காக ஒதுக்கப்பட்டது. தேசிய நெடுஞ்சாலைகள், மாநில நெடுஞ்சாலைகள் ஆகியவைகளின் வளர்ச்சிக்குச் சிறப்பிடமளிக்கப்பட்டது. இரண்டாம் திட்ட இறுதியில் நாட்டில் 1,44,000 மைல் கொண்ட உறுதியான சாலைகளும், 2,40,000 மைல் கொண்ட சாதாரண சாலைகளும் அமைக்கப்பட்டிருந்தன. நாக்பூர் திட்டத்தில் குறிப்பிடப்பட்ட பாதையின் மொத்த நீள அளவாகிய 3,31,000 மைல்களுக்கு மேலேயே எல்லாவகைச் சாலைகளின் மொத்த நீள அளவும் இருந்தது.

இரண்டாம் திட்டக் காலத்தில் ஏற்பட்ட சாலைப் போக்கு வரத்து வளர்ச்சியில் முக்கியத்துவம் வாய்ந்தது ஹைதராபாத் திட்டமாகும் (Hydrabad Plan). 1959-ல் மாநில மத்திய அரசு களின் பிரதம பொறியியலாளர்கள் ஹைதராபாத்தில் ஒன்றுகூடி 20 ஆண்டு (1961-81) சாலை வளர்ச்சித் திட்டம் ஒன்றைத் தீட்டினர். அதன்படி 2,52,000 மைல் கொண்ட நல்ல சாலை களும் 4,05,000 மைல் சாதாரண சாலைகளும் அமைக்கப்பட வேண்டும் என்று குறிப்பிடப்பட்டது. இத் திட்டத்தில் 1981-ல் 800 மில்லியன் டன் பொருள்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்லவேண்டிய நிலை ஏற்படுமென்றும், அதில் 525 மில்லியன் டன் பொருள்களை இரயில்வேக்களிலும், 245 மில்லியன் டன் பொருள்களைச் சாலைகளிலும் கொண்டுசெல்ல வேண்டியிருக்குமென்றும் குறிப்பிடப்பட்டது. தற்போது இந்தியா விலேயே வர்த்தக மோட்டார் வண்டிகள் (commercial vehicles) உற்பத்தி செய்யப்படுகின்றன. 1960-61-ல் அவைகளின் உற்பத்தி எண்ணிக்கை 30,000 ஆக இருந்தது. இரண்டாம் திட்ட இறுதியில் அவைகளின் மொத்த எண்ணிக்கை 2 லட்சமாக இருந்தது. 1960-61-ல் பயணிகள், பொருள்கள் போக்குவரத்து முதல் திட்ட இறுதியில் இருந்ததைக் காட்டிலும் இருமடங்கு அதிகரித்தது.

மூன்றும் திட்டம்

சாலைகளின் வளர்ச்சிக்கும் சாலைப் போக்குவரத்திற்கும் மூன்றும் திட்டத்தில் சுமார் ரூ. 324 கோடி ஒதுக்கப்பட்டது. ஹைதராபாத் திட்டத்தில் குறிப்பிடப்பட்ட பரந்த கொள்கைகள் அமுலாக்கப்பட்டன. சைனுவின் படையெடுப்புக்குப் பின் எல்லைப்புறப் பகுதிகளில் சாலைகளை அமைப்பதற்காக மேற் கொண்டு திட்டங்களை மேற்கொள்ள மேலும் ரூ. 125 கோடி அளிக்கப்பட்டது. மூன்றும் திட்ட இறுதியில் நாட்டில் மொத்தம் 6,02,000 மைல் நீளமுள்ள சாலைகள் இருந்தன. இவற்றில் 1,78,300 மைல் நீளமுள்ள பாதை உறுதியானதாகும்.

நான்காம் திட்டம்

நான்காம் திட்டக் காலத்தில் மத்தியத் துறையில் சாலைகளின் வளர்ச்சிக்காக ரூ. 418 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. தேசிய நெடுஞ்சாலைகளின் அமைப்பைச் சீரமைப்பதற்காக ஆங்காங்கே ஒருங்கிணைக்கப்படாத சாலைகள், பாலங்கள் ஆகியவற்றை முழுமை யாக ஒருங்கிணைக்க வகை செய்யப்பட்டுள்ளது. தேசிய நெடுஞ் சாலைகளில் மேலும் புதிய சாலைகளைச் சேர்க்க வகை செய்யப் பட்டுள்ளது.

மாநிலத் துறைகளில் சாலைகளின் வளர்ச்சிக்காக ரூ. 411 கோடி செலவு செய்யத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. 1968-69ன் இறுதியில் உறுதியான சாலைகளின் நீள அளவு சுமார் 3,17,000 கி. மீட்டர்களாக இருப்பது நான்காம் திட்ட இறுதியில் சுமார் 3,67,000 கி. மீட்டர்களாக அதிகரிக்கும்.

## மார்ச்சு 31-ல் இருந்தபடி இந்திய சாலை வளர்ச்சியைக் காட்டும் அட்டவணை

| வருடம் | உறுதியான சாலைகள்(கி. மீட்டர்களில்) (Surfaced Roads, K. ms) |
|---|---|
| 1951 | ... 1,56,800 |
| 1956 | ... 1,95,200 |
| 1958 | ... 2,13,800 |
| 1961 | ... 2,36,000 |
| 1966 | ... 2,87,000 |
| 1969 (எதிர்பார்க்கப்பட்ட) | ... 3,17,000 |
| 1974 | ... 3,67,000 |

ஆதாரம்: 1. சாலைப் போக்குவரத்துச் சீரமைப்புக் குழுவின் அறிக்கை, 1961.
2. நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் (1969-74) ஒரு விளக்கம்.

சாலைப் போக்குவரத்தின் மூலம் கொண்டு செல்லப்படும் மொத்தப் பொருள்களின் எடை 1968-69-ல் சுமார் 40 மில்லியன் டன்-கி. மீட்டர்களாக (Tonne-Kilometres) இருப்பது 1973-74-ல் சுமார் 84 பில்லியன் (billion) டன்-கி. மீட்டர்களாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பயணிகளின் போக்குவரத்து 1968-69ன் 92 பில்லியன் பயணிகள் கி. மீட்டர்களாக இருப்பது 1973-74-ல் சுமார் 140 பில்லியன் பயணிகள் கி. மீட்டர்களாக (passenger Kilometres) அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. அதிகரித்துவரும் போக்குவரத்துத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகச் சுமார் 300 ஆயிரம் டிரக் வண்டிகளிலிருந்து 470 ஆயிரம் டிரக்கு வண்டிகளாக அதிகரிக்கப்படும். 80 ஆயிரம் மோட்டார் வாகனங்களில் (buses) இருந்து சுமார் 135 ஆயிரம் மோட்டார் வாகனங்களாகவும் அதிகரிக்கும். 1968-69-ல் வர்த்தக மோட்டார் வண்டிகளின் உற்பத்தி 1968-69-ல் 35 ஆயிரமாக இருப்பது 1973-74-ல் 85 ஆயிரமாக அதிகரிக்கும்.

நாட்டுடைமை யாக்கப்பட்ட சாலைப் போக்குவரத்தின் வளர்ச்சிக்காக ரூ. 82 கோடி ஒதுக்கிடப்பட்டுள்ளது. மாநில சாலைப் போக்குவரத்து அமைப்புகளின் மூலதனத்திற்குத் தனியாக ரயில்வேக்களின் பட்ஜெட்டிலிருந்து ரூ. 10 கோடி தனியாக ஒதுக்கப்பட்டுள்ளது. வடகிழக்குப் பகுதியில் இயங்கிவரும் மத்திய சாலைப் போக்குவரத்துக் கழகத்திற்கு மத்தியத் திட்டத்திலிருந்து ரூ. 3 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. தனியார் துறையில் தான் சாலைப் போக்குவரத்து பெரும்பாலும் விரிவடைந்து வருகிறது. எதிர்காலத்தில் திட்டங்கள் வகுக்கும் பொழுது, நான்கு முக்கிய அம்சங்களைக் கவனிக்க வேண்டும்: 1. பிரதான வளர்ச்சித் திட்டங்கள் (Development projects) செயல்படும் இடங்களை இணைத்துப் பாதைகள் போடப் படவேண்டும். 2. கிராம அங்காடிச் சாலைகள் அதிகரிக்கப் படவேண்டும். 3. பிற்பட்ட பகுதிகள், மலைப் பகுதிகள், கடலோரப் பகுதிகள் ஆகியவைகளின் வளர்ச்சிக்காகச் சாலைகள் அமைக்கப்பட வேண்டும். 4. பெரிய நகரங்கள், அதனைச் சார்ந்த இடங்கள் ஆகிய இடங்களில் சாலைகள் அமைக்கப்பட வேண்டும். தற்போது இருந்துவரும் சாலைகளின் பராமரிப்புக்காகப் போதுமான நிதி ஒதுக்கப்பட வேண்டும். போக்குவரத்துக் கொள்கை ஒருங்கிணைப்புக் குழு (Committee on Transport Policy and co-ordination) சிறிய மோட்டார் சொந்தக்காரர்களைப் பெரிய சாலைப் போக்குவரத்து அமைப்பை நடத்துபவர்களுடன் ஒருங்கிணைக்க வேண்டுமென்றும், கூட்டுறவுப் போக்குவரத்து ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப் பட வேண்டுமென்றும் பரிந்துரைத்துள்ளது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தோடு ஒப்பிடும் போது மற்றத் திட்டங்களில் சாலை வளர்ச்சிக்காக ஒதுக்கிடப்பட்ட தொகையின் பங்கு மிகக் குறைவாகும். கீழ்க்கண்ட அட்டவணை அதை விளக்குகிறது. (அட்டவணை பக்கம் 290 பார்க்க.)

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்த முதலீட்டில் சாலைகளுக்காக 6·9 சதவிகிதம் ஒதுக்கப்பட்டது. இரண்டாம் திட்டத்தில் அது 4·9 சதவிகிதமாகவும் மூன்றும் திட்டத்தில் அது 5·1 சதவிகிதமாகவும் மூன்று வருடாந்திரத் திட்டங்களில் (1966-69) 4·5 சதவிகிதமாகவும் குறைந்தது. சாலை வளர்ச்சிக் குழு (Working group on road development) பரிந்துரைத்த தொகைக்கும் குறைவாக நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சாலை வளர்ச்சிக்காக ஒதுக்கிடப்பட்டுள்ளது.

1967-68-ல் இந்தியாவில் சாலை வளர்ச்சிக்கான செலவு மொத்தத் தேசிய வருமானத்தில் ஒரு சதவிகிதமாகக் கணக்கிட்

## சாலை வளர்ச்சிக்கான முதலீடு
(Outlays on Road Development)

(ரூ. கோடிகளில்)

| | மொத்த பொதுத் துறை முதலீடு | சாலை வளர்ச்சிக் கான முதலீடு | மொத்த முதலீட் டில் சாலைக்கான முதலீட்டின் பங்கு (சதவிகிதங்களில்) |
|---|---|---|---|
| முதல் ஐந்தாண்டுத் திட்டம் | 1,960 | 135 | 6·9 |
| இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் | 4,600 | 228 | 4·9 |
| மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் | 8,577 | 440 | 5·1 |
| 1966-67 to 1968-69 (எதிர்பார்க்கப்படும்) | 6,756 | 307 | 4·5 |
| நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் (தீர்மானிக்கப்பட்ட)... | 15,902 | 876 | 5·5 |
| 1969-70 (தீர்மானிக்கப்பட்ட) | 2,271 | 95 | 4·2 |

ஆதாரம் : மத்தி அரசு, திட்டக் குழு.

டால் இந்தியாவில் அது 0·63 சதவிகிதமாகவும், நார்வேயில் 4·04 சதவிதமாகவும், கனடாவில் 3·50 சதவிகிதமாகவும், ஜப்பானில் 2·82 சதவிகிதமாகவும், அமெரிக்காவில் 2·30 சதவிகிதமர்கவும் உள்ளது. சுவிட்சர்லாந்து, டென்மார்க், இத்தாலி, பிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளில் அதிகமான தேசிய வருவாய் சாலை வளர்ச்சிக்காகச் செலவிடப்படுகிறது. ஆனால், இந்தியாவில் அது மிகக் குறைவாகும்.

## சாலைப் போக்குவரத்தின் பிரச்சினைகள்
(Problems of Road Transport)

தனியார் சாலைப் போக்குவரத்தை நடத்துபவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதால் சிக்கனமற்ற நடவடிக்கைகள் காணப்படுகின்றன. 48 ஆயிரம் தனியார் தொழில் நடத்துபவர் களால் 2 லட்சம் லாரிகள் சாலைகளில் நடமாட விடப்பட்டுள்ளன.

இவர்களில் ஐந்து வண்டிகளுக்கு மேல் வைத்திருப்பவர்களின் எண்ணிக்கை 2 ஆயிரம் பேர்களாகும். இதன் விளைவாகத் திறமையும், ஒழுங்கும், கட்டுப்பாடும் இல்லாத போக்குவரத்து நடவடிக்கைகள் காணப்படுகின்றன.

இரண்டாவதாக, பெருஞ் சுமையான பல்வகை வரி, ஒரே சீரான தேசியக் கொள்கையின்மை ஆகிய இரண்டும் பிரதான பிரச்சினைகளாகும். இந்தியப் பார வண்டி (Truck) சொந்தக்காரர்கள் சுமார் 61% வரியை வாகனத்தின் விலையோடு சேர்த்துச் செலுத்துகிறார். மேலும், மற்ற சாதனங்களின்மேல் மிக அதிகமான வரிச்சுமை உள்ளது. மொத்தத்தில் ஒரு வண்டிக்கு சுமார் ரூ. 3,700 ஆண்டுதோறும் வரியாகச் செலுத்த வேண்டியுள்ளது. ஆனால், அது இங்கிலாந்தில் ரூ. 1,300-ஆகவும் ஐக்கிய நாடுகளில் ரூ. 500-ஆகவும் உள்ளது.

மூன்றாவதாக, வாகனங்களுக்கு உரிமங்கள் வழங்குவதில் சீரான லைசென்ஸ் முறை காணப்படவில்லை. பல்வேறு தேவையற்ற கட்டுப்பாடுகளின்கீழ் மோட்டார் போக்குவரத்து பணிபுரிய வேண்டிய நிலை உள்ளது. 300 மைல்களுக்கு மேற்பட்ட மோட்டார் வாகன உரிமங்கள் (Licences) பல்மாநிலப் போக்குவரத்துக் குழுவின் (Inter State Transport Commission) அனுமதியைப் பெற்றுத்தான் அளிக்கப்படவேண்டும். ஒற்றைக் கட்டவரி (Single point Taxation) முறைகளை மாநிலங்கள் ஏற்றுக் கொண்ட போதிலும் நடை முறையில் ஒவ்வொரு மாநிலமும் தனியாக வண்டிகளின்மேல் வரி விதிக்கின்றனர். மேலும், ஒவ்வொரு மாநிலமும் ஒரு தனி வரியைப் பொருள்களின் மேல் விதிக்கின்றது. ஏராளமான சோதனைச் சாவடிகள் இருப்பதனால் போக்குவரத்தில் தாமதமும் லஞ்சமும் அதிகரிக்கிறது. பற்றாக் குறையான சாலைவசதி மற்ற ஒரு பெரும் பிரச்சினையாகும்.

## இரயில்—சாலை ஒருங்கிணைப்பு
(Rail-Road Co-ordination)

இரயில்வேக்கள் அளிக்க இயலாத சில சேவைகளைச் சாலைப் போக்குவரத்து அளித்து வருகிறது. சமீபத்தில் இரயில் வேக்களின் பணிகளில் சிறந்த சீரமைப்பு ஏற்பட்டிருந்தபோதிலும் விரைவான பட்டுவாடா, வீட்டுக்கு வீடு சேவை, குறைந்த கட்டுமானச் செலவு (Packing Costs), மாற்றத்தகுந்த கால அட்டவணை (Flexible timetables) போன்ற நன்மைகளால் சாலைப்போக்குவரத்தைப் பொருள்களை அனுப்புவோர் விரும்புகின்றனர். இரயில் போக்குவரத்தைவிட சாலைப்போக்கு வரத்து மூன்று மடங்கு

விரைவாகச் செல்லக் கூடியதாகும். எனவே, தேவைப்பட்ட பகுதிகளில் சாலைப் போக்குவரத்து விரைவான வளர்ச்சியை பெறத் தகுதியுடையதாகும். எனவே, அது வளர்ச்சியில் முதலிடம் பெற வேண்டிய நிலையிலுள்ளது. போக்குவரத்தின் இத்தகைய மேம்பாடுகள் இரயில்வேப் போக்குவரத்து வளர்ச்சிக்கு இடர் அளிப்பதாய் இருந்தது. எனவே 1930-ல் நியமிக்கப்பட்ட வெட்ஜ்உட் (Wedgewood) குழு தகுந்த பரிவுரைகளை அளித்தது.

இக் குழு சுமை வண்டிகளுக்கு உரிமம் வழங்க வேண்டுமென்ற பொருளற்ற கருத்தைப் பரிந்துரைத்தது. 1939-ல் மோட்டார் வண்டிகள் சட்டம் சாலைகளில் சுதந்திரமாகச் சுமந்து செல்லப்படும் பொருள்களின்மேல் பல வகைத் தடைகளை விதித்தது. 1945-ல் சாலைப் போக்குவரத்தை ஒழுங்குபடுத்த மத்திய அரசு மாநில அரசுகளுக்கு ஒரு தத்துவ நடைமுறைக் கொள்கையை (A Code of Principles and Practies) வகுத்துக் கொடுத்தது. இத்தகைய தடைகளால் சாலைப் போக்குவரத்து வளர்ச்சி பெரிதும் பாதிக்கப் பட்டுள்ளது.

இரயில்வேக்களுக்கும் சாலைப்போக்கு வரத்துக்கும் இடையே போட்டி இருந்ததால் மேற்குறிப்பிட்ட கொள்கை அமுலாக்கப் பட வேண்டிய நிலை இருந்தது. ஆனால், இவ்விரண்டிற்கு மிடையே சிறந்த ஒத்துழைப்பும் ஒருங்கிணைப்பும் இருக்க வேண்டியது அவசியமாகும். சாலைப் போக்குவரத்து விவசாயிகளை உள்ளூர்ச் சந்தை, அருகிலுள்ள இரயில்வே நிலையம் ஆகியவற்றுடன் ஒருங்கிணைக்கத் தகுந்ததாய் உள்ளது. மற்றொருபுறம் இரயில் வேக்கள் தூரத்திலிருக்கும் நுகர்வோர்களையும் உற்பத்தியாகும் இடங்களையும் ஒன்று சேர்க்கவும், கிராமங்களில் இருக்கும் விவசாயிகளையும் நகரத்திலிருக்கும் உற்பத்தியாளர்களையும் ஒன்று சேர்க்கவும் தகுந்ததாய் உள்ளது. போதுமான நல்ல சாலைகள் இருந்தாலொழிய இரயில்வேக்கள் போதுமான பொருள்களைச் சேகரிக்க இயலாது. இவ்விதமாகச் சாலைப் போக்குவரத்தும் இரயில்வேக்களும் ஒன்றை ஒன்று நிறைவு செய்பவைகளாய் உள்ளன. எனினும் எல்லா இடங்களிலும் இவ்விரண்டிர்கு மிடையே போட்டியிருந்து வருகிறது. கடந்த 30 ஆண்டுகளாக இப் போட்டியை நீக்கி இரண்டு போக்குவரத்துகளுக்குமிடையே ஒருங்கிணைப்பை ஏற்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பொருளாதாரத்திற்கு நன்மை ஏற்பட இவ்விரண்டு போக்கு வரத்துகளும் ஒருங்கிணைக்கப்படவேண்டிய சூழ்நிலை காணப்படுகிறது. இரயில்வேக்களில் சுமை நிலையாக அதிகரித்து வருகிறது. 1981-க்குள் மொத்தப் பொருள்களின் போக்குவரத்தில் பெரும்பகுதி சாலைகளில்தான் கொண்டு செல்ல

வேண்டு மென்று எதிர்பார்க்கப்படுகிறது. இரயில்வேக்களில் சிக்கனமற்ற முறையில் பொருள்களின் போக்குவரத்து நடைபெற்றுவருகிறதென்று இரயில்வே போர்டால் நடத்தப்பட்ட போக்கு வரத்து அடர்த்தி ஆய்வு (Traffic Density Study) தெளிவாக உணர்த்துகிறது. இரயில்—சாலை ஒருங்கிணைப்பு முறையை ஏற்படுத்தி, அமுலாக்க ஒரு சக்தி வாய்ந்த அமைப்பை மிக விரைவாக ஏற்படுத்த வேண்டியது அவசியமாகும்.

## சாலைப்போக்கு வரத்துச்சீரமைப்புக் குழு

சாலைப் போக்கு வரத்தைச் சீரமைக்க மசானி குழு (Masani Committee) நியமிக்கப்பட்டது. இக் குழு ஒருங்கமைப்பு என்ற பெயரில் சாலைப் போக்குவரத்திற்கு ஏற்படும் இன்னல்களை எடுத்துக் கூறியது. ஒருங்கமைப்புக்கொள்கை ஒருபுறச் சாய்வானது என்று இது கண்டித்தது. சாலைப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்தி இரயில்வேக்களுக்குப் பாதுகாப்பளிப்பது சரியில்லை என்பதற்கு மூன்று காரணங்கள் கூறப்பட்டன. 1. இரயில்வேக்களைப் போலவே சாலைப் போக்குவரத்திலும் அதிக முதலீடு செய்யப்பட்டுள்ளது. 2. சாலைகள் அமைப்பதற்கு செலவு மிகக் குறைவாக உள்ளது. ஆனால், இரயில் பாதை அமைப்பதற்கு இதைவிட மூன்று அல்லது நான்கு மடங்கு அதிக செலவாகும். 3. வளர்ச்சி அடைந்த நாடுகளில் சாலைப் போக்கு வரத்தே பெரும்பான்மையான பொருள்களை ஏற்றிச் செல்கிறது. உண்மையில் நவீனத் தொழில் நுட்ப வளர்ச்சி மோட்டார் போக்குவரத்தின் தேவையைப் பன்மடங்கு உயர்த்தியுள்ளது. வளர்ந்து வரும் நாட்டின் அதிகரித்துவரும் போக்குவரத்துத் தேவையை நிறைவுசெய்ய இரயில் போக்குவரத்தால் மட்டும் இயலாது. எனவே, சாலைப் போக்குவரத்தின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்துவது சிறந்ததாகாது என இக் குழு எடுத்துரைத்தது. எனவே, வளர்ந்துவரும் பொருளாதாரத்தில் போக்குவரத்துத் தேவைகளை பூர்த்திசெய்ய சாலைப் போக்குவரத்து பெருமளவில் விரிவாக்கப்பட வேண்டுமென்று இக் குழு கூறியது.

## III. நீர்ப் போக்குவரத்து
### (Water Transport)

நீர்ப் போக்குவரத்தில் இருவகைகள் உண்டு. அவைகளாவன: உள்நாட்டு நீர்போக்குவரத்து (Inland Water Transport) அல்லது நதிப்போக்குவரத்து (River Transport), கடற்கரை வழி (Coastal) அல்லது கடல் வழிப் (Marine) போக்குவரத்து ஆகும்.

## உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து

ஆரம்பத்தில் நாட்டின் போக்குவரத்து முறையில் நதி, கால்வாய்ப் போக்குவரத்து முக்கியத்துவம் பெற்றிருந்தது. ஆனால், சென்ற நூற்றாண்டின் மத்தியில் இரயில்வேக்களின் வளர்ச்சியினாலும், நதி நீர்ப்பாசனத்திற்காகப் பயன்படுத்தப் பட்டதாலும், உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து வளர்ச்சி குன்றியது. ஆனால், தற்போதும் அஸ்ஸாம், மேற்கு வங்காளம், பீஹார் ஆகிய மாநிலங்களில் நதிப் போக்குவரத்து சிறப்புற்று விளங்குகிறது. அஸ்ஸாமுக்கும் கல்கத்தாவுக்கும் இடையே உள்ள 25 லட்சம் டன் பொருள்களின் போக்குவரத்தில் பாதிக்கு மேல் நதிப்போக்கு வரத்துத்தான் பயன்படுத்தப்பட்டு வருகிறது.[1] கேரளாவில் பொருள்களையும் பயணிகளையும் சுமந்து செல்ல நதிப் போக்கு வரத்து சிறப்பாய்ப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஒரிஸ்ஸா, ஆந்திரா, தமிழ்நாடு ஆகிய மாநிலங்களிலும் நதிப் போக்கு வரத்துக் காணப்படுகிறது. முதலிரண்டு திட்டங்களிலும் நதிப் போக்குவரத்து கவனம் செலுத்தப்படவில்லை. ரூ. 1 கோடிக்கும் குறைவாகத்தான் அவற்றிற்காகச் செலவு செய்யப்பட்டது. முதல் திட்டக் காலத்தில் உத்திரப்பிரதேசம், பீஹார், மேற்கு வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களும் மத்திய அரசும் இணைந்து கங்கை- பிரமபுத்திரா போர்டு (Ganga—Brahmaputra Board) ஒன்றை ஏற்படுத்தியது சிறப்பு வாய்ந்ததாகும். 1959-ல் நதிப் போக்குவரத்துக் குழு (Inland water Transport Committee), நாடு முழுவதிலும் உள்நாட்டு நீர்ப் போக்குவரத்து வளர்ச்சிக்கான கருத்துக்களடங்கிய அறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்தது. அக் குழு வின் பரிந்துரைகள் மூன்றும் திட்ட வளர்ச்சித் திட்டங்களுக்கு அடிப்படையாக அமைந்தது. மூன்றும் திட்டத்தில் சேர்க்கப்பட்ட திட்டங்களுக்கான மொத்தச் செலவு ரூ. 7·5 கோடிகளாக இருந்தது. இதில் மத்தியத் துறைக்கு ரூ. 6 கோடியும் மாநிலத் திட்டங்களுக்கு ரூ. 1·5 கோடியும் ஒதுக்கப்பட்டிருந்தது.

உலகில் உள்ள பல நாடுகளிலும் நீர்ப் போக்குவரத்துக் காணப் படுகின்றது. அமெரிக்காவிலும் ஏரிகளும், நதிகளும் கால்வாய் மூலம் இணைக்கப்பட்டு நீர்ப் போக்குவரத்து முக்கியத்துவம் பெற் றுள்ளது. இங்கிலாந்து, ஜெர்மனி போன்ற நாடுகளிலும் கனமான பொருள்களைக் கால்வாய் மூலம் கொண்டு செல்கின்றனர். நம் நாட்டில் நீர்ப் போக்குவரத்து வளர்ச்சி குன்றியதற்கான காரணங்கள் :- 1. இரயில் போக்குவரத்துப் போட்டி அதிகமாகிய தால் நீர்வழியே பொருள்களைக் கொண்டு செல்வது குறைந்தது.

1. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம், ப. 555.

2. நீர்ப்பாசனத்திற்காகக் கால்வாய்கள் மூலம் நதிகளில் உள்ள நீர் பயன்படுத்தப்படுவதால் போக்குவரத்திற்கு நதிகள் பயன்படவில்லை. 3. நீர்ப் போக்குவரத்துச் சீரமைப்புக்காக எவ்வித முயற்சியும் எடுக்கப்படவில்லை. 4. அரசு நீர்ப் போக்குவரத்தை விரிவாக்க அக்கறை கொள்ளவில்லை. இத்தகைய காரணங்கள் இருந்த போதிலும் ஆற்று வழிப் போக்குவரத்தை அதிகரிக்கப் பூனாவில் ஆராய்ச்சி நிலையம் ஒன்று நிறுவப்பட்டது. மத்திய நீர்ப்பாசன மின் குழு ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது.

## கப்பல் போக்குவரத்து
## (Marine Transport and Shipping)

சுமார் 6,700 கி. மீட்டர் (4,200 மைல்கள்) நீளமுள்ள கடற்கரைப் பகுதியையும் வளர்ந்து வரும் பன்னாட்டு வாணிபத்தையும் கொண்ட இந்தியாவில் கப்பல் போக்குவரத்து மிக விரைவாக வளர்ச்சியுற வேண்டியது அவசியமாய் உள்ளது. இந்தியக் கப்பல் தொழிலின் வளர்ச்சி சுதந்திரம் அடைந்த காலத்திலிருந்து சிறப்பாக உள்ளது.

### சுதந்திரத்திற்குப் பின் கப்பல் போக்குவரத்து

சுதந்திரத்திற்கு முன் இந்தியா ஒரு லட்சம் டன்களுக்கும் குறைந்த சுமையைச் சுமந்து செல்லும் 42 கப்பல்களை மட்டுமே பெற்றிருந்தது. கடலோர வர்த்தகத்திலும் கூட இந்தியக் கப்பல் போக்குவரத்தின் பங்கு மிகக் குறைவாகும். இந்திய அயல்நாட்டு வர்த்தகத்தில் மொத்தத்தில் இரண்டு சதவிகிதப் பொருள்களைத் தான் இந்தியக் கப்பல்கள் சுமந்து சென்றன. சுதந்திரத்திற்குப் பின்புதான் கப்பல் போக்குவரத்திற்கு ஊக்கமளிக்கப்பட்டது. கப்பல் போக்குவரத்தைக் கடலோர வர்த்தகத்திற்கும் பன்னாட்டு வாணிபத்திற்கும் பயன்படுத்த வேண்டுமென்கின்ற கொள்கை ஊக்கமளிக்கப்பட்டது. இந்தியாவின் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகம் ஆண்டுக்கு ரூ. 2,000 கோடிக்கு மேலாகும். நாடு தொழில் மயமாக்கப்பட்டு ஏற்றுமதியின் அளவு பெருகினால் இந்தியாவின் பன்னாட்டு வர்த்தகம் வரும் காலங்களில் மேலும் பன்மடங்கு அதிகரிக்கும். அதேபோல் உள்நாட்டுக் கடலோர வர்த்தகமும் அதிகரிக்கும். ஆண்டுதோறும் இந்த மறைவான இறக்குமதி (Invisible import)-க்காக ரூ. 2,000 கோடி வெளிநாட்டுச் செலாவணி செலவிடப்படுகின்றது. சுதந்திரத்திற்குப்பின் இந்தியக் கப்பல் போக்குவரத்தைச் சீரமைக்க வேண்டிய அவசியத்தை அரசு

உணர்ந்தது, 1947-ல் கப்பல் போக்குவரத்துக் கொள்கைக் குழு (Shipping Policy Committee) ஒன்றை நியமித்தது.

குழுவின் பரிந்துரைகள்

இக் குழுவின் பரிந்துரைகள் தேசியக் கப்பல் போக்குவரத்துக் கொள்கைகளாக அமைந்தன. அவை வருமாறு :

1. 1950-க்குள் கப்பல்கள் ஏற்றிச் செல்லும் பொருள்களின் மொத்தச் சுமை 9 லட்சம் டன்களாகவும், 1955-56-க்குள் அது 50 லட்சம் டன்களாக அதிகரிக்க வேண்டும்.

2. கடலோர வர்த்தகம் இந்தியக் கப்பல் போக்குவரத்திற்கென்று ஒதுக்கிடப்பட்டு ஊக்குவிக்கப்பட வேண்டும்.

3. 1955-56-க்குள் இந்தியக் கப்பல்கள் இந்தியாவின் கடல் கடந்த வாணிபத்தில் குறைந்தது 50% சதவிகிதமாவது சுமந்து செல்ல வேண்டும். பர்மா, இலங்கை, மற்ற அண்டை நாடுகளுடன் இந்தியா செய்யும் வர்த்தகத்தில் குறைந்தது 75%ஐயாவது இந்தியக் கப்பல்கள் மேற்கொள்ள வேண்டும். இப் பரிந்துரைகள் உள்நாட்டு, பன்னாட்டு வாணிபத்தில் இந்தியக் கப்பல்கள் முதலிடம் பெற அடிகோலின.

## இந்தியக் கப்பல் போக்குவரத்து வளர்ச்சி
## (Growth of Indian Shipping)

இந்தியக் கப்பல் தொழிலின் வளர்ச்சி மிகவும் மந்தமான நிலையிலுள்ளது. கப்பல் போக்குவரத்துக் கொள்கைக் குழு குறிப்பிட்ட இலக்காகிய 9 லட்சம் டன்கள் இரண்டாம் திட்ட இறுதியில் தான் சாதிக்கப்பட்டன. 1955-56-ல் சாதிக்க வேண்டிய இலக்காகிய 20 லட்சம் டன்களுக்குப் பதிலாக 6 லட்சம் டன்தான் கப்பல்களில் ஏற்றிச் செல்ல முடிந்தது. கப்பல் வளர்ச்சிக்காக முதல் திட்டத்தில் ரூ. 26 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால், உண்மையில் செலவிடப்பட்ட தொகை 18 கோடியாகும். இரண்டாம் திட்டத்தில் கப்பல் போக்குவரத்திற்காக ரூ. 45 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால், முதல் திட்டத்தில் செலவிடப்படாத தொகையாகிய ரூ. 8 கோடி மீதமிருந்ததால் இரண்டாம் திட்டத்தில் ரூ 37 கோடி மட்டும் ஒதுக்கப்பட்டது. திட்டக் குழுவால் தீர்மானிக்கப்பட்ட இரண்டாம் திட்ட இலக்குகளைச் சாதிக்க முடியவில்லை என்றாலும் இந்தியாவின் கடல் கடந்த வர்த்தகத்தில் சுமார் 9% இந்தியக் கப்பல்கள் சுமந்து சென்றன.

மூன்றும் திட்டத்தில் 11 லட்சம் மொத்தப் பதிவாகும் டன்கள் இலக்காகத் தீர்மானிக்கப்பட்டன. அதன் வளர்ச்சிக்காக ரூ. 55 கோடியும் ஒதுக்கப்பட்டது. 1965-66-ல் இந்தியக் கப்பல்கள் உண்மையில் 12·4 லட்சம் மொத்தப்பதிவான டன்சுமையைத்தான் சுமந்து சென்றன. இது இந்தியாவின் மொத்த வர்த்தகத்தில் சுமார் 11% ஆகும். மூன்றும் திட்டத்தின் சாதனைகள் மகத்தானதாக அமையவில்லை. 1947-ல் தீர்மானிக்கப்பட்ட இலக்காகிய மொத்த வர்த்தகத்தில் 50% அதிகரிப்பு சாதிக்கப்படாததால் இந்தியக் கப்பல் போக்குவரத்து பூர்த்தி செய்யவேண்டிய இடைவெளி இன்னும் அதிகமாக இருக்கிறது.

தற்போதைய நிலை

1965—66-ல் மூன்றும் திட்டம் முடிவடைந்தபின் கப்பல் போக்கு வரத்து வளர்ச்சியுற்றது. மூன்று வருடாந்திரத் திட்டக் காலத்தின் போது (1966—69) கப்பல் போக்கு வரத்திற்காக ரூ. 25 கோடி செலவிடப்பட்டது. 1965—66ல் இருந்த 15.4 லட்சம் டன் சுமையிலிருந்து இந்தியக் கப்பல்கள் 1968—69 ன் இறுதியில் 21·4 லட்சம் டன் சுமையை அதிகமாகச் சுமந்து சென்றன. கடல் கடந்த போக்குவரத்து சுமார் 50% அதிகரித்தது. ஆனால், கடலோரக் கப்பல் போக்கு வரத்து சிறு அளவில் அதிகரித்தது. சுதந்திரம் பெற்று 20 ஆண்டுகளுக்குப் பிறகும் வெளிநாட்டுக் கப்பல்களிலேயே இந்தியாவின் கடலோர வர்த்தகம் பெரும்பாலும் நடந்து வருகிறது. நிலக்கரி, உப்பு, மற்றச் சரக்குகள் முழுவதும் இந்தியக் கப்பல்களாலும், சுத்திரிக்கப்பட்ட பெற்ரோலியம் பொருள்கள் வெளிநாட்டுக் கப்பல்களாலும் சுமந்து செல்லப்படுகின்றன. முதல் திட்டம் ஆரம்பிக்கப்படுவதற்குமுன் இந்தியாவின் கடல்கடந்த வர்த்தகம் 22 மில்லியன் டன்களாக இருந்தது. ஆனல் இன்று அது 45 மில்லியன் டன்களுக்கும் அதிகமாக உயர்ந்துள்ளது. தற்போது இந்தியக் கப்பல்கள் முன்பு சுமந்து சென்ற சுமையைவிட இருமடங்கு அதிகமாகச் சுமந்து செல்கின்றன. இருப்பினும் இத்துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் தேவையான அளவு ஏற்படவில்லை. தற்போது இந்திய கடல் கடந்த வாணிபத்தில் சுமார் 15 சதவிகிதத்தைத்தான் இந்தியக் கப்பல்கள் சுமந்து செல்கின்றன. கப்பல்களை வாங்குவதற்காக ரூ. 125 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. நான்காம் திட்ட இறுதியில் இந்தியக் கப்பல் போக்குவரத்து 35 லட்சம் மொத்தப் பதிவான டன்களை (G. R. T) ஏற்றிச் செல்லும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதில் கடல் கடந்து செல்லும் பொருள்களின் சுமை 31 லட்சம் மொத்தப் பதிவான டன்களாகவும், 4 லட்சம் மொத்தப் பதிவான டன்கள் கடலோரப்பகுதிகளிலும் கொண்டு செல்லப்

படும். நான்காம் திட்ட இறுதியில் இந்தியக் கப்பல் போக்கு வரத்து, இந்தியாவின் கடல் கடந்த வாணிபத்தில் சுமார் 40%ஐ மேற்கொள்ளுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

சமீபத்தில் இந்தியக் கப்பல் போக்கு வரத்துக் கழகம் (Shipping Corporation of India) இந்தியாவின் கடல் கடந்த போக்குவரத்தை மேம்படுத்த அரும்பாடு பட்டு வருகிறது. இக் கழகம் நான்காம் திட்ட இறுதியில் குறைந்தது, 100 கப்பல் களாவது போக்குவரத்துக்காகப் பயன்படுத்தப் பட வேண்டு மென்று திட்டமிட்டுள்ளது. கப்பல் போக்குவரத்தில் அரசாங்கமும் பங்குபெறுவது வரவேற்கத்தக்கதாய் உள்ளது. கப்பல்களில் தன் னிறைவு பெற இந்தியா விசாகபட்டினத்தில் வசதிமிக்க கப்பல் கட்டும் தளம் அமைக்கப்பட்டுள்ளது. மேலும், ரூ. 20 கோடி செலவில் மற்றொரு கப்பல் கட்டும் தளம் (Shipyard) கொச்சியில் கட்டப்பட்டு வருகிறது. ஜலஉஷா, ஜலபிரபா போன்ற பல கப்பல்கள் கட்டப்பட்டுள்ளன. விசாகை, இந்துஸ்தான் கப்பல் கட்டும் தளம் நட்டத்தில் நடப்பதால் கட்டப்படும் கப்பல்களுக்கு அரசு உதவித் தொகை வழங்குகிறது. 1959-ல் தேசிய கப்பல் போர்டு (National Shipping Board) அமைக்கப்பட்டது. துறை முகங்களை மேம்படுத்துவதற்காக மூன்று ஐந்தாண்டுத்திட்டக் காலங்களிலும் முறையே ரூ. 58 கோடி, 100 கோடி, 115 கோடி செலவிடத் திட்டமிடப்பட்டது. துறைமுகங்களை நவீனப்படுத்தவும் புதிய துறைமுகங்களை ஏற்படுத்தவும் இத் தொகை செலவிடப் பட்டது. ஹால்டியா, தூத்துக்குடி, மங்களூர் முதலிய துறைமுக வேலைகள் மூன்றும் திட்டக் காலத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டன. கப்பல் தொழிலில் பயிற்சி வழங்க, கல்கத்தாவில் கடல் பொறியியல் கல்லூரி (Marine Engineering College) ஒன்றும், பம்பாயில் ஒரு கல்லூரி (Nautical and Engineering College) யும் நிறுவப் பட்டுள்ளன.

## IV. இந்தியாவின் விமானப் போக்குவரத்து
### (Civil Aviation in India)

போக்குவரத்து வசதிகள் எல்லாவற்றிலும் விமானப்போக்கு வரத்தே மிகவிரைவானதாகவும் நவீன முறையை உடையதாகவும் உள்ளது 1920-ம் ஆண்டில் இந்தியாவில் துவக்கப்பட்ட விமானப் போக்குவரத்து இரண்டாம் உலகப் போர்க்காலத்தில் மிகவிரைவாக வளர்ச்சியுற்றது. சூழ்நிலைக்கு ஏற்றபடி தேவையான அளவு விமான நிலையங்கள் (Aerodromes) கட்டப்பட்டன. 1947-க்குள் இந்தியாவில் விமானப் போக்குவரத்து சிறப்பான

முறையில் வளர்ச்சியுற்றது. விமானங்களில் கூட்டம் மிகுதியாலும், தனியார் விமானங்களுக்குள் போட்டி தீவிரம் அடைந்ததாலும் விமானப் போக்குவரத்து நல்நோக்குடன் நாட்டுடைமையாக்கப்பட்டது. 1927 லேயே விமானப் போக்குவரத்துத்துறை (Civil Aviation Department) நிறுவப்பட்டது. பெங்களூரில் விமானம் கட்டும் தளம் அமைக்கப்பட்டது.

விமானப் போக்குவரத்து பல்வேறு வகையான ஆபத்துக் காலங்களில் பாதுகாப்பு அளிக்கப் பயன்படுகிறது. வெள்ளம் போன்ற சேதங்கள் ஏற்படும் போது இடர் நிவாரண உதவி அளிக்க துணை புரிகிறது. பெங்களூரில் விமானம் கட்டும் தொழில் நடப்பதால் அலுமனியம் போன்ற தொழில்கள் அங்கு வளர்ச்சி அடைகின்றன. இத் தொழிற்சாலையை அரசு நாட்டுடைமையாக்கியது. இங்கு விமானங்கள் கட்டப்படுவதோடு பழுது பார்க்கவும் வசதி உள்ளது. 1951-ல் முதல் விமானம் இந்தியாவிலே கட்டப்பட்டு வெளிவந்தது.

1953-ல் விமானப் போக்குவரத்துக் கழகச் சட்டம் (Air Transport Corporation Act) நிறைவேற்றப்பட்டது. அதன்படி விமானக் கம்பெனிகளை அரசு ஏற்றுக்கொண்டு இரு கழகங்களை நிறுவியது. 1. உள்நாட்டுப் போக்குவரத்திற்காக இந்திய விமானப் போக்குவரத்துக் கழகம் (Indian Airlines Corporation) நிறுவப்பட்டது. 2. பன்னாட்டுப் போக்குவரத்துச் சேவைக்காக இந்திய வெளிநாட்டு விமானப் போக்குவரத்து (The Air India International) ஆரம்பிக்கப்பட்டது.

## திட்டக்கால வளர்ச்சி

திட்டக் காலத்தில் இவ்விரு கழகங்களின் நடவடிக்கைகள் நிலையாக அதிகரித்து வருகின்றன. மேலும், அநேக விமான நிலையங்கள் கட்டப்பட்டன. பன்னாட்டு மரபுப்படி ஏற்கெனவே இருந்து வரும் விமான நிலையங்கள் சீரமைக்கப்பட்டன. திட்டக் காலத்தில் பயணிகள், சரக்குகள் ஆகியவைகளின் போக்குவரத்து நிலையாக அதிகரித்து வருகிறது. இத் துறையில் தேவையான பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டு தொழில் நுட்ப மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. நான்காம் திட்டக் காலத்தில் அதிவிரைவாகப் பறக்க வல்லதும் மிகப் பெரிய அளவுடையதுமான ஆகாய விமானங்கள் தயாரிக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகின்றது. நான்காம் திட்டத்தில் மத்தியத் துறையில் ஆகாய விமானப் போக்குவரத்து வளர்ச்சிக்காக ரூ. 202 கோடி ஒதுக்கிடப்பட்டுள்ளது. இத் தொகையில் ரூ. 72 கோடியை பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி ஆகிய இடங்களில் உள்ள விமான

நிலையங்களை மேம்படுத்த விமானப் போக்குவரத்து இலாக்கா செலவு செய்யும். உள்நாட்டு விமானப் போக்குவரத்து வசதிக்காகப் பல்வேறு விமான நிலையங்களை வளர்ச்சியடையச் செய்யவும் திட்டம் வகை செய்துள்ளது.

1968-69-ல் இருந்த இந்திய விமானப் போக்குவரத்தின் (Indian Airlines) பாரசக்தி (Capacity) 224 மில்லியன் டன் கி. மீட்டர்களிலிருந்து 1973-74-ல் 392 மில்லியன் டன் கி. மீட்டர்களாக அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. மொத்த முதலீடாகிய ரூ. 55 கோடியில் ரூ. 50 கோடியை இக் கழகமே தன் வசதியில் முதலீடு செய்ய உதவும்.

1968-69-ல் இருந்த இந்திய வெளிநாட்டு விமானப் போக்குவரத்தின் (Air India) பாரசக்தியாகிய 439 மில்லியன் டன் கி. மீட்டர் 1973—74-ல் 990 மில்லியன் டன் கி. மீட்டர்களாக அதிகரிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதற்காக ஒதுக்கிடப்பட்ட ரூ. 60 கோடியையும் இந்திய வெளிநாட்டு விமானப் போக்குவரத்தே ஏற்றுக்கொள்ளும். இந்தியாவின் விமானப் போக்குவரத்தின் முன்னேற்றத்தைக் கீழ்க்கண்ட அட்டவணை தெளிவுபடுத்துகிறது.

| அம்சங்கள் | 1951 | 1961 | 1967 |
|---|---|---|---|
| சுமந்து செல்லப்பட்ட பயணிகள் (100 ல்) | 44·9 | 948 | 1,810 |
| சுமந்து சென்ற பாரம் (மில்லியன் கி. கிராம்களில்) | 39·7 | 40·0 | 23·4 |
| அவசர தபால்களின் சுமை (மில்லியன் கி. கிராம்களில்) | 3·2 | 7·5 | 10·8 |
| பறந்த கி. மீட்டர் தூரம் (மில்லியன் | 31·3 | 44·3 | 67·1 |

ஆதாரம்: 1. இந்தியப் பொருளாதாரத்தைப் பற்றிய அடிப்படைப் புள்ளி விவரம்.

2. இந்தியா, 1968.

## போக்குவரத்து ஒருங்கிணைப்பும் நிர்வாகமும்
(Co-ordination and Management)

நாட்டின் வளங்களை ஆக்கத்திற்காகத் திறமையுடன் பயன்படுத்தப் பல்வேறு வகையான போக்குவரத்து அமைப்புகளை

ஒருங்கிணைக்க வேண்டுமென்று சமீபத்தில் தீவிரமாக ஆலோசிக்கப் பட்டு வருகிறது. போக்குவரத்துச் செலவுகளைக் கணிசமாகக் குறைக்க, இரயில்வேக்கள், சாலைகள், நீர்ப்போக்குவரத்து, கடல் போக்குவரத்து ஆகியவற்றை ஒன்று சேர்க்கலாம். எல்லா வகைப் போக்குவரத்தும் இதனுல் ஒன்றை ஒன்று நிறைவு செய்ய முடியும் மேலும், அதனுல் பல்வேறு பணிகளில் இரட்டிப்பாக வீணடிக்கப் படுவதை நீக்கவும் முடியும். இதன் விளைவாகப் போக்குவரத்து வசதிகள் விரிவடைந்து போதுமான ஆக்கசக்தியும் அதிகரிக்கும். இந்தியவிமானப் போக்குவரத்து, கப்பல் போக்கு வரத்துக் கழகம், டில்லி போக்குவரத்து ஸ்தாபனம், விசாகபட்டினத்தில் உள்ள கப்பல் தளம், முடிவுற்ற கடலோரக் கப்பல் போக்கு வரத்து நடவடிக்கைகள் ஆகியவைகளில் நடத்தப்பட்ட ஆராய்ச்சியில் நிர்வாக அம்சங்கள் சீரமைக்கப்பட்டால் போக்குவரத்து முதலீட்டிலிருந்து அதிகமான லாபம் கிடைக்குமென்று அறியப் பட்டுள்ளது. மேலும், நிர்வாகத்தைச் சீரமைத்தால் போக்கு வரத்துச் செலவு குறைந்து வளங்களை மேலும் வளர்ச்சிக்காகப் பயன்படுத்த முடியும்.

இரண்டாவது திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணித் தட்டுப்பாடு காரணமாக வெளிநாடு செல்வோர் எண்ணிக்கை குறைந்ததால் விமானப் போக்குவரத்துக்கு வருவாய் குறைந்தது. அதன் பின் வருவாய் பெருக ஆரம்பித்தது. வெளிநாட்டுப் போக்கு வரத்து, தற்போது, திறமையுடன் செயல்பட்டு வருகிறது. விமானப் போக்கு வரத்துக் கழகம் பெருமளவு செய்யப் படவேண்டியது இருந்ததால், நட்டத்திலேயே இயங்கி வந்தது. 1957-க்குப் பின்னர் சிறிது லாபம் கிடைத்தது. 1966-67-க்குப் பின் பற்ருக் குறை அதிகரித்தது. நாணய மதிப்புக் குறைப்புக் காரணமாக வெளிநாட்டிலிருந்து வரும் உப பொருள்களின் விலை அதிகமான தால் இந் நிலை ஏற்பட்டது. 1963-64 விமானக் கட்டணம் 10% ம், 1967 மீண்டும் 15% ம் உயர்ந்தது. தற்போது விமானங்களில் பிரயாணிகளுக்கு நல்ல வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன. நிர்வாகமும் செம்மையாக நடை பெற்று வருகிறது.

## முடிவுரை

போக்கு வரத்துத் திட்டத்திற்கான கூட்டு தொழில் நுட்பக்குழு பொருளாதார ஆய்வுத் திட்டம் ஒன்றை ஏற்படுத்தி யுள்ளது. எல்லாவகைப் போக்குவரத்து அமைப்புகளும் ஒருங்கிணைந்த முறையில் செயல்படுவதற்காகத் திட்டமொன்று தீட்டப்பட்டுள்ளது. அதன் முக்கிய நோக்கம் குறைந்த செலவில்

சமுதாயத்தின் போக்குவரத்துத் தேவைகளைப் பூர்த்தி செய்வதாகும். பல்வேறு பகுதிகளில் இதற்கான விளக்கமான திட்டங்களை ஏற்படுத்த ஆய்வுக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. விளக்கமான திட்டங்கள் தீட்டப்பட்ட பின் ஒருங்கிணைப்புத்திட்டங்களை அமுலாக்க ஒரு சீரான நிர்வாகம் கொண்ட தனி அமைப்பு ஒன்று ஏற்படுத்தப்படவேண்டும். இத்தகைய நடவடிக்கைகளால் போக்குவரத்து அமைப்புகள் நாட்டின் பொருளாதார வளர்ச்சி மேலோங்கப் பெரும் துணைபுரிந்துவரும்.

# 48. வாணிப வளர்ச்சிப் பிரச்சினைகள்
## (Problems of Commercial Development)

### 1. உள்நாட்டு வர்த்தகம்
### (Internal Trade)

இந்தியாவின் உள்நாட்டு வர்த்தகம் வெளிநாட்டு வர்த்தகத்தின் அளவைவிட மிக அதிகமாக உள்ளது. பெரும்பாலான உள்நாட்டு வணிகர்கள், உற்பத்தியாளர்கள், மொத்த வியாபாரிகள் தங்கள் உள்நாட்டில் விற்கப்படும் பொருள்களின் தன்மை, அளவு, வகை ஆகியவைகளின் துல்லிய கணக்கை வைத்திருக்கும் பழக்கம் இல்லை. போதுமான, நம்பத் தகுந்த புள்ளி விவரங்கள் (Statistical datas) இல்லாமல் இந்திய உள்நாட்டு வர்த்தகத்தின் அளவு, தன்மை போன்றவைகளின் சரியான மதிப்பைக் கணக்கிடுவது கடினமாகும். ரயில்வேக்களால் எடுத்துச் செல்லப்படும் பொருள்களின் மதிப்பு, வங்கிகளின் உண்டியல் கழிவு (Bank-Clearance) ஆகிய புள்ளி விவரங்கள் உள்நாட்டு வர்த்தகத்தின் அளவை அறிய ஓரளவு உதவுகின்றன. ஏனெனில் கணிசமான அளவு பொருள்கள் மாட்டு வண்டிகள் போன்ற போக்குவரத்துச் சாதனங்களால் எடுத்துச் செல்லப்படுகின்றன.

இந்திய வேளாண்மைத் துறை, தொழில் துறை போன்ற துறைகளில் உற்பத்தித் திறன் அதிகரித்து வருவதற்கேற்ப உள்நாட்டு வர்த்தகமும் அதிகரிக்கிறது. விடுதலைக்கு முன்பு அமைக்கப்பட்ட தேசிய திட்டக் குழுவின் துணைக்குழு இந்திய உள்நாட்டு வர்த்தகத்தை மதிப்பிட்டுள்ளது. 1940-ல் இந்திய உள்நாட்டு வர்த்தகம் ரூ. 7,000 கோடிக்குக் குறையாமல் இருந்தது. அதே யாண்டில் இந்திய வெளிநாட்டு வர்த்தகம் ரூ. 500 கோடிகளாக இருந்தது. விடுதலைக்குப் பின்பு பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் அமுலாக்கப்பட்டுப் பொருளாதார நடவடிக்கையின் அளவு அதிகரித்துள்ளதால் உள்நாட்டு வர்த்தகமும் குறிப்பிடத்தக்க வகையில் அதிகரித்துள்ளது. இந்திய உள்நாட்டு வர்த்தகம் துறைமுகங்களிலும், உள்நாட்டின் நீர் போக்குவரத்து மூலமாகவும்

(Interior Centres) சுமார் 60% நடைபெறுகிறது. நாட்டின் உட்பகுதியில் மீதி 40 சதவிகித வாணிபம் நடைபெறுகிறது. துறைமுகங்களிலும், தூரத்திய உற்பத்தி பகுதிகளுக்கும் இடையே நடைபெறும் அதிக அளவு வர்த்தகம் ரயில்வேக்களின் மூலமாக நடைபெறுகிறது. ரயில்வேக்கள் முதலில் துறைமுக நகரங்களையும் நாட்டின் உட்பகுதிகளையும் இணைப்பதற்காக அமைக்கப்பட்டன. மேலும், ரயில்வேக்களின் போக்குவரத்துக் கட்டணங்கள் துறைமுகங்களுக்கும் நாட்டின் உட்பகுதிகளுக்குமிடையே வர்த்தகத்தைத் தூண்டும் நோக்கோடு பிரத்தியேகமாகத் தீர்மானிக்கப்பட்டதாகும். இவற்றின் விளைவாக நாட்டில் ஒருதலைப்பட்ட வளர்ச்சி ஏற்பட்டது. அதாவது துறைமுக நகரங்கள் வர்த்தக வாணிப இடங்களாகச் செழிப்புற்று விளங்கின. இதனால்தான் துறைமுக நகரங்களில் மக்கள் நெருக்கம் பெரிதும் அதிகரித்தது. ஆனால், நாட்டின் உட்பகுதியில் உள்ள மாவட்டங்கள் வளர்ச்சியின்றி, பிற்பட்ட நிலையில் இருந்தன. மேலும், இப் பகுதிகளில் வர்த்தகமும் வாணிபமும் பரவலாக நடைபெறாமல் இப் பகுதியில் வாழும் மக்கள் பெருந்துயர் அடைந்தனர். எனினும் இந்திய ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் உள்நாட்டு வர்த்தகம் சமச் சீரான (balanced) வளர்ச்சியைப் பெற்று வருகின்றது. திட்டக் காலத்தில் எல்லாப் பகுதிகளுக்கும் சம முக்கியத்துவம் அளிக்கப்படுவதால் உள்நாட்டு வர்த்தகமும் சமச்சீராக விரிவடைந்து வருகிறது.

போக்குவரத்து, தொடர்பு, வங்கிகள் ஆகியவைகளின் திட்டமிட்ட வளர்ச்சியின் விளைவாக நாட்டிலுள்ள எல்லா மண்டலங்களிலும் உள்நாட்டு வர்த்தகம் சமமான அளவில் விரிவடைய வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. முக்கியமாக ரயில்வே போக்குவரத்து வளர்ச்சியின் விளைவாக உள்நாட்டு வர்த்தகம் பன்மடங்கு பெருகி வருகிறது.

## 2. இந்தியாவின் வெளிநாட்டு வர்த்தகம்
(The Foreign Trade of India)

நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பு இந்தியா இங்கிலாந்தின் காலனியாக இருந்த சமயத்தில் இந்தியா, இங்கிலாந்து போன்ற தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளுக்கு உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றை அளித்து, செய்பொருள்களை இறக்குமதி செய்துவந்தது. இவ்வாறு செய்பொருள்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து வந்ததால், இந்தியா தொழில் மயமாக்கப்பட வாய்ப்பில்லாமல் இருந்தது. மேலும், இங்கிலாந்தின் செய்பொருள்களுடன் போட்டியிட வேண்டி

யிருந்ததால் இந்தியாவின் உள்நாட்டுக் கைத்தொழில்கள் அழிவுற்றன. நாடு சுதந்திரமடைந்ததும் வளர்ந்து வரும் பொருளாதாரத் தேவைக்கேற்பக் காலனி வர்த்தகப் போக்கு மாற்றமடைந்தது.

பொருளாதார வளர்ச்சியும் இறக்குமதியும்

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் அதன் வெளிநாட்டு வர்த்தகத்திற்குமிடையே நெருங்கிய தொடர்பு இருந்து வருகிறது. பொருளாதார வளர்ச்சியின் போது வெளி நாட்டு வர்த்தகத்தின் அளவு, தன்மை ஆகியவை சில மாற்றங் களைப் பெறுகின்றன. வெளிநாட்டு வர்த்தகம், வர்த்தகச் செலுத்து இருப்பு நிலைப் (Balance of payments) பிரச்சினை, வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை ஆகியவை அனைத்தும் ஒன்றை ஒன்று சார்ந்தவைகளாகும். பொருளாதார வளர்ச்சியின் போது ஏற்றுமதி முன்னேற்றம் (Export Promotion) மிகவும் இன்றி யமையாததாக விளங்குகின்றது. ஏனெனில் திட்டத்தின் ஆரம்பக் கட்டத்தில் இறக்குமதி அதிகரிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படும்.

## வளரும் பொருளாதாரத்தின் வெளிநாட்டுவர்த்தகத்தின் முக்கியத்துவம்

விரைவான வளர்ச்சியைப் பெற வேண்டுமென்ற குறிக் கோளைக் கொண்ட நாடு அதன் ஆக்க சக்தியைப் பெருக்கச் சிறந்த வழிகளை மேற்கொள்ள வேண்டும். அதற்காக ஆரம்பக்கட்டத்தில் உள்நாட்டில் உற்பத்திசெய்ய இயலாத எந்திரங்கள், கருவிகள், சாதனங்கள் போன்றவற்றை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்தேயாக வேண்டிய நிலையிலுள்ளது. இத்தகைய இறக்கு மதியால் சில உற்பத்தித் துறைகளில் புதிய ஆக்க சக்தியை ஏற் படுத்தவும், மற்ற உற்பத்தித் துறைகளில் ஆக்கசக்தியை விரிவாக் கவும் முடிவதால், அதை வளர்ச்சிக்கான இறக்குமதி (Developmental imports) என்று அழைக்கிறோம். மாதிரியாக, எஃகு ஆலைகள், இரயில்வே எஞ்சின் தயாரிக்கும் தொழிற்சாலை, மின் இயக்கத் திட்டங்கள் ஆகியவைகளுக்காக இறக்குமதி செய்வது வளர்ச்சிக் கான இறக்குமதியாகும்.

நாட்டில் தொழில்மயம் ஏற்படச் செய்யவேண்டுமென்ற குறிக்கோளைக் கொண்ட நாடு, நாட்டில் உள்ள ஆக்க சக்தியைச் சீராகப் பயன்படுத்த மூலப் பொருள்கள், நடுத்தர நிலைப்பொருள்கள் ஆகியவற்றை இறக்குமதி செய்தேயாக வேண்டும். நாட்டில் உள்ள ஆக்க சக்தியை முழு அளவில் பயன்

படுத்தத் தேவையான இறக்குமதியை வளர்ச்சிப் பராமரிப்பு இறக்குமதி (Maintenance imports) என்று அழைக்கிறோம். வளர்ச்சிக்கான இறக்குமதியும் வளர்ந்துவரும் பொருளாதாரத் திற்கு இன்றியமையாததாக விளங்குகிறது. ஏனெனில் அனேக தொழில் திட்டங்கள் பராமரிப்பு இறக்குமதிப் பற்றுக் குறையால் முடங்கிக் கிடக்கின்றன. எந்த அளவுக்கு ஒரு வளர்ந்து வரும் பொருளாதாரம் ஒரு குறித்தகாலத்தில் தொழில் மயமாக்கப்பட முடியுமென்பது வளர்ச்சிக்கான, மற்றும் பராமரிப்பு இறக்கு மதியைப் பொறுத்ததாகும். ஒரு வளரும் பொருளாதாரம் தொழில் மயமாக்கப்படும் காலத்தில் மேற்கூறிய இறக்குமதியோடு கூட நாட்டில் பற்றுக் குறையுடைய நுகர்ச்சிப் பொருள்களையும் இறக்குமதி செய்ய வேண்டிய கட்டாய நிலை உள்ளது. அந்தகைய இறக்குமதி நுகர்வுப் பொருள்களின் பற்றுக்குறையைக் குறைத்து, பணவீக்கத்தையும் கட்டுப்படுத்தும். உதாரணமாக, இந்தியாவில் சுதந்திரத்திற்குப் பின்பு இறக்குமதி செய்யப்பட்ட உணவுதானி யங்கள் உள்நாட்டு விலை ஏற்றத்தைக் கட்டுப்படுத்தத் துணை புரிந்தன.

வளர்ச்சியின் ஆரம்பக்கட்டத்தில் இறக்குமதி விரைவாக அதிகரிப்பதைச் சுலபமாகத் தடுக்க இயலாது. இதன் விளைவாக வளரும் நாடுகளில் பாதகச் செலுத்து நிலை ஏற்படுவது இயற்கை யாகும். இந் நிலையைச் சமாளிக்க ஏற்றுமதியைப் பெருக்க வேண்டியது இன்றியமையாததாகும். குறுகிய காலத்தில் வெளி நாட்டு உதவியால் வளர்ச்சியின் பளுவைக் குறைக்க முடியும். ஆனால், நீண்ட காலத்தில் வளர்ந்து வரும் நாடே தன் வளர்ச்சிப் பளுவை தாங்குவதற்குச் சக்தி பெற வேண்டும். பொருளாதார வளர்ச்சி ஏற்படும்போது, கச்சாப் பொருள்கள் உள்நாட்டுத் தொழில்களுக்குத் தேவைப்படும். ஆதலால் அவைகளின் ஏற்றுமதி குறையும். மக்கட் தொகை விரைவாக வளர்ச்சி அடைவதால் உணவு தானியங்களை ஏற்றுமதி செய்ய இயலாத நிலை ஏற்படு கிறது. இந்நிலையைச் சமாளிக்க வளரும் பொருளாதாரம் புதிய பொருள்களையும் புதிய சந்தைகளையும் கண்டுபிடித்து, செய்பொருள் களை விற்பதற்கு வழி முறைகளைக் கண்டறிய வேண்டும். வர்த்தகத் தடைகள் போன்றவற்றைக் குறைத்து வளரும் பொருளாதாரங் களின் நுகர்வுப் பொருள்கள், நடுத்தரநிலையிலுள்ள பொருள்கள் ஆகியவற்றை வளர்ந்தநாடுகள் ஏற்றுக்கொண்டு வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழில் மயமேற்பட, துணைபுரிய வேண்டும்.

இரண்டாம் உலகப் போருக்கு முன் வெளிநாட்டு வர்த்தகம்

இந்தியாவில் ஏற்படுத்தப்பட்ட ஆங்கிலேயர் ஆட்சி. இங்கிலாந்தில் தோன்றிய தொழிற்புரட்சி, இந்திய இரயில்வேக்

களின் வளர்ச்சி, 1869-ல் திறக்கப்பட்ட சூயஸ்கால்வாய் ஆகியவைகள் இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தில் சில விளைவுகளை ஏற்படுத்தின. 1869-ல் ரூ. 90 கோடியாக இருந்த இந்திய வெளி நாட்டு வர்த்தகம் 1913-14-ல் ரூ. 376 கோடியாக அதிகரித்தது. இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டவை தொழில் துறை மூலப் பொருள்கள். வேளாண் மைப் பொருள்கள் ஆகியவைகளாகவும், இறக்குமதியானது வினை முடிந்த பொருள்களாகவும் இருந்தன. முதல் உலகப்போர்க் காலத்தில் இந்திய வெளிநாட்டு வர்த்தகம் குறைந்தது. போருக்குப் பின் இந்தியாவிற்கு ஜப்பானின் போட்டியினால் பாதக வெளி நாட்டுச் செலுத்து நிலை ஏற்பட்டது. 1920—22-க்கு இடைப்பட்ட காலத்தில் ஜப்பான் தன் பொருள்களை இந்தியச் சந்தையில் குவித்தது (Dumping). 1924-ல் இங்கிலாந்து அரசால் பின் பற்றப் பட்ட பேதங்காட்டும் தொழிற்பாதுகாப்பு (Discriminating protection) ஏராளமான தொழில்கள் அழிவதிலிருந்தும் பாதுகாத்தது. 1928-29 ல் இந்திய வெளிநாட்டு வர்த்தகம் மிக அதிகமான அளவாகிய ரூ. 600 கோடியாக அதிகரித்தது. ஆனால், 1930-ல் ஏற்பட்ட மாபெரும் தொழில் மந்தத்தினால் (Great Depression) நம் ஏற்றுமதி பெரிதும் பாதிக்கப்பட்டது. வேளாண்மைப் பொருள்களின் விலைகள் மிகவும் சரிந்தன. நம் பழமையான ஏற்றுமதியில் பெரும்பகுதி வேளாண்மைப் பொருள் களாதலால், நம் வெளி நாட்டு வர்த்தகம் இன்னலுற்றது. ஆனால், 1933-34 லிருந்து இந்திய வெளிநாட்டு வர்த்தகம் படிப்படியாக மந்தத்தின் அதிர்ச்சியிலிருந்து விடுபட்டு மீட்சிபெற்றது.

1939-ல், இரண்டாம் உலகப்போர் ஏற்படுவதற்குச் சற்று முன்பு இந்தியாவின் ஏற்றுமதியில், 29 சதவீதம் மட்டும் செய் பொருள்களாகவும், 71 சதவீதம் தொழில் துறை மூலப் பொருள்களாகவும் வேளாண்மைப் பொருள்களாகவும் இருந்தன. சணல், கச்சாப் பருத்தி, தேயிலை, வாசனைத் திரவியங்கள், தோல் போன்றவைகள் நம் ஏற்றுமதியில் பிரதான இடத்தைப் பெற்றன. 1938-39-ல் நம் இறக்குமதியில் சுமார் 64 சதவீதம் துணிவகைகள், மோட்டார்கள், சைக்கிள்கள், தையல் மிஷின்கள் போன்ற நுகர்வுப் பொருள்கள் இடம் பெற்றன. அந்தக் காலங்களில் நம் பொருள்கள் பெரும்பாலும் இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. 1938-39ல் நம் மொத்த இறக்குமதியில் 32 சதவீதமும் ஏற்றுமதியில் 45 சதவீதமும் இங்கிலாந்து நாட்டுடன் இருந்தது. பொதுவாக, இரண்டாம் போருக்குச் சற்றுமுன் இந்தியா சாதக வர்த்தக இருப்பு நிலையைப் (Favourable Balance of Trade) பெற்றிருந்த போதிலும் சில ஆண்டுகள் வாணிபம் சீராக நடைபெறவில்லை.

## இரண்டாம் உலகப் போருக்குப்பின் வெளிநாட்டு வர்த்தகம் (Foreign Trade Since World War II)

இரண்டாம் உலகப் போர்க் காலத்தில் இந்தியா சாதக வர்த்தக இருப்பு நிலையைப் பெற்றிருந்தது. போர் நடைபெற்ற போது இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தின் தன்மை, போக்கு ஆகியவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டன. இக் காலத்தில் சாதக வர்த்தக இருப்பு நிலை ஏற்பட இருகாரணங்கள் இருந்தன.

(1) ஜப்பான், ஜெர்மனி போன்ற சில வர்த்தகம் செய்யும் நாடுகள் போரில் ஈடுபட்டன.

(2) இந்தியப் பொருள்களுக்கு நேச நாடுகளிடமிருந்து தேவை அதிகரித்தது.

இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தின் தன்மையில் (Composition) சில முக்கிய மாற்றங்கள் காணப்பட்டன. சணல் பொருள்கள், பருத்தி நெசவுத் துணி போன்ற செய் பொருள்களின் ஏற்றுமதி 1938-39-ல் 30% இருந்ததிலிருந்து 1944-45ல் 44%மாக அதிகரித்தது. மூலப் பொருள்களின் இறக்குமதி 22%லிருந்து 54%மாக அதிகரித்தது. நம் ஏற்றுமதியில் செய்பொருள்களின் ஏற்றுமதி 52%மாக இருந்தது, 32%மாகக் குறைந்தது. நம் வெளிநாட்டு வர்த்தகப் போக்கில் இரு மாற்றங்கள் தோன்றின.

(1) ஐக்கிய அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளுடன் இந்திய வர்த்தகம் தொடர்ந்து நடந்தது. ஆனால் ஜப்பான், ஜெர்மனி போன்ற விரோத நாடுகளுடன் நம் வர்த்தகம் முழுவதுமாகத் தடைபட்டது.

(2) இங்கிலாந்து, ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளிலிருந்து பொருள்களைப் பெற்று வந்த கிழக்கு ஆப்ரிக்க நாடுகளுக்குப் இந்தியா புதிதாக வினை முடிந்த, நடுத்தர நிலையிலுள்ள பொருள்களை ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தது.

இரண்டாம் போர்க் காலத்திற்குப் பின் இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தின் அளவு, தன்மை, போக்கு ஆகியவைகள் சில குறிப்பிடத்தக்க மாற்றங்களைப் பெற்றன. போர் முடிந்தபின் பொருள்களுக்கு ஏற்பட்ட தேவையைப் பூர்த்தி செய்ய அரசு இறக்குமதித் தடைகளைத் தளர்த்தியது. எனவே தடையில்லாப் பொது அனுமதி வழங்கும் கொள்கை (License policy) பின்பற்றப்பட்டது. இதன் விளைவாக 1948-49ல் மொத்த இறக்குமதியின் மதிப்பு ரூ. 642 கோடியாக அதிகரித்தது. ஏற்றுமதி ரூ. 459 கொடியாக ஒரே மட்டக்கில் இருந்தது. இவ்விதமாக வர்த்தக நடவடிக்கை

களின் இடைவேளை (trade gap) இறக்குமதி அதிகரித்ததால் ரூ. 183 கோடியாக இருந்தது. இத்தகைய நிலை ஏற்படக் காரணமாய் இருந்தது அரசின் இறக்குமதிக் கொள்கை மட்டுமல்ல, ஆகஸ்டு 15, 1947ல் நாடு இந்தியா, பாகிஸ்தான் என்று இரு பகுதிகளாகப் பிரிக்கப் பட்டதும் ஒரு காரணமாகும். சுதந்திரத் திற்குப் பின் 1949-ல் ஏற்பட்ட நாணய மதிப்புக் குறைவு, கொரியப் போரின் விளைவுகள் போன்ற பல நிகழ்ச்சிகளால் இந்திய வெளிநாட்டு வாணிபத்தின் போக்குப் பாதிக்கப்பட்டது.

இந்தியா—பாகிஸ்தான் வர்த்தகம்

முதலாவதாக, நாட்டுப் பிரிவினையால் இந்திய வெளிநாட்டு வாணிபத்தின் அளவும் தன்மையும் பாதிக்கப்பட்டன. முன்பு உள்நாட்டு வர்த்தகத்தில் இடம் பெற்ற பொருள்கள் பின்பு இந்தியாவின் பன்னாட்டு வர்த்தகத்தில் இடம் பெற்றன. பிரிக்கப் படாத பாகிஸ்தானில் விற்கப்பட்ட நிலக்கரி அல்லது பஞ்சுத் துணிவகைகள், பிரிவினைக்குப்பின் இந்தியாவிலிருந்து பாகிஸ் தானுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இரண்டாவதாக, பஞ்சு, சணல் ஆலைகளில் ஏறக்குறைய எல்லாமே இந்தியப் பகுதியில் இருந்துவிடச் சணல் விளையும் பகுதிகளில் பெரும்பகுதிகள் பாகிஸ்தானுக்குக் கிடைத்தன. எனவே, இந்தியா கச்சாச் சணல், கச்சாப் பருத்தி ஆகிய பொருள்களை ஏற்றுமதி செய்து வந்த நிலைபோய், அவற்றை ஏராளமாய் இறக்குமதி செய்யவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. இது பிரிவினைக்குப் பின் இந்தியாவுக்கு ஏற்பட்ட தீவிர விளைவாகும். இரு நாடுகளும் பொருளாதார, அரசியல் ரீதியில் ஒத்துப் போனால் இரு நாடுகளுக்கிடையே வர்த்தகம் வளர நல்ல வாய்ப்பு ஏற்படும். ஆனால், அதற்கு மாறான சூழ்நிலை இருந்து வருவதால் வாணிபத்தில் வளர்ச்சி இல்லை. இரு நாடுகளுமே ஒன்றையொன்று சார்ந்திருக்க விரும்பாமல் சுய பலத்தால் தன்னிறைவு பெற முயற்சி செய்து வருகின்றன.

## முதலாம் நாணய மதிப்புக் குறைப்பு
### (First Devaluation of Indian Rupee)

செப்டம்பர் 1949-ல் கொண்டு வரப்பட்ட ரூபாய் நாணய மதிப்புக் குறைப்பு இந்திய வெளிநாட்டு வர்த்தகத்தை இரு வகை களில் பாதித்தது.

(1) நாணய மதிப்புக் குறைப்பு ஏற்பட்ட காலத்திலிருந்து உடனடியாக இந்தியாவின் ஏற்றுமதி அதிகரிக்கத் தூண்டுதல் ஏற்பட்டது.

(2) இந்தியாவைப் பின்பற்றி பாகிஸ்தானும் நாணய மதிப்புக் குறைப்பு செய்ய மறுத்ததால் இரு நாடுகளிக்கிடையே விவாதம் ஏற்பட்டு எல்லா வர்த்தகமும் தடைபட்டது

கொரியப்போரும் வர்த்தகமும்

ஜூன் 1950-ல் ஏற்பட்ட கொரியப் போரினால் இந்திய வெளிநாட்டு வர்த்தகம் எழுச்சி பெற்று வளர்ந்தது. அமெரிக்காவில் வேண்டுமென்றே சில முக்கியமான மூலப் பொருள்கள் சேகரித்து வைக்கப்பட்டதால் (stock-piling of strategic materials) இந்தியாவின் தொழில் துறை மூலப் பொருள்களுக்கு வெளிநாடுகளில் நல்ல தேவை ஏற்பட்டது. இதன் விளைவாக நம் ஏற்றுமதி, இறக்குமதியின் அளவு அதிகரித்தது. 1950-ல் ரூ. 524 கோடிகளாக இருந்த ஏற்றுமதி 1951-ல் ரூ. 742 கோடிகளாக அதிகரித்தது. மேலும், அதே காலத்தில் இறக்குமதியின் மதிப்பு ரூ. 508 கோடிகளிலிருந்து ரூ. 774 கோடிகளாக உயர்ந்தது. கொரியாவில் போர் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டதால், விலைகள் சரிந்ததால் நம் வெளிநாட்டு வாணிகம் பாதிக்கப்பட்டது. இருப்பினும் இந்தியாவில் பணவீக்கம் அதிகரித்து வந்ததால், மாறிய நிலைக்கு ஏற்ப இந்திய வர்த்தகத்தின் அளவும் மதிப்பும் படிப்படியாய்ச் சரி செய்யப்பட்டன. இறக்குமதியின் அளவு 12% குறைந்தது; ஏற்றுமதியின் அளவு 10% குறைந்தது. அதற்குள் உணவு தானிய உற்பத்தி அதிகரித்ததால் அதன் இறக்குமதி குறைந்தது. எனவே, 1963-ல் நம் வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலையில் (Balance of payments) நடப்புக் கணக்கில் (current account) ரூ. 59 கோடி எச்சம் காணப்பட்டது. இது 1952-ல் ரூ. 1.7 கோடியாக மட்டும் இருந்தது.

## 1951–க்குப் பின் வர்த்தகப் போக்கு

இறக்குமதியின் நிலை

சென்ற பதினெட்டு ஆண்டுகளுக்குமேல் பொருளாதார வளர்ச்சிக்கான திட்டங்கள், நாட்டின் வெளிநாட்டு வர்த்தகத்தை முக்கியமாக இறக்குமதியை, மாற்றமடையச் செய்துள்ளன, 1951-61 க்கும் இடைப்பட்ட காலத்தில் தொழில் உற்பத்தியும், பொருளாதாரம் முழுவதுமே வளர்ச்சியடைந்ததால் இறக்குமதியும் கணிசமாக அதிகரித்தது. முதல் திட்டக் காலத்தில் மொத்த இறக்குமதி ரூ. 3,620 கோடியாக இருந்தது; இது சராசரியாக ஆண்டுக்கு ரூ. 724 கோடியாகும். இரண்டாம் திட்டக் காலத்தில் முதல் பொருள்கள் (Capital Goods) கச்சாப் பொருள்கள், வினைமுடியா நடுத்தர நிலைப் பொருள்கள் (Intermediate products) துணைப் பகுதிகள் (Components) போன்றவைகளின் தேவை

அதிகரித்ததால், இறக்குமதியின் அளவு அதிகரித்தது. இரண்டாம் திட்டக்காலம் முழுவதும் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் மொத்த மதிப்பு ரூ. 5,360 கோடியாகும்; இது சராசரியாக ஆண்டுக்கு ரூ. 1,072 கோடியாகும். இது முதல் திட்டக்கால சராசரி ஆண்டு இறக்குமதியின் மதிப்பைவிடச் சுமார் 50 சதவீதம் அதிகமாகும்.

மூன்றும் திட்டக் காலத்தில், ஏராளமான பேரளவு முதலீட்டுத் திட்டங்கள் இருந்ததாலும், அடிப்படை, கனரக முதல் பொருள்களின் உற்பத்திக்கு முதலிடம் அளிக்கப் பட்டிருந்ததாலும், இறக்குமதியின் அளவு இரண்டாம் திட்டக் காலத்தைவிட அதிகரித்தது. மூன்றும் திட்டக் காலம் முழுவதிலும் இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களின் மொத்த மதிப்பு ரூ. 5,750 கோடியாகும்; இது போக பொதுக்கடன் 480-ன் அடிப்படையில் ரூ. 600 கோடி மதிப்புடைய பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. மூன்றும் திட்டக் காலத்தில் இறக்குமதி சராசரியாக ஆண்டுக்கு சுமார் ரூ. 1,270 கோடி இருந்தது.

சுங்கவரித் துறையின் புள்ளி விவரங்களின்படி மூன்றும் திட்டக் காலத்தில் மொத்த இறக்குமதி ரூ 6,209 கோடியாகும். இதில் பொதுக் கடன் 480-ன் உணவு இறக்குமதி, போக்குவரத்துக் கட்டணம் ஆகியவற்றிற்கான செலவு ரூ. 849 கோடியும் சேர்ந்துள்ளது. மூன்றும் திட்டக் காலத்தில் தானியங்கள், உரவகைகள், இயந்திரங்கள், உப கருவிகள், துணைப் பகுதிகள் ஆகியவைகளின் இறக்குமதியில் அதிகரிப்புக் காணப்பட்டது.

## 1961—62 முதல் 1967—68 வரை வர்த்தக இருப்பு நிலை

(Balance of Trade)

(ரூ. கோடிகளில்)

| வருடம் (ஏப்ரல்—மார்ச்) | இறக்குமதி | ஏற்றுமதி | வர்த்தக இருப்புநிலை |
|---|---|---|---|
| 1961-62 | 1006 0 | 668·3 | — 337·7 |
| 1962-63 | 1096·8 | 680·9 | — 415 9 |
| 1963-64 | 1245·0 | 801·6 | — 443·4 |
| 1964-65 | 1420·8 | 800·9 | — 619.9 |
| 1965-66 | 1350 0 | 783·3 | — 566·7 |
| 1967-68 | 2042·8 | 1254 6 | — 788·2 |

ஆதாரம்: இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடு, மார்ச், 1969.

உணவு இறக்குமதி

| | | |
|---|---|---|
| 1951-52 | ரூ | 228 கோடி |
| 1955-56 | ,, | 17 ,, |
| 1959-60 | ,, | 181 ,, |
| 1960-61 | ,, | 177 ,, |
| 1967-68 | ,, | 580 ,, |

உணவுப் பொருள்கள் கனடா, ஆஸ்திரேலியா, பர்மா, எகிப்து, ருஷியா போன்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன. இந்தியாவில் எகிப்து, சூடான் (Sudan) போன்ற நாடுகளிலிருந்து பருத்தி இறக்குமதி செய்யப்படுகிறது. பொதுவாக, இறக்குமதியை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (1) உணவுப் பொருள்கள் (2) மூலப்பொருள்கள் (3) வினைமுடிந்த பொருள்கள் (Manufactured Goods). வேளாண்மை உற்பத்தி அதிகரிப்பால் தற்போது முதல் வகைப் பொருள்களின் இறக்குமதி குறைந்து வருகிறது. நாடு தொழில் மயமாக்கப்பட முயற்சிகள் எடுக்கப்படுவதால் இரண்டாம் வகைப் பொருள்களின் இறக்குமதி குறையாமலிருக்கின்றது.

இந்திய ஏற்றுமதியின் போக்கு

கடந்த பதினெட்டு ஆண்டுகளாக இந்திய ஏற்றுமதி மொத்தத்தில் மாறுமல் இருந்து வருகிறது. முதல் திட்டக் காலத்தில் ஏற்றுமதி ஆண்டுக்குச் சராசரியாக ரூ. 609 கோடியாக இருந்தது. கொரியப் போரினால் 1951-52ல் ஏற்றுமதி அதிகமாக இருந்தது. இரண்டாம் திட்டக் காலத்தில் ஏற்றுமதி ஆண்டுக்குச் சராசரியாக ரூ. 614 கோடியாகும். 1958-ல் அமெரிக்கா, ஐரோப்பா ஆகிய நாடுகளில் ஏற்பட்ட பின்னிறக்கத்தின் (Recession) விளைவாக இந்திய ஏற்றுமதி குறைந்திருந்தது. இரண்டாம் திட்டக் காலத்தில் ஏற்றுமதியின் அளவு 9 சதவீதம் அதிகமாய் இருந்த போதிலும் ஏற்றுமதி அலகுகளின் மதிப்பு சாதகமாய் இல்லாததால் ஏற்றுமதி வருவாய் குறைந்திருந்தது. 1951-52-க்கும், 1960-61-க்கும் இடைப்பட்ட காலத்தில் காணப்பட்ட ஏற்றுமதியின் மாற்றங்களைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது. (அட்டவணை : பக்கம் 313 பார்க்க.)

மேற்கண்ட அட்டவணையிலிருந்து இந்திய ஏற்றுமதியின் மதிப்பு குறிப்பிடத்தக்க வகையில் முன்னேற்ற மடையவில்லை என்பதை அறியலாம். இத்தகைய தேக்க நிலையை இந்தியத் திட்டக் குழு கீழ்க்கண்ட வரிகளில் விளக்குகிறது. "இந்தியாவிற்குள் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியால் உள்நாட்டுத் தேவை

ஏற்றுமதி 1951—61 (அடிப்படை ஆண்டு 1950—51 = 100)

| வருடம் | | மதிப்பு கோடிகளில் |
|---|---|---|
| 1951-52 | | 733 |
| 1952-53 | | 577 |
| 1953-54 | | 531 |
| 1954-55 | | 593 |
| 1955-56 | | 609 |
| | மொத்தம் | 3043 |
| | சராசரி | 609 |
| 1956-57 | | 620 |
| 1957-58 | | 591 |
| 1958-59 | | 559 |
| 1959-60 | | 644 |
| 1960-61 | | 655 |
| | மொத்தம் | 3069 |
| | சராசரி | 614 |

ஆதாரம்: மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம், ப. 135.

அதிகரித்து, ஏற்றுமதிக்கான உபரிப் பொருள்கள் குறைந்துள்ளன." எனவே, பத்தாண்டுகளில் மொத்த உலக ஏற்றுமதியின் அளவு இரு மடங்காக அதிகரித்திருக்க இந்திய ஏற்றுமதி 1950-ல் 2·1 சதவீதமாக இருந்தது. 1960-ல் 1·1 சதவீதமாகக் குறைந்தது.

ஏற்றுமதி வர்த்தகத்தின் தன்மையும் அளவும்

கடந்த பதினெட்டு ஆண்டுகளாக ஏற்றுமதி வர்த்தகத் தன்மையில் இரு முக்கிய மாற்றங்கள் காணப்படுகின்றன. முதலாவதாக, தேயிலை, பருத்தித் துணிவகைகள், சணல் பொருள்கள், தோல், வாசனைத் திரவியங்கள், புகையிலை போன்ற வேளாண்மை உற்பத்தியை அடிப்படையாகக் கொண்ட பொருள்களின் ஏற்றுமதியில் முன்னேற்றம் ஏற்படவில்லை. ஆனால், புதிய செய் பொருள்கள், இரும்பு தாது போன்றவைகளின் ஏற்றுமதி அதிகரித்தது. தொன்மையான ஏற்றுமதியில் ஏற்பட்ட சரிவைப் புதிய பொருள்களின் ஏற்றுமதி சரி செய்ய முடியவில்லை.

இந்திய ஏற்றுமதியை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்: (1) நுகர்வுப் பொருள்கள் (2) மூலப் பொருள்கள் அல்லது நடுநிலைப் பொருள்கள் (3) மற்றவைகள். ஏற்றுமதி செய்யப்படும்

நுகர்வுப் பொருள்களாவன:-தேயிலை, பருத்தித்துணி, முந்திரிப் பருப்பு, புகையிலை, பிண்ணாக்கு ஆகியவைகளாகும். மூலப் பொருள்களுள் சேர்க்கப்பட்டுள்ளவைகளாவன:- சணல் பொருள்கள், தோல்வகைகள், உலோக தாதுக்கள் (Metallic ores), கச்சாப் பருத்தி, தாவர எண்ணெய், எண்ணெய் வித்துகள் போன்றவைகளாகும். மற்றவைகளில் சேர்க்கப்பட்டுள்ளவைகளாவன: கம்பளி, அரக்கு, எண்ணெய்ப் பசை, பட்டு, எந்திரங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவைகளாகும். ஏற்றுமதியைப் பரவலாக்க, கடைசியாகக் குறிப்பிடப்பட்ட பொருள்கள் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன.

மேற்குறிப்பிட்ட பொருள்களின் ஏற்றுமதியில் பகிர்வைக் கீழ்க்கண்ட அட்டவணை குறிப்பிடுகிறது.

ஏற்றுமதிப் பகிர்வு (சதவிகிதங்களில்)
(Percentage Distribution of Exports)

| | 1950-51 | 1955-56 | 1960-61 | 1965-66 |
|---|---|---|---|---|
| 1. நுகர்வுப் பொருள்கள் | 41 | 33 | 37 | 40 |
| 2. மூலப் பொருள்கள் | 36 | 41 | 36 | 39 |
| 3. மற்றவைகள் | 23 | 26 | 27 | 21 |
| மொத்தம் | 100 | 100 | 100 | 100 |

மேற்கண்ட அட்டவணையிலிருந்து இந்திய ஏற்றுமதியில் பெரும்பகுதி நுகர்வுப் பொருள்களும், மூலப் பொருள்களும் இடம் பெறுவதை அறியலாம். தையல் எந்திரங்கள், மின்விசிறிகள், சைக்கிள் வண்டிகள் போன்ற பொருள்கள் சமீபத்தில் இந்திய ஏற்றுமதியில் பங்கு பெற்றுள்ளன. இப் பொருள்களின் ஏற்றுமதி குறைவானதால் முக்கியத்துவம் கொண்டதாய் இல்லை. இந்திய ஏற்றுமதியில் பாதிக்கு மேல் தேயிலை, சணல், பருத்தி, துணிவகைகள் இடம்பெறுகின்றன. சில பிரதான பொருள்களின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி பின் வருமாறு.

தேயிலை

சில காலங்களில் தேயிலையும், மற்றக் காலங்களில் சணலும் இந்திய ஏற்றுமதியில் முதல் இடத்தைப் பெற்று வந்துள்ளன. முதல் திட்டக் காலத்தில் சராசரி வருடாந்திரத்

தேயிலை ஏற்றுமதி ரூ. 106 கோடியாக இருந்தது. இரண்டாம் திட்டக் காலத்தில் ரூ. 132 கோடியாக உயர்ந்தது. மூன்றும் திட்டக் காலத்தில் தேயிலையின் ஏற்றுமதி குறைந்தது. 1967-68-ல் சராசரி வருடாந்திர தேயிலை ஏற்றுமதி ரூ. 167 கோடியாக அதிகரித்தது. இங்கிலாந்து, அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா, ரஷ்யா, எகிப்து, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் இந்தியத் தேயிலையை வழக்கமாய் இறக்குமதி செய்து வருகின்றன.

சணல்

இந்திய ஏற்றுமதியில் சணல் பிரதான நிலையைப்பெற்றுள்ளது. சணல் பொருள்களில் இந்தியாவிற்கு போட்டியாக பாகிஸ்தான் இருந்துவருகிறது. இப் பொருளின் ஏற்றுமதி கணிசமாகக் குறிப்பிடத்தக்க வகையில் அதிகரிக்கவில்லை. திட்டக்காலத்திற்கு முன் சணல் பொருள்களின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி ரூ. 129 கோடியாக இருந்தது, முதல் திட்டக்காலத்தில் ரூ. 149 கோடியாக அதிகரித்து, இரண்டாம் திட்டக்காலத்தில் ரூ. 120 கோடியாக குறைந்து, பின் மூன்றும் திட்டக்காலத்தில் ரூ. 157 கோடியாக உயர்ந்தது சணல் இழை செய்பொருள்கள் ஆகியவைகளின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி 1967-68 ல் ரூ. 225 கோடியாக அதிகரித்தது.

பருத்தி இழை, பருத்தித்துணி

முதல் திட்டக்காலத்தில் பருத்தி இழை, துணிவகைகள் ஆகியவைகளின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி ரூ. 81 கோடியாக இருந்தது. இரண்டாம் திட்டக்காலத்தில் ரூ, 76 கோடியாகவும், மூன்றும் திட்டக் காலத்தில் ரூ..55 கோடியாகவும் குறைந்தது. முக்கியமாக, இந்தியப் பருத்தி நெசவுத் தொழிலில் உற்பத்திச் செலவு அதிகமாய் இருப்பதால் பன்னாட்டுச் சந்தையில் இந்திய துணி வகைகளுக்கு அதிக தேவை இருப்பதில்லை. இந்தியாவில் கூலிகள் அதிகரித்துக் கொண்டே இருப்பதாலும், பழுதடைந்த பழைய எந்திரங்களே பயன்படுத்தப்படுவதாலும் உற்பத்திச் செலவு அதிகரிக்கிறது, ரூபாய் நாணயமதிப்புக் குறைப்புக்குப்பின், பன்னாட்டுச் சந்தையில் போட்டியைச் சமாளிக்க முடிந்ததால், இந்தியப் பருத்தித் துணிகளின் ஏற்றுமதி அதிகரித்தது. 1966-67, 1967-68 ஆகிய ஆண்டுகளில் பருத்தித் துணிகளின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி ரூ. 67 கோடியாக இருந்தது.

தோல் வகைகள்

இந்திய ஏற்றுமதியில் நெடுங்காலமாகப் பங்குபெற்று வருபவை பதனிடப்படாத தோல்வகை (raw hides and skins) களாகும்

ஆனால், சமீப காலத்தில் பதனிடப்பட்ட தோல்வகைகளின் ஏற்றுமதி அதிகரித்து வருவது குறிப்பிடத்தக்கதாகும். 1966—68 ஆகிய ஆண்டுகளில் சராசரி வருடாந்திரத் தோல் வகைகளின் ஏற்றுமதியின் மதிப்பு ரூ. 67 கோடியாகும்.

உலோகப் பொருள்கள்

இந்தியா மைகா, இரும்புத்தாது, மங்கனீசியம் ஆகிய பொருள்களையும் ஏற்றுமதி செய்கிறது. திட்டக்காலத்திற்குச் சற்று முன் உலோக தாதுக்களின் சராசரி வருடாந்திர ஏற்றுமதி ரூ 6 கோடியாக இருந்தது; ஆனால் அது படிப்படியாக அதிகரித்து ரூ. 50 கோடியாக உயர்ந்தது. 1966-67, 1967—68 ஆகிய ஆண்டுகளில் உலோக தாதுக்களின் வருடாந்திர ஏற்றுமதி ரூ. 96 கோடியாக உயர்ந்தது.

மேற்கூறியவற்றோடு கூட, கச்சாப்பருத்தி, புகையிலை, தாவர எண்ணெய்கள் ஆகியவைகளின் ஏற்றுமதியால் ஆண்டுக்கு ரூ. 48 கோடி மதிப்புள்ள வெளிநாட்டுச் செலாவணி இந்தியாவிற்குக் கிடைக்கிறது. இந்திய ஏற்றுமதி ஒரு சில வகைப் பொருள்களையே நம்பி யுள்ளது. இந்திய ஏற்றுமதியை அதிகரிக்கப் புதிய பொருள்களை அதிகரித்துப் புதிய சந்தைகளைக் கண்டறிந்து ஏற்றுமதியைப் பரவலாக்க வேண்டியது இன்றியமையாததாகும்.

இந்திய ஏற்றுமதியை அதிகரிக்க இரண்டாம் திட்டக்காலத்திலிருந்து மும்முரமாகப் பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அதன் விளைவாகத்தான் ஏற்றுமதி ஓரளவு அதிகரித்தது. இந் நடவடிக்கைகளில் சேர்க்கப்பட்டவைகளாவன, ஸ்தாபன மாற்றங்கள், கூடுதல் வசதிகள், ஊக்குவித்தல், வர்த்தகத்தைப் பரவலாக்கல் போன்றவைகளாகும். இந் நடவடிக்கைகளின் முதல் கட்டமாகப் பருத்தித்துணிவகைகள், பட்டு, ரேயான்துணி, மின் இசை கருவிகள், ரசாயனப் பொருள்கள், புகையிலை, வாசனைத்திரவியங்கள், முந்திரி, தோல், பிளாஸ்டிக், விளையாட்டுப் பொருள்கள், மைகா ஆகிய பொருள்களின் ஏற்றுமதியை அதிகரிக்க ஏற்றுமதி முன்னேற்றச் சபைகள் (Export Promotion Councils) ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஏற்றுமதி இடர் காப்பீட்டுக் கழகம் (Exports Risks Insurance Corporation) ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது. தேயிலை, காபி, கயிறு ஆகியவைகளைப் பொருள்கள் சபை (Commodity Boards) களுக்கு ஒதுக்குவது ஏற்றுமதி முன்னேற்றச் சபைகளின் கடமையாகும்.

இரண்டாவதாக ஏற்றுமதிக்கட்டுப்பாட்டை நீக்கி, இறக்குமதியின் அளவைக் குறைக்கும் நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்

பட்டன. ஏற்றுமதிவரி நீக்கப்பட்டு, சுங்கவரிகள் திருப்பிக் கொடுக்கப்பட்டன. மூன்றாவதாக, அரசு வணிகக்கழகத்தின் (State Trading Corporation) வளர்ச்சியாலும், ரஷ்யா, கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ஆகியவைகளுடன் வர்த்தகத் தொடர்பு அதிகரித்து வருவதாலும் இந்திய வெளிநாட்டு வாணிபம் பரவலாக்கப்பட்டு வருகிறது.

மூன்றும் திட்டக்காலத்தில் ஏற்றுமதி

மூன்றும் திட்டக்கால முழுவதிலுமாக ஏற்றுமதி ரூ. 3,812 கோடியாக இருந்தது, இது ஆண்டுக்குச் சராசரியாக ரூ. 762 கோடியாகும். மூன்றும் திட்டக்காலத்தில் ஏற்றுமதியின் அளவு 23 சதவீதம் அதிகரித்தது. அதாவது 1960—61-ல் ரூ. 660 கோடியாக இருந்தது, 1965-66-ல் ரூ. 810 கோடியாக அதிகரித்தது. பருவமழை தவறி, 1965-66-ல் வறட்சி நிலை ஏற்பட்டு வேளாண்மை, மற்றப் பயிர்களின் உற்பத்தி பெரிதும் பாதிக்கப்படாமலிருந்தால், ஏற்றுமதியின் அளவு மேலும் அதிகரித்திருக்கும். மூன்றும் திட்டக்காலத்தில் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்த பொருள்களில் முக்கிய மாறுதல் காணப்பட்டது. தேயிலை, பருத்தித் துணிகள், சணல் பொருள்கள் ஆகிய மூன்றும் இந்திய ஏற்றுமதியில் வெகு நாட்களாகப் பிரதான இடத்தைப் பெற்றிருந்த போதிலும், மொத்த ஏற்றுமதியில் அவைகளின் பங்கு 1960-61-ல் 48 சதவீதமாக இருந்தது 1965-66-ல் 43 சதவீதமாகக் குறைந்தது. மூன்றும் திட்டக்காலத்தில் இரும்புத் தாது, சர்க்கரை, இரும்பு எஃகு, கைத்தறித் துணிகள், எந்திரப் பொருள்கள் போன்ற பொருள்களின் ஏற்றுமதி அதிகரித்தது. மேலும், முதன்முறையாகச் சில புதிய எந்திர, ரசாயனப் பொருள்கள் (Engineering and Chemical Goods) இத் திட்டக்காலத்தில் ஏற்றுமதி செய்யப்பட்டன.

1966, ஜூன் 6-ல் ஏற்பட்ட ரூபாய் நாணய மதிப்புக் குறைப்புக்குப் பின் சிலகாலம் ஏற்றுமதி மந்தநிலையில் இருந்தது. பருவ மழை தவறி வேளாண்மை உற்பத்தி பாதிக்கப்பட்டதுதான் இதன் முக்கிய காரணம் ஆனால், இறக்குமதிக் கொள்கை பரிசீலிக்கப்பட்டு, ஏற்றுமதி சீரமைக்கப்பட்டதாலும், ஸ்தாபன மாற்றங்கள் மேற்கொள்ளப்பட்டதாலும் 1968-69-ம் ஆண்டில் இந்திய ஏற்றுமதி அதிகரித்தது.

இந்திய வெளிநாட்டு வாணிபத்தின் போக்கு

மூன்றும் திட்டக்காலத்தில் இந்தியா ஏற்றுமதி செய்து வந்த நாடுகளுடன் வாணிபத் தொடர்பு குறிப்பிடத்தக்க மாற்றம் பெற்றது. இத் திட்டக்காலத்தில் மேற்கு ஐரோப்பாவிற்கு

இந்திய ஏற்றுமதியின் அளவு சிறிது குறைந்தது. இந்திய ஏற்றுமதி அமெரிக்காவுடன் சிறப்புடன் அதிகரித்தது. இந்த ஏற்றுமதி 1960-61-ல் 16 சதவீதமாக இருந்தது, 1965-66-ல் 18·3 சதவீதமாக அதிகரித்தது. கிழக்கு ஐரோப்பிய நாடுகளுடன் இந்திய ஏற்றுமதி பெருமளவு அதிகரித்தது. முக்கியமாக ரஷ்யாவுடன் வர்த்தகத் தொடர்பு பெருகியது. இந்நாடுகளுடன் 1960-61-ல் 7·7 சதவீதமாக இருந்த இந்திய ஏற்றுமதி 1965-66–ல் 19·3 சதவீதமாக அதிகரித்தது. மேலும் ஆப்பிரிக்க, இகாப் (ECAFE) நாடுகளுடனும் இந்திய வாணிகம் ஓரளவு அதிகரித்தது.

1951-க்கும் 1961-க்கும் இடைப்பட்ட பத்தாண்டுகளில் இந்திய வெளிநாட்டு வாணிபத்தின் போக்கில் ஏற்பட்ட மாறுதல்களைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

(நாடுகளின் பங்கு சதவீதங்களில்)

| நாடு/பகுதி | ஏற்றுமதி | | இறக்குமதி | |
|---|---|---|---|---|
| | 1952 | 1960 | 1952 | 1960 |
| 1. இகாப்நாடுகள் (ECAFE Countries) (ஜப்பான் உள்பட) | 25 7 | 17·0 | 13·6 | 13·1 |
| 2. மேற்கு ஆசியா | 5 7 | 6·5 | 7·6 | 7·5 |
| 3. ஆப்பிரிக்கா | 3·6 | 2·5 | 3·8 | 4·4 |
| 4. மேற்கு ஐரோப்பா | 29·6 | 38·5 | 30·1 | 40·4 |
| இங்கிலாந்து | 20·5 | 27·5 | 18·5 | 20·0 |
| ஐரோப்பியப் பொருளாதார நாடுகள் (E. E. C.) | 7·5 | 8·0 | 8·8 | 18·0 |
| 5. கிழக்கு ஐரோப்பா, சைனு | 1·3 | 8·0 | 2·2 | 3·7 |
| 6. வடக்கு அமெரிக்கா | 21·1 | 18·7 | 37.3 | 25·2 |
| 7. ஐக்கிய அமெரிக்கா (U. S A.) | 19·0 | 16·0 | 33·6 | 23.1 |

ஆதாரம் :- மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம். ப. 136.

ஏற்றுமதி

1960-ல் இந்திய ஏற்றுமதி வர்த்தகத்தில் சுமார் 39 சதவீதம் மேற்கு ஐரோப்பாவுடன் இருந்தது. இங்கிலாந்து, இந்தியா ஏற்றுமதியில் 28 சதவீதத்தை ஏற்றுக் கொண்டது, இங்கிலாந்தின் பங்கு ஏறக்குறைய மாறுமல் அதே மட்டத்தில்

நெடுங்காலமாக இருந்து வருகிறது. சமீபத்தில் இங்கிலாந்தையும் தங்கள் அமைப்பில் இணைத்துக் கொள்ள ஐரோப்பியப் பொதுச் சந்தை (European Common Market) தீர்மானித்துள்ளது. இதன் விளைவாக இங்கிலாந்திற்கு இந்திய ஏற்றுமதி பெரிதும் பாதிக்கப் படும். இந்திய ஏற்றுமதியில் வடக்கு அமெரிக்காவின் பங்கு 1952-ல் 21 சதவீதமாக இருந்தது, 1956-ல் 17 சதவீதமாகக் குறைந்து, 1960-ல் 19 சதவீதமாக அதிகரித்தது. அமெரிக்காவின் பங்கு 1952-ல் 19 சதவீதமாக இருந்தது 1960-ல் 16 சதவீதமாகக் குறைந்தது. இகாப் (ECAFE) நாடுகளுக்கு இந்திய ஏற்றுமதி சமீப ஆண்டுகளில் மாறுமல் இருந்து வருகிறது. இந்திய இரும்புத் தாது (Iron ore) ஏற்றுமதி ஜப்பானுக்குப் பெருமளவில் அதிகரித்து வருகிறது. 1951—1961-க்கும் இடைக்கப்பட்ட காலத்தில் ஐரோப்பியப் பொருளாதார நாடுகளின் (European Economic Community) பங்கு 6·3 சதவீதத்திற்கும் 9·5 சதவீதத்திற்கு மிடையே மாறுபட்டது.

இறக்கு மதி

முதல் திட்டக் காலத்தில் மேற்கு ஐரோப்பா விலிருந்து இறககுமதி 30 சதவீதத்திலிருந்து 50 சதவீதமாக அதிகரித்தது. இரண்டாம் திட்ட இறுதியில் இந்தியாவின் மொத்த இறக்குமதியில் 40 சதவீதம் இப் பகுதிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. கிழக்கு ஐரோப்பாவிலிருந்து 1952-ல் 2·2 சதவீதமாக இருந்த இறக்குமதி 1956-ல் 4·6 சதவீதமாக அதிகரித்து, 1960-ல் 3·7 சதவீதமாகக் குறைந்தது. வடக்கு அமெரிக்காவிலிருந்து 1952-ல் 37 சதவீதமாக இருந்த இறக்குமதி 1956-ல் 12·4 சதவீதமாகக் குறைந்து, 1960-ல் 25·2 சதவீதமாக மீண்டும் உயர்ந்தது. இதன் முக்கிய காரணம் உணவு இறக்குமதி யாகும். இக் காலத்தில் இகாப் நாடுகளிலிருந்து இறக்குமதி 12-க்கும் 14 சதவீதத்திற்குமிடையில் மாறுபட்டது.

சிலநாடுகளுடன் இந்திய வாணிபத்தின் போக்கு
(சதவீதங்களில்)

| | இறக்குமதி | | ஏற்றுமதி | |
|---|---|---|---|---|
| | 1950–51 | 1967-68 | 1950-51 | 1967-68 |
| இங்கிலாந்து | 21·0 | 8·0 | 22·4 | 9·1 |
| ஐக்கிய அமெரிக்கா | 18·5 | 39·1 | 18·5 | 17·3 |
| ரஷ்யா | 0·0 | 4·9 | 0·2 | 10·1 |
| ஜப்பான் | 1·6 | 5·4 | 1·6 | 11·3 |
| பாகிஸ்தான் | 6·7 | 0·4 | 4·9 | 0·6 |

ஆதாரம் :- திட்டக் குழு, இந்தியப் பொருளாதாரத்தின் அடிப் படை விவரங்கள்.

சுதந்திரத்திற்கு முன் இங்கிலாந்துடன் இந்திய வாணிகம் அதிகமாய் இருந்த போதிலும், திட்டக் காலத்தில் அமெரிக்காவுடன்தான் வர்த்தகம் பிரதான நிலையில் உள்ளது. 1967-68-ல் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்தது மொத்தத்தில் 39·1 சதவீதமாக இருக்க, இங்கிலாந்திலிருந்து 8 சதவீதம்தான் இறக்குமதி செய்யப்பட்டது. முதலில் இங்கிலாந்திற்கு இந்திய ஏற்றுமதி அமெரிக்காவைவிட அதிகமாக இருந்தது. ஆனால், 1967-68-ல் அமெரிக்காவுடன் ஏற்றுமதி அதிகரித்தது. தற்போது ஜப்பான், ரஷ்யா ஆகிய இரு நாடுகளுடன் வர்த்தகம் அதிகரித்து வருகிறது. பாகிஸ்தானுடன் அரசியல் தொடர்பு சீராக இல்லாததால் வாணிபத் தொடர்பு மொத்த வர்த்தகத்தில் ஒரு சதவீதத்திற்கும் குறைவாகக் குறைந்து வருகிறது.

எதிர்காலத்தில் இந்திய வாணிபம்

ஐந்தாண்டுத் திட்டங்களின் அடிப்படையில் மேற்கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களில் ஓர் இணைந்த பகுதியாக ஏற்றுமதித் திட்டங்களையும் சேர்க்காதது ஒரு பெரும் குறையாகும். ஏற்றுமதியை அதிகரிக்க, திட்டங்களின் அடிப்படையில் பல்வேறு வழிகளில் தக்க நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும்.

முதலாவதாக, ஏற்றுமதிக்கு வேண்டிய உபரிப் பொருள்களைச் சேகரிக்க, உள்நாட்டு நுகர்ச்சியை நியாயமான அளவில் கட்டுப்படுத்த வேண்டியது அவசியமாகும். இரண்டாவதாக, ஒரு பொருளாதாரம் வளர ஆரம்பித்ததும், ஏற்றுமதியால் ஒப்பிட்டு லாபம் அதிகரிக்க வழி வகைகளை மேற்கொள்ள வேண்டும். மூன்றாவதாக, ஏற்றுமதித் தொழில்கள் ஒவ்வொன்றும் உற்பத்திச் செலவு அமைப்பிலும், உற்பத்தியிலும் பிற நாட்டுத் தொழில்களோடு போட்டியிடக் கூடிய பலத்தைப் பெற முயற்சிகள் எடுக்கப்படவேண்டும். இதனால் ஏற்றுமதி பரவலாக்கப் படவும், புதிய செய் பொருள்கள், தாதுப் பொருள்கள் ஏற்றுமதியில் அதிகப் பங்கைப் பெறவும் வகை ஏற்படுகிறது. நான்காவதாக, ஏற்றுமதிக்கு ஆதரவாக மக்களின் எண்ணங்களை ஒன்று திரட்டவும், தேசிய முயற்சியில் தொழிலும் வர்த்தகத் துறையும் ஒத்துழைக்கச் செய்யவும், அங்காடி ஆராய்ச்சி, வெளிநாடுகளில் வர்த்தகப் பிரநிதித்துவம் ஆகியவைகளை மேம்படுத்தவும் முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும்.

நான்காம் திட்டக் காலத்தில் ஏற்றுமதியை அதிகரித்துப் பாதக வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலையைப் போக்க வகை செய்யப்பட வேண்டும். நான்காம் திட்ட இறுதிக்குள் ஏற்றுமதியைக் கணிசமாக அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளா

விட்டால், இந்தியா வெளிநாட்டு உதவியைச் சார்ந்திருக்கும் நிலை பெருமளவு அதிகரிக்கும்.

நான்காம் திட்டத்தில் ஏற்றுமதி

நான்காம் திட்டக் காலத்தில் மொத்த ஏற்றுமதி, நாணய மதிப்புக் குறைப்புக்கு முன் இருந்த ரூபாயின்படி (Pre-devaluation rupees) ரூ. 5,100 கோடி அல்லது மதிப்புக் குறைப்புக்குப் பின் (Post devaluation rupees) ரூ. 8,030 கோடி என்று மதிப்பிடப் பட்டுள்ளது. 1965-66-ல் உண்மையாக இருந்த ஏற்றுமதி ரூ. 810 கோடியாகும். இது 1966-67-ல் ரூ. 825 கோடியாகவும் 1970-71-ல் ரூ. 1, 225 கோடியாகவும் (Pre-devaluation rupees) அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. எனவே, நான்காம் திட்டக்காலத்தில் ஏற்றுமதி 51·2 சதவீதம் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. தேயிலை, இரும்புத்தாது, எந்திரப் பொருள்கள், சணல் பொருள்கள், பழங்கள், காய்கறிகள், தாவர எண்ணெய், மீன், புகையிலை, பருத்தித் துணிகள், இரும்பு எஃகு ரசாயனப் பொருள்கள் ஆகியவைகளின் ஏற்றுமதி அதிகரிக்கும் என்றும் கணக்கிடப் பட்டுள்ளது. சர்க்கரை, காபி, வாசனைத் திரவியங்கள், கயிறு கயிற்றுப் பொருள்கள், கைவேலைப் பொருள்கள் ஆகியவைகளின் ஏற்றுமதி ஓரளவில் அதிகரிக்கும் என்று மதிப்பிடப் பட்டுள்ளது.

நான்காம் திட்டக் காலத்தில், பொதுக் கடன் 480-ன் இறக்குமதி நீங்கலாக, தேவைப்படும். மொத்த இறக்குமதியின் மதிப்பு ரூ. 7,650 கோடி (Pre-devaluation rupees) என்று கணக்கிடப் பட்டுள்ளது. இதில் பராமரிப்பு இறக்குமதி (Maintenance imports) யின் தேவை மட்டும் ரூ. 5,200 கோடியாக இருக்கும். திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள திட்டங்களை (projects) அமுலாக்கத் தேவையான இறக்குமதியின் மதிப்பு ரூ. 450 கோடியாகும்.

# 49. இந்தியாவின் வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலைப் பிரச்சினை

## (India's Balance of Payments Problem)

ஒரு நாட்டின் வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலை (Balance of Payments) என்பது ஒரு நாட்டில் வர்த்தகம் நடத்துவோருக்கும், உலகின் மற்றப் பகுதியில் இருப்போருக்கும் இடையே ஏற்படக் கூடிய எல்லாப் பொருளாதார பேரங்களின் முறையான குறிப்பாகும். ஒரு நாட்டின் வர்த்தகர்கள் ஏற்றுமதி செய்த பொருள்கள், ஆற்றிய பணிகள், பெற்ற மூலதனம் ஆகியவைகளின் நிமித்தம் பெற்ற வருமானத்தின் குறிப்பையும் அது உணர்த்துகிறது. மேலும், இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள், பெற்ற பணிகள், வெளிநாட்டவர்க்குச் செலுத்திய மூலதனம் ஆகியவற்றிற்காக வெளிநாட்டுச் செலாவணியைச் செலுத்துவதையும் அது குறிக்கின்றது. ஒரு நாட்டின் பொருளாதார நிலையையும் நடவடிக்கைகளையும் ஓரளவு தெரிந்துகொள்ள அந்த நாட்டின் செலுத்து இருப்பு நிலையில் உள்ள நிலையைக் கணக்கில் கொண்டு பார்க்க வேண்டும். தொடர்ந்து நீண்ட நாள்களாகப் பாதக வாணிக இருப்புநிலை (Unfavourable Balance of Trade) இருந்து வருமேயானால் ஒரு நாட்டில் பாதகச் செலுத்து நிலை இருந்துகொண்டேயிருக்கும். இந்தியா போன்ற நாடுகளை அதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். ஒரு நாட்டின் மொத்த இறக்குமதியின் மதிப்பு ஏற்றுமதியின் மதிப்பைக் காட்டிலும் அதிகமாக இருக்குமேயானால் அந்நாட்டின் செலுத்து நிலையில் பற்றுக்குறை (Balance of Payments deficit) ஏற்படும்.

### வகைகள்

செலுத்து இருப்பு நிலையை இரு வகையாகப் பிரிக்கலாம்: 1. நடப்புக்கணக்கில் செலுத்து இருப்பு நிலை (Balance of Payments on current Accont) 2. முதல் கணக்கில் செலுத்து இருப்பு நிலை (Balance of Payments on Capital Account). நடப்புக் கணக்கில் பொருள்கள், பணிகள் ஆகியவைகளின் பெயர்ச்சி, நன்கொடைகள் அளித்தல் ஆகியவைகளின் குறிப்புகள் இடம்பெறும். அதாவது பொருள்களின் ஏற்றுமதி இறக்குமதி, பல்வேறு பணி

களின் பெயர்ச்சி, நன்கொடைகள் ஆகியவைகள், நடப்புக் கணக்குச் செலுத்துநிலையில் சேர்க்கப்படுகின்றன. முதல் கணக்குச் செலுத்து நிலை ஒரு நாட்டின் பன்னாட்டு நிதி நிலைக்காக மேற்கொள்ளும் நடப்பு நடவடிக்கைகளை உணர்த்துகிறது. அதாவது நடப்புக் கணக்கில் ஏற்படும் எல்லா நடவடிக்கைகளும் முதல் கணக்கில் பிரதிபலிக்கின்றன. எனவே, முதல் கணக்கு ஒரு நாட்டின் வெளிநாட்டுச் சொத்துகள், பொறுப்புகள் (Foreign Assets and Liabilities) ஆகியவைகளில் ஏற்படும் மாற்றங்களை விளக்குகிறது. நடப்புக் கணக்கை ஆராய்ந்தால் ஒரு நாட்டில் பன்னாட்டுச் செலுத்து நிலையில் இருக்கும் பலம் அல்லது பற்றுக்குறையை வெளிநாட்டுச் செலாவணியில் ஏற்படும் மாற்றத்தின் மூலம் அறியலாம்.

## சுதந்திரத்திற்குப் பின் இந்தியாவின் செலுத்து நிலை
(India's Balance of Payments Positison since Independence)

சுதந்திரத்திற்குப்பின் மூன்று ஆண்டுகள் இந்தியா பாதகச் செலுத்துநிலை (Unfavourable Balance of Payments) பெற்றிருந்தது. அந்த மூன்று ஆண்டுகளில் (1948-49, 1949-50, 1950-51) செலுத்து நிலையில் ஏற்பட்ட பற்றுக்குறை ரூ. 260·2 கோடியாகும். அதைக் கீழ்க்கண்ட அட்டவணை உணர்த்துகிறது.

## நடப்புக் கணக்கில் சுதந்திரத்திற்குப்பின் செலுத்துநிலை
(India's Overall Balance of Payments on Current Account)

(ரூ. கோடிகளில்)

| வருடம் | வர்த்தக இருப்பு நிலை | நிகர பணிகள் | செலுத்து இருப்பு நிலை |
|---|---|---|---|
| 1948-49 | – 283·8 | + 31·7 | –252·1 |
| 1949-50 | — 89·9 | + 42·8 | — 47·1 |
| 1950-51 | — 3·5 | + 42·4 | + 38·9 |
| மொத்தம் | —377·2 | + 116·9 | —260·2 |

இந்த மூன்று ஆண்டுகளில் பாதக வர்த்தக இருப்பு நிலை (Unfavourable Balance of Trade) சுமார் ரூ. 377 கோடியாகும். ஆனால், புலனாகா (invisibles) பணிகளால் ஏற்பட்ட சாதகவருமானத்தால் (Positive Earnings) செலுத்து நிலையில் ஏற்பட்ட பாதக

நிலை ரூ. 260 கோடியாகக் குறைந்தது. இதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று இந்தியா பாகிஸ்தான் என்று நாட்டில் ஏற்பட்ட பிரிவினை. இரண்டாவது போருக்குப் பின் பல்வேறு வகையான பொருள்களின் தேவையில் அதிகரிப்பு. பிரிவினைக்குப் பின் ஏற்பட்ட தீவிர பொருளாதார விளைவுகளில் ஒன்றாக விளங்குவது இந்திய ஏற்றுமதியில் ஏற்பட்ட குறைவாகும். பாகிஸ்தானுக்குச் சணல், பருத்தி ஆகியவைகள் வளரும் பகுதிகளுள் பெரும்பகுதி கிடைத்தது. எனவே சணல், பருத்தி, தோல் வகைகள் போன்ற சில பொருள்களில் இந்திய ஏற்றுமதி குறைந்தது.

## முதல் திட்டக்காலத்தில் செலுத்து நிலை

(Balance of Payments during First Plan) (1951—52 to 1955—56)

முதல் திட்டக்காலத்தில் செலுத்து நிலைப் பற்றுக்குறை ஒரு பெரும் பிரச்சினையாக இருக்கவில்லை. வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கவும், நீர்ப்பாசனம், மின்சக்தி, போக்கு வரத்துப் போன்ற பொதுநலனை அதிகரிக்கும் பணிகளைப் பலப்படுத்தவும் முதல் திட்டத்தின் குறிக்கோளாய் இருந்தது. தொழில் துறையில் இருந்து வரும் ஆக்கசக்தியை (Existing Capacity) முழுவதுமாக பயன்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. முதல் திட்டத்தில் நேரடியாகப் பெற்ற வெளிநாட்டுச் செலாவணி ரூ. 400 கோடியாகும். 1951-52-ல் வாணிப இருப்பு நிலையில் ரூ. 232·8 கோடி பற்றுக்குறை ஏற்பட்டது. ஆனால், அதற்கடுத்த ஆண்டு களில் நிலமை சீரடைந்து பற்றுக்குறை குறைந்துவந்தது. ஏனெனில் வேளாண்மை, தொழில் உற்பத்தியில் அதிகரிப்புக் காணப்பட்டது. முதல் திட்டம் முழுவதிலும் செலுத்து நிலையில் ஏற்பட்ட பற்றுக்குறை ரூ. 318 கோடிகள் என்று கணக்கிடப் பட்டது. இதில் வெளிஉதவி (External Assistance) மூலம் ரூ. 196 கோடியும், வெளிநாட்டுச் செலாவணி இருப்புகளின் மேல் கடன் பத்திரத்தின் மூலம் ரூ.122 கோடியும் அளிக்கப்பட்டது.

## இரண்டாம் திட்டக் காலத்தில் செலுத்து நிலை

(Balance of Payments during Second Plan)

(1956-57 to 1960-61)

இரண்டாம் திட்டக் காலத்தில் செலுத்து நிலையில் ஏற்பட்ட மாற்றங்களைக் கீழ்க்கண்டக் அட்டவணை விளக்குகிறது.

(ரூ. கோடிகளில்)

| வருடம் | செலுத்து இருப்பு நிலை |
|---|---|
| 1056-57 | — 389 |
| 1957-58 | — 560 |
| 1958-59 | — 383 |
| 1959-60 | — 287 |
| 1960-61 | — 440 |
| திட்டக் காலத்தில் மொத்தப் பற்றுக்குறை | — 2059 |

ஆதாரம் :- மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம், ப.108.

இரண்டாம் திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப்பட்ட செலுத்து நிலைப் பற்றுக்குறை ரூ. 1,000 கோடிகளாக இருக்க உண்மையாக ஐந்தாண்டுகளில் சுமார் ரூ. 2,100 கோடி பற்றுக் குறை ஏற்பட்டதாக மதிப்பிடப்பட்டது. இரண்டாம் திட்டம் அமுலாக்கப்பட்டவுடன் வெளிநாட்டுச் செலாவணியில் அதிகமான அழுத்தம் ஏற்பட்டது. எனவே, முதல் இரண்டாண்டுகளில் இந்தியாவின் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு ரூ. 481 கோடி குறைந்தது. எனவே, மிக முக்கியமான திட்டங்களுக்காக மட்டும் வெளிநாட்டுச் செலாவணி ஒதுக்கப்பட்டது. எதிர்பார்க்கப்பட்ட மொத்த வெளி உதவியைக் காட்டிலும் 50 சதவிகிதம் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டது. வெளிநாட்டுச் செலாவணியில் ரூ. 200 கோடி குறையும் திட்டத்தில் மதிப்பிடப்பட்டது. ஆனல், உண்மையில் ரூ. 600 கோடி இருப்பு நிலையில் குறைவு ஏற்பட்டது.

## பற்றுக் குறையின் காரணங்கள்

இரண்டாம் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணியில் ஏற்பட்ட பாதக நிலைக்குப் பொதுவாக இரு காரணங்கள் உண்டு. திட்டக் காலத்தில் அயல் நாட்டுச் செலாவணித் தேவையைக்குறைவாக மதிப்பிட்டார்கள். மேலும், வளர்ந்து வரும் பொருளாதாரத்தின் அதிகரித்து வரும் இறக்குமதித் தேவைகளைப் போதுமான அளவு கணக்கிட அரசு தவறியது. திட்டத்தில் ஆரம்ப கட்டங்களில் தனியார் முதலீடு பெருமளவு அதிகரித்தது. இதனல் சீரான முறையில் பல்வேறு காலங்களில் ஏற்பட்ட செலாவணிப் பற்றுக் குறையைக் கணக்கிட முடியவில்லை. திட்டக் காலத்தில் பருவ மழை தவறியதால் இருமுறை வேளாண்மை உற்பத்தி பாதிக்கப்பட்டது. செலுத்து இருப்புநிலை மதிப்பீட்டில் திட்டக்காலத்தில்

6 மில்லியன் டன் உணவு இறக்குமதி தேவைப்படுமென்று கணக்கிடப்பட்டது ஆனால், உண்மையில் திட்டக்காலம் முழுவதும் சுமார் 20 மில்லியன் டன் உணவு தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. மேலும், கச்சாப் பருத்தியும் பெருமளவில் இறக்குமதி செய்யப்பட்டது. பாதகச் செலுத்துநிலை ஏற்பட மற்றும் சில காரணங்கள் இருந்தன. 1. கனரக அடிப்படைத் தொழில்களின் வளர்ச்சிக்காக முதல் பொருள்கள் ஏராளமாக இறக்குமதி செய்யப்பட்டன. 2. வேகமாக வளரும் மக்கள் தொகை, பெருகும் தொழில்கள் ஆகியவற்றிற்குத் தேவையான உணவு மூலப்பொருள்கள் என்பவற்றின் தேவையைச் சரிசெய்ய வேளாண்மை உற்பத்தி தவறியது. 3. ஏற்றுமதியை அதிகரிக்க சக்தியின்மை, 4. வளரும் பொருளாதாரத்திற்கு ஏற்பக் குறைந்த அளவு பராமரிப்பு இறக்குமதியை (maintenance imports) மேற்கொள்ள வேண்டிய கட்டாய நிலை. இதன் விளைவாக அயல் நாட்டுச் செலாவணி இருப்பு மிகவும் குறைந்தது. எனவே, இறக்குமதியைக் குறைத்து ஏற்றுமதியைப் பெருக்க வேண்டியதன் வழி வகைகளை அரசு மேற்கொண்டது.

## மூன்றும் திட்டக்காலத்தின் செலுத்து நிலை
## (Balance of Payments during Third Plan)
## (1961-62 to 1965-66)

மூன்றும் திட்டக் காலத்திலும் முன்னைய திட்டத்தைப் போலவே தொடர்ந்து செலுத்துநிலைப் பிரச்சினை இருந்துவந்தது. மூன்றும் திட்டம் முழுவதிலும் மொத்தச் செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 1,913 கோடியாக இருந்தது. வர்த்தக இருப்பு நிலையில் பற்றுக்குறை இருந்து வந்ததைக் கீழ்கண்ட அட்டவணை விளக்குகிறது.

(ரூ. கோடிகளில்)

| வருடங்கள் | வர்த்தக இருப்புநிலை (Trade Balance) |
|---|---|
| 1961-62 | — 337·7 |
| 1962-63 | — 415·9 |
| 1963-64 | — 443 4 |
| 1964-65 | — 619·9 |
| 1965-66 | — 566·7 |
| மொத்தம் | — 2383·6 |

ஆதாரம்:- இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடு.

மூன்றும் திட்டக் காலத்தில் பாதக வாணிப இருப்புநிலை ரூ. 2,384 கோடிகளாக இருந்தது. ஆனல், புலனுகாக் கணக்கில் (invisible account) சாதக இருப்புநிலை இருந்ததால் நடப்புச் செலுத்து இருப்புநிலையில் ஏற்பட்ட பற்றுக்குறை ஓரளவு குறைந்தது. மூன்றும் திட்டக் காலத்தில் ஏற்பட்ட செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறையைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

(ரூ. கோடிகளில்)

| வருடம் | செலுத்து இருப்புநிலை (நிகர நடப்புக் கணக்கு) |
|---|---|
| 1961-62 | — 306 |
| 1962-63 | — 345 |
| 1963-64 | — 335 |
| 1964-65 | — 437 |
| 1965-66 | — 490 |
| மூன்றும் திட்டக் காலத்தில் மொத்தப் பற்றுக்குறை | — 1913 |

ஆதாரம்:- பொருளாதாரக் கணக்கீடு, 1965-66.

திட்டத்தின் ஐந்து ஆண்டுகளிலும் நடப்புக் கணக்கில் பாதகச் செலுத்து இருப்புநிலை இருந்து வந்தது. நடப்புக் கணக்கில் ஏற்பட்ட இப் பற்றுக்குறையை வெளிநாடுகளிலிருந்து பெற்றகடன், பொதுக் கடன் 480, 665 ஆகிய நிதிகள் (P. L. 480 and P. L. 665 funds), பன்னுட்டுப் பணநிதி, பன்னுட்டுப் புனரமைப்பு வளர்ச்சி வங்கி (I. M. F, . B. RI. D) ஆகியவைகளிலிருந்து பெற்றநிதி, ஆகியவைகளின் மூலமாக ஈடுசெய்யப்பட்டது. இம் முறையில் நிதிவசதி செய்யப்பட்டும் 1964-65 ல் இந்தியாவின் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு ரூ. 56·2 கோடி குறைந்தது. வெளிநாட்டுச் செலாவணி இருப்பைப் பயன்படுத்தத் தேவையில்லை என்று மூன்றும் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருந்தும் சுமார் ரூ. 6 கோடி செலாவணி இருப்பு குறைந்தது.

பற்றுக்குறையின் காரணங்கள்

பாதகச் செலுத்து இருப்பு நிலை ஏற்பட்டதன் முக்கிய காரணம் பாதக வாணிப இருப்பு நிலை (Adverse Balance of trade)யாகும். முதலாவதாக, ஏற்றுமதியில் தொடர்ந்து தேக்கம் ஏற்பட்டது.

பருத்தித் துணி வகைகள், சணல் பொருள்கள் போன்ற தொன்மையான ஏற்றுமதியும் குறைந்தது. புலனுகாக் கணக்கில் சாதக நிலை ஏற்பட்டதால் நடப்புக் கணக்கில் ஏற்பட்ட பாதகச் செலுத்து நிலை ஓரளவு குறைந்தது. இரண்டாவதாக, உணவு தானியங்கள், பராமரிப்பு இறக்குமதி, மற்றத் தொழில் மூலப் பொருள்கள் ஆகிய அம்சங்களில் ஏற்பட்ட இறக்குமதி அதிகரிப்பால் செலுத்து நிலையில் பற்றுக்குறை ஏற்பட்டது. மூன்றுவதாக, 1962-ல் ஏற்பட்ட சீனப் படையெடுப்பு இந்திய பாகிஸ்தான் சச்சரவு போன்றவைகளால் நாட்டின் பாதுகாப்புச் செலவு (Defence expenditure) பெருமளவு அதிகரித்தது. கடைசியாகத் திட்டக் காலத்தில் கடனைப் பராமரிக்கும் பணியின் சுமை (debt-Service burden) அதிகரித்தது. 1966-67, 1967-68 ஆகிய ஆண்டுகளில் முறையே ரூ. 186 கோடி, ரூ. 2,009 கோடி, கடன் பராமரிப்புக்காக வட்டி செலுத்துதல் போன்ற வகையில் வெளி நாடுகளுக்குச் செலுத்தப்பட்டது.

1966-க்குப்பின் செலுத்து நிலை (Balance of Payments since 1966)

1966-67-ல் செலுத்து இருப்பு நிலையில் தொடர்ந்து பற்றுக் குறை இருந்து வந்தது. ஆனுல், 1967-68 நிதியாண்டில் செலுத்து நிலையில் ஓரளவு முன்னேற்றம் காணப்பட்டது. ஏனெனில் வெளிநாட்டு உதவியைப் பயன்படுத்தியதாலும், சில நாடுகள் நிதி வசதியை அளித்து உதவியதாலும் ஏற்றுமதி சிறிது சீரடைந்த தாலும் பன்னுட்டுப் பண நிதியிலிருந்து நிதிவசதி கிடைத்ததாலும் செலுத்து நிலையில் பற்றுக்குறை குறைந்தது. "இந்த ஆண்டில் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு மில்லியன் 80 டாலர்களிலிருந்து 718 மில்லியன் டாலர்களாக அதிகரித்தது; 1966-67-ல் செலாவணி இருப்பில் 12 மில்லியன் டாலர் அதிகரித்ததால் மொத்த இருப்பு 638 மில்லியன் டாலர்களாக அதிகரித்தது".[1] 1966-67,1967-68ன் முற்பகுதி ஆகிய காலத்தில் ஏற்றுமதியில் சீரான முன்னேற்றம் ஏற்படவில்லை. எனவே, இந்திய ரூபாயின் மதிப்பு குறைக்கப் பட்டது. நாணய மதிப்புக் குறைப்புக்குப் பின் ஏற்றுமதி எச்சத்தில் (exportable surpluses) ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்ட போதிலும் நாட்டில் வறட்சி ஏற்பட்ட காரணத்தால் ஏற்றுமதியின் அளவு பெருமளவு அதிகரிக்கவில்லை. மேலும், பன்னுட்டுச் சந்தை யில் பொருள்களின் தேவையும் குறைந்தது. கடன் பராமரிப்புச் சேவைக்கான செலவு அதிகரித்ததாலும், இங்கிலாந்தில் பவுண்டின் மதிப்புக் குறைக்கப்பட்டதாலும் நிலைமை மேலும் சீர்கேடுற்றது. செலாவணி இருப்பு குறைந்ததால் பன்னுட்டுப் பண நிதியிலிருந்து

1 இந்திய ரிசர்வ் வங்கியின் அறிக்கை நவம்பர் 1968, ப. 1387.

90 மில்லியன் டாலர்கள் கடனாக வாங்கப்பட்டது. 1966-67-க்கும் 1967-68-க்கும் இடைப்பட்ட காலத்தில் வெளிநாட்டுச் செலுத்து நிலையில் சாதகநிலை ஏற்படக் காரணங்களாக இருந்தவை பின் வருமாறு: 1. அதிகமான அளவு திட்டத்திற்குட் படாத வெளியுதவி பயன்படுத்தப் படல், 2. ஏற்றுமதி சீராக அதிகரித்தல் முதலியன வாகும்.

## இறக்குமதிக் கொள்கை
## (Import Policy)

1966-ல் ரூபாயின் மதிப்புக் குறைக்கப்பட்ட காலத்திற்குப் பிறகு தாராளமான இறக்குமதிக் (liberal import policy) கொள்கை பின்பற்றப்பட்டது. எனவே, திட்டத்தில் அடங்காத வெளிநாட்டு உதவி(non-Project assistance) அதிகரித்ததாலும் தொழில் துறைக்கு வேண்டிய இயந்திரங்கள் போன்றவைகளின் இறக்குமதி அதிகரித்ததாலும் செலுத்து நிலையில் பற்றுக்குறை ஏற்பட்டது. ஆனால், உணவு தானியங்கள், கச்சாச் சணல் ஆகியவை களின் இறக்குமதி குறைந்ததால், செலுத்து நிலையில் ஓரளவு அழுத்தம் குறைந்தது. தொழில்கள் தங்கள் ஆக்க சக்தி முழுவதையும் பயன்படுத்த வசதியாக இறக்குமதிக் கட்டுப்பாடு நீக்கப்பட்டது. ஏற்றுமதித் தொழில்களுக்கு முதலிடம் அளிக்கப் பட்டது. மேலும் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்க உரங்கள், கிருமிநாசினிகள் போன்றவைகளைப் பெருமளவில் இறக்குமதி செய்யப் புது இறக்குமதிக் கொள்கை வகை செய்தது. சிற்றளவு தொழில் பகுதிகளுக்குத் தாராளமாக 'உரிமங்கள் (licences) வழங்கப்பட்டன 1969-70-ல் வெளியிடப்பட்ட இறக்குமதிக் கொள்கையில் சில பொருள்களின் இறக்குமதி தடை செய்யப் பட்டது. மற்றச் சில பொருள்களின் இறக்குமதியின் மேல் பெருந்தடை விதிக்கப்பட்டது. எனினும் மூலப் பொருள்கள், கருவிகள் .(Components), துணைப் பகுதிகள் (Spares) போன்றவை களின் இறக்குமதி வரும் ஆண்டுகளில் தொடர்ந்து நீடித்து வரும்.

## ஏற்றுமதிக் கொள்கை
## (Export Policy)

1947-48-க்கும் 1950-51-க்கும் இடைப்பட்ட காலத்தில் இந்திய அரசு இரு முக்கிய குறிக்கோள்களைக் கொண்ட ஏற்றுமதிக் கொள்கையைப் பின்பற்றியது. அதாவது 1. அருமைச் செலாவணிப் பகுதிகளிலிருந்து (hard—currency areas) கிடைக்கும் வருமானத்தை அதிகரித்தல். 2. ஏற்றுமதியை அதிகரிக்க வழி

வகைகளை மேற்கொள்ளுதல் ஆகியவைகளாகும். முதல் திட்ட இறுதியில்தான் பொருளாதார வளர்ச்சியின் தேவைகளைக் கருத்தில் கொண்டு ஏற்றுமதிப் பெருக்கம் (Export Promotion) ஏற்பட வகைகளைக் கண்டறிய வேண்டுமென்று ஆலோசிக்கப்பட்டது. இரண்டாம் திட்ட முதல் இரண்டாண்டுகளில் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு விரைவாகக் குறைந்ததால் ஏற்றுமதிப் பெருக்கக் கொள்கையைத் தீவிரமாக அமுல்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. "நாட்டில் ஏற்றுமதி உணர்வே இல்லை யென்றும், இறக்குமதிப் பதிலீட்டு முறையால் (import Substitution) செலுத்து நிலைப் பிரச்சினை தீர்க்கப்பட முடியுமென்று கருதப் பட்டது ஏற்றுக்கொள்ளத் தகுந்ததில்லையென்றும் மன்மோகன் சிங் கருதுகிறார். இதனால் ஏற்றுமதி புறக்கணிக்கப்பட்டுத் தகுந்த வாய்ப்புகள் இழக்கப்பட்டன."[1] இரண்டாம் திட்டக் காலத்தில் இந்தியாவில் தொழில் முன்னேற்றம் விரைவாக ஏற்படாததால் ஏற்றுமதியின் மூலம் நாட்டிற்கு அதிக வருவாய் கிடைக்கவில்லை. "புதிய பொருள்களின் ஏற்றுமதியை அதிகப்படுத்தவும், இந்திய ஏற்றுமதிப் பொருள்களின் சந்தையைப் பரவலாக்கவும் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட போதிலும் நாடு தொழில் மயமாக்கப்பட்டால்தான் ஏற்றுமதி அதிகரித்து ஏற்றுமதி வருவாய் பெருமளவில் கிடைக்குமென்று நாடு உணர முடிந்தது."[2] 1957-ல் அமைக்கப்பட்ட ஏற்றுமதிப் பெருக்கக் குழு (Export promotion Committee) ஏற்றுமதியை அதிகரிக்கப் பல்வேறு செயல்முறைகளைப் பரிந்துரைத்த போதிலும், இரண்டாம் திட்டக் காலத்தில் அதிகமான முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லை. இரண்டாம் திட்டக் காலத்தில் சராசரி ஏற்றுமதி வருவாய் முதல் திட்டக் காலத்தை விட மிகக் குறைந்தது. "ஐந்தாண்டுத் திட்டங் களின் அடிப்படையில் நாட்டின் வளர்ச்சித் திட்டங்களின் இணைந்த பகுதியாக ஏற்றுமதித் திட்டங்கள் கருதப்படாதது கடந்த காலத்தில் காணப்படும் மிகப் பெரும் குறையாகும்" என்று திட்டக் குழு கருதுகிறது."[3]

1966-67-ல் ஏற்றுமதி சுமார் 7% குறைந்தது. ஆனால், 1967-68ல் அது 9% அதிகரித்தது. அரசு, இந்திய ரிசர்வ் வங்கி ஆகியவைகளால் மேற்கொள்ளப்பட்ட ஏற்றுமதி அதிகரிப்பு நடவடிக்கைகளின் விளைவாக ஏற்றுமதி அதிகரித்தது. அதாவது ஏற்றுமதி வரியை ஒழுங்குபடுத்தி, பண உதவியைப் பெருமளவில் அளித்து, ஏற்றுமதிக் கடன் வசதியைப் பலப்படுத்தி உள்ளூர் மூலப்

1. மன்மோகன் சிங், 'இந்தியாவின் ஏற்றுமதியின் போக்கு' (1964) ப.337—38.

2. திட்டக்குழு, இரண்டாம் ஐந்தாண்டு திட்டம், ப 98—99.

3. திட்டக்குழு, மூன்றாம் ஐந்தாண்டு திட்டம்.

பொருள்களை அளித்து, சில ஏற்றுமதிப் பொருள்களைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்யச் செய்து ஏற்றுமதி அதிகரிப்பு (export promotion) நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. 1966-67ல் ஏற்றுமதி செய்யப்பட்டவைகளில் ஐந்தில் மூன்று பகுதி இரும்பு, எஃகு, சில தாதுப் பொருள்கள், இயந்திரப் பொருள்கள் போன்ற புது வகைப் பொருள்களாகும்.

## சமனில்லாச் செலுத்து இருப்புநிலைப் பிரச்சினை
## (Problem of Balance of Payments Disequilibrium)

இந்தியப் பொருளாதார வளர்ச்சியில் இரண்டாம் திட்ட ஆரம்ப காலத்திலிருந்து சமனில்லாச் செலுத்து நிலை இருந்து வருகிறது. சில இன்றியமையாத முதல்—பொருள்கள், உணவுப் பொருள்கள் ஆகியவைகளின் அதிகமான இறக்குமதியாலும் தொன்மையான, நவீன பொருள்களின் குறைவான ஏற்றுமதியாலும் பாதகச் செலுத்து இருப்புநிலை ஏற்படுகிறது. இரண்டாம் திட்டக் கால இறுதியில் இதன் விளைவாக வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி ஏற்பட்டது. இந் நிலையைக் கருத்தில் கொண்டு செலுத்து இருப்புநிலைப் பிரச்சினையைத் தீர்க்க, அரசு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. அவற்றில் மிக முக்கியமானது ஏற்றுமதிப் பெருக்க கொள்கையாகும் (Policy-of export Promotion). பொதுவாக எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் பின்வருமாறு :-

தீர்வுகள்

1. வெளியுதவி (External assistance)
2. இறக்குமதிக் கட்டுப்பாடுகள் (Import restrictions)
3. இறக்குமதிப் பதிலீடு (Import substitution)
4. ஏற்றுமதி முன்னேற்றம் (Export Promotion)
5. நாணய மதிப்புக் குறைப்பு (Devaluation)

இவற்றை விளக்கமாக இனிக் காணலாம்.

### 1. வெளியுதவி (External assistance)

செலுத்து இருப்புநிலையில் ஏற்படும் குறைபாட்டைத் தீர்க்க வெளிநாட்டு உதவி பெரிதும் துணைபுரிகிறது. வெளிநாட்டு உதவி, செலுத்து இருப்பு நிலையைச் சமன்படுத்தும் கருவியாகப் பயன் படுகிறது. இந்தியாவில் பொருளாதாரத் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட்டு வருங் காலத்திலிருந்து வெளிநாட்டு உதவி, செலுத்து நிலைப் பற்றுக் குறையைச் சரிசெய்து வருகிறது. எடுத்துக்

காட்டாக முதல் திட்டக் காலத்தில் ஏற்பட்ட மொத்தச் செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 318 கோடியாகும். இதில் வெளி நாட்டு உதவி மூலம் ரூ. 196 கோடி பற்றுக்குறை சரிசெய்யப் பட்டது. மேலும், ரூ. 122 கோடிக்கு வெளிநாட்டுச் செலாவணி யின் பேரில் கடன் பத்திரங்கள் வழங்கப்பட்டன. இரண்டாம் திட்டக் காலம் முழுவதும் ஏற்பட்ட செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 2,100 கோடியாகும். எதிர்பார்க்கப்பட்ட மொத்த வெளியுதவியைக் காட்டிலும் 50% அதிகமாக வெளி நாட்டு நிதிவசதி பயன்படுத்தப்பட்டது. திட்டத்தில் ரூ. 200 கோடி வெளிநாட்டுச் செலாவணி இருப்பிலிருந்து வாங்க வேண்டு மென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், உண்மையில் ரூ. 600 கோடி செலாவணி இருப்பிலிருந்து வாங்கப்பட்டது. மூன்றும் திட்டக் காலத்தில் ஏற்பட்ட செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 1,913 கோடியாகும். இதில் பெரும் பகுதியை வெளியுதவி தான் சரிசெய்தது. மூன்றும் திட்டக் காலத்தில் எதிர்பார்க்கப் பட்ட மொத்த வெளியுதவி ரூ. 3,200 கோடியாகும். இவ்வித மாக வெளியுதவியையே மூன்றும் திட்டம் நம்பியிருந்ததால் அது 'வெளிநாட்டு உதவி மயமான திட்டம்' என்று அழைக்கப்பட்டது. மூன்றும் திட்டக் காலத்தில் உண்மையில் கிடைக்கப் பெற்ற (நிகர) வெளியுதவி ரூ. 2,423 கோடியாகும்.

இவ்வாறு வெளியுதவியையே நிரந்தரத் தீர்வாக நம்பி யிருத்தல் நீண்ட காலத்தில் சிறந்ததாக அமையாது. ஏனெனில், சில காலங்களில் கடனைத் திருப்பிக் கொடுக்கும் சுமை பெருமளவில் அதிகரிக்கும். மாதிரியாக மூன்றும் திட்டக் காலத்தில் பெறும் மொத்த வெளியுதவியாகிய ரூ. 3,200 கோடியில் சுமார் ரூ. 450 முதல் ரூ. 500 கோடிவரை மூன்றும் திட்டக் காலத்தில் காலாவதி யாகும் கடன்களைத் திருப்பிக் கொடுக்கப் பயன்படுத்த வேண்டு மென்று மதிப்பிடப்பட்டது. அதேபோல் நான்காம் திட்டத்திலும் பொதுத் துறையில் ரூ. 3,730 கோடி மொத்த வெளியுதவி தேவைப்படும். இதில் காலாவதியாகும் கடன்களைத் திருப்பிக் கொடுக்க மட்டும் சுமார் ரூ. 1,-16 கோடி தேவைப்படும். எனவே, வெளிநாட்டு நிதியுதவியையே நம்பிச் செலுத்து இருப்புநிலைப் பிரச்சினையைத் தீர்க்க முயலுவது சிறந்ததாகாது. எனவேதான் தற்போது இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகள் வெளியுதவி யைவிட வளர்ந்த நாடுகளிலிருந்து நல்ல வாணிப மாற்று வீதத் தையே (Terms of trade) விரும்புகின்றன. ஏனெனில் வாணிபம் பெருகினால் உதவியின் தேவை குறையும். இன்றைய செல்வந்த நாடுகள் வளர்ந்து வரும் நாடுகளுக்குத் துணைபுரிய வேண்டும் என்ற பொறுப்பைத் தீவிரமாக மேற்கொள்ளவில்லை. எனவே வளர்ந்து வரும் நாடுகளின் வாணிப முன்னேற்றமும் விரைவான பொரு

ளாதார வளர்ச்சியும் வளர்ந்த நாடுகளின் நல்லெண்ணத்தில்தான் இருக்கிறது. சில சமயங்களில் மற்ற நாடுகளிலிருந்து உதவிக் கொடைகளும் பெற வாய்ப்பிருக்கின்றன. இரண்டாம் உலகப் போருக்குப் பின் அமெரிக்கா, ஐரோப்பாவில் அநேக நாடுகளுக்கு மிகுதியான உதவிக் கொடைகளை (Gifts) அளித்து உதவியது. இன்றும் அநேக வளர்ச்சியுறும் நாடுகள் செல்வந்த நாடுகளிலிருந்து உதவிக் கொடைகளைப் பெற்று வருகின்றன. இம் முறையினால் கடனைத் திருப்பிக் கொடுக்கும் பிரச்சினை இல்லையெனினும், தேவையான பொழுது ஏராளமான அளவில் உதவிக் கொடைகளைப் பெற இயலாது.

2. இறக்குமதிக் கட்டுப்பாடுகள் (Import Restrictions)

இது ஒரு தீவிரமான கொள்கையாக அமைந்து இறக்குமதியைக் குறைத்து விடுகிறது. இறக்குமதி அளவை (Import quotas) குறைப்பதாலோ, அல்லது அதிகமான இறக்குமதி வரிகளை விதிப்பதாலோ இறக்குமதியின் அளவு குறைக்கப்படுகிறது. சில சமயம் அத்தியாவசியமில்லாத பொருள்களின் இறக்குமதி தடை செய்யப்படுகிறது. இரண்டாம் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி ஏற்பட்டதிலிருந்து கட்டுப்பாடுடைய இறக்குமதிக் கொள்கை பின்பற்றப்பட்டு வருகிறது. இம் முறையின் மூலம் அரசு இறக்குமதியைக் குறைத்தாலும் ஓரளவிற்குக் குறைவாகப் பராமரிப்பு இறக்குமதியையோ, தொழில் துறைக்குத் தேவையான மூலப் பொருள்கள், இயந்திரங்கள், சாதனங்கள் (Plants) ஆகியவைகளின் இறக்குமதியையோ குறைக்க இயலாது. மேலும், உணவு தானியங்களின் இறக்குமதியைக் கட்டுப்படுத்த இயலாது. வளர்ந்து வரும் ஒரு பொருளாதாரத்தில் இறக்குமதியின் அளவு அதிகரிப்பது மிகவும் இயற்கையாகும். இறக்குமதியைக் கட்டுப்படுத்துவதால் தொழில் துறைக்குத் தேவையான மூலப் பொருள்களின் அளிப்பு மக்களுக்குத் தேவையான முக்கிய வெளிநாட்டுப் பொருள்கள் கிடைக்க வழியின்றிபோய்விடும்.

3. இறக்குமதிப் பதிலீடு (Import Substitution)

செலுத்து இருப்பு நிலைப் பற்றுக்குறையைத் தீர்க்க இறக்குமதிப் பதிலீடு காலப்போக்கில் ஒரு சிறந்த முறையாகப் பயன்படும். இறக்குமதி செய்வதற்குப் பதிலாக உள்நாட்டில் கிடைக்கும் மூலப்பொருள்களைப் பயன்படுத்தியே தொழில் வளர்ச்சியை மேம்படுத்த வேண்டுமென்று அரசு தற்போது உணர்ந்துள்ளது. இதனால் வெளிநாட்டுச் செலாவணி இருப்பைப் பெருமளவில் பாதுகாத்து வைக்க வகை கிடைக்கிறது. உதாரணமாக, பொதுத் துறையில் எஃகு ஆலைகளை ஏற்படுத்தியதால் கணிசமான வெளி

நாட்டுச் செலாவணி சேமித்துவைக்க வழியேற்பட்டது. அரசு இறக்குமதிப் பதிலீட்டுத் தொழில்களுக்கு வரிச் சலுகைகள், உதவிக் கொடைகள் போன்றவற்றை அளித்தும், வெளிநாட்டுச் செலாவணியை ஒதுக்கிடுவதில் இத்தொழில்களுக்கு முதலிடம் அளித்தும் துணை புரிந்து வருகிறது.

4. ஏற்றுமதி முன்னேற்றம் (Export Promotion)

இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளில் செலுத்து இருப்பு நிலைப் பற்றுக்குறைப் பிரச்சினையைத் தீர்க்கத் தகுந்ததாக விளங்குவது ஏற்றுமதிப் பெருக்க முறையாகும். கடந்த காலத்தில் ஏற்றுமதித் திட்டங்களை ஐந்தாண்டுத் திட்டங்களின் ஒரு இணைந்த பகுதியாகக் கருதப்படாதது மிகப் பெரும் பிழையாகும். ஜான் லீவிஸ் (John Lewis) சரியாகக் குறிப்பிடுவதுபோல், "இந்தியாவின் ஏற்றுமதிப் பிரச்சினை குறிப்பாகச் சிக்கலானதாக இல்லை. ஆனால், காலப்போக்கில் அது மிகவும் தீவிரமானதாக விளங்கித் தீர்க்க முடியாத பெரும் பிரச்சினையாக மாறிவிடும்." ஏனெனில் இந்தியாவின் முக்கிய தொன்மையான ஏற்றுமதிப் பொருள்களான பருத்தித்துணி, சணல், தேயிலை, தோல், தோல்பொருள்கள் ஆகியவைகளின் உற்பத்தி தீர்க்க முடியாத பிரச்சினைகளுக்கு உட்பட்டுள்ளது. அதிகமான உற்பத்திச் செலவு மூலப்பொருள்களின் பற்றுக்குறை, மற்ற நாடுகளிலிருந்து வரும் கடும் போட்டி, பதிலீட்டுப் பொருள்கள் தோன்றுதல் போன்ற பிரச்சினைகள் அதிகரித்து வருகின்றன. மேலும், நாட்டில் ஏற்பட்டுள்ள பொருளாதார வளர்ச்சி, உள்நாட்டுத் தேவைகள் அதிகரித்து ஏற்றுமதிக்கான உபரிப் பொருள்களைக் குறைத்துள்ளது.

செலுத்து இருப்புநிலைப் பிரச்சினையைத் தீர்க்க ஏற்றுமதியைத் தீவிரப்படுத்தி, அத்தியாவசியமில்லாத பொருள்களின் இறக்குமதியைக் குறைத்து அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. மூன்றும் திட்டக்காலத்தில் ஏற்றுமதியை மேம்படுத்தப் பல்வேறு ஸ்தாபன, நிதிமுறை, மற்ற நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டது. 1962-ல் வாணிப அமைச்சரகத்தில் (Ministry of Commerce) ஒரு புதிய பன்னாட்டு வர்த்தகத் துறையையும் உயர்மட்ட வர்த்தக வாரியத்தையும் (Board of Trade) அரசுக்கு வர்த்தக, வாணிப அம்சங்களில் ஆலோசனை கூற ஏற்படுத்தினர். அங்காடியின் போக்கு, ஆராய்ச்சி, பயிற்சி ஆகிய திட்டங்களை வளர்ச்சியடையச் செய்வதற்காக, தனித் தன்மை கொண்ட வெளி வர்த்தக இந்திய பயிற்சி நிலையம் (Indian Institute of Foreign trade) ஒன்றை ஏற்படுத்தினர். மூன்றும் திட்டக்காலத்தில் ஏராளமான புதிய ஏற்றுமதி சபைகள் (Export Councils) அமைக்கப்பட்டன. அவைகளின் மொத்த எண்ணிக்கை 19 ஆக உயர்ந்துள்ளது. தாதுக்கள். உலோகங்கள் ஆகியவைகளின் ஏற்றுமதி

யைப் பெருக்க தாதுக்கள், உலோகங்கள் வர்த்தகக் கழகம் (Minerals and Metals Trading Corporation) (MMTC) ஒன்றும் ஆரம்பிக்கப்பட்டது. மூன்றும் திட்டக்காலத்தில் இத்தகைய தனி ஏற்றுமதி முன்னேற்றத் திட்டங்களின் நடவடிக்கைகளால் பல்வேறு செய்பொருள்கள், சுத்தப்படுத்தப்பட்ட பொருள்கள், ஆகியவைகளின் ஏற்றுமதி அதிகரித்தது.

நிதிமுறை நடவடிக்கைகள் (Fiscal Measures)

ஏற்றுமதியைப் பெருக்குவதில் நிதித்துறை நடவடிக்கைகள் சிறந்த பங்கைப் பெற்றுள்ளன. மூன்றும் திட்டக்காலத்தில் பல்வேறு பொருள்களுக்கு இறக்குமதி வரிக்குறைப்பு, சுங்கவரியைத் திருப்பிக்கொடுத்தல் போன்ற நிதிமுறை ஊக்கிகள் (Fiscal incentives) அளிக்கப்பட்டன. முதலில் படிப் படியாக தேயிலையின் மேல் இருந்த ஏற்றுமதி வரி குறைக்கப்பட்டு இறுதியில் முற்றிலுமாக நீக்கப்பட்டது. ஜூலை 1963-ல் ஒரு விற்பனை வளர்ச்சி நிதி (Marketing development Fund) நிறுவப்பட்டு மத்திய வரவு செலவுத் திட்டத்தில் ஒரு குறிப்பிட்ட தொகை ஒதுக்கப்பட்டது. இத்தொகை ஏற்றுமதி முன்னேற்றச் சபைகளுக்கு உதவிக் கொடை அளிக்கவும், வெளிநாட்டுச் சந்தைகளில் இந்தியப் பொருள்கள் விற்கப்பட வகை செய்யவும் பயன்படுத்தப்பட்டது.

தரக் கட்டுப்பாடு (Quality Control)

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களின் தரம் சிறந்ததாக இருக்க வேண்டுமென்பதை நிலைநாட்ட 1963-ல் ஏற்றுமதிச் (தரக்கட்டுப்பாடு, ஆய்வு) சட்டம் ஒன்று நிறைவேற்றப்பட்டது. சட்டம் ஏற்பட்டதற்குப் பின் அனேக புதிய பொருள்களும் தரக்கட்டுப்பாட்டுச் சட்டத்தின் கீழ்வந்தன. மூன்றும் திட்ட இறுதியில் ஏற்றுமதிப் பொருள்களில் சுமார் 80% தரக் கட்டுப்பாடு, ஏற்றுமதிக்கு முன் ஆய்வு (Pre-shipment Ins. pection) ஆகியவற்றின் கீழ் வந்தன

மூன்றும் திட்டக்காலத்தில் இந்தியாவின் ஏற்றுமதிப்பங்கு மற்ற நாடுகளைவிட மிகக் குறைவாக இருந்தது. அதாவது 1960-ல் உலக ஏற்றுமதியில் இந்தியாவின் பங்கு 1·2%-மாக இருந்தது, 1965-ல் 1·0% மாகக் குறைந்தது.

## மூன்றும் திட்டத்தில் ஏற்றுமதி முன்னேற்றம்
(Export Promotion during Third Plan)

மூன்றும் ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏற்றுமதியை அதிகரிக்கப் பல்வேறு வழிகளில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. திட்ட

அறிக்கையில் (Plan documents) கீழ்க்கண்ட நடவடிக்கைகள் பரிந்துரைக்கப்பட்டன.

1. ஏற்றுமதிக்காக உபரியை ஏற்படுத்தும் நோக்கோடு உள்நாட்டு நுகர்வை நியாயமான எல்லைக்குள் கட்டுப்படுத்த வேண்டும். 2, பொருளாதாரம் வளர்ச்சி அடைய ஆரம்பித்ததும் உள்நாட்டுச் சந்தையில் அதிகமான இலாபம் கிடைக்குமாதலால் ஏற்றுமதியின் ஒப்பீட்டு இலாபத்தை அதிகரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும். 3. முக்கியமான தொழில்கள், குறிப்பாக ஏற்றுமதித் தொழில்களின் உற்பத்திச் செலவுநிலை கூடிய சீக்கிரத்தில் போட்டியைச் சமாளிக்கும் தன்மை வாய்ந்ததாய் விளங்கவேண்டும். ஒவ்வொரு தொழிலிலும் இதைச் சாதிக்க முறையான திட்டங்கள் வகுக்கப்படவேண்டும். இவ்வாறு செய்வதால் ஏற்றுமதியைப் பரவலாக்க முடியும். மேலும், ஏற்றுமதி வர்த்தகத்தில் புதிய செய் பொருள்கள், தாதுக்கள் ஆகியவைகளின் பங்கையும் நிலையாக அதிகரிக்கமுடியும். ஏற்றுமதியை மேம்படுத்தும் கண்ணோட்டத்துடன் தொழில் உரிமக் கொள்கைகள் (Industrial licensing Policies) வகுக்கப்படவேண்டும், 4. அரசின் ஸ்தாபனங்களே அங்காடி ஆராய்ச்சி, சந்தை நிலவரம் (market intellingence) வெளிநாடுகளில் வர்த்தக பிரதிநிதித்துவம், கடன், காப்புறுதி (Insurance) போன்ற வசதிகளை விரிவாக்குதல் போன்ற நடவடிக்கைகளைச் சீர்படுத்த வேண்டும்.

மூன்றும் திட்டக்காலத்தில் சராசரி வருடாந்தர ஏற்றுமதி ரூ. 740 கோடியாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டது. இதைச் சாதிக்க 1962-ல் இறக்குமதி ஏற்றுமதிக் கொள்கைக் குழு (Import and Export Policy Committee) முதலியார் என்பவரைத் தலைவராகக் கொண்டு அமைக்கப்பட்டது. நான்காம் திட்டக் காலத்தில் ஏற்றுமதியின் அளவு கணிசமாக அதிகரிக்க முயற்சிகள் எடுக்கப்படாவிட்டால் இந்தியா மேலும் சில ஆண்டுகளுக்கு வெளிநாட்டு உதவியையே நம்பியிருக்கும் நிலை தொடர்ந்து நீடிக்கும். மேலும், செலுத்து இருப்பு நிலையில் பற்றுக்குறைப் பிரச்சினை தொடர்ந்து இருக்கும்.

## 5. ரூபாயின் நாணய மதிப்புக் குறைப்பு (Devaluation of the Rupee)

ஒரு நாட்டின் செலுத்து இருப்பு நிலையில் ஏற்படும் அடிப்படைச் சமனற்ற நிலையைச் சரிசெய்ய நாணயத்தின் மதிப்பைக் குறைப்பது தீவிரமான நடவடிக்கையாகும். நாணய மதிப்புக்

குறைப்பு, ஏற்றுமதியை ஊக்குவித்து, இறக்குமதியைக் கட்டுப் படுத்தி, வர்த்தகப் பற்றுக்குறை இடைவெளியைக் குறைக்க வகை செய்யும் ஒரு கருவியாகும். ஆனால், மற்ற நாடுகளும் அதே நிலையைப் பின்பற்றினால் நன்மையற்ற விளைவுகள் ஏற்படும். ஜூன் 6,1966-ல் விடுதலைக்குப்பின் இரண்டாம் முறையாக இந்திய அரசு ரூபாயின் மதிப்பை 36.5% குறைத்தது அதன் விளைவாக மதிப்புக் குறைப்புக்குமுன் ஒரு டாலருக்கு ரூ. 4·76 ஆக இருந்த சம மதிப்பு வீதம் (Per rate of exchange) மதிப்புக் குறைப்புக்குப்பின் 1 டாலருக்கு ரூ. 7·50 ஆக மாறியது. ரூபாயின் சமமதிப்பு குறைக்கப்பட்டதோடு கூட ஒரு குறித்த வீதத்தில் 12 ஏற்றுமதிப் பொருள்களின் மேல் இருந்த ஏற்றுமதி வரியில் அரசு தீர்வை (levy) விதித்தது. அப்பொருள்களாவன:- சணல் பொருள்கள், தேயிலை, காப்பி, மிளகு, கச்சாப் புகையிலை, கச்சாப் பருத்தி, கம்பளி, மைகா, தோல் பொருள்கள் போன்றவைகளாகும். மேலும், எல்லாவகை தனிமுன்னேற்ற ஏற்றுமதி முன்னேற்றத் திட்டங்களையும் நீக்கி விட்டதாக அரசு அறிவித்தது.

1965-66 க்கான வரவு செலவுத் திட்டத்தில் உட்புகுத்தப் பட்டிருந்த வரிக்கடன் பத்திர (Tax credit certificate) திட்டத்தையும் அரசு நீக்கியது. ரூபாய் நாணய மதிப்புக் குறைப்பு மற்ற உடன் நடவடிக்கைகளோடு இணைந்து ஏற்றுமதி நிலையில் ஒரு புதிய மாற்றத்தை ஏற்படுத்தியது. நாணய மதிப்புக் குறைப்பினால் ஏற்பட்ட உடன் விளைவுகளைச் சரியாக மதிப்பிடுவது கடினமாகும். தீர்க்கப்படாத ஏற்றுமதிப் பிரச்சினைகள் நாணய மதிப்புக் குறைப்பினால் ஏற்பட்டன. 1967-68ம் ஆண்டிலிருந்து ஏற்றுமதியின் அளவு அதிகரித்து வர்த்தகச் செலுத்து இருப்பு நிலையில் சாதகமான சூழ்நிலை ஏற்பட்டு வருகிறது.

# 50. இந்தியாவின் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை

## (India's Foreign Exchange problem)

இந்தியாவில் மக்களின் நுகர்வு மட்டம் மிகக் குறைவாக இருந்தும் இன்றியமையாத பொருள்களில் பற்றாக் குறை இருந்து வருகிறது. இப் பற்றாக்குறையை நீக்க உடனடியாக வெளிநாடு களிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்கிறோம்; அல்லது உள் நாட்டிலேயே உற்பத்தியின் அளவை அதிகரிக்க வெளிநாடு களிலிருந்து முதல் பொருள்களை இறக்குமதி செய்கிறோம். இதற்கு வெளிநாட்டுச் செலாவணி பெருமளவில் தேவைப் படுகிறது. அதிக வளர்ச்சியடைந்த நாடுகளில் நுகர்வு மட்டமும் அதிகமாய் உள்ளதோடு அந் நாடுகள் உள்தேவையைப் பூர்த்தி செய்து வெளிநாடுகளுக்கும் பொருள்களை ஏற்றுமதி செய்து வர்த்தக உபரி (Trade Surplus) யைப் பெற முடிகிறது. இதன் காரணம் அந் நாடுகளில் சமூக, பொருளாதார, அரசியல் காரணிகளின் அடிப்படையில் தோன்றிய விரைவான பொருளாதார வளர்ச்சி யாகும். பிற்பட்ட நாடுகளும் வளர்ச்சியைச் சாதிக்க வெளி உதவியைப் பெறவேண்டிய இக்கட்டான நிலையில் உள்ளன. ஒரு நாட்டிற்குள் இருக்கும் திறனும் வலுவும் குறைந்த பொருளாதார சமூக அமைப்பு அதன் கடினமான வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலை (Balace of payments) யிலும், வெளிநாட்டுச் செலாவணிப் பற்றாக் குறையிலும் பிரதிபலிக்கிறது. கடினமான செலுத்து இருப்பு நிலையும், வெளிநாட்டுச் செலாவணித் தட்டுப் பாடும் பொருளாதார வளர்ச்சிக் காலத்தில் தோன்றும் சாதாரண நிகழ்ச்சிகளாம்.

### விடுதலைக்கு முன் இருந்த நிலை

விடுதலைக்கு முன் இந்தியாவில் தொழில் மயம் ஏற்படவில்லை நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் ஆலை நிறுவனங்களின் ஆக்க சக்தி மிகவும் குறைவாக இருந்ததால் முதல் பொருள்களை ஏராளமான அளவில் இறக்குமதி செய்ய வேண்டிய நிர்ப்பந்த நிலை

ஏற்படவில்லை. ஏராளமான மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்ததால் விடுதலைக்குமுன் இந்தியாவில் செலுத்து இருப்புநிலை நெருக்கடி (crisis) தோன்றவில்லை. இதற்குக் காரணம் ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆண்டபொழுது தொழில் வளர்ச்சியில் அக்கறை செலுத்தவில்லை. உண்மையில் இந்தியக் கைத் தொழில்கள் அழிந்து போவதற்கு அவர்கள் காரணமாய் இருந்தனர். ஆனால் விடுதலை அடைந்த பின் இந்தியாவின் பொருளாதார நிலையில் தகுந்த மாற்றம் ஏற்பட்டது. இந்தியாவில் மிக விரைவான தொழில் மயம் தோன்ற ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டப்பட்டு முதலீடு அதிகரித்ததால் இந்தியாவில் செலுத்து இருப்புநிலைப் பற்றாக் குறை நீண்ட காலமாய்த் தொடர்ந்து வரும் நிகழ்ச்சியாகி விட்டது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக்காலத்திலிருந்து வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை தொடர்ந்து இருந்து வருகிறது.

## வாணிப வளர்ச்சிக் கட்டங்கள்

ஒவ்வொரு வளரும் நாடும் மூன்று வாணிப வளர்ச்சிக் கட்டங்களைக் கடந்து செல்லும் நிலையில் உள்ளன. அவைகளாவன, இறக்குமதிக் கட்டம், உள்நாட்டு உற்பத்தியின் மூலம் இறக்குமதிப் பதிலீட்டு கட்டம், ஏற்றுமதிக் கட்டம் ஆகும். முதல் இரண்டு கட்டங்களில் இறக்குமதி உபரி (Import surplus) கிடைப்பது உறுதியாகும். இந்திய அரசாங்கம் இம் மூன்று கட்டங்களையும் ஒன்றாக இணைக்க முயன்று வருகிறது. இறக்குமதி, இறக்குமதிப் பதிலீட்டு, ஏற்றுமதிப் பெருக்கத் தொழில்கள் இவைகளின் மூலமாக உள்நாட்டு முதல் பொருள்களின் உற்பத்தியை அதிகரிக்க அரசு தீவிரமாக ஈடுபட்டுள்ளது'' என்று டாக்டர் J. D. சேதி குறிப்பிடுகிறார். இம் மூன்று கொள்கைகளும் ஒரே சமயத்தில் பின்பற்றப் படுவதால் இறக்குமதியைவிட ஏற்றுமதி உறுதியாக அதிகரிக்க வாய்ப்பும் உண்டு.

## முதல் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை

முதல் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினை கடினமாகத் தோன்றவில்லை. வேளாண்மை உற்பத்தி அதிகரிப்பு, நீர்ப்பாசனம், மின் சக்தி, போக்கு வரத்துப் போன்ற பொருளாதார வளர்ச்சிக்குத் துணை புரியும் பணிகளை வலுப்பெறச் செய்தல் ஆகிய நடவடிக்கைகளில் முதல் திட்டம் முக்கியமாக அக்கறை கொண்டது. இருக்கும் ஆக்க சக்தியை முழுவதும் தொழில்கள் பயன் படுத்த வேண்டுமென்று வலியுறுத்தப் பட்டது. மொத்த முதலீட்டில் பொதுத் துறைத் தொழில், சுரங்கம், இவைகளில் முதலீடு செய்யப் பட்டது மிகக் குறைவாகும் முதல்திட்ட நேரடி வெளிநாட்டுச் செலாவணித் தொகை ரூ. 400

கோடியாகும். 1951-52-ல், முதல் திட்டக்கால முதல் ஆண்டில் வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலைப் பற்றுக்குறை ரூ. 234 கோடியாகும். ஆனால், அதை அடுத்த ஆண்டுகளில் வேளாண்மை, தொழில் உற்பத்தி அதிகரித்ததால் நிலைமை கணிசமாகச் சீரடைந்தது. இத் திட்டக்காலம் முழுவதும் ஏற்பட்ட சராசரிச் செலுத்து இருப்பு நிலைப் பற்றுக் குறை ரூ. 318 கோடியாகும். இதில் ரூ. 196 கோடி வெளி உதவியாலும், ரூ. 122 கோடி வெளிநாட்டுச் செலாவணி இருப்பிலிருந்து கடன் பத்திரத்தின் மூலம் பெற்று நிதியாக்கம் (financing) செய்யப் பட்டது.

## இரண்டாம் திட்டக்கால வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி

இரண்டாம் திட்டக்காலம் முழுவதும் செலுத்து இருப்பு நிலையில் பற்றுக்குறை தொடர்ந்து ஏற்பட்டதன் விளைவாக வெளி நாட்டுச் செலாவணி நெருக்கடி (Foreign Exchange Crisis) தோன்றியது. இரண்டாம் திட்டக் காலத்தில் நாட்டைத் தொழில் மயமாக்க வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. எனவே, பொதுத் துறையிலும் தனியார் துறையிலுமாகச் சேர்த்து ஏராளமான எந்திரங்கள், மூலப்பொருள்கள் இறக்குமதி செய்ய வேண்டியிருந்த தாலும் தொழில் நுட்ப நிபுணர்களை அழைத்ததாலும் கையிருப்பாய் இருந்த வெளிநாட்டுச் செலாவணியின்மேல் அதிக அழுத்தம் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், இரண்டாம் திட்ட முழுவதற்குமாகத் தேவைப்படும் செலாவணி யைத் திட்டக்குழு குறைவாக மதிப்பிட்டது. மொத்த வெளி நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை இத் திட்டக் காலத்தில் (1956-57—1960-61) ரூ. 1,100 கோடியாக இருக்கும் என்று அது கணக்கிட்டது. இதில், ரூ. 200 கோடியை இந்தியாவின் ஸ்டெர்லிங் இருப்பிலிருந்து (Sterling Balances) இத் திட்டக் காலத்தில் கிடைக்க வகை செய்யப்பட்டது. ரூ. 100 கோடியைத் தனியார் துறையில் வெளிநாட்டு முதலீட்டாளர்கள் முதலீடு செய்வார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. எனவே, அரசு வெளி உதவியாக ரூ. 800 கோடியைப் பெறவேண்டுமென்றும் மதிப்பிடப் பட்டது.

### பற்றுக்குறையின் அளவு

எதிர்பார்க்கப்பட்ட செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை ரூ. 1,100 கோடியாக இருக்க, உண்மைப் பற்றுக்குறை ரூ. 2,100 கோடியாகும். திட்டம் ஆரம்பிக்கப்பட்டதும் வெளிநாட்டுச்

செலாவணியின் மேல் மிகப்பெரிய அழுத்தம் ஏற்பட்டு வெளி நாட்டுச் செலாவணி இருப்பு ரூ. 481 கோடியாக முதல் இரண்டாண்டுகளில் குறைந்தது. விடுதலைக்குப்பின் இந்திய ஸ்டெர்லிங் இருப்பு ரூ. 1,516 கோடியாக இருந்தது, ஆகஸ்டு 1958-ல் ரூ. 187 கோடியாகக் கீழ் மட்டத்தை முட்டியது. எனவே தான் வெளிநாட்டுச் செலாவணியில் நெருக்கடி தோன்றியது எதிர்பார்க்கப்பட்ட வெளியுதவியைவிட 50 சதவீதம் அதிகமாக வெளிநாட்டு மூலதனம் பயன்படுத்தப்பட்டது. வெளிநாட்டுச் செலாவணி இருப்பிலிருந்து ரூ. 200 கோடி எடுக்கப்படும் என்று மதிப்பிட்டதற்கு மாறாக ரூ. 600 கோடி பெற்றுக்கொள்ளப் பட்டது.

## நெருக்கடியின் காரணங்கள்

முதலாவதாகத் திட்டத்திற்கு வேண்டிய நேரடி வெளிநாட்டுச் செலாவணித் தேவைகளைக்குறைவாக மதிப்பிட்டதாலும், வளர்ந்து வரும் பொருளாதாரத்தின் இறக்குமதித் தேவைகளைச் சரியான அளவு கணக்கிடத் தவறியதாலும் வெளிநாட்டுச் செலாவணி இருப்பு குறைந்து அதிக நெருக்கடியேற்பட்டது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் வெளிநாட்டுச் செலாவணியில் அழுத்தம் ஏற்படுவதற்கு ஆறு முக்கிய காரணிகள் உண்டு என்று டாக்டர். பிரைட்சிங் அவர்கள் குறிப்பிடுகிறார்[1] :- 1. இந்நாடுகள் வளர்ச்சியைப் பேணிக்காக்க வளர்ச்சி அடைந்த நாடுகளிலிருந்து மூதல் பொருள்களை இறக்குமதி செய்தே தீரவேண்டும் என்ற இக்கட்டான நிலை உள்ளது. 2. வெளிநாட்டு முதல் சாதனங் களால் (Capital equipment) ஆரம்பிக்கப்பட்ட ஒரு தொழிலுக்கு ஆண்டு தோறும் வெளிநாட்டு கச்சாப்பொருள்கள், துணைப்பகுதிகள் போன்ற வளங்கள் இறக்குமதி செய்யப்பட வேண்டும். இதனால் கூடுதல் வெளிநாட்டுச் செலாவணி தொடர்ந்து தேவைப்படுகிறது. 3. வெளிநாட்டுச் செலாவணியின்மேல் ஒரு மறைமுக அழுத்தமும் ஏற்படுகிறது. அதிக முதலீட்டால் வருவாயும் வேலை வாய்ப்பும் அதிகரிப்பதன் விளைவாக உள்நாட்டு, வெளிநாட்டுப் பொருள்களின் நுகர்வு அதிகரிக்கிறது. அதிக முதலீட்டால் பண வருவாயும், பொருள்களின் விலைகளும் அதிகரிக்கின்றன. இதனால், லாபம் பெறுவோரிடம் வருவாய் அதிகமாகச் சென்று சேர்கிறது. இவர்கள் வெளிநாட்டு டம்பப் பொருள்களை (luxury goods) அதிகமாக நுகர நாட்டம் கொள்வதால் இப்பொருள்களின் இறக்குமதியும் அதிகரிக்கிறது. 4. அதே சமயத்தில் உள்நாட்டுப் பொருள்களின் நுகர்வும், மூலப்பொருள்களின் உபயோகமும் உள் நாட்டில் அதிகரிப்பதால் இவைகளின் ஏற்றுமதி குறைந்து

[1] டாக்டர் பிரைட் சிங், 'வளர்ச்சிப் பொருளாதாரம்' ப. 380.

நாட்டின் வெளிநாட்டுச் செலாவணி வருவாயும் குறைகிறது. 5. நாட்டின் வளர்ச்சித் திட்டங்களுக்குத் தேவையான நிதியில் ஒரு பகுதியை வெளிநாடுகளிலிருந்து ஒரு நாடு கடன் வாங்கினால் வளர்ச்சியின்போது இக் கடன்களைப் பராமரிக்கவும் கூடுதல் வெளி நாட்டுச் செலாவணி தேவைப்படுகிறது. 6. ஒரு வளர்ச்சி குறைந்த நாடு, ஏராளமான ஏற்றுமதிசார் தொழில்களையே (Export—oriented Industries) சார்ந்து வளர்ச்சியடைந்தால் வெளிநாடுகளில் தோன்றும் வாணிகச் சுழற்சியின் மாற்றங்களால் பெரிதும் பாதிக்கப்பட்டுவிடும். இது நாட்டின் வெளிநாட்டுச் செலாவணி இருப்பில் அழுத்தத்தை ஏற்படுத்தும். இத்தனைக் காரணிகளும் இந்தியாவின் இரண்டாம் திட்டக்கால வெளி நாட்டுச் செலாவணி நெருக்கடிக்குக் காரணமாய் இருந்தன.

உதாரணமாக, எதிர்பார்த்த செலுத்து இருப்புநிலைப் பற்றுக் குறை ரூ. 1,100 கோடியாக இருக்க உண்மையில் பற்றுக்குறை ரூ. 2,100 இருந்தது. சூயஸ் நெருக்கடியால் திட்டச் செலவு (Cost of the Projects) அதிகரித்ததாலும், பாகிஸ்தான் சச்சரவால் இந்தியப் பாதுகாப்பு முதலீடு அதிகரித்ததாலும் திட்டக்குழுவின் மதிப்பீடு நடைமுறையில் தவறியது. பெரும்பாலான பாதுகாப்பு முதலீடு வெளிநாட்டுச் செலாவணியில்தான் இருந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

2. உணவு தானியங்களின் இறக்குமதி இந்தியாவின் வெளி நாட்டுச் செலாவணியின் மீது பெருஞ்சுமையை ஏற்படுத்துமென்பதைத் திட்டக்குழு கணக்கிடத் தவறிவிட்டது. திட்டக் காலத்தில் இருமுறை பருவகால மழை தவறியதால், வேளாண்மை உற்பத்தி பெரிதும் பாதிக்கப்பட்டு நிலைமை மிகவும் சீர்கேடடைந்தது. செலுத்து இருப்புநிலை மதிப்பீட்டில் உணவு இறக்குமதி சுமார் 6 மில்லியன் டன்களாக இருக்கும் என்று கணக்கிடப்பட்டிருந்தது. ஆனால், உண்மையில் உணவு இறக்குமதி திட்டக் காலத்தில் சுமார் 20 மில்லியன் டன்களாக இருந்தது.

3. வருடாந்திர வெளிநாட்டுச் செலாவணி வரவு செலவுத் திட்டத்தை (Annual Foreign exchange budget) தயாரிக்காதது திட்டக்குழுவின் மற்றொரு பெரிய குறையாகக் கருதப்படுகிறது. இத் திட்டத்தைத் தயாரித்திருந்தால் வருடாந்திரச் செலாவணிப் பற்றுக் குறையை அறிந்து ஏற்றுமதி, இறக்குமதியைக் கட்டுப் படுத்தியிருக்கலாம்.

### நெருக்கடியைத் தீர்க்க அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள்

இந்திய வெளிநாட்டுச் செலாவணியில் ஏற்பட்ட நெருக்கடியைத் தீர்க்கப் பல்வேறு வழிவகைகள் ஆராயப்பட்டன. சில

பொருளாதார அறிஞர்கள் இந்திய ரூபாயின் நாணய மதிப்பைக் குறைத்து (Devaluation of Rupee) ஏற்றுமதியை அதிகரிக்க வேண்டுமென்று வலியுறுத்தினர். அச் சமயம் அரசு அந் நடவடிக்கையை விரும்பவில்லே. நுகர்வுப்பொருள்கள், தேவையற்ற பொருள்கள், ஆகியவைகளின் இறக்குமதியைக் குறைத்து, ஏற்றுமதியை அதிகரிப்பதையே அரசு விரும்பியது. வெளி நாட்டு உதவியைப் (Foreign Aid) பெற்று வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக்குறையைக் குறைக்க அரசு வகை செய்தது. ஆனல், அதற்குப்பின் வெளிநாட்டுச் செலாவணியில் நெருக்கடி உருவாகியதால் அரசு கடுமையான இறக்குமதிக் கொள்கையைப் (Stringent import policy) பின்பற்றியது. அரையாண்டுக் கொருமுறை செலாவணியை ஒதுக்கீடு செய்யும் முறையை அரசு கையாண்டது. புதிய இறக்குமதி ஒன்றையும் அனுமதிக்காமல், இன்றியமையாத இறக்குமதியை மேற்கொள்ள மட்டும் வெளி நாட்டு நிதி உதவியை அரசு பயன்படுத்தியது.

வெளிநாட்டுப் பத்திர இருப்பு குறைதல் (Reduction in Foreign Securities reserve)

பொதுவாக ஒவ்வொரு மத்திய வங்கியும் ஓரளவு தங்கத் தையும், வெளிநாட்டுப் பத்திர இருப்பையும் (Foreign Securities reserve) பண அளிப்பைக் கட்டுப்படுத்த இருப்பாக வைப்பது வழக்கமாகும். இந்திய ரிசர்வ் வங்கியும் ரூ. 115 கோடி மதிப்புடைய தங்கத்தையும், ரூ. 400 கோடி மதிப்புடைய வெளி நாட்டுக் கடன் பத்திரங்களேயும் இருப்பாகப் பெற்றிருந்தது. நெருக்கடி நிலேயைச் சமாளிக்க 1957, அக்டோபர் 31-ம் தேதி அமுலாக்கப்பட்ட இந்திய ரிசர்வ் வங்கியின் சட்டப்படி (Reserve Bank of India Act) வெளிநாட்டுக் கடன் பத்திரங்களின் இருப்பு குறைக்கப்பட்டது. திருத்தப்பட்ட இச் சட்டத்தின்படி இந்திய ரிசர்வ் வங்கி குறைந்த பட்சம் ரூ. 200 கோடி மதிப்புடைய தங்கத்தையும் வெளி நாட்டுக் கடன் பத்திரங்களேயும் இருப்பாக வைத்திருக்க வேண்டும். இதில் ரூ. 115 கோடி மதிப்புடைய தங்கமும், ரூ. 85 கோடி மதிப்புடைய வெளிநாட்டுக் கடன் பத்திரங்களும் இருப்பாக இருக்கும். இச் சட்டத்தினல் தங்கத்தின் அளவு ஒரே நிலேயில் இருக்க வெளிநாட்டுக் கடன் பத்திரங்களின் குறைந்த பட்ச இருப்பு ரூ. 85 ஆகக் குறைந்தது.

இரண்டாம் திட்டம் திருத்தப்படல்

வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடியின் விளேவாக இரண்டாம் திட்டத்தில் தேவையான மாற்றங்கள் செய்யப் பட்டன. திருத்தப்பட்ட இரண்டாம் திட்டத்தின்படி ஆரம்ப முதலீடாகிய (Original outlay) ரூ. 4,800 கோடியை

நெருக்கடி காரணமாக முதலீடு செய்ய முடியாவிட்டால் ரூ. 4,600 கோடிக்குக் கீழ் முதலீடு குறைந்துவிடாமல் இருக்கத் திட்டக்குழு வகை செய்தது. ஜூன் 1958-ல் தேசிய வளர்ச்சி சபை (National Development Council) கூடி இரண்டாம் திட்டத்தை இருபகுதிகளாகப் பிரித்தது. முதல் பகுதியில் ரூ. 4,500 கோடி செலவிடப்படும்; கூடுதல் நிதிவசதி கிடைத்தால் இரண்டாம் பகுதியில் ரூ. 300 கோடி செலவிடப்படும் என்றும் தீர்மானிக்கப் பட்டது. முதல் பகுதியில், வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கத் தேவையான செயல் முறைகளும், திட்டங்களும், தொழில் திட்டத்தை வலிமையுடையதாக்கத் தேவையான நடவடிக்கைகள், (Hard Core Projects) முதிர்ச்சியடைந்து முடிவடையும் நிலையில் இருக்கும் திட்டங்கள் (Projects) போன்ற வளர்ச்சிக்கு இன்றியமையாத நடவடிக்கைகள் உள்ளடங்கின. கூடுதல் நிதிவசதி கிடைக்காததால் இரண்டாம் பகுதியில் உள்ளடங்கிய திட்டங்கள் கைவிடப்பட்டன. இரண்டாம் திட்டத்தின் முடிவில் உண்மை மொத்த முதலீடு (Actual outlay) ரூ. 4,600 கோடியாக இருந்தது அறியத்தக்கதாகும்.

மூன்றும் திட்டமும் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினையும்

மூன்றும் திட்டக் காலத்திலும் தொடர்ந்து வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகள் ஏற்பட்டன. மே. 1960-ல் வெளியிடப் பட்ட மூன்றும் திட்டத்தின் நகலில் ஐந்தாண்டு காலத்தில் ஏற்றுமதி வருவாய் ரூ. 3,450 கோடிகளாக இருக்குமென்று மதிப்பிடப்பட்டது. புலனுகா ஏற்றுமதியின் நிகர வருவாய் ரூ. 120 கோடியாக இருக்குமென்றும் கணக்கிடப்பட்டது. இவ் ஏற்றுமதியின் மொத்த வருவாய் நாட்டின் பராமரிப்பு இறக்குமதிக் கான செலவைச் சரிக் கட்டிவிடும் என்றும் ஆலோசனை கூறப் பட்டது: இதன் அடிப்படையில் மூன்றும் திட்ட வெளி உதவியின் தேவை மொத்தம் ரூபாய் 2,600 கோடிகள் என்றும் கீழ்க்கண்ட வாறு மதிப்பிடப்பட்டது.

| | ரூபாய் (கோடிகளில்) |
|---|---|
| 1. திட்டத்திற்குத் தேவையான மூலதனப் பொருள்கள், சாதனங்கள், ஆகியவைகளின் இறக்குமதிச் செலவு | 1,900 |
| 2. மூலதனப் பொருள் உற்பத்தியை அதிகரிக்கத் தேவையான உதிரிப் பொருள்கள்(Components) அளவைச் சாதனங்கள் போன்றவைகளின் இறக்குமதிச் செலவு | 200 |
| 3. முற்றிய கடன்களைத் தீர்க்கும் முறைக்காக | 500 |
| மொத்தம் | 2,600 |

இத் தொகையில் பொதுக்கடன் 480-ன் இறக்குமதித் (P. L. 480 imports) தொகை சேர்க்கப்படவில்லை. மூன்றும் திட்டக் காலத்தில் இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தால் ரூ. 600 கோடி மதிப்புள்ள உணவு தானியங்கள் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. இத் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலை இடைவெளி ரூ. 3200 கோடி என்று மதிப்பிடப்பட்டது. எனவே, இக் கணக்கீடுகள் மீண்டும் திருத்தப்பட்டன. மூன்றும் திட்டக் காலத்தில் மொத்த முதலீடு ரூ. 10,400 கோடி என்றும் நேரடி வெளிநாட்டுச் செலாவணியின் தேவை ரூ. 2,030 கோடி என்றும் குறிப்பிடப்பட்டது.

கீழ்க்காணும் அட்டவணையின் மூலம் மூன்றும் திட்டக்காலச் செலுத்து இருப்புநிலை மதிப்பீடுகளை உணரலாம்.

| அம்சங்கள் | ரூபாய் (கோடிகளில்) |
|---|---|
| A. வரவுகள் (Receipts) | (மொத்தம்) |
| 1. ஏற்றுமதி | 3,700 |
| 2. புலனுக (நிகர) ஏற்றுமதி | ... |
| 3. அரசுவழிக் கடன்கள், தனியார் வெளிநாட்டு முதலீடு இவைகளின் வரவு நீங்கலான நிகர மூலதன நடவடிக்கைகள் | 550 |
| 4. வெளிநாட்டு உதவி | 2,600 |
| 5. வெளிநாட்டுச் செலாவணி இருப்பின் மேல் கடன் பத்திரங்கள் | ... |
| மொத்தம் (1 முதல் 5) | 5,750 |
| B. செலுத்துநிலை (Payments) | |
| 1. திட்டங்களுக்குத் தேவையான எந்திரங்கள், சாதனங்கள் ஆகியவைகளின் இறக்குமதி | 1,900 |
| 2. மூலதனப் பொருளுற்பத்தியை அதிகரிப்பதற்கான உதிரி பொருள்கள், மத்திய நிலைப் பொருள்கள் போன்றவைக்கான செலவு | 200 |
| 3. பராமரிப்பு இறக்குமதியின் மதிப்பு | 3,650 |
| மொத்தம் (1 முதல் 3)* | 5750 |

*பொதுச் சட்டம் 480ன் இறக்குமதி இரு பக்கத்திலும் சேர்க்கப்படவில்லை அது மூன்றும் திட்டக் காலத்தில் ரூ. 600 கோடியாகும்.

ஆதாரம்: மூன்றும் ஐந்தாண்டு திட்டம், ப. 112,

ஏற்றுமதியைப் பெருக்கும் வழிகள்

மூன்றும் திட்டக்காலத்தில் ஏற்றுமதியினுல் கிடைக்கும் மொத்த வரவு ரூ. 3700 கோடியாக (வருடாந்திர சராசரி ரூ. 740 கோடி) எதிர்பார்க்கப்பட்டது. இரண்டாம் திட்டக் காலத்தில் இது உண்மையில் ரூ, 3,053 கோடியாக இருந்தது. மூன்றும் திட்ட நகலில் இது ரூ. 3,450 கோடியாக மதிப்பிடப் பட்டிருந்தது. பேரார்வமுடைய ஏற்றுமதி இலக்காகிய ரூ. 3,700 கோடிகளை அடைய ஏற்றுமதி வருவாயைப் பெருமளவில் அதிகரிக்க எல்லா முயற்சிகளேயும் மேற்கொள்ள வேண்டுமென்று திட்டக்குழு விளக்கியது. அது இருகருத்துகளை வலியுறுத்தியது. "முதலாவதாக, அதிக உற்பத்தியால் ஏற்றுமதிக்குத் தேவையான உபரியின் அளவைப் பெருக்க முடிவது போல உள்நாட்டு நுகர்ச்சியைத் தியாகம் செய்து ஏற்றுமதியைப் பெருக்கி வெளிநாட்டுச் செலாவணி வருவாயைத் தற்போதுள்ள நிலையில் அதிகரிக்க வேண்டும். இரண்டாவதாக, நம்முடைய பொருள்களின் விலைகள் போட்டியை எதிர்த்து நிற்குமளவுக்கு இருந்தால்தான் ஏற்றுமதியின் அளவு அதிகரிக்கும். எதிர்காலத்தில் ஏற்றுமதிக்காக உள்நாட்டு நுகர்வைக் கட்டுப்படுத்துவதோடுகூட உற்பத்தித் திறனை அதிகரித்து, உற்பத்திச் செலவுகளைக் குறைக்கவும் வகை செய்யவேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்" [1]

மூன்றும் திட்ட மூலதன மறுசெலுத்து நிலை (Capital re-Payments during Third Plan)

ஆரம்ப மதிப்பீட்டின்படி மூன்றும் திட்டக்காலத்தில் திரும்பிச் செலுத்த வேண்டிய கடன்கள், கடன்பத்திரங்கள் ஆகியவைகளின் மதிப்பு சுமார் ரூ. 450 கோடிகளாக எதிர்பார்க்கப்பட்டது. மற்ற மூலதன நடவடிக்கைகளினுல் ரூ. 41 கோடி நிகரசெலவாக (Netout flow) இருக்குமென்று மதிப்பிடப்பட்டது. சிந்து நதி நீர்ச்சாஸன ஒப்பந்தத்தின்படி பாகிஸ்தானுக்கு இந்தியா செலுத்த வேண்டிய பணமும், குவைட்டிற்குக் (Kuwait) கொடுக்க வேண்டிய பணமும் சேர்ந்து ரூபாய் 59 கோடியாகும். எனவே, மூன்றும் திட்டக்காலத்தில் மூலதன மறுசெலுத்து நிலைக்குத் தேவையான மொத்தப்பணம் ரூ. 550 கோடியாக இருந்தது.

மூன்றும் திட்ட வாணிபச் செலுத்து நிலை (Balance of Third during Third Plan Period)

மூன்றும் திட்டத் துவக்கத்திலிருந்தே செலுத்து இருப்பு நிலையில் தொல்லைகள் அதிகரித்தன. மூன்றும் திட்டக்காலம் முழுவதும் ஏற்பட்ட மொத்தச் செலுத்து இருப்பு நிலைப் பற்றாக்

[1] மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம், ப-113

குறை (Balance of payments deficit) ரூபாய் 1,919 கோடியாக இருந்தது. ஆரம்ப ஆண்டுகளிலிருந்தே புலனாகா அம்சங்களில் (Invisible Items) பாதக இருப்பு நிலை பெருமளவில் தோன்றியது. அதிகமான உணவு, மற்றும் பல்வேறு வகையான இறக்குமதிகள், போதிய ஏற்றுமதி அதிகரிப்பின்மை போன்ற காரணங்களால் நிலைமை சீர்கேடு அடைந்து நாடு ஏராளமான வெளி உதவியை திரும்பத் திரும்ப நாடவேண்டிய நிலையேற்பட்டது. அதிகமான வர்த்தகப் பற்றுக்குறை (Trade deficit), உயர்ந்து கொண்டே செல்லும் கடன் வகைகள் இந்திய வர்த்தகத்துறையில் இயல்பாக இருந்தது. வெளிஉதவியை ஏராளமான அளவு பயன்படுத்திய போதும் பன்னாட்டுப் பணநிதி (International Monetary Fund) யிலிருந்து அடிக்கடி கடன் வாங்கப்பட்டது. 1965-ல் வெளி உதவியைத் தாற்காலிகமாக நிறுத்தியது எரியும் தீயில் எண்ணெய் ஊற்றுவதுபோல ஏற்கெனவே கடினமாக இருந்த வெளிநாட்டுச் செலாவணி நிலையில் மேலும் தொல்லைகள் அதிகரித்தன. அதிக உணவுதானிய இறக்குமதியால் இந்நிலை மேலும் சீர்கேடடைந்தது. ஏற்றுமதியின் அளவு எதிர்பார்த்த அளவு பூர்த்தி செய்யப்பட்ட போதும் உண்மை இறக்குமதி எதிர்பார்த்ததைவிட அதிகரித்த தால் வாணிபச் செலுத்துநிலைப் பற்றுக்குறை அதிகரித்தது. வருடாந்திர வர்த்தகச் செலுத்துநிலைப்போக்கை கீழ்க்காணும் அட்டவணை வெளிப்படுத்துகிறது.

மூன்றும் திட்ட வாணிபச் செலுத்துநிலை

(ரூபாய் கோடிகளில்)

| ஆண்டு | இறக்குமதி | ஏற்றுமதி | வாணிபச் செலுத்துநிலை |
|---|---|---|---|
| 1961-62 | 1090·06 | 660·34 | —429·72 |
| 1962-63 | 1131·48 | 685·48 | —446·00 |
| 1963-64 | 1222·85 | 793·23 | —429·61 |
| 1964-65 | 1349·03 | 816·30 | —532·73 |
| 1965-66 | 1408·52 | 805·64 | —602·88 |
| மொத்தம் | 6201·94 | 3761·00 | —2440·94 |
| வருடாந்திர சராசரி | 1240·39 | 752·20 | —488·19 |

ஆதாரம்: (1) 'பணம், நிதியின் அறிக்கை', இந்திய ரிசர்வ் வங்கி.
(2) இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடு (Bulletin) ஏப். 6

மூன்றும் திட்ட வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக் குறையின் காரணங்கள்

இரண்டாம், மூன்றும் திட்டக்காலங்களில் வெளி நாட்டுச் இடைவெளி (Foreign exchange gap) ஏற்பட்டதற்குப் பல பொதுவான காரணங்கள் உள்ளன. அவற்றுள் முக்கியமான வற்றைக் கீழே ஆராய்வோம். 1. பன்னெடுங்காலமாக இந்தியா முதல் நிலை உற்பத்தி நாடாகவே (Primary Producing Country) இருந்து, பருத்தி நெசவுத்துணி, தேயிலை, சணல், போன்ற பழமைப் பொருள்களையே ஏற்றுமதி செய்துவருகிறது. பராமரிப்புப் பொருளாதாரமாகவே இருப்பதால் ஏற்றுமதி உபரி கணிசமான அளவு அதிகரிப்பதில்லை. இந்திய ஏற்றுமதியும் பரவலாக்கப் படாமலேயே உள்ளது. இந்தியாவால் ஏற்றுமதி செய்யப்படும் பெரும்பாலான முக்கிய முதல்நிலைப்பொருள்களுக்கு வருமான, விலை, நெகிழ்ச்சிகள் (Income and Price Elasticities) மிகவும் குறைவாக உள்ளன. 2. இந்தியப் பொருள்களின் விலைகள், ஏற்றுமதியின் அளவு ஆகியவைகளில் ஏற்படும் தீவிரமான ஏற்றத்தாழ்வுகளால் இந்திய ஏற்றுமதி பெருமளவில் பாதிக்கப் படுகிறது. 3. சமீபகாலத்தில் இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாடுகளின் ஏற்றுமதி ஊதியத்திற்கு ஏற்படும் தொல்லைகளில் முக்கியமான ஒன்று செயற்கைப் பொருள்களின் கடும் போட்டி யாகும். பருத்தி, சணல், கம்பளி மற்றும் அவைகளின் நூலிழை, இரப்பர் போன்ற வேளாண்மை மூலப்பொருள்களுக்கு தற்போது பதிலீட்டுப் பொருள்களின் போட்டி அதிகரித்து வருகிறது. 4. சமீப காலம் வரைக்கும் வாணிப மாற்று வீதம் செய்பொருள் களை ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்குச் சாதகமாகவும் முதல் நிலை உற்பத்தி நாடுகளுக்குப் பாதகமாகவும் இருந்துவருகிறது. மேலும், வளர்ச்சி குறைந்த நாடுகளின் ஏற்றுமதிப் பொருள்களுக்கு எதிராக வளர்ச்சியடைந்த நாடுகள் சுங்கவரிகள் (Tariffs), மற்ற வர்த்தகத்தடைகளை, விதித்து ஏற்றுமதியைப் பாதிக்கச் செய் கின்றனர்.[1] 5. இந்திய ஏற்றுமதியின் குறைவிற்கு மற்றொரு காரணம் பழமையல்லாத (Non-Traditional) மற்ற நவீன பொருள்களை உற்பத்திசெய்ய உற்பத்திச் செலவு மிகவும் அதிகரிப்பதாகும். 6. இந்தியப் பொருளாதாரத்தில் ஒருதலைப் பட்ட (lopsided) வளர்ச்சி ஏற்பட்டிருப்பதாலும், செலாவணிப் பிரச்சினை ஏற்படுகிறது. வளர்ச்சியடைந்த இருபது நாடுகள் தங்க ளுக்குள் பொருள்களைப் பரிமாறிக் கொள்ளுகின்றனர். ஆனால் நூற்றுக்கும் மேற்பட்ட வளர்ச்சி குறைந்த நாடுகள் உலக மக்கட்

[1] W. A. லூவிஸ், பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு. ப. 34.

தொகையில் மூன்றில் இரண்டு பாகமாக அமைந்தும் தங்களுக்குள் மிகக்குறைந்த பொருள்களையே பரிமாறிக் கொள்கின்றனர். இதற்குக் காரணம் குறைந்த உற்பத்தித் திறனின் விளைவாக அவர்கள் பெற்றிருக்கும் குறைந்த வாங்கும் சக்தியேயாகும். 7. நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் விளைவாக உள்நாட்டுத் தேவைகள் அதிகரித்து ஏற்றுமதிக்கான உபரி குறைவதாலும், செலாவணிப் பிரச்சினை அதிகரிக்கிறது. 8. பருவகால மழை தவறுவதின் விளைவாக வேளாண்மைத் துறை தேக்கமடைவதாலும், மிகக் குறைந்த தொழிலுற்பத்தி வளர்ச்சி வீதத்தாலும், ஏற்றுமதிப் பொருள்களின் அளிப்பு நாட்டில் அதிகரிப்பதில்லை. 9. நாடு தொழில் மயமாக்கப்படுவதன் விளைவாக இறக்குமதியில் நாட்டம் அதிகரிக்கிறது (High propensity to import) 10. சமீப காலம் வரை வாங்கிய கடன்களைப் பராமரிப்பதற்கு ஏராளமான வெளி நாட்டுச் செலாவணி செலவிடப்படுகிறது. 11. இரண்டாம், மூன்றும் திட்டக் காலத்தில் உணவுப் பொருள்களின் இறக்குமதி பெருமளவில் அதிகரித்ததால் செலுத்து இருப்பு நிலையில் அழுத்தம் அதிகரித்தது. பேராசிரியர் W. A. லூவிஸ் குறிப்பிடுவது போல், "மந்தமான ஒரு நபர் வேளாண்மை உற்பத்தித் திறன் தொழில் பெருக்கமடைவதைத் தடுத்து வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலையில் சிரமத்தை உண்டுபண்ணுகிறது"[1] 12 சீனு, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் போர் அபாயங்களின் விளைவாக நாட்டின் பாதுகாப்புச் செலவு அதிகரித்து வருகிறது. இந்தோ-பாகிஸ்தான் போர் நடவடிக்கைகளின் போது அமெரிக்க உதவி நிறுத்தப்பட்டதாலும், மூன்றும் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகள் அதிகரித்தன.

முதல் திட்ட, இரண்டாம் திட்ட வருடாந்திர சராசரி ஏற்றுமதி, இறக்குமதி, செலுத்து இருப்பு நிலைப் பற்றுக் குறை, கீழ்க்கண்ட பட்டியல்களில் விளக்கப் பட்டுள்ளது.

முதல் திட்டச் செலுத்து இருப்பு நிலை (வருடாந்திர சராசரி)

| | | | |
|---|---|---|---|
| | இறக்குமதி | ... | ரூ. 720 கோடி |
| | ஏற்றுமதி | ... | ரூ. 610 கோடி |
| 1. | வர்த்தக இருப்பு நிலை | ... | — 110 கோடி |
| 2. | புலனுகாத பொருள்கள் | ... | + 80 கோடி |
| 3. | மூலதன பரிவர்த்தனை | ... | — 40 கோடி |
| 4. | மொத்தப் பற்றுக் குறை ... (1+2+3) | | —ரூ. 70 கோடி |

[1] W. A. லூவிஸ், பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு ப. 342.

பற்றுக் குறை சரிசெய்யப்பட்ட வகைகள்

| | |
|---|---|
| 1. வெளிநாட்டு உதவி | + ரூ. 40 கோடி |
| 2. வெளிநாட்டுச் செலாவணி யிருப்பின் மேல் கடன் பத்திரங்களைப் பயன்படுத்துதலும் பன்னாட்டுப் பண நிதியிலிருந்து உதவி பெறுதலும் | + ரூ. 30 கோடி |

முதல் திட்டம் முழுவதும் மொத்தச் செலுத்து இருப்பு நிலைப் பற்றுக்குறை ரூ. 350 கோடி ($70 \times 5 = 350$) யாகும். வர்த்தகச் செலுத்து இருப்பு நிலைப் பற்றுக்குறை சராசரியாக ஆண்டொன்றுக்கு ரூ. 110 கோடியாகும். இப் பற்றுக்குறை பல்வேறு நாடுகளிலிருந்து பெற்ற உதவித் தொகையாகிய ரூ. 200 கோடியால் (ரூ. $40 \times 5 = 200$) ஓரளவு பூர்த்தி செய்யப்பட்டது. மீதி பற்றுக்குறை இந்திய வெளிநாட்டுச் செலாவணியிருப்பிலிருந்து பெறப்பட்டது. அது ரூ. 150 கோடி (ரூ. $30 \times 5 = 150$)யாகும். எனவே, மொத்தப் பற்றுக்குறையாகிய ரூ. 350 கோடியும் இவ்வாறு பூர்த்தி செய்யப்பட்டது.

இரண்டாம் திட்டச் செலுத்து இருப்பு நிலை (வருடாந்திர சராசரி)

(Balance of payments during Second plan)

(Amual Average)

| | |
|---|---|
| இறக்குமதி | ரூ. 1070 கோடி |
| ஏற்றுமதி | ரூ. 620 கோடி |
| 1. வர்த்தகச் செலுத்துநிலை | — ரூ. 450 கோடி |
| 2. புலனாகாத பொருள்கள் | + ரூ. 80 கோடி |
| 3. மூலதன பரிவர்த்தனை (Capital Transactions) | — ரூ. 30 கோடி |
| 4. மொத்த பற்றுக்குறை (1+2+3) | — ரூ. 400 கோடி |

பற்றுக்குறை சரிசெய்யப்பட்ட வகைகள்

| | |
|---|---|
| 1. வெளிநாட்டு உதவி (பன்னாட்டுப் பணநிதியிலிருந்து வாங்கியது உட்பட) | + ரூ. 300 கோடி |
| 2. வெளிநாட்டுச் செலாவணி யிருப்பின் மேல் கடன் பத்திரங்களைப் பயன்படுத்தி உதவிபெறுதல் | + ரூ. 100 ,, |
| மொத்தம் | + ரூ. 400 கோடி |

முதல் திட்டக் காலத்தில் வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக் குறை ரூ. 150 கோடியாக இருந்தது. இரண்டாம் திட்டத்தில் ரூ. 500 கோடியாக உயர்ந்தது. இரண்டாம் திட்டப் பற்றுக் குறையைப் பூர்த்தி செய்ய வெளிநாட்டு உதவி, பன்னாட்டுப் பண நிதியிலிருந்து பெற்ற உதவி, ஆகியவைகளின் மூலமாக ரூ. 1,500 கோடி (ரூ. $300 \times 5 = 1{,}500$) வரைக்கும் நிதிவசதி செய்யப்பட்டது.

கீழ்க்கண்ட அட்டவணையின் மூலம் இரண்டாம் திட்டக் காலத்தில் ஏற்பட்ட சில பொருள்களின் மிதமிஞ்சிய இறக்குமதி விளக்கப் பட்டுள்ளது.

இறக்குமதியின் அம்சங்கள்

(ரூபாய் கோடிகளில்)

| இறக்குமதி | முதல் திட்டகாலம் | இரண்டாம் திட்டகாலம் | குறிப்புகள் |
|---|---|---|---|
| 1. நுகர்வுப் பொருள்கள் | 235 | 245 | அதிகமாற்ற மில்லை. |
| 2. மூலப் பொருள்களும் நடுத்தர நிலைப்பொருள்களும் | 365 | 500 | + 40% |
| 3. மூலதன பொருள்கள் | 120 | 325 | + 150% |
| மொத்தம் | 720 | 1070 | |

இரண்டாம் திட்டக் காலத்தில் நுகர்வுப் பொருள்களின் இறக்குமதி குறிப்பிடத் தக்க வகையில் மாற்றம் பெறவில்லை. கச்சாப் பொருள்களும், மத்தியநிலைப் பொருள்களும், முதல் பொருள்களும் பெருமளவில் இறக்குமதி செய்யப்பட்டன என்பதை மேற்கண்ட அட்டவணை தெளிவுப்படுத்துகிறது.

## வெளிநாட்டுச் செலாவணி பிரச்சினையைத் தீர்க்கும் வழிமுறைகள்

ஜூன் 1966-ல் வெளிநாட்டுச் செலாவணிப் பிரச்சினையைத் தீர்க்க இந்திய ரூபாய்களின் நாணய மதிப்பு குறைக்கப் (Devaluation) பட்டது. இது இப் பிரச்சினையைக் கணிசமான அளவு தீர்க்குமென்று கருதப்பட்டது. நாணய மதிப்புக் குறைப்பு வெற்றியடையச் செய்ய பணவாட்ட நடவடிக்கைகளை (Disintflaionary measures) பின்பற்ற வேண்டும். இந்திய உள்நாட்டு

விலைகள் குறையாவிட்டால் பணத்தின் மாற்று மதிப்பு மேலும் குறையும். வளர்ச்சி குறைந்த நாடுகள் ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்திச் செலவை அதிகரித்தால் பன்னாட்டுச் சந்தையில் தகுந்த இடத்தைப் பெற முடியாது. இது உண்மையென்பது நம் ஏற்றுமதி அதிகரிக்கத் தவறியதிலிருந்து அறியலாம். இது நம்முடைய உற்பத்தி முறையில் ஏற்பட்ட தோல்வியைப் பிரதிபலிக்கிறது. ஏற்றுமதி மாளிகையின் அமைப்பைத் தாங்கும் தூண்களாக அமைபவைகள் உற்பத்தியும் உற்பத்தித் திறனுமாகும். இறக்குமதி செய்யப்பட்ட மூலப் பொருள்களைச் சிக்கனமாகப் பயன்படுத்துதல், இறக்குமதி செய்யப்பட்ட முதல் சாதனங்களை மிகத் தீவிரமாக பயன்படுத்துதல், இறக்குமதிப் பொருள்களுக்குப் பதிலாக உள் நாட்டுப் பொருள்களை பதிலீடு செய்தல், தொழிலாளர் திறனை உயர்த்துதல் போன்ற பல்வேறு நடவடிக்கைகளால் நம் அயல் நாட்டுச் செலாவணியைச் சிக்கனப்படுத்த வேண்டும்.

இந்திய வெளிநாட்டுச் செலுத்து இருப்பு நிலைத் தொல்லைகள் தாற்காலிகத் தன்மை கொண்டவைகள் அல்லாததால் நாம் வர்த்தகப் பற்றுக்குறை கொண்டிருக்கும் நாடுகளுடன் இருதலைப் பட்ட (Bilateral) வர்த்தக ஒப்பந்தங்களை மேற்கொள்ள வேண்டும். இது நம் வர்த்தக இடைவெளியைக் குறைக்கச் சிறந்த கருவியாகப் பயன்படும்.

இன்றைய இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் சூழ்நிலையில் வெளிநாட்டுச் செலாவணி பிரதான இடத்தைப் பெற்றுள்ளது. வளர்ந்து வரும் ஒரு நாட்டில் பொருளாதார வளர்ச்சிக்கு இடையூறாக இருப்பது உடனடியாகத் தேவைப்படும் வெளிநாட்டுச் செலாவணியாகும். இது இந் நாடுகளில் கிடைப்பது மிகவும் கடினமாக உள்ளது. எனவே, மொத்த வெளிநாட்டுச் செலாவணி அளிப்போரின் மேல் பல்வேறு தொழில் நிறுவனங்களின் அழுத்தம் மிகஅதிகமாக இருப்பது குறிப்பிடத் தக்கதாகும். வால்டர் க்ரௌஸ் (Walter Krause) அவர்கள் குறிப்பிடுவது போல், "வெளிநாட்டுச் செலாவணி நிலைமையை சுலபமாக்க உதவும் ஒரு தொழில் நிறுவனம் தனிச்சிறப்புடையதாகக் கருதப்படுகிறது. ஏனெனில், அப்போதுதான் வெளிநாட்டுச் செலாவணி நிலைமை கடினமாக்குவதற்குப் பதிலாகக் கூடுதல் வளர்ச்சியைச் சுலபமாகத் தோற்றுவிக்கிறது; அதற்கு மாறாக ஒரு நிறுவனம் வெளிநாட்டுச் செலாவணி நிலைமையைச் சேதப்படுத்திச் சீர்குலைக்க முயன்றால் அதன் தனிச் சிறப்பு அழிந்து விடுகின்றது. இதன் விளைவாக கூடுதல் வளர்ச்சி தானாகவே தடைசெய்யப்பட்டு விடுகிறது."[1]

1 வால்டர் க்ரௌஸ், 'வெளிநாட்டுச் செலாவணியின் விளைவுகள்,' 'பொருளாதார வளர்ச்சியின் கட்டுரைகள்' ப.396

## சுய நம்பிக்கை தேவை

இந்திய வெளிநாட்டுச் செலாவணித் தொல்லைகள் தாற்காலிக மானதாகவோ அல்லது குறுகிய காலத்தினதாகவோ இல்லை. அவைகள் இன்னும் சில ஆண்டுகளுக்குத் தொடருமாதலால் அக் காலம் வரை வெளிநாட்டு உதவியைப் பெற வேண்டியது இன்றியமையாததாகும். ஆனால், நாட்டைச் சுய நம்பிக்கையும் உறுதியும் கொண்டதாக மாற்றியமைத்து, அடுத்த பத்து ஆண்டுகளுக்குள் அது நம் நாட்டுக்குத் தேவைப்படும் சுய உற்பத்தியையும் சேமிப்பையும் அளிக்க வல்லமை பெற்றிடச் செய்ய வேண்டியது நம் நடவடிக்கைகளின் முக்கிய குறிக்கோளாக இருக்க வேண்டும். சாதாரணமாக நமக்கு இன்றியமையாததாக விளங்கும் வெளி மூலதனத்தை நாம் தொடர்ந்து பெற்றுக் கொள்ளலாம். ஆனால், தனிவகை வெளி உதவியைப் படிப்படியாகக் குறைத்து, கடைசியில் முற்றிலுமாக நீக்கி விடவேண்டும். ஏனெனில் நான்காம் திட்டக் காலம் இவ்வகையில் கடுஞ்சோதனை மிகுந்த காலமாகும்.

## தன்னிறைவு அவசியம்

இந்தோ-பாகிஸ்தான் போர் நடவடிக்கைகளின் போது, குறிப்பிட்ட சில வர்த்தகமல்லாத (Non-Commercial) வேறுவகை வெளிக் கடன் திடீரென நிறுத்தப்படல், ரூபாயின் நாணய மதிப்புக் குறைப்புப் போன்ற நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நாம் முடிந்தவரை எல்லாவற்றிலும் தன்னிறைவு பெற்றே ஆக வேண்டுமென்பது நடைமுறையிலேயே நிரூபிக்கப்பட்டுவிட்டது. எனவே, ஏற்றுமதியைப் பெருக்கவும் இறக்குமதிப் பதிலீடு (Import Substitution) செய்யவும் நான்காம் திட்டத்தில் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இத் திட்டக் காலத்தில் நமக்குக் கிடைக்கும் வெளிநாட்டுக் கடன் தொகையைச் செயல் முறைத் திட்டங்களுக்காகவும் (projects) அவற்றைப் பராமரிக்கவும் பயன்படுத்தப்படும். தொழில், வேளாண்மைத் துறைகளில் ஏற்றுமதிப் பெருக்கம், இறக்குமதிப் பதிலீடு ஆகிய ஆக்கச் செயல் முறைகளுக்காக இத் தொகை பயன்படும்.

## முடிவுரை

நான்காம் திட்டக் காலத்தில் உள்நாட்டு நிதி வளங்களைக் கூடுதலாகச் சேகரித்துத் திட்டத்திற்கு நிதியளித்து (financing) பணவீக்க அழுத்தங்கள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். வெளிநாட்டு உதவியையே நம்பி இருக்கும் நிலை நான்காம் திட்டக்

காலத்தில் பெருமளவில் குறைந்துவிடும் என்று கூறப்பட்டுள்ளது அடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள் பொதுக்கடன் 480-ன் இறக்குமதியை முழுவதுமாக நிறுத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. ஆண்டுக்கு சுமார் 7 சதவீத ஏற்றுமதியை நிலையாக அதிகரித்து வெளிநாட்டுச் செலாவணியின் நடப்புக் கணக்கில் சமநிலையை அடைய வேண்டுமென்பதும் நான்காம் திட்டக்கால சிறப்புக் கொள்கையின் (Strategy) ஒரு சிறப்பு அம்சமாகும். இதன் விளைவாக நாடு தன்னிறைவைப் பெற வேண்டுமென்ற குறிக்கோளை விரைவாகச் சாதிக்க வழி கிடைக்குமென்பதில் ஐயமில்லை.

# 51. இந்தியத் தொழிற்சங்க இயக்கம்

## (Trade Union Movement in India)

இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம் தோன்றிச் சுமார் 60 ஆண்டுகளாகியும், அதன் முன்னேற்றம் மகிழ்ச்சியுடையதாயும் முழு திருப்தி தருவதாயும் இல்லை. தற்போது இருந்துவரும் ஒரு சில நிலையான பெரும் தொழிற் சங்கங்கள் பெரும்பாலும் தேசிய வாதிகள், அரசியல் தலைவர்கள், சமூக ஊழியர்கள் போன்றவர் களால் ஆதிக்கம் செலுத்தப்பட்டு வருகின்றன. இத் தலைவர்கள் தொழிலாளர்களின் உண்மையான பிரச்சினைகளை அறிந்து, அவர் களின் விருப்பங்கள், ஆவல்கள் ஆகியவற்றை அனுதாபத்துடனும் அக்கறையுடனும் பொதுவாகக் கவனிப்பதில்லை. இந்தியத் தொழில் வளர்ச்சிக்குத் தொழிலாளர்களின் நலனும், திறமையும், ஊக்கமும் இன்றியமையாததாகும். அதை மேம்படுத்துவதில் தொழிற் சங்கங்களின் பணி உன்னத நிலையை அடைய வேண்டும். எனவே, தொழிற்சங்க அலுவல்களை நிர்வகிக்க சங்கத்தின் சாதாரண உறுப்பினர்களுள் ஒரு சில திறமை மிக்கவர்களைத் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்கள் தொழில் நிபுணர்களின் உதவியுடன் தொழிலாளர் சட்டங்களை (Labour Laws)யும் தொழில் சம்பந்த பிரச்சினைகளையும் அறிந்து, சங்கங்களைத் திறமை யுடன் நடத்த வேண்டும். அத்தகைய சூழ்நிலையில்தான் வேலை நிறுத்தம், கதவடைப்பு, போன்ற சிக்கல்களால் உற்பத்தி பாதிக்கப்படாமல் தொழில் வளர்ச்சி மேம்படும்.

### தொழிற் சங்கங்களும் தொழில் வளர்ச்சியும்
### (Trade Unions and Industrial Development)

இந்தியத் தொழில் முன்னேற்றத்திற்குத் தற்போது அடிப்படையான ஒன்றாக இருப்பது சக்தியும் திறமையும் பெற்ற தொழிற்சங்கங்களாகும். சக்தி வாய்ந்த தொழிற்சங்கங் களால்தான் கூட்டுப் பேரமுறை (Collective bargaining)யின்மூலம் அதிகார பலம் கொண்ட நிர்வாகங்களிலிருந்து தொழிலாளர்

களுக்குச் சிறந்த நன்மைகள் கிடைக்கச் செய்யமுடியும். தொழில் அமைதியை (Industrial peace) நிலைநாட்டி, பல்வேறு தொழில்களில் திட்டமிட்ட உற்பத்தி இலக்குகளைச் சாதிக்க ஒருசக்தி வாய்ந்த தொழிற்சங்க இயக்கம் நாட்டிற்குத் தேவையாகும். இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் மக்களாட்சியை மேம்படுத்த சக்தி வாய்ந்த தொழிற்சங்கங்களின் வளர்ச்சி அவசியமாகும். முதலாவதாக, அத்தகைய தொழிற்சங்கங்கள் தொழிலாளர்களின் உரிமைகளையும் நலனையும் பாதுகாக்க வல்ல கூட்டுப் பேர முறையை (System of Collective Bargaining) வளரச் செய்ய வகை செய்கின்றன. இரண்டாவதாக, அவைகள் நாட்டில் அரசியல் மக்களாட்சியை (Political democracy) நிலைநிறுத்தப் பெரிதும் துணைபுரிகின்றன. இந்தியக் குடியரசு தலைவர் திரு. V. V.கிரி 'இந்தியத் தொழிலில் தொழிலாளர் பிரச்சினைகள்' என்னும் தன் நூலில் இதையே வலியுறுத்திக் கூறுகிறார். உற்பத்தியை விரைவாக அதிகரிக்கச் செய்ய வேண்டுமென்ற குறிக்கோளைச் சாதிக்க, தொழிலாளர்கள் ஒழுங்கீனம், உற்பத்தி நடவடிக்கைகளை நிறுத்துதல், அக்கறையின்றிப் பணிபுரிதல் போன்றவைகளை முழுவதுமாக நீக்கிவிட வேண்டும். எனவே, மக்களாட்சியை அடிப்படையாகக் கொண்ட சக்தி வாய்ந்த தொழிற்சங்கங்கள் நாட்டுக்கு இன்றியமையாதவைகளாய் விளங்குகின்றன.

### விடுதலைக்கு முன் தொழிற்சங்கங்களின் வளர்ச்சி (Growth of Trade Unions before Independence)

தொழிற்சங்க இயக்கம் இந்தியாவில் 1918-ல் முதல் உலகப் போர் முடிந்த சமயத்தில் தோன்றியது. அதுதோன்றக் காரணமாய் இருந்த காரணிகள் பின்வருமாறு: முதலாவதாக, முதல் உலகப் போரின்போது நாட்டில் வாழ்க்கைச் செலவு (Cost of living) பெருமளவில் அதிகரித்தது. ஆனால், அதற்கேற்பக் கூலி மட்டம் (Level of wages) உயரவில்லை. எனவே, கூட்டுப் பேரத்தின் (Collcetive Bargaining) மூலம் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்றுகூடித் தொழிற்சங்கங்கள் அமைத்துத் தங்கள் உரிமைகளுக்காகப் போராட முன்வந்தனர். இரண்டாவதாக, நாடுகளின் கூட்டு அமைப்பின் (Leage of Nations) ஓர் அங்கமாகப் பன்னாட்டுத் தொழிலாளர் அமைப்பு (International Labour Organisation) ஏற்பட்டதால் இந்தியாவில் தொழிற்சங்க வளர்ச்சி ஏற்பட அது அடிகோலியது. பன்னாட்டுத் தொழிலாளர் அமைப்பின் கூட்டங்களுக்கு இந்தியத் தொழிலாளர்களின், முதலாளிகளின் பிரதிநிதிகளை அனுப்பி வைக்கவேண்டிய திருந்ததால் தொழிற்சங்கங்களின் வளர்ச்சி அவசியமாயிற்று. இந்தச் சூழ்நிலையில் தான் அனைத்திந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் (All India Trade Union

Congress—A. I. T. U. C.) தோன்றியது. மூன்றுவதாக, இந்திய தேசிய இயக்கத்தின் (Indian National Movement) வளர்ச்சி தொழிற்சங்க இயக்கத்தின் முன்னேற்றத்திற்கு வித்திட்டது. தேசியத் தலைவர்களில் சிலர் தொழிலாளர்களை ஒருங்கிணைத்துச் சக்தி வாய்ந்த தொழிற்சங்கங்களை ஏற்படுத்தினர். இதன் மூலம் தங்களின் விடுதலை இயக்கத்தில் தொழிலாளர்களையும் பயன்படுத்தினர். இறுதியாக, 1917-ன் ரஷ்யப் புரட்சியினுல் தொழிலாளர்களின் ஆட்சி ரஷ்யாவில் ஏற்பட்டது. அது இந்தியத் தொழிலாளர்களிடம் தன்னம்பிக்கையையும் விடா முயற்சியையும் வளர்த்தது. தொழிலாளர்கள் ஒன்றுபட்டால் எதையும் தீவிரமாகச் சாதிக்க முடியும் என்று இந்தியத் தொழிலாளர்கள் கருதித் தொழிற்சங்கங்களை வளர்த்தனர்.

தொழிற்சங்கச் சட்டங்கள் (Trade Union Legislation)

1926-ன் இந்தியத் தொழிற் சங்கச் சட்டம் (The Indian Trade Union Act, 1926)

1926-ல் முதல் தொழிற்சங்கச் சட்டம் நிறைவேறியது. நாட்டில் தொழிற்சங்க இயக்கம் நிலையாக வளர்ச்சியடைய இச் சட்டம் வித்திட்டது. இச் சட்டத்தின்படி தொழிலாளர்கள் தங்கள் விருப்பப்படி தொழிற்சங்கங்களை ஏற்படுத்தி அவைகளைப் பதிவு செய்யலாம். பதிவு செய்யப்பட்ட தொழிற்சங்கங்களுக்குச் சட்டப்படி அந்தஸ்து அளிக்கப்பட்டது. தொழிலாளர்களின் தொழிற்சங்க நடவடிக்கைகளால் குற்ற வழக்குகள் ஏற்பட்டால், அவை தொடரப்படாமலிருக்க இச் சட்டம் அவற்றிலிருந்து விலக்கு அளித்தது. ஆனுல் தொழிற் சங்கக் கட்டாயப் பதிவு முறையை வலியுறுத்தாதது இச் சட்டத்தின் முக்கிய குறையாகும். பதிவு செய்யாத தொழிற் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படவில்லை.

1947ன் இந்தியத் தொழிற்சங்கத் திருத்தச் சட்டம் (The Indian Trade Union Amendment Act, 1947)

1947-ல் 1926-ன் இந்தியத் தொழிற்சங்கச் சட்டம் திருத்தப் பட்டது. அதன்படி பதிவு செய்யப்பட்ட சங்கங்களை (Representative unions) முதலாளிகள் கட்டாயமாக ஏற்றுக் கொள்ளச் சட்டம் வகை செய்தது. வேலை தருபவர்கள் சில தொழிற்சங்கங்களை ஏற்றுக்கொள்ள மறுப்பதால் ஏற்படும் சச்சரவுகளைத் தீர்க்கத் தொழிலாளர் வழக்கு மன்றங்களை (Labour Courts) ஏற்படுத்தவும் வசதி செய்யப்பட்டது. சட்டத்திற்குப் புறம்பான வேலை நிறுத்தங்கள் போன்ற தீய நடவடிக்கைகளில் தொழிலாளர்கள் ஈடுபடுவதைத் தடுக்கவும் இச் சட்டம் வகை

செய்தது. இச் சட்டத்தை மாநில அரசுகள் நிர்வகித்து அமுலாக்கின. இச் சட்டம் தொழிற்சங்கப் பதிவாளரையும் (Registrar of Trade Unions) ஏற்படுத்தியது. ஆனால், பதிவாளருக்கு தொழிற்சங்கங்களின் கணக்குப் புத்தகங்களையும், பதிவேடுகளையும் (Registers) ஆய்வுசெய்ய அதிகாரம் இல்லை. 1959-ல் நடந்த தொழிலாளர் மாநாட்டில் (Labour Confernece) பதிவாளருக்கு இந்த அதிகாரத்தை வழங்கவேண்டுமென்று பரிந்துரைக்கப் பட்டது.

### 1960-ன் இந்தியத் தொழிற்சங்கத் திருத்தச் சட்டம் (The Indian Trade Union Amendment Act, 1960)

1926-ன் சட்டம் 1960-ல் மேலும் திருத்தப்பட்டது திருத்தப்பட்ட 1960-ன் சட்டப்படி சங்கத்தின் உறுப்பினர் ஒவ்வொருவரும் மாதமொன்றுக்கு நன்கொடையாகக் குறைந்தது 25 பைசாக்கள் செலுத்த வேண்டுமென்று குறிப்பிடப்பட்டது. மேலும், இச் சட்டம் தொழிற்சங்கங்களின் கணக்குப் புத்தகங்கள், பதிவேடுகள் (Registers) போன்றவைகளை ஆய்வுசெய்யத் தொழிற் சங்கப் பதிவாளருக்கு அதிகாரம் அளித்தது.

### 1950-ன் தொழிற்சங்க மசோதா (The Trade Union Bill of 1950)

இந்தியத் தொழிற்சங்கங்களைச் சீரமைத்து வளர்ச்சியடையச் செய்யும் நோக்கத்துடன் 1950-ல் தொழிற்சங்க மசோதா சமர்ப்பிக்கப்பட்டது. இம் மசோதாவில் தொழிற்சங்கங்கள் கட்டாயமாகப் பதிவு செய்யப்பட வேண்டுமென்றுப், சிவில் ஊழியர்கள் (Civil Servants) இதில் சேர்க்கப் படவேண்டியதில்லை என்றும், வீட்டு வேலைக்காரர்கள் (Domestic Servants) தொழிற் சங்க இயக்கத்தால் பயன் பெறவேண்டுமென்றும் குறிப்பிடப் பட்டிருந்தது. தொழிற்சங்கங்களை முதலாளிகள் கட்டாயமாக ஏற்றுக் கொள்ளவும் இம் மசோதா வகைசெய்தது. தொழில் அமைதியை (Industrial peace) மேம்படுத்தும் குறிக்கோளுடன், முதலாளிகளும் தொழிலாளிகளும் தீய நடவடிக்கைகளில் ஈடுபடு வதைத் தடுக்கச் சில தடைகள் விதிக்கப்பட்டன. ஆனால், இம் மசோதாவிற்குப் பலத்த எதிர்ப்பு இருந்ததால், இது நிறைவேற்றப் படவில்லை.

### விடுதலைக்குப்பின் தொழிற்சங்க வளர்ச்சி (Growth of Trade Unions after Independence)

நாடு விடுதலை பெற்ற காலத்திலிருந்து தொழிற்சங்க இயக்கம் சக்திபெற்று வளர்ச்சியடைந்து வருகிறது. இவ்வுண்மையைப் பதிவு

செய்யப்பட்ட தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை, அச் சங்கங்களின் உறுப்பினர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதிலிருந்து அறியலாம். 1920-ல் நாட்டிலுள்ள பல்வேறு தொழிற்சங்கங்களின் நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் நோக்கத்துடன் ஒரு மத்திய தொழிற்சங்க நிறுவனமாக (Central Trade Union Organisation) அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் (All India Trade Union Congress—AITUC) நிறுவப்பட்டது. அதன் பின் பல்வேறு மற்ற தொழிற்சங்க அமைப்புகள் தோன்றியுள்ளன. தற்போது நான்கு மத்திய தொழிற்சங்க நிறுவனங்கள் உள்ளன. அவைகள் வருமாறு:-

(1) அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ். இது மிகப் பழைய நிறுவனமாக அமைந்து கம்யூனிஸ்டுகளால் ஆதிக்கம் செலுத்தப்பட்டு வருகிறது.

(2) விடுதலைக்குப்பின் 1947-ல் இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் (Indian National Trade Union Congress—INTUC) தோன்றியது. அரசியல் அமைப்பாகிய இந்திய தேசிய காங்கிரஸால் (Indian National Congress) தொழிலாளர்களின் ஒத்துழைப்பைப் பெறும் நோக்கோடு அது (INTUC) ஆதரிக்கப்பட்டது. அது அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸுக்கு போட்டி நிறுவனமாகக் கருதப்படுகிறது. மேலும், அது காங்கிரஸ்காரர்களால் ஆதிக்கம் செலுத்தப்பட்டு வருகிறது. இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியுடன் (India National Congress Party) அது நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது.

(3) டிசம்பர் 1948-ல் பிரஜா சோஷலிஸ்டு கட்சியைச் சேர்ந்தவர்களும் காங்கிரஸ் கட்சியிலிருந்து பிரிந்த சமூக வாதிகளு (Socialists) மாகச் சேர்ந்து தங்களுக்கென்று ஹிந்து மஜ்தூர் சபா (Hind Mazdoor Sabha) என்ற பெயருடன் ஒரு தொழிற்சங்க அமைப்பை ஏற்படுத்தியுள்ளனர்.

(4) மே 1949-ல், இணைந்த தொழிற்சங்க நிறுவனம் (United Trade Union Organisation) ஒன்று அமைக்கப்பட்டது. அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்டு இயங்குவதாக அது கருதுகிறது. ஆனால், அது அரசியலிருந்து முற்றிலும் விலகி இருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில் அந்த நிறுவனத்தில் இடதுசாரிப் போக்கு காணப்படுவதை அறியலாம்.

தற்போதைய வளர்ச்சி

1927-28-ல் இந்தியாவில் சுமார் ஒரு லட்சம் தொழிலாளர்களை உறுப்பினர்களாகக் கொண்ட பதிவு செய்யப்பட்ட தொழிற்

சங்கங்கள் 20 மட்டும்தான் இருந்தன. ஆனால், 1963-64-ல்39 லட்சம் உறுப்பினர்களைக் கொண்ட 11,900 சங்கங்கள் இருந்தன. இந்தியாவில் தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சியை கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

## இந்தியாவில் தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சி
(Growth of Trade Union Movement in India)

| வருடம் | பதிவு செய்யப்பட்ட சங்கங்களின் எண்ணிக்கை | அறிக்கை வெளியிடும் சங்கங்களின் எண்ணிக்கை | அறிக்கை வெளியிடும் சங்கங்களின் உறுப்பினர்கள் (லட்சங்களில்) |
|---|---|---|---|
| 1927-28 | 20 | 28 | 1 |
| 1937-38 | 420 | 340 | 4 |
| 1951-52 | 4,620 | 2,560 | 20 |
| 1960-61 | 11,300 | 6,810 | 40 |
| 1965-66 | 13,000 | 7,200 | 36 |

ஆதாரம்:- இந்தியத் தொழில் ஆண்டு அறிக்கை, அத்தியாயம் 4.
(The Indian Labour year Book, Chapter 4)

தற்போது தொழிற்சங்க இயக்கம் நாட்டில் பரவலாகப் பெருகி வேரூன்றி வளர்ச்சியடைந்து வருகிறது. மேலும், அது சீரமைக்கப்பட்டு நிரந்தரமான வகையில் செயலாற்றி வருவது குறிப்பிடத்தக்கதாகும். கீழ்க்கண்ட அட்டவணை அகில இந்தியத் தொழிற்சங்க நிறுவனங்களின் (All-India Organisations) உறுப்பினர்களின் எண்ணிக்கையை விளக்குகிறது.

## அகில இந்தியத் தொழிலாளர் நிறுவனங்களின் உறுப்பினர்களின் எண்ணிக்கை

(Membership of All India Labour Organisations)

| | இணைந்துள்ள சங்கங்களின் எண்ணிக்கை | உறுப்பினர்களின் எண்ணிக்கை (லட்சங்களில்) |
|---|---|---|
| இ. தே. தொ. ச. காங்கிரஸ் (I. N. T. U. C.) *(1966-67ல்)* | 2,042 | 20·1 |
| அ. இ. தொ. ச. காங்கிரஸ் (A. I. T. U. C.) *(1966 ல்)* | 2,068 | 12·1 |
| ஹி. ம. சங்க் (H. M. S.) *(1966-67 ல்)* | 507 | 8·1 |
| இ. தொ. ச. காங்கிரஸ் (U. T. U. C.) *(1966-ல்)* | 374 | 2·2 |

ஆதாரம்:- டைம்ஸ் ஆப் இந்தியா, வருடாந்திர அறிக்கை, 1968 (Timies of India, Directory and year Book) ப. 162

அகில இந்தியத் தொழிலாளர் நிறுவனங்களில் இந்திய தேசியத் தொழிற்சங்க காங்கிரஸில்தான் 1966-67-ல் அதிக எண்ணிக்கை கொண்ட உறுப்பினர்கள் இருந்தனர். அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸில் அதே காலத்தில் மற்ற நிறுவனங்களைக் காட்டிலும் அதிகமாக இணைந்திருந்த சங்கங்களின் எண்ணிக்கை 2068 ஆக இருந்தது. உறுப்பினர்களாக இருந்த மொத்தத் தொழிலாளர்களில் சுமார் 50 சதவீதம் சுரங்கங்கள், 40 சதவீதம் ஆலைகள், 25 சதவீதம் இரயில்வேக்கள், 20 சதவீதம் தோட்டத் தொழில் (Plantations) போன்றவைகளைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். தற்போது உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதால் தொழிலாளர்களை உறுப்பினர்களாகச் சேரும்படி ஊக்குவிப்பது பொதுக் கொள்கையாக அமைய வேண்டும். தொழிற் சங்கங்களின் குறிக்கோள் அதிகக் கூலி பெறுதல், தகுந்த வேலையையும் நல்ல வாழ்க்கையையும் பெறுதல் ஆகியவைகளாக மட்டுமிராமல் தேசிய வளர்ச்சியிலும் அவைகள் அக்கறை செலுத்த வேண்டியது இன்றியமையாததாகும்.

இந்தியத் தொழிற்சங்க இயக்கம் தற்போது விரைவான வளர்ச்சியைப் பெற்றுள்ளதற்குப் பொருளாதார, அரசியல், சட்ட காரணங்கள் உள்ளன. முதலாவதாக, இரண்டாம் திட்டக் காலத்திலிருந்து, இந்தியாவில் வாழ்க்கைச் செலவு (Cost of Living) அதிகரித்து வருகிறது. விலை அதிகரிப்பதன் காரணத்தால் தொழிலாளர்களின் உண்மை வருமானம் குறைகிறது. மேலும் கறுப்புச்சந்தை, லஞ்சம் போன்றவைகளாலும் அவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய பங்கை முதலாளிகள் அதிகமான லாபம் பெறுவதன் மூலம் சுரண்டி வருவதையும் தொழிலாளர்கள் உணரத் தொடங்கி, கூட்டு நடவடிக்கையை மேற்கொள்ளத் தொழிற்சங்கங்களை ஏற்படுத்தினர்.

இரண்டாவதாக, தொழிற்சங்கங்களைச் சில அரசியல் கட்சிகள் ஆதரித்து வருவதால், அச்சங்கங்கள் வளர்ச்சியடைகின்றன. நாடு விடுதலையடைந்த சமயம் அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் (A I T U C) இந்திய கம்யூனிஸ்டு கட்சியால் ஆதிக்கம் செலுத்தப்பட்டு வந்தது. ஒருங்கிணைந்த ஏராளமான தொழிலாளர்களிடமிருந்து அதிகமான வாக்குகளை (Votes) ப் பெறும் நோக்கத்துடன் மற்ற அரசியல் கட்சிகள் சில தொழிற் சங்கங்களைத் தோற்றுவித்தனர். அவைகளின் வளர்ச்சி முன்பே ஆராயப்பட்டுள்ளது. தற்போது இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ்தான் (I N T U C) மற்ற எல்லாத் தொழிற்சங்கங்களைக் காட்டிலும் மிக சக்திவாய்ந்ததாய் அமைந்துள்ளது. ஏனெனில் அச்சங்கத்தின் உறுப்பினர்களின் எண்ணிக்கை மற்ற எல்லாத் தொழிற்சங்கங்களின் உறுப்பினர்களைவிட மிக அதிகமாகும்.

மூன்றாவதாக, மத்திய, மாநில அரசுகள் பதிவு செய்துள்ள தொழிசங்கங்களுக்குப் பல உரிமைகள் சட்டபூர்வமாக அளித்துள்ளதால் தொழிற்சங்கங்களின் வளர்ச்சி அதிகரித்து வருகிறது. 1947-ன் தொழிற்சங்கச் சட்டத்தின் அடிப்படையில் பதிவு செய்துள்ள சங்கங்களுக்கு அநேக உரிமைகள் அளிக்கப் பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, பதிவு செய்துள்ள தொழிற் சங்கங்களை முதலாளிகள் சட்டபூர்வமாய் ஏற்றுக்கொள்ளு கின்றனர். பதிவு செய்துள்ள தொழிற்சங்கங்களின் தொழி லாளர்களை நீதிகோரி தொழில் சட்டமன்றங்கள் (Industrial Tribunals) போன்றவைகளின் முன் நிறுத்த அதிகாரம் பெற்றுள்ளனர். இத்தகைய தொழில் உரிமைகளால் (Industrial privileges) தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சி நாட்டில் தழைத் தோங்கியது.

## இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தின் பிரச்சினைகள்

மேற்கண்ட விளக்கத்திலிருந்து இந்தியாவில் தொழிற் சங்கங்கள் முன்னேற்றமடைந்து வருகின்றனவெனினும், பல்வேறு குறைபாடுகளால் இந்தியத் தொழிற்சங்க இயக்கம் விரைவான வளர்ச்சியைப்பெற முடியவில்லை. தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சிக்குத் தடையாய் இருக்கும் பிரச்சினைகளை இனி ஆராயலாம்.

### (1) குறைந்த தொழிற்சங்க உறுப்பினர்கள்

இந்தியத் தொழிற்சங்கங்கள் நகரங்களில்தான் பெரும்பாலும் தோன்றியுள்ளன. மேலும், மொத்த தொழிலாளர்களில் ஒரு குறைந்த சதவீதத்தினர்தான் அவைகளில் உறுப்பினர்களாய் உள்ளனர். நாட்டின் கிராமப் பகுதிகளில் இவ்வியக்கம் இன்னும் சீராய்ப் பரவவில்லை. அமைப்புடன் உள்ள தொழில்துறையில் கூடத் தொழிற்சங்கத்தில் சேராத உறுப்பினர்கள் ஏராளமாய் உள்ளனர். உதாரணமாக, பருத்தி நெசவுத் தொழிலில் (Cotton textile industry) 12·5 சதவீதத்தினர்தான் தொழிற்சங்கங்களில் உறுப்பினராய் உள்ளனர். அடிப்படைத் தொழில்களில் (Primary industries) 5 சதவீதத்தினர்தான் உறுப்பினர்களாய் உள்ளனர். அத்தகைய சில தொழில்களில் உறுப்பினர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாய் உள்ளது. இரும்பு எஃகு தொழிலில்தான் (Iron and Steel Industry) 70 சதவீதத்தினருக்கு மேல் உறுப்பினர்களாய் உள்ளனர். 1951-ன் கணக்கெடுப்பின்படி (Census) இந்தியா முழுவதிலுள்ள மொத்தத் தொழிலாளர்களாகிய சுமார் 1400 லட்சத்தில் சுமார் 40 லட்சம் பேர்மட்டும்தான் தொழிற்சங்க உறுப்பினர்களாய் உள்ளனர். அதாவது இந்தியாவில் தொழிற் சங்கமயம் (Trade Unionism) சுமார் 3 சதவீதத்திற்குள்தான் உள்ளது. பல்வேறு அரசியல் கட்சிகளின் ஆதிக்கத்தால் தோன்றியுள்ள அநேக போட்டிச் சங்கங்களால் தொழிற்சங்க இயக்கம் சக்தியுடன் வளர்ச்சியடைய முடியவில்லை. வருங்காலத்திலாவது 'ஒரு தொழிலுக்கு ஒரு சங்கம்' என்னும் கொள்கை அமுலாக்கப்பட வேண்டும். தொழிலாளர்களின் ஒற்றுமை ஓங்கிப் பலம்பெற அவர்கள் கட்சி அரசியலிருந்து விடுவிக்கப்பட வேண்டும்.

### (2) நிதிவசதியின்மை

தொழிற்சங்கங்களுக்குக் கிடைக்கும் நிதிவசதி பற்றாக்குறையுடையதாய் உள்ளது. எனவே, சங்கங்களில் அன்றாட வேலைகளைத் திறமையுடன் கவனிக்க முழுநேர ஊழியர்களை வேலைக்கு அமர்த்தச்

சங்கங்களிடம் போதிய நிதிவசதி இல்லை. நிதிப் பற்றுக் குறையின் விளைவாகத் தொழிற் சங்கங்களால் பள்ளிகள், நூலகங்கள், சுகாதார நிலையங்கள் போன்றவைகளை ஏற்படுத்தித் தொழிலாளர் களின் நலம் பேண இயலவில்லை. எனவேதான் தொழிற்சங்கங்கள் போராட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. தொழிலாளர் களின் ஏழ்மை, குறைந்த கூலி, கடன்கள் ஆகிய காரணங்களால் தொழிலாளர்கள் தங்கள் சந்தாத் தொகையைத் ஒழுங்காய்ச் செலுத்துவதில்லை. தொழிற்சங்கங்களின் நன்மைகளை உணர்த்தும் கல்வியைத் தொழிலாளர்கள் கற்கும்படி செய்தால் அவர்கள் ஒழுங்காய்ச் சந்தாத் தொகையைச் செலுத்துவதில் அக்கறை கொள்வர். தொழிலாளர்களுக்குத் தொழிற்சங்கங்களின் நன்மை கள் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பங்குபெறுதல், தொழில் அமைதியை நிலைநிறுத்த வேண்டியதன் அவசியம் போன்ற கருத்துகளை உணரச் செய்ய சமீபத்தில் மத்திய அரசு, 'தொழிலாளர் கல்வித் திட்டம்" (Workers Education Programme) ஒன்றை ஆரம்பித்துள்ளது. இத்தகைய நடவடிக்கைகளால் தொழிற்சங்க இயக்கம் மேலும் வலுப்பெறும்.

(3) தகுந்த அமைப்பில்லாச் சிற்றளவு தொழிற்சங்கங்கள்[1]

நாட்டு விடுதலைக்குப் பின் தொழிற்சங்கங்களின் உறுப்பினர் களின் எண்ணிக்கையைவிடத் தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. 1947-48-ல் தொழிற்சங்கங்களின் சராசரி உறுப்பினர்களின் எண்ணிக்கை சுமார் 1000 ஆகும். ஆனால் 1960-61-ல் அது சுமார் 550 ஆகக் குறைந்தது. அதாவது நாட்டில் தகுந்த அமைப்பில்லாத சிறிய தொழிற்சங்கங்கள் பெரிதும் அதிகரித்து வருகின்றன. சிறிய தொழிற்சங்கங்களால் தொழில் களின் உரிமையாளர்களுடன் கூட்டுப் பேர ஒப்பந்தங்களை மேற்கொள்ள முடியவில்லை. சங்கங்களில் சீரான அமைப்பு இல்லாததால் பெரும்பாலான சங்கங்களில் உறுப்பினர்களிடையே சட்டம் ஒழுங்கு ஆகியவற்றை நிலைநிறுத்த இயலுவதில்லை. சக்தி குறைந்த சங்கங்களால் அரசாங்கத்திடமோ அல்லது முதலாளி களிடமோ தங்கள் கோரிக்கைகளை ஊக்கத்துடன் எடுத்துக் கூற முடிவதில்லை. இத்தகைய சிறிய தொழிற்சங்கங்களைப் பொருத்தமாய் 'வேலை நிறுத்தக் குழுக்கள்' (Strike Committees) என்று கருதலாம். ஏனெனில் இச் சங்கங்கள் முதலாளிகளிடம் தங்கள் கோரிக்கைகளை எடுத்துக் கூறும்வரைக்கும் பல்வேறு நட வடிக்கைகளில் ஈடுபடுகின்றன. தேவைகள் பூர்த்தியான வுடன் இச் சங்கங்கள் செயலிழந்து விடுகின்றன. இச் சங்கங்கள் தொழிலாளர்களின் நலனை அதிகரிக்கும் செயல்களில் ஈடு படாமல்

1 எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம் ப.459.

தொழிலாளர்களின் உற்பத்தித்திறனைக் (Productivity of labour) கருத்தில் கொள்ளாது கூலியை அதிகரிக்கச் செய்யப் போராடுகின்றனர். தொழில் உற்பத்தியைக் அதிகரிக்கும் செயல்களில் சங்கங்கள் அக்கறை செலுத்துவதால், மேற்கு ஜெர்மனி, ரஷ்யா போன்ற நாடுகளில் தொழிற்சங்க இயக்கம் மகத்தான வெற்றியைப் பெற்றுள்ளது. உதாரணமாக, மேற்கு ஜெர்மனியில் தொழிற்சங்கங்கள் சில தொழில்களை அவர்களாகவே நடத்துகின்றனர். மேலும் அங்குள்ள தொழிற்சங்கங்கள் கட்டுமானத் தொழிலிலும் ஈடுபட்டு பிரான்சு போன்ற வெளி நாடுகளிலும் தாங்கள் தொழிலை நடத்திவருகின்றனர். அங்குள்ள தொழிற் சங்கங்கள் கட்சி அரசியல், அரசின் தலையீடு, ஆகியவற்றிலிருந்து விடுபட்டு இயங்கிவருகின்றன. சோவியத் ரஷ்யாவில் தொழிற் சங்கங்கள் சமூக காப்பீட்டுத்திட்டங்களையும் கூட (Social Insurance Schemes) நிர்வகித்து வருகின்றன.

(4) தொழிலாளர்களின் பெயர்ச்சி

இந்தியத் தொழிலாளர்கள் பொதுவாக நெடுங்காலமாய் அலைந்துதிரியும் தன்மை (Migratory character) யுடையவர்களாய் இருந்து வருகின்றனர். அறுவடைகாலமாகிய ஆறு மாதங்கள் கிராமங்களிலும், மற்ற ஆறு மாதம் கிராமங்களில் வேலை இல்லாததால் நகரங்களி லும் தொழிலாளர்கள் காலத்தைச் செலவிடுகின்றனர். தொழிலாளர்களுக்குக் கிராமங்களில் தொடர்பு இருப்பதால்தான் இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம் விரைவான வளர்ச்சியைப் பெற முடியவில்லை. தொழிற்சங்கங்கள் தங்கள் பலத்தால் தொழிலாளர்களின் கூலிகள் அதிகரிக்கச் செய்தால் இக்கிராமத் தொடர்பு நீங்கிதொழில்வளர்ச்சி மேலோங்கி நாடு செழிப்புறும்.

(5) வேலைகொடுப்போரின் மனப்போக்கு (Attitude of Employers)

பொதுவாக இந்திய முதலாளிகள் (Employers) தொழிலாளர்களுக்கும், தொழிற் சங்கங்களுக்கும் எதிராகவே உள்ளனர். தொழிற்சங்கங்களின் ஒற்றுமையைச் சீர்குலைக்கும் நோக்கத்துடன் சங்கங்களின் நடவடிக்கைகளை அறிந்து அவற்றைச் சீர்குலைக்க முதலாளிகள் (Employers) ஒற்றர்களையும், குண்டர்களையும், வேலை நிறுத்தத்தை ஒழிப்போர்களையும் இரகசியமாக வேலைக்கு அமர்த்திக் கொள்கின்றனர். மேலும், நிர்வாகத்தின் கொள்கைகளுக்கு ஆதரவளிக்கும் போட்டித் தொழிற்சங்கங்களையும் முதலாளிகள் ஏற்படுத்துகின்றனர். சில சமயங்களில் தொழிற்சங்கத் தலைவர்களுக்கு லஞ்சம் அளித்து வேலை நிறுத்தத்தை முளையிலேயே கிள்ளி எறிந்து விடுகின்றனர்.

(6) வேறுபட்ட இயல்பு கொண்ட தொழிலாளர்கள்[1] (Heterogenous Nature of Labour)

இந்தியத் தொழிலாளர்கள் சாதி, வகுப்பு, மதம், இனம், மொழி, மரபு, கொள்கை (Creed) ஆகியவைகளால் வேறுபட்டிருப்பதால் இன்னல் ஏற்படுகிறது. இத்தகைய காரணிகளால் இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தின் வளர்ச்சி பெரிதும் பாதிக்கப் பட்டுள்ளது. இத்தகைய தன்மை வேறுபாடுகள் தொழிலாளர்களை அழுத்தமாக ஆட்கொண்டிருப்பதால், தொழிற்சங்கங்களும் இத்தகைய காரணிகளின் அடிப்படையில் அடிக்கடி வேறுபடுத்தப்படுகின்றன. சில சமயங்களில் சில மதங்களைப் பின்பற்றுவோருக்கெனத் தனித் தொழிற்சங்கங்களும் ஏற்படுத்தப்படுகின்றன. இத்தகைய வேறுபாடுகளாலும், அலைந்து திரியும் தன்மையாலும் இந்தியாவில் பெருமளவில் நிலையான தொழில் மக்கட் தொகை (Industrial Population) ஏற்படவில்லை. நிலையான தொழில் வளர்ச்சிக்கு (Stable Industrial development) நிலைபேறுடைய தொழில் மக்கட் தொகை இன்றியமையாததாகும்.

(7) ஓய்வு போதாமை

தொழிற்சங்க இயக்கத்தில் தகுந்த அக்கறையுடனும், ஆர்வமுடனும் ஈடுபடத் தொழிலாளர்களுக்குப் போதிய ஓய்வு கிடைப்பதில்லை. தொழிலாளர்களில் பெரும்பாலோரின் இருப்பிடம் வேலை செய்யுமிடத்திலிருந்து வெகு தூரத்திலிருப்பதால் அவர்களுக்குத் தொழிற்சங்க நடவடிக்கைகளில் பங்கு கொள்ள ஓய்வு நேரம் கிடைப்பதில்லை. வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது அவர்களின் சக்தி குறைந்து விடுவதால், தொழிற்சங்கச் செயல்களில் அக்கறையுடன் ஈடுபட ஆர்வமிழந்து விடுகின்றனர்.

(8) தவறான முறையில் தொழிலாளர்களைத் தேர்ந்தெடுத்தல்

சமீப காலம் வரையிலும், தொழில் துறைக்கு வேண்டிய தொழிலாளர், நடுவர்கள் (Jobbers) மூலம் தேர்ந்தெடுக்கப் பட்டனர். இந்த நடுவர்கள் தொழிலாளர்கள் தொழிற்சங்கங்கள் போன்ற அமைப்புகளில் பங்கு கொள்வதை விரும்புவதில்லை. எனவே, தொழிலாளர் சங்கங்களின் உறுப்பினர்களாவதற்கு அவர்கள் ஊக்கமளிப்பதில்லை. மேலும் ஏராளமான தொழிலாளர்கள் தாற்காலிக முறையில் தற்செயல் பணியாளர்களாகப் (Casual workers) பணி புரிவதால் தொழிலில் நிரந்தரத் தொழிலாளர்களின் ஒன்றுபட்ட எழுச்சி ஏற்படத் தகுந்த வாய்ப்பில்லை.

1 எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம், ப 460.

(9) கல்வியறிவு இன்மை (Illiteracy)

கல்வியறிவு இன்மையாலும், அறியாமையினாலும் தொழிலாளர்களிடையே மக்களாட்சி உணர்வு (Democratic Spirit) ஏற்படவில்லை. தலைவிதி என்று ஒன்று இருப்பதால்தான் தங்களுக்குத் துன்பங்கள் ஏற்படுகின்றன என்றும், மனித முயற்சியால் தங்கள் இன்னல்களை நீக்க இயலாது என்றும் அவர்களில் பெரும்பாலோர் கருதுகின்றனர். இந்தியாவில் ஆங்கிலேயர் ஆட்சி நெடுங்காலம் வரை இருந்ததால் இந்தியத் தொழிலாளர்களிடையே அது அடிமை மனப்பான்மையை வளர்த்துவிட்டது. எனவேதான் அவர்களின் பொருளாதார நிலையை மேம்படுத்த பல்வேறு முயற்சிகள் எடுக்கப்பட்டாலும், அதில் அவர்கள் தீவிர அக்கறை கொள்வதில்லை. தொழிலாளர்கள் தங்கள் அறியாமையால் கடினமான தொழிற்சங்கச் சட்டங்களை உணர இயலாத நிலை உள்ளதால் அரசியல்வாதிகள், வழக்கறிஞர்கள் போன்ற சங்கங்களுக்கு வெளிப்பட்டவர்கள் தொழிற்சங்கத் தலைவர்களாகின்றனர். சங்கங்களுக்கு வெளிப்பட்டவர்களின் தொடர்பாலும் தலையீட்டாலும் தொழிற்சங்க இயக்கத்திற்குக் குந்தகம் ஏற்படுகிறது. சங்கங்களுக்கு வெளிப்பட்டவகளுக்குச் சம்பந்தப்பட்ட தொழில்களின் உண்மையான நுட்ப அறிவு இருப்பதில்லை. மேலும், அவர்கள் பல தொழிற்சங்கங்களுக்குத் தலைவர்களாயிருப்பதால், தங்கள் கட்டுப்பாட்டிலிருக்கும் எல்லாச் சங்கங்களின் பிரச்சினைகளிலும் தகுந்த அக்கறை காட்ட முடிவதில்லை. தொழில் பிரச்சினைகளைப் பெரும்பாலான தலைவர்கள் அனுதாபத்துடன் தீர்க்க முயலுவதில்லை.

(10) அரசியல் கட்சிகளின் ஆதிக்கம்[1] (Political Influence)

இந்திய அரசியல் கட்சிகளில் ஏறக்குறைய எல்லாக் கட்சிகளும் தொழிலாளர் இயக்கங்களில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளுகின்றன. அரசியல் வாதிகள் தொழிலாளர்களுக்கு வீணான உயர்ந்த நம்பிக்கைகளை ஊட்டி அவர்களை வேலைநிறுத்தம், அடைப்பு (Bandh) போன்றவைகளில் ஈடுபடச் செய்து, தங்கள் அரசியல் கட்சிகளை வளர்த்துக் கொள்ளும் சுயநலவாதிகளாய் உள்ளனர். இதன் விளைவாகத் தொழிற்சங்கத்தினுள்ளே அரசியல் அபிப்பிராய பேதங்கள் காரணமாக உட்பிரிவு ஏற்படுகிறது. இது தொழிலாளர்களின் ஒத்துழைப்பையும், ஒற்றுமையையும் குலைத்து விடுகிறது. தலைவர்களில் பெரும்பாலோர் தொழிலாளர்களின் மேன்மையில் அக்கறை கொள்ளாமல் தங்கள் அரசியல் கட்சிகளை வளர்ப்பதையே முக்கிய நோக்கமாகக் கருதுகின்றனர். இத்

1 எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம், ப. 461.

தகைய அரசியல் கட்சிகளின் ஆதிக்கத்திற்குட்பட்டுள்ள தொழிற் சங்கங்கள் தேசிய நலனில் அக்கறை கொண்டு பணியாற்ற இயலாது. எனவே தொழிற்சங்கங்கள் அரசியல் கட்சிச் சார்பற்றவைகளாக ஆக்கப்பட்டால்தான் அவைகள் சக்திபெற்று வளர்ச்சியடைய முடியும்.

### தொழிற்சங்கக் குறைபாடுகளைத் தீர்க்கும் வகைகள் (Suggestions for Removing the Defects of Trade Unions)

இந்தியத் தொழிற்சங்க இயக்கம் பலப்படுத்தப்பட்டு ஒருங்கிணைக்கப் படவேண்டியது இன்றியமையாததாகும். வலுப்பெற்ற தொழிற்சங்கங்கள்தான் சக்தி வாய்ந்த நிர்வாகங்களுடன் கூட்டுப் பேரத்தின் மூலம் நல்ல பலனை எதிர்பார்க்க முடியும். வி. வி. கிரி அவர்கள் குறிப்பிடுவது போல்[1] இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தில் உள்ள மூன்று முக்கிய குறைகளாகிய (1) சிற்றளவுச் சங்கங்கள் (2) நிதிவசதியின்மை (3) முழுநேர ஊழியர்கள் இன்மை போன்ற பிரச்சினைகள் உடனடியாகத் தீர்க்கப் படவேண்டும். "தொழிற் சங்கத்தில் ஒற்றுமையும் பலமும் இல்லையெனில் மக்களாட்சிப் பொதுநலத் தொழிலமைப்பின் அடித்தளம் பலமின்றி இருக்கும்" என வி. வி. கிரி அவர்கள் கூறுகின்றார்.[2] இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அறிக்கையில் குறிப்பிட்டிருப்பது போல் "எண்ணற்ற சங்கங்கள், அரசியல் பகைமை, நிதி வசதியின்மை, தொழிலாளர்கட்கிடையே ஒற்றுமையின்மை முதலியவை தொழிற்சங்கங்களின் வலுவின்மையைக் காட்டுகின்றன."[3] கூட்டுப் பேர முறையை, பிரபல்யப்படுத்தி, அரசியல் ஜனநாயகத்தை (Political Democracy) நிலை நிறுத்தி, தொழிற்சங்க இயக்கத்தைச் சீரான வளர்ச்சியடையச் செய்யக் கீழ்க்கண்ட வழிமுறைகளைக் கையாளலாம்.

### (1) ஒருதொழிலுக்கு ஒரு சங்கம் (One Union in one Industry)

தற்போது ஒரு தொழிலிலேயே பல்வேறு வகையான சங்கங்கள் இருந்து வருகின்றன. இதனால் சங்கங்களுக்குள் அடிக்கடி போட்டியேற்பட்டுத் தொழிற்சங்க இயக்கத்தின் வலிமையும் சீரான வளர்ச்சியும் பாதிக்கப்படுகிறது. கட்சியின் அடிப்படையில் பல்வேறு சங்கங்கள் இருப்பதால் தொழிலாளர்களின் நலன் கவனிக்கப்படுவதில்லை. 'ஒரு தொழிலில் ஒரு சங்கம்' இருக்க வேண்டுமென்றால் தொழிற் சங்கங்கள் அரசியல் கட்சிகளின்

1 வி. வி. கிரி, இந்தியத் தொழிலில் தொழிலாளர் பிரச்சினைகள், ப. 42.
2 ,, ,, ,, ப. 44
3 இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் ப. 572.

ஆதிக்கத்திலிருந்து முழுவதுமாக விடுபட்டு விலகி இருக்க வேண்டும்.

(2) சங்கங்களிடையே ஏற்படும் போட்டியை நீக்குதல்[1] (Removal of Inter Union rivalries)

ஒரே தொழில் நிறுவனத்தில் ஏராளமான சங்கங்கள் இருப்பதால் சங்கங்களிடையே மோதல் ஏற்பட்டுத் தொழிற்சங்க இயக்கத்தின் அடித்தளம் வலுவற்றுப் போய்விடுகிறது. மேலும், அது கூட்டுப் பேர சக்தியைப் பலவீனப்படுத்தி, தொழிலாளர்கள் தங்கள் நியாயமான உரிமைகளை முதலாளிகளிடம் திறம்பட எடுத்துக் கூறுவது பாதிக்கப்படுகிறது. சங்கங்களிடையே போட்டி ஏற்படாமலிருக்கும் வகையில், 1958-ல் அறிவிக்கப்பட்ட ஒருபொது ஒழுக்க விதிமுறை (Common Code of Conduct) இந்தியாவிலுள்ள எல்லாத் தொழிற்சங்கங்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அவ் விதிமுறையின் அடிப்படைக் கொள்கைகளாவன: (1) ஒரு தொழிலாளி தன் விருப்பப்படி எந்த ஒரு தொழிற்சங்கத்திலும் சேர்ந்துகொள்ள உரிமை உண்டு. எந்த ஒரு தொழிற்சங்கமும் இதில் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தக் கூடாது. (2) ஒரு தொழிலாளி இரு சங்கங்களில் உறுப்பினராக இருக்க முடியாது. (3) தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகள், செயற்குழு உறுப்பினர்களை மக்களாட்சித் தேர்தல்கள் (Democratic Elections) மூலம் தேர்ந்தெடுக்க வேண்டும். (4) சங்கங்கள் ஒழுங்காய் ஜனநாயக முறைப்படி பணிபுரிய வேண்டும். (5) தொழிலாளர்களின் அறியாமை, பின்தங்கிய நிலை ஆகிய காரணங்களைப் பயன்படுத்தி எந்தச் சங்கமும் தொழிலாளர்களைச் சுரண்டுதல் கூடாது. எந்த ஸ்தாபனமும் அவர்களிடமிருந்து அதிகமாக எதையும் எதிர் பார்க்கக் கூடாது. (6) எல்லாச் சங்கங்களும் சாதி, மத, இட பேதங்களை நீக்கிவிட வேண்டும். (7) சங்கங்களிடையே ஏற்படும் நடவடிக்கைகளில் வன்மை, அதிகாரத் திணிப்பு, பயமுறுத்தல் போன்ற செயல்கள் நீங்க வேண்டும். இவ் விதிகளை நடைமுறைப் படுத்த அவசியமான நிர்வாக அமைப்பு இன்மையால் கொள்கை யளவில் ஏற்றுக் கொள்ளப்பட்ட விதிகள் அமுலாக்கப்படவில்லை. எனவே, இதற்குத் தேவையான நிர்வாக அமைப்பை அரசு ஏற்படுத்தினால்தான் தொழிற்சங்க இயக்கம் வலுப்பெற்று வளர்ச்சியடையும்.

(3) வெளியாள்களின் தலையீடுகள்

தொழிற்சங்கங்களின் தலைவர்களாக இருக்கும் வெளியாள்களை (Outsiders) படிப்படியாகச் சங்கப் பணிகளிலிருந்து குறைத்து

[1] எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம், ப. 462.

விடுவது அவசியமாகும். ஏனெனில் சங்கங்களிடையே போட்டியும் சச்சரவும் ஏற்படுவதற்குப் பெரும்பாலும் வெளியாள்களின் தலைமையே காரணமாகும். இதைக் கருத்தில் கொண்டுதான் ஒரு தொழிற்சங்கத்தில் வெளியாள்களின் எண்ணிக்கை நான்கிற்கு மேல் இருக்கலாகாது; அல்லது மொத்தச் செயற்குழு உறுப்பினர்களில் நான்கில் ஒரு பங்கு வெளியாள்கள் இருக்கலாம் என்ற கொள்கையைக் கொண்ட இந்தியத் தொழிற்சங்க மசோதா 1950-ல் உட்புகுத்தப்பட்டது. ஆனால், 1950-ல் நாடாளுமன்ற நடவடிக்கைகள் முடிவுற்றதால் அச் சட்டம் செயலிழந்தது. அந்த மசோதாவை இந்திய அரசு உயிர்பித்துச் சட்டமாக்கினால் தொழிலாளர்களுள் திறமையானவர்கள் தங்கள் சங்கங்களின் தலைவர்களாக வாய்ப்பு ஏற்படும்.

(4) அரசியலின் பங்கு

தொழிற்சங்க அரசியல் தலைவர்களின் அரசியல் கட்சி நடவடிக்கைகளுக்காகத் தொழிலாளர்கள் தங்களையே அடைமானமாக வைக்கும்நிலை நீக்கப்பட வேண்டும். அதற்காகத் தொழிலாளர்கள் நாட்டின் அரசியல் செயல் முறைகளில் பங்கு பெறக்கூடாது என்பது அர்த்தமல்ல. அதாவது தொழிலாளர்கள் ஒரு வகுப்பாக அரசியல் இயக்கத்திலிருந்து விலகி இருக்கவேண்டியது அவசியமாகும். நாட்டுப் பிரஜைகளாக அவர்கள் விரும்புகிற கட்சியைப் பின்பற்றவோ, அதற்கு வாக்களிக்கவோ அவர்களுக்கு முழு உரிமை உண்டு.

(5) தொழிற்சங்க ஊழியர் பயிற்சி[1]

தொழிற்சங்க நிர்வாகத்தில் வெளியாள்களின் தலையீட்டால் ஏற்படும் பல்வேறு குறைகளை நீக்கத் தொழிலாளர் வகுப்பிலிருந்தே தலைவர்கள் தோன்றத் தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியது இன்றியமையாததாகும். நேர்மை, உரிமையை நேசித்தல், பொறுமை உணர்வு, கடின உழைப்பு, ஊக்கம் போன்றவைகள் தலைவர்களிடம் இருக்கவேண்டிய சில இன்றியமையா இயல்புகளாகும். எனவே, இத்தகைய சீரியல்புகளும், தொழிற் கொள்கைகள், சட்டம், நிதிநிலை, குறித்த ஒரு தொழிலின் பிரச்சினைகள் போன்றவைகளில் நெருங்கிய நுண்ணறிவும் பெற்றுள்ள தொழிலாளர்களால் சங்கங்கள் நடத்தப்படவேண்டும். தங்களுக்கு எதிரில் நேருக்கு நேர் அமர்ந்து பேரம் நடத்தும் முதலாளியின் நுண்ணறிவு, மனவலிமை, பகுத்தறிவுக்குச் சமமாகத் தொழிலாளர்களின் தரமும் உயர வேண்டியது இன்றியமையாததாகும். தொழிலாளர்களைத் தலைவர்களாகும்

[1] எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம் ப. 464

படி ஊக்குவிக்கத் தொழிற்சங்க ஊழியர்களுக்குத் தகுந்த பயிற்சி வசதிகளை ஏற்படுத்த வேண்டியது மிகவும் அவசியமாகும். இதைக் கருத்தில் கொண்டு தொழிலாளர்களுக்குப் பயிற்சி அளிக்கும் ஆக்ஸ்போடு ரஸ்கின் கல்லூரியைப் போல் (Ruskin College at-Oxford) ஒரு கல்லூரியை இந்தியாவிலும் ஏற்படுத்த வேண்டும். இந்திய அரசும் கல்கத்தாவில் ஆசிய தொழிற்சங்கக் கல்லூரியை (Asian Trade Union College) ஏற்படுத்தித் தொழிற்சங்கக் கல்வியைப் புகட்ட வகை செய்துள்ளது. இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மத்தியத் தொழிற்பகுதியிலும் அத்தகைய ஒரு கல்லூரியை ஏற்படுத்த வேண்டியது அவசியமாகும். மத்திய அரசின் தொழிலாளர் கல்வித்திட்டம் (Worker's Education Programmes) மேலும் பரவலாக்கப்பட்டால் தொழிலார்களுக்குத் தகுந்த கல்வி புகட்டப் பெருந்துணையாக இருக்கும்.

(6) வேறுபட்ட தொழிற்சங்க நடவடிக்கைகள்

தொழிற்சங்கங்கள் முடிந்தவரை போராட்ட மனப் போக்கை விட்டுவிட வேண்டும். எப்போதும் வேலைநிறுத்தம் என்ற ஆயுதத்தையே பயன்படுத்த நினைப்பது சிறந்ததாகாது. அவைகள் வேலை நிறுத்தக் குழுக்களாக (Strike Committees) இருப்பதைக் கைவிட வேண்டும். தொழிலாளர்களின் உற்பத்தித்திறன் (Productivity) அதிகரிக்காமல் கூலி மட்டும் அதிகரிக்கச் செய்தால் அவர்களின் பொருளாதார நிலை உயராது என்பதை அவர்கள் உணரச் செய்ய வேண்டும். உற்பத்தி அதிகரித்தால், லாபம் அதிகரித்துத் தொழிலாளர்களின் மெய்க் கூலி (Real Wages) அதிகரித்து அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரும். எனவே அவர்கள் உற்பத்தியை அதிகரிப்பதில் அக்கறை கொள்ளச் செய்ய வேண்டும். நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பங்கேற்றல் கூட்டுப்பேர ஒப்பந்தங்கள், தொழில் சச்சரவின்போது (Industrial Disputes) சுய சமாதானம் (Volunntary Conciliation) போன்றவைகளால் உற்பத்தி பாதிக்கப்படாமல் அதிகரிக்கச் செய்ய முடியும். ஜப்பானில் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே சச்சரவு ஏற்பட்டால் தொழிற்சங்கத்தலைவர்கள், நிர்வாகத்தினர்களிடையே நேரிடைப் பேச்சுவார்த்தை நடைபெறுகிறது. 'இந்தியத் தொழிலாளர்கள் ஒவ்வொன்றிற்கும் வேலைநிறுத்தம் செய்வதைப்போல் இல்லாமல் ஜப்பானியர்கள் முடிந்தவரை வேலையை நிறுத்துவதில்லை. கடைசி ஆயுதமாக மட்டுந்தான் அவர்கள் வேலைநிறுத்தம் செய்கின்றனர். அத்தகைய மனப்பான்மை ஏற்பட்டால்தான் தொழில் அமைதி நிலையாக ஏற்படும். மேலும், தொழிற்சங்கங்கள் கல்வி, சுகாதாரம், பொழுதுபோக்கு, வீட்டுவசதி போன்ற மற்றத் தொழிலாளர் நல நடவடிக்கைகளையும் விரிவாக்க வேண்டும். தொழில்

அமைதியுள்ள சாதாரண காலங்களில் தொழிலாளர்களை ஒருங்கிணைத்துக் கூட்டங்கள் நடத்தி அவர்களைக் கல்வி பயிலச்செய்யும் நடவடிக்கைகளையும் சங்கங்கள் மேற் கொள்ள வேண்டும். தொழில் ஜனநாயகம் (Industrial Democracy) ஏற்படுத்தத் தொழிலாளருக்கு ஒழுக்கம், பொறுப்பு இவற்றையும் உணர்த்தவேண்டும். வி.வி.கிரி அவர்கள் குறிப்பிடுவதுபோல், "சமதர்மம் (Socialism) அமைவதற்குத் தொழில் ஜனநாயகம் (Industrial Democracy) தேவை. இதற்கு ஒழுக்கமும், திறமையும், நேர்மையும் கொண்ட உழைப்பும் அவசியமாகும்."

(7) சிறிய சங்கங்கள் ஒருங்கிணைதல் (Amalgamation of Small Trade Unions)

சிறிய தொழிற்சங்கங்கள் அமைப்பு, நிதிவசதியும், தக்க தலைவர்களும் இன்மையால் சீரானமுறையில் ஆக்கப் பணிகளை மேற்கொள்ள முடிவதில்லை. இதனுல் தொழிற் சங்கங்களில் தொழிலாளர்களின் நம்பிக்கை குறைகிறது. எனவே, சிறிய சங்கங்கள் சக்தி, நிலையான வளர்ச்சி, இன்னல்களைத் தாங்கும் வலிமை (Viability) ஆகியவைகளைப் பெற மற்றத் தொழிற்சங்கங்களுடன் இணைந்து கொள்ள விரும்பவேண்டும். அப்போதுதான் தொழிற்சங்க இயக்கம் வலுப்பெறும்.

(8) நிதிவசதி

போதிய நிதிவசதியின்மையால் தொழிற்சங்க இயக்கம் ஆக்கப் பணிகளைத் திறம்பட மேற்கொள்ள முடியவில்லை. அதிகமான தொழிலாளர்களை உறுப்பினர்களாக்கத் தொழிற்சங்கங்கள் ஒரு சிறிய தொகையைச் சந்தாவாகக் (Subscriptions) குறிக்கின்றனர். அந்தச் சிறிய தொகையையும் உறுப்பினர்கள் ஒழுங்காய்ச் செலுத்துவதில்லை. தொழிலாளர்களின் ஒரு சில குறைகளைப் போக்கும் நோக்கோடு அவர்களிடமிருந்து நன்கொடைகள் (Donations) வாங்கப்படுகின்றன. சங்கங்களின் வசூல் செய்யும் முறை வலுப்பெற வேண்டும். தற்போதுள்ள சந்தாத் தொகையை மாற்றியமைத்து மாதந்தோறும் ஒரு குறித்த சந்தாவீதம் கூலியிலிருந்து பிடிக்கப்பட வகைசெய்ய வேண்டும். நிலையான நிதிவசதி இருந்தால்தான் ஆக்கப்பணிகளை மேற்கொள்ளப் பயிற்சி பெற்ற முழுநேர ஊழியர்களைச் சங்கங்கள் வேலைக்கமர்த்த முடியும். இதைக் கருத்தில் கொண்டு, தேசிய தொழிற்சங்க அமைப்புகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு தனிநிறுவனமாகித் தொழிலாளர்களின் நலன், மேம்பாடு ஆகியவற்றிற்கான குறித்த சில திட்டங்களை மேற்கொள்ள வேண்டும். தொழிற்சங்கங்களின் நிதி வசதிகளை வலுவடையச் செய்ய 1959-ல் நடைபெற்ற 17-வது

இந்தியத் தொழிலாளர் மாநாடு (17th Indian Labour Confernce) மாதமொன்றுக்குக் குறைந்தது 4 அணுவாவது சந்தாவாகச் சங்கங்கள் வசூலிக்க வேண்டுமென்று கருத்துத் தெரிவித்தது. இது மாதந்தோறும் 50 காசுகளாகப் பின் உயர்த்தப்பட்டது. இதைச் சங்கங்கள் கொள்கை அளவில் ஏற்றுக் கொண்டனவே அன்றி நடைமுறைப் படுத்தவில்லை.

(9) தொழிற்சங்கங்களை முதலாளிகள் அங்கீகரித்தல்[1]
(Recognition of Trade Unions)

முதலாளிகளால் அங்கீகரிக்கப்பட்ட தொழிற்சங்கங்களுக்கு 1947-ன் தொழிற்சங்கச் சட்டப்படி அநேக உரிமைகள் அளிக்கப் பட்டுள்ளன. அதனால்தான் தொழிற்சங்கங்களை முதலாளிகள் கட்டாயமாக அங்கீகரிக்கும் முறையைச் சிலர் ஆதரிக்கின்றனர். 1947-ன் சட்டப்படி பிரதிநிதித்துவம் பெற்ற தொழிற்சங்கங்களை முதலாளிகள் கட்டயமாக அங்கிரிக்கும் கொள்கை அமுலாக்கப் பட்டது. அச் சட்டபடி சங்கங்களை அங்கீகரிக்காத முதலாளிகள் மீது அபராதம் விதிக்கப்படலாம். 1959-ல் நடைபெற்ற இந்தியத் தொழிலாளர் மாநாட்டிலும் சில கொள்கைகள் தீர்மானிக்கப் பட்டன. அதன்படி ஒரு தொழிலில் ஒரு சங்கமிருந்தாலும் அதில் 15 சதவீதத்திற்கும் குறைந்த உறுப்பினர்கள் இருந்தாலும் அச் சங்கத்தை முதலாளிகள் அங்கீகரிக்க வேண்டுமென்று பரிந்துரைக் கப்பட்டது. சங்கங்கள் முதலாளிகளால் அங்கீகரிக்கப்பட்டால் தான் வலுப்பெற்று வளர்ச்சியடைய முடியும்.

(10) முழுமையான சட்டமியற்றல்[2]

தொழிலாளர்களின் எல்லாவகை நலன்களையும் உள்ளடக்கிய முழுமையான சட்டம் (Comprehensive Legislation) ஏற்படுத்தப் பட வேண்டும். தற்போது அமுலிலுள்ள தொழிற்சங்கச் சட்டம் 1926-ல் நடை முறைப்படுத்தப்பட்டது. அதில் தொழிற்சங்கங் களைப் பதிவு செய்தல், பதிவு செய்த சங்கங்களின் உரிமைகள், சலுகைகள், போன்ற சில அம்சங்களின் நிபந்தனைகள் உள்ளடங்கின. அதில் 1950-ன் தொழிற்சங்க மசோதாவின் அம்சங்களும் உள்ளடக்கப்படவேண்டும். வெளியாளர்களின் எண்ணிக்கை, சங்கங்களை ஆய்வு செய்தல், உறுப்பினர்களின் எண்ணிக்கை, சங்கங்களின் கணக்கு வழக்குகளைப் பராமரித்தல் போன்ற அம்சங்களை உள்ளடக்கும் முழுமையான தொழிற்சங்கச் சட்டமொன்று நிறைவேற்றுப்பட வேண்டியது இன்றியமையாத தாகும்.

1 எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம், ப. 465.
2 எஸ். சி. குச்சால், இந்தியத் தொழிற் பொருளாதாரம், ப. 466.

## முடிவுரை

மேற்கூறப்பட்ட கருத்துரைகளில் சில திறம்படப் பின்பற்றப் பட்டால் வருங்காலத்தில் இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம் உன்னத நிலையை அடையும். இந்திய அரசும், தொழிற்சங்கங்கள் வலுப் பெற்று வளர்ச்சியடையச் செய்ய மேற்கொண்டுவரும் நடவடிக்கைகளும் ஆறுதல் அளிப்பவைகளாய் உள்ளன. இதன் விளைவாகத் தொழில் வளர்ச்சி மேலோங்குமென்பது திண்ணம்.

# 52. இந்தியாவில் தொழிலாளர் சட்டங்கள்

## (Labour Legislation in India)

இந்தியாவில் தொழில் தகராறுகளைத் தீர்க்கவும், தொழிற் கூடங்களைச் சீரமைக்கவும், சமுதாயக் காப்பீட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் தொழிலாளர் சட்டங்கள் இயற்றப்பட்டன. அவ்வப்போது இருக்கும் சூழ்நிலைமைக்கேற்ப இயற்றப்பட்ட சட்டங்கள் தொழிற் பிரச்சினைகளை ஓரளவு குறைத்து, தொழில் வளர்ச்சியைப் பேணிக்காக்கப் பெருந்துணை புரிந்துள்ளன. சட்டங்களை இயற்றி அமுலாக்குவதால் மட்டும் தொழிற் பிரச்சினைகளைத் தீர்க்க முடிவதில்லை. முதலாளிகட்கும் தொழிலாளி கட்குமிடையே நல்லெண்ணம் ஏற்பட்டுச் சமரசம் நிலவினால்தான் தொழில் உற்பத்தி மேம்பட்டு, தேசிய வருமானம் அதிகரித்து, சமுதாய முன்னேற்றம் ஏற்படும். தொழிலாளர் சட்டங்களின் மூலம் தொழில் அமைதியும், சமுதாயப் பாதுகாப்பும் மேம்பட அரசு அக்கறையுடன் நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. ஒவ்வொரு காரணத்திற்காகவும் இயற்றப்பட்ட தொழிலாளர் சட்டங்களின் விதிமுறைகளை இனி ஆராயலாம். முதலில் தொழில் தகராறுகளைத் தீர்க்க நிறைவேற்றப்பட்ட சட்டங்களைக் காணலாம்.

### I. தொழில் தகராறுகளும் சட்டங்களும்
(Industrial Disputes and Legislations)

தொழில் வளர்ச்சி மேம்பாட்டிற்கும் தொழிலாளர்-முதலாளி உறவு சீராயும், அமைதியாயும் இருத்தல் அவசியமாகும். முதலாளிகட்கும் தொழிலாளிகட்குமிடையே ஏற்படும் சச்சரவு களைத்தான் தொழில் தகராறுகள் என்கிறோம். தொழில் சச்சரவு களின் விளைவாக வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள், 'கேரோ' இயக்கம் (Gherao Movement), ஹர்தால் அல்லது பந்த் (Bandh)

ஆகியவைகள் ஏற்பட்டு, நாட்டில் உற்பத்தி தடைபடுகிறது. இதன் விளைவாக ஐந்தாண்டுத் திட்டங்களில் குறிக்கப்படும் தொழில் உற்பத்தி இலக்குகளைச் சாதிக்க இயலுவதில்லை. தொழில் அமைதியால்தான் நாட்டில் செழிப்பும், பொருளாதார வளர்ச்சியும் மேலோங்கும். எனவேதான் முதலாளிகட்கும் தொழிலாளிகட்கு மிடையே கூட்டுறவும் ஒத்துழைப்பும் இன்றியமையாததாக உள்ளது. ஒவ்வொரு தொழிலாளியும் தான் வேலைசெய்யும் தொழில் நிறுவனத்தின் சக சொந்தக்காரன் என்பதை உணரச் செய்யவேண்டும். ஒவ்வொரு முதலாளியும் தொழிலாளர்களுடன் பணிபுரியும் சக தொழிலாளி என்றும் உணரவேண்டும். நாடு விடுதலை அடைந்தபின் இந்தியாவில் வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள் போன்ற ஏராளமான தொழில் தகராறுகள் ஏற்பட்டன. இதன் விளைவாக 1947-ல் சுமார் 17 மில்லியன் மனித வேலை நாள்கள் (Man days) இழக்கப்பட்டன. இதன் காரணங்களாவன: முதலாவதாக, பொருள்களின் விலைகள் அதிகரித்ததால் தொழிலாளர்கள் அதிக கூலிகள் கேட்டுப் போராடினர். இரண்டாவதாக, நாடு அரசியல் விடுதலையடைந்ததும் தொழிலாளர்கள் அதிக நன்மைகளை எதிர்பார்த்தனர். மூன்றாவதாக, நாட்டுப் பிரிவினையின் விளைவாகப் பொருள்களுக்குத் தட்டுப்பாடு ஏற்பட்டுத் தொழிலாளர்கள் திருப்தியின்றி இருந்தனர். எனவே, இழக்கப்பட்ட மனித வேலை நாள்கள் அதிகமாயின.

தொழில் தகராறுகளின் எண்ணிக்கைகளைக் குறைக்க டிசம்பர் 1947-ல் அரசு ஒரு தொழில் ஒப்பந்த மாநாட்டை (Industrial Truce Conference)க் கூட்டி—முதலாளிகள், தொழிலாளிகள், அரசு ஆகியவர்களின் பிரதிநிதிகள் முன்னிலையில்—தொழில் சச்சரவுகளைத் தீர்க்க ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அத் தீர்மானத்தின்படி, "முதலாளிகள், தொழிலில் தொழிலாளர்களின் முக்கியமான பங்கை அங்கீகரித்து அவர்களுக்கு நியாயமான கூலிகள், வேலை அமைப்பு ஆகியவற்றை அளிக்கவேண்டும்." "அதேபோல் தொழிலாளர்களும் தங்கள் கடமையை உணர்ந்து, தேசிய வருவாயை அதிகரித்து, வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உழைக்கவேண்டும். பரஸ்பரப் பேச்சுக்கள் மூலம் முதலாளிகளும் தொழிலாளிகளும் தங்கள் பொதுப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளவேண்டும்."

1948-க்கும் 1949-க்கும் இடைப்பட்ட காலத்தில், மேற்குறிப்பிட்ட மாநாட்டுத் தீர்மானத்தின் விளைவால் தொழில் உறவு சீரடைந்தது. ஆனால், 1950-ல் தொழில் உறவு மோசமடைந்ததால் 13 மில்லியன் மனித வேலை நாள்கள் இழக்கப்பட்டன. 1951-க்கும் 1954-க்கும் இடைப்பட்ட நான்கு ஆண்டுகளில்

உபரி வேளாண்மைச் சாகுபடியால் நாட்டில் தொழில் அமைதி ஏற்பட்டது. ஆனால் 1955-க்கும் 1958-க்கும் இடைப்பட்ட அடுத்த நான்கு ஆண்டுகளில் தொழில் உறவு சீர்கேடுற்றது. 1958-ம் ஆண்டு மட்டும் இழக்கப்பட்ட மனித வேலை நாள்கள் இருமடங்காக (8 மில்லியன்) அதிகரித்தது. தொழில் உறவைச் சீர்படுத்த நாட்டிலுள்ள தொழிற்சங்கங்கள் ஓர் ஒழுங்கு விதிமுறையை (Code of Discipline) ஜுலை 1958-ல் ஏற்படுத்தின. 1962-ல் ஏற்பட்ட சீனப் படையெடுப்பிற்குப் பின் முதலாளி—தொழிலாளர் உறவு சீரடைந்தது. அதன் விளைவாகத் தடையில்லாத் தொழிலாளர் உழைப்பும், உற்பத்தி அதிகரிப்பும் ஏற்பட்டது. ஆனால், 1965 லிருந்து நிலைமை மீண்டும் சீர்கேடுற்றது. அந்த ஆண்டில் மட்டும் 1835 தொழில் தகராறுகள் ஏற்பட்டு 65 லட்சம் மனித வேலை நாள்கள் இழக்கப்பட்டன. இந்தியாவில் ஏற்பட்ட தொழில் தகராறுகளின் எண்ணிக்கை விவரங்களைக் கீழ்க்கண்ட அட்டவணை விளக்குகிறது.

## இந்தியாவில் தொழில் தகராறுகள்

| வருடம் | தொழில் தகராறுகளின் எண்ணிக்கை | பங்குபெற்ற தொழிலாளர்கள் (லட்சங்களில்) | இழந்த மனித வேலைநாள்கள் (லட்சங்களில்) |
|---|---|---|---|
| 1947 | 1,811 | 18 | 166 |
| 1951 | 1,071 | 7 | 38 |
| 1961 | 1,357 | 5 | 49 |
| 1965 | 1,835 | 10 | 65 |
| 1969 | 2,627 | 18 | 190 |

ஆதாரம்:- 1. இந்தியப் பொருளாதாரத்தின் அடிப்படைப் புள்ளி விவரங்கள் (திட்டக் குழு) டிசம்பர், 1966.
2. இந்தியத் தொழிலாளர் புள்ளி விவரங்கள், இந்தியத் தொழிலாளர் அறிக்கை.

### தொழில் தகராறு ஏற்படக் காரணங்கள்

பொதுவாக நான்கு முக்கிய காரணங்களால் இந்தியாவில் தொழில் தகராறுகள் ஏற்படுகின்றன. அவைகளாவன: (1) கூலிகள், போனஸ் கேட்பது (2) வேலைக் குறைப்பு (Retrenchment) தனிநபர் காரணங்கள் (3) வேலை வசதிகள் (Working Conditions) (4) அரசியல் போன்ற மற்றக் காரணங்கள்.

(1) இந்தியாவில் கூலி, போனசு முதலியவற்றில் உயர்வு கோரி தொழில் தகராறுகள் மிக அதிகமாக ஏற்பட்டுள்ளன. 35%க்கும் 45% க்கும் இடைப்பட்ட தகராறுகள் அதிக கூலியோ அல்லது போனஸோ கேட்டதின் விளைவாக ஏற்பட்டதாகும். இந்த வகையில் ஏற்படும் தொழில் அமைதியின்மைக்கு அரசின் தகுந்த கட்டுப்பாடின்மை காரணமாகக் கூறப்படுகிறது. அரசு ஒரு குறித்த கூலிக் கொள்கையைக் கடைப்பிடித்து, விலைகள் உயரா வண்ணம் கட்டுப்பாடு விதித்து, நாட்டில் வாழ்க்கைச் செலவு அதிகரிக்காமல் இருக்கத் தகுந்த கண்காணிப்புடன் செயல்பட்டிருந்தால் இவ் வகையில் ஏற்படும் வேலை நிறுத்தங்களைக் குறைத்திருக்கலாம்.

(2) நிர்வாகத்தினர் தொழிலாளர்களுக்குத் தண்டனையோ, அபராதமோ விதிப்பதாலோ, வேலை நீக்கம் செய்வதாலோ, வேலை குறைப்புப் (Retrenchment) பயத்தாலோ தொழிலாளர்களுக்கு அதிருப்தி ஏற்படுவதாலும் வேலை நிறுத்தம் செய்கின்றனர். 25 சதவீதத்திற்கும் 30 சதவீதத்திற்கும் இடைப்பட்ட சச்சரவுகள் இவ்வகைத் தனிநபர் காரணங்களால் ஏற்படுகின்றன. ஆலையின் மேலாளர் அல்லது கண்காணிப்பாளர் (Foreman) போன்றவர்களை வேலை நீக்கம் செய்யுமாறு கோரித் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யலாம். முதலாளிகள் தொழிற்சங்கங்களை அங்கீகரிக்காமை, முதலாளிகளால் தொழிற்சங்கத் தலைவர்கட்கு ஏற்படும் தொல்லைகள் போன்ற காரணங்களாலும் தகராறுகள் ஏற்படுகின்றன.

(3) விடுமுறை, வேலைநேர மாறுதல்கள், அதிக வசதிகள் கோருதல் போன்ற காரணங்களால் 10 சதவீத சச்சரவுகள் ஏற்பட்டுள்ளன. ஆனால், இவ் வகையில் ஏற்படும் சச்சரவுகள் குறுகிய காலத்தில் தீர்க்கப்படுகின்றன. மேலும், அவைகள் சமீப காலத்தில் குறைந்து வருகின்றன.

(4) தொழிற்சங்கங்களைக் கட்டுப்படுத்தும் அரசியல் கட்சிகள் அரசியல் குறிக்கோள்களைச் சாதிக்கும் நோக்கத்துடன் தொழிலாளர்களை வேலை நிறுத்தங்களில் ஈடுபடச் செய்கின்றன. இவ்வகையில் மற்றக் காரணங்களுக்காக 20 சதவீதத்திற்கும் 30 சதவீதத்திற்கும் இடையில் தொழில் சச்சரவுகள் ஏற்படுகின்றன. சில தொழிற்சங்கங்கள் மற்றத் தொழிற் சங்கங்களின் வேலை நிறுத்தங்களை ஆதரிக்கும் நோக்கத்துடன் அனுதாப வேலை நிறுத்தங்களைச் (Sympathetic Strikes) செய்கின்றன. துரதிர்ஷ்ட வசமாக இத்தகைய காரணங்களால் ஏற்படும் வேலை நிறுத்தங்கள் தற்போது அதிகரித்து வருகின்றன. எடுத்துக்காட்டாக 1957-ல் 20 சதவீதமாக இருந்த இத்தகைய வேலை நிறுத்தங்கள்

1962-ல் 30 சதவீதமாக அதிகரித்தன. இந்தியாவில் பெரும்பான்மையான வேலை நிறுத்தங்கள் வெற்றி பெறுவதில்லை. வேலை நிறுத்தங்களின் மொத்த எண்ணிக்கையில் 55 முதல் 65 சதவீத வேலை நிறுத்தங்கள் தோல்வியடைந்துள்ளன. அதாவது 35 முதல் 45 சதவீத வேலை நிறுத்தங்கள்தான் வெற்றியடைந்துள்ளன. தொழிலாளர்களிடையே பொறுத்திருக்கும் சக்தி (Staying Power) இன்மையாலும், தகுந்த காரணங்களால் வேலை நிறுத்தங்கள் ஏற்படாததாலும், மற்ற முறைகளைப் பயன்படுத்தாமல் வேலை நிறுத்தம் செய்யுமாறு சில தீவிர தொழிற்சங்கத் தலைவர்கள் ஆலோசனை கூறுவதாலும், சங்கங்களின் உண்மையான வலுவை அறியாமல் சங்கத்தலைவர்கள் வேலை நிறுத்தங்களை மேற்கொள்ளுவதாலும், பெரும்பான்மையான வேலை நிறுத்தங்கள் வெற்றி பெறுவதில்லை. கடைசியாக, தொழிலாளர்களின் வலுவின்மை, அமைப்பு இல்லாத நிலை மற்றும் வேலையின்மை (Unemployment) நிலையின் தீவிரம் போன்ற காரணங்களைப் பயன்படுத்தி முதலாளிகள் தொழிலாளர்களைச் சுரண்டுகின்றனர். இந் நிலைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையிலும் வேலை நிறுத்தங்கள் ஏற்படுகின்றன. பல்வேறு அரசியல் கட்சிகளால் அநேக தொழிற் சங்கங்கள் ஆதிக்கம் செலுத்தப்படுவது இந்தியத் தொழிற்சங்க இயக்கத்தைப் பெரிதும் பலவீனப்படுத்துகிறது.

## தொழில் தகராறுகளைத் தீர்க்கும் அரசின் கொள்கை
## (Govt. Policy Towards Industrial Disputes)

விடுதலைக்கு முன் தொழில் தகராறுகளால் ஏற்பட்ட தொழில் அமைதியின்மையை இந்திய அரசு ஒரு சட்டம், ஒழுங்குப் பிரச்சினையாகவே (Law and order Problem) கருதியது. ஆனால், தற்போது தொழில் அமைதி இருந்தால்தான் தொழில் முன்னேற்றமும் செழிப்பும் ஏற்படும் என்பதை அரசு உணர்ந்துள்ளது. எனவே, 1947-ம் ஆண்டிலிருந்து அரசு தொழில் அமைதியின்மையைப் போக்கப் பலனுள்ள தொழிலாளர் கொள்கையைப் பின்பற்றி வருகிறது.

1. 1929-ன் தொழில் தகராறுகள் சட்டம் (Industrial Disputes Act of 1929)

ஆங்கிலேய அரசு தொழில் சச்சரவுகளைத் தீர்க்க நிறைவேற்றிய சட்டங்களில் இதுவும் ஒன்றாகும். இச் சட்டத்தில் தொழில் சச்சரவுகளைத் தீர்க்கத் தாற்காலிக ஸ்தாபனங்கள் ஏற்படுத்தப்பட்டன. சச்சரவுகளைத் தீர்க்க மத்திய அரசு,

இரயில்வேக்கள் ஆகியவைகளால் விசாரணை நீதி மன்றங்கள் (Courts of Enquiry) அல்லது சமாதான சபைகள் (Boards of Conciliation) நிறுவப்பட்டன. இச்சட்டத்தின் முக்கிய குறைபாடு இது தொழில் தகராறுகளைத் தீர்க்க நிரந்தர உள் ஸ்தாபனங்களை ஏற்படுத்தாததுதான். பரஸ்பர பேச்சுகள் மூலம் தகராறுகளைத் தீர்க்க உள் ஸ்தாபனங்களை (Interna) machinery) ஏற்படுத்தச் சட்டம் வகை செய்யவில்லை. 1929-ன் சட்டம் 1934, 1938 ஆகிய ஆண்டுகளில் இருமுறை திருத்தப் பட்டது. 1938-ம் ஆண்டுச் சட்டம் சமாதான அதிகாரிகளை (Conciliation Officers) நியமிக்க வகை செய்தது.

2. 1947 ன் தொழில் தகராறுகள் சட்டம்

இரண்டாம் உலகப்போரின் போது தொழில் தகராறுகள் அதிகரித்தன. எனவே, அரசு இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் அடிப்படையில் வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள் நடக்கா வண்ணம் தடுத்துத் தொழில் அமைதியை ஏற்படுத்தியது. போருக்குப் பின்னரும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தைப் பயன் படுத்தித் தொழில் அமைதியை நிலைநாட்ட வேண்டியதிருந்ததால் 1947-ல் ஒரு தனி தொழில் தகராறுகள் சட்டம் இயற்றப்பட்டது. இச் சட்டத்தின்படி (1) தொழில் குழுக்கள் (Works Committees) (2) தொழில் நீதிமன்றங்கள் (Industrial Tribunals) ஏற்படுத்தப் பட்டன. முதலாளிகள், தொழிலாளிகள் ஆகியவர்களின் பிரதி நிதிகளைக் கொண்டது தொழில் குழுவாகும். நூறு தொழிலாளர் களுக்குக் குறையாமல் பணிபுரியும் தொழில் நிறுவனங்களில் தொழில் குழுக்கள் இருக்கவேண்டுமென்று இச் சட்டம் வலியுறுத்தியது. இக் குழுக்களின் நோக்கம் முதலாளிகட்கும் தொழிலாளிகட்குமிடையே நல்லுறவை ஏற்படுத்தித் தொழில் அமைதியைப் பாதுகாப்பதாகும். ஒன்றோ அல்லது அதற்கு மேற்பட்ட உயர்நீதி மன்ற நீதிபதிகளைக் கொண்டது தொழில் நீதிமன்றமாகும் (Industrial Tribunal). முதலாளிகட்கும் தொழிலாளிகட்குமிடையே ஏற்படும் சச்சரவுகளை அரசின் அனுமதியுடன் தொழில் நீதிமன்றங்கள் விசாரணைக்கு ஏற்றுக் கொள்ளும்.

1947-ன் சட்டத்தின்படி முதலாளிகட்கும் தொழிலாளிகட்கு மிடையே சுமுகமான தீர்வு ஏற்படுத்த எல்லா மாநிலங்களிலும் சமாதான அதிகாரிகள் (Conciliation Officers) நியமிக்கப்பட்டனர். பதினைந்து நாள்களில் சமாதான அதிகாரியால் தகராறைத் தீர்த்து வைக்க இயலாவிட்டால், அரசு அவ்வழக்கைச் சமாதான சபை களிடமோ (Board of Conciliation) அல்லது தொழில் நீதிமன்றங்

களிடமோ (Industrial Tribunal) ஒப்படைக்கும். இரு கட்சியினரும் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் வழக்கைச் சமாதான சபை தீர்த்து வைத்தால், அத் தீர்வு (Settlement) ஆறு மாதங்கள் வரைக்கும் அமுலில் இருக்கும். இரு கட்சியினரும் ஏற்றுக் கொண்டால் அத் தீர்வின் காலத்தை மேலும் அதிகரிக்கலாம். சமாதான சபை வெற்றியுடன் வழக்கைத் தீர்க்க முடிந்தால், தகராறு சம்பந்த விவரங்களைச் சேகரிக்க வழக்கு, விசாரணை மன்றத்திற்கு (Court of Enquiry) அனுப்படுகிறது. இறுதியாக, வழக்கு தீர்ப்புக் கூறும் தொழில் நீதிமன்றத்திற்கு (Industrial Tribunal for Adjudication) வருகிறது. வழங்கப்பட்ட தீர்ப்பை இருகட்சியினரும் ஏற்றுக்கொள்ள வேண்டும். பொதுத் துறை நிறுவனங்களில் ஏற்படும் தகராறுகளும் 1947-ன் சட்டப்படி சமாதான சபைகளுக்கு அனுப்பப்படுகின்றன. பொதுத்துறை நிறுவனங்களில் பொதுவாக வேலைநிறுத்தங்கள், கதவடைப்புகள், ஏற்பட அனுமதிக்கப்படுவதில்லை. தகுந்தகாலத்தில் அறிவிக்கப் படாமல் நடத்தப்படும் வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள் சட்டத்திற்குப்புறம்பானவைகளாகும். 1947-ன் சட்டம் கட்டாய சமாதானம், கட்டாய சமரசம் ஏற்படுத்த வகைசெய்தது. மேலும், இச் சட்டம் தொழில் சச்சரவுகளைத் தீர்க்கும் நிரந்தர ஸ்தாபனங்களை முதன்முறையாக இந்தியாவில் ஏற்படுத்தியது.

3. 1950-ன் தொழிலாளர் தொடர்பு மசோதா (Labour Relations Bill of 1950)

1947-ம் ஆண்டின் சட்டத்தில் காணப்பட்ட குறைபாடுகளை நீக்கித் தொழிலாளர் உறவைச் சீரமைக்கும் நோக்கத்துடன் 1950-ல் மத்திய அரசு தொழிலாளர் தொடர்பு மசோதா ஒன்றை உட்புகுத்தியது. இம் மசோதா தொழில் அமைதியை நிலைநாட்ட சமாதான சபைகள், தொழிலாளர் நீதிமன்றங்கள் (Labour Courts), தொழிலாளர் மேல் முறையீட்டு மன்றங்கள் (Labour Appellate Tribunal) போன்ற பல ஸ்தாபனங்களை ஏற்படுத்த வகை செய்தது. கூட்டுப் பேர முறையைப் (Colective bargaining) பின்பற்றவும் இம் மசோதா வகை செய்தது. பொது நலனைக் கருத்தில் கொண்டுஎந்தத் தொழில் நிறுவனத்தையும் கட்டுப்படுத்த இம் மசோதா அரசுக்கு அதிகாரம் அளித்தது. பத்துத் தொழி லாளர்களுக்கு மேல் பணிபுரியும் எல்லாத் தொழில் நிறுவனங்களை யும் இம் மசோதா கட்டுப் படுத்தும். இம்மசோதா எல்லா வகை தொழில் விவகாரங்களையும் உள்ளடக்கி முழுமையானதாக இருந்தது. எனினும் இம் மசோதா தொழில் சச்சரவுகளைத் தீர்க்கக் ஏராளமான ஸ்தாபனங்களை ஏற்படுத்தியதால், சச்சரவுகளைத் தீர்ப்பதில் வீண் காலதாமதம் ஏற்பட்டது. மேலும், தொழில்

நிறுவனங்களைக் கட்டுப்படுத்த அரசுக்கு ஏராளமான அதிகாரம் வழங்கப்பட்டதால், அரசு அதை துர்ப்பிரயோகம் செய்ய வாய்ப்பு ஏற்பட்டது. இக் காரணங்களால் இம் மசோதாவிற்குப் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டு அது சட்டமாக நிறைவேற்றப்படவில்லை.

கிரி வழி

*1952-ல்* தொழில் அமைச்சராக இருந்த V. V. கிரி அவர்கள் தொழில் சச்சரவுகளைத் தீர்க்கக் கட்டாய மாதானம் (Compulsory Conciliation), கட்டாயத் தீர்ப்பு (Compulsory Arbitration) ஆகிய முறைகளை விட்டு நேரடிப் பேச்சுமூலம் சுயசமாதான முறையை (Voluntary Conciliation) மேற்கொள்ள வேண்டுமென்று பெரிதும் வலியுறுத்தினார். இதுவே 'கிரிவழி' (Giri Approach) என அழைக்கப்படுகிறது. கட்டாயத் தீர்ப்பு முறை (Compulsory Adjudication) யைக் காட்டிலும் கூட்டுப் பேர முறையே (Collcetive bargaining) மிகச் சிறந்தது என்னும் கருத்தை வலியுறுத்துவதே. 'கிரிவழி' யாகும். கிரி அவர்கள் தம் வழிப்படி ஒரு புதிய மசோதாவைத் தயார் செய்தார். *1954-ல்* அவர் தம் பதவியை ராஜினமா செய்ததால் இந்த மசோதா சட்டமாக நிறைவேறவில்லை. தற்போது *1947-ன்* தொழில் தகராறுகள் சட்டமே தகுந்த திருத்தங்களுடன் அமுலில் இருந்து வருகிறது.

(4) 1956-ல் திருத்தப்பட்ட 1947-ன் தொழில் சச்சரவுச் சட்டம்

*1956-ல் 1947-ன்* தொழில் தகராறுகள் சட்டம் திருத்தப் பட்டு, தொழிலாளர் நீதிமன்றங்கள் (Labour Courts), தொழில் நீதிமன்றங்கள் (Industrial Tribunals) தேசிய நீதிமன்றங்கள் (National Tribunals) ஆகிய மூன்று அமைப்புகளை ஏற்படுத்த வகை செய்யப்பட்டது. தேசிய நீதிமன்றங்கள், தேசிய முக்கியத் துவம் வாய்ந்த பிரச்சினைகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கின்றன. பல மாநிலங்களிலுள்ள தொழில் நிறுவனங்களின் வழக்குகளை விசாரித்து இவைகள் தீர்ப்பளிக்கின்றன. தேசிய நீதிமன்றங்களில் ஒரு வழக்கு விசாரிக்கப்பட்டு வரும்போது, அவ் வழக்கு தொழிலாளர் நீதி மன்றங்களாலோ அல்லது தொழில் டிரிபியூனல்களாலோ விசாரிக்கப்படலாகாது. தற்போது தொழில் சச்சரவுகளைத் தீர்ப்பதற்குக் கூட்டுப் பேர முறை, சுய சமரசம், சுய சமாதானம் போன்ற வழிகள் சிறந்தவைகளாகக் கருதப்பட்டு வருகின்றன.

1958-ன் இந்தியத் தொழிலாளர் மாநாடு (Indian Labour Conference of 1958)

*1958-ல்* நடைபெற்ற இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் தொழில் அமைதியை மேம்படுத்தச் சில ஒழுங்கு விதிமுறைகள்

(Code of Discipline) ஏற்படுத்தப்பட்டன. இவ் விதிமுறைகள் சுயமாகவே சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ள வகை செய்தன. இவ் விதிமுறையின்படி, வேலை நிறுத்தம் போன்ற நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடும்முன் தொழிலாளர்கள் தங்கள் சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ள ஏற்கெனவே அமைக்கப் பட்டிருக்கும் ஸ்தாபனங்களைப் பயன்படுத்த வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

1962-ல் மூன்றும் திட்டக் காலத்தில் ஏற்பட்ட சீனப் படையெடுப்பால் நாட்டில் அவசர நிலை (emergency) பிரகடனம் செய்யப்பட்டதால், முதலாளிகளும், தொழிலாளிகளும் தொழில் உற்பத்தியை அதிகரித்து, பாதுகாப்பு முயற்சிகளையும் மேம்படுத்த வேண்டுமென்பதை உணர்ந்தனர். எனவே, நவம்பர் 1962-ல் முதலாளிகளும் தொழிலாளிகளும் அடங்கிய எல்லா மத்திய அமைப்புகளும் ஒன்றுகக் கூடிய கூட்டத்தில் தொழில் அமைதியை மேம்படுத்தும் குறிக்கோளுடன் உடன்படிக்கைத் தீர்மானம் (Truce Resolution) ஒன்று நிறைவேற்றப்பட்டது. இத் தீர்மானத்தின்படி எக்காரணத்தை முன்னிட்டும் உற்பத்தியைப் பாதிக்கும் வேலை நிறுத்தங்களில் தொழிலாளர்கள் ஈடுபடலாகாது. மேலும், தொழில் சச்சரவுகளைத் தீர்க்கச் சுயமாய்ச் சமரசம் செய்து கொள்வதே பெரிதும் வலியுறுத்தப்பட்டது. கூலிக் கட்டுப்பாடு, லாபத் தடுப்பு முறைகளையும் இத்தீர்மானம் வலியுறுத்தியது. ஆனல், பெரும்பாலான தொழில் நிறுவனங்களில் தொழிற்சங்க இயக்கம் ஊடுருவாமல் இருப்பதால் சுய சமரசக் கொள்கையைப் பரவலாய் நடைமுறைப் படுத்துவது கடினமாய் உள்ளது.

கூட்டு நிர்வாக சபைகள் (Joint Management Councils)

நிர்வாகத்தினருடன் தொழிலாளர்கள் சுமுகமாகத் தொடர்பு கொள்ள எல்லாத் தொழில் நிறுவனங்களிலும் கூட்டு நிர்வாக சபைகள் ஏற்படுத்தப் படவேண்டுமென்று அரசு பரிந்துரைத் துள்ளது. இச் சபைகள் மூலம் தொழிலாளிகள் நிர்வாகத்தில் பங்கு பெற்று, தொழிலின் பல்வேறு பிரச்சினைகளை அறிந்து, முதலாளிகட்கும் தொழிலாளிகட்குமிடையே நல்லுறவைப் பலப் படுத்த முடியும். கூட்டு நிர்வாக சபைகள் ஏற்படுத்தப்பட்டுள்ள நிறுவனங்களில் சீரான தொழில் உறவு, திருப்தியடைந்த தொழிலாளர்கள், வீணடிக்கப்படுவது குறைக்கப்படுதல், உற்பத்தி அதிகரிப்பு, அதிக லாபம், இரு கட்சிகளிடையே நெருங்கிய ஒத்துழைப்பு ஆகியவைகள் காணப்படுகின்றன. ஐந்தாண்டுத் திட்டங்களில் இக் குழுக்கள் அதிகம் ஏற்பட அரசு வலியுறுத்தி வருகிறது.

தொழில் உறவைச் சீரமைக்கும் வகைகள்

தொழில் சச்சரவுகளைத் தீர்க்க இரு கட்சியினரும் ஒருவரை ஒருவர் நன்றாய் உணர்ந்து நேரடிப் பேச்சு மூலம் சுயமாய்ச் சமரசம் செய்துகொள்ளும் முறைதான் சாலச் சிறந்தது. இதற்கு முதலாவதாகத் தேவையானது தொழிலாளர்களுக்குள் இருந்தே தோன்றும் தலைமை (Leadership from within)யாகும். தொழிலாளர்கள் தங்கள் பொருளாதார நிலை மேம்பட்டுள்ளது என்பதை உணர்ந்து, அடிமை மனப்பான்மையை மறந்து, முதலாளிகளுடன் ஒத்துழைத்து, உற்பத்தியைப் பாதிக்கும் பிரச்சினைகளை நேருக்கு நேர் ஆராய்ந்து தீர்வு காணவேண்டும். அதேபோல் முதலாளிகளும் தொழிலாளர்களின் நலனில் தீவிர அக்கறை கொண்டு அவர்களுக்குத் தகுதிக்கேற்ற சிறந்த வேலைகள், பதவி உயர்வு, கல்வி உயர்வுக்கு வாய்ப்பு, லாபகரமான பொழுது போக்கு வசதிகள் போன்றவைகளை அளிக்கவேண்டும். கட்டாயத் தீர்ப்பு முறையால்தான் தொழில் பிரச்சினைகள் ஏற்படுவதால், அதை ஒழித்துச் சமரசப் பேச்சு வார்த்தைகள், கூட்டுப் பேரமுறை ஆகியவைகள் மூலம் தொழிலாளிகட்கும் நிர்வாகத்தினருக்கு மிடையே ஏற்படும் பேதங்களை நீக்க முடியும். ஒவ்வொரு தொழில் நிறுவனத்திலும் நிரந்தரமான முறையில் தொழிலாளி—முதலாளி பிரதிநிதிகளடங்கிய கூட்டு நிர்வாகத் துறையை (Joint Standing Machinery) ஏற்படுத்தினுல் வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள் போன்ற நேரடி நடவடிக்கைகளைக் குறைக்க முடியும். பல்வேறு தொழில்களின் பொதுநிலை, தொழில் உறவின் போக்கு போன்றவற்றை ஆராய நிபுணர்கள் அடங்கிய மத்திய மாநில மட்டத்தில் ஒரு நிரந்தர அரசு ஸ்தாபனம் ஒன்றை ஏற்படுத்துவதால் தொழில் சச்சரவுகளை அவ்வப்போது ஆராய்ந்து நல்ல முடிவுகளை எடுக்க முடியும். இம்முறையினுல் சச்சரவுகள் தீர்க்கப் படாவிட்டால், இங்கிலாந்திலுள்ள தொழில் நீதிமன்றங்களைப் போன்ற (Industrial Court) ஸ்தாபனத்தை அரசு அமைக்க வேண்டும். இங்கிலாந்தில் (U. K.) 1919-ன் சட்டப்படி விசாரணை நீதிமன்றங்கள் அறிக்கைகளை நாடாளு மன்றமும் பொதுமக்களும் அறியும் வகையில் வெளியிடுகின்றன. சச்சரவைத் தீர்ப்பதற்கு இந்த அறிக்கை பெரிதும் துணைபுரிகின்றது. இந்தியாவிலும் இத்தகைய அறிக்கை ஒன்றைச் சமர்ப்பிக்க ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்துவது இன்றியமையாததாகும். எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு தொழிலில் ஒரு சங்கம் மட்டும் இருக்கும் நிலை ஏற்பட்டாலொழியத் தொழிலமைதியை நிலைநாட்டுவது மிகவும் கடினமானதாகும், எல்லாத் தொழிலாளர்களுக்கும் ஒரே மத்தியச் சங்கம் (Central Union) மட்டும் இருத்தல் சிறந்ததாகும்.

கூட்டுப்பேர முறை (Collcetive bargaining)

வலுவான தொழிற்சங்க இயக்கம் ஒரு நாட்டில் இருந்தால் தான் கூட்டுப்பேர ஒப்பந்தங்களும், தொழிலாளர்கள் நிர்வாகத்தில் பங்கேற்றலும் சாத்தியமாகும். கூட்டுப்பேர முறையில் தொழிலாளர்கட்கும் நிர்வாகத்தினர்கட்கும் இடையே கூலிகள், மற்ற வேலை வசதிகள் போன்றவற்றைத் தீர்மானிக்க நேரடிப் பேச்சு வார்த்தைகள் நடைபெறுகின்றன. தொழிலாளர்களின் பிரதிநிதிகளாகிய சங்கத் தலைவர்களும் முதலாளிகளின் பிரதிநிதிகளாகிய நிர்வாகத்தினரும் நேரடிப் பேச்சுகள் மூலம் கூட்டு ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளுகின்றனர். தொழில் துறையில் மிகவும் முன்னேறிய பெரும்பாலான நாடுகளில் வலுவுற்ற தொழிற்சங்கங்கள் மேற்கொண்ட கூட்டுப் பேர ஒப்பந்தங்கள் நிர்வாகத்தினரின் உரிமைகளையும் கடமைகளையும் விளக்க மிகச் சிறந்த முறையாகக் கடைப்பிடிக்கப்பட்டது. வளர்ந்துவரும் நாடுகளில் தொழில் அமைதியை மேம்படுத்தக் கட்டாயத் தீர்ப்பு முறையைக் காட்டிலும் கூட்டு ஒப்பந்த முறை சாலச் சிறந்ததாய் உள்ளது. இந்தியாவில் 1950-ன் தொழில் தொடர்பு மசோதா கூட்டுப்பேர முறையை மேற்கொள்ள வகை செய்தது. நவம்பர் 1948-ல் இந்தியாவில் முதலாவதாக, பாட்டா நிறுவனம் (Bata Organisation) கூட்டு ஒப்பந்த முறையை நடைமுறைப்படுத்தியது. ஜூன் 1952-ல் ஆமதாபாத் நெசவாளர் சங்கத்திற்கும். ஆமதாபாத் ஆலைச் சொந்தக்காரர்கள் சங்கத்திற்கும் இடையே கூட்டுப்பேர ஒப்பந்தம் அமுலாக்கப்பட்டது. அதன்பிறகு ஏராளமான கூட்டுப்பேர ஒப்பந்தங்கள் நடைமுறைப் படுத்தப்பட்டன. 1956-ல் டாடா இரும்பு எஃகு நிறுவனத்திற்கும் (Tata Iron and steel Company, Limited) டாடா தொழிலாளர் சங்கத்திற்கும் இடையே கூட்டு ஒப்பந்தம் கையெழுத்தானது. சமீபத்தில் இம்பீரியல் புகையிலை நிறுவனம், (Imperial Tobacco Company அஸ்ஸாம் எண்ணெய் நிறுவனம் (Assam oil Company) மைசூர் காகித ஆலை (Mysore Paper Mills) ஆகிய ஸ்தாபங்களில் நிர்வாகத்தினருக்கும் தொழிலாளர் சங்கங்களுக்குமிடையே கூட்டு ஒப்பந்தங்ள் அமுலாக்கப்பட்டன.

## நிர்வாகத்தில் தொழிலாளர்களின் பங்கேற்பு
## (Workers Participation in Management)

தொழிலாளர்களை நிர்வாகத்தினருடன் ஒன்று சேர்க்க அரசு இக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. அண்மையில் நாட்டிலுள்ள 14 மிகப் பெரிய வங்கிகளை அரசுடைமை (Nationali-

sation) ஆக்கியபின், அரசுடைமை ஆக்கப்பட்ட வங்கிகளின் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் (Employees) பங்கேற்பார்கள் என்று அரசு அறிவித்தது. 1956-ல் சில ஐரோப்பிய நாடுகளுக்குச் சென்று திரும்பிய ஆராய்ச்சிக் குழு (Study group) சமர்ப்பித்த அறிக்கையின் அடிப்படையில் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பங்கேற்க ஒரு திட்டம் தீட்டப்பட்டது. அத் திட்டத்தில் 500 தொழிலாளர்களுக்குக் குறைவில்லாமல் வேலை செய்யும் தொழில் நிறுவனங்களில் கூட்டு நிர்வாக சபைகள் ஏற்படுத்த வேண்டு மென்று ஆலோசனை கூறப்பட்டது. 1957-ல் நடைபெற்ற இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் (Indian Labour Conference) மாதிரி முறையில் (Experimental basis) 50 தொழில் நிறுவனங் களில் கூட்டு நிர்வாக சபைகளை ஏற்படுத்த வேண்டுமென்று ஆலோசனை கூறப்பட்டது. ஜூலை 1966 வரைக்கும் பொது, தனியார்துறை ஆகிய இரண்டிலும் இந்தியாவில் 122 கூட்டு நிர்வாக சபைகள் இயங்கி வந்தன. ஆனால், முதலாளி தொழிலாளி ஒத்துழைப்புக் குறைவாக இருப்பதாலும், தொழி லாளர்களுக்குப் போதிய பயிற்சி வசதிகள் இன்மையாலும் சங்கங் களிடையே போட்டிப் பிரச்சினை இருப்பதாலும் எல்லா நிறுவனங் களிலும் கூட்டு நிர்வாக சபைத் திட்டங்களை அமுல்படுத்த முடிவதில்லை.

## II. தொழிற்கூடச் சட்டங்கள்
### (Factory Legislations)

தொழிலாளர்களுக்குப் பல்வேறு வேலை வசதிகள் இருந்தால் தான் அவர்களின் உற்பத்தித்திறன் அதிகரிக்கும். தொழில்துறைத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறனை அதிகரிக்கத் தொழிலாளர் களுக்குச் சிறந்த வாழ்க்கைத்தரம், சத்துணவு, நல்ல வீட்டுவசதி, பொது, தொழில் நுட்பக் கல்விவசதி, தொழிலாளர் நல நடவடிக்கைகள் போன்றவைகளை அரசு அளிக்க வேண்டியது இன்றியமையாததாகும். இந்தியத் தொழிலாளிகள் சுகாதார மில்லாத நெருக்கமான ஆலைப் பகுதிகளில் குறைந்த ஊதியத் தைப் பெற்று எந்திரம்போன்று உழைப்பதால் மேற்கத்திய நாட்டுத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறனை விட மிகக் குறைந்த உற்பத்தித் திறனைப் (Efficiency) பெற்றுள்ளனர். ஆனால், அதிக உற்பத்தித்திறனைப் பெறுவதற்கான உள்ளார்ந்த சக்தி (Potential Capacity) அவர்களிடம் இல்லாமல் இல்லை. உயர்ந்த கூலிகள், சிறந்த வேலைகள் செய்வதில் உற்பத்தி சாதனங்கள் ஆகியவற்றை அளித்தால் அவர்களின் உற்பத்தித் திறனும் வளர்ந்த நாடுகளின் தொழிலாளர்களின் உற்பத்தித்

திறனுக்கு இணையாக இருக்கும். எனவே,இந்தியத் தொழிலாளர்களின் உற்பத்தித்திறனைச் சீர்படுத்த அரசுடன் முதலாளிகளும் கூட்டுச் சேர்ந்து தொழிலாளர் நலத்திட்டங்களை மேற்கொண்டு அறிவியல் உற்பத்தி முறைகளை உட்புகுத்த வேண்டும்.

## தொழிற் கூடத் திட்டங்கள்

ஆரம்ப காலத்தில் தொழிலாளர் நலனைப் பேணிக்காக்கும் எந்தவிதச் சட்டமும் இல்லையாதலால் முதலாளிகள் தொழிலாளர்களைத் தங்கள் நோக்கம்போல் கட்டுப்படுத்தி வந்தனர். இதனால் தொழிலாளர்கள் நீண்டநேரம் சுகாதாரமற்ற ஆலைப் பகுதிகளில் குறைந்த கூலியில் பணிபுரிந்து வந்தனர். குழந்தைகளும் பெண்களும் வேலைக்கு அமர்த்தப்பட்டனர். தொழிற் கூடங்களின் தரம் மிகக் குறைந்ததாக இருந்தது. விபத்துக்குள்ளாகும் தொழிலாளர்களுக்கு இழப்பீட்டுத் தொகை (Compensation) அளிக்கப்படவில்லை. இத்தகைய அல்லல்களினின்று தொழிலாளர்களைப் பாதுகாக்கும் குறிக்கோளுடன் இந்தியாவில் பல தொழிலாளர் சட்டங்கள் இயற்றப்பட்டன.

### 1. 1881-வது ஆண்டுச் சட்டம்

தொழிலாளர்களின் தொழில் பிரச்சினைகளைச் சில சமூகத் தொண்டர்கள் உணர்ந்து அவற்றை நீக்க முற்பட்டனர். இங்கிலாந்திலுள்ள லங்காசயர் (Lancashire) ஆலை முதலாளிகள் இந்தியத்தொழில் அதிபர்களின் சாதக நிலையைக்கருத்தில் கொண்டு இந்தியாவிலும் தொழிற்கூடச் சட்டங்களை ஏற்படுத்த வேண்டுமென்று முயன்றனர். இதன் விளைவாக 1881-ல் முதல் சட்டம் அமுலாக்கப்பட்டது. இச் சட்டத்தில் ஏழு வயதிற்குக் குறைந்த வயதுடைய சிறுவர்களை வேலைக்கு அமர்த்தக் கூடாதெனவும், மற்றக் குழந்தைகளின் வேலைநேரம் 9 மணி எனவும் கூறியது. இதனால் சிறுவர்களுக்குச் சிறிது பாதுகாப்புக் கிடைத்தது ஆனால், வயது வந்தோர் காலைமுதல் மாலை வரையில் தொழிற் கூடங்களில் அடைப்பட்டுக்கிடக்க வேண்டிய சூழ்நிலை இருந்துவந்தது. தகுந்த கண்காணிப்பு இல்லாமையால் இச் சட்டத்தை முழுமையாகச் செயலாற்ற முடியவில்லை. இச் சட்டம் தொழிலாளர்களை முழுமையாகத் திருப்தி செய்யவில்லை. ஏனெனில் தொழிலாளர்கள் ஞாயிற்றுக்கிழமைகளிலும்கூட வேலை செய்ய வேண்டிய நிலை இருந்தது. விடுமுறை நாட்களில் அவர்கள் எந்திரங்களைச் சுத்தப் படுத்தினர். இச் சட்டத்தில் குறித்த வேலை நேரங்கள் தீர்மானிக்கப்படவில்லை.

2. 1891-ம் ஆண்டின் தொழிற்கூடச் சட்டம்

இச் சட்டம் இரண்டாவது தொழிற்கூடக் குழுவின் (Factory Commission) பரிந்துரைப்படி அமுலாக்கப்பட்டது. இச் சட்டத்தின்படி—1.ஒன்பது வயதிற்குக் குறைந்தவர்களை வேலைக்கு அமர்த்தக் கூடாது. 2. ஒன்பது முதல் 14 வயது வரை உள்ளவர்கள் 7 மணி நேரம் வேலை செய்யவேண்டும். 3. இரவு 8 மணிமுதல் காலை 5 மணிவரை உள்ள வேலைக்குப் பெண்களை அமர்த்துவது கூடாது. 4. வாரத்திற்கு ஒருநாள் விடுமுறையும், நாள்தோறும் அரைமணி நேரம் கட்டாய ஓய்வும் அளிக்கவேண்டும். ஐம்பது தொழிலாளர்களைக் கொண்ட தொழிற்கூடங்களும் இச் சட்டத்தைப் பின்பற்றவேண்டும்.

3. 1911-ம் ஆண்டு தொழிற்கூடச் சட்டம்

1906-ன் பிரியர் ஸ்மித்குழு (Freer Smith Committee) 1907-ன் தொழிற்கூடக் குழு ஆகிய இரண்டு குழுக்களும் முந்தையச் சட்டங்கள் நடைமுறைக்கு ஒவ்வாதவை என்பதை எடுத்துரைத்தன. எனவே, 20-ஆண்டுகட்குப்பின் இச் சட்டம் அமுலாக்கப்பட்டது. இச் சட்டத்தின்படி வயது வந்தோர்கட்கு வேலை 12-மணியெனவும், குழந்தைகட்கு 6-மணியெனவும், இவற்றை மீறுகின்ற முதலாளிகள் தண்டனைக்குள்ளாவார்கள் என்றும் கூறப்பட்டது.

4. 1922-ம் ஆண்டுத் தொழிற்கூடச் சட்டம்

முதல் உலகப் போருக்குப்பின் தொழிலாளர்கள் பொருளாதாரத்தில் தங்கள் முக்கியத்துவத்தையும், ஒற்றுமையையும் உணரத் தொடங்கினர். தாங்கள் நீண்டநேரம் வேலை செய்வதை உணர்ந்து வேலைநேரம் குறைக்கப்படவேண்டுமென்று வேண்டினர். இதன் விளைவாக இச் சட்டம் 20 தொழிலாளர்களைக் கொண்ட தொழிற்கூடங்களில் கூடக் கட்டாயமாக நடைமுறைப் படுத்தப் பட்டது; இச் சட்டத்தின்படி 12 வயதிற்குக் குறைந்தவர்களை வேலைக்கு அமர்த்தக் கூடாது. 12 முதல் 15 வயதுவரை உள்ளவர்கட்கு வேலைநேரம் 6 மணியாகும். இடைவேளை அரைமணி நேரம் கொடுக்கப்படவேண்டும். வயது வந்தோர் நாளொன்றிற்கு 11 மணிநேரம் வேலை செய்யவேண்டும். பெண்கள் இரவு 7 மணிமுதல் காலை 5-30 மணிவரை வேலை பார்க்கக் கூடாது. தொழிலாளர்களுக்குச் சுகாதார வசதிகள் அளிக்கப்படவேண்டும்.

5. 1934-ன் இந்தியத் தொழிற்கூடச் சட்டம் (Indian Factory Act of 1934)

ஆங்கில ஆட்சியில் நிறைவேற்றப்பட்ட தொழிற்கூடச் சட்டங்களில் இது மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். தொழிலாளர் அரசு குழுவின் (Royal Commission on Labour) பரிந்துரைகளின் அடிப்படையில் இச் சட்டம் இயற்றப்பட்டது. முன்பு நிறைவேற்றப்பட்ட சட்டங்களைத் தொழிலதிபர்கள் மீறியதால் தொழிலாளர்களின் தலைவர்கள், சமூக சீர்திருத்த வாதிகள் முதலியோர் மேல் நாடுகளைப் போன்று இந்தியாவிலும் சட்டங்களைச் சரிவர அமுல் நடத்த வேண்டினர். இச் சட்டப்படி- 1. 12 முதல் 15 வயதுக்குட்பட்டோர் 5 மணி நேரமே வேலை செய்யவேண்டும். 12 முதல் 17 வயதுடையோர் உடல்நலச் சான்றிதழ்களை முதலாளிகளுக்கு அளிக்கவேண்டும். 2. வயது வந்தோர் 9 மணி நேரமே வேலைசெய்தல் வேண்டும். இடை வேளையும், வார விடுமுறையும் அளித்தல் வேண்டும். 3. பருவகால ஆலைகள் (Seasonal Factories) 11 மணிநேரம் இயங்கலாம். 4. குளிர்சாதனம், குடிநீர், தக்க இடவசதி போன்றவைகள் இருப்பது அவசியமாகும். கூடுதல் வேலைக்குத் தனிக்கூலி கொடுக்கப் படவேண்டும். இச் சட்டத்தைப் பெரிய தொழில் நிறுவனங்களே பின்பற்றின. சிறு தொழிற்சாலைகளும் பருவகால ஆலைகளும் இச் சட்டங்களை மீறின.

6. 1946-ம் ஆண்டுச் சட்டம்

1946-ல் அமைக்கப்பட்ட தொழிலாளர் ஆய்வுக் குழு (Labour Investigation Committee) (Rege Committee) இந்தியத் தொழிற்கூடச்சட்டத்தின் நடைமுறையில் பல குறைகளைச் சுட்டிக் காட்டியதால் 1934-ன் சட்டம் திருத்தப்பட்டது, 1946-ம் ஆண்டுச் சட்டப்படி தொழிற்சாலைகளில் வேலைநேரம் 48 மணி நேரம் எனவும், பருவகால ஆலைகளில் 54 மணிநேரம் எனவும் வரையறுக்கப்பட்டது.

7. 1948-ன் தொழிற்கூடச் சட்டம்

1934-ம் ஆண்டுச் சட்டத்தில் காணப்பட்ட குறைபாடுகளை நீக்கித் தொழிலாளர் நலன், தொழில் உற்பத்தித் திறன் சீரமைப்பு ஆகியவற்றைச் சாதிக்கும் குறிக்கோளோடு முழுமையான செய்முறைகளை உள்ளடக்கி 1948-ன் சட்டம் நிறைவேற்றப் பட்டது. 1954-ல் சில நடைமுறைப் பிரச்சினைகளை நீக்குவதற்காக 1948-ன் சட்டம் திருத்தப்பட்டது, 1948-ம் ஆண்டுச் சட்டத்தில் கீழ்க்கண்ட முக்கிய அம்சங்கள் அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டன;

1. 10 அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் பணிபுரியும், மின்சக்தியினால் இயங்கும் தொழில் நிறுவனங்கள் அனைத்தையும் இச் சட்டம் உள்ளடக்குகிறது. நிரந்தர, பருவகால ஆலைகளுக்கிடையே இருந்த வேறுபாட்டை இச் சட்டம் போக்கியது. ஜம்மு, காஷ்மீர் மாநிலத்தைத் தவிர மற்ற எல்லா இந்திய மாநிலங்களிலும், இச் சட்டம் அமுலாக்கப்படும். 2. தொழிலாளர்களின் சுகாதாரம் பாதுகாப்பு, நலன் ஆகியவைகளைச் சீர்படுத்தி இந்தியத் தொழிலாளர்களின் உற்பத்தித் திறனை உயர்த்த இச் சட்டம் வகை செய்யும். புதிய தொழிற்சாலைகள் அமைக்கையில் ஒரு தொழிலாளிக்கு 500 கன அடிகள் (Cubic Feet) இடமளிக்கும் வகையில் அமைத்தல வேண்டும். குடி நீர், மின்சார விளக்கு, உணவறைகள், காற்றோட்ட வசதி போன்றவைகள் அளிக்கப் படவேண்டும். 250 வேலையாள்கள் இருந்தால் ஒரு உணவு விடுதி தேவையாகும். 3. பதிவு செய்து கொள்ளுதல் (Registration), உரிமம் பெறுதல், (Licensing), முதலாளிகளுக்குக் கட்டாயமாக்கப்பட்டது. தொழிற்சாலைக் கட்டடம் கட்டவும், விரிவுபடுத்தவும் அனுமதி பெறல் வேண்டும். 4. கூடுதல் நேரவேலை .(Over-time)க்கு இருமடங்கு தொகை அளித்தல் வேண்டும். 5. இருபது வேலை நாள்களுக்கு 1 நாள் வீதம் சம்பளத்தோடு விடுமுறை அளிக்கவேண்டும். சிறியவர்கட்கு 15 நாள்களுக்கு ஒருநாள் விடுமுறை அளிக்கவேண்டும். வயது வந்ததர்கட்கு அதிகபட்ச வேலைநேரம் ஒரு நாளைக்கு 9 மணியாகும். ஒரு வாரத்திற்கு 48 மணி நேரங்களாகும். 6. 14 வயதிற்குக் கீழ்ப்பட்டவர்களுக்கு வேலையளித்தல் கூடாது. 18 வயதுவரை உள்ளவர்களுக்கு வேலைநேரம் $4\frac{1}{2}$ மணியாகும். இளைஞர், மாதர்களை இரவு 7 மணிமுதல் காலை 6 மணிவரை வேலையில் அமர்த்துவது கூடாது. 7. தற்செயல் வேலையாள்களின் தவறுகட்கு அபராதம் விதிக்கலாம். 8. 500 பேர்களுக்கு மேல் வேலைசெல்யும் தொழிற்சாலைகளில் தொழிலாளர் நல அதிகாரிகள் (Labour Welfare Officers) நியமிக்கப்படல் வேண்டும். இச் சட்டத்தை நிர்வகிக்கவும், கட்டாயமாக அமுலாக்கவும் ஏற்கெனவே இருந்த அமைப்பில் எந்தவித மாற்றத்தையும் செய்யவில்லை. ஆனால், ஆலை ஆய்வகங்களை (Factory Inspectorates) வலுப்பெறச் செய்யவேண்டுமென்று மாநில அரசுகளுக்கு இச் சட்டம் அறிவுறுத்தியது. மேலும், மாநில அரசுகளின் ஆலை ஆய்வகங்களின் பணிகளோடு, கூட மத்திய அரசு, தொழிற்சாலை ஆலோசனை உயர் அதிகாரி அலுவலகத்தையும் (Advisory Organisation) ஏற்படுத்தியுள்ளது.

1948-ன் தொழிற் சட்டப் தொழிலாளர் நலம், உடல் நலம், பாதுகாப்பு முதலியவற்றை அளித்ததன்மூலம் இந்தியத் தொழிற்

கூடச் சட்ட வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கியது. இது இந்தியத் தொழிலாளர்களின் உற்பத்தித் திறனை உயர்த்தப் பெரிதும் உதவியது. ஆலைகளின் தலைமை ஆலோசகரின் (Chief Advisor) கருத்துகளை ஆலைகள் ஏற்றுப் பணியாற்றத் தகுந்த அமைப்பை ஏற்படுத்த வேண்டும். மாநிலங்கள் தொழிற்கூடக் கண்காணிப்புப் பணியை ஏற்றுள்ளன. 1956-ம் ஆண்டில், 1948-ம் ஆண்டுச் சட்டத்தில் திருத்தம் கொண்டு வரப்பட்டது. ஆனால், இச்சட்டங்களைக் கடின உழைப்புத் தொழில்களான (Sweated Industries) பீடி, மைக்கா அரக்கு, நெசவு போன்ற ஒழுங்குப் படுத்தப் படாத (Unregulated Factories) தொழில்களில் செயல்படுத்த முடிவதில்லை. மத்தியப் பிரதேசம், தமிழ்நாடு, கேரளம், மைசூர் ஆகிய மாநிலங்களில் மட்டும் கடின உழைப்புத் தொழிலாளர் நிலையைச் சீர்படுத்தச் சட்டங்கள் இயற்றப் பட்டுள்ளன.

## III. கூலியும் தொழிலாளர் சட்டங்களும்

### 1. 1948-குறைந்தபட்சக் கூலிகள் சட்டம்

மூன்றும் திட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருப்பதைப் போல், "இந்தியத் தொழிலாளர் கொள்கை ஒரு திட்டமிட்ட பொருளாதாரத்தின் தேவைகளுக்கேற்பவும் தொழிலாளர்கள், தொழில் நிறுவனங்கள் இவைகளின் குறித்த தேவைகளுக் கேற்பவும் அமைக்கப்பட்டுள்ளன"[1] இக் கொள்கைகளை அமைத்து அவற்றை அமுலாக்குவதற்கு அரசு, முதலாளிகள், தொழிலாளிகள், அரசாங்கம், இவர்களின் பிரதிநிதிகளடங்கிய கூட்டுக் குழுக்களை அமைத்துள்ளது. இந்த முக்கூட்டு (Tripartite Machinery) அமைப்பின் மேல்மட்டத்தில் தொழிலாளர் மாநாடு அமைந்துள்ளது. தொழிலாளர்கட்குக் குறைந்த கூலி அளிப்பதால் அவர்களது ஊக்கமும் உற்பத்தித் திறனும் குறைகிறது. அதிக கூலி கொடுப்பதால் வாழ்க்கைச் செலவு அதிகரித்து மேலும், கூலி—விலை ஏற்றத்தை அதிகரிக்க செய்யுமென்பது உண்மையாகும். அதற்காகக் குறைந்த கூலியை உயர்த்துவதைச் சிலகாலம் ஒத்தி வைக்க வேண்டுமென்பது முறையாகாது. தொழிலாளர்களது வாழ்க்கைத் தரம் உயர அவர்களுக்குக் குறைந்த அளவு ஊதியமாவது அளிக்கப் படவேண்டும். சிறிய தொழில்களில் பரவலாகப் பணிபுரிந்து வரும் அமைப்பில்லாத தொழிலாளர்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டு 1948-ம் ஆண்டில் குறைந்த பட்ச ஊதியச் சட்டம் (Minimum Wages Act) கொண்டு வரப்பட்டது. இதன் மூலம் சில அட்டவணைப் படுத்தப்பட்ட (Sheduled)

[1] மூன்றும் ஐந்தாண்டுத் திட்டம் ப. 250.

தொழில்களுக்குக் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப்படும் வேளாண்மை தவிர மற்ற எல்லாத் தொழில்கட்கும் குறைந்தபட்ச கூலிகள் நிர்ணயிக்கப்படும். பல்வேறு மாநிலங்களில் வேளாண்மைக் கூலிகளுக்கும் குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயிக்கப் பட்டுள்ளது.

1948-வது ஆண்டுக் குறைந்தபட்ச ஊதியச் சட்டப்படி சில தேர்ந்தெடுத்த தொழில்களுக்குக் கூலி நிர்ணயிக்கப்படும். இதனால் தோட்டங்கள், அரிசி ஆலைகள், மோட்டார் போக்குவரத்து, சாலையமைப்பு, கம்பளி நெசவு, புகையிலைத் தொழில், போன்றவைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள் பயனடைந்தனர். இத்தகைய தொழிலாளர்களின் இயக்கம் தோன்ற வழியில்லாததாலும், அவர்களது பேரசக்தி குறைவாக உள்ளதாலும் இச் சட்டம் தேவைப்பட்டது. இதனால் அவர்கள் குறைந்த அளவு வாழ்க்கைக் கூலியைப் (Subsistence Wages) பெற முடிந்தது. இச் சட்டம் தொழிற்சாலைகளிலும் வீடுகளிலும் பணி புரியும் தொழிலாளர்களுக்கும் பாதுகாப்பு அளிக்குமெனினும், இச் சட்டத்தில் சேர்க்கப்படாமல் பல தொழில்கள் இருந்தன. எனவே, தேவைக்கேற்றுற்போல் பயன்பெற வேண்டிய பல தொழில்களையும் சேர்த்துக்கொள்ள அரசுக்கு இச் சட்டம் அதிகாரம் வழங்கியது. இரண்டாம் திட்டக் கால மத்தியில் கூலியை நிர்ணயிப்பதில் ஒரு புதிய பரிசோதனை நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. முக்கூட்டுக் கூலி வாரியங்கள் (Tripratite Wages Boards) ஒருமித்த பரிந்துரைகளை வலியுறுத்தும் நோக்குடன் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இரண்டாம் திட்ட இறுதியில் பருத்தி நெசவு, சர்க்கரை, சிமெண்டு ஆகிய தொழில்களில் கூலி வாரியங் களின் பரிந்துரைகள் சுயமாகவே நடைமுறைப்படுத்தப்பட்டன. மார்ச் 1961 முதல் தோட்டத் தொழில்கள், சணல், நிலக்கரி, இரும்பு எஃகு, சுண்ணும்பு, பொறியியல், உரம், தோல்தொழில், சாலைப் போக்குவரத்து, மின் நிறுவனங்கள் ஆகியவைகளில் கூலி வாரியங்கள் அமைக்கப்பட்டன. P. B. கஜேந்திரகாட்கர் அவர்களைத் தலைவராகக் கொண்ட தேசியத் தொழிலாளர் குழு (National Commission on Labouri) கூலி வாரியங்களின் முடிவு களைச் சட்டப்படி நடைமுறைப்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தியது. 31 டிசம்பர் 1959-ம் ஆண்டில் குறைந்த பட்சக் கூலிகள் பட்டியலிலுள்ள தொழில்களில் பெரும்பான்மையானவை களில் பெரும்பாலான மாநிலங்களில் குறிக்கப்பட்டன. ஒரு மத்திய ஆலோசக வாரியமும் (Central Advisory Board) மாநிலங் களில் ஆலோசக அதிகாரிகளும் நியமிக்கப்பட்டனர். குறைந்த பட்சக் கூலிகள் பட்டியலில் உள்ள எல்லாத் தொழில்களிலும் எல்லா மாநிலங்களிலும் குறிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்

1948-ன் குறைந்த பட்சக் கூலிச்சட்டம் திருத்தப்பட்டு 1961-ல் நிறைவேறியது. இச் சட்டத்தில் குறைந்த பட்சக் கூலி துல்லிய மாக விளக்கப்படவில்லை.

ஒரு தொழிலில் ஆயிரம் பேருக்கும் குறைவாக உள்ளனர் என்றால் அதற்கான ஊதியத்தை மாநில அரசு நிர்ணயிக்க முடியாது. ஆயிரம் பேருக்குக் குறைவாக உள்ள தொழில்கள் பல இருக்கின்றன. எனவே, 1948-ன் சட்டம் நிறையத் தொழில்களை உள்ளடக்கவில்லை. கூலியை நிர்ணயிக்கும் அமைப்பு திருப்தி கரமாய் இல்லை. ஒவ்வொரு தொழிலுக்கும் கூலியை நிர்ணயிக் கவும், மாற்றியமைக்கவும் ஒவ்வொரு நிரந்தரமான அமைப்பு தேவை. ஒவ்வொரு மாநிலத்திலும் குறைந்தபட்சக் கூலியைக் கட்டாயமாக அமுலாக்கும் அமைப்பு உடனடியாகத் தேவைப் படுகிறது. எல்லாத் தொழில்களிலும் அமுலாக்கப்படத்தக்க ஒரு சீரான தேசிய குறைந்த பட்சக் கூலியை முடிவாக நிர்ண யிப்பதே குறிக்கோளாக அமையவேண்டும். 1948-ன் சட்டம் 1957-ம் ஆண்டில் திருத்தப்பட்டுக் கூலியாட்கள் 1,000 க்கும் குறைவாக உள்ள தொழில்களுக்கும், வேளாண்மைக் கூலிகளுக்கும் குறைந்த பட்சக்கூலி நிர்ணயிக்கப்பட்டன.

2. 1950-ன் நியாயக் கூலி மசோதா (Fair Wages Bill of 1950)

குறைந்த பட்சக் கூலியை நிர்ணயிக்க எடுக்கப்படும் நட வடிக்கைகள் தொழிலாளர்கள் நியாயக் கூலிபெறுவதற்கும் பின்னர் இலாபத்தில் பங்கேற்பதற்கும் வழியாய் அமையும். நியாயக்கூலி பெறுவதானது தொழிலாளர் நிர்வாகத்தினரின் உறவை வலுப்படுத்த உதவும். இதன் விளைவாகத் தொழிலாளர் உற்பத்தித்திறன் அதிகரித்து உற்பத்தியின் அளவும் பெருகும். நியாயப் கூலிக்குழு (Fair Wages Committee) குறைந்த பட்சக் கூலியைக் கீழ்கண்டவாறு விளக்குகிறது. “குறைந்தபட்சக் கூலி தொழிலாளர்களின் குறைந்தபட்ச வாழ்க்கைச் செலவை மட்டும் கணக்கில் கொள்ளாமல், தொழிலாளரின் திறனையும் பாதுகாக்கத் தக்க வகையில் இருக்கவேண்டும். குறைந்த பட்சக் கூலிக்கும் உயிர் வாழ்க்கைக் கூலிக்கும் (Living Wage) மத்தியில் ஒரு அளவில் நியாயக்கூலி நிர்ணயக்கப்படவும் வகைசெய்யப் படவேண்டும்.” குறைந்தபட்சக் கூலியின் தரத்திற்கு அதிகமாக உயிர் வாழ்க்கைக் கூலியின் தரம் இருக்கவேண்டுமென்று குழு குறிப்பிட்டது. நியாயக்கூலியை நிர்ணயிக்கும் போது உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றுடன் கூட, குழந்தைகளின் கல்வி, நோய்க்குப் பாது காப்பு, மற்ற இன்றியமையாத சமூகத் தேவைகள் ஆகியவைகளைக் கருத்தில் கொள்ள வேண்டுமென்று அக் குழு அறிவுறுத்தியது

குறைந்தபட்சக் கூலிக்கு அதிகமாகவும், ஆனால் உயர் வாழ்க்கைக் கூலிக்குக் குறைவாகவும் இருக்கும் நியாயக் கூலியைப் பெறுவதற்கு நடவடிக்கை எடுப்பது நம்முடைய முதல் முயற்சியாகும். இதற்குமேல் உயர் வாழ்க்கைக் கூலி, தொழிலாளர்கள் விரைவில் பெறவேண்டுமென்பதே நம்முடைய அடிப்படைக் குறிக்கோளாக இருக்கவேண்டும். இந்தியா போன்ற வளர்ச்சிக் குறைந்த நாடுகளில் உயிர் வாழக்கைக் கூலியைக் குறுகிய காலத்தில் சாதிப்பது இயலாததாகும், எனவே, படிப்படியாகக் குறைந்தபட்சக் கூலியைக் அதிகரித்து விரைவாக நியாயக் கூலியைப் பெற்று உயர் வாழ்க்கைக் கூலியை நிலைநாட்டுவது நம் நீண்டகால குறிக் கோளாக இருக்க வேண்டும். இந் நோக்கத்தைக் கருத்திற் கொண்டு 1950-ல் நியாயக் கூலி மசோதா நாடாளுமன்றத்தில் கொண்டுவரப்பட்டது. ஆனால், இது சட்டமாக்கப்படவில்லை. இதனால், தொழிற்சாலைகட்கும், சுரங்கங்கட்கும் நியாயக்கூலி நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டது. "நியாயக்கூலி குறைந்தபட்சக் கூலியைவிட அதிகமாகவும் வாழ்க்கைக் கூலியை விடச் சற்றுக் குறைவானதாகவும் இருத்தல் வேண்டும்" என்று இம் மசோதா இலக்கணம் வகுத்தது. நியாயக் கூலியின் இறுதியளவில் குறைந்தபட்சக் கூலியையும், உயர் அளவுத் தொழில் நிறுவனத்தின் வழங்கும் சக்தியையும் பொறுத்து அமையும். நியாயக் கூலிகளை நிர்ணயிக்க மாநில நியாயக்கூலி வாரியங்கள் ஏற்படுத்தவும் இம் மசோதா வகை செய்தது.

ஒவ்வொரு தொழிலிலும் கூலிகளை ஒழுங்குபடுத்த மண்டல வாரியங்களும் (Regional boards) அமைக்கப்பட வேண்டுமென்று கூறப்பட்டது. இந்த வாரியங்கள் கூலியைப்பற்றி ஆராய்ந்து கொண்டிருக்கையில் வேலை நிறுத்தமோ, கதவடைப்போ நடை பெறுதல் கூடாது. நியாயக் கூலி மசோதாவை மீண்டும் புதுப் பித்துச் சட்டமாக்க அரசு ஆராய்ந்து வருகிறது. குறைந்தபட்சக் கூலிச்சட்டம் எல்லா மாநிலங்களிலுமுள்ள எல்லாத் தொழில் களையும் உள்ளடக்கவில்லை. எனவே, ஐந்தாண்டுத் திட்டங்களில் உண்மைக் கூலிகளை உயர்த்தும் குறிக்கோளை கொண்ட கூலிக் கொள்கை (Wage Policy) வலியுறுத்தப்பட்டு வருகிறது. கூலி யாட்கள் நியாயக் கூலியைக் கோருதல் மறுக்கப்பட முடியாத தாகுமென்பதை அரசு உணர்ந்துள்ளது. எனவேதான் இரண்டாம் திட்டக் காலத்தில் முக்கூட்டுக் கூலி வாரியங்கள் தேசியமட்டத்தில் 24 பெரிய தொழில்களில் அமைக்கப்பட்டன. சமூக நீதியை நிலைநிறுத்தவும், தொழிலாளர்கள் தங்கள் திறனை மேம்படுத்த ஊக்குவிக்கவும் ஒவ்வொரு வாரியமும் ஒவ்வொரு தொழிலிலும் முயன்று வருகிறது. இரண்டாம் திட்ட அறிக்கையில் குறிப்பிட்

டிருப்பதுபோல் "வருங்கால சமூகத்தின் தொழிலாளர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் அளவிற்குக் கூலிகள் நிர்ணயிக்கப் படவேண்டும்."[1]

கூலிக்குழுவால் குறிப்பிடப்பட்ட நியாயக்கூலிக் கோட் பாட்டை நடைமுறைப்படுத்தச் சிறந்த அமைப்பாகக் காணப் படுவது முக்கூட்டுக்கூலி வாரியங்களாகும். அரசும் தொழிலாளர் களின் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்த நியாயக் கூலிகளை நிர்ணயிக்கவும் இலாபப் பங்கீட்டுத் திட்டங்களை நிர்வகிக் கவும் சிறந்த வலுவான அமைப்பை ஏற்படுத்தித் துணைபுரிய வேண்டியது இன்றியமையாததாகும்.

## IV. சமுதாயக் காப்பீட்டுச் சட்டங்கள் (Social Security Legislations)

சமுதாயக் காப்பீடு என்பது "சமுதாயத்தின் உறுப்பினர்கட்கு ஏற்படும் சில இடர்களுக்கு எதிராகத்தக்க அமைப்புகளை ஏற்படுத்திச் சமுதாயத்திற்குப் பாதுகாப்பு அளிப்பதைக் குறிக்கிறது." நோய் வாய்ப்படுதல், விபத்து, முதுமை போன்றவற்றால் ஏற்படும் தொல்லைகள், மகப்பேறு, எதிர்பாராத விதமாக ஏற்படும் நோய், விபத்து போன்ற இடர்களிலிருந்து தனியொருவன் தன் சக்தியினால் பாதுகாப்புத் தேட இயலாது. தொழிலாளர்கள் படும் இத்தகைய அல்லல்களைத் தவிர்ப்பதே சமுதாயக் காப்பீட்டுச் சட்டங்களின் நோக்கமாகும். தொழிலாளர் நல நோக்குடைய, மக்கள் ஆட்சி முறையைக் கொண்ட பொருளாதார வளர்ச்சித் திட்டங்களைக் கொண்ட இந்தியாவில் சமுதாயக் காப்பீட்டு நடவடிக்கைகளும், சமூகப் பணிகளும் தொழிலாளர் சமூகத்தின் பாறைக் சுற்களாய் அமைந்துள்ளன. பல நாடுகளில் வெகுகாலத்திற்கு முன்பே இத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இந்தியாவில் ஆரம்ப காலத்திலிருந்த அரசின் கொள்கையும் வலுவிழந்த தொழிற் சங்க வளர்ச்சியும் இத்தகைய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள தடையாய் இருந்தன. 1944-ல் அடார்கர் (Adarkar) என்பவர் தமது அறிக்கையில் கட்டாய இழப்பீட்டுத் திட்டத்தை வலியுறுத்திய பின்னர், 1948-ல் தொழிலாளர் அரசு காப்பீட்டுச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டம் சமூகக் காப்பீட்டுத் துறையில் சிறிது முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. ஆனால், சமூகக் காப்பீடு (Social Insurance) தொழிலாளர்களுக்கு ஓரளவு பாதுகாப்பைத்தான் தரமுடியும். ஆனால், சமுதாயப் பாது

[1] இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், ப. 579.

காப்புக் (Social Security) கொள்கை, தக்க வருமானப் பங்கீட்டையும் எல்லாவகைத் தேவைகளைப் பூர்த்தி செய்யவும், காயம், நோய் இவைகளைத் தடுக்கவும், தேவையான ஒருங்கிணைந்த வழியைக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. சுருங்கக்கூறின், சமுதாயப் பாதுகாப்பு என்பது நல நோக்குடைய வளர்ச்சித் திட்டங்களின் ஓர் அடிப்படைக் குறிக்கோளாக உள்ளது. சமுதாயக் காப்பீடு என்பது அக்குறிக்கோளை அடைவதற்குதவும் ஒரு சாதனமாக உள்ளது.

தொழிலாளியின் திறனை அதிகரிக்கவும் தொழிலாளர்களிடம் உற்பத்தியைப் பெருக்கவல்ல ஆர்வத்தைத் தூண்டவும் சமுதாயக் காப்பீட்டு நடவடிக்கைகள் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. பொருள்களின் விலைகள் அதிகரித்துவரும் தற்காலத்தில் உற்பத்தியை அதிகரிக்க வேண்டியது அடிப்படைத் தேவையாக உள்ளது. எனவே, ஐந்தாண்டுத் திட்டங்களில் அமுலாக்கப்படும் நல்நோக்குடைய வளர்ச்சித் திட்டங்களின் ஓர் இன்றியமையாத ஒருங்கிணைந்த அம்சமாக சமுதாயக் காப்பீடு விளங்கவேண்டும். செக்கோஸ்லோவேகியா (Zechoslovakia) போன்ற கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் சமுதாயக் காப்பீட்டுச் சட்டங்கள் வளர்ச்சித் திட்டங்களின் நடவடிக்கைகளோடு ஒருங்கிணைந்துள்ளன.

### ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் சமுதாயக் காப்பீட்டுச் சட்டங்கள் (Social Security Acts Under British rule)

விடுதலைக்கு முன்பு பல்வேறு மாநிலங்களில் ஏராளமான மகப்பேறு நலச் சட்டங்களும் 1923-ன் தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டமும் (Workmen's Compensation Act) அமுலில் இருந்தன. 1923-ம் ஆண்டின் சட்டப்படி பணிபுரியும் தொழிலாளிக்கு காயங்கள் ஏற்பட்டால் முதலாளி இழப்பீட்டுத் தொகையைக் கொடுக்கவேண்டும். விபத்தின் தன்மையையும் தொழிலாளியின் சராசரி மாத ஊதியத்தையும் அடிப்படையாகக் கொண்டு முதலாளிகள் இழப்புத் தொகை அளிக்கவேண்டும். 1926, 29, 31, 33 ஆகிய ஆண்டுகளில் இச்சட்டத்திற்குத் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. தொழிலாளர் இறந்தால் இழப்புத் தொகை அவனது மாதச் சம்பளத்தைப் பொறுத்து அளிக்கப்படவேண்டும். நிரந்தரமாய் வேலை செய்யமுடியாதவர், தாற்காலிகமாக வேலை செய்யமுடியாதவர் என்று பாகுப்படுத்தி, அதற்கேற்றபடி இழப்புத் தொகை அளிக்கவேண்டும். 1959வது ஆண்டுத் திருத்தச் சட்டத்தின் படி இழப்புத் தொகை அளிப்பதில் முதியோர், சிறியோர் என்ற வேறுபாடு இல்லை. இழப்புத்தொகை கொடுப்பதில் தாமதம்

ஏற்பட்டால் 6 சதவிகித வட்டியோடு அளித்தல்வேண்டும். 1923-ம் ஆண்டின் சட்டம் 1962-ல் திருத்தப்பட்டு இழப்பீட்டுத் தொகையை உள்ளடக்கும் கூலிமட்டம் ரூ. 400லிருந்து ரூ. 500-ஆக உயர்த்தப்பட்டது. மேலும், இழப்பீட்டுத் தொகை வீதங்களும் திருத்தப்பட்டன.

அடார்கரின் சுகாதாரக் காப்பீட்டுத் திட்டம் (Adarkar's Health Insurance Scheme)

1943-ம் ஆண்டில் பேராசிரியர் B. P. அடார்கர் தொழில் துறை வேலையாள்களுக்காக ஒரு சுகாதாரப் பாதுகாப்புத் திட்டத்தைத் தயாரித்தார். அத் திட்டத்தில் கட்டாய இழப்பீட்டுத் தொகைக் கோட்பாடு வலியுறுத்தப்பட்டது. சில கட்டுப்பாடு களுடன் இத் திட்டம் முதலில் துணிநெசவு, பொறியியல், தாது—உலோகம் ஆகிய தொழில்களில் முதலில் மாதிரி நடவடிக்கையாக மேற்கொள்ளப்பட்டது. 1945-ல் பன்னாட்டுத் தொழிலாளர் நிறுவனத்தின் (I.L.O.) இரு நிபுணர்கள் அடார்கர் திட்டத்தை ஆராய்ந்து அதை எல்லா நிரந்தர ஆலைகளையும் உள்ளடக்கும் வகையில் விரிவாக்க அறிவுறுத்தினர். அடார்கரின் அறிக்கை பன்னாட்டு தொழிலாளர் நிறுவனத்தின் நிபுணர்களின் ஆலோசனை, இவற்றை அடிப்படையாகக் கொண்டு மத்திய அரசு ஒரு மசோதாவை வரைந்தது. அதுவே 1948-ல் தொழிலாளர் அரசு காப்பீட்டுச் சட்டமாக நிறைவேற்றப்பட்டது.

1948-ன் தொழிலாளர்க்கான அரசு காப்பீட்டுச் சட்டம் (Employees State Insurance Act 1948)

இச்சட்டத்தின் முக்கிய அம்சங்கள் வருமாறு:

1. இருபது அல்லது அதற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் பணிபுரியும் எல்லா நிரந்தர ஆலைகளுக்கும் முதல் கட்டத்தில் இச் சட்டம் நடைமுறைக்கு வரும். இச் சட்டம் ஜம்மு, காஷ்மீர் மாநிலத்தைத் தவிர இந்தியா முழுவதும் நடைமுறைப்படுத்தப் படும். 2. உடல் நலக்குறைவு மகப்பேறு, இயலாமை, சார்ந் திருத்தல் (Dependence), மருத்துவப் பணத்தேவை போன்ற இக்கட்டான காலங்களில் தொழிலாளர்கட்கு நன்மைகளை அளிக்க இச் சட்டம் வகை செய்கிறது. 3. இச் சட்டத்தின்படி முதலாளி களும் தொழிலாளிகளும் காப்பீட்டு நிதிக்கு தங்கள் பங்கை (Contribution) அளிக்கவேண்டும். கட்டணம் செலுத்தும் அடிப் படைப் பொறுப்பு முதலாளியைச் சாரும்.

4. காப்பீட்டுத் திட்டத்தை நிர்வகிக்கத் தொழிலாளர் களுக்கான அரசு பாதுகாப்புறுதிக் கூட்டுக் கழகம் (Employees'

State Insurance Corporation) என்றழைக்கப்படும் ஒரு தனி நிறுவனம் அமைக்கப்பட்டது. நிர்வாகக் குழுவாகப் பணிபுரிய இக் கழகம் நிரந்தரக் குழு (Standing Committee) ஒன்று ஏற்படுத்த வேண்டும். மருத்துவ நன்மைகளை அளிக்கும்பொருட்டு இக் கழகத்திற்கு ஆலோசனைக் கூற ஒரு மருத்துவ நலசபை (Medical Benefit Council) அமைக்கப்படவேண்டும். இது மத்திய மாநில அரசுகள், சட்டமன்றம், தொழிலாளர் சங்கம், மருத்துவத்துறை ஆகியவைகளின் பிரதிநிதிகள் அடங்கிய 39 பேர்களால் நிர்வகிக்கப் படுகிறது.

5. இத் திட்டத்தின் நிதிக்கு தொழிலதிபர்கள், தொழிலாளர்கள், அரசு ஆகியோர் தங்கள் பங்கை அளிக்கின்றனர். தொழிலாளர்கள் செலுத்தவேண்டிய தொகை அவர்களது ஊதியத்தைப் பொறுத்துள்ளது. ஒரு ரூபாய்க்கு குறைவாக தினக்கூலி பெறுவோர் ஒன்றும் செலுத்த வேண்டியதில்லை. ஒரு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாய் வரை தினக்கூலி பெறுவோர் 13 காசுகள் செலுத்தவேண்டும். இவ்வாறு அதிகப்பட்சம் ரூ. 1.25 வரை செலுத்துகின்றனர். இச் சட்டத்திற்குத் திருத்தம் கொண்டு வரப்பட்டு முதலாளிகள் மொத்தக் கூலியில் $1\frac{1}{4}$ சதவீதம் செலுத்த வேண்டியது $2\frac{1}{2}$ சதவீதமாக உயர்த்தப்பட்டது. மத்திய மாநில அரசுகள் இக் கழகத்திற்கு மானியங்கள் (Grants) நன்கொடைகள், (Dornations) வழங்கி வருகின்றன.

நோய்வாய்ப்பட்டோர்க்கு உதவி (Sickness Benefit)

காப்பீட்டுத் தொகைச் செலுத்துவோர் அத்தாட்சி பெற்ற நலக்குறைவிற்கு உதவித் தொகை பெறுகின்றனர். ஓராண்டில் 56 நாட்கள் வரை நலக்குறைவுற்றோர்க்கு பணம் வழங்கப் படுகிறது. சராசரித் தினக்கூலியில் சரிபாதி நாளொன்றிற்கு உதவித் தொகையாகக் கிடைக்கிறது. உதவி பெறுவோர் அரசு காப்பீட்டு மருத்துவமனையில் சிகிச்சை பெறவேண்டும்.

மருத்துவ உதவி (Medical Benefit)

உடல் நலமின்மை, மகப்பேறு, இயலாமை போன்ற காலங்களில் தொழிலாளர்கட்கு மருத்துவ உதவியளிக்கப்படுகிறது. நோய், விபத்து காரணமாய் ஏற்படும் உடல் நலக்குறைவு, மகப்பேறு முதலியவற்றிற்குத் தொழிலாளர்கட்கான அரசு காப்பீட்டு மருத்துவமனைகளில் இலவச சிகிச்சை அளிக்கப்படுகிறது. தற்போது சயரோகம், தொழுநோய், புற்றுநோய் முதலிய வற்றிற்கும் ஆரம்ப சிகிச்சைகள் இம் மருத்துவமனைகளில் செய்யப் படுகின்றன.

மகப்பேறு வசதி (Maternity Benefit)

மகப்பேறு காலத்தில் பன்னிரண்டு வாரங்களுக்குச் சராசரி தினக்கூலியில் பாதி வழங்கப்படுகிறது. தினசரி இவ்வுதவித் தொகை 75 பைசாவிற்கு மிகாது.

இயலாமைக்கான உதவி (Diablement Benefit)

கோர விபத்தினுல் (Fatal Accidents) இயலாமை நிலை அடைவோர்க்கு நிதியுதவி வழங்கப்படுகிறது. இது இயலாமையின் தன்மையைப் பொறுத்து வழங்கப்படும்.

அக்டோபர் 6, 1948-ல் தொடங்கப்பெற்ற இக் கழகம் முதலாவதாக டெல்லி, கான்பூர், பம்பாய் ஆகிய இடங்களில் மாதிரித் திட்டமாகப் புகுத்தப்பட்டது. இத் திட்டமானது மற்ற முக்கியத் தொழில் நகரங்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டது. 1965-ம் ஆண்டில் இது 29—இலட்சம் தொழிலாளர்களுக்கும், பிப்ரவரி 1970-ல் சுமார் 37·7 இலட்சம் தொழிலாளர்களுக்கும் சேவை புரிந்தது. 1963-64 வரை இத் திட்டத்திற்கு ரூ. 6·54 கோடியும் முதலாளிகள் 8·11 கோடியும் செலுத்தியுள்ளனர். தொழிலாளர் நலனுக்காக ரூ. 5·34 கோடியும் வழங்கப்பட்டது. பிப்ரவரி 1970-ல் இத் திட்டம் 314 முக்கிய நகரங்களில் நடைமுறையில் இருந்தது. நான்காம் திட்டக் காலத்தில் இத் திட்டம் மேலும் விரிவடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

முதலாளிகள் இக்காப்பீட்டுத் திட்டத்தை விரும்பி வரவேற்கவில்லை. அவர்களின் செலவு அதிகமாவதாலும், தொழிலாளர்களிடமிருந்து தொகை வசூலிப்பதில் சிரமம் இருப்பதாலும் இதனை அவர்கள் விரும்பவில்லை. தக்க மருத்துவர்கள் கிடைக்காமையும், மருத்துவ நிலையங்கள் அமைக்கத் தக்க இடங்கள் கிடைக்காமையும் சில குறைகளாகும். 1965-ல் இத் திட்டத்தில் பயன்பெறும் தொழிலாளர்களின் ஊதிய வரம்பு ரூ. 400 விருந்து ரூ. 500 ஆக உயர்த்தப்பட்டது. இதனுல் அதிக அளவுத் தொழிலாளர்கள் பயன்பெற முடிகிறது.

வேலையின்மைக் காப்பீடு (Unemployment Insurance)

1953-ம் ஆண்டில் இந்தியாவில் முதன்முதலாக தொழில் தகராறுச் சட்டத்தின் மூலம் இந் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. இத் திட்டத்தின் மூலம் ஆட்குறைப்புச் செய்கையில் வேலையில்லாமல் போவோர்க்கு இழப்புத்தொகை வழங்கப்படும். தொடர்ந்து ஓர் ஆண்டிற்குக் குறையாமல் வேலைபார்க்கிற தொழிலாளியை நீக்க வேண்டுமெனில் ஒருமாத முன்னறிவிப்புக்

கொடுக்கவேண்டும். தொழில் நிறுவனங்களிலும், சுரங்கங்களிலும் 50 பேர்களுக்கு மேல் வேலைக்கு அமர்த்தப்பட்டால் அவர்கட்கு இத்தகைய இழப்புத்தொகை அளிக்கவேண்டும். 1954-ம் ஆண்டில் இத் திட்டத்தில் தோட்டத் தொழிலாளர்களும் உள்ளடங்கினர். 1960-ம் ஆண்டு நிறுவனங்கள் திருத்தச் சட்டத்தின்படி தொழிலாளர்கட்கு ஒருவகைப் பாதுகாப்பு அளிக்கப்பட்டது. இச் சட்டப்படி ஒரு நிறுவனத்தைக் கலைப்பதாக இருந்தால் முதன் முதலாகத் தொழிலாளர்கட்குக் கொடுக்கப்பட வேண்டியவற்றைக் கணக்குத் தீர்த்துக் கொடுத்துவிட வேண்டும்.

1952-ன் தொழிலாளர் பாதுகாப்பு நிதிச் சட்டம் (Employees Provident fund Act)

1951-ல் பாட்னுவில் நடைபெற்ற தொழிலமைச்சர்கள் மாநாட்டில் தொழிலாளர்கட்குப் பாதுகாப்பு நிதித் திட்டத்தைக் கொண்டு வருவது பற்றி நன்கு விவாதிக்கப்பட்டது. இதன் விளைவாக, 1952-ம் ஆண்டில் தொழிலாளர் முன்னெண்ண நிதிச் சட்டம் கொண்டுவரப்பட்டது. 50 பேருக்கு மேலுள்ள சிமெண்டு, சிகரெட், பொறியியல், இரும்பு எஃகு, காகிதம், பருத்தி நெசவு போன்ற முக்கிய தொழில் நிறுவனங்களுக்கு இச் சட்டம் நடைமுறைக்கு வந்தது. அரசு மற்றத் தொழிற்சாலைகளைச் சேர்த்துக் கொள்ளுவதற்கும், 50 பேருக்குக் குறைவாக உள்ள தொழில் நிறுவனங்கட்கும் இச் சட்டத்தை நடைமுறைப்படுத்த மத்திய அரசு அதிகாரம் பெற்றது. 1956, 1958 ஆகிய ஆண்டுகளின் திருத்தங்களின் விளைவாக மத்திய மாநில அரசுகள் நடத்தும் பொதுத்துறை நிறுவனங்கட்கும், தொழிற்சாலை அல்லாதவற்றிற்கும் இத் திட்டம் கொண்டுவரப்பட்டது. 1960-ம் ஆண்டு முதல் 10 பேருக்கு மேலுள்ள எல்லாத் தொழிற்சாலைகளும் இச் சட்டதிற்குள் கொண்டுவரப்பட்டன.

இத் திட்டத்தில் தொழிலாளர்களும் முதலாளிகளும் கட்டாயமாகத் தொகை செலுத்தவேண்டும். தொழிலாளர்கள் தங்கள் ஊதியத்தில் $6\frac{1}{4}$ சதவீதத்தைச் செலுத்தி வரவேண்டும். இதே அளவு முதலாளிகளும் செலுத்தி வரவேண்டும். ஒரு வருடம் தொடர்ந்து வேலைபார்த்தவரும் எல்லாமாகச் சேர்ந்து மாதம் ரூ. 1000க்குக் குறைவாக ஊதியம் பெறுவோரும் இத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். 1963-ம் ஆண்டு முதல் 54 தொழில்களில் முன்னெண்ண நிதிக் கட்டணத்தை (Provident fund Contribution) $6\frac{1}{2}$ சதவீதத்திலிருந்து எட்டு சதவீதமாக உயர்த்தினர். முக்கியத் தொழில்கள் எல்லாவற்றிலும் இவ்வாறு கட்டணம் உயர்த்தப்பட்டது.

முதலாளிகள் இக் கட்டணத்தைச் செலுத்துவதற்காக வேண்டிக் கூலியைக் குறைப்பது அனுமதிக்கப்படுவதில்லை. ஒரு நிறுவனத்தின் கிளைகளிலும் பிரிவுகளிலும் வேலைபார்க்கும் எல்லாத் தொழிலாளர்களையும் இத் திட்டத்தின் கீழ்ச் சேர்த்துக் கொள்ளவேண்டும். 1966-ம் ஆண்டுவரை இத் திட்டத்தினல் 48·23 இலட்சம் பேர் பயன்பெற்றனர். செலுத்தப்பட்ட முன்னெண்ண நிதித் தொகை ரூ. 872·39 கோடியாகும். 1969 செப்டம்பர் மாத முடிவில் இச் சட்டம் 123 தொழில்கட்கும் 45,513 நிறுவனங்கட்கும் விரிவாக்கப்பட்டது இச் சட்டத்தின் மூலம் 54·19 இலட்சம் தொழிலாளர்கள் பயனடைந்து வருகின்றனர். அளிக்கப்பட்ட மொத்த முன்னெண்ண நிதித் தொகை ரூ. 1462 கோடியாக உயர்ந்தது ஜூலை 1 1968-ம் ஆண்டு முதல் மத்திய அரசு ஒரு பொது முன்னெண்ண நிதியை (Public Provident Fund) ஏற்படுத்தியுள்ளது. இந் நிதிக்குத் தொடர்ந்து கட்டணம் செலுத்தத் தேவையில்லை. இத் திட்டம் சுயவேலையில் ஈடுபட்டுள்ள கலைஞர்கள், வழக்குரைஞர்கள், மருத்துவர்கள் போன்றவர்கட்காக ஏற்படுத்தப்பட்டது. அது சுயமான ஒரு திட்டமாக (Voluntary Scheme) இருந்துவருகிறது.

## முடிவுரை

இந்தியத் தொழிலாளர்களின் நலனைப் பல்வேறு வழிகளில் திட்டக் காலத்தில் மேம்படுத்த அரசு பல்வேறு சட்டங்களை இயற்றி அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி வருகிறது. முக்கியமாகத் தொழில் தகராறுகளை நீக்கி, தொழிலமைதியை ஏற்படுத்தி, தொழிலாளர் திறனை உயர்த்தி, அவர்களுக்கு நியாயமான கூலிகள், சமூகப் பாதுகாப்புப் போன்ற பல்வேறு நலன்களை அளிக்கத் தக்க சமயத்தில் சட்டங்கள் இயற்றிவருகிறது. இந்தியத் தொழில் உற்பத்தியின் அளவு அதிகரிக்க இத்தகைய திறமையான நடவடிக்கைகள் மக்களாட்சியின் அடிப்படையில் மேற்கொள்ளப்படவேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

# 53. பிராந்தியப் பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடுகள்

## (Theories of Regional Development)

### தொழிற் செறிவுக் கோட்பாடு

### (Theory of Industrial Location)

ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகள் சரி சமமான பொருளாதார வளர்ச்சியைப் பெற வேண்டியது இன்றியமையாததாகும். பின் தங்கியப் பொருளாதார வளர்ச்சியைப் பெற்றுள்ள பகுதிகள் சமுதாய, பொருளாதார கலாச்சாரத் துறைகளில் சரி சமமாக வளர்ச்சியடைய வேண்டும் என்பதைத் தற்காலத்திய மக்கள் நலம் பேணும் அரசுகள் உணர்ந்து, அதற்குத் தகுந்த பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டி வருகின்றனர். பிற்பட்ட நிலப்பகுதிகளில் தொழில் முன்னேற்றம், வேளாண்மை உற்பத்தி, மற்றப்பொருளாதார நடவடிக்கைகள் போதுமான அளவு ஏற்படுவதற்கு வாய்ப்புகளை அமைத்துத் தரவேண்டியது அரசின் கடமையாகிறது முதலாவதாக, பல்வேறுவகையான தொழில் நிறுவனங்களைப் பரவலாக்கி எல்லா பகுதிகளிலும் அவற்றை வளர்ச்சியடையச் செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகிறது. தொழில் வளர்ச்சியின் தன்மையை அறிய அதன் தொழில் இடப்பாட்டின் தனிக் கோட்பாட்டை (Pure theory of Location) ஆராய வேண்டும். தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் (Classical Economists) இக் கோட்பாட்டைச் சீராக விளக்கவில்லை. தொழில் இடப்பாட்டுப் பிரச்சினைகளை அவர்கள் முழு அளவில் ஆராயவில்லை. 1909-ல் ஜெர்மன் நாட்டுப் பொருளாதார அறிஞர் ஆல்பிரட் வெபர் (Alfred Weber) தொழில் இடப்பாட்டுக் கோட்பாட்டை முறையாக விளக்கினார். அது 1929-ல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட காலத்திலிருந்து தொழில் இடப்பாட்டின் தனிக் கோட்பாடு எல்லோராலும் ஆராயப்பட்டுப் பல்வேறு நிலப்பகுதிகளில் தொழில் வளர்ச்சி ஏற்படத் தேவையான பொதுக் காரணிகள் ஆராயப்பட்டன.

40?

# 53. பிராந்தியப் பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடுகள்

## (Theories of Regional Development)

### தொழிற் செறிவுக் கோட்பாடு
### (Theory of Industrial Location)

ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகள் சரி சமமான பொருளாதார வளர்ச்சியைப் பெற வேண்டியது இன்றியமையாததாகும். பின் தங்கியப் பொருளாதார வளர்ச்சியைப் பெற்றுள்ள பகுதிகள் சமுதாய, பொருளாதார கலாச்சாரத் துறைகளில் சரி சமமாக வளர்ச்சியடைய வேண்டும் என்பதைத் தற்காலத்திய மக்கள் நலம் பேணும் அரசுகள் உணர்ந்து, அதற்குத் தகுந்த பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டி வருகின்றனர். பிற்பட்ட நிலப்பகுதிகளில் தொழில் முன்னேற்றம், வேளாண்மை உற்பத்தி, மற்றப்பொருளாதார நடவடிக்கைகள் போதுமான அளவு ஏற்படுவதற்கு வாய்ப்புகளை அமைத்துத் தரவேண்டியது அரசின் கடமையாகிறது முதலாவதாக, பல்வேறுவகையான தொழில் நிறுவனங்களைப் பரவலாக்கி எல்லா பகுதிகளிலும் அவற்றை வளர்ச்சியடையச் செய்ய வேண்டியது மிகவும் அவசியமாகிறது. தொழில் வளர்ச்சியின் தன்மையை அறிய அதன் தொழில் இடப்பாட்டின் தனிக் கோட்பாட்டை (Pure theory of Location) ஆராய வேண்டும். தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் (Classical Economists) இக் கோட்பாட்டைச் சீராக விளக்கவில்லை. தொழில் இடப்பாட்டுப் பிரச்சினைகளை அவர்கள் முழு அளவில் ஆராயவில்லை. 1909-ல் ஜெர்மன் நாட்டுப் பொருளாதார அறிஞர் ஆல்பிரட் வெபர் (Alfred Weber) தொழில் இடப்பாட்டுக் கோட்பாட்டை முறையாக விளக்கினார். அது 1929-ல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட காலத்திலிருந்து தொழில் இடப்பாட்டின் தனிக் கோட்பாடு எல்லோராலும் ஆராயப்பட்டுப் பல்வேறு நிலப்பகுதிகளில் தொழில் வளர்ச்சி ஏற்படத் தேவையான பொதுக் காரணிகள் ஆராயப்பட்டன.

இக் காலத்திலிருந்து சமச்சீரான மண்டலத் தொழில் வளர்ச்சியின் கருத்துக்கள் ஆராயப்பட்டன.

## வெப்பரின் பகுத்தறி கோட்பாடு
(Weber's Deductive Theory)

தொழில் இடப்பாட்டைத் தீர்மானிக்கும் பொருளாதார காரணிகளை வெப்பர் முதல்முதலாக ஆராய்ந்து சில உண்மைகளைத் தன் பகுத்தறி கோட்பாட்டில் விளக்கியுள்ளார். ஒரு செலவு ஆய்வு (Cost Analysis) முறையின் மூலமாக வெப்பர் பல்வேறு பிராந்தியங்களில் வேறுபடும் உற்பத்திச் செலவை அடிப்படையாகக் கொண்டு தன் கோட்பாட்டை விளக்குகிறார். அவர் இரு வகையான காரணங்களால் தொழிலிடப்பாடு ஏற்படுகிறது என்று விளக்குகின்றார். (1) பிராந்தியத் தொழில் பங்கீட்டுக் காரணிகள்: இவற்றை பிராந்தியக் காரணிகள் (Regional factors) என்று அழைக்கிறார். (2) தொழிலை மறுபங்கீடு (Redistribution of industry) செய்யக் காரணமாய் உள்ள காரணிகள். அவற்றைத் தொழிலைப் பரவலாக்கும் காரணிகள் என்றும் அழைக்கலாம்.

## பிராந்தியக் காரணிகள்
(Regional Factors)

பல்வேறு தொழில்களின் செலவு வகைகளை ஆராய்ந்தபின் வெப்பர் இரண்டு பொதுப் பிராந்தியக் காரணிகளை விளக்குகிறார். தொழில்கள் ஓரிடத்தில் தேர்ந்தெடுக்கப்பட அடிப்படைக் காரணமாக இருப்பது போக்குவரத்துச் செலவுகளாகும். இச் செலவு எடுத்துச் செல்லப்படும் பொருள்களின் எடையையும் கொண்டு செல்லவேண்டிய தூரத்தையும் பொறுத்ததாகும். மூலப் பொருள்கள், மின்வசதி, சந்தையின் அருகாமை, தொழிலாளர்களின் அளிப்பு, நிதிவசதி, இயற்கைக் காரணிகள் சுய காரணிகள் (Personal Factors) ஆகியவைகளோடு கூடச் சாதகமான போக்குவரத்து வசதிகள் கிடைக்கும் பிராந்தியங்களில் தொழில்கள் தோன்றுகின்றன. போக்குவரத்து வளர்ச்சி பல்வேறு தொழில்களின் வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்குவதால் வெப்பர் அதை வலியுறுத்திக் கூறி, தொழிலாளர்க்கான செலவுகளைப் (Labour Cost) போக்குவரத்துச் செலவுகளோடு ஒப்பிடுகின்றார். குறைந்த கூலிக்குத் தொழிலாளர்கள் கிடைக்கும் இடங்களில் குறைந்த போக்குவரத்துச் செலவின் அடிப்படையில் தொழில்கள் தோன்றுகின்றன. போக்குவரத்துச் செலவு சிறிது அதிகரித்தாலும்,

குறைந்த கூலிக்குத் தொழிலாளர்கள் கிடைக்கும் பகுதிகளில்தான் பொதுவாகத் தொழில்கள் ஏற்படும் என்று வெப்பர் கருதுகின்றார்.

தொழில் ஓரிடத்தில் குவிவதால் குறைந்த செலவில் உற்பத்தியை அதிகரிக்கமுடியும். தொழில் பரவலாக்கப்படுவதால் உற்பத்திச் செலவு புறச் சிக்கனங்களின் (External Economics) மூலம் குறையும். ஆனால், தொழில் குவிவதால் நிலத்தின் மதிப்பு, உள்ளூர் வரிகள் அதிகரித்து, உற்பத்திச் செலவு அதிகரிக்கலாம். தொழில் இடப்பாட்டைத் தீர்மானிக்கும் அடிப்படைக் காரணி யாக விளங்குவது தொழில் நுட்ப உற்பத்தி முறையாகும். வெப்பர் ஓரிடத்திற்குமேல் மற்றோர் இடத்திலும் தொழில் இடப்பாடு ஏற்படும் என்றும் விளக்குகின்றார். ஒரு தொழிலின் பல்வேறு உற்பத்திக் கட்டங்களில் தொழிலை நடத்துவதற்குப் பல இடங்கள் தேவைப்படும். உதாரணமாக காகிதத் தொழிலில் இடப்பாடு இரு இடங்களில் காணப்படுகிறது. கச்சாப் பொருள்கள் கிடைக்கும் பகுதிகளுக்கு அருகாமையில் காகிதக் கூழ் தயாரிக்கப் படுகிறது. காகிதத் தேவையிருக்கும் பகுதிக்கு அருகாமையில் காகித தொழில் வளர்ச்சியடைகிறது.

ஆய்வுரை

வெப்பரின் கோட்பாடு தொழில் இடப்பாட்டின் விளக்கத்தை எல்லோரும் ஆராயும் வண்ணம் ஆர்வத்தை ஏற்படுத்தியது. வெப்பரின் கோட்பாட்டை S. R. டென்னிசன் (S. R. Dennyson), சர்கன்ட் பிளாரன்சு (Sargant Flarence), போன்றவர்கள் ஆராய்ந்து அதன் குறைபாடுகளை எடுத்துரைத்துள்ளனர். முதலாவதாக, இக் கோட்பாடு உண்மைக்குப் புறம்பான நிபந்தனைகளைக் கொண்டுள்ளது. உதாரணமாக, போக்குவரத்துச் செலவு, கொண்டு செல்லப்படும் பொருள்களின் எடை, தூரம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. போக்கு வரத்துச் செலவு மற்றப் பல்வேறு காரணிகளைப் பொறுத்ததாகும். இரண்டாவதாக, குறித்த சில தொழிலாளர் அளிப்புப் பகுதிகள் மட்டும் உள்ளன என்பது தவறாகும். தொழில் வளர்ச்சியினால் புதிய தொழிலாளர் பகுதிகள் ஏற்படும். ஓர் இடத்தில் மட்டும் அளவு கடந்த தொழிலாளர் அளிப்பு இருக்கும் என்பது உண்மை யல்ல. புதிய தொழில்கள் தோன்றுவதால் கூலி வீதங்களும் மாற்றம் அடையும். தொழிலாளர்களால் ஓரிடத்தில் தொழில்கள் தோன்றுவது என்பதைவிட, தொழில் வளர்ச்சியின் விளைவால் தொழிலாளர் அளிப்பு அதிகரிக்கிறது என்பது உண்மையாகும். மூன்றாவதாக, குறித்த சில நுகர்வுப் பகுதிகள் உள்ளன என்பது

தற்காலத்திய அங்காடிப் போட்டியமைப்பில் ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல. A. ராபின்சன் குறிப்பிடுவது போல் போட்டி உற்பத்தியாளர்களால் அமைக்கப்பட்ட பரவலான சந்தைதான் உண்மையில் காணப்படுகிறது. நான்காவதாக, வரலாற்று (Historical), சமூக, காரணிகளால் தொழிற் செறிவு ஏற்படும் நிலையை விளக்க வெப்பரின் கோட்பாடு தவறிவிட்டது என்று ச. பிளாரன்சு குறிப்பிடுகின்றார்.[1] எனவே, இக்கோட்பாடு பகுத்தறி கோட்பாடு என்பதை விடத் தேர்ந்த சில கருத்துகளைக் கொண்ட கோட்பாடு என்பதே உண்மையாகும். கடைசியாக, டென்னிசன் என்பவர் வெப்பரின் கோட்பாடு சில தொழில் நுட்பக் கருத்துகளை மட்டும் மிகைப்படுத்திக் கூறியுள்ளது என்று குறிப்பிடுகின்றார்- உற்பத்திச் செலவு, பொருள்களின் விலைகள், இவையிரண்டிற்குமிடையே உள்ள தொடர்பைச் சரியாக விளக்க வில்லை. எனினும் வெப்பரின் கோட்பாடு ஒரு முழுமையாக பகுத்தறி கோட்பாடாக அமைந்து பொதுவான பிரயோகத் திற்குத் தகுந்ததாய் உள்ளது.

சர்கண்ட் பிளாரன்ஸின் தொகுத்தறிவு ஆய்வு முறை (Sargant Flarence's Inductive analysis)

தொழிற் பகிர்வுப் போக்கைச் சிறந்த முறையில் அறிந்து கொள்ள நடைமுறை முக்கியத்துவம் வாய்ந்த கருத்தாக பிளாரன்சின் தொகுத்தறி ஆய்வுமுறை அமைந்துள்ளது. உற்பத்திக் கணக்கெடுப்பிலிருந்து பல்வேறு தொழில்களில் இடப் பாட்டின் அளவைப் புள்ளி விவரங்களுடன் ஆராய்ந்து பிளாரன்ஸ் தன் ஆய்வை விளக்கியுள்ளார். தொழிற் செறிவு என்பது ஒரு தொழிலுக்கும். ஒரு குறித்த நிலப்பகுதிக்கும் இடையே உள்ள தொடர்பு என்பதை அவர் ஏற்கவில்லை. ஒரு தொழில் ஓர் இடத்தில் தோன்றுவது முக்கியமானதல்ல. "ஆனால், தொழிற் செறிவை ஒரு பகுதியில் இருக்கும் மக்கட் தொகையின் பகிர்வுக்கும் தொழிலுக்கும் இடையே உள்ள தொடர்பை அடிப்படையாகக் கொண்டு விளக்கவேண்டும்."[2]

தொழிற் செறிவுக் கோட்பாட்டில் பிளாரன்ஸ் இரு புதிய கருத்துகளை உடபுகுத்தியுள்ளார். 1. தொழில் இடப்பாட்டு காரணிகள் (Location Factor) 2. தொழிற் செறிவு குணகம் (Co-Efficient of Localisation) தொழில் இடப்பாட்டுக்காரணி என்பது

[1] ச. பிளாரன்சின் 'பொருளாதார ஆராய்ச்சி, தொழிற் கொள்கை' என்ற கட்டுரை, பொருளாதார வெளியீடு (Journal, Dec 1937, பக்கம் 628).

[2] சர்கண்ட் பிளாரன்ஸ், 'முதலீடு, தொழிற் செறிவு ஆலையின் அளவு' பு 34.

ஒரு குறித்த இடத்தில் ஒரு தொழில் குவியும் அளவின் ஒரு குறிப் பெண் ஆகும். முதலில் ஒரு குறித்த தொழிலில் பணிபுரியும் எல்லா தொழிலார்களின் சதவீதத்தைக் கணக்கிட வேண்டும். அதை அப் பகுதியில் உள்ள தொழிலாளர்க்கும் நாட்டில் உள்ள மொத்தத் தொழில் பணியாள்களுக்கும் இடையே உள்ள விகிதத்தால் வகுக்க வேண்டும். அப்போது தொழில் குவிந்துள்ள அளவின் குறிப்பெண்ணைக் கணக்கிட முடியும். ஒருநாட்டின் அரசியல் நிலப்பிரிவுகளின் (Political Divisions) அடிப்படையில் பிராந்தி யங்கள்ப் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. ஏனெனில் தொழில் மண்டலங்களின் (Industrial Zones) அடிப்படையில் பிராந்தி யங்களைப் பிரிக்க இயலாது, தொழில்கள் சமமாக வளர்ச்சியடையா திருக்கும் நிலையில் தொழில் இடப்பாட்டுக் காரணி (Location Factor) ஒன்றுக்கு (Unity) மேலாகவோ, அல்லது குறைவாகவோ இருக்கும். தொழில் இடப்பாட்டுக் காரணி குறிப்பெண் (Index) ஒன்றுக்கு மேலிருந்தால் அப்பிராந்தியத்தில் இருக்கவேண்டிய அளவுக்கு அதிகமாகத் தொழில்கள் குவிந்திருக்கும். மாறாக அக்குறிப்பெண் ஒன்றுக்குக் குறைவாக இருக்குமானால் அப் பிராந்தியத்தில் போதுமான தொழில்கள் வளர்ச்சியடையவில்லை என்று அர்த்தமாகும்.

தொழிற் செறிவுக் குணம் (Co-efficient of Localisation) என்பது ஒரு தொழில் ஓரிடத்தில் குவிவதற்கு அமையும் நாட்டத்தின் (Propensity) அளவை உணர்த்துகிறது. இந்த அளவு ஒரு குறித்த தொழிலில் நாட்டத்தை உணர்த்திய போதிலும் அது ஒரு பிராந்தியத்திற்குரிய அளவாக அமையாது. ஒரு தொழிலின் இத் துல்லிய அளவை உற்பத்திக் கணக்கெடுப்பிலிருந்து (Census of Production) கணக்கிட முடியும். தொழிற் செறிவின் குணகத்தின் அளவு (Co-efficient of Localisntion) அதிகரிப் பதையோ அல்லது குறைவதையே அடிப்படையாக கொண்டு ஒரு பிராந்தியத்தில் தொழில் குவிந்துள்ளதா அல்லது குறைந்துள்ளதா என்பதை அறியலாம்.[1]

ஆய்வுரை

பிளாரன்ஸின் தொகுத்தறி ஆய்வு கீழ்க்கண்ட குறைபாடு களைப் பெற்றுள்ளது. பிளாரன்சின் குறிப்பெண்கள் ஒரு நாட்டில் ஒரு குறித்த காலத்தில் இருந்துவரும் தொழில்களின் பங்கீட்டு நிலையை மட்டும் உணர்த்துகிறது. ஒரு குறித்த தொழிற் செறிவு ஏற்படுவதற்கான காரணங்களை அக் குறிப்பெண்கள் விளக்க இயலாது. பல்வேறு பிராந்தியங்களில் தொழில்களைச் சீராக ஒதுக்கிடத் தேவையான வழிமுறைகளை இக்கோட்பாடு தெளிவாக

1 S. C. குச்சால், இந்தியத் தொழில் பொருளாதாரம், ப. 199.

விளக்க இயலாது. எனவே, இக்குறிப்பெண்கள் சீரான கொள்கையை வகுக்க வழிகாட்டியாய் விளங்க முடியவில்லை. நாட்டுக்கு நாடு உள்ளூர் நிலைகளுக்கு ஏற்பத் தொற்றி செறிவு துல்லிய அளவை (Co-efficient of localisation) வேறுபடுகிறது. மேலும், தொழிற் செறிவின் அளவை விளக்கத் தொழிலாளர்களின் அளவை அடிப்படையாகக் கொண்ட இடப்பாட்டுக் காரணி (Location factor) எப்போதும் வழிகாட்டியாக அமைய முடியாது. உற்பத்தியின் அளவை அடிப்படையாகக் கொண்டு ஒரு பிராந்தியத்தின் தொழிற் செறிவை விளக்குவது அறிவியல் கருத்துக்களுக்கேற்ப அமைவதாகும்.

சமச் சீரான பிராந்தியப் பொருளாதார வளர்ச்சி (Balanced Regional Economic Development)

சமீப காலத்தில் தொழில் இடப்பாடு பொருளாதார அறிஞர்களாலும் நிர்வாக நிபுணர்களாலும், முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகிறது. இடப்பாட்டு இயக்கநிலை (Locational Dynamics) ஆய்வு தற்போது ஆர்வத்துடன் ஆராயப்பட்டு வருகின்றது. இந்த ஆய்வினால் தொழில் அமைப்பும் சீர்படுவதோடு ஒரு நடைமுறை இடப்பாட்டுத் திட்டக் கொள்கை அமைக்கவும் அது துணை புரிகிறது. சமூக, அறிவியல் அம்சங்களை (Strategical aspects) அடிப்படையாகக் கொண்டு தற்போது தொழில்கள் அமைக்கப்படுகின்றன. அதிக உற்பத்தித் திறமையும் சீரான பங்கீடும் சாதிக்கவல்ல முறையில் ஒவ்வொரு தொழிலும் அமைய வேண்டும் என்பதே தலையாய நோக்கமாகும். ஒரே இடத்தில் தொழில்கள் குவிவதால் ஒரு குறித்த பகுதியில் இடநெருக்கடி பல்வேறு மக்களிடையே பலத்த வருமான ஏற்றத் தாழ்வுகள் போன்ற பலவகைச் சமூக பொருளாதாரக் கொடுமைகள் தோன்றுகின்றன. எனவே, ஒருவகைப் பிராந்தியத் தொழில் திட்டம் வளர்ச்சிக்கு இன்றியமையாததாக உள்ளது. பிராந்தியத் தொழில் திட்டம் (Regional Planning of industry) பரந்த பொருளாதாரச் சமூக அறிவியல் கருத்துகளின் அடிப்படையில் அமைந்து தொழில் நடவடிக்கைகளின் உத்தம அளவு பங்கீட்டோடு அதிக உற்பத்தித் திறனையும், சாதிக்கத் தக்ககுறிக்கோளைப் பெற்று விளக்கவேண்டும். ஆனால், இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று மாறான குறிக்கோள்களை ஒருங்கிணையச் செய்வது பெரும் பிரச்சினையாகும். எனினும், தற்போதைய அரசின் பணிகள் மக்களின் பரந்த நலனை அதிகரிக்கத் தக்கதாய் அமைந்துள்ளதால் தேசிய மட்டத்தில் தகுந்த பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டி சமச்சீரான பிராந்தியப் பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியும்.[1]

1 S. C. குச்சால், இந்தியத் தொழில் பொருளாதாரம், ப. 201.

# 54. பிராந்திய வளர்ச்சிக் கருத்துகள்

## (Principles of Regional Development)

திட்டமிட்ட பொருளாதாரச் சீரமைப்பின் அடிப்படையில் பிராந்தியத் தொழில் வளர்ச்சிக் கருத்து தற்பொழுது பெருமளவில் வலியுறுத்தப்பட்டு வருகின்றது. இந்தியா போன்ற நாடுகளில் இவ்வடிப்படைக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பொருளாதார வளர்ச்சிச் சீரமைப்புத் திட்டங்கள் தீட்டப்பட வேண்டும் என்பதை அரசு உணர்ந்துள்ளது.

"பிராந்தியங்களை அடிப்படையாகக் கொண்ட, சமூக பொருளாதார அம்சங்களைக் கொண்ட திட்டங்கள் தற்போது முக்கியத்துவம் பெற்றுள்ளன. நாட்டின் பிராந்திய வளர்ச்சியின் வழியில் உருவாகிய எதிர்காலப் பொருளாதார அமைப்பு (Economic order) காலப் போக்கில் தேசிய அளவில் ஒருங்கிணைக்கப்படவேண்டும்." பரந்த நிலப்பகுதியைப் பெற்ற நாடுகளில் இத்தகைய வளர்ச்சி முறை மிகச் சிறந்ததாய் விளங்கும்.[1] ஒரு பிராந்திய வளர்ச்சி முறையானது இந்தியாவில் வலுவான பொருளாதாரத் திட்டத்தை அமுலாக்க இன்றியமையாததாக விளங்குகிறது. எனவே, பிராந்திய மயம் (Regionalism) தற்போது முக்கியத்துவம் அடைந்து பெரிதும் வலியுறுத்தப்பட்டு வருவதால் அதன் கருத்துகளையும் பிரச்சினைகளையும் இனி ஆராயலாம்.

### பிராந்திய வளர்ச்சிக் கருத்துகளின் முக்கியத்துவம்

முதலாவதாக, ஒரு பரந்த நாட்டின் தேசியப் பொருளாதாரத் திட்டத்தில் உள்ளடங்கும் ஒரு மண்டல வளர்ச்சிமுறையே பிராந்திய மயம் என்கிறோம். ஒரு நாடு பரந்த நிலப் பகுதியைப் பெற்றிருந்தால் அந் நாட்டின் பொருளாதார வளங்கள் நாட்டில் உள்ள எல்லாப் பகுதிகளிலும் சமமாகப் பங்கிடப்பட்டிருக்க வாய்ப்பில்லை. உதாரணமாகத் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத தாதுப்பொருள்கள் வேளாண்மை, மின்சக்தி வளங்கள் சமமில்லாமல் பங்கிடப்பட்டிருக்கும். சிலபகுதிகளில் மட்டும்

[1] டாக்டர் R. பாலகிருஷ்ணு. 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' ப. 71

மற்றப் பகுதிகளைக் காட்டிலும் அதிகமான வளங்கள் இயற்கையாக அமைந்திருக்கும். இலாப நோக்குடைய தனியார் நிறுவனங்கள் தங்களுக்குத் தேவையான வளங்களை மட்டும் பயன்படுத்திக் கொண்டு சில பிராந்தியங்களில் வளர்ச்சியை அதிகரிக்கின்றனர். இதன் விளைவாகப் பற்றுக்குறைப் பிராந்தியங்கள் நிராகரிக்கப்பட்டு வளர்ச்சி குன்றிக் காணப்படுகின்றன. மேலும், இதனால் ஒருதலைப் பட்ட வளர்ச்சியோ (Lopsided Development) அல்லது ஆலைகளின் குவிப்போ ஏற்பட்டு, வளங்களும் செயல்களும் வீணடிக்கப்பட்டு, கடைசியாகத் தொழிலில் கடும் போட்டி ஏற்படுகின்றது. இத்தகைய தனியார் தொழில் நடவடிக்கைகளால் சீரான வளர்ச்சியை நிலைநாட்டுதல் என்பது குறுகிய காலத்தில் சாதிக்க இயலாததாகும். தனியார் செயல் முறைகளினால் தேசிய அழிவு ஏற்படுவதைத் தடுக்கப் பிராந்தியத் திட்டமுறை (Regional Planning) பரிந்துரைக்கப் படுகின்றது. எனவே, பிராந்தியத் திட்டத்தின் முதல் கட்டமாகத் பொருளாதார நிலப்பகுதிகள் வேறுபட்ட அரசியல் கருத்துகளைக் கொண்ட மாநில அரசுகளின் ஆதிக்கத்தில் இருந்தாலும்கூட, வளங்களின் அடிப்படையில் பொருளாதார நிலப் பகுதிகளின் (Economic Units) எல்லை அமைய வேண்டும். இப் பிராந்தியங்களின் உண்மையான ஆக்க வளங்களை மதிப்பிட்டு அதன் அடிப்படையில் ஒவ்வொரு பிராந்தியத்திலும் பொருளாதார அமைப்பு முறை உருவாக வேண்டும்.[1]

இரண்டாவதாக, பிராந்திய மய முறையின் முக்கிய நோக்கம் ஒவ்வொரு பிராந்தியத்தில் உள்ள ஆக்க வளங்கள் முழு அளவில் பயன்படுத்தப்பட வகை செய்வதாகும். ஆனால் தேசிய திட்ட முறையின் நோக்கம் திட்டத்தில் திட்டப்பட்ட இலக்குகளை சாதிக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்வதாகும். இத்தகைய தேசிய நோக்கத்தினால் நாட்டின் பல்வேறு பகுதிகளில் உற்பத்தி, வேலைவாய்ப்பு, வருமானம், ஆகியவைகளின் சரிசமமான பங்கீடு அமைய இயலாது. எனவே, ,பிராந்தியத் திட்டங்கள் தேசியத் திட்டங்களுடன் (National Planning) தொடர்பு கொண்டு ஒன்றை ஒன்று நிறைவு செய்பவைகளாய் (Complementary) அமைய வேண்டும். ''தேசியத் திட்டங்கள் முழு வேலை (Full Employment), அதிகத் தேசிய வருவாய் ஆகிய பரந்த நோக்கங்களைச் சாதிக்கும் நோக்கங்களுடன் திட்டப்பட்டாலும் பொருளாதார முன்னேற்றத் தின்போது வட்டார சமநிலையை (Fervitorial Balance) உருவாக்க இயலாது.''[2] மேலும் பிராந்தியங்களின் அடிப்படையில் சரியான தொழில் வளர்ச்சி உருவாகா விட்டால் உர்பத்திச் செலவு அதிக

1 டாக்டர் R. பாலகிருஷ்ணா ' இந்தியப் பிராந்தியத் திட்டம்'' ப. 72

2 டாக்டர் R பாலகிருஷ்ணா 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' ப. 72,

மாக இருக்கும். எனவே, பொருளாதாரத் திட்டம் பிராந்தியங்களிடையே பொருளாதாரச் சமநிலை, சமூக நீதி இவற்றை ஏற்படுத்த வகை செய்யாவிட்டால் திட்டத்தின் பங்கீட்டு அம்சம் சீராக, சுலபமாகப் பணிபுரிய வாய்ப்புக் கிடைக்காது. நாடு முழுவதிலும் முடிந்த வரையில் மக்களின் வாங்கும் திறன் (Purchasing-Power) சரிசமமாக அதிகரிக்க வகை செய்ய வேண்டும். எல்லாப் பிராந்தியங்களிலும் இருப்பவர்களுக்கு ஆக்க வேலைகளைச் சமமாகப் பகிர்ந்தளிக்க வேண்டும். அப்போதுதான் நாடு முழுவதிலும் உள்ள பல்வேறு பிராந்தியங்களில் வருவாய், வேலைவாய்ப்பு, உற்பத்தி இவைகள் அதிகரித்து நாடு முழுவதிலும் உள்ள மக்களின் வாழ்க்கைத்தரம் சரிசமமாக உயரும். ஆனால், சில பிராந்தியங்களில் பொருளாதார வளங்கள், சாதனங்களின், தட்டுப்பாடு காணப்படுமேயானால் அத்தகைய குறிக்கோளைச் சுலபமாகச் சாதிக்க இயலாது. அப் பிராந்தியங்களில் பொருளாதார முன்னேற்றம் குறைந்த மட்டத்தில்தான் இயற்கையாகவே இருக்கும். மூலப் பொருள்களின் பற்றாக்குறை காரணமாக இப் பிராந்தியங்கள் ஏழ்மையிலே இருப்பது சமூக நீதியாகாது. இதைத் திறம்பட உணராத காரணத்தால்தான் பல்வேறு பிராந்தியங்களின் தொழில் முன்னேற்றத்தில் மிகுந்த வேறுபாடு காணப்படுகிறது. செழிப்பான சூழ்நிலையில் சில பிராந்தியங்களில் தொழில்களின் அதிக வளர்ச்சி (Over-development) ஏற்படுகிறது. முதலாளித்துவ முறையின் அடிப்படையில் அதிக தொழில் வளர்ச்சியைப் பெற்றுச் சில பிராந்தியங்கள் அதிக முன்னேற்றம் அடைகின்றன. மற்றப் பகுதிகளில் தேவைப்படும் பொருள்கள் அப் பிராந்தியங்களின் இயற்கை வளங்களைக் கொண்டே உற்பத்தி செய்யப்படுகின்றன. ஒப்பீட்டுக் கிரயக் கோட்பாட்டின் (Comparative Costs) அடிப்படையில் பிராந்தியங்களிடையே நடைபெறும் வர்த்தகம், பன்னாட்டு வர்த்தகம், அமைய வேண்டும். அதேபோல் பிராந்தியங்களிடையே உற்பத்திக் காரணிகள், சாதனங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் வர்த்தகம் அமைய வேண்டும்.

மூன்றாவதாக, ஒவ்வொரு மாநிலமும் தன்னிறைவு பெற வேண்டும் என்ற நோக்கத்தோடு பிராந்திய மயம் வலியுறுத்தப் படுவதில்லை. "ஒரு பிராந்தியத்தில் கிடைக்கும் வளங்களை முழுவதுமாகப் பயன்படுத்தி அதிக உற்பத்தித் திறனை அடைய வேண்டும் என்பதுதான் பிராந்திய வளர்ச்சியின் குறிக்கோளாகும். அதற்கு மாறாக பல்வேறு பகுதிகளின் சுய நோக்கங்களைப் பூர்த்தி செய்வது பிராந்திய வளர்ச்சியின் நோக்கமாகாது"[1] பிராந்தியத் திட்டங்களை அமலாக்குவதற்குத் தடையாக இருப்பவை பிராந்தி

[1] டாக்டர் R. பாலகிருஷ்ண, 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' ப. 79.

யங்களிடையே உள்ள போட்டி மனப்பான்மையாகும். தேசியத் திட்டத்தின் ஓர் இணைந்த பகுதியாகப் பிராந்தியத் திட்டங்கள் கருதப்படவேண்டும். இயற்கை வளங்களின் வேறுபாட்டை அடிப்படையாகக் கொண்டு வரையப்படாத தேசியத் திட்டத்தைச் சீர்படுத்தும் பணியைப் பிராந்தியத் திட்டங்கள் மேற்கொள்ள வேண்டும். பிராந்தியத் திட்டங்கள் ஒருங்கிணைந்து ஒன்றை ஒன்று சரிசெய்து பொருளாதார வளர்ச்சியைச் மேம்படுத்த வேண்டும். ஆனால், இம் முறையினால் பிராந்தியங்களிடையே ஓரளவு மனக்கசப்பு ஏற்படலாம். ஆனால், பரந்த தேசிய முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு அத்தகைய மனவேறுபாடுகளை நீக்கிச் சமரசம் கொள்ளவேண்டும். பிராந்தியங்களின் இயற்கை வளங்களின் பங்கீட்டின் அடிப்படையில் ஒருங்கிணைந்த ஆக்க நடவடிக்கைகள் ஏற்படத் தேசியத் திட்டம் வகைசெய்ய வேண்டும். ஒரு பிராந்தியத் திட்டம் ஒரு தேசியத் திட்டத்தின் ஒரு பகுதியாக அமைய வேண்டும். பிராந்தியத் திட்டம் தேசியத் திட்டத்தோடு ஒத்து அமையவேண்டும். மேலும், பிராந்தியத்தின் மந்த நிலையைப் போக்கவல்ல தனித் தொழில் திட்டங்களை அமைத்து அவற்றைப் பிராந்தியத் திட்டங்களில் சேர்க்கவேண்டும்."[1] ஒவ்வொரு பிராந்தியத்தில் உள்ள தொழில்களின் நடப்புநிலை, வளர்ச்சி முறை, ஆகியவற்றைப் பற்றி அறிய ஆரம்பக்கட்ட (Preliminary Investigation) ஆய்வு ஒன்றை நடத்தவேண்டும். தொழில்களில் முதலீடு செய்யப்பட்ட மூலதனம், தொழில்கள் நிதிவசதியைப் பெறும் வகைகள் இவற்றையும் ஆராயவேண்டும். தொழில் நிலையான வளர்ச்சியைப் பெறுவதற்குத் தேவையான சாதனங்கள் ஒரு பிராந்தியத்தில் இருக்கின்றனவா என அறியவேண்டும்.

கடைசியாக, ஒரு பிராந்தியத்தில் உள்ள பொருள்சார் வளங்கள், திறன், போக்குவரத்து வசதிகள் ஆகியவைகளின் ஆக்க சக்தியை மதிப்பிடவேண்டும். இந்த ஆய்வின் அடிப்படையில் அப்பிராந்தியத்தில் வேறு தொழில்களும் ஏற்படச் சாத்தியக் கூறுகள் உள்ளனவா என்பதை உறுதிப்படுத்தப் படவேண்டும்.

### பிராந்திய வளர்ச்சியும் போக்குவரத்தும் (Regional Development and Transport System)

பிராந்திய வளர்ச்சித் திட்டம் சிறப்பான முறையில் செயல் படச்சில துணை நடவடிக்கைகள் இன்றியமையாதவைகளாய் விளங்கு கின்றன. இத்துணைச் செயல் முறைகளில் முக்கியத்துவம் பெற்று விளங்குவது நாட்டின் போக்குவரத்து அமைப்பாகும். நாட்டில்

[1] பெல்லர்பை (Bellerby) 'பொருளாதாரச் சீரமைப்பு' ப. 287.

நிலவிவரும் போக்குவரத்து முறையும் அதன் கட்டண அமைப்பும், பிராந்திய வளர்ச்சிக்கு இடையூருக இருக்குமா என்பதை முதலில் ஆராயவேண்டும். தேசிய வளர்ச்சியில் நாட்டமில்லாத வர்த்தகக் கொள்கைகளையே (Commrcial Policy) அடிப்படையாகக் கொண்ட போக்குவரத்துக் கட்டணக் கொள்கை (Transport rate Policy) சம தொழில் பகிர்வைக் கொண்ட தேசிய முன்னேற்றத்திற்குத் தகுந்தது அல்ல. எனவே, போக்குவரத்துக் கட்டண மாற்றத்தில் திட்ட நிபுணர்கள் முதலில் அக்கறை செலுத்தவேண்டும். அத்தகைய ஒரு கட்டணத் திருத்தம் போக்குவரத்து அமைப்பிற்குப் பெரும்பாலும் நட்டத்தை ஏற்படுத்தாது. சில சமயங்களில் போக்குவரத்து அமைப்பிற்குத் தவிர்க்க முடியாத நிலையில் நட்டம் ஏற்படுமேயாளுல் சமச் சீரான பொருளாதார வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு அத்தகைய போக்குவரத்து நிறுவனங்களுக்கு அரசு உதவிக் கொடைகளை அளிக்கவேண்டும். பிராந்தியத் திட்டத்தை நடைமுறைப்படுத்துவதற்கு ஏற்ற வகையில் நாட்டின் போக்குவரத்து அமைப்பின் வருங்கால வளர்ச்சியை முழுஅளவில் ஆய்ந்து அதைத் திருத்தியமைக்க வேண்டும். பிராந்தியத் தொழில் வளர்ச்சியை மேம்படுத்தும் நோக்கோடு வினைமுடிந்த பொருள்களை நாடு முழுவதிலும் எடுத்துச் செல்லச் சீரான போக்குவரத்து அமைப்பை ஏற்படுத்த வேண்டும்.

பிராந்திய மயக் கொள்கையின் சிறப்பு (Merit of Regionalism)

தடையில்லா வாணிபக் கொள்கையின் அடிப்படையில் உலகம் முழுவதும் பொருளாதார நடவடிக்கைகளில் சிறப்புத் தேர்ச்சி காணப்படுவதுபோல் பிராந்தியத் திட்டங்களிலும் அத்தகைய சிறப்பு நிலை உருவாகும் என்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதாகும். பல்வேறு கருத்து வேறுபாடுகளைக் கொண்ட தேசிய அரசுகள் திட்டமிடப்படாத தடையிலா வாணிபத்தால் (Free trade) துன்புற்ற நிலைக்கு மாறுகத் தேசிய அளவிலாவது திட்டமிட்ட பிராந்திய வளர்ச்சிக் கொள்கை பலனளிக்கும் என்று எதிர் பார்க்கலாம். பிராந்தியத் திட்டங்களால் மற்ற நாடுகளுக்கு எதிராக ஒரு நாடு தேசியத் தன்னிறைவைச் சாதிக்கவேண்டும் என்பது பொருள் அல்ல. அத்தகைய ஒரு கட்டுப்பாடுடைய முறை சுயநல அக்கறை கொண்டுள்ளதால் மனித முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக விளங்கும். பன்னுட்டு வாணிபமும், கருத்துகளும் தங்கு தடையின்றி எல்லா நாடுகளிலும் சரிசமமாக வளரவிடவேண்டும். திட்டமிட்ட பொருளாதாரத்தில் பிராந்திய வளர்ச்சி முறை பல்வேறு திட்டங்களை நடைமுறைப் படுத்துவதற்கு மிகச் சிறந்த அடிப்படையாக அமைகிறது.

பிராந்திய வளர்ச்சியும் டென்னஸ் பள்ளதாக்கு அமைப்பும்

பிராந்திய வளர்ச்சிக்கு ஒரு சிறந்த உதாரணமாக அமைவது டென்னஸ் பள்ளத்தாக்கு அமைப்பாகும் (Tennessee valley Authority). அமெரிக்காவில் உள்ள இந் நிறுவனம் பிராந்தியமயக் கொள்கைக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக அமைகின்றது. இப் பள்ளத்தாக்கில் நீர்வளம், தாதுக்கள், வேளாண்மைக்கு ஏற்ற நிலம், திறன் ஆகியவைகள் ஏராளமாக இருந்தன. இப் பகுதி பல மாநிலங்களையும் உள்ளடக்கி இருந்தது. இப் பிராந்தியத்தின் வளங்களும் முழுமையாகப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப் பட்டதால் பொருளாதார வளர்ச்சி குன்றி மக்களின் வாழ்க்கைத் தரம் மிகக் கீழ் நிலையில் இருந்தது. இத் தேக்க நிலையைப் போக்கி ஆக்க வளங்களைப் பயன்படுத்தி உற்பத்தியை அதிகரிக்கும் நடவடிக் கைகளை மேற்கொள்ளத் தனியார் நிறுவனங்கள் முன் வரவில்லை. இப் பிராந்தியத்தை மேம்படுத்தத் தேவையான நிர்வாகம் தேவைப்பட்டது. தனியார் தொழில்கள் ஒருங்கிணைக்கப் படாத முறையில் வளங்களைப் பயன்படுத்தின. குறைந்த மூலதனத்தைக் கொண்டு இப்பிராந்தியம் பல்வேறு அரசியல் நிலைகளால் பிரிக்கப் பட்டிருந்தது. எனவே, ஒரு தனி அரசு அல்லது தனியார் அமைப்பு தேவையான மாறுதலை நடைமுறைப் படுத்த முடியவில்லை. இப் பகுதியில் வாழும் மக்களின் நலனை அதிகரித்துத் துன்பத்தைப் போக்கவல்ல முதலாளித்துவ நிறுவனம் ஒன்றும் தோன்றவில்லை. எனவே, அமெரிக்க காங்கிரஸ் ஒரு சட்டத்தின்மூலம் 'டென்னஸ் பள்ளத்தாக்கு அமைப்பு' என்ற ஒருதனி அமைப்பை ஏற்படுத்தி, அப் பகுதியில் வாழும் மக்களுக்குப் புத்துணர்வு அளிக்கவும், அப் பகுதியில் பொருளாதாரச் சீரமைப்பை மேற்கொள்ளவும் வகை செய்தது. பொருளாதாரப் புனர்வாழ்வு அளிக்க அரசின் தலையீடு இன்றியமையாதது என்ற கருத்து உணரப்பட்டது. பெரிய மந்த காலத்தில் (Great depression) நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் இப் பிராந்தியத்தின் வளர்ச்சிக்கு உயிரோட்டமளித்தது. இந்நிறுவனத்தின் பல் நோக்கு வளர்ச்சித் திட்டங்களால் வளங்கள் ஒருங்கிணைந்த வகையில் பயன்படுத்தப்பட்டன. இதன் விளைவாக அப் பகுதியில் வாழ்ந்த மக்களின் நலன் அதிகரித்தது. தனியார் தொழிலின் நெகிழ்ச்சியும், சுயசெயல்முறைகளும், அரசாங்கத் துறையின் அதிகாரமும் இந்த அமைப்புக்குக் கிடைக்க அது ஒரு தனிக் கழகமாகத் (Corporation) திருத்தி அமைக்கப்பட்டது.

டென்னஸ் பள்ளத்தாக்குக் கழகத்தின் முக்கிய குறிக்கோள் பிராந்தியத்தின் ஒருங்கிணைந்த வளர்ச்சியையும், அப் பகுதியில் முன்னேற்றத்தைப் பரவலாக்குதலுமேயாகும். சில குறித்த அதிகாரங்களைப் பெற்று ஒருங்கிணைந்த இயற்கை வள வளர்ச்சியைச்

சுதந்திரத்துடன் மேற்கொள்ளுவதே இதன் கடமையாகும். பொதுத்துறை நிறுவனங்களில் பொதுவாக சுய செயல்முறைகள் (Initiative), புத்தாக்கங்கள் (Inventiveness), விடாமுயற்சி, பிரச்சினைகளைத் தொழில் நுட்பரீதியில் உணர்ந்து அறிதல் போன்ற தனியார் துறையின் இடல்புகள் காணப்படாது என்ற கருத்துக்கு மாருக இக்கழகம் தொழில் உணர்வுடன் செயல்பட்டது. ஆரம்ப கட்டத்தில் இக்கழகத்தில் முதல்பற்ருக்குறை காணப்பட்டாலும் காலப்போக்கில் அது வாணிக முறையில் செயலாற்றியதாலும், அரசு உதவிக் கொடைகளை அளித்ததாலும் அது சீராக வளர்ச்சியடைந்தது. தகுந்த காலத்தில் அரசு மானியங்கள் வழங்கியதால் இக் கழகத்தின் திட்டங்கள் முழுவதும் வெற்றியடைந்தன. இது அரசு நிறுவனமாக இருந்ததால் பல்வேறு பிராந்தியங்களுக்கிடையே ஏற்படும் மனக்கசப்பு தவிர்க்கப்பட்டது.

## பிராந்திய வளர்ச்சியின் பொதுக்கொள்கைகள்

மேற்குறிப்பிட்ட டென்னஸ் பள்ளத்தாக்கு நிறுவனத்தின் படிப்பினையின் மூலம் பிராந்திய மயம், வளர்ச்சியை அதிகரிக்க ஒரு சிறந்த கொள்கையாகும் என்பது வெள்ளிடைமலை யாகும். பிராந்திய வளர்ச்சியை மேற்கொள்ளும் போது அப் பகுதியில் உள்ள வளங்களின் தன்மையை நன்ருக ஆராய்ந்தபின் செயல் திட்டங்களைத் தீட்ட வேண்டும். பூகோள ரீதியாக ஒரு பிராந்தியம் பள்ளத்தாக்காகவே இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. வளங்களின் அளவையும், தன்மையையும் சீராகக் கணக்கிட்டபின் நாட்டின் பல்வேறு பகுதிகளைப் பிராந்தியங்களாகப் பிரிக்க வேண்டும் (De-limitation). பிராந்திய வளர்ச்சிக்கு இக் கொள்கையே அடிப்படையானதாகும். அரசு ஒரு பகுதியில் புனரமைப்புத் திட்டங்களைத் தீட்டும்முன் ஒவ்வொரு பிராந்திய வளர்ச்சிக்கும் தேவையான சாதனங்களையும் நிதிவசதியையும் அறிந்து, அவற்றிற்கு முதலிடம் அளித்து, ஓர் ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டமாக அமைக்க வேண்டும்.[1] எல்லாக் காலத்திலும் அரசிடமிருந்து வருடாந்திர மானியங்களை எதிர் பார்ப்பது சிறந்ததாகாது. பிராந்திய வளர்ச்சி அமைப்புகளுக்குப் பிரயோகிக்கப்படும் பொதுச்சட்ட விதிமுறைகளை (General Code of Laws) ஏற்படுத்த முடியாது. ஒவ்வொரு பிராந்தியத்தின் குறித்த தேவைகளுக்கேற்ப வளர்ச்சிக்கான அதிகாரங்கள் அளிக்கப்பட வேண்டும். அது பெரும்பாலும் அப் பகுதியின் அரசியல் தன்மை, உள்ளூர் நிறுவனங்களின் இயல்பும், ஆற்றலும் ஆகியவற்றைப் பொறுத்ததாகும். அப்பிராந்தியம் ஒரே அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டு அமையுமாஞல், பல்வேறு பிராந்திய வளர்ச்சிப் பிரச்சினைகள்

1 டாக்டர் R. பாலகிருஷ்ண 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' —18.

நீங்கும். அச் சூழ்நிலையில் அரசு எந்த அளவுக்குத் தனியார் அமைப்பை மதித்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது ஆராயப் படவேண்டும். தனியார் நிறுவனங்கள் பாதுகாக்கப்பட அரசின் ஆதிக்கத்துக்குட்பட்ட அமைப்புகள் தனியார் துறையுடன் ஒத்துழைத்துப் பணிபுரிய வேண்டும்.

இந்தியாவில் பிராந்திய வளர்ச்சி (Regional Development in India)

முதலாவதாக, இந்தியாவில் உள்ள வளங்களின் துல்லிய கணக்கீடு எடுக்கப்படவேண்டும். அதன் அடிப்படையில் இந்தியா முழுவதிலும் உள்ள பல்வேறு பகுதிகள் பொருளாதாரப் பிராந்தியங்களாகப் பிரிக்கப்படவேண்டும். இந்தியாவில் உள்ள வளங்களைப் பற்றிய தற்போதைய ஆய்வு போதுமானதாக இல்லை. இந்தியாவில் உள்ள பிரச்சினை சில வளர்ச்சி குறைந்த பகுதிகளைப் பற்றியதல்ல. ஏனெனில் இங்கு ஒருசில மாநிலங்களைத் தவிர எல்லா மாநிலங்களும் பொதுவாக வளர்ச்சி குறைந்த (Under—Development) வைகளாகவே உள்ளன. எனவே, பிராந்திய வளர்ச்சியைப் பெறப் பின்பற்ற வேண்டிய முறையும் அமைக்க வேண்டிய அமைப்பின் தன்மையும் ஒவ்வொரு மாநிலங்களின் தேவைகளுக்கேற்ப வேறுபடும். நாட்டிற்கு ஒரு சில அமைப்புகள் மட்டும் இருந்தால் போதாது. இந்தியாவில் உள்ள பொருளா தாரப் பிராந்தியங்கள் அனைத்துக்கும் தேவைக்கேற்றபடி பிராந்திய வளர்ச்சி அமைப்புகள் (Regional Development Authority) ஏற்படுத்தப்படவேண்டும். ஒரு பொருளாதாரப் பிராந்தியத் திற்குள் அரசியல் கருத்து வேறுபாடுகளைக் கொண்ட மாநில அரசுகளின் பகுதிகள் உள்ளடங்கி இருந்தாலும் பொருளாதாரப் பிராந்தியத்தின் எல்லாப் பகுதிகளையும் வளர்ச்சி அமைப்புகள் (Development Authorities) கட்டுப்படுத்தலாம். சூழ்நிலைக்கு ஏற்பச் சில பொருளாதாரப் பிராந்தியங்கள் பல்நோக்கு வளர்ச்சித் திட்டங்களையும், சில ஒற்றை நோக்கு (Single Purpose) வளர்ச்சித் திட்டங்களையும் மேற்கொள்ளலாம். தனியார் நிறுவனங்கள் ஓரளவு சுதந்திரமாகச் செயல்புரிய அனுமதிக்கலாம். பிராந்திய அமைப்பால் நிர்ணயிக்கப்பட்ட ஒரு பொது வளர்ச்சித் திட்டத் திற்கு ஏற்ப அவைகள் பணிபுரியச் செய்யவேண்டும். தனியார் துறை முதலீடு செய்ய முன்வராத துறைகளில் அரசின் அதிகாரங் களைப் பெற்ற பிராந்திய அமைப்புகளே நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடலாம். பிராந்தியங்களின் சுயநிலைமைக்குத் தக்கப்படி நிதிவசதி பெறும் முறை வேறுபடலாம்.

# 55. பிராந்தியத் தொழில் வளர்ச்சி

## (Regional development of Industries)

தொழில்களின் பிராந்திய வளர்ச்சிக் கருத்து நடப்புப் பொருளாதாரச் சிந்தனையிலும், திட்டத்திலும் மிக முக்கியத்துவம் பெற்று வருகிறது. சீரான தேசிய பொருளாதாரத் திட்டத்திற்கு இன்றியமையாததாக விளங்குவது பிராந்தியத் தொழில் வளர்ச்சி முறையாகும். இந்தியா போன்ற பரந்த நிலப்பரப்பைப் பெற்றுள்ள நாடுகளில் இக் கொள்கை தனி முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. ஒரே இடத்தில் குவிக்கப்பட்ட தன்மையுடைய தொழில் நடவடிக்கை சமச்சீரான தேசிய வளர்ச்சிக்கு முட்டுக் கட்டையாக விளங்குகிறதென்று J. R. பெல்லர் பை குறிப்பிடுகின்றார். பிராந்தியத் திட்டத்தின் அடிப்படையில் உருவாகும் தொழில் வளர்ச்சிதான் வேலையின்மை, இயற்கை வளங்கள் வீணடிக்கப்படல், வளங்களின் துர்ப் பிரயோகம் போன்ற குறைபாடுகளை நீக்க முடியும்.

பிராந்தியத் தொழில் வளர்ச்சிக் குறிக்கோள்கள் (Objectives of Regional Industrial Development)

பிராந்தியத் தொழில் நடவடிக்கைப் பங்கீட்டின் (Distribution) குறிக்கோள்கள் பின்வருமாறு!

முதலாவதாக நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள உள்ளூர் வளங்களைச் சம அளவில் வளர்ச்சியடையச் செய்ய இக் கொள்கை வகை செய்கிறது. இத்தகைய தொழில் பங்கீட்டின் அடிப்படையில் பல்வேறு வகையான தொழில்கள் சமச்சீராக உள்ளூரில் (Locally) வளர்ச்சியடையும். மேலும், பல்வேறு பிராந்தியங்களில் வேறுபட்ட சமச்சீரான வாழ்க்கை மக்களுக்கு அமையும். பிராந்திய வளர்ச்சியின் மூலம் எல்லாவற்றிலும் தன்னிறைவு பெறுதல் ஆகிய நோக்கங்களைச் சாதிக்க முடியாது. ஏனெனில் நவீன வாழ்க்கைக்குத் தேவையான எல்லா வகையான பொருள்களையும், ஒரு பிராந்தியமே உற்பத்தி செய்யும் அளவுக்கு அது செல்வந்த நிலையிலில்லை. உபரி பிராந்தியத்திலிருந்து பற்றாக்குறைப்

பிராந்தியத்திற்குப் பொருள்கள்ப் பெயர்ச்சியடைய வேண்டும். இத்தகைய பிராந்தியப் பங்கீட்டால் பிராந்தியங்களின் வாணிபத்தின் அளவும் தன்மையும்தான் வேறுபடும்.

இரண்டாவதாக பொருளாதார, சமூக, புதியமுறைக் கொள்கை (Strategy) ஆகியவைகளின் அடிப்படையில் உத்தம அளவுத் தொழில் நடவடிக்கையை உருவாக்கப் பிராந்திய வளர்ச்சி வகை செய்கிறது. பிராந்தியத்தின் பண்பாட்டிற்கும், அங்கு வாழும் மக்களுக்கும் இடையே சமநிலையை ஏற்படுத்தவும் இக் கொள்கை துணைபுரிகிறது. ஆனால் இக் கொள்கை குறுகிய மாநிலப் பற்றை (Provincialism) ஊக்குவிப்பதாகக் கருதப்படக் கூடாது. ஒரு மாநிலம் எல்லாவற்றிலும் தன்னிறைவு பெற வேண்டுமென்று கருதுவது பிராந்திய வளர்ச்சிக் கொள்கைக்கு எதிரானதாகும். மாநிலங்களிடையே மனக்கசப்பு ஏற்பட்டால் பிராந்தியத் திட்டத்தை அமுலாக்க முடியாது. எனவே, பிராந்தியங்களில் வளங்களின் அளவுத் தன்மைக்கேற்ப ஆக்கத் திறனை அதிகரிப்பது தான் பிராந்திய வளர்ச்சியின் அடிப்படை நோக்கமாகும் என்று டாக்டர் R. பாலகிருஷ்ணு குறிப்பிடுகின்றார்.

மூன்றாவதாக பிராந்திய வளர்ச்சி, எதிர்கால நன்மையைக் கருத்தில் கொண்டு, கிடைக்கும் வளங்களைப் பாதுகாக்கும் குறிக் கோளைப் பெற்றுள்ளது. காட்டு வளம், நிலக்கரி அல்லது பெட்ரோலியம் போன்ற இயற்கை வளங்களின் துர்ப்பிரயோகத்தை நீக்க இக் கொள்கை வகை செய்கிறது. எல்லா இயற்கை வளங்களையும் பயன்படுத்தத்தக்க பல்வேறு வகையான தொழில்களை ஏற்படுத்தி, அவ் வளங்களைப் பிராந்தியத்தின் எல்லா பகுதிகளிலும் பயன்படுத்தவும் இக் கொள்கை துணைபுரிகிறது.

நான்காவதாக பிராந்திய வளர்ச்சியினால் வேலை வாய்ப்புகளை எல்லா மாநிலங்களிலும் சமமாகப் பங்கீடு செய்ய வழி கிடைக்கிறது. சில மாநிலங்களில் மட்டும் வேலை வாய்ப்புக் கிடைப்பதால் பல்வேறு பிராந்தியங்களிடையே தலா வருவாயில் அதிக ஏற்றத்தாழ்வு ஏற்படுகிறது. பிராந்திய வளர்ச்சியினால் வாங்கும் திறன் ஒரே சீராக வாய்ப்புக் கிடைக்கிறது. "செழிப்பும், ஏழ்மையும் பிரிக்க முடியாதவை என்ற உண்மையை அடிப்படையாகக் கொண்டது பிராந்திய வளர்ச்சிக் கொள்கையாகும்." "ஒரு சில பகுதிகளில் தொழில் நடவடிக்கை குவிந்துள்ளதின் விளைவாகப் பிரிவு மனப் பான்மையை ஊக்குவிப்பது தற்போதைய இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒவ்வாததாகும். பிராந்தியச் செழிப்பில் ஏற்றத்தாழ்வு ஏற்படுவது தேசிய ஒருமைப்பாட்டை குலைக்கும்." "இந்தியத் தொழில் விரைவாகவும் சமமாகவும், வளர்ச்சியடையச்

செய்ய இதுகாறும் பிற்பட்ட நிலையில் இருந்த மாநிலங்களின், பிராந்தியங்களின் வளர்ச்சியில் அதிக அக்கறை செலுத்த வேண்டும்.[1]

ஐந்தாவதாக தொழிலாளர் குடிபெயர்வதை நீக்குதல், பிற்பட்ட பகுதிகள் தோன்றுவதைத் தடுத்தல், நாட்டின் எல்லாப்பகுதியிலும் தலாவருவாயைச் சமமாக்குதல் போன்ற சில சமூகக் குறிக்கோள்களைச் சாதிக்கப் பிராந்திய வளர்ச்சி பெருந்துணை புரிகிறது. ஒரு சில தொழில் நகரங்களில் தொழில்களும் மக்கட் தொகையும் குவிவதைக் கட்டுப்படுத்தும் சமூக நோக்கத்தைக் கொண்டது பிராந்தியத் திட்டமாகும். சில தொழில் நகரங்களில் மேலும் தொழில்கள் விரிவடைவதால் சுகாதாரமின்மை, வீட்டுப் பிரச்சினை போன்ற சீர்கேடுகள் பெருமளவில் அதிகரிக்கின்றன. அத்தகைய மக்கள் நெருக்கடி கொண்ட பகுதிகளால் மனித சமூகம், கலாச்சாரம், இவற்றின் அடிப்படை பெரிதும் பாதிக்கப்படுகிறது. போக்குவரத்து நெருக்கடி, பொதுச் சுகாதாரச் சீர்கேடு, இட நெருக்கடியால் ஏற்படும் குறைந்த திறன் போன்றவைகளால் சமூகத்திற்கு ஏற்படும் இழப்பு ஆண்டுக்குப் பலகோடி ரூபாய்களுக்குமேல் இருக்கும்.

ஆறுவதாக மேற்குறிப்பிட்ட குறிக்கோள்களைக் கொண்ட பிராந்தியக் கொள்கை வளர்ச்சியில் நாடு சமச்சீரான பொருளாதார வளர்ச்சியை அடைய முடியும் என்ற கருத்து தற்போதுதான் நிபுணர்களால் ஆராயப்பட்டு வருகிறது. இக் கொள்கை சீராகத் திறம்பட அமுலாக்கப்பட்டால் நாட்டில் மக்களாட்சியை அடிப்படையாகக் கொண்ட சமதர்ம சமுதாயத்தை விரைவில் அடைய முடியும்.

### இந்தியாவில் பிராந்தியத் தொழில் வளர்ச்சியின் தேவை

இந்தியாவில் தொழில் வளர்ச்சி எல்லாப் பகுதிகளிலும் சமச்சீராக வளர்ச்சியடையவும், ஒரு சில பகுதிகளில் சில பேரளவுத் தொழில்கள் சீரில்லா வளர்ச்சியைப் பெற்று விளங்கவும் நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் அத்தகைய நிறுவனங்கள் முற்றிலுமாகத் தோன்றவில்லை. கட்டுப்படுத்தப்படாத சுதந்திரத்துடன் தொழில் அதிபர்கள் உற்பத்தி நிறுவனங்களைத் தங்கள் நோக்கம் போல் தோற்றுவித்ததின் விளைவாகக் கல்கத்தா, பம்பாய் ஆகிய இடங்களில் ஏராளமான பேரளவுத் தொழில்கள் தோன்றியுள்ளன. இவ்விரு பகுதிகளில் மட்டும் தொழில் நடவடிக்கை குவிந்துள்ளதிலிருந்து நாட்டில் தொழில்களின் பிராந்தியப் பங்கீடு சம அளவில் ஏற்படவில்லை என்பதை அறியலாம். 1951-ல் இவ்விரு பகுதிகளில்

[1] R. பாலகிருஷ்ணா. 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' ப. 73.

மொத்தத் தொழில் அனுமதி சலுகைகளில் 42 சதவிகிதம் இப் பகுதிகளுக்குக் கிடைத்தது. உற்பத்தித் தொழில்களின் மொத்த அளிக்கப்பட்ட மூலதனத்தில் 67 சதவிகிதத்தை இப் பகுதியில் உள்ள தொழில்கள் பெற்றிருந்தன. இத்தகைய தொழில் ஏற்றத் தாழ்வு நாட்டின் சமச்சீரான வளர்ச்சியைச் சாதிக்க இடையூருக உள்ளது.

ஒருதலைப்பட்ட தொழில் வளர்ச்சி (Lopsided Industrial Growth)

ஒருதலைப்பட்ட தொழில் வளர்ச்சியால் வருமானப் பங்கீடும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள மக்களின் வாழ்க்கைத்தரமும் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இதன் விளைவாகத் தொழில் வளர்ச்சியடைந்த பகுதிகளுக்கும், வளர்ச்சி குறைந்த பிராந்தியங் களுக்குமிடையே பெருத்த வருமான ஏற்றத்தாழ்வு ஏற்படு கின்றது. 1950-ல் ஆலை, சுரங்கம் இவைகளில் பணிபுரியும் தொழிலாளர்களின் தலா வருவாய் ஆண்டுக்கு ரூ. 840 ஆக இருந்தது. ஆனல், வேளாண்மைத் தொழிலாளர்களின் தலா வருவாய் ரூ. 200 ஆக இருந்தது. இந் நிலைமை இன்னும் சீரடைய வில்லை. வேளாண்மைப் பொருள்கள், மற்றப் பொருள்கள் இவைகளின் விலைகளில் உள்ள வேறுபாட்டால் ஏற்றத்தாழ்வு மேலும் தீவிரமடைந்துள்ளது.

தொழில் மந்த காலத்தில் வேளாண்மைப் பொருள்களின் விலைகள், செய்பொருள்களின் விலைகளை விட மிக விரைவாகக் குறை கின்றன. இதனுல் இவ் வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டுள்ள மக்களின் வருவாய் மிகவும் குறைந்து விடுகிறது. போர்க்காலப் பணவீக்கத்தின் போது தொழில் தேக்கமடைந்த பகுதிகளில் உண்மை வருவாய் மிகவும் குறையத் தொழில் நரகங்களில் போர் உற்பத்தியினுல் வேலைவாய்ப்பு அதிகரித்து வருவாயும் அதிகரிக் கிறது. எனவே, ஒருதலைப்பட்ட தொழில் வளர்ச்சியைப் போக்கிப் பிராந்தியங்களிடையே சமச்சீரான பிராந்தியத் திட்டம் அமுலாக்கப்படவேண்டும்.

பம்பாய், கல்கத்தா போன்ற இடங்களில் தொழில்களின் குவிப்பு பெருமளவில் அதிகரித்ததின் விளைவாக இவ்விடங்களில் 1931-க்கும் 1951-க்கும் இடைப்பட்ட காலத்தில் மக்கட் தொகை 118 சதவீதத்திலிருந்து 121 சதவீதமாக முறையே அதிகரித்தது. இந் நகரங்களில் மக்கட் தொகை அடர்த்தி அளவுக்கு மீறி அதிகரித்து, வீட்டு வசதிப் பிரச்சினை மிகவும் தீவிரமடைந்துள்ளது. பொதுவாக, "மக்களில் பெரும்பாலோர் சாலைவாசிகளாக, அந்தஸ்து குறைக்கப்பட்டுள்ளார்கள். இட

நெருக்கமான சூழ்நிலையால் தொழில் நகரங்களில் பணிபுரியும் மக்களின் உடல், மன, சக்தி குறைந்து அவர்களின் திறமையும் தேக ஆரோக்கியமும் சீர்கேடடைகிறது.''

பிராந்தியத் தொழில் வளர்ச்சி நடவடிக்கைகள்

தற்காலத்தில் தோன்றிவரும் கருத்துவழித் தொழில் நுட்ப முறை முன்னேற்றங்களின் விளைவாக இந்தியத் தொழில் திட்டத்தில் (Industrial Planning) தொழில்கள் குவியாமல் பரவலாக்கப்பட வழிமுறைகள் கையாளப்பட்டு வருகின்றன. பிராந்தியத் தொழில் வளர்ச்சியை அடைய மேற்கொள்ள வேண்டிய பல்வேறு செயல் முறைகளை இனி ஆராயலாம்.

## 1. பிராந்தியப் பாகுபாடு

தற்போது நாட்டில் உள்ள அரசியல் ரீதியான பிரிவுகளை (Political Divisions) பெரிய பொருளாதார பிராந்தியங்களாக மாற்றியமைக்க வேண்டியது முதலில் செய்யவேண்டிய நடவடிக்கை யாகும். ஒரு பிராந்தியத்தில் பல்வேறு அரசியல் கருத்துகளைக் கொண்ட மாநிலங்களின் நிலப்பகுதிகளும் இயற்கை வளங்களின் அடிப்படையில் அமைந்திருக்கலாம். ஒவ்வொரு பிராந்தியமும், ஒரு சுதந்திரப் பொருளாதார அமைப்பாகக் கருதப்பட்டு அப் பிராந்தியத்தில் உள்ளடங்கியுள்ள அரசுகளின் ஒருமித்த நடவடிக்கையின் மூலம் அப் பிராந்தியத்தில் உள்ள வளங்கள் ஆக்கத்திற்காகப் பயன்படத்தப்பட வேண்டும். 1956-ன் மாநிலங் களின் சீரமைப்புச் சட்டத்தின் (State's Deorganisation act) படி வடக்கத்திய, மத்திய, கிழக்கத்திய, தெற்கத்திய, மேற்கத்திய என்ற ஐந்துவகை மண்டலங்களாக (Zones) இந்தியா பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மண்டலத்திற்கும் ஒரு மண்டல சபை (Zonal Council) அமைக்கப்பட்டுள்ளது. ஒரு மண்டலத்தில் பணிபுரியப் பிராந்தியத்திட்ட வாரியங்கள் (Reginol Planning Boards) ஏற்படுத்த வேண்டியது அவசியமாகும். திட்டக் குழுவோடு கலந்து ஆராய்ந்து புதிய தொழில்களைத் தோற்று விக்கத் தேவையான முக்கிய காரணிகளை ஆராயும் பணியை இவ்வாரியங்கள் மேற்கொள்ளவேண்டும். மண்டலங்களில் உள்ளடங்கியுள்ள மாநிலங்களின் பிரதிநிதிகள் இவ்வாரியங்களின் உறுப்பினர்களாக வேண்டும். இவ்வாரியங்கள், கீழ்க்காணும் பணிகளை மேற்கொள்ளலாம்.

பிராந்தியத் திட்டக் கழகங்களின் பணிகள்

(i) ஒரு பிராந்தியத்தில் இருக்கும் மூலப் பொருள்கள், ஆக்கசக்தி (Power), போக்குவரத்து வசதிகள், வேலையில்லாத்

தொழிலாளர்கள் இவைகளைக் கருத்தில் கொண்டு ஒரு வலுவான பொருளாதார அடிப்படையில் சமச்சீரான வளர்ச்சியை அடைய வழிமுறைகளை இக் கழகம் ஆராய வேண்டும். கனரக அல்லது அடிப் படைத் தொழில்கள், குறைந்த மூலதனத்தைக் கொண்ட இலேசான அல்லது நுகர்வுப் பொருள் தொழில்கள், சிற்றளவு குடிசைத் தொழில்கள் ஆகிய மூன்று முக்கியத் தொழில் பிரிவுகளை ஏற்படுத்த வழிமுறைகளை ஆராயவேண்டும்.

(ii) ஒவ்வொரு பிராயந்தியத்தின் தொழில் வளர்ச்சியின் பல்வேறு அம்சங்களைக் கருத்தில் கொண்டு அதற்கேற்றாற்போல் வீட்டு வசதி, மருத்துவமனைகள், பள்ளிக்கூடங்கள், பூங்காக்கள் இவைகளைச் சீரான முறையில் உருவாக்குவதற்கு நகரத் திட்ட மிடுவோரின் உதவியுடன் அமைக்கவேண்டும்.

(iii) பிராந்தியங்களின் பல்வேறு தேவைகளை அவ்வப்போது திட்டக் குழுவிற்கு எடுத்துக் கூறவேண்டியது இக் கழகங்களின் பணியாகும். பல்வேறு பிராந்தியங்களின் தொழில் ஆக்க சக்தி யைப் பற்றிய முழுவிவரத்தையும் திட்டக்குழு அறியச் செய்ய வேண்டும்.

(vi) பல்வேறு பிராந்தியங்களில் தொழில் நிறுவுதல் பற்றிய விவரத்தையும், ஆலோசனையையும் தொழில் துணிவோருக்கு அறிவிக்க வேண்டும்.

(v) மாவட்ட உள்ளூர்க் கழகங்களின் காலாந்திர அறிவுரை யின் மூலம் பல்வேறு திட்டங்களை அமுலாக்க மக்களின் தீவிர பங்கெடுப்பை ஒவ்வொரு மட்டத்திலும் ஊக்குவிக்க வேண்டும்.

அரசியல் தலையீடு (Political Pressures)

பிராந்தியக் கழகங்கள் தொழில்களைச் சமூக, பொருளாதார காரணிகளின் அடிப்படையில் நிறுவதற்குத் தடையாக இருப்பது அரசியல் தலையீடாகும்.[1] சமீபகாலத்தில் பொதுத் துறையில் ஒரு குறித்த தொழிலைத் தொடங்கவேண்டும் என்று முன்மொழியப் பட்டால் ஒரு குறித்த மாநிலத்திலேயே தொழிலை நிறுவ வேண்டும் என்று அரசியல் தலையீடு ஏற்படுகிறது. இத்தகைய சூழ் நிலையில் நாட்டின் பொருளாதார சமூக தேவைகளின் அடிப்படையில் சமச்சீரான வளர்ச்சி ஏற்படுவதற்கு இடையூறாக இருப்பது அரசியல் கட்சிகளின் தலையீடாகும். எனவே, இத்தகைய தலையீடுகளைக் குறைப்பதற்கு வழிமுறைகள் மேற்கொள்ள வேண்டும்.

[1] S. C. குச்சால், 'இந்தியத் தொழில் பொருளாதாரம்' ப. 210.

## 2. தொழில் இடப்பாட்டு முறை
(Pattern of Location)

ஒவ்வொரு தொழிலும் ஓரிடத்தில் குவிவதற்கான நாட்டத்தை ஆராய்ந்து பிராந்திய வாரியாகத் தொழில்களை நிறுவவேண்டும். இக் கருத்தை ஆராய, பேராசிரியர் 'சர்கண்ட் பிளாரன்சு' தந்துள்ள சீரான முறையை ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம். தொழிலிடப் பாட்டு குணகம் (Co-effcients of Localisation) என்ற கருத்தைப் பயன்படுத்தி அவர் மூன்றுவகைத் தொழில்களாகப் பிரித்து ஆராய்ந்துள்ளார். அதாவது குணகம் அதிகம் உள்ள, மத்திய அளவில் உள்ள, குறைந்த அளவுள்ள என்ற மூன்று வகைத் தொழில்களாகும். பிராந்தியத் தொழில் வளர்ச்சிக் கொள்கையின் அடிப்படையில் எந்தெந்தத் தொழில்களைப் பரவச் செய்யலாம் (Dispersal) என்பதை அறிய இப் பாகுபாடு பெருந் துணை புரிகிறது. அதிக குணகம் கொண்ட தொழில்கள் ஒரே இடத்தில் குவியும் இயல்புடையவைகளாய் உள்ளன. அத்தகைய தொழில்கள் வளர்ச்சி குறைந்த நிலையிலிருக்கு மாதலால் அவைகளை வேறு இடங்களில் நிறுவினால் வளர்ச்சி குன்றிவிடலாம். நடுத்தரக் குணகத்தைக் கொண்ட தொழில்கள் பரவுவதற்கு (Dispersal) மிகவும் பொருத்த முடையவைகளாகும். இத்தகைய தொழில் பிரிவு பிராந்தியங்களிடையே ஒத்துழைப்புப் பிரச்சினையைத் தீர்ப் பதற்குப் பெருந்துணை புரிகிறது. தொழில் வேலைவாய்ப்புகளில் சம நிலைடையச் செய்வதற்கு இத்தகைய தொழில்களின் மறு ஒதுக்கீடு (Re-Allocation) இன்றியமையாததாகும். பிராந்தியத் தொழில் ஏற்றத்தாழ்வை நீக்குவதோடு ஒவ்வொரு பகுதியிலும் புதிய தொழில்களைத் தோற்றுவித்துப் பிராந்தியங்களிடையே சமநிலை உருவாகுவதற்கு இக்கொள்கை வகைசெய்கிறது.

## 3. சிறிய தொழில்கள் பரவலாக்கப் படல்
(Dispersal of Small Industries)

பேரளவுத் தொழில்களோடு சிறிய, நடுதரத் தொழில்களும் வளர்ச்சியடைந்து, ஒன்றையொன்று நிறைவு செய்து பிராந்தியங் களிடையே சமநிலையை உருவாக்க முடியும். பேரளவுத் தொழில்களைவிடச் சிறிய தொழில்கள் பிராந்தியரீதியில் பரவலாக அமையக் கூடியவை. மேலும், பேரளவுத் தொழில்களைவிட இத் தொழில்கள் பரவுவதற்கு மிகவும் பொருத்தமானவைகளாக உள்ளன. எனவே, சீரமைக்கப்பட்டத் தொழில் அமைப்பில் நிலைத்து இருக்க, சக்திபடைத்த சிறிய தொழில்களை ஊக்குவிப்பது சிறந்ததாகும்.

## 4. போக்குவரத்து முறையைச் சீரமைத்தல்

தொழிலிடப்பாட்டைத் தீர்மானிக்கும் காரணிகளில் போக்குவரத்து வசதியும் ஒன்ருக இருப்பதால் போக்குவரத்து அமைப்பையும், கட்டணக் கொள்கைகளையும் தக்கபடி சீரமைக்க வேண்டியது அவசியமாகும். அவ்வாறு செய்தால் தொழிலிடப்பாட்டின் போக்கைத் தேவையானபடி மாற்றியமைக்க வழி கிடைக்கும். பிராந்தியங்களின் அடிப்படையில் நவீன போக்குவரத்து முறையைப் பயன்படுத்திச் சமச்சீரான தொழில் வளர்ச்சியின் வேகத்தை அதிகரிக்க முடியும். வளர்ச்சி குறைந்த, வளர்ச்சியில்லாத பிராந்தியங்களில் போக்குவரத்துச் சாதனங்களை வளர்ச்சியடையச் செய்தால் புதிய தொழில்கள் தோன்ற வகையேற்படும்.

## 5. ஆக்கசக்தி அதிகரிக்கப்படல்

(Increase of Electricity)

மின்சக்தி, பிராந்திய மயம் ஏற்பட வகை செய்யும் கருவியாகப் பயன்படுகிறது. வளங்களின் பாதுகாப்பு, பல்வேறுபட்ட, பரவலாக்கப்பட்ட தொழில்களின் வளர்ச்சி ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் பிராந்தியப் பொருளாதாரம் அமைகிறது. மின்சக்தியைப் பாதுகாத்துத் தொழில்களைப் பரவலாக்கினுல் பொருளாதார சமூக கலாச்சாரத் தேவைகளையும் மற்ற நவீன நகர வாழ்க்கை வசதிகளையும் பெற வழிகிடைக்கிறது. நீண்டகால நோக்கங்களை அடிப்படையாகக் கொண்ட தொடர்ந்த நடவடிக்கையாக அமைவது மின் ஆக்கத் திட்டமாகும். 1955-ல் தொழில்கள் 4,500 மில்லியன் அலகு மின்சக்தியைப் பயன்படுத்தியுள்ளன. அது 1960 ஆம் ஆண்டின் இறுதியில் 12,000 மில்லியன் அலகுகளாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. பிராந்தியத் தொழில் வளர்ச்சிக்கு 'மாரு மின் உற்பத்திக் கொள்கை' ஏற்றதாகாது. தேவைக்கேற்ப மின் சக்தியின் இலக்குகளை அதிகரித்துச் சமச்சீரான தொழில் வளர்ச்சியைப் பெறவேண்டும்.

## 6. பிராந்தியத் தொழில்களின் பங்கீடு

(Regional Distribution of Industries)

சீரான பிராந்தியத் தொழில்களின் பங்கீட்டைச் சாதிக்கப் பல்வேறு தொழில்கள் பரவலாக்கப்படும் போக்கைத் தீவிரமாய் ஆராயவேண்டும். இந்தியத் தொழில்களின் இடப்பாட்டுப் போக்கின் ஓர் ஆய்வு பருத்தி நெசவு, சோப்பு, தீப்பெட்டி, சிமெண்ட், ஆகிய தொழில்கள் போர்க்காலத்தில் (1918—1939)

பல்வேறு பகுதிகளில் பரவியுள்ளன என்பதை உணர்த்துகிறது. தோல், காகிதம் போன்ற தொழில்களும் விரிவடையும் போது பரவுவதற்கு ஏற்றநிலையைப் பெறுகின்றன. உத்தரப்பிரதேசம் பீஹார் இவ்விடங்களில் சர்க்கரை ஆலைகள் குவிந்திருந்தன, தற்போது இத் தொழிலும், நீர்ப்பாசன வசதிகளைப் பெற்ற மற்ற மாநிலங்களுக்குப் பரவி வருகின்றது. சணல் தொழிலும் தற்போது வங்காளத்திலிருந்து உத்தரப் பிரதேசம், பீஹார், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் பரவிவருகின்றது. பிராந்திய வளர்ச்சித் திட்டங்கள் மத்திய திட்டங்களின் குறிக்கோள்களுக்கு எதிராக அமைபவையல்ல. தேசிய அளவில் ஒருங்கிணைந்த, சமச்சீரான தொழில் வளர்ச்சியைப் பெற அவை துணைபுரிகின்றன. பிராந்தியக் கழகங்கள் எல்லா மக்களின் திறமைகளையும் ஒருங்கிணைத்து நாடு முழுவதும் பிராந்தியத் திட்டங்களைப் பரவலாக்கி, ஆக்க நடவடிக்கைகளை மேற்கொள்ள வகை செய்யும்.

பிராந்தியங்களை வரம்பிடுதல் (Regional Delimitation)

நாட்டின் பல்வேறு நிலப்பகுதிகளைப் பொருளாதார எல்லைகளாகப் பிரித்துப் பிராந்தியங்களை வரம்பிட்டால்தான் ஒவ்வொரு பிராந்தியத்திலும் மேற்கொள்ளத்தக்க பொருளாதார நடவடிக்கைகளை ஆராயமுடியும். அவ்வாறு வரம்பிடப்பட்ட பொருளாதாரப் பிராந்தியங்களைக் கொண்ட இந்தியப் பொருளாதாரத்தின் புதிய உருவப்படம் புனரமைப்புத் திட்டங்களினால் படிப்படியாகத் தோன்ற வகைசெய்யப் படவேண்டும். பொருளாதாரப் பகுதி என்று கருதத்தக்க ஒரு பகுதியில் உள்ளடங்கும் அரசியல் கருத்து வேறுபாடுகளைக் கொண்ட அரசுகள் சமச்சீரான பொருளாதார வளர்ச்சியைப் பெறும் நோக்கோடு இதுகாறும் ஒத்துழைத்திருந்தால் இந்தியப் பொருளாதார வளர்ச்சி தற்போதுள்ளதைவிடப் பன்மடங்கு பெருகி இருக்கும்.[1] ஆனால், அதற்கு மாறாகக் கருத்து வேறுபாடுகளைக் கொண்ட மாநிலங்களின் போக்கினால் நாட்டின் பொருளாதார வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. இதற்கு முக்கிய காரணமாக விளங்கியது அரசின் கட்டுப்பாடற்ற தனியார் தொழிலை ஊக்குவிக்கும் தனி உரிமைக் கொள்கையாகும். இக் கொள்கை சமச்சீரான பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கும் பிராந்தியக் கொள்கை (Regional Policy) க்கு முக்கியத்துவம் அளிக்கத் தவறிவிட்டது. தனி உரிமையை அடிப்படையாகக் கொண்ட மாநிலங்களின் வளர்ச்சிக் கொள்கை உருவாகக் காரணமாய் இருந்தது இந்தியத் தொழில் குழுவின் (Indian Industrial Commission) பரிந்துரையாகும். இக் குழுவின் அறிக்கை வெளியிடப்பட்டபின்

1 டாக்டர் R. பாலகிருஷ்ணு, இந்தியப் பிராந்தியத் திட்டம், ப. 121.

மாநிலங்கள் ஒன்றையொன்று போட்டியிட்டுக் கொண்டு தங்கள் மாநில எல்லைகளுக்குள் வளர்ச்சியைச் சாதிக்க முற்பட்டன.[1] மாநிலங்கள் தங்கள் நிதிநிலைக்குத் தக்கபடி வளர்ச்சித் திட்டங்களை அமுலாக்கவும், வரவு செலவுத் திட்டத்தைச் சமநிலைப்படுத்தவும், நிதிவசதிக்கு மத்திய அரசை எதிர்பார்க்காமலிருக்கவும் இத்தகைய கொள்கையை இந்தியத் தொழில் குழு பரிந்துரைத்தது. ஆனால் இப் பரிந்துரைகளை அரசு ஏற்றுக் கொள்ளவில்லை. அவ்வப்போது தேவைக்குத் தக்கபடி மாநில அரசுகளை மத்திய அரசு கட்டுப் படுத்திவந்தது. பரந்த நிலப்பரப்பை உள்ளடக்கிய பொருளா தாரப் பகுதிகளின் அடிப்படையில் விரைவான, சமச்சீரான பொருளாதார முன்னேற்றத்தைப் பெருமளவில் சாதிக்க முடியும் என்ற உண்மையைச் சமீபத்தில்தான் இந்தியத் திட்ட நிபுணர்கள் உணர்ந்துள்ளனர்.

இந்தியப் பிராந்தியங்களின் பிரிவுகள்

எனவே, பொருளாதார வளங்களையே உள்ளடக்கிய பரந்த பொருளாதாரப் பகுதிகளைக் கொண்ட பிரிவுகளாக இந்தியா பிரிக்கப்பட்டால், ஒவ்வொரு பிராந்தியத்திலும் மேற்கொள்ளத் தக்க பொருத்தமான பொருளாதார நடவடிக்கையைச் சுலபமாகத் தீர்மானிக்க முடியும். இதன் அடிப்படையில் பல்வேறு மாநிலங்களை உள்ளடக்கிய நான்கு பரந்த பொருளாதாரப் பிராந்தியங்களாக இந்தியாவைப் பிரிக்கலாம்.[2] அவைகளாவன:

1. வடகிழக்குப் பிராந்தியம் (North Eastern Region)

   இது அஸ்ஸாம், மேற்கு வங்காளம், திரிபுரா, பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களை உள்ளடக்கிய பொருளா தாரப்பகுதியாகும்.

2. மத்தியப் பிராந்தியம் (Central Region)

   இது ராஜஸ்தான், மத்திய பிரதேசம் ஆகிய மாநிலங்களை உள்ளடக்கும்.

3. வடமேற்குப் பிராந்தியம் (North—Western Region)

   இதில் ஜம்மு, காஷ்மீர், இமாசலப் பிரதேசம், பஞ்சாப், டெல்லி, உத்திரப் பிரதேசம், மஹாராஷ்டிரம், குஜராத் ஆகியமாநிலங்கள் உள்ளடங்கும்.

1 வீரா ஆன்ஸ்டே (Vera Anstey) 'இந்தியப் பொருளாதார வளர்ச்சி' ப. 220-21.

2 டாக்டர் R. பாலகிருஷ்ணு, 'இந்தியப் பிராந்தியத் திட்டம்' ப. 123.

4. தென் பிராந்தியம் (Southern Region)

இது ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு, பாண்டிச்சேரி, மைசூர், கேரளா ஆகிய மாநிலங்களை உள்ளடக்கும்.

வட-கிழக்குப் பிராந்திய வளர்ச்சி

அஸ்ஸாம், மேற்கு வங்காளம், திரிபுரா, பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களின் ஒத்துழைப்புடன் கூட்டாக ஆக்கத்திற்குப் பயன்படுத்தத் தக்க ஏராளமான தாது வளங்கள் இப் பிராந்தியத்தில் உள்ளன. பீஹார், ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் இரும்புத்தாது (Iron ore), சுட்ட நிலக்கரி (Cooking Coal), சுண்ணும்புக்கல் (Limestone), குரோமியம், மங்கனீசு, எஃகு ஆகிய தாது வளங்கள் ஏராளமாகக் கிடைப்பதால், இப் பிராந்தியத்தில் முழு இடப்பாட்டுடன் இரும்பு, எஃகு தொழில் வளர்ச்சியடைய நல்ல வாய்ப்பு உள்ளது. இப் பிராந்தியத்தை இந்தியாவின் 'கறுப்புப் பிரதேசம்' (Black Country) என்று அழைக்கலாம். இப் பிராந்தியத்தில் மற்ற உலோகத் தொழில்கள் (Metallic Industries) வளர்ச்சியடைய அதிக வாய்ப்பில்லை. வேளாண்மைத் தொழிலுக்கு வேண்டிய பொட்டாசியம் நைட்ரேட், அம்மோனியம் சல்பேட் ஆகிய தாதுப் பொருள்களும் இப்பிராந்தியத்தில் கிடைப்பதால், உரத் தொழிற் சாலைகளையும் (Fertilisers Industry) ஏற்படுத்தலாம். மைகாவும் பீஹாரில் ஏராளமாகக் கிடைக்கிறது. வேளாண்மை மூலப் பொருள்களாகிய சணல் மேற்கு வங்காளத்திலும், எண்ணெய் வித்துகள் பீஹார், மேற்கு வங்காளத்திலும் பெருமளவில் கிடைக்கிறது. எனவே, இப் பிராந்தியத்தில் சணல் தொழில் சர்வாதீனத்துடன் வளர்ச்சியடைய வேண்டும். தமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் சீராகச் செயலாற்றுவதால் மின் இயக்க சக்தியும் இப் பிராந்தியத்திற்கு அதிகமாகக் கிடைக்கும். எனவே, ஆக்க சாதனங்களின் (Factor Equipment) அடிப்படையில் இப் பிராந்தியத்தில் இரும்பு-எஃகு தொழில், சணல் தொழில், ரசாயன தொழில்கள் (Chemical Industries), சிமெண்டு, எண்ணெய், சோப்பு உற்பத்தி, மைகாவின் துணைகொண்டு மின்சாதனப் பொருள் தொழில் (Electrical Industry) ஆகியவை பிரதான தொழில்களாக வளர்ச்சியடைய முடியும். ஆனால், மேற்கு வங்காளத்தில் தொழில் மக்கட் தொகையின் இட நெருக்கடியைக் குறைக்க, பிராந்தியத் திட்டத்தின் அடிப்படையில் பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களுக்குத் தொழில்கள் பரவலாக்க (Dispersal) வேண்டியது இன்றியமையாததாகும். எனவே, பிராந்திய வளர்ச்சி முறையால் ஒரே இடத்தில் தொழில் குவிவதை (Concentration) ஓரளவு குறைக்க முடிகிறது.

மத்தியப் பிராந்திய வளர்ச்சி

ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களை உள்ளடக்கிய இப் பிராந்தியத்தில் தொழில் வளர்ச்சி மிகக் குறைவு. இங்கு பணிபுரியும் தொழில், வேலையாள்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. இவ்விரண்டு மாநிலங்களும் ஒருங்கிணைந்து செயல் பட்டால் இப் பிராந்தியத்தில் உள்ள வளங்களைக் கொண்டு வளர்ச்சியை அதிகரிக்க முடியும். இம் மாநிலங்கள் ஒன்றை ஒன்று துணைபுரிந்து சில தொழில்களை வளர்ச்சியடையச் செய்யமுடியும். இப் பிராந்தியத்தில் நிலக்கரி அதிகமாக கிடைக்கிறது. சுட்ட நிலக்கரியின் அளிப்பு குறைவாகும். மத்தியப் பிரதேசத்தில் நிலக்கரி இருப்பைக் கொண்ட பகுதிகள் உள்ளன. சுட்ட நிலக்கரி இல்லாததால் இரும்பு, எஃகை உற்பத்திச் செய்யமுடிவதில்லை. எனவேதான் இப் பிராந்தியத்தில் இரும்பு, எஃகு தொழில் வளர்ச்சியடையவில்லை. இப் பிராந்தியத்தில் மங்கனீசு, சுண்ணும்புக் கல், களிமண், பாக்ஸைட், ஆகியவைகள் கிடைக்கின்றன. எனவே, இப்பகுதியில் பேரளவு சிமெண்டுத் தொழிலும், மின் இயக்கச் சக்தி அளிப்பும் ஏற்படுத்தப்படலாம். இப் பகுதியில் பஞ்சு, எண்ணெய் வித்துகள் ஆகிய வேளாண்மை மூலப் பொருள்கள் அதிகமாகக் கிடைக்கின்றன. எனவே, பருத்தித் தொழிலும், எண்ணெய்த் தொழிலும் இப் பகுதியில் வளர்ச்சியடைய முடியும். ஏராளமான எண்ணெய் வித்துகள் கிடைக்கும் இப் பகுதியில் பேரளவு சோப்புத் தொழில் தோன்ருதது ஒரு பெரும் குறையாகும். இரசாயனத் தொழில்கள், பெருமளவில் இப் பிராந்தியத்தில் அதிகரிக்கவில்லை. பருத்தித் தொழில் வளர்ச்சியடைய வேண்டிய அளவுக்கு இப் பகுதியில் முன்னேற்றமடையவில்லை. தோல் தொழில் ஓரளவு வளர்ச்சியடைந்துள்ளது. இப் பகுதியில் பூர்த்தி செய்யப்படாத பொருளாதார நடவடிக்கைகளைப் பிராந்திய அமைப்பின் (Regional Authority) செயல்களால்தான் சாதிக்க முடியும். சில பொதுவான கருத்துகளின் அடிப்படையில் அரசியல், சுதந்திரம், கொண்ட இவ்விரு மாநிலங்களும் ஒரு பொருளாதார அமைப்பின் கீழ் வந்தால் இப் பிராந்தியத்தில் அதிகமான முன்னேற்ற வாய்ப்புகள் உள்ளன.

வடமேற்குப் பிராந்திய வளர்ச்சி

இப் பிராந்தியத்தில் உள்ள மாநிலங்கள் ஜம்மு—காஷ்மீர், ஹிமாசலப் பிரதேசம், பஞ்சாப், டெல்லி, உத்தரப்பிரதேசம், மஹாராஷ்டிரம், குஜரத், ஆகியவைகளாகும். இப் பிராந்தியத்தில் உள்ள மாநிலங்களில் அதிக தொழில் வளர்ச்சியைப் பெற்றுள்ளது மேற்கத்திய பிராந்தியத்தில் உள்ள மஹாராஷ்டிரம், குஜராத் ஆகியவைகளாகும். மேற்கு வங்காளத்தைப் போன்று இவ்விரு

மாநிலங்களும் தொழில் வளர்ச்சியில் மேம்பட்டுள்ளன. பஞ்சாப், உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களும் நல்ல வளர்ச்சி பெற்றுள்ளன. இப் பிராந்தியத்தில் பல்வேறு வகையான வளங்கள் காணப்படுகின்றன. பஞ்சாப் மாநிலத்தைத் தவிர இப் பிராந்தியத்தில் மற்ற இடங்களில் நிலக்கரி இல்லை. ஆனால் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான மின் இயக்க சக்தி (Hydro-Electric energy) பெருமளவில் வளர்ச்சியடைந்துள்ளது. சுட்ட நிலக்கரி, இரும்புத் தாதுக்கள், இவைகள் இன்மையால் இப் பிராந்தியத்தில் இரும்பு எஃகு தொழில் வளர்ச்சியடையவில்லை. பஞ்சாபில் மிகக் குறைந்த அளவு சுண்ணாம்புக்கல் கிடைக்கிறது. எனவே இப் பகுதியில் உலோகத் தொழில்களின் வளர்ச்சிக்கு வாய்ப்பு இல்லை; அலுமினியம், கிடைப்பதால் உலோகத் தொழிலில் ஓரளவு வளர்ச்சியடையலாம். பஞ்சாபில் உப்பு, நிலக்கரி, ஜிப்ஸம், சுண்ணாம்புக்கல், களிமண், ஆகியவை கிடைப்பதால் சிமெண்டுத் தொழிலும், மட்பாண்டத் தொழிலும் வளர்ச்சியடைய வாய்ப்பு உண்டு. இப் பிாரந்தியத்தில் பருத்தி, கரும்பு, கோதுமை ஆகிய வேளாண்மை மூலப் பொருள்கள் பெருமளவில் கிடைக்கின்றன. பஞ்சாபிலும், பழைய பம்பாய் மாநிலத்திலும் ஏராளமான பருத்தி கிடைப்பதாலும், உத்திரப்பிரதேசத்தில் கரும்பு கிடைப்பதாலும், இப் பிராந்தியத்தில் பருத்தி, சர்க்கரைத் தொழில் பெருமளவில் வளர்ச்சியடைய வாய்ப்புண்டு. மேலும், காகிதம், கந்தக அமிலம், கம்பளி, தோல், ஆகிய தொழில்களும் நல்ல வளர்ச்சியைப் பெற முடியும். மஹாராஷ்டிரா, குஜரத் ஆகிய மாநிலங்களில் ஏராளமான பருத்தி ஆலைகள் தோன்றியுள்ளன. இத் தொழில்கள் தற்போது மற்ற இடங்களிலும் பரவி வருகின்றன. பஞ்சாபில் அதிகப் பருத்தி விளைந்தாலும், அங்குப் பருத்தித் தொழில் பிற்பட்ட நிலையில் இருப்பது வருந்தத் தக்கதாகும். கம்பளித் தொழில் இப் பிராந்தியத்தில் மேலும் வளர்ச்சியடைய நல்ல வாய்ப்புகள் உள்ளன. மஹாராஷ்டிரா, குஜரத் இம் மாநிலங்களில் ஏராளமான மூலதனமும், தொழில் துணிவோர் திறனும் இருப்பதால் தொழில் வளர்ச்சி மேம்பட்டுள்ளது. ஆனால், இத்தகைய ஒருதலைப்பட்ட வளர்ச்சி நாட்டின் சமநிலைக்கு ஒவ்வாததாகும். பிராந்திய மயக் கொள்கையின் அடிப்படையில் இப் பிராந்தியம் முழுவதிலும், மூலதனம், நிதிவசதி ஆகியவைகள் சரிசமமாகப் பங்கிடப் படவேண்டும். மஹாராஷ்டிராவில் சோப்பு உற்பத்தி பெரும் அளவில் அதிகரித்திருப்பது இடப்பாட்டுக் கொள்கையின் அடிப்படையில் சிறந்ததாகாது. மேலும், தீப்பெட்டித் தொழில் இம் மாநிலத்திலேயே வளர்ச்சியடைந்துள்ளது. இத் தொழிலும் பிராந்தியத்தின் மற்றப் பகுதிகளில் ஆரம்பிக்கப்பட்டால், இட நெருக்கடி கொண்ட இம் மாநிலங்களில் தொழில்களின் அழுத்தம் குறையும்.

தென் பிராந்திய வளர்ச்சி (Southern Region-develoment)

தென் பிராந்தியத்தில் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், பாண்டிச்சேரி, மைசூர், கேரளா ஆகிய மாநிலங்கள் உள்ளடங்கும். இப் பிராந்தியத்தில் வளர்ச்சிக்கான பல வாய்ப்புகளிருந்தும் தக்க பொருளாதார வளர்ச்சி ஏற்படவில்லை. இம் மாநிலங்களில் மைசூர், ஆந்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்கள் அதிக வளர்ச்சியைப் பெற்றுள்ளன. தக்க பிராந்திய அமைப்பு ஏற்படுத்தப் பட்டு இப் பிராந்தியத்தின் சமச்சீரான வளர்ச்சி ஏற்பட வகை செய்யப்படவேண்டும். வடஇந்திய மாநிலங்களில் காணப்படும் தொழில் துணிவோரின் திறம் (Entreprenurial ability), மூலதனம் இவைகள் தென் பிராந்திய மாநிலங்களில் அமையாததால் வளங்கள் முழு அளவில் பயன்படுத்தப்படவில்லை. எனவே, பிராந்தியத்தின் ஒரு மத்திய அமைப்பு, வெளி மூலதனத்தைப் பெற்றுத் திறமையான தொழில் அதிபர்களை உருவாக்கிப் பிராந்தி யத்தில் அதிக பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியும். இப் பிராந்தியத்தின் ஒவ்வொரு பகுதியும் ஒன்றுக்கொன்று துணைபுரிந்து வட்டார வளர்ச்சியை அதிகப்படுத்தமுடியும். இப் பிராந்தியத்தில் நிலக்கரி வளங்கள் கிடையாது. மின் இயக்க சக்தி இப் பகுதியில் வளர்ச்சியடைய நல்ல வாய்ப்பு உள்ளது. இப் பகுதியில் இரும்பு வளங்களும் அதிகமாக உள்ளன. மங்கனீசு, தாது, இரும்புத்தாது தமிழ்நாட்டில் உள்ள சேலம் மாவட்டத்தில் கிடைக்கின்றன. மைசூரின் சில பகுதிகளில் இரும்புத் தாது கிடைக்கிறது. இவ்விரு மாநிலங்களிலும் குரோமியம், மக்னீசியம், சுண்ணும்புக்கல் ஆகியவைகள் கிடைக்கின்றன. சுட்ட நிலக்கரி கிடைக்காததால் இப் பகுதியில் எஃகு தொழில் வளர்ச்சி யடையவில்லை. ஆந்திராவில் 'மைக்கா' அதிக அளவில் கிடைக் கிறது. பருத்தி, சர்க்கரை, எண்ணெய் வித்துகள் ஆகியவைகள் கிடைப்பதால் இப் பிராந்தியத்தில் சர்க்கரைத் தொழில், எண்ணெய்த்தொழில், தனி எஃகு தொழில், பருத்தித் தொழில் முதலியவைகள் வளர்ச்சியடைந்து வருகின்றன. தோல் பதனிடுதல், தோல் பொருள்கள் உற்பத்தி செய்தல், இவ் வேலை களும் இப் பகுதியில் நடைபெறுகின்றன. இப் பிராந்தியத்தில் வளர்ச்சியடையத் தக்க பேரளவுத் தொழில்களும் உண்டு. மற்றப் பிராந்தியங்களோடு ஒப்பிடும்போது இப் பிராந்தியமும், தொழில் சமநிலையை நிலைநாட்டச் சமப்படுத்தும் காரணிகளாக அமைய (Balancing Factors) மற்ற ஏராளமான தொழில் களையும் ஏற்படுத்தலாம். இப் பிராந்தியத்தில் பருத்தித் தொழிலும், இரும்பு எஃகு தொழிலும், சர்க்கரைத் தொழிலும், தோல் தொழிலும், பட்டுத் தொழிலும் ஓரளவு வளர்ச்சியடைந் துள்ளது. மைசூர் மாநிலத்தில் இரசாயனப் பொருள்கள் சோப்பு,

காகிதம், சிமெண்ட் இவைகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. கேரளாவில் தேயிலை, ரப்பர்த் தோட்டங்கள். கயிற்றுத்தொழில் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. இப் பிராந்தியத்திற்கேற்ற அடிப்படைத் தொழில்கள் வளர்ச்சியடையாமல் காணப்படுகின்றன. எனவே, இப் பிராந்தியத்தில் வளர்ச்சியடையத் தகுந்த தொழில்களை வட்டார வளங்களின் ஒதுக்கீட்டின் மூலம், அடைய வகை செய்ய வேண்டும். பிராந்தியங்கள் எல்லாவற்றிலும் தென் பிராந்தியத்தில்தான் வளர்ச்சிக்குச் சிறந்த எதிர்காலம் காணப்படுகிறது.

## பிராந்தியங்களிடையே ஒத்துழைப்பு (Inter-Regional Adjustments)

பிராந்தியங்களிடையே ஒத்துழைப்பை ஏற்படுத்தத் தொழில்களை அவைகளின் பரவலாகும் நாட்டத்தின்படி (Propensities for dispersion) பிரிக்க வேண்டும். "பல்வேறு பிராந்தியங்களில் தொழில் வளர்ச்சியின் ஏற்றத்தாழ்வு இருக்கும் வரை தொழில் வேலை வாய்ப்பு நிலையில் சமநிலையைச் சாதிக்கத் தொழில்களை ஒதுக்கீடு, மறு ஒதுக்கீடு செய்ய வேண்டியது என்றும் இன்றியமையாததாகும்".[1] பிராந்தியங்களுக்குத் தகுந்த தொழில்களைத் தேர்ந்தெடுப்பதற்கு இடப்பாட்டுக் குணகக் (Coefficients of Localisations) கொள்கையைப் பயன்படுத்த வேண்டும். பிராந்தியங்களிடையே ஒத்துழைப்பு முறையைப் பரிந்துரைக்கும் முன் பிராந்திய அமைப்புகள் ஒவ்வொரு பிராந்தியத்தின் வளங்களையும், தொழில்களையும், விவரமாகக் கணக்கிட வேண்டும். "இருக்கும் தொழில்களை வேலை வாய்ப்பில் சமநிலையை ஏற்படுத்துவதைக் காட்டிலும் புதிய தொழில்களைத் தோற்றுவித்துப் பிராந்தியங்களிடையே வேலைச் சமநிலையைப் பெற பிராந்திய அதிகாரிகள் முயலவேண்டும்." "தொழில் மறுபங்கீடு, புதிய தொழில்களைத் தோற்றுவித்தல் ஆகிய இரு முறைகளும் ஒரே சமயத்தில் மேற்கொள்ளப்பட வேண்டும் புதிய தொழில்களை வளர்ச்சியடையச் செய்ய அதிக வாய்ப்புக் கிடைத்தால் பிராந்தியங்களிடையே சமநிலையை ஏற்படுத்தும் பணி சுலபமாகிறது."

## இந்தியாவுக் கேற்ற பிராந்திய அமைப்பு

பல்வேறு அரசியல் பகுதிகளைக் கொண்ட சுதந்திரப் பொருளாதாரப் பகுதியாகிய பிராந்தியத்தில் ஒருமித்த நடவடிக்கையை மேற்கொண்டு வளங்களைப் பயன்படுத்த ஒரு தகுந்த பிராந்திய அமைப்பு (Regional Authority) இன்றியமையாத தாகும். முதலாளித்துவக் கருத்தைக் கொண்ட தனியார் தொழிலின் அடிப்படையிலேயே பொருளாதார நடவடிக்கைகள் முழுவதும்

[1] டாக்டர் R. பாலகிருஷ்ணா, 'இந்தியப் பிராந்தியத் திட்டம்,' ப. 148.

இருப்பது சிறந்ததாகாது. ஏனெனில் அதில் வீண் போட்டியும் வருமான ஏற்றத்தாழ்வும் அதிகரிக்கும். சரியாக வரையறுக்கப் பட்ட ஒரு பொருளாதார பிராந்தியத்தில் வளர்ச்சியைச் சாதிக்கப் பிராந்திய அதிகாரிகள் (Regional Authorities) அதிகக் கட்டுப் பாட்டையும், வழிகாட்டும் நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும். பிராந்திய அமைப்புகள் பிராந்தியத்தின் பொருளா தார ஆக்க சக்திகளை மதிப்பிட்டுத் தனியார் துறைக்கு உகந்த நடவடிக்கைகளையும், பொதுக்கட்டுப்பாட்டுக் குட்பட்ட பணிகளை யும் ஒதுக்கிட வேண்டும். பல்வேறு அரசியல் எல்லைகளைக் கொண்ட மாநிலங்களின் கருத்து வேறுபாடுகளை ஒருங்கிணைத்தல் பிராந்திய அமைப்புகளின் மிக இக்கட்டான பணியாகும். இவ்வமைப்பின் பணிகள் நிர்வாகத் தன்மையுடையதாக மட்டுமோ அல்லது வர்த்தக இயல்புடையதாகவோ இருக்க லாகாது. இவ்வமைப்பில் எல்லாப் பகுதிகளின் பிரதிநிதிகளுக்கும் போதுமான அந்தஸ்து அளிக்கப்பட வேண்டும். திட்டங்களை அமுலாக்கும் போது அரசியல் தலையீடு முற்றிலும் நீங்க வேண்டும். இவ்வமைப்பிற்கு நிதி சுதந்திரமும், (Financial Independence) அளிக்கப்பட வேண்டும். இவ்வமைப்பை ஏற்படுத்த இரு மாதிரிகள் (models) இந்தியாவுக்கு உள்ளன. ஒன்று இங்கிலாந்தில் வளர்ச்சியடைந்த பொதுக்கழகம் (Public Corporation); இரண்டு அமெரிக்காவின் டென்னஸ் பள்ளத்தாக்கு அமைப்பு (Tennesse Valley Authority).

இவ்வமைப்புகளில் அரசு துறைகளின் அதிகக் கட்டுப்பாடு நீங்கி நெகிழ்ச்சியுடைய நிர்வாக அமைப்பு ஏற்படுத்தப் பட்டது. இக் கழகங்களுக்கு நிதி சுதந்திரம் அளிக்கப்பட்டது. அரசியல் தலையீடும் கட்டுப்பாடும் முற்றிலுமாக நீக்கப்பட்டது. இதற்குக் காரணம் இங்கிலாந்தின் பொதுக் கழகங்கள் திறமை யுடனும், சுய ஆர்வத்துடனும் செயல்பட்டன. அத்தகைய நிறுவனங்கள் பொதுவுடைமை நிறுவனங்களின் நடவடிக்கை களுக்கு உகந்தவைகளாய் உள்ளன. எனவே, ஓரளவு சுதந்திரம் கொண்ட பொது நிறுவனங்களின் மூலம், ஒரு நாட்டின் சமூக பொருளாதார நடவடிக்கைகளில் அரசு பங்கெடுக்க முடியும். இந்தியாவிற்கு டென்னஸ் பள்ளத்தாக்கு அமைப்பைப் போன்ற தனியார், பொதுத்துறைக் கூட்டுறவு இயல்பு கொண்ட ஓர் அமைப்புத் தேவையாகும். ஒரு குறித்த காரணத்திற்காக என்று அமைக்கப்படாத ஒரு நிறுவனமாக டென்னஸ் பள்ளத் தாக்கு அமைப்பு இருந்தது. தனியார் தொழில்களின் ஒத்துழைப்பும், அரசின் கட்டுப்பாடும் அமைந்த ஒரு பிராந்திய நிறுவனம் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றதாக

அமையும். இந்தியாவில் நான்கு சுதந்திரப் பிராந்திய அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டபின், இவைகளை ஒருங்கிணைக்க வேண்டிய பணி மத்திய திட்டக்குழுவைச் சார்ந்ததாகும். பல்வேறு பிராந்தியங்களின் நடவடிக்கைகளை மத்திய மட்டத்தில் ஒருங்கிணைக்க வேண்டிய கடமை இத் திட்டக் குழுவைச் சார்ந்ததாகும். பிராந்தியத் திட்டத்திற்கும் தேசியத் திட்டத்திற்கும் இடையே வரும் பிணக்குகளை (Conflicts)ச் சரிசெய்தல் ஒருங்கிணைப்பு பணியின் ஓர் அம்சமாகும். திட்டம் (Planning), பிராந்தியமயம் (Regionalism), தொழில் இடப்பாட்டு இயக்க நிலை (Dynamics of Industiral Location) ஆகிய மூன்றையும் சரியான வழியில் சமரசப் படுத்த அரசின் தலையீடு (State Intervention) இன்றியமையாததாகும்.

பிராந்திய வளர்ச்சிக் கொள்கை அமுலாக்கப்படல்

1971-ல் நிறைவேற்றப்பட்ட வட கிழக்குச் சபை சட்டம் (North-Eastern Council Act) ஆகஸ்டு 1, 1972 லிருந்து அமுலாக்கப் பட்டது. வடகிழக்குப் பிராந்திய வளர்ச்சியில் அஸ்ஸாம், மணிபூர், மேகாலயா, நாகாலந்து, திரிபுரா, மிஜோரம் (mizoram), அருணாசலபிரதேசம் ஆகிய பகுதிகள் பங்கெடுக்கின்றன. வட கிழக்குப் பிராந்திய சபை (Noth Eastern Regional Council) நாட்டின் மற்றப் பகுதிகளிலிருக்கும் மண்டலசபை (Zonal Councils) களைப் போல் செயல் முறைகளை அறிவுறுத்தும் அமைப்பாக இருக்கும். இச் சபை பிராந்திய வளர்ச்சித் திட்டத்தைத் தயார் செய்து பிராந்திய ரீதியில் சாலை வளர்ச்சி, மின்னோட்டத்தை அதிகரித்தல், வெள்ளக் கட்டுப்பாடு, நீர்ப்பாசனத் திட்டங்களைத் தீட்டுதல், மாநிலங்களிடையே போக்குவரத்து வளர்ச்சியை மேற்கொள்ளுதல் போன்ற நடவடிக்கைகள் மேலோங்க வகை செய்யும். இச் சபை ஒருங்கிணைந்த பிராந்தியத் திட்டத்தைத் தீட்டி, பிராந்தியத்தில் சமச்சீரான வளர்ச்சியைச் சாதிக்க வழி முறைகளைப் பரிந்துரைக்கும். பிராந்தியத் திட்டத்தின் அடிப்படையில் சம்பந்தப்பட்ட மாநிலங்கள் திட்ட நடவடிக்கைகளைச் சமஅளவில் அமுலாக்குகின்றனவா என்பதையும் இச் சபை கவனித்து வரும். மாநிலங்களின் நிதிவசதியுடன் கூட மத்திய அரசின் நிதியும் திட்டங்களை அமுலாக்கக்கிடைக்கும்.

இந்தியப் பிராந்தியத் தொழில் வளர்ச்சியின் போக்கு

இந்தியத் தொழில் பாங்கின் (Pattern) சமீபத்திய ஓர் ஆய்வின்படி, மஹாராஷ்டிரா, குஜரத் ஆகிய மாநிலங்களை உள்ளடக்கிய மேற்கத்திய பிராந்தியம் தொழில் வளர்ச்சியில் உன்னத நிலையிலும் வடமேற்குப் பிராந்தியம் மிகப்பிற்பட்ட

நிலையிலும் உள்ளதாகத் தெரிகிறது.[1] வடமேற்குப் பிராந்தியத்தின் எதிர்காலத் தொழில் வளர்ச்சி வாய்ப்பு ஊக்கமளிப்பதாயும் இல்லை. ஆனால், பஞ்சாபில் சிறிய தொழில்கள் ஏராளமாய் வளர்ச்சியடைந்து வருவதால் அதன் நிலை மட்டும் வேறாகும்.

பிராந்தியப் பங்கீடு
(Regional Distribution)
(அகில இந்திய மொத்தத்தில் சதவீதம்)

| மாநிலங்கள் | 1963 முதலீடு செய்யப் பட்ட மூலதனம் (சதவீதத்தில்) | 1963 வேலைக்கமர்த்தப் பட்ட தொழிலாளர்கள் (சதவீதத்தில்) | 1961 மக்கட்தொகை (கோடிகளில்) |
|---|---|---|---|
| வடமேற்குப் பிராந்தியம் | | | |
| 1. ஜம்மு, காஷ்மீர் | 0·1 | 0·1 | |
| 2. இமாசலப் பிரதேசம் | ... | 0·1 | |
| 3. பஞ்சாப் | 2 7 | 2·8 | |
| 4. டெல்லி | 1·6 | 1·7 | |
| 5. உத்திரப் பிரதேசம் | 4·9 | 7·6 | |
| | 9 3 | 12·3 | 10·17 |
| வடகிழக்குப் பிராந்தியம் | | | |
| 6. அஸ்ஸாம் | 1·9 | 2 0 | |
| 7. மேற்கு வங்காளம் | 20·3 | 22·35 | |
| 8. திரிபுரா | ... | ... | |
| 9. பீஹார் | 8·2 | 5 7 | |
| 10. ஒரிஸ்ஸா | 7 7 | 1·6 | |
| | 38.1 | 31·8 | 11·22 |

1 டி. ஆர். சர்மா, இந்தியத் தொழில் பாங்கு (Industrial Pattern of India) காமர்ஸ் 26. மார்ச் 1966, ப. 584.

| | | | | |
|---|---|---|---|---|
| மத்தியப் பிராந்தியம் | | | | |
| 11. | ராஜஸ்தான் | 1·2 | 1·6 | |
| 12. | மத்தியப் பிரதேசம் | 9·0 | 3·9 | |
| | | 10·2 | 5·5 | 5·26 |
| மேற்குப் பிராந்தியம் | | | | |
| 13. | மஹாராஷ்டிரம் | 19·0 | 20·3 | |
| 14. | குஜராத் | 7 9 | 9·2 | |
| | | 26·9 | 29·5 | 6·02 |
| தென் பிராந்தியம் | | | | |
| 15. | ஆந்திரப் பிரதேசம் | 4·7 | 5·0 | |
| 16. | தமிழ்நாடு | 6·2 | 7·6 | |
| 17. | பாண்டிச்சேரி | 0·1 | 0·3 | |
| 18. | மைசூர் | 3·0 | 3·8 | |
| 19. | கேரளா | 1·5 | 4·2 | 11·6 |
| | | 15·5 | 20·9 | |
| | | 100·0 | 100·0 | |

மேற்கண்ட அட்டவணையின்படி மத்திய பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் பணிபுரியும் தொழிலாளர்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தாலும், முதலீடு செய்யப்பட்ட மூலதனத்தின் அளவு அதிகமாய் உள்ளது. இப் பகுதிகளில் ஏற்படுத்தப்பட்டுள்ள எஃகு ஆலைகள் முதல் செறிவு (Capital Intensive) உடையவை களாய் உள்ளதால், முதலுக்கேற்ற அளவில் வேலை வாய்ப்பு ஏற்பட வாய்ப்பில்லை. இந்தியாவிலேயே தொழில் வளர்ச்சியில் மேம்பட்டு முதலிடத்தைப் பெற்றிருப்பது மேற்கு வங்காளமாகும். அதற்கு அடுத்தபடியாக மஹாராஷ்டிரம் இரண்டாம் இடத்தைப் பெற்றுள்ளது. மேற்கு வங்காளத்தில் சிறிய எண்ணிக்கை கொண்ட பெரிய தொழில்களில் அதிக அளவு மூலதனம் முதலீடு செய்யப்பட்டுள்ளது. ஆனால், மஹாராஷ்டிரத்தில் பல்வேறு வகையான அநேக தொழில் பிரிவுகளில் மூலதனம் சமமாகப் பங்கிடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். நாட்டின் பொருளாதார, சமூக நலனுக்கு இத்தகைய சமச் சீரான தொழில் வளர்ச்சிதான் பெரிதும் விரும்பத்தக்கதாகும்.

மாநிலங்களில் பிற்பட்ட பகுதிகள்

பல்வேறு பிராந்தியங்களின் பிற்பட்ட வளர்ச்சி நிலையின் அளவை அறிய அரசியல் எல்லைகளைக் கொண்ட மாநிலங்களிலுள்ள விவரங்களை அடிப்படையாகக் கொண்டுதான் மதிப்பிட முடியும். அதிக முன்னேறிய மாநிலங்களிலும் அதிக பிரச்சினைகளைக் கொண்ட 'பிற்பட்ட பகுதிகள்' (Backward Pockets) உள்ளன. பீஹார், உத்திரப்பிரதேசம், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் வாழும் மக்களில் 40 சதவீதத்தினர் பிற்பட்ட பகுதிகளில் வாழ்கின்றனர். இப் பகுதிகள் முதலிடம் பெற்று வளர்ச்சியடைவதற்குத் தக்க அரசு கொள்கையும், நடவடிக்கைகளும் அவசியமாகும்.

## தொழில் கட்டுப்பாட்டு நடவடிக்கைகள்
## (Control of Industries)

தொழிலை ஓரிடத்தில் நிறுவுவதை ஒழுங்குபடுத்துவதுதான் தொழில் திட்டத்தின் (Industrial Planning) முக்கிய குறிக்கோளாகும். இவ் விவகாரத்தில் தனியார் துறையின் தனிஉரிமைக் கருத்திற்கும், அரசின் தலையீடு, கட்டுப்பாட்டைப் போற்றும் பொதுநலக் கருத்திற்குமிடையே முரண்பாடு ஏற்படுகிறது. தொழிலைச் சுதந்திரமாகவோ அல்லது கட்டுப்பாடுகளுடனோ நிறுவுவதைப் பற்றிப்பலதரப்பட்ட கருத்து வேறுபாடுகள் உள்ளன. "தனியார் தொழில் அதிபர்கள், பொருளாதார ரீதியில் பெருமளவு நன்மை கிடைக்கும் பகுதிகளில்தான் தொழிலை நிறுவுவர்" என்பது இங்கிலாந்து வர்த்தகக் கழகத்தின் (Board of Trade) கருத்தாகும். ஆனால், தனியொருவருக்குப் பொருளாதார ரீதியில் நன்மை பயப்பது, ஒருநாட்டின் பொருளாதாரம் முழுமைக்கும் நன்மை தருமெனக் கூற இயலாது. எனவே, இந்தியா போன்ற தொழில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் அறிவியல் ரீதியில் தொழில் நடவடிக்கைகளைப் பங்கிட மக்கள் நலம் பேணும் அரசின் தீர்மானமே சாலச் சிறந்ததாகும். இந்தியா போன்ற நாடுகளில் அரசு தொழில் நிறுவனங்களைத் தான் தோன்றித்தனமாக நிறுவுவதற்குத் தலையிட்டால் அது பெரிதும் அபாயகரமாய் இருக்குமென்று 1946-ல் மத்திய அரசின் பொருளாதார ஆலோசகர் (Economic Advisor) திட்டவட்டமாகக் குறிப்பிட்டிருப்பது விந்தையாக உள்ளது.[1] தொழில் நகரங்களின் மிதமிஞ்சிய வளர்ச்சியைக் கட்டுப்படுத்த மட்டும் அரசின் நடவடிக்கைகள் தேவை என்றும் தனியார் துறையே சிறப்பாகத் தொழில்களைப் பங்கீடு செய்யமுடியும் என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார்.

[1] S. C. குச்சால், 'இந்தியத் தொழில் பொருளாதாரம்' ப. 216.

ஆனல், தனியார் துறையின் வசதிகள் குறைவாய் இருப்பதாலும், லாப நோக்குடனேயே அவை தொழில்களை நிறுவுவதாலும், பரந்த நிலப்பரப்பைக் கொண்ட இந்தியாவில் ஒருதலைப்பட்ட (Lopsided) தொழில் வளர்ச்சி ஏற்படுகிறது. எனவே, இத்தகைய சூழ்நிலையின் அடிப்படையில் தொழில் நிறுவுவதில் அரசின் கட்டுப்பாடு பெரிதும் இன்றியமையாததாகத் தோன்றுகிறது.

நடவடிக்கைகள்

தொழில்கள் தாறுமாறாகத் தோன்றி ஒருதலைப்பட்ட வளர்ச்சி ஏற்படுவதைத் தடுக்க இருவகைகளில் கட்டுப்பாடுகளை மேற்கொள்ளலாம். (1) தொழில்கள் வளர்ச்சியடையாத சில பகுதிகளில் தொழில்களை ஊக்குவித்தல் நேர்முறை நடவடிக்கை (Positive Approach)களாகும். (2) மற்றப் பகுதிகளில் தொழில்கள் தோன்றுவதைத் தடுத்து நிறுத்துதல் எதிர்முறை நடவடிக்கை (Negative Approach)களாகும். எதிர்முறை நடவடிக்கைகளை விட நேர்முறை நடவடிக்கைகள் திருப்திகரமானதாகவும் பலனுள்ளதாகவும் உள்ளன. அடக்கு முறைகளால் குறிக்கோளைச் சாதிக்கத் திட்டமிடுவது பலனுள்ளதாக இருக்காது என்பது அனுபவத்தால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மையாகும்.

நேர்முக நடவடிக்கைகள் (Positive Measures)

முதலாவதாக, சில பகுதிகளைத் தொழில்கள் தோன்றத் தகுதியுள்ளவைகளாய் உருவாக்கப் போக்குவரத்து, நிலச் சீரமைப்பு, நீர், மின்சக்தி போன்ற பல பொதுநலனை மேம்படுத்தும் வசதிகளை, அதிகரிக்கவேண்டும். இத்தகைய நடவடிக்கைகளோடு கூடவே பகுதிகளைப் பற்றிய போதிய விவரங்களையும் தொழில் துணிவோர் அறியும் வகையில் விளம்பரப்படுத்த வேண்டும்.

இரண்டாவதாக, சில பகுதிகளின் வளர்ச்சியை ஊக்குவிக்க அரசு, பொழுதுபோக்கு, கல்வி, சுகாதாரம் போன்ற சமூக பொருளாதார வசதிகளை அதிகரிக்க வேண்டியது அவசியமாகும். இத்தகைய வசதிகள் இல்லாத பகுதிகளில் தொழில் பரவுவதில் சுணக்கம் ஏற்படும். மேலும், இத்தகைய அமைப்புகளைப் பெற்ற இடங்களில்தான் தொழில் துணிவோரும் தொழில்களைத் தோற்றுவிக்க ஆவல் கொள்ளுவர். மேலும், உள்ளூர்த் தொழில்களின் நன்மைக்காகத் தொழிலாளர் தொழில்நுட்ப பயிற்சி, விற்பனை ஸ்தாபனங்கள் போன்ற துணைப் பொருளாதார வசதிகளையும் ஏற்படுத்துதல் தொழில்கள் வளர்ச்சியடைய ஊக்குவிக்கும்.

மூன்றாவதாக, உதவிக் கொடைகளை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அளிக்கலாம். உதவிக் கொடைகளை அளிக்காமல் ஒரு முக்கிய தொழில் வளர்ச்சியடையாது என்று நிச்சயமாய் ஊர்ஜிதப்படுத்தப்பட்ட பின்பே நேரடி உதவிக் கொடைகளை (Direct Subsidies) வழங்கவேண்டும். பாதகமான காரணிகளின் விளைவுகளால் தொழில்கள் பாதிக்கப்படுவதைத் தடுக்கவோ அல்லது சில பணிகளில் செலவீனங்கள் குறைக்கப் படுவதற்காகவோ மறைமுக உதவிக் கொடைகளை (Indirect Subsidies) அளிக்கலாம்.

நான்காவதாக, தேர்ந்தெடுக்கப்பட்ட சில தொழில் நிறுவனங் களின் வளர்ச்சியை ஊக்குவிக்கச் சலுகையான வட்டி வீதத்தில் கடன் வசதி அளிக்கப்படவேண்டும். அப் பகுதிகளில் வங்கிகளும், நிதி வழங்கும் நிறுவனங்களும் தோன்ற வகைசெய்யவேண்டும். இப் பகுதிகளில் தோன்றும் தொழில் நிறுவனங்களுக்கு அரசு வருமான வரி, மற்ற உள்ளூர் வரிகளில் சலுகை அளிக்கவேண்டும்.

ஐந்தாவதாக, இப் பகுதிகளில் தோன்றும் தொழில்களின் செய்பொருள்களை அரசு வாங்கி இவைகளின் வளர்ச்சிக்கு ஊறு நேராவண்ணம் காத்தருள வேண்டும். இப் பொருள்களுக்கு அங்காடிகளில் தேவை அதிகரிக்க அரசு வகை செய்யவேண்டும். இப் பொருள்களை அரசே தம் துறைகளில் பயன்படுத்த ஏற்பாடுகள் செய்யலாம். இந்திய தேசிய சிறு தொழில் கழகம் (National-Small Industries Corporation) சில சிறு தொழில்களின் பொருள் களுக்கு வெளிநாடுகளின் தேவை உத்திரவைப் பெற்று இவைகளை ஏற்றுமதி செய்ய வகை செய்கிறது.

கடைசியாக, சில தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் தொழில் வளர்ச்சியை மேம்படுத்த, இங்கிலாந்திலுள்ளதைப் போல் இந்தியா விலும் தொழிற் பேட்டைகள் (Industrial Estates) ஏற்படுத்தப் பட்டுள்ளன. இப் பேட்டைகள் பிராந்தியங்களின் தொழில் வளர்ச்சிக்கான ஆக்க வளங்களைக் கொண்ட பரந்த பகுதிகளைப் பெற்று ஆலைக்கு வேண்டிய நிலம், கட்டடங்கள், மற்றப் பணிகளைச் சலுகையான வீதங்களில் எதிர்காலத் தொழில்களுக்குக் கிடைக்க வகை செய்கின்றன. எனவே இவைகள் தொழில் துணிவோரின் இரு தொல்லைகளைப் போக்க உதவுகின்றன. தொழில் நிறுவத் தேவையான ஆரம்ப விசாரணை, மற்றும் ஆலைநிலம், கட்டடங் களில் ஏராளமான மூலதனத்தை முதலீடு செய்தல் ஆகிய இன்னல் களிலிருந்து தொழிலதிபர்கள் விடுபட முடிகிறது. நாட்டின் பரந்த நிலப்பகுதியில் தொழில் நடவடிக்கையைப் பரவலாக்க இப் பேட்டைகள் பெருந்துணை புரிகின்றன.

எதிர்முறை நடவடிக்கைகள் (Negative Measures)

ஓரிடத்தில் தொழில் வளருவதைத் தடுத்து நிறுத்துவது பலனளிக்காத, நடைமுறைக்கு ஒவ்வாத நடவடிக்கையாகும். ஓரிடத்தில் வளர்ச்சியைத் தூண்டுவது மற்றோரிடத்தில் வளர்ச்சியைக் குறைக்கும். எனவே, அத்தகைய தீவிர நடவடிக்கைகளை அரசு கையாளுவது வரவேற்கத்தக்கதல்ல. எனினும் சில பகுதிகளில் தொழில்கள் மிதமிஞ்சிக் குவிவதைத் தடுத்து நிறுத்த அரசு அதிக உள்ளூர் வீதங்கள் அல்லது வரிகள் போன்ற சில பொதுத் தடுப்பு முறைகளை (deterrents)க் கையாளலாம். வளர்ச்சியடைந்த தொழில்களின் மேல் தனிவரியை (levy) விதித்து அத் தொகையை, தேர்ந்தெடுக்கப்பட்ட பிராந்தியங்களின் சில புதுத் தொழில்களின் நன்மைக்காகப் பயன்படுத்தலாம். ஓரிடத்தில் மேலும் தொழில்மயம் அதிகரித்தால் அது நாட்டின் பொது நலத்தைப் பாதிக்கும் என்று திட்டவட்டமாகத் தெரிந்தால் அத்தகைய இக்கட்டான நிலையில் அரசு முழு தடுப்பு முறையைப் பயன்படுத்தி அப் பகுதியில் தொழில் வளர்ச்சி அதிகரிப்பதைக் கட்டுப்படுத்தலாம். தொழில் உரிம (Industrial Licensing) முறையினல் பல்வேறு பிராந்தியங்களில் தொழில் நடவடிக்கைகளைச் சமச்சீராகப் பங்கிட முடியும். இந்தியாவைத் தொழில் நடவடிக்கையின் அடிப்படையில் சுதந்திர மண்டலங்கள் (Free Zones), தடுக்கப்பட்ட மண்டலங்கள் (Probilited Zones) நடுநிலை மண்டலங்கள் (Neutral Zones) என மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். இதன் அடிப்படையில் ஒவ்வொரு மண்டலத்திலும் கட்டுப்பாட்டின் அளவும் வேறுபடும் தேசிய சமூகப் பொருளாதாரப் பரந்த குறிக்கோளுக்கு முரண்பாடாக இருந்தாலொழிய தொழிலை நிறுவுவதில் தனியார் விருப்பத்தை அரசு கட்டுப்படுத்தலாகாது. எனவே, தொழில் கட்டுப்பாடு முழுமையானதாகவும் திறமையானதாகவும் இருப்பதோடு நெகிழ்ச்சியுடையதாகவும் இருக்க வேண்டும்.

பல்வேறு பிராந்தியங்களிடையே தோன்றும் வளர்ச்சி மட்டங்களில் ஏற்றத்தாழ்வு ஏற்படுவதைப் படிப்படியாகக் குறைக்க வேண்டும் என்று 1956-ன் தொழிற் கொள்கைத் தீர்மானம் (Industrial Policy Resolution) வலியுறுத்தியது. "ஒவ்வொரு பிராந்தியத்தின் தொழில், வேளாண்மைப் பொருளாதார வளர்ச்சியைச் சமச் சீரானதாகவும், ஒருங்கிணைந்ததாகவும் அமைத்தால் தான், நாடு முழுவதிலுமுள்ள மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியும்.'' தொழில் நடவடிக்கையைப் பரவலாக்கத் துணைபுரியும் தொழிற் பேட்டை (Industrial Estates)களை நிறுவ வேண்டுமென்றும் இத் தீர்மானம் பெரிதும் வலியுறுத்தியது. தொழில் உரிமங்களை வழங்கும் போது தொழில் பரவலாக்கப்

படுகின்றதா என்பதை நிச்சயமாக அறிந்த பின்பே வழங்க வேண்டும். பிலாய், ரூர்கேலா, போபாலிலுள்ள கனமின் ஆலை, போன்ற முக்கியமான எஃகு ஆலைகள் தொழில் ரீதியில் பிற்பட்ட பகுதிகளிலேயே தோன்றியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். பாண்டே ஆய்வுக் குழுவின் கருத்துப்படி பொதுத்துறை நிறுவனங்களின் வளர்ச்சியினால் பிராந்திய ஏற்றத்தாழ்வுகள் தோன்றுகின்றன. மேலும் மாநிலங்களின் பிற்பட்ட நிலையின் தரவரிசைப் படி (Ranking) அவைகளைக் கீழ்க் கண்டவாறு அக் குழு வரிசைப் படுத்தியுள்ளது.

## கூட்டுக் குறிப்பெண்படி மாநிலங்களின் தர வரிசை
(Ranking of States in Terms of the Composite Index)

பிற்பட்ட நிலையின் தர வரிசை
(Backwardness Ranking)

| தரவரிசை | மாநிலத்தின் பெயர் | பிற்பட்டநிலைக் குறிப்பெண் (கூட்டு) (Composite) |
|---|---|---|
| 1. | நாகாலாந்து | 28 |
| 2. | ஜம்மு, காஷ்மீர் | 59 |
| 3. | ஒரிஸ்ஸா | 72 |
| 4. | உத்திரப்பிரதேசம் | 76 |
| 5. | அஸ்ஸாம் | 78 |
| 6. | மத்தியப் பிரதேசம் | 80 |
| 7. | ராஜஸ்தான் | 81 |
| 8. | பீஹார் | 85 |
| 9. | ஆந்திரப் பிரதேசம் | 87 |
| 10. | கேரளா | 111 |
| 11. | மைசூர் | 118 |
| 12. | ஹரியானா | 120 |
| 13. | பஞ்சாப் | 137 |
| 14. | மஹாராஷ்டிரா | 146 |
| 15. | குஜராத் | 147 |
| 16. | தமிழ் நாடு | 154 |
| 17. | மேற்கு வங்காளம் | 160 |
| | அகில இந்தியக் குறிப்பெண் | 100 |

இந்திய மாநிலங்களில் நாகாலந்து, ஜம்மு காஷ்மீர் போன்ற மாநிலங்கள் மிகவும் பிற்பட்ட நிலையிலும் மேற்கு வங்காளம் தமிழ்நாடு போன்ற மாநிலங்கள் சற்று மேம்பட்ட நிலையிலும் உள்ளன. நான்காம் திட்டக் காலத்தில் தொழிலில் முதலீடு செய்யப்படும் ரூ. 3,150 கோடியில் சுமார் 87 சதவீதம் தொழில் வளர்ச்சியில் பிற்பட்ட நிலையிலிருக்கும் மாநிலங்களில் செலவிடப் படும்.

# 56. இந்தியாவில் பிராந்திய வளர்ச்சியின் வாய்ப்பு

## (Scope for Regional Development in India)

இந்தியாவில் பிராந்திய வளர்ச்சியை மேற்கொள்ளச் சிறந்த வாய்ப்புகள் இருந்து வருகின்றன. முதலாவதாக, பூகோள ரீதியில் இந்தியா பல்வேறு இயற்கை வளங்களையும் பரந்த நிலப்பரப்பையும் பெற்றுள்ளது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் சீதோஷ்ண, நில வேறுபாடுகள் வெளிப்படையாகக் காணப்படுவதால் பொருளாதார வளர்ச்சியும் அதற்கேற்றாற் போல் வேறுபடுகிறது. இரண்டாவதாக, பொருளாதார ரீதியில் உற்பத்திக் காரணிகள் நாடு முழுவதும் சமமாகப் பங்கிடப் படவில்லை. மூன்றாவதாக, சில மாநிலங்களில் மற்ற மாநிலங் களைக் காட்டிலும் மூலதனம், தொழில் வளங்கள், மற்றைய உற்பத்திச் சாதனங்கள் அதிகமான அளவில் கிடைக்கின்றன. எனவே, பிராந்திய மயத்தின் அடிப்படையில் இப் பகுதிகளில் சமச்சீரான வேளாண்மை, தொழில் வளர்ச்சி ஏற்படச் சிறந்த வாய்ப்புக் கிடைக்கிறது. நான்காவதாக, சமூக நலனைப் பொறுத்த மட்டிலும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பெருத்த வேறுபாடுகள் காணப்படுகிறது. ஏனெனில் கல்வி, சுகாதாரம் போன்ற சமூக நலனை மேம்படுத்தும் அமைப்புகள் (Socio-infrastructure) நாடு முழுவதிலும் சம அளவில் பங்கிடப்படவில்லை. இதற்குக் காரணம் நாட்டில் சமச்சீரான பொருளாதார வளர்ச்சி தோன்றாமையாகும். எனவே, பிராந்திய வளர்ச்சிக் கொள்கை ஒன்றுதான் இத்தகைய பல்வேறு வகையான ஏற்றத்தாழ்வுகளை இயற்கையாகவே சரி செய்யச் சிறந்த வழிவகுக்கும்.[1]

பிராந்தியத் திட்டம் (Regional Planning)

இங்கிலாந்து, பிரான்சு, கிழக்கு ஐரோப்பிய நாடுகள், வெனிஜுலா, பிரேசில் ஆகிய நாடுகளில் பிராந்திய வளர்ச்சியை மேற்கொள்ளத் தேசியக் கொள்கைகள் வகுக்கப்படுகின்றன.

[1] டாக்டர் R. பாலகிருஷ்ணா 'இந்தியப் பிராந்திய வளர்ச்சி' ப. 82

இந்தியாவிலும் பிராந்திய வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு தேசியத் திட்டம் திட்டப்படுகிறது. பூகோள ரீதியில் ஏற்படும் பொருளாதார வளர்ச்சி மற்றும் அதன் சமூக விளைவுகள் ஆகிய வைகளை அடிப்படையாகக் கொண்டு தேசியப் பொருளாதாரத் திட்டம் வரையப்படுகிறது. பிராந்தியத் திட்டம் என்பது நாட்டின் நிலப்பரப்பு, பூகோள அமைப்பு, பிராந்தியக் கணக்கெடுப்பு, திட்ட வளர்ச்சி (Project Development), திட்டமிடுதல், (Programming) போன்ற விவரங்களை அடிப்படையாகக் கொண்டு வரையப்படு வதாகும். பல்வேறு நிலப்பகுதிகளில் ஒருங்கிணைந்த செயல் திட்டங்களை ஸ்தாபனங்களின் (institutions) உதவியுடன் அமுலாக்கப் பிராந்தியத் திட்டம் தீட்டப்படுகிறது. பொருளாதார வளர்ச்சி, பொருளாதார நடவடிக்கைகளின் தன்மை, முதல்நிலை, இரண்டாம் நிலை, மூன்றும் நிலை (Tertiary)த் தொழில்களின் மக்கட் தொகையின் பாகுபாடு (distribution of population), கிராம நகர மக்கள் பாகுபாடு ஆகியவைகள் நாட்டின் பிராந்தியங் களிடையே வேறுபடும். பிராந்தியத் திட்டத்தின் குறிக்கோள் ஒவ்வொரு பிராந்தியத்திலும் சாதிக்கவல்ல உத்தம அளவு வளர்ச்சி யையும், எந்தப் பிராந்தியத்தில் எந்த நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்றும், பல்வேறு பிராந்தியங்களில் நடைமுறையிலுள்ள நடவடிக்கைகளை எவ்வாறு ஒருங்கிணைப்பது என்பதையும் தெளி வாக உணர்த்துவதாகும். ஒரு சீரான பிராந்தியப் பொருளாதார வளர்ச்சித் திட்டம் (Programme) நிர்வாகத் திறன், உற்பத்தி, வளங்களின் அளவு, தன்மை, வருவாய், முதலீடு, சட்டமுறை, அரசியல் அமைப்பு போன்ற அம்சங்களைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

## இந்தியாவில் பிராந்தியத் திட்டம்

பொருளாதாரத் திட்டங்களின் ஆரம்பக் கட்டத்தில் இந்தியா விலும் பிராந்திய வளர்ச்சிப் பிரச்சினைகள் எழுந்தன. முதலில், அரசியல் ரீதியில் இந்திய நிலப்பரப்பு பிரிக்கப்பட்டுள்ளமை பிராந்திய வளர்ச்சியை மேற்கொள்ளத் தடையாக உள்ளது. பொருளாதார நிலப் பகுதிகளாக இந்தியா பிரிக்கப்பட்டிருந்தால் பிராந்தியத் திட்டங்களை நாட்டின் பல்வேறு பகுதிகளில் சுலபமாக அமுலாக்க முடியும். அரசியல் கருத்து வேறுபாடுகளைக் கொண்ட மாநில அரசுகளின் நிலப்பகுதிகளும் பொருளாதாரப் பிராந்தியங் களுள் அடங்கியுள்ளதால் பிராந்திய வளர்ச்சித் திட்டங்களை மாநிலங்களின் மனக்கசப்பு இன்றி அமுலாக்க இயலவில்லை. இந்திய வளர்ச்சித் திட்டக் கொள்கைகளில் மாநில அரசுகளுக்கு முக்கிய பங்கு அளிக்கப்படுகிறது. ஆனால், வளர்ச்சித் திட்டங் களுக்கு நிதிஉதவி அளிப்பதில் மத்திய அரசு முக்கிய பங்கினைப்

பெற்றுள்ளது. மாநில அரசுகளின் நிதிநிலை, மத்திய அரசின் நிதி நிலையைவிடச் சக்தியற்ற நிலையில் இருப்பதால் மாநில அரசுகள் சுயாட்சியையும் நெகிழ்ச்சியுள்ள நிதிவளங்களையும் விரும்புகின்றன. இப் பிரச்சினையைச் சுமுகமாகத் தீர்த்தால்தான் சமச்சீரான இந்தியப் பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியும்.

இந்தியாவில் உள்ள அநேக மாநிலங்களில் உற்பத்தி நடவடிக்கை வளர்ச்சி குறைந்த நிலையில் காணப்படுகிறது. பிராந்தியத் திட்டத்தை வரையும் முன் நாட்டில் உள்ள பல்வேறு பொருளாதாரப் பகுதிகளில் இருக்கும் ஆக்க வளங்களைக் கணக்கிட வேண்டும். சமூக, பொருளாதார காரணிகள், பிராந்தியங் களிடையே சமரசமும், சுமுக உறவும், இவைகளின் அடிப்படையில் தேசிய வளர்ச்சியை அதிகரிக்கவல்ல பிராந்தியத் திட்டம் உருவாக வேண்டும். மனித சக்தி (Man Power), மூலப்பொருள்கள், எந்திரங்கள் என்னும் இவைகள் முழு அளவில் பயன்படுத்தப் பட்டு ஒரு பிராந்தியத்தில் உத்தம அளவு தலா வருவாய் ஏற்படவேண்டும். இதன் விளைவாக நாட்டின் மொத்தத் தேசிய உற்பத்தி அதிகரிக்கும். பிராந்தியத் திட்டத்தின் மூலமாக உற்பத்திச் செலவு குறைந்து தேய்மானக் கட்டணங்களும் (Depreciation Charges) குறையும். ஒரு பிராந்தியத்தின் குறிப்பிடத் தக்க வளர்ச்சியினால் பல்வேறு பொருளாதார காரணிகளாகிய முதலீடு, உற்பத்தி, நுகர்வு இவைகள் ஒன்றை ஒன்று நிறைவு செய்பவைகளாய் (Complementarity) அமையும். இத்தகைய திட்டமிட்ட வளர்ச்சியினால் பிராந்தியப் பொருளாதார வளர்ச்சி பன்மடங்கு பெருகி தேசிய பொரு ளாதாரத்தில் முதலாக்கத்தின் (Capital formation) வளர்ச்சி வீதம் அதிகரிக்கும். கீழ்க்கண்ட அம்சங்களின் வேறுபாட்டின் அடிப் படையில் பிராந்தியங்களின் பிற்பட்ட பகுதிகளையும் அறிந்து கொள்ள முடியும்.

தொழில் மக்கட் தொகையின் பங்கீடு (Distribution of Industrial-Population)

பிராந்தியத் திட்டத்தில் வளர்ச்சியடையாப் பகுதிகளில் உள்ள ஆக்க வளங்களைப் பயன்படுத்துவதற்கு வகை செய்ய வேண்டும். தொழிலில் ஈடுபட்டுள்ள மொத்த மக்கட் தொகையின் எண்ணிக்கை இந்தியாவில் உள்ள பல்வேறு மாநிலங்களில் பெரிதும் வேறுபடுகின்றது. 1963-ல் மேற்கு வங்காளத்தில் மொத்தத் தொழில் மக்கட் தொகையில் (Industrial Population) 22·35 சதவீதம் இருந்தது. அதற்கு அடுத்தபடியாக மகாராஷ்டிராவில் 20·3 சதவீதத்தினர் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அதற்கு அடுத்தபடியாக குஜரத் மாநிலத்தில் 9·2 சதவீதத்தினரும்

உத்திரப் பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் முறையே 7·6 சதவீதமும், தொழில் துறையில் ஈடுபட்டிருந்தனர். ஆனால், ஜம்மு-காஷ்மீர், ஹிமாசலப் பிரதேசம், ராஜஸ்தான், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, போன்ற மாநிலங்களில் தொழில்வளர்ச்சி மிகக் குறைந்து இரண்டு சதவீதத்திற்கும் குறைந்த தொழிலாளர்கள் தொழில் துறையில் பணியாற்றி வந்தனர். மேற்கு வங்காளம், மஹாராஷ்டிரா, குஜரத் ஆகிய மாநிலங்களில் பெரிய தொழில் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர்களின் விகிதம் மிக அதிகமாக இருந்தது. தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் தொழில் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர்களின் விகிதம் நியாயமான முறையில் உள்ளது. மற்ற ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், டெல்லி, ஆகிய பகுதிகளில் இரண்டு சதவிகிதத்திற்கும் குறைந்த தொழிலாளர்களே பெரும் தொழில் நிறுவனங்களில் பணி புரிகின்றனர். மேற்கூறிய விகிதத்திலிருந்து பெரும் தொழில் களில் பணிபுரியும் தொழிலாளர்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் எந்த அளவுக்கு நாட்டின் பல்வேறு பகுதிகளில் தொழில் மயம் ஏற்பட்டுள்ளது என்பதை யறியலாம். மேற் குறிப்பிட்ட கணக்கீட்டில் சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவைகளில் ஈடுபட்டுள்ளவர்களின் விகிதத்தையும் சேர்த்துக் கொண்டால் நாட்டின் பல்வேறு பகுதிகளில் காணப்படும் தொழில் ஏற்றத் தாழ்வை நன்குணரலாம்.

### வேளாண்மைத் தொழிலாளர்களின் வேறுபாடு (Differences in the Agricultural Population)

நிலச்சாகுபடி செய்பவர்களின் எண்ணிக்கை பல்வேறு மாநிலங்களில் வேறுபடுகிறது. பொதுவாக பஞ்சாப், ஹரியானு, மேற்கு வங்காளம், ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு போன்ற மாநிலங்களில் வேளாண்மைத் தொழில் செய்பவர்களின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. இதற்கு இரு காரணங்கள் உண்டு. முதலாவதாக, நிலவளம், நீர்வளம் போன்ற இயற்கைத் தன்மைகளினுல் பஞ்சாப், மேற்கு வங்காளம் போன்ற மாநிலங் களில் வேளாண்மை உற்பத்தி அதிகமாக உள்ளது. இரண்டா வதாக, சணல் போன்ற பொருள்களைச் சுத்தப்படுத்தும் தொழில்கள் இம் மாநிலங்களில் இருப்பதால் சாகுபடி செய்பவர்களின் விகிதம் அதிகமாக உள்ளது. பம்பாய், ராஜஸ்தான் போன்ற மாநிலங்களில் வேளாண்மை உற்பத்தி குறைவாக உள்ளது. எனவே, வேளாண்மை வளர்ச்சியில் பல்வேறு மாநிலங்களில் ஏற்றத் தாழ்வு காணப்படுவதை அறியலாம். பிராந்தியத்தின் திட்டத்தின் அடிப்படையில் மனித சக்தியைச் சம அளவில்

பல்வேறு தொழில்களில் பங்கீடு செய்ய நல்ல வாய்ப்புக் கிடைக்கிறது.

R. L. கோகன் அவர்கள் குறிப்பிடுவது போல் "தொழிலாளர்கள் பணிபுரியும் எல்லா நிலத்திலிருந்தும் கிடைக்கும் இறுதிநிலை தொழிலாளர் உற்பத்தி (Marginal Productivity of Labour) சமமாக இருந்தால்தான் தொழில் சக்தியின் இலாபகரமான பங்கீடு (Distribution of Labour force) அமையும்.[1]

## ஏற்றத்தாழ்வும் வளர்ச்சியின்மையும்
## (In equalities and under development)

தொழில், வேளாண்மைத் துறைகளில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களின் விகிதத்தின் அடிப்படையில் சில நுகர்வுப் பொருள்களுக்கு சில மாநிலங்களில் தேவை இருப்பதால், அவைகள் மற்ற மாநிலங்களை நம்பி இருக்கும் நிலை உள்ளது. இவ்வாறு ஒன்றையொன்று தேவையின் அடிப்படையில் சார்ந்திருக்கும் நிலை சாதாரணமாகத் தீங்கு விளைக்காது. ஆனால், பிராந்தியங்கள் இயற்கை வளங்களின் அடிப்படையில் பிராந்தியச் சிறப்புத் தேர்ச்சிப் பெற்று (Regional Specialisation) ஒன்றையொன்று சார்ந்திருக்கலாம். பிராந்தியச் சிறப்புத் தேர்ச்சிப் பெற்ற மாநிலங்களுக்கிடையே வாணிபம் பெருகப் பிராந்தியத் திட்டம் வகைசெய்கிறது. பல்வேறு பகுதிகளின் பொருளாதார வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும்போது பிராந்தியங்களிடையே தடையில்லா வாணிபம் நடைபெறுவது அவைகளின் வளர்ச்சியைப் பாதிக்கும். ஏனெனில் இயற்கையான சூழ்நிலையில் தொழில்மயம் பெற்ற பிராந்தியங்கள் வர்த்தகத்தின் மூலம் நன்மை பெறுகின்றன. தொழில் வளர்ச்சி குறைந்த பிராந்தியங்கள் நுகர்வுப் பொருள்களை இறக்குமதி செய்வதால், பாதக மாற்று வீதத்தைப் (Ferms of trade) பெற்று இன்னலுறுகின்றன.

இருக்கும் வளங்களைப் பயன்படுத்தத் தகுந்த சூழ்நிலையில்லாத காரணத்தால் மட்டும் ஒரு நாட்டின் எந்தப் பிராந்தியமும் வளர்ச்சி குறைந்த நிலையிலேயே இருப்பதை அனுமதிக்கலாகாது. இந்தியாவில் சில மாநிலங்கள் இன்றியமையாத நுகர்வுப் பொருள்களுக்காகத் தகுந்த பொருளாதார காரணமின்றி மற்ற மாநிலங்களை நம்பியிருக்கும் நிலை உள்ளது. உதாரணமாக, தமிழ் நாட்டில் சர்க்கரை உற்பத்திச் செய்ய எல்லாவகை இயற்கை வளங்கள் இருந்தும் வெகு நாட்களாகவே ஐம்பது சதவீதத்திற்கு மேற்பட்ட

1 R. L. கோகன் (R. L. Cohen) வேளாண்மைப் பொருளாதாரம், ப. 27.

சர்க்கரைத் தேவை வெளி மாநிலங்களின் சர்க்கரையால்தான் பூர்த்தி செய்யப்பட்டது. அதேபோன்று தொழில் வளர்ச்சி பெற்ற பகுதிகள் தகுந்த இயற்கை வசதிகள் இருந்தும், தங்கள் உணவுத் தேவையைப் பூர்த்திசெய்ய மற்ற மாநிலங்களையே நம்பியிருப்பது சாலச் சிறந்ததாகாது. இத்தகைய வளர்ச்சி முறை நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் பல கேடுகளை விளைவிக்கும். தொழில் வளர்ச்சிப் பெற்ற மாநிலம் அதன் சக்திக்கு அதிகமாக வளர்ச்சிப் பெற விரும்பினால் மற்ற மாநிலங்களின் தொழில் வளர்ச்சி வாய்ப்பு பாதிக்கப்படுகிறது. இத்தகைய பிராந்திய ஏற்றத்தாழ்வுகளை அரசு தலையிட்டு நீக்கவேண்டும். அரசின் தலையீட்டால் பிராந்தியங்கள் தங்கள் இயற்கை வளங்களின் தன்மைக்கு ஏற்ப வளர்ச்சியடைய வகையேற்படும். ஆனால், இதற்குத் தகுந்த வகையில் இந்தியாவில் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை எனவே, பிராந்தியத் திட்டங்கள் இக் கொள்கைகளைக் கருத்தில் கொண்டு செயலாற்றும் வகையில் தேசியப் பொருளாதாரத் திட்டம் அமையவேண்டும்.

## மக்களின் தலா வருவாயில் வேறுபாடு
### (Variation in the percapita income of the People)

பிராந்திய வளர்ச்சிப் பிரச்சினையை மேற்கொண்டு ஆராயத் துணையாக இருப்பது இந்திய மக்களிடையே காணப்படும் தலாவருவாயில் வேறுபாடாகும். இந்திய மாநிலங்களிடையே தலாவருவாயில் மிகுந்த ஏற்றத் தாழ்வுகள் காணப்படுகின்றன. இதன் அடிப்படைக் காரணம் இதுகாறும் திட்டத்தில் பிராந்திய வளர்ச்சிக் கொள்கைகள் ஒருங்கிணைக்கப்படாததேயாகும். தகுந்த பிராந்திய வளர்ச்சிக் கொள்கைகள் அமுலாக்கப்பட்டிருந்தால் இவ் வேறுபாடு ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லை. பொருளாதார நடவடிக்கைகளின், தன்மையின் அடிப்படையில் தலா வருவாய் ஏற்றத்தாழ்வுகள் காணப்பட்டால், அதற்குக் காரணம் சில மாநிலங்கள் வளர்ச்சிக் குறைந்த நிலையிலேயே விடப்பட்டிருப்பது தான். தலா வருவாய் ஏற்றத் தாழ்வினால் தேசிய வருவாய் ஏற்றத் தாழ்வினால் தேசீய வருவாய் குறைவதோடு வருவாய் குறைந்த மாநிலங்களில் உள்ள மக்களின் வாழ்க்கைத் தரம் மிகவும் பாதிக்கப்படுகிறது. இந் நிலையை மாற்றித் தலா வருவாய் அதிகரிக்கச் செய்யப் பிற்பட்ட மாநிலங்களில் தொழில் வளர்ச்சி ஏற்படச் சீரான பிராந்திய வளர்ச்சித் திட்டங்களை அரசு மேற்கொள்ள வேண்டும். பொருளாதாரச் சீரமைப்பை நாடு முழுவதும் பரவலாக்கி, வறுமை, ஏற்றத்தாழ்வு போன்ற பொருளாதாரச் சீர்கேடுகளை நீக்கவல்ல ஆயுதமாகப் பிராந்திய

வளர்ச்சித் திட்டங்கள் அமைந்துள்ளன. 1961-ல் மாநிலங்களிடையே காணப்பட்ட தலா வருவாய் வேறுபாடுகளைக் கீழ்க்கண்ட அட்டவணை உணர்த்துகிறது:

## தலா வருவாயின்படி மாநிலங்களின் வரிசை

| மாநிலம் | தலா வருவாய் (ரூபாயில்) (ஆண்டுக்கு) | அகில இந்தியக் குறிப்பெண் |
|---|---|---|
| டெல்லி | 871·61 | 260 5 |
| மகாராஷ்டிரம் | 468·54 | 140 0 |
| மேற்கு வங்காளம் | 464·62 | 138·9 |
| பஞ்சாப் | 451·31 | 134·9 |
| குஜரத் | 393·39 | 117 6 |
| தமிழ் நாடு | 334·09 | 99·9 |
| அஸ்ஸாம் | 333·34 | 99·6 |
| திரிபுரா | 329 86 | 98·6 |
| ஹிமாசலப் பிரதேசம் | 328·35 | 98·1 |
| கேரளா | 314·86 | 94 1 |
| மைசூர் | 304·71 | 91·1 |
| உத்திரப் பிரதேசம் | 297·35 | 88·9 |
| ஜம்மு-காஷ்மீர் | 289·02 | 86·4 |
| ஆந்திரப் பிரதேசம் | 287·01 | 85·8 |
| மத்திய பிரதேசம் | 285·35 | 85·3 |
| ஒரிஸ்ஸா | 276·22 | 82·6 |
| ராஜஸ்தான் | 267·43 | 79·9 |
| பீஹார் | 220 69 | 66·0 |
| அகில இந்தியா சராசரி | 334·54 | 10·00 |

ஆதாரம் NCAER, மாநில வாரியாகத் தேசிய வருவாய்ப் பாகுபாடு, 1960-61 ப. 9.

தேசிய நடைமுறைப் பொருளாதார ஆய்வுச் சபை (National Council of Applied Economic Research)யின் கணக்கீட்டின்படி டெல்லியில் அதிகமான தலா வருவாயும், அதற்கடுத்தபடியாக மஹாராஷ்டிரா, மேற்கு வங்காளம், பஞ்சாப், குஜரத் இவைகளில் அதிக தலா வருவாய் காணப்படுகிறது. பீஹாரில் தலா வருவாய் மிகக் குறைவாக உள்ளது. அதற்கு மேற்படியில் ராஜஸ்தானும், ஒரிஸ்ஸாவும் உள்ளன. தமிழ்நாடு, அஸ்ஸாம், திரிபுரா ஆகிய மாநிலங்களின் தலா வருவாய் அகில இந்திய சராசரி வருவாய்க்கு (ரூ. 334·45) நிகராக உள்ளது. ஒவ்வொரு மாநிலத்திலும் துறை ரீதியாக வருமானப் பாகுபாடு (Sectoral distribution of income) இருப்பதால் தலா வருவாயில் ஏற்றத்தாழ்வு காணப்படுகிறது. டெல்லியில் வேளாண்மை மற்ற நடவடிக்கைகளின் பங்கு மொத்தத்தில் எட்டு சதவிதம் ஆகும். ஆனால், பணித்துறையின் பங்கு (Service Sector) 49% சதவிகிதம் இருப்பதால் அங்கு தலா வருவாய் அதிகமாக உள்ளது. சில மாநிலங்களில் வேளாண்மைத் துறையின் பங்கு குறைந்திருந்து, செய்பொருள் (Manufacture) உற்பத்தித் துறையின் பங்கு அதிகமாக இருப்பதால் தலா வருவாய் அதிகமாக உள்ளது. இதற்கு உதாரணமாக மஹாராஷ்டிரா, மேற்குவங்காளம் போன்ற மாநிலங்களைக் கூறலாம். பஞ்சாப் மாநிலத்தில் வேளாண்மையின் பங்கு (53·3%) அதிகமாக இருப்பதால் தலா வருவாய் அதிகமாக உள்ளது. இராஜஸ்தான், ஒரிஸ்ஸா, போன்ற மாநிலங்கள் வேளாண்மையையே பெரிதும் சார்ந்திருப்பதால் குறைந்த தலா வருவாயைப் பெற்றுள்ளன. பொருளாதாரத் திட்டங்கள் செல்வந்த, ஏழை மாநிலங்களுக்கிடையே உள்ள ஏற்றத்தாழ்வை நீக்க இயலவில்லை. செல்வந்த மாநிலங்கள் மேலும், செழிப்புற்று வளர்ந்து வருகின்றன. பிராந்திய வருமான ஏற்றத் தாழ்வுகளை நீக்கப் பிராந்திய வளர்ச்சித் திட்டம் இன்றியமையாததாக விளங்குகிறது. தடைபட்ட பொருளாதார வளர்ச்சியின் விளைவாகக் குறைந்த வருவாயைப் பெற்றுள்ள பகுதிகளில் இயற்கை வளங்களின் தன்மைகளின் அடிப்படையில் பிராந்திய வளர்ச்சிக் கொள்கையை அமுலாக்கினால் சமச்சீரான வருவாய் எல்லா பிராந்தியங்களிலும் அமைவதற்கு நல்ல வாய்ப்புக் கிடைக்கும்.

## இயற்கை வளங்களின் பங்கீடு
### (Distribution of Natural resources)

இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் காணப்படும் ஆலைத் தொழிலாளர்கள், வேளாண்மைத் தொழிலாளர்கள் ஆகியவர்களின் பாகுபாட்டையும் தன்மையையும் அறிந்தபின் தொழில்

வளங்கள் (Industrial Resources), வேளாண்மை, மூலப் பொருள்கள் ஆகியவைகளின் பங்கீட்டை ஆராயவேண்டியது அவசியமாகும். அந்த ஆய்வைக் கொண்டு மாநிலங்களின் வளங்களுக்கு ஏற்ப அவைகளின் பொருளாதார நடவடிக்கை உருவாகியுள்ளதா என்பதை ஒப்பிட்டுப் பார்க்கமுடியும். பேராசிரியர் W. A. லூயிஸ் குறிப்பிடுவது போல் ஒரு நாட்டின் வளங்களின் அளவை அடிப்படையாகக் கொண்டுதான் அந்த நாட்டு வளர்ச்சியின் அளவும் வகையும் அமையும். வளங்கள்தான் வளர்ச்சிக்கு எல்லை போடுபவைகளாய் உள்ளன.[1] ஒரு நாட்டில் தாதுச் செல்வம், வேளாண்மை மூலப் பொருள்கள், ஆக்க சக்தி வளங்கள் (Power resources) ஆகியவைகளைப் பற்றிய ஆய்வு பிராந்திய வளர்ச்சித் திட்டத்திற்கு உறுதுணையாக விளங்குகிறது. இந்தியாவில் ஏராளமான தாதுவளம் உள்ளது. இந்தியாவில் நிலக்கரி (Coal) அதிகமாக இருந்தாலும் அது ஒரு குறுகிய அளவுள்ள மண்டலத்தில் (Zone) தான் கிடைக்கிறது. மேற்கு வங்காளம், பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் உள்ள நிலக்கரிச் சுரங்கங்களில் ஏராளமான நிலக்கரி கிடைக்கிறது. நாட்டில் உள்ள மற்றப் பகுதிகள் இம் மாநிலங்களிலுள்ள நிலக்கரியைத்தான் சார்ந்திருக்க வேண்டியுள்ளது. தரமான இரும்புத் தாது பீஹார், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம் ஆகிய இடங்களில் கிடைக்கின்றன. தரம் குறைந்த இரும்பு தமிழ்நாடு, மஹாராஷ்டிரா, ஆந்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் கிடைக்கிறது. நான்காம் திட்டக் காலத்தில் இரும்பு எஃகு தொழில் விரிவாக்கப்பட இரும்புத் தாது கிடைக்கும் இடங்களை உடனடியாக கண்டறிய வேண்டும். மத்தியப் பிரதேசம், மஹாராஷ்டிரம், குஜரத், ஒரிஸ்ஸா, மைசூர், ஆந்திரப்பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் மங்கனீசு கிடைக்கின்றது. இந்தியாவில் தங்கம் மைசூர் மாநிலத்தில் கோலார் தங்கச் சுரங்கத்திலும், ஹட்டி தங்கச் சுரங்கத்திலும் கிடைக்கிறது. பீஹார், ராஜஸ்தான், ஆந்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் மைகா (Mica) அதிகமாக கிடைக்கிறது. இந்தியாவில் தயாரிக்கப்பட்ட மைகா அமெரிக்கா, இங்கிலாந்து பிரான்சு, மேற்கு ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றது. மேற்கண்ட இயற்கை வளங்களின் பங்கீட்டில் இரு முக்கிய தன்மைகள் காணப்படுகின்றன முதலாவதாக இந்தியாவில் தாதுப் பொருள்கள் அதிகமாகக் கிடைத்தபோதிலும், தெற்கிலும் வடக்கிலும் சமமான அளவில் பங்கிடப்படவில்லை. வட இந்தியாவில் அதிகமான தாதுப் பொருள்களும், தென்னிந்தியாவில் குறைந்த அளவிலும் பங்கிடப்

1 W A, லூயிஸ் (W. A Lewis) 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப,52

பட்டுள்ளன. இரண்டாவதாக வட இந்தியாவிலும் கூட சில மாநிலங்களில் மட்டும்தான் அநேக முக்கிய தாதுப் பொருள்கள் குவிந்துள்ளன. தென்னிந்தியாவில் சில தாதுப் பொருள்கள் அதிகமாகக் கிடைத்தாலும், அத் தாதுப் பொருள்களை மற்றக் கூட்டுத் தாதுப் பொருள்களின் தட்டுப்பாட்டால் உள்ளூர்த் தொழில்களில் (Local Industries) முழு அளவில் பயன்படுத்தச் முடிவதில்லை. மேலும், வட இந்தியாவில் சில மாநிலங்களில் தாதுப் பொருள்களை உள்ளூர் தொழில்களில் பயன்படுத்தச் சரியான வசதியின்மையால் தாதுப் பொருள்கள் அருகாமையில் உள்ள மாநிலங்களுக்குப் பெயர்ச்சி அடைகின்றன. உதாரணமாக, பீஹார், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் அதிகமான தாதுப் பொருள்கள் கிடைப்பினும் அப் பகுதியில் மிகக் குறைந்த தொழில் வளர்ச்சிதான் ஏற்பட்டுள்ளது. தாதுப் பொருள்கள் கிடைக்கும். இடத்திலேயே தொழில் மயம் ஏற்படுவதற்குப் பதிலாக வேறு இடத்திற்குத் தாதுப் பொருள்கள்பெயர்ச்சிஅடைவதைஅனுமதிக்க லாகாது. அதைக் கட்டுப்படுத்தப் பிராந்திய வளர்ச்சித் திட்டம் தகுந்த கருவியாக அமையும். தமிழ்நாட்டில் முக்கியமான தாதுப் பொருள்கள் ஏராளமாக இருந்தும் அப் பகுதியில் உலோகத் தொழில் (Metallic Industry) வளர்ச்சி குறைந்த நிலையில்தான் உள்ளது. நிலக்கரி போன்ற கூட்டு மூலப் பொருள் களின் வளங்கள் இப் பகுதியில் தேவையான அளவு கிடைக் காமையால் தமிழ்நாட்டில் தொழில் வளர்ச்சி குறைந்துள்ளது.

மேற்கண்ட ஆய்விலிருந்து திட்டமிடப்படாத தனியார் தொழில் அமைப்பின் அடிப்படையில் உருவாகும் தொழில் வளர்ச்சி முறை மாநிலங்களின் உண்மையான இயற்கை வளங்களின் அடிப்படையில் தோன்றவில்லை என்பதை உணரலாம். இக் குறைபாட்டை நீக்கப் பிராந்திய வளர்ச்சிக் கொள்கை வகை செய்யும்.

### வேளாண்மை மூலப் பொருள்களின் பங்கீடு

இந்தியப் பெரும் தொழில்கள் பஞ்சு, சணல், சர்க்கரை, எண்ணெய் வித்துகள் போன்ற வேளாண்மை மூலப் பொருள் களைப் பெற்று வளர்ச்சியடைந்து வருகின்றன. இவ் வேளாண்மை மூலப் பொருள்கள் நாட்டில் சமமான அளவு பங்கிடப்படவில்லை. இம் மூலப் பொருள்கள் சீரான முறையில் பங்கிடப்பட்டால்தான் பிராந்தியங்கள் சமச்சீரான வளர்ச்சியைப் பெறமுடியும். மின் இயக்கச் சக்தியும் (Hydro-electric Power) நாடு முழுவதும் சீரான முறையில் பங்கிடப்படவில்லை. இவ்வர்க்க சக்தி சில மாநிலங் களில் அதிகமாகவும் சில மாநிலங்களில் குறைவாகவும் காணப்

படுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக இந்தியாவில் மூலதன வளங்களின் (Capital resources) பற்றாக்குறை அதிகமாக உள்ளது. நாட்டில் இருந்துவரும் பல்வேறு நிதி ஸ்தாபனங்கள் (Financial Institutions) போதுமான அளவு நிதி வசதியை அளிக்க முடிவதில்லை.

மூலதனத்தின் பங்கீடு (Distribution of Capital)

மூலதன வளங்கள் எல்லா மாநிலங்களிலும் சமமாகப் பங்கிடப்படவில்லை. சில மாநிலங்களில் மூலதன வசதியை அளிக்கும் தொழில் நிதி நிறுவனங்களும், வேளாண்மைக் கடன் நிதி அமைப்புகளும் ஏராளமாகத் தோன்றியுள்ளன. தொழில் நிதி நிறுவனங்கள் திறம்படச் சேவை செய்து வரும் மாநிலங்களில் தொழில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. வேளாண்மைக்கடன் வசதி சுலபமாகக் கிடைக்கும் பகுதிகளில் வேளாண்மை சார்ந்த தொழில்கள் (Agro-industries) தோன்றுகின்றன. ஏராளமான மூலதனங்களைப் பெற்றுள்ள மஹாராஷ்டிரம், குஜராத் போன்ற மாநிலங்களில் தொழில் வளர்ச்சி அவைகளின் இயற்கை வளங்களின் அளவுக்குமேல் அதிகரித்துள்ளது. மேலும், தங்கள் இயற்கை வளங்களின் சக்திக்கு மேற்பட்ட மற்றவகைச் சாதனங்களின் உற்பத்தியிலும் அம் மாநிலங்கள் ஈடுபடுகின்றன. அதற்கு மாறாக பீஹார், ஒரிஸ்ஸா போன்ற மூலதன வளங்கள் குறைந்துள்ள சில மாநிலங்களில் தாது வளங்களின் அடிப்படையில் இயற்கையாக அமையவேண்டிய தொழில் வளர்ச்சி ஏற்படவில்லை. எனவே, மூலதன அளிப்பை எல்லா மாநிலங்களிலும் கட்டாயமாக மறுபங்கீடு செய்ய மத்திய அரசு முன்வர வேண்டும் மூலதனம் முதலாளிகளின் உரிமையில் இருந்தாலும் அதைத் தேவைகேற்பப் பற்றாக்குறை மாநிலங்களிலும் பயன்படுத்திக்கொள்ளத் திட்டக்குழு போன்ற மத்திய அமைப்பு வகை செய்யவேண்டும். நாட்டில் பிராந்திய வளர்ச்சியைச் சாதிக்கும் எண்ணத்தோடு அரசு மூலதனத்தைப் பற்றாக்குறை மாநிலங்களுக்குத் தக்க முறையில் வளர்ச்சியடையச் செய்ய ஊக்குவிக்க வேண்டும். மூலதனத்தோடு கூடத் தொழில் துணிவோரின் திறனும் (Entre Prenurial ability) சேர்ந்து பெயர்ச்சியடைவது விரும்பத்தக்கதாகும்.

## மக்கட் தொகையின் பங்கீடு
## (Distribution of Population)

நாட்டில் மக்கட் தொகையின் பங்கீடும் பிராந்தியத் தொழிலாளர் அளிப்பும் உற்பத்திக்கு இன்றியமையாததாய்

விளங்குகின்றன. நகரங்களில் தொழிலாளர் பற்றுக்குறை இல்லை. ஏனெனில் இந்தியாவில் மக்கட் தொகை பெருமளவில் அதிகரித்து வருகிறது. மேலும், நிலத்தில் அழுத்தம் அதிகமாக இருப்பதால் கிராமப் பகுதிகளிலிருந்து வேளாண்மைத் தொழிலாளர்கள் நகரங்களில் குடியேறுகின்றனர். ஆலைகளில் வேலை வசதிகள் படிப்படியாகச் சீரமைக்கப்பட்டு வருவதால் தொழிலாளர்கள் ஆலைகளில் பணிபுரிய விரும்புகின்றனர். தொழிலாளர்களின் இத்தகைய அளிப்பு பிராந்திய வளர்ச்சிக் கொள்கைகளை அமுலாக்கத் துணைபுரியும். சிறிய தொழில் நகரங்களில் தொழிலாளர்கள் உள்ளூரிலேயோ அல்லது அருகாமையில் உள்ள கிராமப் பகுதிகளிலேயோ கிடைக்கின்றனர். மஹாராஷ்டிரா, கல்கத்தா போன்ற பெரிய தொழில் நகரங்களில் அருகாமையில் உள்ள மாநிலங்களிலிருந்து தொழிலாளர்கள் வரவழைக்கப்படுகின்றனர்.[1] எனவே, இந்தியப் பிராந்திய வளர்ச்சித் திட்டத்தை அமுலாக்கத் தொழிலாளர்களின் அளிப்பு இடையூறாக இருக்காது. உண்மையில் நாடு முழுவதும் ஆலைத் தொழிலாளர்களின் பங்கீடு சீரான நிலையிலேயே இருக்கும். சீரமைப்புத் திட்டங்கள் அமுலாக்கப்பட்டால் பின்தங்கிய மாநிலங்களிலும் தேவையான ஆலைத் தொழிலாளர்களின் அளிப்பு இருக்கும்

மேற்கண்ட இயற்கை வளங்களின் விரிவான ஆய்வின் அடிப்படையில் எதிர்காலப் பிராந்தியத் திட்டங்களை மேற்கொண்டு அவற்றை அமுலாக்கச் சிறந்த வாய்ப்புக் கிடைக்கும். பிராந்தியங்களின் அடிப்படையில் சமச்சீரான பொருளாதார வளர்ச்சிக் கொள்கையைச் சாதிக்க இந்தியாவில் தக்க சூழ்நிலை உள்ளது என்பதை மேற்கண்ட ஆய்வு தெளிவுபடுத்துகிறது.

[1] முக்கர்ஜி, டே (Dey), 'நவீன இந்தியப் பொருளாதாரப் பிரச்சினைகள்' பாகம் II, ப 111.

# 57. பிராந்தியப் வளர்ச்சிப் பிரச்சினைகளைத் தீர்த்தல்

## (Solving Problems of Regional Development)

இரண்டாம் உலகப்போருக்குப் பின் உலகின் பல்வேறு நாடுகளின் பல்வேறு பகுதிகளில் வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வு தோன்றியது. இதன் விளைவாக ஒவ்வொரு நாட்டிலும் பிராந்திய வளர்ச்சியை அதிகரிக்கப் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன. இதன்பொருட்டு அரசு மேற்கொண்ட செயல்களை மக்களும் ஆதரித்தனர். உதாரணமாக, முதலாளித்துவ பொருளாதார முறையைக் கொண்ட அமெரிக்காவில் பெரிய தொழில் மந்த காலத்திலிருந்து அரசு பிராந்திய நடவடிக்கைகளில் ஈடுபட்டது. அதன் விளைவாக உருவாகியதுவே டென்னஸ் பள்ளத்தாக்கு அமைப்பாகும். அதைப் போன்ற பிராந்திய வளர்ச்சித் திட்டங்களைத் தற்போது மேலும் அமெரிக்காவில் பழைய தென் அமெரிக்கா, புது இங்கிலாந்து (New England) ஆகிய இடங்களில் மேற்கொண்டுள்ளனர்.[1] அங்கே பிராந்திய வளர்ச்சிக்கு நிதி அளிக்க ஒவ்வொரு பிராந்தியத்திற்கும் ஒரு மத்திய வங்கி, பெடரல் இருப்பு வங்கி (Federal Reserve Bank) உண்டு. பிராந்திய வளர்ச்சித் திட்டங்களை நடைமுறைப் படுத்தும்போது பல்வேறு பிரச்சினைகள் தோன்றுகின்றன. அவற்றைப் போக்கத்தகுந்த பிராந்திய வளர்ச்சிக் கொள்கை அவசியமாகும். முதலில் பிராந்திய வளர்ச்சியின் நன்மைகளையும் பின் கொள்கையினையும் ஆராயலாம்.

### பிராந்திய வளர்ச்சியின் நன்மைகள்

பிராந்தியச் சமச்சீரான வளர்ச்சியைச் சமூக, பொருளாதார, அரசியல் காரணிகளின் அடிப்படையில் வரவேற்கின்றனர். பிராந்தியங்களிடையே ஏற்றத்தாழ்வைப் போக்கி எல்லாப் பிராந்தியங்களிலும் சீரான அதிக பட்ச வாழ்க்கைத் தரத்தை

[1] ஜான். R. மேயர். பிராந்தியப் பொருளாதாரம், பொருளாதாரக் கோட்பாடுகளின் ஆய்வு, பாகம் II, ப. 247.

உயர்த்த அது ஒரு சிறந்த கருவியாகப் பயன்படுகிறது. "முழுமையான எந்த வளர்ச்சித் திட்டத்திலும் பிற்பட்ட பகுதிகளின் சிறப்புத் தேவைகளில் தக்க அக்கறை செலுத்த வேண்டியது வெளிப்படையான உண்மையாகும். சமச்சீரான பிராந்திய வளர்ச்சியை அடையத்தக்க வகையில் வளர்ச்சிப் பாங்கு அமைய வேண்டும்."[1] கீழ்க்கண்ட காரணங்களால் பிராந்திய வளர்ச்சி விரும்பத்தக்கதாகும்.

பொருளாதார சமூக நன்மைகள்

வளங்களைச் சேகரித்துப் பாதுகாத்துத் திறம்படப்பயன் படுத்தி வளர்ச்சியை விரைவுபடுத்த (Accelerate) பிராந்தியத் திட்டம் அவசியமாகும். பொதுவாக, தொழில்கள் ஒரே பகுதியில் குவிவது இயல்பாகும். "ஒரு மத்தியத் தொழில் அமைப்பைச் (Nucleus) சுற்றிப் பல சார்பு தொழில்கள் தோன்றுகின்றன. குறைந்து செல் விளைவு அல்லது இடநெருக்கடிச் சிக்கனமின்மை (diseconomies of congestion) ஆகியவையால் தொழில்கள் சிதற வேண்டிய நிலை ஏற்படுகிறது." இதன் விளைவாக வளங்கள் வீணடிக்கப்படுவதால் இந் நிலையைத் தவிர்க்க வேண்டும். கிராமப் பகுதிகளின் வளர்ச்சியைப் புறக்கணித்தால் நாட்டில் இருக்கும் வளங்களைச் சீராகப் பயன்படுத்த முடியாது. சமூகச் சீர்கேடுகளாகிய தொழில் நகரங்களில் ஏராளமான மக்கள் குவிப்பு, இட வசதியின்மை, இட நெருக்கத்தால் நோய் பரவல், சுகாதார வசதியின்மை, மிக அதிக வாழ்க்கைச் செலவு (Cost of living) போன்றவைகளை நீக்கப் பிராந்திய வளர்ச்சித் திட்டம் இன்றியமையாததாகும். இத் திட்டங்களின் மூலம் சிறுதொழில்களைக் கிராமங்களில் வளர்ச்சியடையச் செய்து கிராம மக்களின் வருவாயை அதிகரிக்கவும் முடியும்.

குறிக்கோள்கள்

திரு. தாமஸ் வில்ஸன் அவர்கள் பிராந்தியங்களுக்கிடையே ஏற்றத்தாழ்வுகளை நீக்கிப் பிற்பட்டப் பிராந்தியங்களை வளர்ச்சியடையச் செய்ய மக்கள் நலன்பேணும் அரசாங்கம் சீரான பிராந்தியக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென வலியுறுத்துகிறார்.[1] பிற்பட்ட பகுதிகளில் அமைப்புசார் வேலையின்மையைப் (Structural Unemployment) போக்க இங்கிலாந்தின் வளர்ச்சிக் கொள்கைகளில் (British Development Policies) அதிக அக்கறை செலுத்தப்பட்டது. இப் பகுதிகளில் வருவாய் மிகக் குறைவாக இருப்பதால் இதை வளர்ச்சியடைந்த பகுதிகளுக்கு இணையாக உயர்த்தத் தகுந்த கொள்கை தேவை. தென்

[1] இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், ப 36.

இத்தாலியில் (South Italy) வருவாய் வட இத்தாலியில் இருந்ததில் மூன்றில் ஒரு பகுதிதான் இருந்தது. இச் சமூக, பொருளாதார அநீதியை நீக்க வகை செய்யவேண்டுமென்று இத்தாலி, கானடா பிராந்தியத் திட்டங்களைத் தீட்டியுள்ளன.

''பிற்பட்ட பகுதிகளில் தொழில்களை வளர்ச்சியடையச் செய்தால் மற்ற நெருக்கமான பகுதிகளில் இட நெருக்கடி குறைகிறது. எனவேதான் ஜன நெருக்கடியுள்ள தென் கிழக்கு இங்கிலாந்து, பாரிஸ் போன்ற இடங்களில் தொழில் வளர்ச்சியைக் குறைக்க வேண்டுமென்று கூறப்படுகிறது.'' நாடு முழுவதும் உற்பத்தி மட்டத்தை(Level of output) அதிகரிக்கத்தக்க பொதுக் கொள்கையின் ஒரு பகுதியாக பிராந்திய வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டுமென்று திரு. தாமஸ் வில்ஸன் பெரிதும் வலியுறுத்துகிறார். மேலும், பிற்பட்ட பகுதிகளில் வேலையில்லாதவர்களுக்கு வேலை அளித்தால் திறன் அதிகரித்து வளங்களைப் பயன்படுத்தும் பணியும் அதிகரிக்கும். இதனால், கொள்கை, வகுப்போரின் பணி சுலப மாகிறது. இந்தியாவில் 'உருமறைந்த வேலையின்மை' (Disguised Unemployment) வேளாண்மைத் துறையில் அதிக அளவில் காணப் படுவதால், இதைப்போக்கப் பிராந்திய வளர்ச்சித் திட்டம் தக்க வகையில் வேலைவாய்ப்புகளை அதிகரிக்கப் பெருந்துணை புரியும். அதிக உற்பத்தியும், குறைந்த உற்பத்திச் செலவும் கொண்ட சர்க்கரைத் தொழில் போன்ற தொழில்களையும் இத் திட்டத்தின் மூலம் வளர்ச்சியடையச் செய்யலாம். இதனால், தலாவருவாய் அதிகரிக்கும்.

அரசியல் நன்மைகள்

நிராகரிக்கப்பட்ட பகுதிகளில் அரசியல் திருப்தியின்மையைப் போக்க எல்லா பிராந்தியங்களையும் சம வளர்ச்சியடையச் செய்ய வேண்டும். ஒரு சமச்சீரான பிராந்திய வளர்ச்சி நாட்டில் அரசியல் சமநிலையை ஏற்படுத்தும். ''பரவலாக்கப்பட்ட பொருளா தாரத்தை ஏற்படுத்த முதலீட்டின் நன்மைகளை வளர்ச்சி குறைந்த பகுதிகளும் பெறுவதற்கு வகைசெய்ய வேண்டும். அதன் பிராந்திய மயம் பிராந்தியத்தின் மக்களுக்கும் பண்பாட்டுக்கும் இடையே சமநிலையை ஏற்படுத்த வகை செய்யும்.''[1]

## பிற்பட்ட நிலைசார் காரணிகள்
(Criteria of Backwardness)

பிற்பட்ட பகுதிகளை அறிந்தால்தான் அவைகளின் வளர்ச்சிக்குக் கொள்கைகளை வகுக்க முடியும். சமச்சீரான பிராந்திய

1 தாமஸ் வில்ஸன், திட்டமும் வளர்ச்சியும், (Thomas Wilson Planning and Growth) ப 124.

வளர்ச்சிக்கு முதல் கட்டமாக அமைவது இந் நடவடிக்கையாகும். முதலாவதாக, தலாவருவாய் குறைந்துள்ள பிராந்தியங்களில் பொருளாதார நடவடிக்கை மிகக் குறைவாக இருக்கும். சமூக நலனை மேம்படுத்தும் அமைப்பு, தொழில் மயத்திற்குத் தேவையான சூழ்நிலை இவைகளால் ஒரு மாநிலம் பிற்பட்ட நிலையில் இருக்கும். இரண்டாவதாக, ஒரு நபர் வேளாண்மை உற்பத்தி (Output per Capita) குறைந்துள்ள பகுதிகள் பிற்பட்ட நிலையில் இருக்கும். இப் பகுதிகளில் வேளாண்மை கூடத் திறமையுடன் நடைபெறுது. மூன்றுவதாக, வேலையில் ஈடுபட்டுள்ளோரின் துறை வாரியான பங்கீடு பிற்பட்ட நிலையை உணர்த்தும். இந்தியாவில் பீஹார், அஸ்ஸாம், ஜம்மு—காஷ்மீர், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான், ஹிமாசலப் பிரதேசம், ஆகிய பகுதிகளில் வாழும் எண்பது (80%) சதவீத மக்கள் முதல்நிலைத் துறையில்தான் (Primary sector) ஈடுபட்டுள்ளனர். இரண்டாம் துறையில் (Secondry sector) அஸ்ஸாமில் 8 3 சதவீதமும் பீஹாரில் 7·6 சதவீதமும் ஜம்மு-காஷ்மீரில் 3·0 சதவீதமும், ஒரிஸ்ஸாவில் 7·6 சதவீதமும், ராஜஸ்தானில் 6 6 சதவீதமும், ஹிமாசலப் பிரதேசத்தில் 5·6 சதவீதமும், மக்கள் ஈடுபட்டுள்ளனர். இம் மாநிலங்கள் பிற்பட்ட நிலையில் இருப்பது வெளிப்படையாகும். நான்காவதாக, தொழில் வளர்ச்சியின் அளவை அடிப்படையாகக் கொண்டு பிற்பட்ட பகுதிகளைக் கண்டறியலாம். பீஹார், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம் ஆகிய இம் மாநிலங்களில் கிடைக்கும் மொத்த வருவாயில் செய் பொருள் உற்பத்தியிலிருந்து கிடைக்கும் வருவாய் 11 சதவீதம் முதல் 14 சதவீதம் ஆகும். ஆனல், வேளாண்மைப் பொருள்களிலிருந்து கிடைத்த வருவாய் 54 சதவீதம் முதல் 59 சதவீதம் ஆகும். பொருளாதார ரீதியில் இம் மாநிலங்கள் பிற்பட்ட நிலையில் உள்ளன. 1961-ல் பணிபுரியும் ஆலைகள் பம்பாய், (மஹாராஷ்டிரா, குஜராத்), மேற்கு வங்காளத்தில் முறையே 12,149, 4,333, இருந்தன. ஆனல், ஒரிஸ்ஸாவில் 500-ம், ராஜஸ்தானில் 900 க்கும் குறைவாகவும் இருந்தன. இறுதியாக, கிடைக்கும் வளங்களின் அடிப்படையில் மக்கட் தொகையின் அடர்த்தி, ஏற்படுத்தத் தக்க வேலை வாய்ப்புகள் இவைகள் ஒரு பிராந்தியத்தின் வளர்ச்சியின் அளவைப் பிரதிபலிக்கின்றன. மேலும், மின்னேட்டம், நீர்ப்பாசனம் பெற்ற பகுதி, சாலைகளின் நீளம், கல்வி, மருத்துவ வசதிகள், நகர மயத்தின் அளவு, இவைகளின் அடிப்படையிலும், ஒரு பிராந்தியத்தின் பிற்பட்ட பகுதிகளை அறியலாம்.

[1] R. K. முக்கர்ஜி. 'சமூக உயிர் வாழ்க்கைச் சூழல் ஆய்வு நூல்' ப, 316-18.

பிரச்சினைகள்

பிராந்திய வளர்ச்சித் திட்டங்களை நடைமுறைப்படுத்தும் போது பல்வேறு முட்டுக்கட்டைகள் தோன்றுகின்றன. இதனால், பிராந்தியச் சமநிலையைச் சாதிப்பதில் பல தொல்லைகள் தோன்றுகின்றன. அவைகள் பின்வருமாறு.

1. பேரளவுத் தொழில்களின் இடம் பெயராமை

சமச்சீரான பிராந்திய வளர்ச்சியைச் சாதிக்க ஒரே இடத்தில் குவிந்துள்ள பேரளவுத் தொழில்களைப் பெயர்ச்சியடையச் செய்து அவற்றைப் பரவலாக்க வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். ஆனால், பல்வேறு காரணங்களால் அவை ஒரேயிடத்தில் குவிந்துவிட்ட காரணத்தால் அவற்றைப் பரவலாக்குவது மிகவும் கடினமாகும். இதனால் அநேக தொல்லைகள் ஏற்படும். எடுத்துக் காட்டாகப் பயிற்சிப் பெற்ற பணியாள்கள், திறனுடைய தொழிலாளர்கள், தொழில் நுட்பம், மற்ற நவீன முறைகள் போன்றவைகளை வளர்ச்சியடைந்த பகுதிகளிலிருந்து பிற்பட்ட பகுதிகளுக்கு எடுத்துச் செல்வது சுலபமான காரியமில்லை.

2, பிராந்தியத் திட்டத்திற்கும் தேசியத் திட்டத்திற்குமிடையே சச்சரவு

பிராந்தியத் திட்டங்களில், பிராந்தியங்களில் உள்ள பிற்பட்ட பகுதிகள் அனைத்தும் வளர்ச்சியடைய வகை செய்யப்படுகிறது. இதற்குப் போதிய நிதிவசதி மாநில அரசுகளிடம் இல்லை. பிராந்தியத்தில் உள்ள மாநிலங்கள் மற்ற மாநிலங்களின் வளர்ச்சியைக் கருதாது. மத்திய அரசிடமிருந்து அதிக மான்யங்களையும், உதவிக் கொடைகளையும் எதிர்பார்க்க வேண்டிய நிலை ஏற்படும். தேசிய வளர்ச்சித் திட்டங்களில் எல்லாப் பிராந்தியங்களுக்கும் சம அளவு முக்கியத்துவம் கொடுக்கப் படுகிறது. சில சமயங்களில் தேசியத் திட்டத்தில் உள்ள நடவடிக்கைகளுக்கும் பிராந்திய திட்டங்களில் உள்ள நோக்கங்களுக்குமிடையே போட்டி தோன்ற வாய்ப்பு உண்டு. இப் பிரச்சினைகளுக்கு அடிப்படைக் காரணம் மாநில அரசுக்களிடம் போதிய நிதிவசதியின்மையே யாகும்.

3. போக்குவரத்துப் பிரச்சினை

பிற்பட்ட பகுதிகளில் வளர்ச்சியை மேம்படுத்த இன்றியமையாத கருவியாக விளங்குவது போக்குவரத்து வசதிகளாகும். தனியார் துறையிலுள்ள தொழிலதிபர்கள் போக்குவரத்து வசதிகளைச் சீரமைப்பதில் அக்கறை கொள்ள மாட்டார்கள்.

"அமெரிக்கா போன்ற நாடுகளில் போக்குவரத்துப் பிரச்சினையால் நகரங்களுக்கு வெகுதூரத்தில் உள்ள பிற்பட்டப் பகுதிகளில் வளர்ச்சியை மேம்படுத்த முடியவில்லையென்று திரு. ஜான் R. மேயர் (John R. Meyer) குறிப்பிடுகின்றார்."[1]

4. தொழில் நகரப் பிரச்சினைகள்

தொழில்கள் குவிந்துள்ள நகரப் பகுதிகளில் இடநெருக்கடி, உணவுப் பற்றுக்குறை, வீட்டு வசதியின்மை, சுகாதார வசதியின்மை, வேலையில்லாத் திண்டாட்டம், நுகர்வுப் பொருள்களின் விலையேற்றம், போன்ற பல்வேறு பொருளாதார, சமூக, சீர்கேடுகளை நீக்குவது மிகவும் கடினமாகும். அமெரிக்கா போன்ற நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட பிராந்திய ஆராய்ச்சிகளில் இப்பிரச்சினைகளைத் தீர்க்கும்வழி முறைகள் ஆராயப்பட்டன. இதற்குத் தகுந்த தீர்வுகளை ஒருமித்த முறையில் அளிக்க முடியவில்லை. பிராந்தியங்களிடையே ஏற்றத் தாழ்வுகள் அதிகரித்து வருவது சமச்சீரான வளர்ச்சியைச் சாதிப்பதற்கும் வாங்கும் திறனை பரவலாக்குவதற்கும் இடையூறாக இருக்கும். விரைவாக வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் புதிய தொழில் மயமான நகரப் பகுதிகளுக்கும் நாட்டின் மற்றப் பகுதிகளுக்குமிடையே தீவிர ஏற்றத்தாழ்வு ஏற்பட்டு வருகிறது. இத்தகைய இருதலைப்பட்டப் பொருளாதாரத்தைச் (Economic Dualism) சீர்படுத்த இந் நாடுகளில் சிறப்புப் பிராந்தியத் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளன "பிற்பட்ட பகுதியாகிய மேற்கு வெர்ஜினியாவை எண்ணி அமெரிக்க அரசு வேதனைப்படுகிறது. பிரிட்டனியை (Brittany) நினைத்து பிரான்சு கலக்கமடைகிறது. கிளாஸ்கோவைப் பார்த்து இங்கிலாந்து கண்ணீர் விடுகிறது." அவல நிலைகளில் உள்ள பிற்பட்ட பகுதிகளில் வருவாயை அதிகரிக்கவும், சமச்சீரான வளர்ச்சியைச் சாதிக்கவும் விரைவாக வளர்ந்துவரும் நாடுகள் தீவிர கவனம் செலுத்தவேண்டும்.[2]

5. வளங்களின் சமமில்லாப் பங்கீடு

முதலாவதாக, பிராந்தியங்களிடையே சமமில்லா இயற்கை வளங்களின் பங்கீடு இருப்பதால் ஒவ்வொரு பகுதியிலும் எல்லா முக்கியத் தொழில்களையும் அங்கே நிறுவ முடியாது. இரும்பு, எஃகு போன்ற அடிப்படைத் தொழில்கள் இரும்புத் தாது கிடைக்கும் பகுதிகளில்தான் நிறுவமுடியும். நாட்டின் தகுதிக்கு

[1] ஜான் R. மேயர், 'பிராந்தியப் பொருளாதாரம்'பொருளாதாரக் கோட்பாடுகளின் ஆய்வு,' பாகம் II, ப. 249.

[2] A. H. கோன்ராட் (A. H. Conrad) 'எடின்பர்க் பல்கலைக் கழகச் சொற்பொழிவு' ஏப். 19-1962.

ஏற்பக் குறைந்த எண்ணிக்கை கொண்ட ஆலைகளைத்தான் நிறுவ முடியும். பிராந்தியச் சமநிலையின் அடிப்படையில் பூகோள ரீதியில் திட்டமிட்ட முதலீட்டைப் பரவலாக்க முடிவதில்லை. எனவே, பெரிய தொழில்களை ஏற்படுத்தும் நோக்கத்திற்கும், பிராந்தியச் சமநிலைக் குறிக்கோளுக்கும் இடையே முரண்பாடு ஏற்படுகின்றது. இம் முரண்பாட்டைத் தீர்க்க வேளாண்மை, சிறு தொழில்கள், போக்குவரத்துத் தொடர்பு, சமூகப் பணிகள், போன்றவைகளில் முதலீட்டைப் பரவலாக்க வேண்டும்.

பிராந்தியச் சமநிலைக்கும் தேசிய உற்பத்திக்குமிடையே முரண்பாடு

இரண்டாவதாக, பிராந்தியச் சமநிலைக்கும் (Regional Balance) தேசிய உற்பத்தின் விரைவான அதிகரிப்புக்கும் இடையே ஏற்படும் முரண்பாட்டை நீக்குவது கடினமாகும். சமமான தேசிய உற்பத்தியை அதிகரிக்கத் தடையாக இருப்பது தொழில்கள் ஓரிடத்திலேயே குவிவதற்கு நாட்டம் கொள்வதாகும். உற்பத்தியைச் சமமாக எல்லாப் பிராந்தியங்களிலும் அதிகரிக்கச் செய்தால்தான் பிராந்தியச் சமநிலையைச் சாதிக்க இயலும். "வளர்ச்சிப் பகுதிகள்" ("Growth Points") என்று அழைக்கப்படும் ஒரு சில பெரிய நகரங்களில் மட்டும்தான் முதலீடு அதிகமாக உள்ளது. இதன் காரணம் இப் பகுதிகளில்தான் திறனுள்ள தொழிலாளர்கள், மூலப் பொருள்களின் உடன் அளிப்பு, மலிவான, திறமையான போக்குவரத்து, வங்கி வசதிகள், சமூக நலனை மேம்படுத்தும் பணிகள் (Social overheads), மற்றும் பல புறச் சிக்கனங்கள் (External Economics) சுலபமாகக் கிடைக்கின்றன. ஆனால், இத்தகைய ஒருதலைப்பட்ட வளர்ச்சி பிராந்திய ஏற்றத் தாழ்வுகளைப் பெரிதும் அதிகரிக்கும். பேராசிரியர் ஹிர்ச்மேன் (Hirschman) குறிப்பிடுவது போல் "பிராந்தியங்களிடையே வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வு என்பது வளர்ச்சி நடவடிக்கைகளோடு கூடவே இணைந்து நிகழும் ஒரு தவிர்க்க முடியாத நிகழ்ச்சியாகும்." எனவே, திட்டமிட்ட மொத்த முதலீட்டில் ஒரு குறித்த சதவீகிதத்தை, பிராந்திய ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கும் குறிக்கோளுடன், பிற்பட்ட பிராந்தியங்களின் வளர்ச்சிக்காக ஒதுக்கிட வேண்டும். திரு. தாமஸ் வில்சன் அவர்கள் குறிப்பிடுவது போல் "பிற்பட்ட பகுதிகளில் தொழில்களைப் பரவலாக்கினால் தேசிய உணவு அதிகரிப்பைப் பெற முடியாது. ஏனெனில் பிற்பட்ட பகுதிகள் திறமையான தொழில் வளர்ச்சிக்கு உகந்தவைகளாய் இருக்கமுடியாது."[1] இம் முரண்பாடு ஏற்படுவது உண்மைதான். "உண்மையாகவே தேசிய உற்பத்தி அதிகரிப்பைத் தியாகம் செய்யவும், பிற்பட்ட பகுதிகளின் தொழில் வளர்ச்சிக்கு உதவிக்

1 தாமஸ் வில்ஸன், 'திட்டமும் வளர்ச்சியும்' ப. 125

கொடைகள் அளிக்க அதிக வரிகளைச் செலுத்தவும் வளர்ச்சியடைந்த பகுதியில் வாழும் சமூகத்தினர் தயாராக இருக்க வேண்டும்.'' ஆனால் அத்தகைய உதவிக்கும் ஓர் அளவு உண்டு. திறமையைக் கருதாமல் நாட்டின் ஒவ்வொரு பகுதிகளிலும் தொழில் வளர்ச்சியைப் பேணி வளர்ப்பது சிறந்ததாகாது. மேலும், அமைப்புச்சார் வேலையின்மையைப் போக்கக் குடி பெயர்வதை ஊக்குவிக்கலாம். அவ்வாறு குடி பெயர்பவர்களுக்கு வீட்டுவசதி மறுபயிற்சி வசதி போன்றவைகளை அளித்துப் பிற்பட்ட பகுதிகளில் தொழில் வளர்ச்சியைப் பேணி வளர்க்கலாம். இங்கிலாந்திலும் சில ஐரோப்பிய நாடுகளிலும் அரசின் பிராந்திய வளர்ச்சித் திட்டங்களின் அடிப்படையில் குடிபெயர்ச்சி, அமைப்புகள் வேலையின்மையைக் குறைக்கப் பெருமளவில் துணைபுரிந்துள்ளது. ஸ்வீடன் நாட்டில் அரசு கொள்கைகளில் குடிபெயர்ச்சி பெரிதும் வலியுறுத்தப்பட்டு வருகின்றது. பிற்பட்ட பகுதிகளிலோ, மந்தமான பகுதிகளிலோ, மட்டும்தான் புதுத் தொழில்களை ஏற்படுத்த வேண்டுமென்பது இல்லை. லண்டன், பாரிஸ் போன்ற பெரிய நகரங்களுக்கு அருகாமையிலேயே விரிவாக்கப் பட்ட பகுதிகளில், தொழில்கள் தோன்றலாம். சில பிற்பட்ட பகுதிகளிலும், இடநெருக்கடி இருப்பதால் பிரச்சினை அதிகரிக்கிறது. இங்கிலாந்தில் உள்ள கிளாஸ்கோ (Glasgow) நகரம் இதற்குச் சிறந்த உதாரணமாகும். எனவே, ஒரு குறிக்கோளை அடைய முயன்றால் மற்றொரு குறிக்கோள் இடையூறாக இருப்பதால் முரண் பாடு தோன்றுகிறது. குறிக்கோள்களைச் சாதிப்பதில் முரண்பாடு தோன்றினாலும் தேசிய உற்பத்தி அதிகரிப்புக் குறிக்கோள், பிராந்திய வளர்ச்சி நடவடிக்கைகளில் சிறப்பிடத்தைப் பெற வேண்டும். எந்த ஒரு பிராந்தியத் திட்டமும் தேசிய உற்பத்தியை அதிகரிப்பதில் சிறப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டால் கிடைக்கும் நன்மைகள் பல உள்ளன.

அவைகளாவன:

(1) அமைப்புச்சார் வேலையின்மையை நீக்கக் குடிபெயர்ச்சியை ஊக்குவித்து, பிற்பட்ட பகுதிகளில் வேலை வாய்ப்புகளை அதிகரிக்க முடியும். பிராந்திய வளர்ச்சி இத்தகைய வேலையின்மையைக் குறைத்துத் தேசியத் தொழிலாளர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வகை செய்கிறது.

(2) அமைப்புகள் வேலையின்மையைக் குறைத்தால் குறைந்த அளவு வேலையின்மையினால் பணவீக்க இன்னல்களைக் குறைக்க முடியும் குறைந்த அளவு அமைப்புச்சார் வேலையின்மை பணவீக்க நிலையைச் சமாளிக்க வகை செய்யும்.

(3) மொத்த மக்கட் தொகைக்கும், வேலையில் உள்ளவர்களின் எண்ணிக்கைக்கும் இடையே உள்ள விகிதம் பங்கேற்பு விகிதம் (Participation Ratio) என்று அழைக்கப் படுகின்றது. இவ் விகிதம் பிற்பட்ட பகுதிகளில் மிகக் குறைவாக இருக்கும். பிராந்தியத் திட்டத்தின் மூலம் பங்கேற்பு விகிதத்தை அதிகரிக்கச் செய்யலாம். சான்றாக ஸ்காட்லாந்தில் இவ் விகிதம் அதிகரித்ததால் அமைப்புச் சார் வேலையின்மை ஈர்ப்புக்கும் அதிகமாக நாட்டின் தொழிலாளர் களின் எண்ணிக்கை அதிகரித்தது.

(4) நாட்டில் வேலைசெய்வோரின் எண்ணிக்கையை அதிகரிப் பதுதான் பிராந்தியத் திட்டத்தின் குறிக்கோள் என்று கருதுவது தவறாகும். நாடு முழுவதற்கும் நன்மை கிடைக்க ஏற்கெனவே வேலையிலிருப்போரின் திறனை உயர்த்த வேண்டும். ஸ்காட்லாந்து பொருளாதார ஆய்வுக்குழுவின் அறிக்கையில் இக் கருத்து பெரிதும் வலியுறுத்தப் பட்டுள்ளது. இவ்வறிக்கையில் பிராந்திய உற்பத்தியின் மிக விரைவான வளர்ச்சியைப் பேணிக்காக்க வேண்டும் என்று வலியுறுத்தப் பட்டுள்ளது. வேலையின்மையைக் குறைப்பது மட்டுமே முக்கிய குறிக்கோளாகாது. உற்பத்தி அதிகரித்தால் இயற்கையாகவே வேலையின்மை குறைந்து விடும். உற்பத்திச் செலவு, வளர்ச்சி வாய்ப்பு, ஆகியவைகளை ஆராயாமல் வேலைகளை அதிகரிப்பது சிறந்ததாகாது. பிராந்தியக் கொள்கை தேர்ந்தெடுத்த கொள்கையாக அமைய வேண்டும். நாடு முழுவதும் தொழில்களைப் பரவலாக்க வேண்டுமென்பது பொருளற்ற வாத மாகும். புதுத்தொழில் பகுதிகளை அல்லது 'வளர்ச்சி மண்ட லங்களை' (Zones of Growth) ஏற்படுத்துவதுதான் பகுத்தறிவுக் கொள்கையாகும். வளர்ச்சி மண்டலங்கள் குடிபெயர்ச்சியின் அளவைக் குறைத்தாலும், பிராந்தியங்களுக்குள் பெயர்ச்சி இருப்பதுதான் சிறந்ததாகும்.

6. அரசியல் பிரச்சினைகள்

பிராந்திய வளர்ச்சிக்குச் சில சம்பவங்களில் இடையூறாக இருப்பது அரசியல் அமைப்பாகும். கூட்டரசு அமைப்பு முறையில் (Fedaralism) ஒவ்வொரு மாநில அரசும் தன்னெல்லைக்குள் அதிக மான தேசிய வளங்களின் ஒதுக்கீட்டைப் பெறப் போட்டியிடு கிறது. மிகவும் கிளர்ச்சிகரமான மாநிலங்கள் இத்தகைய போராட் டங்களை ஊக்குவித்து, பொருளாதாரக் கருத்துகளைப் புறக்கணித்து, சுயநல நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. இப் பிரச்சினையைத் தீர்க்கத் திட்டக் குழுவைச் சுதந்திர அதிகாரம் பெற்ற (autonomous) நிறுவனமாக மாற்றி அமைக்க வேண்டும். அப்போது தான் பல்வேறு அரசியல் கருத்துகளைக் கொண்ட மாநிலங் களிடையே கூட்டுறவையும், ஒத்துழைப்பையும் ஏற்படுத்த முடியும்.

சில சலுகைகளைப் பெறுவதற்காகச் சில வளர்ச்சியடைந்த பிராந்தியங்களும் 'பிற்பட்ட பகுதிகளின்' பிரிவுகளில் தங்களையும் ஒன்றாக இணைத்துக் கொள்ள விரும்புகின்றன. ஆனால் இப்பிரச்சினையைத் தீர்ப்பதற்குச் சில பொது விதிகளையும், மேலே குறிப்பிட்ட அளவு காட்டிகளையும் (Indicators) பயன்படுத்த லாம்.

ஆய்வுரை

பிராந்திய வளர்ச்சிக் கருத்து தொழில் முன்னேற்றத்தின் உச்சக் கட்டத்தில் இருக்கும் அமெரிக்கா, ஐரோப்பா போன்ற செல்வந்த நாடுகளுக்குத்தான் பொருந்தும். இந்தியா போன்ற ஏழ்மை நாடுகள் அத்தகைய டம்ப நடவடிக்கைகளில் தற் போதைய நிலைமையில் ஈடுபடுதல் தகாது என்று சிலர் கருதுகின்றனர். நாட்டிலுள்ள குறைந்த அளவு வளங்களைப் பரந்த நிலப்பரப்பில் மிகக் குறைவான அளவில் பரவலாக்குவது மதியீனமாகும். எனவே, பிற்பட்ட பகுதிகளில் தொழில் வளர்ச்சியை அதிகரிக்கஇந்திய வளங்கள் சமச்சீரான வளர்ச்சிக்குப் போதுமான அளவு வளரும் வரைக்கும் பொறுத்திருக்க வேண்டும் என்பது சிலரது கருத்தாகும். எனினும் இந்தியா விரைவான பொருளாதார வளர்ச்சியை மக்களாட்சிக் கொள்கைகளின் அடிப் படையில் அடைந்திட வளர்ச்சி இன்றியமையாததாகும்.

## பிராந்திய வளர்ச்சிப் பிரச்சினைகளின் தீர்வுகள்

பிராந்திய வளர்ச்சியைத் தீர்மானிக்கும் முக்கியமான காரணி நாடு முழுவதிலும் உள்ள தொழில் செழிப்பு நிலையாகும். இங்கிலாந்தில்பிற்பட்ட பகுதிகளுக்குத் துணைபுரியத் தக்க வகையில் அமைந்தது உறுதியான தொழிலாளர் (Man power), உற்பத்தி (out put) தேவையாகும். பிராந்திய வளர்ச்சியை அதிகரிக்கப் பொதுவாகக் கீழ்க்கண்ட கொள்கைகளை வகுக்கலாம்.

1. சமூக நலனை மேம்படுத்தும் நடவடிக்கைகள்

மின்சக்தி அளிப்பு, சிறந்த போக்குவரத்து வசதிகள், பணியாள்கள், மற்றப் பகுதிகளிலிருந்து வந்த பயிற்சிபெற்ற தொழிலாளர்கள் (Skilled workers) ஆகியோர்களுக்குத் தக்க வீடுகளை அமைத்தல் போன்ற சமூக நலனை மேம்படுத்தும் பிராந்திய நடவடிக்கைகள் சீராக மேற்கொள்ளப்பட வேண்டும். பிற்பட்ட பகுதிகளில் அமைந்துள்ள சமூக நலனை அதிகரிக்கும் அமைப்புகள் போதுமானதாக இல்லை. இதற்கு ஆரம்பத்தில் அதிகமான மூலதனம் தேவை. ஆனால், காலப்போக்கில்

இத்தகைய முதலீடு பிராந்தியத்தின் உற்பத்தி அதிகரிப்பிற்குப் பெருமளவில் துணைபுரியும்.[1] மாதிரியாக இத்தாலியின் பிராந்தியக் கொள்கையின் பிராதான குறிக்கோள் சமூக நலனை மேம்படுத்தும் அமைப்பைச் சீர்படுத்துவதுதான். இங்கிலாந்திலும், தென்கிழக்கு இங்கிலாந்து, வடக்கு அயர்லாந்து, ஆகிய இரண்டுக்குமிடையே உள்ள வேறுபாட்டைப் போக்க இத்தகைய முதலீடு மேற்கொள்ளப் பட்டது. இங்கிலாந்தின் கொள்கையில் பிற்பட்ட மாவட்டங் களுக்குப் புதிய செய்பொருள் தொழில்களைத் தோற்றுவிக்க வகை செய்யப்பட்டது.

2. தொழில்களைப் பரவலாக்குதல்

சில தொழில்கள் சட்ட ரீதியில் பிற்பட்ட பகுதிகளில் ஆரம்பிக்கப்படக் கட்டாயப்படுத்தப்பட வேண்டும். இதற்குத் தகுந்த சட்டம் தேவை. மேலும், உரிமம் வழங்குதல் (Licensing), தொழில் அளவுக்குமேல் விரிவடைவதைக் கட்டுப்படுத்துதல், போன்ற மறைமுக நடவடிக்கைகளால் தொழில்களைப் பரவலாக்க முடியும். இம் மறைமுகக் கட்டுப்பாடு சில சமயங்களில் அபாயகர மானதாய் விளங்கும். அனுபவ முதிர்ச்சி பெற்ற நிர்வாகங்கள் ஒரு குறித்த இடத்தில் தொழில் நிறுவ விரும்புவதை அரசு அதிகாரிகள் ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, இதில் சமரச உடன்பாடு தேவை.

3. உதவிக் கொடைகளை அளித்தல்

பிற்பட்ட பகுதிகளில் கட்டாயமாகத் தொழில் உருவாக வகை செய்வதோடுகூட. சில நிதிசார் சலுகைகளை அளித்து வளர்ச்சி யைத் தூண்டவேண்டும். அரசாங்க நிதியிலிருந்து பிற்பட்ட பகுதிகளில் ஆலைகள் தோன்றி வளர்ச்சியடைய வகைசெய்ய வேண்டும். ஸ்காட்லாந்தில் இருப்பதைப்போல் ஆலைக்கட்டங்களைக் குறைந்த வாடகைக்கு விடலாம். சாதகமான முறையில் கடன்கள், மானியங்கள் ஆகியவைகளை வளரும் தொழில்களுக்கு அளிக்கலாம். சில தொழில்களுக்கு உதவிக் கொடைகளையும் அளித்து வளர்ச்சியடையச் செய்யலாம். இத்தாலி, பிரான்ஸ், அயர்லாந்து, போன்ற நாடுகளில் செய்ததைப் போல் வரி ஊக்கிகளை (Tax incentives) அளிக்கலாம். இவ்வுதவியைப் பெறுவதற்கு நிறுவனங்களின் தகுதியை ஆராய வேண்டும். இங்கிலாந்தில் வேலைவாய்ப்புகளை அதிகரிக்கத்தக்க தொழில்கள் உதவிபெறத் தக்கவைகளாகக் கருதப்பட்டன.

[1] தாமஸ் வில்ஸன், 'திட்டமும் வளர்ச்சியும்' ப. 129.

4. 'வளர்ச்சி மண்டலங்களின்' பெருக்கத்தைப் பேணுதல்

இடப்பாட்டுக் காரணிகள் சீராக அமைந்த 'வளர்ச்சி மண்டலங்களின்' (Zones of Growth) பெருக்கத்தைப் பேணிக் காத்துத் திறனுடைய புதிய தொழில்கள் தோன்றுவதற்கு வகைச்செய்ய வேண்டும். பெயர்ச்சியை அதிகரிக்க வேண்டுமென்பதற்காகப் பிராந்தியம் முழுவதும் ஏராளமான சிறிய தொழில்களைப் பரவலாக்க முயலுவது மதியீனமாகும்.[1] ஏனெனில் பிராந்தியத்தின் பல பகுதிகளில் புதிய தொழில்களுக்கேற்ற தொழிலாளர் சக்தி (Man power) கிடைப்பது அரிதாகும். இதற்குக் காரணம் தொழிலாளர்கள் அதிக அளவில் பரவியிருப்பது தான். சில மண்டலங்களில் புதிய தொழில் பெருமளவில் குவிந்தால் அவ்வாலைப்பகுதிகளுக்குப் புறச் சிக்கனங்களின் நன்மை கிடைக்கும். பரந்த இடத்தில் பரவியிருக்கும் நிறுவனங்களுக்கு இச் சிக்கனங்கள் கிடைக்கா. வளர்ச்சி மண்டலங்களாகத் தகுதிபெறத்தக்க பகுதிகளைத் திருப்திகரமாக அரசு அதிகாரிகளை விடத் தனியார் நிறுவனங்கள்தான் தகுந்த முறையில் தீர்மானிக்க முடியும். வேலை கிடைக்காத பகுதிகளில் வளர்ச்சி மண்டலங்களை ஏற்படுத்திப் புதுத் தொழில்களை நிறுவலாம். அரசு தொழிற் பேட்டைகளை அமைத்து அவற்றை நகரங்களுடன் இணைக்கலாம். தனியார் தீர்ப்பின் அடிப்படையில் சில தொழில் வளர்ச்சிப் பகுதிகள் தேர்ந்தெடுக்கப்படலாம். மிகவும் கடினமான பகுதிகளுக்கு அதிகத் தூண்டுதல் சலுகைகளை அளிக்கலாம். இதனால் தேசிய உற்பத்தியும் பெருக வாய்ப்பு உண்டு.

5. வேலைவாய்ப்பும் வளர்ச்சியும்

பிராந்திய வளர்ச்சிக் கொள்கை கூடுதல் வேலைவாய்ப்பை ஏற்படுத்தும் வகையில் வேலைவாய்ப்புக் கொள்கையாக அமைய வேண்டும். அதற்கேற்ற வகையில் இருக்கும் ஆலைகள் நவீனமயம், சீரமைப்பு இவைகளை மேற்கொள்ள நிதி உதவி அளிக்க வேண்டும். மேலும், புதிய தொழில் தோன்றி உற்பத்தியை அதிகரிக்கத் தகுந்த வழிமுறைகளை ஏற்படுத்த வேண்டும். குறுகிய காலத்தில் வேலை வாய்ப்புகள், நேரடியாக அதிகரிக்கும் அளவுக்கு உற்பத்தி அதிகரிக்காது. ஆனால், காலப்போக்கில் வேலை அதிகரிப்புக்கும், வளர்ச்சி அதிகரிப்புக்கும் இடையே தோன்றும் முரண்பாடு தீவிரமாக இருக்காது. இப் பகுதிகளில் வேலைவாய்ப்பு அதிகமாய் இருக்கின்றதென்பதால், தொழிலாளர் செறிவுத் திட்டங்களை மட்டும் ஆதரிப்பது தவறாகும். "புதிய தொழில் அமைப்புகளை அமைக்கும் எண்ணமிருந்தால் சில அதிக முதல் செறிவு நிறுவனங்களை ஏற்படுத்துதல் மிகவும் பொருத்த

1 தாமஸ், வில்ஸன் திட்டமும் வளர்ச்சியும். ப. 130;

மானதாகும்.''[1] இங்கிலாந்தில் நிறுவனங்கள் முதல் செறிவுத் திட்டங்களை மேற்கொள்ள அரசு துணை புரிந்தது. இதன் நோக்கம் இந் நிறுவனங்கள் காலப்போக்கில் அரசின் உதவியின்றியே வளர்ச்சி நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதாகும். இத்தகைய உதவிக் கொடைகள், கடன்கள், மானியங்கள், பயனுள்ளவைகளா என்பதை அறிய மொத்தத் தேசிய உற்பத்தியை ஆராயவேண்டும்.

6. தொழில் நுட்பமும் ஆராய்ச்சியும்

வளர்ச்சியடைந்த பகுதிகளில் உள்ள மின்னோட்டத் தொழில் (Electronics) போன்ற விரைவாக வளர்ச்சியடையும் தொழில் நிறுவனங்களைப் பிற்பட்ட பகுதிகளில் அமைத்தால், இப் பகுதியில் வாழும் தொழிலாளர்கள் தொழில் மறு மலர்ச்சியைத் தோற்றுவிக்கும் சக்தியுள்ளவர்களாக விளங்க முடியும். உள்ளூர்த் தொழிலாளர்கள் புதிய தொழில்களில் புதுவகை மாற்றங்களைத் தோற்றுவிக்கும் ஆற்றலுள்ளவர்கள் என்ற நிபந்தனையின் அடிப்படையில் பிராந்திய வளர்ச்சி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். மேலும், புதிய நிறுவனங்கள் பிற்பட்ட பகுதிகளில் அமையாத தொழில் நுட்ப முறையையும், புதிய சந்தைகளையும் உருவாக்க முடியும். இத்தகைய நிறுவனங்கள் ஆராய்ச்சி வளர்ச்சியைப் பெருக்கி புதிய நிறுவனங்களை மேலும் ஏற்படுத்தத் தக்க தொழில் துணிவோரை திறம்பட உருவாக்க முடியும். புதிய நிறுவனங்கள் தோன்றுவதை ஊக்குவிப்பதோடு பிற்பட்ட பகுதிகளில் ஏற்கெனவே இருந்துவரும் நிறுவனங்களையும் வளர்ச்சியடையச் செய்யவேண்டும். இதனால் பிராந்தியங்களில் விரைவான, வளர்ச்சி ஏற்படும். நிர்வாகம் சீராக நடைபெற விமானப் பணிகள் சீரமைக்கப்பட்டு பணியாள்களின் செய்தித் தொடர்பு (Personal Communication) பெருமளவில் அதிகரிக்க வேண்டும்.

7. பிராந்திய ஒத்துழைப்பு

பிராந்திய வளர்ச்சி மத்திய அரசின் பொறுப்பான பணியாக இருந்தாலும் அதை நடைமுறைப் படுத்தும் கடமை உள்ளாட்சி அரசுகள் (Local government), வணிகர்கள், தொழிற் சங்கத்தினர் இவர்களின் ஒத்துழைப்பைப் பொறுத்ததாகும். இவ்வமைப்புகள் தேவையானபோது சுய அறிவை (initiative) பயன்படுத்தவும் தயாராக இருக்கவேண்டும். தொழில் உறவுகள் சீராக அமையவேண்டும். பிராந்தியச் சுய உதவி, வளர்ச்சிக்கு இன்றியமையாததாகும். ஆனால், இதைச் சட்ட ரீதியில்

1 தாமஸ் வில்ஸன், 'திட்டமும் வளர்ச்சியும்', ப. 132.

உருவாக்குவது சாலச் சிறந்ததாகாது. எல்லாவற்றுக்கும் மேலாக பிரான்சு பரிசோதித்து வருவது போல், ஒவ்வொரு பிராந்தியத்திலும் தொழில்சார் இலக்குகள், மற்ற விவரங்களடங்கிய உற்பத்தி இலக்குகள் ஆகியவைகளைக் கொண்ட பிராந்தியத் திட்டம் வளர்ச்சிக்கு உயிர் நாடியாக விளங்குகிறது.

இந்தியப் பிராந்திய வளர்ச்சிக் கொள்கை

இந்தியப் பிற்பட்ட பகுதிகளை வளர்ச்சியடைச் செய்யக் குறுகியகால நடவடிக்கைகள், நீண்டகால நடவடிக்கைகள் அடங்கிய வளர்ச்சிக் கொள்கையை உருவாக்க வேண்டும்.

குறுகியகால நடவடிக்கைகள்

முதலாவதாக, கிராமத் தொழிலாளர்களின் பெயர்ச்சியை அதிகரிக்கப் பெருமளவில் வகைசெய்ய வேண்டும். தொழிலாளர் செறிவுத் திட்டங்களை (Labour-in tensive Projects) மேற்கொள்ளுதல் மிகவும் பொருத்தமானதாகும். உள்ளூரில் கிடைக்கும் மூலப்பொருள்கள், கிராமத் தொழிலாளர், இவைகளைப் பயன்படுத்திப் பிற்பட்ட பகுதிகளில் முதலீட்டை அதிகரிக்க வேண்டும் கிராம மக்களுக்கு வேலைவாய்ப்புகளை அதிகரித்து அவர்களின். வருவாயைப் பெருக்கவேண்டும். உடனடியாகப் பயன்தரும் வேளாண்மை, தொழில் திட்டங்களை மட்டும் தேர்ந்தெடுக்க வேண்டும். இதனால் எதிர்கால வளர்ச்சி பெருகும். சிறு நீர்ப்பாசனத் திட்டங்கள், நிலச்சீரமைப்பு, போக்குவரத்துத் தொடர்பு சாதனங்கள் போன்ற திட்டங்கள் இதற்கு உதாரணமாகும்.

நீண்டகால நடவடிக்கை

வலுவான பொருளாதார ரீதியில் திறமையான தொழில் பகுதிகளை அடிப்படையாக ஏற்படுத்த வகைச்செய்ய வேண்டும். பிராந்தியத்தின் மூலப்பொருள்களைப் பயன்படுத்தவும், அங்காடியை விரிவாக்கவும் வகை செய்யத்தக்க திறமையான தொழில்களை வளர்ச்சிடையச் செய்யவேண்டும். ரெயில்வே கட்டணச் சலுகைகள், விவசாயிகளுக்கு நியாயமான விலைகள் கிடைக்கச் செய்து பாதுகாத்தல், போன்ற சிறப்புச் சலுகைகளை அரசு அளித்து, தொழில் வளர்ச்சியை ஊக்குவிக்க வேண்டும். கல்வி, தொழிற் பயிற்சி, பொதுச் சுகாதார நடவடிக்கைகள் போன்றவற்றை மனித மூலதனத்தில் முதலீடு செய்து திறனை அதிகரித்தால், அதன் எதிர்கால வளர்ச்சிக்குப் பெரும் துணைபுரியும். இதன் விளைவாக வருமானப் பங்கீடும், சமவாய்ப்பும், சீரடைய வழி கிடைக்கிறது. சமவுடைமைப் பாங்கைச் சாதிக்க இந் நடவடிக்கைகள் துணைபுரியும்.

## ஐந்தாண்டுத் திட்டங்களில் பிராந்திய வளர்ச்சி நடவடிக்கைகள்

(Measures adopted under Five year plans)

முதல் திட்டம் (1951-56)

முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆயத்தகரமானதாக (Preparatory) மட்டும் இருந்தது. எனவே, அந்தக் கட்டத்தில் சமச்சீரான பிராந்திய வளர்ச்சிப் பிரச்சினை தோன்றவில்லை.

இரண்டாம் திட்டம் (1955-56—1960-61)

இப் பிரச்சினையை முழுமையாகக் கருத்தில் கொண்டு இரண்டாம் திட்டம் சில வழிவகைகளை மேற்கொள்ள வகை செய்தது. திட்ட அறிக்கையின்படி "எந்த ஒரு முழுமையான வளர்ச்சித் திட்டத்திலும் வளர்ச்சியடையாத பகுதிகளின் சிறப்புத் தேவைகளை அக்கறையுடன் கவனிக்கவேண்டும் என்பது வெளிப்படையான உண்மையாகும்."[1]

இரண்டாம் திட்டத்தில் உள்ளடங்கிய செயல் முறைத் திட்டங்கள் வருமாறு :

(i) வேளாண்மை, சமுதாய வளர்ச்சி, நீர்ப்பாசனம் முக்கியமாகச் சிறுநீர்ப் பாசனம், உள்ளூர் வளர்ச்சிப் பணிகள் போன்ற நடைமுறைத் திட்டங்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப் பட்டது.

(ii) தொழில் வளர்ச்சியில் பிற்பட்ட பகுதிகளில் மின்சக்தி' நீரளிப்பு, போக்குவரத்து, செய்தித் தொடர்பு, பயிற்சிப் பள்ளிகள் போன்ற வசதிகளை ஏற்படுத்துதல்.

(iii) கிராம, சிறுதொழில்களின் பெருக்கத்திற்கு வகை செய்தல்.

(iv) சமச்சீரான பொருளாதார வளர்ச்சியைப் பெறவேண்டுமென்ற கருத்தின் அடிப்படையில் பொது அல்லது தனியார் துறைகளின் புதிய நிறுவனங்கள் நிறுவப்பட வேண்டுமென்று கூறப்பட்டது.

உத்திரப் பிரதேசத்திலுள்ள விதர்ப்பா, மரத்வாடா, ஆகிய மாவட்டங்கள், ஹிமாசலப் பிரதேசப் பகுதிகள், போன்ற வளர்ச்சி குறைந்த பகுதிகளில் மாநிலத் திட்டங்கள் சிறப்பு முதலீட்டு மூலம் வளர்ச்சியைத் துரிபடுத்த வகை செய்யப் பட்டது. பிற்பட்ட

1 இரண்டாம் 'ஐந்தாண்டுத் திட்டம், ப, 36,

பகுதிகளில் வளங்களை அதிகரிக்க வகை செய்யப்பட்டது. உதாரணமாக ஒரிஸ்ஸாவில் இரும்புத்தாது, சேலத்தில் பாக்ஸைட் படிவுகள், ஆர்க்காட்டில் லிக்னைட் படிவுகள், ராஜஸ்தானில் ஈயப் படிவுகள் ஆகிய வளங்கள் வளர்ச்சி குறைந்த பகுதிகளில் நன்மை யளிக்கத் திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. இராஜஸ்தான், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், பஞ்சாப் ஆகிய இம் மாநிலங்களில் பருத்தி நெசவாலைகளும், ஆந்திரப் பிரதேசம், தமிழ் நாடு, மைசூர், மஹராஷ்டிராவில் சர்க்கரை ஆலைகளும், அஸ்ஸாம், மத்திய பிரதேசம், கேரளா, வட பீஹார் இவைகளில் எஃகு ஆலைகளும்' கேரளாவில் இரப்பர் ஆலைகள், மின் விளக்கு ஆலைகளும் ஏற்படுத்தப்பட்டன. இவைகள் பிராந்திய வளர்ச்சிப் பாங்கைப் பேணிக்காக்கத் தோற்றுவிக்கப் பட்ட அநேக நுகர்வுப் பொருள் தொழிகள், சுத்தப் படுத்தும் தொழில்கள் ஆகியவைகளுக்குச் சில சான்றுகளாகும்.

கிராமப் பகுதிகளிலும், சிறு நகரங்களிலும் தொழிற் பேட்டைகள் (Industrial estates) அதிக அளவில் நிறுவப் பட்டு வருகின்றன. இரண்டாம் திட்டத்தில் பல்வேறு பிராந்தியங் களிடையே சரிசமமான தொழில் வளர்ச்சியைச் சாதிக்க ஒரு துவக்கம் செய்யப் பட்டது. இரண்டாம் திட்ட அறிக்கையின்படி "பல்வேறு பிராந்தியங்களிடையே இருந்துவரும் சமச்சீரில்லாத் தொழில் வளர்ச்சிப் பிரச்சினையை இரண்டாம் திட்டத்தில் தீர்க்க முடியவில்லை. ஆராய்ச்சி, தாதுப்பொருள் மதிப்பீடு, பரவலாக்கப் பட்ட உற்பத்தி, முக்கியமாக வேளாண்மைப் பொருள்களை சுத்தப் படுத்தும் (Processing Industries) தொழில்களின் மூலம் இப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமென்று ஆராயப் பட்டது. இதனால் வளர்ச்சியின் சீரான போக்கு தடைபடாமல் மேலோங்க வகை செய்யப்பட்டுள்ளது." [1]

மூன்றும் திட்டம் (1960-61—1965-66)

மூன்றும் திட்டமும் சமச்சீரான பிராந்திய வளர்ச்சியைச் சாதிக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியது. இத் திட்டத்தின் அறிக்கையில், "நாட்டின் பல்வேறு பகுதிகளில் சமச்சீரான வளர்ச்சி, வளர்ச்சி குறைந்த பகுதிகளுக்கும் பொருளாதார முன்னேற்றத்தின் பயன்களை விரிவாக்குதல் தொழிலைப் பரந்த முறையில் பரவலாக்குதல் ஆகியவைகள் திட்டமிட்ட வளர்ச்சியின் குறிக்கோள்களுள் பிரதானமானவை

1 இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், ப. 416.

களாகும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[1] ஆனால், சமச்சீரான பிராந்திய வளர்ச்சியை அடுத்துவரும் ஐந்தாண்டுத் திட்டங்களில் தான் சாதிக்க முடியும் என்றும் அறிவிக்கப்பட்டது.

வளர்ச்சிச் செயல்முறைத் திட்டங்கள் (Development Programmes)

மூன்றாம் திட்டக் காலத்தில் எல்லா அம்சங்களையும் உள்ளடக்கிய, பேரளவு வளர்ச்சியைச் சாதிக்கவேண்டுமென்று நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. நாட்டின் பல்வேறு பகுதிகளில் பரந்த வளர்ச்சி வாய்ப்புகளை அதிகரிக்க வகை செய்யப்பட்டது. பிற்பட்ட பகுதிகளை வளர்ச்சியடையச் செய்ய மாநிலத் திட்டங்களும் திருத்தி அமைக்கப்பட்டன. மாநிலத் திட்டங்களின் பணியோடுகூட, மத்திய அரசின் மூன்றாம் திட்டமும் வளர்ச்சி குறைந்த பகுதிகளை நன்மையடையத்தக்க வகையில் செயல் புரிந்தது. மாதிரியாக, தீவிர வேளாண்மை வளர்ச்சி, நீர்ப்பாசன விரிவாக்கம், கிராம, சிறு தொழில்களின் வளர்ச்சி, பேரளவு ஆக்கசக்தி அதிகரிப்பு, சாலைகள், சாலைப் போக்குவரத்து வளர்ச்சி, இரண்டாம் நிலைத் தொழில் நுட்பக் கல்வி, நீர் அளிப்புத் திட்டங்கள் போன்ற நடவடிக்கைகள் இத் திட்டத்தில் மேற்கொள்ளப்பட்டன. இத் திட்டத்தின் கிராமப் பணிகளின் பேரளவுச் செயல் முறைகளால் பிற்பட்ட பகுதிகளில் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. உள்ளூர் வளர்ச்சித் திட்டங்களை அமுலாக்கத் திட்டக்குழு மாநில அரசுகளுக்கு ரூ. 3·5 கோடியை அளித்தது.

தொழில் வளர்ச்சி

சில பிற்பட்ட பகுதிகளில் தொழில் வளர்ச்சியை மேம்படுத்த முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. எடுத்துக்காட்டாக, பொதுத் துறையில் ரோர்கேலா எஃகு ஆலையை விரிவாக்கல், உரத் தொழிற் சாலையை ஏற்படுத்தலால் ஒரிஸ்ஸா நன்மை பெறும் என்று கூறப்பட்டது. அதேபோல் கப்பல் கட்டும் தொழிலால் கேரளாவும், நெய்வேலி லிக்னைட் ஆலை, எஃகு ஆலையால் தமிழ்நாடும், விசாகப்பட்டினம் துறைமுகத்தால் ஆந்திராவும், சிமெண்டு ஆலையால் ஜம்மு—காஷ்மீரும் பயன் அடையும் என்று எதிர்பார்க்கப்பட்டது. தனியார் துறையிலும் பிற்பட்ட பகுதி களின் வளர்ச்சிக்கு வகைசெய்யப்பட்டது. மாதிரியாக அலுமினியம் ஆலையால் உத்திரப் பிரதேசம், உர ஆலை, நைலான் ஆலை, காஸ்டிக் உப்பு ஆலையால் ராஜஸ்தானும், செயற்கை ரப்பர், காகிதக் கூழ்

[1] மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டம், ப. 142.

ஆலையால் அஸ்ஸாமும், மோட்டார் வாகனங்களின் ஆலையால் கேரளாவும் பலனடையும் என்று கருதப்பட்டது.

ஒருங்கிணைந்த வளர்ச்சி

ஒவ்வொரு பிரதான வளர்ச்சித் திட்டமும் (Major Project) மையமாக அமைந்து (Nucleus) பிராந்தியங்கள் முழுவதிலும் ஒருங்கிணைந்த வளர்ச்சியை மேம்படுத்த வகைசெய்ய வேண்டுமென்று கூறப்பட்டது. ஒவ்வொரு பல்நோக்குத் திட்ட அமைப்பைச் (Multipurpose Project) சுற்றிலும் சீரான வேளாண்மை, சுத்தப் படுத்தும் தொழில் (Processing) மற்றத் தொழில்கள் வளர்ச்சியடையச் செய்யும் நோக்கோடு அநேக திட்டங்கள் தீட்டப் பட்டன. அதேபோல் எஃகு ஆலைகள் மற்றப் பேரளவுத் தொழில்கள் மையமாக அமைந்து சிற்றளவு, நடுத்தர அளவுத் தொழில்கள் வளர்ச்சியடையவும் கல்வி, பயிற்சி வசதிகள் அதிகரிக்கவும் வகை செய்யும்.

முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவுற்ற பின்பும் பிற்பட்ட பகுதிகளில் வாழ்ந்துவரும் மக்களுக்குக் குறிப்பிடத்தக்க நன்மைகள் கிடைத்ததாகத் தெரியவில்லை. திட்டமிட்ட வளர்ச்சியால் பிரதான தொழில் நகரங்களும், அதனைச் சுற்றியமைந்த பகுதிகளும் மட்டும்தான் பயனடைந்தன. பெரும்பாலான ஏழை மக்கள் இன்னும் பரிதாபத்துக்குரிய நிலையிலேயே இருக்கின்றனர். 1950-51க்கும் 1966-67க்கும் இடைப்பட்ட காலத்தில் மாநிலங்களிடையே வருமான ஏற்றத்தாழ்வுகள் பெருமளவில் மேலோங்கின. இக் காலத்தில் வளர்ச்சி குறைந்த மாநிலங்களின் தரவரிசை (Rank) மற்ற மாநிலங்களோடு ஒப்பிடும் போது மேலும் குறைந்தது. 1966-67-ல் பல்வேறு மாநிலங்களின் தலா வருவாய் பிராந்திய ஏற்றத் தாழ்வுகளை உணர்த்துகிறது. நடப்பு விலைகளில் 1966-67-ல் தலா வருவாய் ஆந்திரப் பிரதேசத்தில் ரூ. 449-ம் அஸ்ஸாமில் ரூ. 507-ம் உத்திரப் பிரதேசத்தில் ரூ. 423-ம், பீஹாரில் ரூ. 298-ம் மஹாராஷ்டிராவில் ரூ. 606-ம், மத்தியப் பிரதேசத்தில் ரூ. 399-ம் காணப்பட்டது. இவ்வாண்டில் தேசிய தலா வருவாய் (National Percaptia income) ரூ. 471 என்பது குறிப்பிடத்தக்கதாகும். வங்கிகளின் நிதி வளங்கள் பிற்பட்ட பகுதிகளிலிருந்து வளர்ச்சியடைந்த பகுதிகளுக்குப் பெயர்ச்சியடைகின்றன. 1967-ல் வங்கிகளின் நிதி (Banking Funds) பிற்பட்ட மாநிலங்களிலிருந்து அதிக வளர்ச்சியடைந்த மாநிலங்களுக்குத் தடையின்றிச் சென்றது. சமூகநலனை அதிகரிக்கும் பணிகள், திறனுடைய தொழிலாளர், வலுவான அடிப்படை அமைப்பு போன்ற புறச் சிக்கனங்களின் நன்மைகளைப் பெற்ற பிராந்தியங்களின் விரைவான வளர்ச்சியால் நாட்டில்

வளர்ச்சி வீதங்களில் (Growth rates) ஏற்றத்தாழ்வு அதிகரிக்கிறது. எனவே, ஆரம்ப வளர்ச்சி நடவடிக்கைகளோடு (Growth Process) கூடவே பிராந்திய ஏற்றத்தாழ்வும் உள்ளடங்கியுள்ளது.

நான்காம் திட்டம்

பிராந்திய ஏற்றத்தாழ்வுப் பிரச்சினை தீவிரமடைந்ததால் நான்காம் திட்டக் காலத்தில் திட்டக்குழு அதற்குத் தலையாய இடத்தை (Priority) அளித்தது. மக்களாட்சியின் அடிப்படையில் பிற்பட்ட மக்களுக்குக் குறைந்த பட்ச உரிமைகளையாவது தொடர்ந்து அளிக்கத் தவறினால், மிகத் தீவிரமான பிராந்திய ஏற்றத்தாழ்வு ஏற்படும் என்று அரசு தீர உணர்ந்தது. எனவே, பிற்பட்ட பகுதிகளின் பிரச்சினைகளை நன்றாய் ஆராய்ந்து அவைகளின் வளர்ச்சிக்கு வகைசெய்யச் சிலகுழுக்களும் அமைக்கப்பட்டன. 1968-ல், பிற்பட்ட பகுதிகளில் புதிய தொழில்கள் தோன்றும்படி ஊக்குவிக்க, குறித்த நடவடிக்கைகளைப் பரிந்துரைக்கத் தேசிய வளர்ச்சி சபை (National Development Council) வாஞ்சு குழுவை (Wanchoo Committee)ஏற்படுத்தியது. திட்டக்குழுவின் காரியதரிசியாகிய திரு. B. D. பாண்டே அவர்களைத் தலைவராகக் கொண்ட மற்றொரு குழு பிற்பட்ட பகுதிகளைக் கண்டறியும் பிரச்சினையில் ஈடுபட்டது.

வாஞ்சு குழுவின் பரிந்துரைகள்

திரு. N. N. வாஞ்சு, தொழில் வளர்ச்சி அமைச்சரகத்தின் செயலாளர். இவரைத் தலைவராகக் கொண்ட குழு பிற்பட்ட பகுதிகளில் தொழில்கள் தோன்றுவதை ஊக்குவிக்க ஏராளமான கருத்துகளைப் பரிந்துரைத்தது.

முதலாவதாக, பிற்பட்ட பகுதிகளில் தொழில்கள் தான்ற அரசு சலுகையான வீதங்களில் நிரந்தரச் சொத்துகளை (Fixed Assets) அளிக்கவேண்டும். வெளிநாட்டுச் செலாவணியை ஒதுக்கீடு செய்வதில் இத் தொழில்களுக்கு முதலிடம் அளிக்க வேண்டும். அதிக வளர்ச்சிக் கழிவு (Rebate), வருமான வரி சுங்கவரி, விற்பனை வரிகளிலிருந்து ஐந்து ஆண்டுகளுக்கு விலக்கு, இறக்குமதி வரிகளைச் செலுத்துவதிலிருந்து விலக்கு போன்ற பல்வேறு வகையான வரி ஊக்கிகளை (Fiscal Incentives) அளிக்க வேண்டும்.

இரண்டாவதாக, சில வரவேற்கப்பட்ட பகுதிகளில் புதிய தொழில் அமைப்புகளோ அல்லது இருக்கும் தொழில்களின் பெருக்கமோ தோன்றுவதற்கு உரிமங்கள் அளிக்கலாகாது என்றும் அக் குழு பரிந்துரைத்தது. பம்பாய், கல்கத்தா, டெல்லி,

தமிழ்நாடு ஆகிய மாநில அரசுகள் தொழில் நிறுவனங்களுக்கு மின்சக்தியளிப்பதை தடுத்தோ அல்லது தண்ணீர், மின்சக்தியின் மேல் வரியை அதிகப்படுத்தியோ, இடநெருக்கடியான பகுதிகளிலிருந்து நூறு மைல் சுற்றளவு வரைக்கும் தொழில் அமைப்புகள் பரவுவதற்கு ஊக்கவிக்க வேண்டும்.

மூன்றுவதாக, பிற்பட்ட பகுதிகளில் வளர்ச்சி பெற்ற மனைகள் (Plots), இயந்திரம், மற்ற சாதனங்கள், தொழில் துணிவோருக்குச் சலுகையான கட்டண வீதங்களில அளிக்கப்பட வேண்டும். ஆலைகளைக் கட்டுவதற்கு வளர்ச்சியடைந்த மனைகளைக் கடன் தவணை முறையில் அளிக்கவேண்டும். சாதாரண சலுகைகளுக்கு மேற்பட்ட சலுகைகளை, எந்திரம், அமைப்புகள், ஆகியவைகளைத் தொழில் துணிவோர்கள் பெறுவதற்கு வகைச் செய்ய வேண்டும்.

நான்காவதாக, ஜம்மு, காஷ்மீர், அஸ்ஸாம், நாகாலாந்து, மணிப்பூர் ஆகிய மாநிலங்களில் 400 மைல்களுக்கு மேற்பட்டு எடுத்துச் செல்லப்படும். வினை முடிந்த பொருள்களின் போக்குவரத்துக்கு 50% சதவிகித போக்குவரத்து உதவிக் கொடையை அளிக்கவேண்டும் என்று பரிந்துரைக்கப்பட்டது.

கடைசியாக மாநிலங்களுக்கு இயற்கை வளங்களை வளர்ச்சியடையச் செய்யும் நடவடிக்கைகளை மேற்கொள்ள நிதி உதவி அளிக்க வேண்டுமென்றும் அறிவுறுத்தப்பட்டது. தொழில், வேளாண்மை வளர்ச்சிக்குப் பெருந்துணை புரியும் நீர்ப்பாசனம், ஆக்கசக்தி போன்ற சமூக நலன் அமைப்புகளை (Infrastructure) ஏற்படுத்தவும் நிதிவசதியளிக்க வேண்டுமென்று கூறப்பட்டது. பிற்பட்ட பகுதிகளில் தொழில் வளர்ச்சியை அதிகரிக்கப் போதுமானசலுகைகளை அளிக்க வேண்டுமென்று கூறப்பட்டது. பிராந்தியங்களில் கிடைக்கும் மூலப் பொருள்கள், உள்ளூரிலும், வெளியிலும்வினை முடிந்த பொருள்களின் உற்பத்தி, விற்பனை ஆகியவைகளைப் பொறுத்துதான் பிற்பட்ட பகுதிகளில் வளர்ச்சி அமையும்.

பாண்டே குழுவின் பரிந்துரைகள்

திரு. பாண்டே (B. D. Pande) அவர்களைத் தலைவராகக் கொண்ட குழு பிற்பட்ட மாநிலங்கள் பிற்பட்ட மாவட்டங்களைத் தீர்மானிக்கப் பல தரப்பட்ட விதிமுறைகளை ஏற்படுத்தியது. அதன்படி ஆந்திரப்பிரதேசம், பீஹார், மத்தியப்பிரதேசம், ஒரிஸ்ஸா, இராஜஸ்தான், உத்திரப்பிரதேசம், அஸ்ஸாம், ஜம்மு-காஷ்மீர், கோவா, ஹிமாசலப் பிரதேசம், மணிப்பூர், திரிபுரா, நாகாலாந்து ஆகியவைகள் பிற்பட்ட பகுதிகளாகப் பிரிக்கப்

பட்டன. வளங்கள் வீணாக்கப்படுவதைத் தவிர்க்கப் பிற்பட்ட பகுதிகளின் வளர்ச்சியைத் தேர்ந்தெடுத்த பகுதிகளில் மட்டும் மேற்கொள்ள வேண்டும். சில தேர்ந்தெடுக்கப்பட்ட பிற்பட்ட பகுதிகளில் தொழில்களைப் பரவலாக்க வேண்டும் என்று இக் குழு பரிந்துரைத்தது. பிற்பட்ட மாநிலங்களில் உள்ள பின் தங்கிய மாவட்டங்களைக் கண்டறியவும் சில விதிமுறைகளை இக் குழு எடுத்துக் கூறியது. இப் பிற்பட்ட பகுதிகளில் பெரிய திட்டங்களை மேற்கொள்ளுவதைக் காட்டிலும் சிற்றளவு, நடுத்தர, திட்டங்களை வளர்ச்சியடையச் செய்யவேண்டுமென்றும் அறிவுறுத்தப்பட்டது. நான்காம் திட்ட அறிக்கையில், "சமச்சீரான பிராந்திய வளர்ச்சியும் பரவலான பொருளாதார நடவடிக்கையும், ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புள்ளவைகளாய் உள்ளன" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. சமூக நலனை மேம்படுத்தும் அமைப்பின் வளர்ச்சிக்குத் தக்கபடி வளர்ச்சியும், பரவலாக்கப்பட்ட பொருளாதார நடவடிக்கையும் அமையும் என்று திட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. பிராந்திய ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க அரசு ஏராளமான கொள்கைகளையும், விதிமுறைகளையும் வகுத்தும் இந் நான்காம் திட்டக் காலத்தில் இப் பிரச்சினை மீண்டும் மேலோங்கி நிற்கும் என்று கருதப்படுகிறது.

நிதிச் சலுகை

பல்வேறு மாநிலங்களின் வளர்ச்சி குறைந்த பகுதிகளில் தொழில் வளர்ச்சியை வேகப்படுத்த ஜூலை 1971-ல் 'இந்தியத் தொழில் நிதிக்கழகம்' (I. F. C.) ஒரு திட்டத்தை நடைமுறைப் படுத்த முன்வந்தது. அதன்படி இப் பகுதிகளில் சிறிய, நடுத்தர அளவு தொழில் நிறுவனங்களை ஏற்படுத்தச் சலுகையுள்ள கடன்களைக் (Soft loans) கொடுக்கத் தீர்மானித்துள்ளது. 8.5 சதவீத வட்டிக்குப் பதிலாக 7.5 சதவிகித வட்டியும், மூன்றாண்டுகளுக்குப் பின் திரும்பச் செலுத்தவேண்டிய கடன்களை ஐந்து ஆண்டுகளுக்குப்பின் திரும்பிச் செலுத்த ஆரம்பிக்கவும் சலுகைகள் வழங்கப்படும்.

## முடிவுரை

பிராந்திய வளர்ச்சி நடவடிக்கைகளை அமுலாக்கும் போது பல்வேறு பிரச்சினைகள் தோன்றுகின்றன. அப் பிரச்சினைகளைத் தீர்க்கப் பல்வேறு வகையான ஒருங்கிணைந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். பிராந்தியங்களின் வளர்ச்சியும், தேசிய பொருளாதார வளர்ச்சியும், ஒற்றை நடவடிக்கைளின் பகுதிகளாகக் கருதப்பட வேண்டும்.

தற்போதைய நிலையில் குறித்த சில பிராந்தியங்களின் பிரச்சினைகளுக்குமட்டும் முக்கியத்தும் அளிப்பது சிறந்ததாகாது. பல்வேறு பிராந்தியங்கள் தங்களை நாட்டின் ஒருங்கிணைந்த பகுதிகளாகக் கருதி தங்கள் முழு ஆக்கச் சக்தியை உணரவேண்டும். தேசியப் பொருளாதாரம் முன்னேற்றமடையும் போது மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்வு பெறும். இத்தகைய சூழ்நிலையில் பிராந்திய வளர்ச்சியும் சிறப்பாக உருவாகும். ஏற்கெனவே வளர்ச்சியடைந்த வழிகளில் மேலும் தொடர்ந்து பணிபுரிந்து பிற்பட்ட பிராந்தியங்களின் இயற்கை வளங்களைப் பயன்படுத்த நிலையான முயற்சி தேவை. இதற்கு வரி ஊக்கிகள் (Tax incentives) 'டானிக் விளைவை' ஏற்படுத்த வல்லவைகளாகும்' மேலும், செழிப்பான மாநிலங்கள் பின் தங்கிய மாநிலங்களின் வளர்ச்சிக்கு ஒரு வழிமுறையை (Formulae) ஏற்படுத்தி அதனடிப்படையில் சிறிது நிதிவசதியை அளிக்க வேண்டும். இத் தொகை பிராந்திய வளர்ச்சியைச் சமப்படுத்தும் நிதியில் (Stabilisation Fund) சேர்க்கப்பட வேண்டும். இந் நிதிக்கு மத்திய அரசும் மானியத் தொகை அளிக்கவேண்டும். இந் நிதியைச் சிறப்பாகப் பயன்படச் செய்ய ஒரு பிராந்திய வளர்ச்சிக் குழுவும் அமைத்தல் நலம் பிராந்திய ஏற்றத்தாழ்வுகளை நீக்க இக் குழு குறிப்பிட்ட திட்டங்களைப் பரிந்துரைக்கும்.

# 58. வளர்ச்சியும் வருமான ஏற்றத் தாழ்வுகளும்

## (Growth and inequalities of Income)

பொருளாதார வளர்ச்சி நடவடிக்கை முறையை (Process of Economic Growth) ஏற்கெனவே வேருேர் அத்தியாயத்தில் ஆராய்ந்துள்ளோம். வளர்ச்சி முறையை வேகப்படுத்த இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களில் பெருமுயற்சி மேற்கொள்ளப்பட்டது. பல்வேறு சமூக வளங்களைப் பயன்படுத்தி உற்பத்தி, வருவாய், வேலைவாய்ப்பு எல்லோருக்கும் சரிசமமான முறையில் அதிகரிக்கச் செய்யவும் தகுந்த திட்டம் தீட்டப்பட்டது. பல்வேறு சமுதாய, பொருளாதார, அரசியல் அமைப்புகளில் காணப்பட்ட குறைகளால் வேலைவாய்ப்பு வருவாய் ஆகியவைகளின் பற்றுக்குறை இடைவெளி அதிகரித்தது. இதனுல் சரிசமமான வருவாய், செல்வம், பொருளாதார சக்தி வாய்ப்புகளின் பங்கீடு இன்னும் நாட்டில் ஏற்படவில்லை. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியால் பயனடைந்தோர் சாதாரண மக்களா, செல்வந்தர்களா? ஏழை மக்களின் வாழ்க்கைத்தரம் கணிசமான அளவு உயர்ந்ததா? வருமான ஏற்றத் தாழ்வுகள் நெடுநாளாக நீடித்துக் கொண்டிருக்கின்றனவா? செல்வம், பொருளாதார சக்தி ஒரு சிலரிடமே குவிந்துகொண்டே இருக்கின்றனவா? என்ற விஞக்கள் பொருளாதார வளர்ச்சிக் கட்டங்களிலே சாதாரணமாகத் தோன்றுபவைகளாகும். இவ் விஞக்களின் தக்க விடையை இப் பகுதியிலே ஆராயலாம். பொருளாதார வளர்ச்சியின் வேகம் அதிகரித்துவரும் கட்டங்களில் ஏற்றத்தாழ்வுகள் சிலகாலம் அதிகரிப்பது இயற்கை என்று வளர்ச்சிப் பொருளியல் அறிஞர்கள் கருதுகின்றனர். ஆனுல், வெகுவிரைவாகச் சமதர்ம சமுதாயத்தை மக்களாட்சியின் அடிப்படையில் அடைய வேண்டுமென்று குரல் எழுப்பிச் சூளுரைத்து முயன்றுவரும் ஒரு சமுதாயத்திற்கு இக் கருத்து பெரும் ஏமாற்றத்தையும், குழப்பத்தையுமே உண்டுபண்ணும். இன்றுள்ள நிலையில் ஏற்றத் தாழ்வும், வேலையின்மையுமே தீவிர தீராப் பிரச்சினைகளாக உள்ளன.

மேற்கண்ட சூழ்நிலையில் திட்டக் காலத்தில் வருவாய், செல்வம், வாழ்க்கைத்தரம் ஆகியவைகளின் பங்கீட்டில் ஏற்பட்ட மாறுதல்களை இனி ஆராயலாம். பொருளாதார சக்திக் குவிப்பு பற்றிய விளக்கமும், அவற்றைக் கட்டுப்படுத்தும் முறைகளும் அடுத்த அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ளன.

வருவாய்ப் பங்கீடு (Distribution of Income)

வருமான ஏற்றத்தாழ்வுகளைப் பற்றிய விவாதம் இந்தியாவில் நெடுநாள்களாகவே இருந்து வருகிறது. ஏற்றத் தாழ்வின் சரியான அளவை மதிப்பிட அவ்வப்போது பல ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்ட போதும் துல்லியமான முடிவுகளைப் பெற முடியவில்லை. கணக்கெடுப்பு முறையிலும், உள்ளடக்கும் பகுதிகளிலும் வேறுபாடுகள் இருப்பதால் வருமானப் பகிர்வைப் பற்றிய ஓர் உறுதியான முடிவுக்கு வரமுடியவில்லை. திட்டக் காலத்தின் முதல் பத்தாண்டுகளில் ஏற்பட்ட வருமான, வாழ்க்கைத்தரப் பகிர்வை ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டது. வருமான வாழ்க்கைத்தரப் பங்கீட்டின் குழு, இந்தியாவில் வருமான ஏற்றத் தாழ்வுகள் பெருமளவில் இருப்பதாக மதிப்பிட்டுள்ளது. கீழ்க் காணும் அட்டவணை சமமில்லா வருமானப் பங்கீட்டின் அடிப்படை விவரங்களை காட்டுகிறது.

(அட்டவணை பக்கம் 485 பார்க்க)

ஆதாரங்கள் 1. H. F. லிடால் (Lydall) இந்திய வருவாயின் ஏற்றத்தாழ்வு, பொருளாதார வாரச் சிறப்பு வெளியீடு ஜுன் 1960.

2. N. S. ஐயங்கார், M. முகர்ஜி. 'இரண்டாம் கணக்கியல் பொருளாதார (Econometric) மாநாட்டில் சொற்பொழிவு' ஜுன், 1961.

3. P. D. ஓஜா, V. V. பட். (P. D. Ojha and V. V. Bhatt) 'இந்தியப் பொருளாதாரத்தில் வருவாய்ப் பங்கீடு' இந்திய ரிசர்வ் வங்கியின் வெளியீடு-செப்-1962.

4. தே. ந. பொ. ஆ. ச. (N. C. A. E. R.) 'நகர வருவாயும் சேமிப்பும்' (டெல்லி, 1962)

1955-56-ல் லிடாலின் மதிப்பீட்டில் மொத்தக் குடும்பங்களில் கீழ்நிலையில் உள்ள இருபது சதவிகிதத்தினர் மாத தலா வருவாயில் 9·5 சதவிகிதத்தை மட்டும்தான் பங்கிட்டுக் கொள்கின்றனர். மேல் நிலையில் உள்ள 5 சதவிகிதத்தினர் 23 சதவிகிதத்தைப் பங்கிட்டுக் கொள்கின்றனர். அடுத்து மேலுள்ள பத்து சதவிகிதத்தினர் 34 சதவிகித வருவாயையும்

### தனி நபர் வருவாய்ப் பங்கீட்டின் நிலைமை: பல்வேறு காலங்களில்

| வருமான வகுப்பு களின் பிரிவு (சதவீதங்களில்) | இந்திய ரிசர்வ் வங்கியின் மதிப்பீடு 1953-54 முதல் 1956-57 வரை | | N.S. ஐயங்கார், முகர்ஜியின் மதிப்பீடு | | லிடால் மதிப்பீடு | தேசிய நடைமுறைப் பொருளாதார ஆய்வு சபையின் மதிப்பீடு 1960 | |
|---|---|---|---|---|---|---|---|
| | கிராமப்புற | நகர | 1952-53 | 1956-57 | 1955-56 | கிராமப் புற | நகர |
| 95-100 | 17·0 | 26·0 | 14·0 | 17·5 | 23·0 | — | 31·0 |
| 90-100 | 25·0 | 37·0 | 24·0 | 25·0 | 34·0 | 33·6 | 42·4 |
| 50-900 | 44·0 | 38·0 | — | — | 41·0 | 45·7 | 40·6 |
| 0- 20 | 9·0 | 7·0 | 7·5 | 8·5 | 9·5 | 4·0 | 4·0 |

பெற்றனர். 1956-57-ல் N. S. ஐயங்கார், முகர்ஜி மதிப்பீட்டில் மேற்கண்டபடி முறையே 8·5 சதவிகிதம், 17·5 சதவிகிதம், 25 சதவிகிதம் வருமானம் பங்கிட்டுக் கொள்ளப்பட்டது. இந்திய ரிசர்வ் வங்கியின் மதிப்பீடும், லேடால் மதிப்பீடும் ஏறக்குறைய ஒன்றாய் வருகிறது. அதாவது, மேல் நிலையில் உள்ள 5 சதவிகிதத்தினருக்கும், கீழ்நிலையில் உள்ள 20 சதவிகிதத்தினருக்கு மிடையே உள்ள வருமான ஏற்றத்தாழ்வு மேற் குறிப்பிட்டுள்ள இரு மதிப்பீடுகளிலும் ஒன்றாய் உள்ளது. மேலும், கிராம நகர வருவாய் மதிப்பீடுகள், கிராமத் துறையைக் காட்டிலும் நகரத் துறையில் வருமானப் பங்கீட்டில் அதிகமான ஏற்றத்தாழ்வு இருக்கிறது என்பதை உணர்த்துகிறது.

வரி செலுத்தும் வருவாய் பெறுவோருக்கும், வரி செலுத்தா வருவாய் பெறுவோருக்குமிடையே உள்ள வருமானப் பங்கீட்டை மஹாலனோபிஸ் குழு ஆராய்ந்தது. 1951-52 லிருந்து 9 ஆண்டு களுக்கான ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. 1951-54 க்கும் 1954-57க்கும் இடைப்பட்ட கால ஒப்பீட்டில் வரி செலுத்தும் வகுப்பினருக்கு வருவாயில் மிகச் சிறிய மாறுதலே ஏற்பட்டது. ஆனால், 1957-60க்கும் இடைப்பட்ட காலத்தில் வரி செலுத்தும் வகுப்பினருக்கு வருவாய் கணிசமாக அதிகரித்தது.

## சமீபத்திய வருமானப் பங்கீட்டு ஆய்வு

விடுதலைக்குப் பின்பு மூன்றும் ஐந்தாண்டுத் திட்டக் கால இறுதி வரைக்குமான காலத்தில் வருவாய்ப் பங்கீடு மதிப்பிடப் பட்டது. மத்திய புள்ளிவிவர நிறுவனத்தின் தேசிய வருவாய் விவரங்களைப் பயன்படுத்தி இந்த ஆய்வு வருமானப் பங்கீட்டை மதிப்பிட்டது. முதலாவதாக நான்கு பெருந்துறைகள், தொழிலாளர்களின் தொழில் ரீதியான பங்கீடு ஆகியவைகளைப் பற்றிய உண்மைத் தேசிய வருவாய் கணக்கிடப்பட்டது. சராசரியாகக் கணக்கிடப்பட்ட மதிப்பீட்டில் துறைகளுக்கிடையே ஏற்றத்தாழ்வு இருப்பது உணரப்பட்டது. திட்டக் காலத்திற்கு முன்பிருந்த தொழில்களுக்கிடையேயான ஏற்றத் தாழ்வுகளை விட 15 ஆண்டு திட்டக் காலத்தில் ஏற்றத்தாழ்வு பொதுவாக அதிகமாயிருந்தது. மேலும், 1954-55, 1955-56 ஆகிய ஆண்டு களில் ஏற்றத்தாழ்வு மிகவும் தீவிரமாக இருந்தது. பொதுவாக திட்டத்தின் முதல் பத்தாண்டுகளில் ஏற்றத்தாழ்வு ஓரளவு நிலையாக இருந்தது. ஆனால், மூன்றும் திட்டக் காலத்தில் இது அதிகரித்தது.

வருமானப் பங்கீட்டின் ஏற்றத்தாழ்வுகள், சேமிப்பு வீதம், மொத்த நுகர்வுச் செலவு ஆகியவைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. 1953-54க்கும் 1955-56க்கும் இடைப்பட்ட காலத்தில் சேமிப்பு வீதம் பெரிதும் அதிகரித்தது. அதன்பின் அத்தகைய அதிகரிப்பு ஏற்படவில்லை. நுகர்வுச் செலவு (Consumption Expenditure) விவரங்களின் அடிப்படையில் துறைகளுக் கிடையே உள்ள ஏற்றத்தாழ்வு (Inter-sectoral disparity) கீழ்க்கண்ட பட்டியலில் விளக்கப்பட்டுள்ளது.

## வகுப்புகளிடையே குடும்ப நுகர்வுச் செலவுகளின் ஏற்றத் தாழ்வு

(Inter-class disparity of Household Consumption Expenditure)

| துறைகளுக்கிடையே உள்ள ஏற்றத் தாழ்வுகளின் அளவு | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| காலவரையறை | நடப்பு விலைகளில் | | | மாறு விலைகளில் | | |
| | கிராம | நகர | அனைத்திந்திய | அனைத்திந்திய | கிராம | நகர |
| முதல் திட்ட சராசரி | 0·246 | 0·275 | 0·258 | 0·246 | 0·235 | 0·282 |
| இரண்டாம் திட்ட சராசரி | 0·232 | 0·266 | 0·243 | 0·265 | 0·248 | 0·289 |
| மூன்றும் திட்ட சராசரி | 0·222 | 0·258 | 0·238 | 0·276 | 0·239 | 0·282 |

ஆதாரம்: பொருளாதார அரசியல் வார வெளியீடு, ஜூலை-15-1967 பக்கம்-1266.

மேற்கண்ட விவரங்களிலிருந்து, ஆராயப்பட்ட ஒன்பது ஆண்டுகளில் கிராம, நகர, அனைத்திந்திய நுகர்வுச் செலவுப் பங்கீட்டில் (Distribution) ஏற்றத்தாழ்வு நடப்பு விலைகளில் குறைந்துள்ளது. இரண்டாம் மூன்றும் திட்டக் காலத்தில் நகர, கிராம நுகர்வுச் செலவில் உண்மை வீதத்தில் ஏற்றத்தாழ்வு நிலையாக இருந்தது. பொதுவாக, நகர, கிராமப் பகுதிகளில் உண்மை வீதத்தில் (real terms) வருமான ஏற்றத்தாழ்வுகள் அதிகமாக இருந்தன. ஆனால், தேசிய மட்டத்தில் ஏற்றத்தாழ்வு

அதைவிட மிகவும் அதிகமாக இருந்தது. ஏனெனில் நகர, கிராமப் பகுதிகளுக்குள் உள்ள நுகர்வுச் செலவுப் பகிர்வு நிலையாக உள்ளது. ஆனால், தேசிய மட்டத்தில் உள்ள அந் நுகர்வுச் செலவில் பெரும் ஏற்றத்தாழ்வு காணப்பட்டது. குறிப்பாக 1953-54க்குப் பின் தனிநபர் வருவாயில் ஏற்றத்தாழ்வு அதிகரித்துள்ளது. ஒருநபர் உண்மை நுகர்வுச் செலவு கணிசமாக உயராததால், ஏழைமக்களின் வாழ்க்கைத் தரம் மாற்றமடையாமலோ அல்லது சீர்கேடடைந்தோ இருப்பதை உணரலாம்.[1]

வளர்ச்சி குறைந்த, வளர்ந்த நாடுகளில் ஏற்றத்தாழ்வு

மேற்கண்ட ஆய்விலிருந்து இந்தியப் பொருளாதார முறையில் வருமான ஏற்றத்தாழ்வுகள் வெகுவாக அதிகரித்து வருவதை உணரலாம். மற்ற வளர்ச்சி குறைந்த நாடுகளிலும் இந்தியாவி விருப்பதைப் போலவே ஏற்றத் தாழ்வுகள் இருப்பதாக, பேராசிரியர் சைமன் கஜ்னட் (Simon Kujnets) குறிப்பிடுகிறார். இதனால் உலகிலுள்ள முன்னேறிய நாடுகளைக் காட்டிலும் வளர்ச்சி குறைந்த நாடுகளில் வருமான ஏற்றத்தாழ்வு அதிகமாக இருப்பதாகவும் அவர் கருதுகிறார். இந்தியாவில் ஏற்றத்தாழ்வு இருப்பது உண்மையெனினும் பேராசிரியர் கஜ்னட் அவர்களின் பொதுமை விவாதத்திற்குரியதாகும். திரு. P. D. ஓஜா, V. V. பட் ஆகியவர்களின் ஆய்வு திரு. கஜ்னட் அவர்களின் கருத்துக்கு மாறாக உள்ளது. ஓஜா-பட் ஆய்வு (Ojha-Bhatt Study) சில முன்னேறிய நாடுகள் தங்கள் வளர்ச்சி குறைந்த கட்டங்களில் பெற்றிருந்த வருமான ஏற்றத்தாழ்வு தற்போது இந்தியாபோன்ற வளர்ச்சி குறைந்த நாடுகள் பெற்றிருக்கும் ஏற்றத்தாழ்வைவிட மிக அதிகமாக இருந்தது என்ற உண்மையைப் புள்ளி விவரங்களுடன் சிறப்பாகத் தெளிவு படுத்துகிறது.[2] எனவே, பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் அதிக ஏற்றத்தாழ்வுகள் தோன்றுவது தவிர்க்க முடியாதது என்பது உண்மையாகும். ஒரு குறித்த பொருளாதார வளர்ச்சிக் கட்டத்திற்குப் பின்தான் வருமான சமநிலை தானாகவே ஏற்படுகிறது.

வாழ்க்கைத் தரம் (Levels of Living)

உண்மை தலா வருவாயைக் காட்டிலும், மக்கள் அனுபவித்து வரும் வாழ்க்கைத் தரம்தான் அவர்கள் பெற்றுள்ள நலனைத்

[1] M. முகர்ஜி, G. S. சாட்டர்ஜி,'தேசிய வருவாய்ப் பங்கீட்டின் போக்கு, பொருளாதார, அரசியல் வார வெளியீடு, ஜூலை 15, 1967, ப. 1259-68.

[2] P. D. ஓஜா, V. V. பட், "ஒரு வளர்ச்சி குறைந்த பொருளாதாரத்தில் வருவாய்ப் பகிர்வுப் போக்கு. இந்தியாவைப் பற்றிய ஓர் ஆய்வு.' அமெரிக்கப் பொருளாதார வெளியீடு. செப், 1964, ப. 711-720.

தெளிவாகப் பிரதிபலிக்கும் காலக் கண்ணுடியாக விளங்குகிறது. உண்மைத் தலா நுகர்வுச் செலவின் அடிப்படையில் அமையும் வாழ்க்கைத் தரம் மக்களின் நுகர்வுத் தரத்தை (Standards of Consumption) உணர்த்தத் துணை புரிகிறது. வாழ்க்கைத் தரத்திலேற்படும், மாற்றங்கள் நுகர்வுப் பாங்கிலேற்படும் மாற்றத்தை விளக்கி மக்கள் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்றுள்ளனரா என்பதையும் விளக்கும். உயர்ந்து செல்லும் நுகர்வுத் தரத்தைப் பெற்றுள்ள சமுதாயம் அதிகரிக்கும் வருமானத்துடன் சிறந்த நலனைப் பரவலாகப் பெறும் என்பது உண்மையாகும். இந்தியச் சூழ்நிலையில் மக்கள் பெற்றுள்ள வாழ்க்கைத் தரத்தை அறிய இரு முக்கிய அம்சங்களை ஆராய வேண்டும்.

அவைகளாவன: 1. நுகர்வுச் செலவின் போக்கு
2. சமீப கால நுகர்ச்சி முறையில் உள்ள மாற்றம்.

இந்தியாவில் நுகர்வுச் செலவு (Consumer expenditure in India)

கீழ்க்காணும் அட்டவணை நடப்பு விலைகளில் தலா நுகர்வுச் செலவினை விளக்குகிறது.

### தலா நுகர்வுச் செலவு

| தேசிய மாதிரிக் கணக்கீட்டின் கட்டங்கள் | காலவரையறை | மாதாந்திர தலா செலவு (ரூபாய்களில்) | |
|---|---|---|---|
| | | கிராம | நகர |
| 1 | — | — | கிடைக்கவில்லை |
| 2 | ஏப்ரல்'51—ஜூன்'51 | 2·476 | — |
| 3 | ஆகஸ்டு'51—நவம்பர்'51 | 24·64 | 35·13 |
| 4 | எப்'52—செப்டம்பர்'52 | 21·57 | 33·93 |
| 5 | டிசம்பர்'52—மார்ச்'53 | 19·81 | 29·92 |
| 6 | மே'53—செப்'53 | 21·31 | 30·35 |
| 7 | அக்'53—மார்ச்'54 | 17·24 | 23·88 |
| 8 | ஜூலை'54—மார்ச்'55 | 14·96 | 24·69 |
| 9 | மே'55—நவம்'55 | 15·20 | 23·69 |
| 10 | டிசம்'55—மே'56 | 17·61 | 25·24 |
| 15 | ஜூலை'59—ஜூன்'60 | 20·03 | 27·51 |
| 18 | பிப்'63—ஜனவரி'64 | 22·31 | 32·96 |

ஆதாரம்: தேசிய மாதிரிக் கணக்கீடு, (National Sample Survey) 'பல்வேறு கட்டங்களில்' (Different Rounds)

முதல் பத்துக் கட்டங்கள் ஏறக்குறைய முதல் திட்டக் காலப் பகுதியோடு ஒட்டி வருகின்றது. இக் காலத்தில் கிராமக் குடும்பங் களின் தலா நுகர்வுச் செலவு 1951-ல் ரூ. 24·76 லிருந்து 1956-ல் ரூ. 17·61 ஆகக் குறைந்தது. நகர குடும்பங்களின் செலவு ரூ. 35·13 லிருந்து ரூ. 25·24 ஆக குறைந்தது. அதாவது 36·5 சதவிகிதம், 28·1 சதவீதமாக முறையே குறைந்தது. 15வது, 18வது கட்டங்கள் இரண்டாவது, மூன்றாவது திட்டக்காலப் பகுதியை ஒட்டி வருகின்றன. இக் காலத்தில் ஓரளவு சீரமைப்புக் காணப்பட்டாலும் மூன்றாம் கட்டத்தில் இருக்கும் நிலையைவிடச் சீரமைப்பு குறைவாகவே உள்ளது. மேலும், உண்மையளவுப்படி (Real terms) இச் சீர்திருத்தம் மிகக் குறைவாகவே இருக்கும். இரண்டாம், மூன்றாம் திட்டக் காலத்தில் ஏற்பட்ட விலை ஏற்றம் மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பெருமளவில் பாதித்தது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். மேலும், இந்தியாவில் மொத்த மக்கட் தொகையில் சுமார் பாதிக்கு மேற்பட்டவர்கள் மொத்த நுகர்வுச் செலவில் கால் பங்குக்கு மேல் செலவிட்டனர்.

நுகர்ச்சிப் போக்கு (Consumption Patterns)

நுகர்ச்சிப் பாங்கு, குறித்த சில நுகர்வுப் பொருள்களாகிய இன்றியமையாத உணவு (Protective food), உணவில்லாத மற்றவகைப் பொருள்கள் (Non food) போன்ற பொருள்களில் பிரதிபலிக்கிறது. வாழ்க்கைத் தரத்தை அளவிடத் தலா நுகர்வுச் செலவு ஒரு புகழ்பெற்ற அளவு கோலாக இருந்தபோதிலும் அது நுகர்வுப் பாங்கைத் தெளிவாக உணர்த்த இயலவில்லை. அதிகரிக்கும் தலா நுகர்வுச் செலவுடன் இன்றியமையா உணவு, ஆடை, மருந்துகள், வேறுவகைப் பொருள்களின் அதிக அளவு உபயோகம் ஏற்படும் என்று உறுதியாகக் கூறமுடியாது. குறித்த காலத்தில் நுகர்வுப் பாங்கின் மாற்றத்தால் வாழ்க்கைத் தரம் உயரலாம். இதை அறிவதற்குத் தக்க கருவியாக விளங்குவது நுகர்வுச் செலவின் போக்காகும். இதிலேற்பட்ட சமீபத்திய மாற்றங்களைக் கீழ்க் காணும் அட்டவணை விளக்குகிறது. அதாவது, வகை வாரியாக மொத்தச் செலவில் நுகர்வுச் செலவின் சதவீதத்தைக் கீழ்க்காணும் விவரங்கள் உணர்த்துகின்றன.

(அட்டவணை பக்கம் 491 பார்க்க)

மேற்கண்ட அட்டவணையிலிருந்து கிராமப் பகுதிகளில் உணவுப் பொருள்களின் நுகர்வுச் செலவு சதவீதத்தில் ஏறக்குறைய மாறுமல் ஒரே நிலையில் இருந்தது என்பது தெரியவரும். ஆனால், தொடர்பிலா (absolute) தலா மாதச் செலவு 1959-60-ல் ரூ. 14·05 லிருந்து 1963-64ல் ரூ. 15·67 ஆக அதிகரித்தது. இதற்கு மாறாக நகரப் பகுதிகளில் உணவுக்கான செலவு தொடர்பிலா

## நுகர்வுச் செலவில் மாற்றங்கள்
(Shifts in consumer expenditure)

| | 15வது கட்டம் ஜூலை'59—ஜூன்'60 | | | | 18ஆம் கட்டம் பிப்'63—ஜன'64 | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| பிரிவு வகைகள் | கிராம | | நகர | | கிராம | | நகர | |
| | ரூபாய்கள் | % | ரூபாய்கள் | % | ரூபாய்கள் | % | ரூபாய்கள் | % |
| எல்லாவகை உணவுகள் | 14·05 | 70·14 | 16·89 | 61·40 | 15·67 | 70.25 | 19.65 | 59.62 |
| உணவில்லா மற்ற எல்லா வகைப் பொருள்கள் | 5·98 | 29·86 | 10·62 | 38·60 | 6·64 | 29·75 | 13·31 | 40·38 |
| மொத்தச் செலவு | 20·03 | 100·00 | 27·51 | 100·00 | 22·31 | 100·00 | 32·96 | 100·00 |

ஆதாரம் : தேசிய மாதிரிக் கணக்கீட்டுக் கட்டங்கள்.

அளவு (Absolute terms) சதவீதங்களில் குறைந்தது. அதாவது அதே காலத்தில் அது 61·4 சதவீதத்திலிருந்து 59·62 சதவீதமாகக் குறைந்தது. கிராமப் பகுதிகளில் உணவில்லாத வேறு பொருள்களில் செலவு தொடர்பிலா அளவில் அதிகரித்த போதிலும் உண்மையில் அதே காலத்தில் ரூ. 29·86 லிருந்து ரூ. 29·75 ரூபாயாகக் குறைந்தது. 15வது, 18வது கட்ட காலத்தில் நகரப் பகுதிகளின் உணவல்லாத வேறு பொருள்களுக்கான செலவு தொடர்பிலா அளவிலும், தொடர்புள்ள உண்மை அளவிலும் (Relative terms) அதிகரித்தது. எனவே, நகரப் பகுதிகளில் நுகர்வுப் பாங்கில் ஒரு கணிசமான உயர்வு ஏற்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

### நுகர்வுச் செலவில் பொருளாதார வளர்ச்சியின் விளைவுகள்
(Impact of development on Consumer expenditure)

1964-65-ல் இந்தியாவில் உள்ள வளர்ச்சியடைந்த, வளர்ச்சியடையாத பகுதிகளில் நுகர்வுச் செலவின் பாங்கு ஆராயப்

பட்டது.[1] அதன்படி வளர்ச்சி அதிகரிக்கும் போது தானிய வகைகளுக்கான செலவு குறைகிறது. இது வளர்ச்சியடையாப் பகுதிகளில் 42·6 சதவீதமாகவும், வளர்ச்சியடைந்த பகுதிகளில் 23·8 சதவீதமாகவும் இருந்தது. அதாவதாவது வளர்ச்சியடைந்தப் பகுதிகளில் தானியப் பொருள்களின் மேல் தலா செலவு ரூ. 7.40ஆகும். ஆனால் இது வளர்ச்சியடையாப் பகுதிகளில் ரூ. 8·26ஆக இருந்தது. இதே போன்று முன்னேறிய பகுதிகளில் தானியப் பொருள்களுக்கானச் செலவு குறைந்திருப்பது உணரப் பட்டது. மேலும் வளர்ச்சியடைந்த பகுதிகளில் வளர்ச்சியடையாப் பகுதிகளைக்காட்டிலும் அதிகமான பணம் செய்பொருள்கள், பணிகள் போன்ற மற்ற பொருள்களில் செலவிடப்பட்டது.

செல்வத்தின் பங்கீடு (Distributon of wealth)

வருவாய், வாழ்க்கைத் தரம் இவைகளில் காணப்படும் ஏற்றத் தாழ்வைப் போலவே செல்வத்திலும் ஏற்றத் தாழ்வுகள் தோன்றியுள்ளன. மறு ஆக்கத்திற்குப் பயன்படும் உறுதியான சொத்துகளின் அளவின் அடிப்படையில் இந்திய மொத்த செல்வம் மார்ச்-1950-ல் சுமார் ரூ. 17, 086 கோடியாகவும், மார்ச் 1961-ல் ரூ. 32, 164 கோடியாகவும் இருந்தது. மூன்றும் திட்டக் காலத்திலும் அதற்குப் பின்பும் முதலீட்டின் அளவு பொருளாதாரத்தில் கணிசமாக அதிகரித்திருப்பதால் மொத்த செல்வம் மேலும்அதிகரித்திருக்கும். இச் செல்வம் மூன்று வகைகளில் காணப்படுகிறது அதாவது (1) குடும்பத்துறைக்குச் சொந்தமான செல்வம் (2) தனியார் தொழில் துறையிலுள்ள கூட்டாளிகளின் செல்வம் (3) மத்திய, மாநில, உள்ளூராட்சி அரசாங்கங்களின் பொதுச் செல்வம் ஆகும். 1950-ல் மொத்தச் செல்வத்தில் 71 சதவீதம் குடும்பத்துறைக்கும் (household sector) 12 சதவீதம் தனியார் தொழில் துறைக்கும், 17 சதவீதம் அரசு துறைக்கும் சொந்தமாக இருந்தது. 1961-ல் இத் துறைகளின் பங்குகள் மாற்றம் பெற்றன. அரசு துறையின் பங்கு 25 சதவீதமாக அதிகரித்து, குடும்பத் துறையின் பங்கு 60 சதவீதமாகக் குறைந்தது. தனியார் தொழில் துறையின் செல்வம் கணிசமான அளவு உயர்ந்தது.

அரசுதுறைச் செல்வத்தின் நன்மைகள்

அரசாங்கத்துறையின் செல்வம் அதிகரிப்பதால் சாதாரண மக்கள் எந்தவிதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. மாறாக அரசின் செல்வ அதிகரிப்பால் மக்களுக்குப் பல்வேறு சமூக, பொருளாதார வசதிகளும், சாதனங்களும் கிடைக்கின்றன. மனித நலனை மேம் படுத்தும் நடவடிக்கைகள் அதிகரிப்பதால் மக்களின் திறன் அதி

1. தே. ந. பொ. ஆ. சபை (NCAER), 'அனைத்திந்திய நுகர்வோர் செலவுக் கணக்கீடு,' (புது டெல்லி, 1967) ப. 46-50.

கரிக்கிறது. மேலும் செல்வம் தனியார் துறையிடமே சென்று குவி வதையும் தடுக்க முடிகிறது. தனியார் துறையில் செல்வம் குவிவது அரசுதுறையில் தடுக்கப்படாவிட்டால் நாட்டில் பல்வேறு வகை யான ஏற்றத்தாழ்வுகள் அதிகரித்து, சமூக அநீதியும் வளங்களின் துர்நிர்வாகமும் வளரும். ஆனால், அரசு துறையும் காலப்போக் கில் அதிகச் செல்வத்தைப் பெற்றபின் ஆணவப்போக்குடன் செயல் படாமல் மக்களின் நலனுக்காகவே செல்வத்தைப் பயன்படுத்த மக்களாட்சியில் தக்க அமைப்புகள் தேவை. ஏற்றத்தாழ்வுகளைப் போக்கவேண்டுமென்று அரசியல் சட்ட ரீதியில் பேரவாக் கொண் டுள்ள ஒரு சமுதாயத்தில், தனியார் செல்வத்தின் பகிர்வைப் பற்றிய ஆய்வு ஒருதனிச் சிறப்பினைப் பெற்று விளங்குகிறது.

தனியார் சொத்து வெளிப்படையாகவும் உருமறைந்தும் பல வகைகளில் இருக்கும். பிறருக்குத் தெரிந்தோ, தெரியாமலோ செல்வம் தனிநபர்களிடம் சேர்ந்து இருப்பதால் தனியார் செல்வத்தைப் பற்றிய முழு விவரங்கள் துல்லியமாகக் கிடைப்ப தில்லை. செல்வ ஏற்றத்தாழ்வுகளை, 1. நில உடைமைகள் 2. சொந்த வீடுகள் 3. பெற்றிருக்கும் பங்குகள் 4. கிராம குடும்பங்களின் மொத்த சொத்துகள் ஆகிய தனியார் செல்வத்தின் அம்சங்களின் அடிப்படையில் ஆராயலாம். சொத்துரிமைச் சட்டங்களால் (Laws of Inheritance) இவ் வம்சங்களில் ஏற்றத் தாழ்வு அதிகரிக்கிறது.

1. நில உடைமைகள் (Land Holdings)

நில உடைமைகளில், சொந்த உடைமைகள், குத்தகை உடைமைகள் என்ற இருவகைகள் உண்டு. 1953-54, 1959-60 ஆகிய இரு ஆண்டுகளில் இவ்விரண்டு உடைமைகளிலும் அதிக அளவு குவிப்பு காணப்பட்டது. 1953-54-ல் மேல்மட்ட ஒரு சதவிகித குடும்பங்கள் மொத்தக் குடும்ப உடைமைகளில் 17 சதவிகிதமும், மேல்மட்ட 5 சதவிகிதத்தினர் 41 சதவிகிதமும், அடுத்த மேற்பட்ட 10 சதவிகிதத்தினர் 58 சதவிகிதமும் நில உடைமை உரிமைகளைப் பெற்றிருந்தனர். 1959-60-ல் இந்த விகிதங்கள் முறையே 16 சதவிகிதம், 40 சதவிகிதம், 56 சதவிகித நில உடைமைகளாகக் குறைந்தது. இவ்விரண்டு ஆண்டுகளிலும் கீழ்மட்டத்தைச் சேர்ந்த 20 சதவிகிதத்தினரும், நிலமில்லாதவர் களாக இருந்தனர். கிராமப்புறங்களைக் காட்டிலும் நகரப் புறங்களில் நிலக் குவிப்பு அதிகமாக உள்ளது. மேல்மட்டத்தைச் சேர்ந்த 5 சதவீத நகர குடும்பத்தினர் மொத்த நகர நில உடைமையில் 52 சதவிகித நிலத்தை உரிமையாகப் பெற்றி ருந்தனர். மேல்மட்ட 20 சதவிகித நகரக் குடும்பங்கள் 93

சதவிகித நிலங்களை உரிமையாகப் பெற்றிருந்தனர், ஆனால், கீழ்மட்ட 20 சதவிகிதத்தினர் நிலமில்லாதவர்களாய் இருந்தனர்.

2. சொந்த வீடுடைய குடும்பத்தினர் (Owner- occupied houses)

இவ் வம்சங்களில் நகரப் பகுதிகளுக்கு மட்டும் 1960 ஆம் ஆண்டிற்கான விவரங்களே கிடைத்துள்ளன. இவ் விவரப்படி 40 சதவீத குடும்பத்தினர் மட்டுமே சொந்த வீட்டில் வாழ்கின்றனர். மேலும், மேல்மட்ட 10 சதவீதக் குடும்பங்கள் மொத்தச் சொந்த வீடுகளில் 57 சதவீத வீடுகளை உரிமையாகப் பெற்றுள்ளனர். இத்தகைய செல்வத்தைக் கீழ்மட்டத்தில் உள்ள 20 சதவீதத்தினர் 1 சதவீதத்திற்கும் குறைவாகவே பெற்றிருப்பது மிகவும் வருந்தத் தக்கதாகும். ஆனால், மேல்மட்ட 20 சதவீதத்தினர் 73 சதவீத செல்வத்தையும், மேல்மட்ட 50 சதவீதத்தினர் 93 சதவீத செல்வத்தையும் பெற்றிருப்பது அநீதியாகும். மேலும், கீழ்மட்டத்தைச் சேர்ந்த 10 சதவீத குடும்பத்தினரின் ஒரு வீட்டின் சராசரி நடப்புச் சந்தை மதிப்பு சுமார் 110 ரூபாயாகும். ஆனால், மேல்மட்ட 10 சதவீதத்தினரின் ஒரு வீட்டின் சராசரி மதிப்பு 24,600-க்கு மேலாகும். இதிலிருந்து சராசரி மதிப்பில் ஏற்றத்தாழ்வு தீவிரமாக இருப்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

3. பங்கு உடைமைகள் (Share-holdings)

வருமான வரிப் புள்ளி விவரங்களிலிருந்து பங்கு பெற்றிருப்போரின் உடைமைகளின் போக்கை அறிய முடிகின்றது. வரி கொடுப்போரின் மொத்த இலாப ஈட்டு (divident) வருவாயிலிருந்து அவர்கள் பெற்றிருக்கும் பங்குகளின் எண்ணிக்கையை அறியலாம். 1955-56-ல் மேல்மட்ட மக்களில் 10 சதவீத வருமான வரி செலுத்துவோர், மொத்த இலாப ஈட்டு வருவாயில் 55 சதவீதத்தைப் பங்கிட்டுக் கொள்கின்றனர். ஆனால், கீழ்மட்ட 10 சதவீதத்தினர் அவ் வருவாயில் 2 சதவீதத்தை மட்டுமே பெறுகின்றனர். 1959-60-ல் இச் சதவீதங்கள் ஓரளவு சீரடைந்திருந்தன. பொதுவாக மேல்மட்ட 10 சதவீத வரி செலுத்துவோர் 5 சதவீத பங்குகளுக்குமேல் உடைமைகளாகப் பெற்றுள்ளனர்.

4. கிராமக் குடும்பங்களின் மொத்த சொத்துகள் (Total assets of Rural house holds)

முதல் முறையாக இவ்வம்சங்களைப் பற்றிய விவரங்கள் இந்திய ரிசர்வ் வங்கியின் கணக்கீட்டிலிருந்து அறியக் கிடக்கின்றன. நிலம், கட்டடங்கள், கால் நடைகள், கருவிகள், தேசிய சேமிப்புச்

பத்திரங்கள், வங்கிவைப்புகள், கம்பெனிப் பங்குகள் போன்ற முதலீடுகள் ஆகிய கிராமக் குடும்பங்களின் மொத்த சொத்து களின் பங்கீடு ஆராயப்பட்டது. ஜூன் 30, 1962-ல் ஒரு குடும்பத்தின் சராசரி சொத்தின் மதிப்பு நாடு முழுவதிற்குமாக ரூ. 5,394 ஆக இருந்தது. அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம் ஆகிய பகுதிகளில் ரூ. 3,100க்கும் ரூ. 4,200க்கும் இடையே ஒரு குடும்பத்தின் சொத்து காணப்பட்டது. தமிழ் நாடு, மஹாராஷ்டிரா, உத்திரப்பிரதேசம், கேரளா ஆகிய மாநிலங்களில் இச்சொத்துகளின் சராசரி மதிப்பு ரூபாய் 5,100 க்கும் ரூ 5,300 க்கும் இடையே காணப்பட்டது. பஞ்சாபில் ஒரு குடும்பத்தின் சராசரி மொத்தச் சொத்தின் மதிப்பு ரூ. 10,507 ஆக இருந்தது. ரிசர்வ் வங்கியின் ஆய்வில் கிராமக் குடும்பங்களின் சொத்துரிமையில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் விளக்கப்பட்டுள்ளன. கீழ்மட்ட 25 சத வீதத்தினர் மொத்தச் சொத்துகளில் 2 சதவீதத்திற்கும் குறை வாகவே உரிமையாகப் பெற்றுள்ளனர். ஆனால், மேல்மட்ட 10 சதவீதத்தினர் 5 சதவிகிதச் சொத்துக்குமேல் பெற்றுள்ளனர். அதாவது மேல்மட்ட 25 சதவீதத்தினர் கிராமக் குடும்பங்களின் மொத்தச் சொத்தில் 75 சதவிகிதச் சொத்துகளை உரிமையாகப் பெற்றுள்ளனர். ஆனால், கீழ்மட்ட 75 சதவீதத்தினர் அத்தகைய சொத்துகளில் 25 சதவீதத்தை மட்டுமே உரிமையாகப் பெற்றுள்ளனர். இச் சொத்துக் குவிப்பு ஜம்மு—காஷ்மீரில் மிகக் குறைவாகவும், ஆந்திரப் பிரதேசத்தில் மிக அதிகமாகவும் உள்ளது. தமிழ் நாடு, கேரளா, ஆந்திரப் பிரதேசம் ஆகிய மூன்று தென் மாநிலங்களில் அதிகமான ஏற்றத்தாழ்வு காணப் படுகின்றது.

## ஏற்றத்தாழ்வின் காரணங்கள்

பல்வேறு வகையான காரணங்களால் வருமான, நுகர்வு செல்வ, ஏற்றத்தாழ்வுகள் இந்தியாவில் தோன்றியுள்ளன. அவற்றில் மிக முக்கியமானவைகளே சுருக்கமாகக் கீழே ஆராயப் பட்டுள்ளன. இந்தியாவில் பரம்பரைச் சொத்துரிமைச் சட்டங் களும் மேற்குறிப்பிட்ட அம்சங்களில் ஏற்றத்தாழ்வை அதிகரிக் கின்றன.

### 1. விரைவான வளர்ச்சி நடவடிக்கைகள்

பொருளாதார வளர்ச்சி முறையின்போது ஏற்றத்தாழ்வுகள் பரவலாக அதிகரிக்குமென்பதை மேற்கண்ட ஆய்விலிருந்து தெளிவாக அறியலாம். வளர்ச்சி முறையை ஊக்குவிக்கும் உள்நாட்டுச் சேமிப்பு அதிக வருவாய் பெறும் துறையிலிருந்து

தோன்றுவதால் வளர்ச்சிக்கு அதிக வருவாய் பெறுவோரை ஊக்குவிக்க வேண்டியது இன்றியமையாததாகும். அதிக வருவாய் பெறுவோர் சேமிப்பை அதிகரிக்கப் பல தூண்டுதல்கள் பெறும்போது சாதாரண மக்கள் புறக்கணிக்கப்படுகின்றனர். வளர்ச்சியின் போது சமத்துவம் ஏற்படுத்த வேண்டுமென்று கூக்குரல் எழுப்பப்பட்ட போதிலும் ஏற்றத்தாழ்வுகளின் கோரப் பிடியிலிருந்து மக்கள் விடுதலையடைய முடியவில்லை. எனவே, திட்டக் காலத்தில் சம வருவாய்ப் பங்கீட்டிற்கும், பொருளாதார வளர்ச்சிக்குமிடையே உருவாகியுள்ள முரண்பாட்டின் விளைவாக இந்தியாவில் ஒருதலைப்பட்ட வருமானப் பங்கீடு தீவிரமடைந்து வருகிறது. அதிக முதலீட்டைக் கொண்ட திட்டங்கள் வளர்ச்சிக் காலத்தில் மேற்கொள்ளப்படுவதால் ஒரு குறித்த வகுப்பினருக்கு மட்டும் நன்மையையும், மற்றவர்களுக்கு பயனின்மையையும் ஏற்படுத்துகிறது. திட்டத்தின் முதல் பத்தாண்டுக் காலத்தில் தனியார் தொழில் நடத்தும் வகுப்பினர் பெருமளவில் நன்மை பெற்றனர் என்று 'மஹாலனோபிஸ்' குழு தெளிவாக உணர்த்தியுள்ளது.

2. பணவீக்கச் சூழல்

பணவீக்க நச்சுவளையம் 'எரியும் தீயில் எண்ணெய் ஊற்றுவது போல்' ஏழைமக்களின் தேய்ந்த வருவாயில் மேலும் ஊறு நேரும் வண்ணம் வாட்டி வதைக்க, ஊகவணிகர்கள், செல்வந்தர்கள், மேன்மேலும் கொள்ளை இலாபம் பெறும் வண்ணம் வகை செய்கிறது. ஏற்கெனவே ஓரிடத்தில் ஆய்ந்தபடி கடந்த 20 ஆண்டுகளாகப் பொருள்களின் விலைகள் மிகத் தீவிரமாக அதிகரித்து வருவதால் ஏழைமக்களின் உண்மை வாழ்க்கைத்தரம் கடுமையாகக் குறைந்து வருகிறது. ஏழை, பணக்காரர்களிடையே உள்ள இடைவெளி மிகவும் விரிவாக்கப்படப் பற்றுக்குறை நிதியாக்கமும் (Deficit Financing) ஒரு காரணமாக அமைந்துள்ளது.

3. வேலையின்மையும் வேலைக் குறைவும் (Unemployment and Under employment)

அதிகரித்து வரும் வேலையில்லாதோரின் எண்ணிக்கை தேசிய வருவாயின் அதிகரிப்பைக் குறைக்கிறது. கிராம வேளாண்மைத் துறையில் குறிப்பாகப் பேரளவு வேலைக்குறைவு காணப்படுவதால் செல்வந்த வகுப்பினருக்கும் வேலையில்லாதோருக்குமிடையே உள்ள இடைவெளி மேன்மேலும் விரிந்துகொண்டே செல்கிறது. சுமார் 10 சதவீத மக்கட் தொகையினர் கைவிடப்பட்ட வகுப்பினராயிருப்பதால் தேசிய வருவாய் மேலும் குறைந்து ஏற்றத்தாழ்வுகள் மேலும் விரிவடைகின்றன.

4. குறைந்த உற்பத்தித் திறன் (Low-Productivity)

சிற்றியல், பேரியல் மட்டங்கள் இரண்டிலுமே உற்பத்தித் திறன் குறைவாக இருப்பதால், வருமான செல்வ ஏற்றத்தாழ்வுகள் அதிகரிக்கின்றன. பணிபுரியும் மக்கள் குறைந்த உற்பத்தித் திறனுடன் செயல்புரிவதால் தங்கள் வாழ்க்கையில் செழிப்பை அதிகரிக்க முடியாமல் வருமான ரீதியில் தங்கள் அந்தஸ்து குறைவதை உணரமுடிகிறது. குறைந்த உற்பத்தித் திறன் குறைந்த ஊதியம் பெறுவோருக்கு ஒரு தண்டனையாக அமைந்துள்ளது. செல்வந்தர்களுக்கு அதனால் எந்தவிதத் தொல்லையும் இல்லை.

5. திறமை குறைந்த வரிவிதிப்பு முறை (Less-effective fiscal system)

இந்திய வரி விதிப்பு முறை திறமை குறைந்தும், வாய்ப்புக் குன்றியும் இருப்பது வெளிப்படையாகும். மொத்தக் குடும்பத்தினரில் ஒரு சதவீதத்தினரின் மீதே வரி விதிக்கப்பட்டுள்ளது. அதிக வருவாய் பெறுவோரை ஊக்குவிக்கும் வகையிலும், வேளாண்மைத் துறையை முழு அளவில் உள்ளடக்காமலும் அது உள்ளது. பல்வேறு வகையான வரிகள் விதிக்கப்பட்டு ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டும் ஏற்றத்தாழ்வு அதிகரித்து வருகிறது. இதிலிருந்து வரி விதிப்பு முறையின் திறமையின்மையை யூகித்துக் கொள்ளலாம். மற்ற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் தனி ஒருவரின் சொந்த வருவாய்க்கும், வரி நீங்கலான வருவாய்க்கும் (Disposable income) மிடையே உள்ள இடைவெளி அதிகமாக உள்ளது. டம்ப நுகர்வு, அதிக செல்வம் போன்றவைகளின் மேல் விதிக்கப்பட்டுள்ள வரிகள் போதுமானதாயும், திறமையுடையனவாயும் இல்லை. ஏராளமான வரி ஏய்ப்பும் (Tax evasion), கறுப்புப் பண நடமாட்டமும் அதிகரித்துக் கொண்டே வருகின்றன.

6. முதல் செறிவு வளர்ச்சி (Capital intensive development)

பல்வேறு நாடுகளின் வருவாய்ப் பங்கீட்டுப் போக்கை ஆராய்ந்து பார்த்தால் குறிப்பாக வேளாண்மைத் துறையில் முதல் செறிவுத் திட்டங்கள் அமுலாக்கப்படுவதால் ஏற்றத் தாழ்வுகள் அதிகமாக இருப்பதை உணரலாம். வேளாண்மையை எந்திர மயமாக்கினால் அதனால் பயன் பெறுவோர் செல்வந்த நிலக்கிழார்களும், பெரிய விவசாயிகளுமேயாவர். இவர்களிடம் ஏற்கெனவே இருக்கும் செல்வத்திற்கு மேல் செல்வம் மேலும் சேருவதற்கு மூலதனச் செறிவுத் திட்டங்கள் காரணமாயுள்ளன. உண்மையில் இரண்டாம் திட்டத்திலும் அதற்குப் பின்,

அமுலாக்கப்பட்ட திட்டங்களிலும் முதல் செறிவு, பேரளவு கனரகத் தொழில்களுக்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டது. "தொழில் நுட்ப முறை, அமைப்பு முறையில் மாற்றங்களை ஏற்படுத்த நாட்டில் மேற்கொள்ளப்பட்ட முதலீடு, உற்பத்திக் கொள்கைகளால் நல்ல அமைப்பைப் பெற்று, உன்னத நிலையிலுள்ள சமுதாயத்திடமே பொருளாதார சக்தி பெருமளவு குவிவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது".[1] எனவே, முதல் செறிவு வளர்ச்சி, விரைவான தொழில்மயம், வேளாண்மை எந்திரமயம் ஆகியவைகள் ஒரு சிலரிடமே சொத்துகளும். வருவாய் ஓட்டமும் குவிவதற்குத் துணை புரிவதால் ஏற்றத்தாழ்வு தீவிரமடைகிறது.

7. சக்தி வாய்ந்த தொழில் அமைப்புகளின் தோற்றம்

திட்டக் காலத்தின் பேரளவு முதலீடுகளால் நாட்டில் சக்தி வாய்ந்த தொழில், நிதிவகுப்பினர் உருவாகித் தொடர்ந்து வரும் அரசின் திட்டக்கால முதலீட்டு நடவடிக்கைகளால் பெரும் பயனடைகின்றனர். இவர்களுக்கு மாநில அரசுகளின் தக்க ஆதரவும் உண்டு. இதற்கு வருவாய், வாழ்க்கைத்தரப் பங்கீட்டுக் குழுவின் (Committee on Distribution of Income and Levels of Living) அறிக்கை தகுந்த ஆதாரமாக உள்ளது. அக் குழுவின் கருத்துப்படி: "பாதுகாப்புப் பெற்ற அங்காடி, சமூக நலனை அதிகரிக்கத் தேவையான வசதிகள், தொழில் வளர்ச்சிக்கு ஊக்கமளிக்கும் லேசான பணவீக்கத்தைக் (Mild inflation) கொண்ட வரவு-செலவுக் கொள்கையைப் (Budgetary Policy) பராமரித்தல் ஆகிய நடவடிக்கைகளோடு கூட, பரந்த வரி ஊக்கிகளையும் (Tax Incentives) நல்கி தனியார் தொழிலின் விரைவான வளர்ச்சியை அரசு மேம்படுத்தி வருகிறது."[2] பொருளாதார அமைப்பிலுள்ள கடன் வசதியளிக்கும் நிதி நிறுவனங்கள், வலுப்பெற்று நிலையான தொழில் வளர்ச்சியைப் பெறப் போராடிவரும் சிறிய தொழில் துணிவோனுக்கு நிதி உதவி செய்வதற்குப் பதிலாக நிலையாக நிறுவிவிட்ட பெரிய தொழில் நிறுவனங்களையே ஆதரித்துப் பெரிதும் துணைபுரிகின்றன. இதனால் ஏற்றத்தாழ்வு மிகுகிறது.

திறமையான வருவாய்க் கொள்கையின்மை (Absence of an Effective Incomes Policy)

கடந்த இருபது ஆண்டுகளாகத் திட்டமிட்டு வளர்ச்சியடைய முயன்று வந்தபோதும், தகுந்த குறிக்கோள்களையும் வழி முறை

[1] இந்திய ரிசர்வ் வங்கி: 'வருமான விலைகளின் கொள்கைக்கான செயல் முறை அறிக்கை' (மதன் குழு, 1967) ப. 4.

[2] குழுவின் அறிக்கை, பக்கம்-31.

களையும் கொண்ட வருவாய்க் கொள்கை (Incomes Policy) வகுக்கப்படாததால் இந்தியப் பொருளாதாரத் திட்டங்கள் சமமான வருவாய்ப் பங்கீடுகளை நாட்டில் ஏற்படுத்த முடியவில்லை. திட்டங்கள் தீட்டப்பட்ட போதும் தகுந்த செயல் முறைகள் இல்லாததால் முதலீட்டு, நிதிமுறை நடவடிக்கைகள் சமநிலையை ஏற்படுத்துவதில் பயனளிக்கவில்லை. சுய வேலையில் ஈடுபட்டுள்ளோர், ஊதியம் பெறுதார் ஏராளமானவர் இருப்பதால் வருவாய்க் கொள்கையைத் திறமையுடன் அமுலாக்க முடியவில்லை.

## இந்தியாவிற்கேற்ற வருவாய்க் கொள்கை (Incomes Policy for India)

வருவாய் மறுபங்கீட்டுப் பணியை இயற்கையான அங்காடி சக்திகளால் மட்டும் நிறைவேற்ற முடியாது என்பது நிரூபிக்கப்பட்ட உண்மையாகும். மூதலாக்கத்தை அதிகரிக்க, அதிக நுகர்வோரிடமிருந்து அதிக சேமிப்போரிடம் வருவாய் மாற்றப்பட வேண்டுமென்று கருதப்பட்ட போதிலும், வருவாய்க் கட்டுப்பாடு இன்றியமையாததாகவே விளங்குகிறது. செல்வந்தர்களின் பொருளாதார நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தாமல் விட்டு ஏற்றத்தாழ்வுகளை ஏற்றுக்கொண்டால் பொருளாதார வளர்ச்சி வீறுபெற்று எழும் என்ற தொன்மைக் கருத்தெல்லாம் தற்காலத்துக்கு ஒவ்வாத வீண் பேச்சாகும். எனவே, தீரமாக ஆராய்ந்து வகுக்கப்பட்ட முழுமையான வருவாய்க் கொள்கை தற்போது முக்கியத்துவம் பெற்று எல்லோராலும் வரவேற்கப்படுகிறது.

## வருவாய்க் கொள்கையின் குறிக்கோள்கள் (Objectives of an Incomes Policy)

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியின்போது ஒரு வருவாய்க் கொள்கையின் பரந்த குறிக்கோள்களாவன:

### (i) விலைகளை நிலையாக்குதல் (Price Stability)

நிலையான விலைகளைப் பெறும் முறையை ஏற்கெனவே நாம் வேறு ஓர் அத்தியாயத்தில் ஆராய்ந்துள்ளோம். நிலையான விலைகள், பணவருவாய் அதிகரிப்புப் பாங்கை நிலைபேறுள்ளதாக்கவும் சமூக நோக்கங்களைச் சாதிக்கவும் பெருந்துணை புரிகின்றன. இதனால் வருமான, நுகர்வு ஏற்றத் தாழ்வுகளையும் குறைக்க முடியும்.

### (ii) மறுபங்கீடு (Redistribution)

வருவாய் மறுபங்கீட்டு முறையால் நாட்டில் ஆக்கவேலைகளில் ஈடுபடுவதற்கான ஊக்கமும், சேமிக்கும் ஆர்வமும் அதிகரிக்கிறது.

இதனால் நுகர்வுத் தரத்திலுள்ள (Consumption Standards) ஏற்றத்தாழ்வு குறைகிறது.

(iii) விரைவான சுய-வலிமை கொண்ட வளர்ச்சி (Quick self. Sustaining Growth)

சுய-வலிமை பெற்ற வளர்ச்சி, நாட்டில் அதிக அளவு வேலை வாய்ப்புக்கு வழிவகுத்து முதலாக்கத்தைத் தூண்டுகிறது. இக் குறிக்கோள்களைப் பற்றி மிகவும் பொருத்தமாக மதன் குழு குறிப்பிட்டுள்ளது. "தற்போதுள்ள நிலையில் நம் வருவாய்க் கொள்கையின் சாரம் சுய சார்புடைய வளர்ச்சிக்கு வகைசெய்யும் அமைப்புசார் மாற்றத்தையும், அதிக முதலாக்கத்தையும் கொண்ட குறிக்கோள்களோடு ஒன்றிவரும் நியாயமான பங்கீட்டைச் ('Fair' Distribution) சாதிப்பதாகும்."[1]

வருவாய் வளர்ச்சியும் பங்கீடும் (Incomes Growth and Distribution)

மேற்குறிப்பிட்ட நோக்கங்களைக் கருத்தில் கொண்டு மதன் குழு கீழ்க்காணும் பரிந்துரைகளை நல்கியது. நியாயமான வருமானப் பங்கீடு என்பது வரி நீங்கலான தனிநபர் வருவாய்ப் பங்கீட்டைக் குறிப்பிடுகிறது. நியாயமான வருவாயை இரு கோணங்களி லிருந்து ஆராயலாம். முதலாவதாக நுகர்ச்சித் தரத்திலோ (Standards of Consumption) அல்லது தனிநபர் வருவாயிலோ எந்த அளவு ஏற்றுக்கொள்ளத் தக்க வேறுபாடு இருக்கலாம் என்பதைக் கண்டறிய வேண்டும். இதற்குத் தேசிய குறைந்தபட்ச அதிகபட்ச வருமான அளவுகளைக் கணக்கிட வேண்டும். மேலும், வருமானம் அல்லது நுகர்வுக்கு உச்சவரம்பு கணக்கிட வேண்டும். இரண்டாவதாக, பல்வேறு வகையான பணிகளுக்கிடையே எந்த அளவு வருமான வேறுபாடுகள் இருக்கவேண்டும் என்பதை மதிப்பிடவேண்டும். அதாவது கூலிகள், ஊதியங்கள், இலாபங்கள், வருமானங்கள் ஆகியவைகளின் அனுமதிக்கத் தக்க வேறுபாடுகளை கணக்கிட வேண்டும். ஆனால், இவைகளைக் கண்டுபிடிப்பது எளிதான காரியமல்ல. ஏற்றுக்கொள்ளத் தக்க விதிமுறைகளைத் தீர்மானித்தாலும் அவைகள் நிரந்தரமானவைகளாக இருக்க முடியாது. திட்டமிட்ட வளர்ச்சியின் வேகத்தின் அடிப்படையில் எல்லாவகை வருமானங்களும் அதிகரிக்குமாதலால் விதிமுறைகளையும் அதற்கேற்றால் போல் சீரமைக்க வேண்டும்.

1 மதன் குழுவின் அறிக்கை, ப. 13—14.

## ஏற்றுக் கொள்ளத்தக்க வருமான வேறுபாட்டின் அளவு
(Acceptable range of variation)

சமுதாயத்தின் எல்லாவகை மக்களாலும் ஏற்றுக்கொள்ளத் தக்க தேசிய குறைந்தபட்ச, அதிகபட்ச வருவாய் தீர்மானிக்கப்படவேண்டும். ஜூலை 1962ல் ஓர் ஆய்வுக்குழு தேசியக் குறைந்த வருவாய் 1960-61 விலைகளில் கிராமப் பகுதிகளுக்கு மாதமொன்றுக்கு தலா ரூபாய் 20ம் நகரப் பகுதிகளுக்கு தலா ரூ 25 ஆக இருக்கவேண்டும் என்றும் ஆலோசனை கூறியது. ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட ஒரு சராசரி அளவுடைய குடும்பத்திற்குக் கிராமப் பகுதிகளில் மாதமொன்றுக்கு ரூபாய் 100என்றும் நகரப் பகுதிகளில் ஒரு குடும்பத்திற்கு ரூ. 125 என்றும் கணக்கிடப்பட்டது. சுகாதாரம், கல்விக்கான செலவுகளை அரசு மேற்கொள்வதால் மேற்குறிப்பிட்ட மதிப்பீட்டிலிருந்து இவைகள் நீக்கப்பட்டன. மேற் குறிப்பிட்ட வருமான இலக்குகளை 1975-76க்குள் சாதிக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 1967-68ல் தலாநுகர்வு (Per-capita consumption) நடப்பு விலைகளில் ரூபாய் 15 தான் என்பது கவனிக்கத் தக்கதாகும். தேசிய குறைந்த வருவாயை நடைமுறைப் படுத்துவதில் சில தொல்லைகள் காணப்படுகின்றன. (1) இதைத் தீர்மானிக்கும் முன் சுகாதாரம், கல்வி போன்ற வசதிகளை ஏற்படுத்தியாக வேண்டும். (2) வரி நடவடிக்கைகளின் மூலம் செல்வந்தர்களிடமிருந்து சாதாரண மக்களுக்கு வருமானம் கைமாறும்படி செய்தாக வேண்டும். இவ்விரு நடவடிக்கைகளை மேற்கொள்ளும் போது பல முட்டுக்கட்டைகள் ஏற்படுகின்றன.

### வருமான உச்ச வரம்பு (Ceiling on Incomes)

வருமான உச்ச வரம்பு என்பது சொத்துரிமைகளுக்கு வரம்பு விதித்தலும், சுதந்திர தொழில் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தலும் ஆகும். இதை நேரடியாக மேற் கொள்வது கடினமாகும். அதாவது உச்சவரம்பிற்கு மேல் 100 சதவீத வரியை விதிப்பதை இது குறிப்பிடுகிறது. ஆனால், இதனால் அதிக அளவு வரி ஏய்ப்பு ஏற்படுகிறது. மேலும், அளவுக் கடந்த வரி விதிப்பால் உற்பத்தி நடவடிக்கைகளுக்குத் தளர்ச்சியை ஏற்படுத்துகிறது. உச்சவரம்பை விதிப்பதால் அதிக ஊதியம் பெறுவோர் வெளிநாடுகளுக்குப் பெயர்ச்சியடைவதால் திறன் வறட்சி (Brain-drain) ஏற்படுகிறது. அதிக வருமானத்தைக் கொண்ட உச்சவரம்பாக இருந்தாலொழிய உச்சவரம்பை அமுலாக்கினால் அது சேமிப்பு, கடும் உழைப்பு ஆகியவைகளின் மேல் உள்ள ஊக்கத்தைப் பெருமளவில் குறைத்து விடும். இதனால் பொருளாதார வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படும்.

மேற்கண்ட சூழ்நிலையில் நடைமுறைக்கு ஏற்ற வருமான வேறுபாட்டை ஏற்படுத்துவதற்கு மதன்குழு கீழ்க்கண்ட வழி முறையைப் பரிந்துரைத்தது. 'வளர்வீத வரிமுறை (Progressive taxation) வினை டம்பநுகர்வைக் கட்டுப்படுத்துதல், மிஞ்சிய தேவையைக் கட்டுப்படுத்துதல், இலாபம், மற்ற சன்மானங்கள் ஆகியவைகள் நியாயமான முறையில் கட்டுப்படுத்தப்படத் தகுந்த அமைப்பை ஏற்படுத்த வேண்டும்.''[1] எனவே, இக் குழு மித மிஞ்சிய கட்டுப்பாட்டையும் மிகக் குறைந்த கட்டுப்பாட்டையும் விரும்பாமல் நியாயமான கட்டுப்பாட்டையே வலியுறுத்தியது.

வருமான வேறுபாடுகள் (Income differentials)

பல்வேறு துறைகளில் வருமானங்களைக் கணக்கிட ஐந்து வருடாந்திர சராசரி உற்பத்தி மாற்ற வீதத்தின் அடிப்படையில் மதிப்பிடப்பட்ட தேசிய உற்பத்தித் திறனை அறிய வேண்டும். உற்பத்தித் திறன் அடிப்படையில் வருமான வேறுபாடுகளை அறிய வருமானத்தைக் கூலி வருவாய் (wage-income), கூலி யில்லாத வேறு வருவாய் (Nonwage-income) என்று இருவகை களாகப் பிரிக்கலாம். கூலி வருவாய் உடன்பாடுகளாலும், குழுக் களின் தீர்ப்புகளாலும் (awards) தீர்மானிக்கப்படுகின்றன. கூலியில்லாத வேறு வருமானம் என்பது உழைப்பில்லா வருமானத் தைக் (Unearned in comes) குறிப்பிடுகின்றது. பல்வேறு துறை களில் உற்பத்தித் திறன் மாற்ற வீதங்கள் வேறுபடுகின்றன. வருமான வேறுபாடுகளையறிய இம் மாற்றத்தையும் பொருளா தாரத்தின் மொத்த உற்பத்தித் திறனையும் கணக்கில் கொள்ள வேண்டும். இவைகளோடு கூடக் குறைந்த பட்சக் கூலி, வாழ்க்கைச் செலவு அதிகரிப்பு, சமூக நலன், போன்ற காரணிகளுக்கும் முக்கியத்துவம் அளிக்க வேண்டும்.

## முடிவுரை

வருமான, செல்வ ஏற்றத்தாழ்வுகளால் நாட்டில் பரவலான வாங்கும் திறன் அமைவதில்லை. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி நாட்டில் உள்ள எல்லா மக்களுக்கும் சமமான அளவில் பயனளிக்க ஏற்றத்தாழ்வுகள் குறைக்கப்பட வேண்டும். ஏற்றத் தாழ்வுகளை முழுவதுமாகக் குறைப்பது விரும்பத்தக்கதல்ல. ஏனெனில் அதனுல் சேமிப்பு, முதலீடு, உற்பத்தி, வேலை வாய்ப்பு, ஆகியவைகள் பாதிக்கப்படலாம். ஓரளவு நியாயமான ஏற்றத் தாழ்வு, விரும்பத் தக்கதாகும். சொத்துரிமை விதிகளைத் தக்க வகையில் மாற்றியமைத்து வரிக்கொள்கையைச் சீராக்கி ஏற்றுத் தாழ்வுகளைக் குறைக்க அரசு தகுந்த நடவடிக்கைகளை மேற்

1 'மதன் குழுவின் அறிக்கை', ப. 20.

கொள்ள வேண்டும். முன்னேற்ற வாய்ப்புகள் எல்லா மக்களுக்கும் சம அளவில் கிடைக்க அரசு திறனையும், சொத்துக்களையும் எல்லா மக்களுக்கும் சமமாகப் பங்கிட வழிவகைகளை மேற்கொள்ள வேண்டும். இதனால் சமூக அநீதி, வேலையின்மை, வருமானக் குவிப்பு போன்றவைகள் நீங்கி எல்லா மக்களும் நியாயமான வாழ்க்கைத்தரத்தைப் பெறுவர்.

# 59. பொருளாதார சக்தி குவிதலும் சர்வாதீன வளர்ச்சியும்

## (Concentration of Economic Power and Growth of Monopolies)

வருமான, செல்வப் பங்கீட்டில் ஏற்றத்தாழ்வு உள்ள சமுதாயத்தில் பொருளாதார சக்தி ஒரு சிலரிடமே குவிகிறது. பொதுவாக ஏற்றத்தாழ்வும், குவிப்பும் ஒன்றாகவே தோன்றிப் பெருமளவில் அதிகரிக்கிறது. எந்த அளவுக்கு ஏற்றத்தாழ்வு அதிகமாக உள்ளதோ அந்த அளவுக்கு குவிப்பும் ஒரு சிலர் கையிலேயே அதிகமாக இருக்கும். நீதி, சமத்துவத்தின் அடிப்படையில் சமதர்ம சமுதாயத்தை அமைக்க, குவிப்பு முட்டுக்கட்டையாக உள்ளது. தொன்மைப் பொருளாதாரக் கருத்தாகிய கட்டுப்பாடற்ற தனிநபர் பணச் சேர்க்கையைத் தற்காலத்திய சமூகம் விரும்புவதில்லை. அளவு கடந்த செல்வ, பொருளாதார சக்திக் குவிப்பால் சமூகத்தின் சரிசமமான ஒருங்கிணைந்த முன்னேற்றம் பெரிதும் பாதிக்கப்படுகிறது. இந்தியாவில் செல்வ, பொருளாதார சக்தி குவிப்பு விடுதலைக்குப் பின் உருவெடுத்து, அடுத்தடுத்து வரும் திட்டக் காலத்திலும் தீவிரமாகப் பெருகி வருகிறது. இதன் அடிப்படைக் காரணம் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஏராளமான பணம் முதலீடு செய்யப்பட்டு பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழில் அதிபர்களிடம் வருவாய் செல்வம் குவிந்தது தான். சமதர்ம சமுதாயத்தை அமைக்க எதிரியாக இருக்கும் இச் சர்வாதீனப் போக்கை இனி ஆராயலாம்.

### பொருளாதார சக்தி குவிதல்—விளக்கம்

பொருளாதார சக்தி என்பது தனியார் பொதுத்துறை செய்பொருள் உற்பத்தித் தொழில்கள், பண்ணைத் தொழில், போக்குவரத்து, மற்றப் பணிகள் போன்ற நடவடிக்கைகளில் சொத்துகள், வருமானப் பெருக்கம், வேலை வாய்ப்புக் கொள்கைகளைத் தீர்மானித்தல் போன்றவைகளில் அதிகாரம் செலுத்துவதைக்

குறிப்பிடுகின்றது. இத்தகைய அதிகாரம் ஒருசிலரிடம் அதிகரித்தால் அதைப் 'பொருளாதார சக்தி குவிதல்' என்கிறோம். இவ்வாறு சக்தி குவிவதை வருவாய், வாழ்க்கைத்தரப் பங்கீட்டுக்குழு, கீழ்க்காணும் வரிகளில் விளக்குகிறது: ''குவிதல் என்பது ஒரு சிலரால் அல்லது ஒரு வகுப்பினரால் மூலதனம், அல்லது வருவாய், அல்லது வேலை வாய்ப்பு, போக்குவரத்து தொடர்பு சாதனங்கள், கட்டுப்படுத்தப்பட்டுப் பொருளாதார அதிகாரம் ஒருசிலரிடம் சேர்வதைக் குறிக்கிறது. மேலும் இந்த ஒரு சிலருக்கோ அல்லது வகுப்பினருக்கோ தேசிய வருவாயிலிருந்து அதிக பங்கு கிடைப்பதால் இவர்களிடம் பொருளாதார சக்தி குவிவதற்கு வாய்ப்புக் கிடைக்கிறது. மேலும், இந்த அதிகாரத்தைப் புள்ளி விவரங்களால் மட்டும் அளந்துவிட முடியாது.[1] இத்தகைய அதிகாரம் பொதுத்துறை அல்லது தனியார் துறையில் உள்ள எந்த நிறுவனத்திலும் தோன்றும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், சமீபத்திய ஆய்வுகள் தனியார் துறையில் உள்ள செய்பொருள் தொழில்களில் காணப்படும் குவிப்பைப் பற்றித்தான் ஆராய்ந்து வருகின்றது. ஏனெனில் தனியார் துறையில் உள்ள செல்வம், சக்தி, குவிப்பால் பொது நலன் பெரிதும் பாதிக்கப்பட்டு சமூகத்தில் பொதுவாகச் சீர்கேடுகள் தோன்றுகின்றன.

ஆய்வுக் குழுக்களின் சக்தி குவிப்பு விளக்கம் (Committee's Views on Concentration of Economic Power)

மூன்று முக்கிய குழுக்களின் ஆய்வுகளில் பொருளாதார சக்தி குவிப்பு பற்றிய விளக்கமும் அளவும் கீழே ஆராயப்பட்டுள்ளன. அக் குழுக்களாவன :

1. வருவாய், வாழ்க்கைத்தரப் பங்கீட்டுக் குழு (அல்லது மஹாலனோபிஸ் குழு)
2. இந்தியாவில் தனியார் துறையில் உள்ள தொழில்களைப் பற்றிய ஆய்வுக்குழு (ஆர். கே. ஹசாரி என்பவரின் குவிப்பு, சொத்துரிமை, கட்டுப்பாடு பற்றிய ஆய்வு)
3. சர்வாதீன விசாரணைக்குழு (Monopolies enquiry-Commission)

மஹாலனோபிஸ் குழுவின் விளக்கம்

பொதுவான பொருளாதார சக்தி குவிப்பு, குறிப்பிட்ட சிலரிடம் தொழில் குவிப்பு (Localised Industrial Concentration),

1 வருமான — வாழ்க்கைத்தரப் பங்கீட்டுக்குழுவினர் அறிக்கை ப. 25-26.

என்று இப்பிரச்சினையை இரு கோணங்களில் மஹாலனோபிஸ் குழு ஆராய்ந்தது. முதலில் கூறப்பட்ட குவிப்பு, தொழில்துறை முழுவதிலும் காணப்படும் கட்டுப்பாட்டைக் குறிப்பிடுகிறது. பின் கூறப்பட்ட குவிப்பு எஃகு, மோட்டார் தொழில், மருந்து உற்பத்தித் தொழில் போன்ற ஒரு குறித்த உற்பத்திப் பிரிவில் சிலரிடம் சக்தி குவிந்திருப்பதைக் குறிப்பிடுகிறது.

பேராசிரியர் ஆர். கே. ஹசாரி குழுவின் விளக்கம்

ஹசாரி, தொழில் வகுப்பினரை (Business Groups) கட்டுப்பாட்டின் களஞ்சியங்களாக விளக்குகின்றார். தொழில் வகுப்பு என்பது அதிகாரம் கொண்ட தொழில் குடும்பம், மற்றும் அதன் நெருங்கிய கூட்டாளிகளையும் உணர்த்துகிறது. கட்டுப்பாட்டின் அளவு அக, புறத் தொழில்களில் உள்ள கட்டுப்பாட்டைப் பொறுத்ததாகும். அகத் தொழில்கள் (Inner Circle)என்பன இவ் வகுப்பினர், திறமையாகக் கட்டுப்படுத்தும் நிறுவனங்களைக் (Companies) குறிப்பிடுகின்றன. ஆயுள் காப்புறுதிக் கழகம் (L. I. C.), தொழில் நிதிக்கழகம் (I. F. C.) போன்ற நிதித்துறை, மற்ற அமைப்புகளின் பங்குகளைப் பெருமளவில் இவ் வகுப்பினர் வாங்குவதால் இத்தகைய கட்டுப்பாடு தோன்றுகிறது. புறத் தொழில்களில் (Outer Circle) இவ் வகுப்பினர் 50 சதவீத சுய உரிமையைப் பெற்று ஆதிக்கம் செலுத்தும் நிறுவனங்கள் உள்ளடங்குகின்றன. இவ்விருவகைத் தொழில்களிலும் கட்டுப்பாட்டின் அளவு பொருளாதாரச் சக்தி குவிந்துள்ளதை உணர்த்துகிறது.

சர்வாதீனஆய்வுக் குழுவின் விளக்கம்

இக் குழு பொருளாதாரச் சக்திக் குவிப்பை விளக்க அதை இரு வகைகளாகப் பிரித்தது. 1. உற்பத்தி வாரியான குவிப்பு (Product-wise Concentration) 2. நாடு முழுவதிலும் உள்ள குவிப்பு (Country-wise Concentraion). “ஒரு நிறுவனத்தாலோ அல்லது சில நிறுவனங்களாலோ ஒரு குறித்த பொருளின் உற்பத்திப் பங்கீடு கட்டுப்படுத்தப் படுவதை ‘உற்பத்தி வாரி குவிப்பு’ என்று இக் குழு விளக்கியது. ஒரு பொருள்-உற்பத்தியில் மட்டும் ஒரு தொழில் நிறுவனம் ஈடுபட்டால் அதைத் ‘தொழில் நிறுவன வாரி குவிப்பு’ (Industry-wise Concentration) என்று அழைக்கலாம்”[1] உற்பத்தி வாரி குவிப்பு என்பது ஒருசில நிறுவனங்களிடம் மட்டும் அங்காடிச் சக்தி (Market Power) குவிந்திருக்கும் நிலைக்கு ஒப்பானதாகும். நாடு முழுவதிலும் உள்ள குவிப்பு என்பது (Country-wise Concentra-

1 ‘சர்வாதீன விசாரணைக் குழுவின் அறிக்கை’ (1965) ப 2.

tion) ஒரு பிரிவுத் தலைவரின் (Group-master) பொதுக் கட்டுப்பாட்டின் கீழ் செயல்புரியும் பல்வேறு வகையான உற்பத்தியாளர்களையும், பங்கீடு செய்பவர்களையும் உள்ளடக்குகிறது. "ஒருநபர் அல்லது ஒரு குடும்பம் அல்லது ஒரு பிரிவினர் பல்வேறு பொருள்களை உற்பத்தி, பங்கீடு செய்யும் ஏராளமான பெரிய நிறுவனங்களின் மேல் ஆதிக்கம் செலுத்துவதில் இத்தகைய குவிப்பு ஏற்படுகிறது."

குவிப்பின் அளவு (Extent of Concentration)

இந்தியாவில் பொருளாதாரச் சக்திக் குவிப்பின் அளவைக் கணக்கிட பல்வேறு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டபோதும் முறையான (Official) ஆய்வுகளை மட்டும் கீழே ஆராயலாம். பேராசிரியர் 'ஹசாரி அவர்களின் திறமையான நடைமுறை ஆய்வுக்குப் பின்தான் தனியார் தொழில் நிறுவனங்களில் உள்ள சக்திக் குவிப்பைப் பற்றிய சிந்தனை மக்களிடையே பரவலாகத் தோன்றியது.

மஹாலனோபிஸ் குழுவின் ஆய்வு

தனியார் தொழில் துறையில் காணப்படும் குவிப்பை அறிய இக் குழு அளிக்கப்பட்ட மூலதனத்தை அடிப்படையாக எடுத்துக் கொண்டது. 1960-61-ல் ரூ. 5 லட்சத்திற்கும் குறைவாக அளிக்கப்பட்ட மூலதனத்தைக் கொண்ட நிறுவனங்கள் மொத்த நிறுவனங்களில் 86 சதவிகிதமாக இருந்தது. இக் குழுவின்படி கூட்டுப் பங்கு நிறுவனங்களின் அளவு மிகப் பெரியதாக இருப்பதால் பொருளாதாரச் சக்தியும், கட்டுப்பாடும் இவைகளிடம் அதிகமாகக் குவிந்துள்ளது. ரூ. 50 லட்சத்திற்கும் அதிகமாக அளிக்கப்பட்ட மூலதனத்தைக் கொண்ட பெரிய நிறுவனங்கள் மொத்த நிறுவனங்களில் 1·6 சதவீதம் மட்டுமே உள்ளன. ஆனால், இவைகள் மொத்த அளிக்கப்பட்ட மூலதனத்தில் 53 சதவீதத்தைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் பெற்றுள்ளன. குறிப்பிட்ட சில தொழில்களில் சக்தி குவிந்துள்ள அளவும் ஆராயப்பட்டது. தேர்ந்தெடுக்கப்பட்ட 21 தொழில்களில் 12 தொழில்கள் உற்பத்தி 5 சதவிகிதத்திற்கு மேலான பங்கைப் பெற்று உயர்நிலையில் இருந்தன. இவைகளில் நான்கில் ஒரு தொழில் பகுதி மட்டுமே உற்பத்தியில் 50 சதவிகிதத்திற்கு மேலான பங்கைப் பெற்றிருந்தது. 1951-ல் இருந்த குவிப்பைவிட 1960-ல் அது குறைந்திருந்தாலும் தனியார் தொழில் துறையில் அத்தகைய குவிப்பு தொடர்ந்து காணப்பட்டு வருகிறது.

பேராசிரியர் ஹசாரியின் ஆய்வு

எல்லா ஆய்வுகளையும் விடப் பேராசிரியர் ஹசாரியின் ஆய்வுதான் சிந்தனையைத் தூண்டிவிடும் அளவுக்கு உண்மை நிலையைப்

படம் பிடித்துக் காண்பித்தது. அவர் 1951க்கும் 1958க்கும் இடைப்பட்ட காலத்தில் இருபது தொழில் வகுப்பினரின் வளர்ச்சியை ஆராய்ந்தார். அதன்படி இவ் வகுப்பினரால் கட்டுப் படுத்தப்பட்ட பொது நிறுவனங்களின் (Public Companies) மொத்த மூலதன இருப்பு (Gross Capital Stock) 50 சதவீதத்திற்கு மேல் அதிகரித்தது. மேலும், டாடா, பிர்லா, மார்டின் பர்ன் (Martin Burn), டால்மியா-சாஹூ-ஜெயின் (Dalmia Sahu-Jain) ஆகிய உயர் நான்கு வகுப்பினரால் மட்டும் கட்டுப்படுத்தப்பட்ட பொது நிறுவனங்களின் மொத்த மூலதன இருப்பு 100 சதவீதத் திற்கு மேல் உயர்ந்தது. இவ்வுயர் நான்கு வகுப்பினருக்கு அடுத்த வரிசையிலிருந்து பான்குர் (Bangur), ஷாபூர்ஜீ, மபட்லால், ராமகிருஷ்ணு, மஹேந்திரா ஆகிய வகுப்பினரின் மொத்த மூலதன இருப்பின் மதிப்பு உயர் நான்கு வகுப்பினரின் இருப்பைவிட அதிகமாக இருந்தது வியப்புக்குரியதாகும். கீழ் வரிசையிலிருந்த இந்த ஐந்து வகுப்பினரின் (1951-ஐ அடிப்படை ஆண்டாகக் கொண்ட) வளர்ச்சிக் குறிப்பெண்கள் (Growth Indices) முறையே 571·74 (பான்குர்), 311·38 (ஷாபூர்ஜீ), 357·90 (மபட்லால்), 426·12 (ராம கிருஷ்ணு), 700·95 (மகேந்திரா) ஆக இருந்தது. ஆனால், உயர் நான்கு வகுப்பினரின் குறிப்பெண் 227க்கும் 244க்கும் இடையேதான் இருந்தது. துல்லியமான ஆதாரங் களுடன் டாக்டர் ஹசாரி 1951க்கும் 1958க்கும் இடைப்பட்ட காலத்தில் தனியார் தொழில் துறையில் பொருளாதார சக்தி உறுதியாகக் குவிந்ததாக ஆணித்தரமாகக் கூறுகிறார். "1951-ல் நான்கு உயர் அகத் தொழில் பகுதிகள் (Inner Circles) (டாடா, பிர்லா, மார்டின் பர்ன், டால்மியா—சாஹூ—ஜெயின்) அரசின் உரிமையல்லாத பொது நிறுவனங்களின் (Nongo-vernment Public Companies) மொத்த பங்கு மூலதனத்தில் 17·91 சதவீதத்தைப் பெற்றிருந்தன. இந்த விகிதம் 1958-ல் 22·34 சதவீதமாக அதிகரித்தது. இவைகள் கட்டுப்படுத்தும் அக, புறத் தொழில்களின் விகிதம் 21·85 சதவீதத்திலிருந்து 26·60 சதவீதமாக உயர்ந்தது. 1958-ல் டாடா, பிர்லா ஆகிய இருபெரும் வகுப்பினர் கட்டுப் படுத்தும் பொது நிறுவனங்களின் மொத்த மூலதன இருப்பு (Gross Capital Stock) அரசின் உரிமையல்லாத மற்றப் பொது நிறுவனங்களின் மொத்த மூலதன இருப்பில் ஐந்தில் ஒரு பகுதியாக இருந்தது."[1]

சர்வாதீன ஆய்வுக் குழுவின் மதிப்பீடு (Product-wise Concentration)

(A) இக் குழு உற்பத்தி வாரியான குவிப்பின் அளவைக் கணக்கிட்டது. உற்பத்தியாளர்களை உயர்ந்த, நடுத்தர, கீழ்

[1] ஆர். கே. ஹசாரி, 'இந்தியாவில் தனியார் தொழில் துறை' ப. 43 (The Corporate Private Sector in India)

நிலையில் உள்ள உற்பத்தியாளர்கள் என்று மூன்று வகைகளாகப் பிரித்தது. 75 சதவீதத்திற்கும் மேற்பட்ட பங்கினைப் பெற்றுள்ள உற்பத்தியாளர்கள் உயர்ந்தவர் என்றும், 60 சதவீதத்திற்கும் 75 சதவீதத்திற்கும் இடைப்பட்ட பங்கினைப் பெற்றுள்ளவர் நடுத்தரத்தவர் என்றும் 60க்கும், 50க்கும் இடைப்பட்டப் பங்கினைப் பெற்றுள்ளவர்கள் கீழ்நிலை உற்பத்தியாளர்கள் என்றும் பிரிக்கப்பட்டனர். ஆராயப்பட்ட நூறு பொருள்களில் மூன்றில் இரண்டு பங்கில் அதிக குவிப்பும், பத்து பொருள்கள் நடுத்தரமான வைகளாகவும், எட்டில் குறைந்த குவிப்பும், 17 பொருள்களில் குவிப்பே இல்லாமலும் காணப்பட்டது. பாலர் பால் உணவு, தானியங்கள், கோதுமைப் பொருள்கள், தையல் எந்திர ஊசிகள், காலம் காட்டிகள், தீக்குச்சிகள், மருந்துவகைகள், சில மோட்டார் வாகனங்கள் போன்ற பொருள்களில் 100 சதவீத குவிப்பு காணப்பட்டது. (B) நாடு முழுவதிலுமுள்ள (Country-wise Consentration) குவிதலை ஆராய இக் குழு 75 தொழில் வகுப்பினரின் விவரங்களைச் சேகரித்தது. டாடா, பிர்லா மார்டின் பர்ன், பன்கர் (Bangur) ஆகிய நான்கு தொழில்களுக்கும் அவைகளின் சொத்துகளின் அடிப்படையில் முதல் நான்கு இடங்கள் அளிக்கப்பட்டன. கடைசி 4 இடங்கள் முதியா (Muthiya), டாசியா, (Tatia), டால்மியா (Dalmia), லெஸ்லீ (Leslie) ஆகியவைகளுக்கு கொடுக்கப்பட்டன. 1963—64-ல் இந்த 75 வகுப்பினரின் சொத்துகளின் (assets) மதிப்பு ரூ. 2605·95 கோடியாகவும், மொத்த அளிக்கப்பட்ட மூலதனத்தின் அளவு ரூ. 646·32 கோடியாகவும் இருந்தது. அரசின் உரிமையில்லாத தொழில்கள், வங்கிகள் அல்லாத (Non-Banking) மற்ற நிறுவனங் களின் மொத்த அளிக்கப்பட்ட மூலதனத்தில் இந்த 75 வகுப்பினரின் சொத்துகள் 46·9 சதவீதமாகவும், அளிக்கப்பட்ட மூலதனம் 44·1 சதவீதமாகவும் இருந்தது. 5 கோடி சொத்துக்கும் மேலாகவும், பரவலான நடவடிக்கைகளையும் கொண்ட 16 நிறுவனங்கள் பல்வேறு அளவுள்ள குவிதலைப் பெற்றிருந்தன.

நிறுவன விவகாரத் துறையின் ஆய்வு (Study by The Department of Company Affairs)

ஒரு சமீபத்திய முறையான (official) கணக்கீட்டில் இரு உயர் வகுப்புகளாகிய டாடா, பிர்லா, மபத்லால், இவைகளைப் பற்றிய விவரங்கள் சேகரிக்கப்பட்டன. 1953-64க்கும் 1965-67க்கும் இடைப்பட்ட காலத்திற்கான ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. இக்காலத்தில் டாடா வகுப்பினரின் (Tata Group) நான்கு நிறுவனங்கள் குறைக்கப்பட்டும் இவ் வகுப்பில் 53 நிறுவனங்களே தொடர்ந்து இருந்தன. அவைகளின் மொத்த சொத்துகள்

மேற்குறிப்பிட்ட காலத்து ரூ. 132 5 கோடியாக அதிகரித்தன. நிரந்தரச் சொத்துகளின் (Fixed assets) வளர்ச்சி 24·5 சதவீதமாகக் குறைந்திருந்த போதிலும், உறுதியான சொத்துகள் (Tangible Assets) 32 சதவீதமாக அதிகரித்தன. அதேபோன்று பிர்லா வகுப்பினரின் நிறுவனங்கள் அதே காலத்தில் 151 லிருந்து 159 ஆக அதிகரித்தன. இவைகளின் மொத்தச் சொத்துகள் இக்காலத்தில் 73·8 சதவீதமாக அதிகரித்து ரூ. 510 கோடியாக இருந்தது. இது டாடாக்களின் வளர்ச்சியைவிட இரு மடங்கு அதிகமாகும். இக்காலத்தில் மபத்லால் வகுப்பும் குறிப்பிடத் தக்க வகையில் வளர்ச்சி பெற்றது. இதன் செலுத்தப்பட்ட மூலதனம் 185 சதவீதமாகவும் மொத்த உறுதியான சொத்துகள் 176 சதவீதமாகவும் அதிகரித்தன. 1966—67 ல் இவ்வகுப்பின் மொத்த உறுதியான சொத்துகளின் மதிப்பு 127 கோடியாகும்.

குவிதலின் காரணங்கள் (Causes of Concentration)

குவிதல் ஏற்படுவதற்கான காரணங்களை இருவகைகளாகப் பிரிக்கலாம். அவைகளாவன :

(1) பொதுவான காரணங்கள் (Universal Causes)

(2) இந்தியாவில் காரணங்கள் (Particular Causes)

பொதுக் காரணங்கள் (Universal Causes)

இப் பிரிவில் பெரும் தொழில்கள் விரைவான வளர்ச்சியைப் பெற்றதன் காரணங்களும், உலகம் முழுவதிலும் குவிதலுக்கான வாய்ப்பு ஏற்பட்டதற்கான காரணங்களும் ஆராயப்படலாம். அவைகளில் முக்கியமானவைகளாவன :

## 1. தொழில் நிறுவனங்களின் வளர்ச்சி

கூட்டுப் பங்கு நிறுவனங்கள் மிகப்பெரிய தொழில்களாக உருவாகச் சிறப்பான ஆற்றல்களைப் பெற்றுள்ளன. முக்கியமாக ஏராளமான மூலதனத்தை நிறுவனங்களில் முதலீடுசெய்ய அநேக தொழிலதிபர்கள் விரும்புகின்றனர். பிறப்பாலோ, சந்தர்ப்பத்தாலோ, அல்லது திறமை அனுபவத்தாலோ ஒரு சிலர் மட்டும் இத் தொழில்களில் ஆதிக்கம் பெறுகின்றனர். உலகத்திலேயே தொழில் உரிமை, தொழில் உரிமைக்கும் தொழில் கட்டுப்பாட்டிற்குமிடையே பிளவு இருப்பதால் பொருளாதார சக்தி தொழில் உரிமை பெற்றுள்ள ஒரு சிலரிடமே குவிகிறது. ஒரு சராசரி பங்குதாரர் மிகச்சிறியவராயும், அவருடைய வகுப்பு பரவலாகத் துண்டாடப்பட்டும் இருப்பதால் மேல்மட்டத்தில்

உள்ள ஒரு சிலரே தொழிலில் ஆதிக்கம் செலுத்துகின்றனர். இவ்வாறே ஜப்பானில் 1940 க்கு முன்பு 'ஜியாபட்ஸு' (Ziabatsu) என்ற வகுப்பினரிடம் பொருளாதார சக்தி குவிந்திருந்ததாக வில்லியம் W. லாக்வுட் தன்னுடைய நூலில் குறிப்பிடுகிறார்.[1]

## 2. தொழில் நுட்ப முன்னேற்றம்

சமீபத்திய தொழில் நுட்ப வளர்ச்சி பேரளவுத் தொழில்கள், இயந்திர அமைப்புகள், போன்றவைகளில் பெரும்பாலும் உற்பத்தியளவுச் சிக்கனங்களைப் பெறுவதற்காகப் பெருமளவில் பயன்படுத்தப்படுகின்றது. தொழில் நுட்பக் கல்வியின் முன்னேற்றம் பேரளவுத் தொழில்களை ஊக்குவித்து அதில் பேரளவு முதலீட்டை மேற்கொள்ளும் தொழிலதிபர்களிடம் பொருளாதாரச் சக்தி குவிவதற்கு வகை செய்கிறது. ஜப்பானில் தொழில் நுட்ப வளர்ச்சியில் 'ஜியாபட்ஸு' வகுப்பினர், நிர்வாகத்திறன், தொழில் நுட்பத் திறன் ஆகியவைகளைப் பெற்று அளவுச் சிக்கனங்களால் உற்பத்திச் செலவைக் குறைக்கவும், இலாபத்தில் பெரும்பகுதி தொழிலிலேயே முதலீடு செய்ய வாய்ப்பும் கிடைத்ததாக லாக்வுட்' விளக்குகிறார்.

## 3. தொழில் பரவலாகும் முறை
(Snowballing Process)

தொழிலில் முன்னோடிகளாக இருப்பவர்களின் வெற்றி அவர்களிடம் சில உறுதியையும், சுய ஆற்றலையும் அளித்து அவர்களுக்கு அதிக மூலதனம் கிடைக்கக் காரணமாய் உள்ளது. இவர்கள் புதிய அனுபவமில்லாத தொழில் துறைகளில் ஈடுபட்டால் இவர்களுக்கு ஏராளமான மூலதனம் கிடைக்கிறது. இதனால் தொழில் பரவலாக்கப்பட்டு முன்னோடிகள் வெற்றியின் உச்சிக் கட்டத்தை அடைகின்றனர். இவர்கள் தங்களின் குறைந்த மூலதன அளிப்பைக் கொண்டு தொழிலில் ஏராளமான ஆதிக்கம் செலுத்துவது கவனிக்கத் தக்கதாகும்.

## இந்தியாவில் குவிப்பிற்கான காரணங்கள்

அநேக காரணிகளால் இந்தியாவில் பொருளாதார சக்தி ஒரு சிலரிடமே குவிந்துள்ளது. அவற்றில் சிலவற்றைக் கீழே ஆராயலாம்.

1 W. W. லாக்வுட், ஜப்பானின் பொருளாதார வளர்ச்சி,
(W. W. Lockwood: Economic Development of Japan)

## 1. விரைவான தொழில் மயம்

இரண்டாம் உலகப் போருக்குப்பின் இந்தியாவில் தொழில் நடவடிக்கை வளர்ச்சியடையத் தகுந்த வாய்ப்புக் கிடைத்தது. இந் நடவடிக்கை பொருளாதாரத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டபின், குறிப்பாக 1953-54க்குப்பின் அதிவிரைவான வளர்ச்சியைப் பெற்றது. குறுகிய காலத்தில் நாடு விரைவாகத் தொழில்மய மாக்கப்படவேண்டும் என்று கருதப்பட்டதால் ஏற்கெனவே தொழில் துறையில் ஆதிக்கம் செலுத்திவரும் வகுப்பினரை நம்பி யிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. சர்வாதீன ஆய்வுக்குழு கீழ்க்கண்டவர்களில் இந்நிலையை விளக்குகிறது.

“இந்தியா விடுதலை பெற்ற உடனேயே, நாட்டை விரைவாகத் தொழில் மயமாக்க மேற்கொள்ளப்பட்ட வளர்ச்சி நடவடிக்கை களோடுகூடவே ஏற்கெனவே சக்திபெற்றுச் செல்வந்தர்களாய் இருந்த ஒரு சிலரிடமே அல்லது வகுப்பினரிடமே பொருளாதார சக்தி மேன்மேலும் குவிந்தது.”[1]

## 2. தொழில் இந்தியர்களின் கைக்கு மாற்றப்படல் (Wave of Indianisation)

விடுதலைக்குப்பின்பு அநேக இங்கிலாந்து தொழிலதிபர்கள்இந்தியாவில் தங்கள் தொழில்களை இந்தியர்களின் கையில் ஒப்படைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இச் சமயத்தில் ஏற்கெனவே தொழிலிலும், வர்த்தகத்திலும் உயர் நிலையில் இருந்த பணக்கார இந்தியர்களிடம் தொழில்கள் ஒப்படைக்கப்பட்டன. இத்தகைய முறையில் தொழில்கள் கைமாறியதால் பாங்கர்கள் (Bankers), டால்மியா-சாஹு-ஜெயின், பிர்லாக்கள், போன்ற தொழில் வகுப்பினர்களிடம் செல்வாக்கும் செல்வமும் பொருளாதார சக்தியும் குவிந்தன.

## 3. தொழில் உரிம முறை (System of Industrial licensing)

தொழில்சார் உரிமம் வழங்கும் முறை சமச் சீரான தொழில் வளர்ச்சியைச் சாதிக்கவும், நாட்டைத் தொழில் மயமாக்கவும் மேற்கொள்ளப்பட்டிருந்த போதிலும், இம்முறை துரதிஷ்டவசமாகப் பெரிய தொழில்களுக்கே சாதகமாக அமைந்தது. 1959-க்கும் 63-க்கும் இடைப்பட்ட காலத்தில் உரிமம் பெற வந்திருந்த 9,610 விண்ணப்பங்களை சர்வாதீன விசாரணைக் குழு ஆராய்ந்தது. இவைகளில் மிகப் பெரிய தொழில் வகுப்பினரிட

1 “இந்திய அரசு, சர்வாதீன ஆய்வுக்குழுவின் அறிக்கை” ப.—6.

மிருந்து வந்த விண்ணப்பங்கள் 1433 ஆகும். இவைகளில் 407 விண்ணப்பங்கள் மட்டுமே தள்ளுபடி செய்யப்பட்டன. ஆனால் சிறிய தொழில் துணிவோரிடமிருந்து வந்த 8177 விண்ணப்பங்களில் 2945 விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டன. பெரிய தொழில் களின் விண்ணப்பங்களில் தள்ளுபடி 28·4 சதவீதமாகவும் சிறிய தொழில்களில் தள்ளுபடி 34·9 சதவீதமாகவும் இருந்தது. பெரிய தொழில்கள் உள்நாட்டு மூலப்பொருள்களைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கச் சக்தி பெற்றிருந்ததால் அவைகளுக்கு அதிகமான உரிமங்கள் வழங்கப்பட்டன. 1. பெரிய தொழில்கள் உரிமங்களைப் பயன்படுத்தி அதிக முதல் சேகரித்து உர்பத்தியைப் பெருக்குகின்றன. 2. பெரிய தொழிலதிபர்கள் நிலையாகத் தொழிலில் வெற்றியை நிலைநாட்டியுள்ளார். ஆனால், புதிய தொழில் துணிவோர் அதை நிருபிக்க வேண்டியுள்ளது. 3. பெரிய தொழிலதிபர்கள் வெளிநாட்டினருடன் தொழில் ஒத்துழைப்பைப் (Foreign Collaborations) பெற முடிகிறது. சுங்கவரிகளாலும், இறக்குமதித் தடைகளாலும் தொல்லைப்படும் நிலையைப் போக்க சக்தி வாய்ந்த இந்தியத் தொழிலதிபர்களுடன் வெளிநாட்டுத் தொழிலதிபர்கள் கூட்டு ஒப்பந்தம் மேற்கொள் கின்றனர். சர்வாதீன ஆய்வுக் குழுவின் கருத்துப்படி "நற்பெயரைக் கொண்ட வெளிநாட்டு ஒத்துழைப்பாளரின் (Collaborator) கூட்டு ஒப்பந்தத்துடன் ஒரு நிறுவனம் உரிமம் கேட்டால் அது அளிக்கப்படுகின்றது. இதனால் பெரிய தொழி லதிபரிடம் சக்தி குவிகிறது."[1]

## 4. இறக்குமதியும் வெளிநாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடும்

இறக்குமதி, மாற்றுவீதக் கட்டுப்பாடுகளால் (Exchange-Control) பயனடைவோர்களுக்கு ஆண்டுக்கு ரூ. 450 கோடி கிடைக்கிறது. இதனால் சர்வாதீன சக்தி ஒரு சிலரிடமே பெருமளவில் குவிகிறது. இத்தகைய கட்டுப்பாடுகளால் வெளி நாட்டுச் செலாவணியில் கள்ளக் கடத்தல், கறுப்புச் சந்தை நடத்துதல் போன்ற சமூக நீதிக்குப் புறம்பான நடவடிக்கைகள் ஏற்படுகின்றன.

## 5. சுலபமாகக் கடன் பெறுதல்

வங்கிகள், மற்ற நிதி நிறுவனங்களிடமிருந்து ஏராளமான நிதி வசதியைப் பெரிய தொழில்கள் பெறுவதற்குப் போதிய சக்தி பெற்றுள்ளன. ஆனால், சிறிய தொழில்களில் இடர், நிச்சயமற்ற

1 'சர்வாதீன ஆய்வுக் குழுவின் அறிக்கை' ப-8.

தன்மை, அதிகமாக இருக்குமாதலால் இவைகளுக்கு அதிக நிதி வசதி கிடைப்பதில்லை. 1963-64-க்கும் 1966-67-க்கும் இடைப் பட்ட காலத்தில் டாடா, பிர்லா, மபட்லால் ஆகிய மூன்று வகுப் பினரின் நீண்டகால, குறுகிய காலக் கடன்கள் பெருமளவில் அதிகரித்தன. பிர்லா வகுப்பினரின் குறுகிய கால, நீண்ட காலக் கடன் இக் காலத்தில் ரூ. 87 கோடியிலிருந்து ரூ. 191 கோடியாக அதிகரித்தது. இது சுமார் 119 சதவீத அதிகரிப்பைக் குறிக்கிறது. இதே காலத்தில் மபட்லால் வகுப்பினரின் கடன் 20 சதவீதத்திலிருந்து 47 சதவீதமாக அதிகரித்தது. ரூபாய் 50 கோடிக்கும் மேலாக இக் காலத்தில் இவ் வகுப்பினரின் கடன் அதிகரித்தது. டாடா வகுப்பினரின் மொத்த சொத்து அதிகரிப் பாகிய ரூ. 132·5 கோடியில் ரூபாய் 100 கோடி கடன் பணமாகும். வங்கிகள், இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகம், தொழில் நிதி நிறுவனங்கள், தனி வங்கியாளர்கள் (Individual financiars) ஆகிய அமைப்புகள் சமீபத்தில் பேரளவுத் தொழில்களுக்கு அதிக நிதி வசதி அளித்து வருகின்றன.

## 6. மற்றக் காரணிகள்

ஓர் உற்பத்தித் துறையில் முன்னோடிகளாக இருந்து உற்பத்தி செய்யும் தொழில் துணிவோர்கள் மேலும் புதுவகை உற்பத்தியில் ஈடுபடச் சக்திப் பெற்றிருக்கின்றனர். புதிய துறைகளில் இலாபம் அதிகமாயிருப்பதால் புதிய தொழிலதிபர்கள் அத் தொழிலில் பங்கேற்க விரும்புவர். ஆனால் ஏற்கெனவே சர்வாதீன சக்தி பெற்றுள்ளவர்கள் இத் துறையில் திறமையுடன் செயலாற்றுவதால் புதியவர்களுக்கு வாய்ப்பு மங்கி விடுகிறது. மேலும் சந்தையின் அளவு குறுகியதாய் இருப்பதாலும், புதியவர்கள் உற்பத்தியில் பங்கேற்க முடிவதில்லை. கச்சாப் பொருள் தட்டுப் பாட்டினால் ஒரு சில சக்தி பெற்ற நிறுவனங்கள் மட்டுமே தொழிலில் ஈடுபட முடிகிறது. எடுத்துக்காட்டாக இந்திய 'செம்புக் கழகம்' (Indian-Copper Corporation) வெகு நாட்களாகவே செம்பு உற்பத்தியில் தனி உரிமை பெற்று விளங்குகிறது. தனிக் காப்புரிமைச் சட்டங் களும் (Patent laws) குவிப்பை அதிகரித்து வருகின்றன. மேலும் பெரிய தொழில்களுக்குச் சில நுட்ப அமைப்புகள் இருப்பதாலும், அவைகள் பொருளாதாரத் துறையில் ஆதிக்கம் பெற்று விளங்கு கின்றன. உதாரணமாக நிர்வாக பதிலாள் முறை (Managing-Agency System) இந்தியத் தொழில் மயத்தை வேகப்படுத்தியிருந்த போதிலும் நாட்டிலே பெரிய தொழில்களிடம் பொருளாதார சக்தி குவிவதற்குக் காரணமாயிருந்தன. பெரிய தொழில்களின் நிதிவசதி பல்வேறு நிறுவனங்களிடையே முதலீட்டை அதிகரிக் கவும் வகை செய்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக இயகுக்குநர்

களின் ஒருங்கிணைந்த சேவைகளால் (Interlocking of Directorates) பொருளாதார சக்தி ஒருசில தொழிலதிபர்களிடமே குவிகிறது. இயக்குநர் ஒருங்கிணைப்பு என்பது இயக்குநர் ஒருவர் பொதுவாக ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிறுவனங்களின் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தும் முறையைக் குறிக்கிறது. இத்தகைய ஒருங்கிணைப்பு ஒரே உற்பத்தித் துறையிலோ அல்லது அதன் சம்பந்தப்பட்ட தொழில்களிலோ ஏற்படும். இத் தொழிலதிபர்களிடம் சிறப்பான நிர்வாக அறிவு, ஆற்றல், திறமை, அனுபவம், இருப்பதால் இவர்களிடமே பொருளாதார சக்தியின் குவிப்பு அதிகரிக்கிறது. இத்தகைய குவிப்பு அதிகரிப்பதற்கு வங்கிகள் சாதனமாய் அமைந்துள்ளன. ஏனெனில் வங்கிகளின் ஏராளமான பங்குகளை இவர்கள் வாங்குவதால் இவ் வங்கிகளின் நிதிவசதியை இவர்கள் கட்டுப்படுத்துகின்றனர். இவ் வங்கிகள் இத் தொழிலதிபர்களின் பிரதிநிதிகளாகவும், காப்பாளர்களாகவும், (Trustees) செயலாற்றுபவர்களாகவும் (Executors) பணிபுரிகின்றன.

## குவிப்பின் விளைவுகள்
## (Consequences of Concentration)

சக்திக் குவிப்பு பொதுவாகச் சிலரால் விரும்பப்படுவதில்லை. ஏனெனில் அது சாதாரணமான மக்களைப் பெரிதும் பாதிப்பதோடு நாட்டில் ஏராளமான சீர்கேடுகளை ஏற்படுத்தி ஏற்றத்தாழ்வை வளர்க்கிறது. ஆனால் பொருளாதார அறிஞராகிய சூம்பீட்டர் (Schumpeter), சர்வாதீன சக்திகள் வளர்ச்சி முறைக்கு இருவகைகளில் துணைபுரிவதாக வாதாடுகின்றார். முதலாவதாக, திறனுடைய தொழிலதிபர்களின் ஆற்றலின் பற்றாக்குறை அதிகமாயிருப்பதால் அதை வீணடிக்காமல் ஆக்கத்திற்காகப் பயன்படச் செய்ய வேண்டியது அவசியமாகிறது. அவர்கள் உற்பத்தியில் அளவுச் சிக்கனங்களைச் சுலபமாக அடைய முடிகிறது. இரண்டாவதாக, அங்காடி பலமுடையதாய் விளங்க இவர்களின் பணி இன்றியமையாததாகும். போட்டியின் விளைவாகப் பொருள்களின் விலைகள் கீழிறங்காமல் பாதுகாக்க இவர்கள் ஆற்றலுடன் செயலாற்றுகின்றனர். மேலும், திறனுடைய தொழிலதிபர்களால் அங்காடி வலுப் பெற்று விளங்குவதற்குக் காரணம் அவர்களின் புத்தாக்கங்கள் (Innovations) ஆகும்.

### நன்மைகள்

சூம்பீட்டரின் கருத்துப்படி சர்வாதீன சக்திகள் நீண்ட நாள்களாக நிலைத்திருக்க முடியாது. ஏனெனில் புத்தாக்கங்களின் பயன்பாடு மறைந்ததும் சிலவகைச் சக்திகளின் செயல்முறைகளால் சர்வாதீனங்கள் வீழ்ச்சியடைகின்றன. W. W. லாக்வுட்

அவர்கள் ஜப்பானில் சர்வாதீன சக்தி 'ஜியாபட்ஸ்' என்ற வகுப்பினரிடம் குவிந்ததால் ஏற்பட்ட நன்மைகளை விவரிக்கிறார். பொருளாதார சக்தி இவ் வகுப்பினரிடம் குவிந்ததால் முதலாக்கம், நவீனமயம், தொழில் நுட்பம், அளவுச் சிக்கனங்களைப் பெற்ற நிறுவனங்கள், தொழில் முதலீடு, ஆகியவைகள் ஜப்பானில் 1950க்கு முன் வெகுவிரைவாக வளர்ச்சியடைந்ததாக அவர் வர்ணிக்கிறார்.[1] இந்திய சர்வாதீன ஆய்வுக் குழுவும் தன் அறிக்கையில் பொருளாதார சக்தி குவிவதினால் ஏற்படும் சில சாதக விளைவுகளை விளக்கியுள்ளது. பொருளாதார சக்தி குவிவதால் நாட்டில் பொருளாதார வளர்ச்சி மேலோங்குகிறது. மேற்கு ஐரோப்பா, ஜப்பான் போன்ற நாடுகளிலுள்ள தொழில் வளர்ச்சி மிகக் குறைவாகும். எனினும் இந்தியாவின் ஒரு சில தொழிலதிபர்களால்தான் இந்த அளவு வளர்ச்சியாவது பெறமுடிந்தது. நாட்டில் தொழிலதிபர் பற்றாக்குறையால் இந்த ஒருசிலரிடமே பொருளாதார சக்தி குவிந்தது. எனவே, இவர்கள் நாட்டின் உற்பத்தி, வருமானப் பங்கீடு ஆகியவைகளைக் கட்டுப்படுத்தினர். இதன் விளைவாக இவர்களிடம் பொருளாதார சக்தி அதிகமாகக் குவிந்ததும் மேன்மேலும் இவர்கள் தொழில்களை முன்னேற்றமடையச் செய்தனர். பொருளாதார சக்தி குவிப்பால் நாட்டில் பெருமளவில் மூதலாக்கம் தோன்றவில்லை என்பது ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும்.[2]

## பொருளாதார சக்தியும் சர்வாதினமும்

பொருளாதார சக்தி, வளர்ச்சிக்குப் பலனுள்ளதாக இருக்கும் என்பது வரலாற்று உண்மையாக இருந்த போதிலும், அதனால் அநேக தீயவினைகளும் ஏற்படுகின்றன. சர்வாதீனத்தைவிட பெருளாதார சக்தி என்பது பல துறைகளை உள்ளடக்குகிறது. சர்வாதீனம் சந்தையின் அமைப்பிலும் இயல்பிலும் காணப்படுகிறது. ஆனால் பொருளாதார சக்தி, பொருளாதார நிறுவனங்களின் அமைப்பு முழுவதிலும் தென்படுகிறது. எனவே, பொருளாதார சக்தி பல கோணங்களிலிருந்து உருவாகி நன்மைகளையும் தீமைகளையும் பெற்றுள்ளது. தகுந்த பொதுக் கொள்கைகளினால் புத்தாக்கங்கள் அதிகரித்து ஆரம்பக் கட்டத்தில் வளர்ச்சியைத் தோற்றுவிக்கச் சக்திக்குவிப்பு துணைபுரிகிறது. ஆனால், வளர்ந்து வரும் நாடுகளில் குவிப்பு தொடர்ந்து அதிகரிப்பதால், மக்களாட்சியைக் கொண்ட சமுதாயத்தில் சமதர்மத்தைச் சாதிப்பதில் தொல்லைகள் ஏற்படுகின்றன. அவற்றை இனி ஆராயலாம்.

1 W. W. லாக்வுட். 'ஜப்பானின் பொருளாதாரவளர்ச்சி'

2 சர்வாதீன ஆய்வுக்குழுவின் அறிக்கை, ப. 136.

## 1. தடைபட்ட முதலாக்கம்
(Inhibition to Capital Formation)

செல்வந்தர்களிடமும், பெரிய தொழில்களிடமும், அதிக சேமிப்பு வசதி இருந்த போதிலும் நாட்டில் பெருமளவு முதலாக்கம் ஏற்படவில்லை. இதற்கு அநேக காரணங்கள் உண்டு. முதலாவதாக, செல்வந்தர்களின் வீண்டம்ப நுகர்வாலும் (Conspicuous Consumption) ஆடம்பர வாழ்க்கையாலும், உண்மைச் சேமிப்பு மறைந்துவிடுகிறது. இரண்டாவதாக இவர்களின் சேமிப்பு ஆக்கத்திற்குப் பயன்படாத நிலம், ஆபரணங்கள் போன்ற முதலீடுகளில் செலவிடப்படுகிறது. மூன்றாவதாக, குவிப்பின் விளைவால் சர்வாதீன சக்திகள் தோன்றிப் புதிய தொழில் துணிவோர் தொழில்களில் பங்கேற்க முடிவதில்லை. இதனால் புதுமுதலாக்கம் தடைபடுகிறது. தனியார் தொழில் நிறுவனங்களில் கூடுதல் உபரி பணத்தொகை யூகவாணிகம் போன்ற நடவடிக்கைகளில் செலவிடப்படுவதால் உண்மை முதலாக்கம் குறைகிறது.

## 2. திறமை தடைபடுத்தப்படல்
(Negation of Efficiency)

பொருளாதார சக்தி குவிவதால் பேரளவு நிறுவனங்கள் அகச்சிக்கனங்களையும், தொழில் நுட்ப முன்னேற்றத்தையும் முழு அளவில் பயன்படுத்த முடியும் என்று பொதுவாகக் கருதப் படுகிறது. உண்மையில் இந்தியா போன்ற வளர்ந்துவரும் நாடுகளில் இவ்வாறு ஏற்படுவதில்லை. பெரிய தொழில்கள் பல சிறிய நிறுவனங்களின் சுய சக்தியைத் தடுத்து அவைகளை முன்னேறவிடாமல் செய்து விடுகின்றன. இந் நாடுகளில் மேற்கத்திய நாடுகளின் தொழில் நுட்பப் புரட்சி (Technological Revelution) கண்மூடித்தனமாகப் பின்பற்றப்படுகிறது; அவற்றைப் பின்பற்றுவதும் சீரான முறையில் இல்லை. இதன் விளைவாக இந் நாடுகளில் சுதந்திர விஞ்ஞான ஆராய்ச்சி முறையாகவே புறக்கணிக்கப்பட்டு ஆக்கத்திறமையின் அடிப்படைத் தூண்கள் சிதைக்கப்படுகின்றன.

## 3. முதலீட்டின் தவறான போக்கு
(Misdirection of investment)

சேமிப்பு டம்ப நுகர்ச்சிக்காகப்பயன்படுத்தப்பட்டுவீடிணக்கப் படுவதோடு மூலதனம் டம்பப் பொருள்களின் உற்பத்திக்காகவும் செலவழிக்கப்படுகிறது. இது வளர்ந்துவரும் பொருளாதாரத்தின்

முதலீட்டுக் கொள்கைக்குப் புறம்பானதாகும். அடிப்படையான முதல் பொருள்கள், சமூக நலனை மேம்படுத்தும் அமைப்பு, இன்றியமையாத நுகர்வுப் பொருள்கள் ஆகியவைகள் முதலீட்டில் முதலிடம் பெறுமல் புறக்கணிக்கப்படுகின்றன. இதற்குப் பதிலாக குளிர்ப்பதன பெட்டிகள் (Refrigerators), மின் சாதனப் பொருள்கள், டெலிவிஷன் பெட்டிகள், மோட்டார் வண்டிகள், ஆடம்பர ஆடைகள், போன்ற பொருள்களை உற்பத்தி செய்வதில் பணம் முதலீடு செய்யப்படுகின்றது. திறன், வெளிநாட்டுச் செலாவணி, மின்சக்தி, போக்குவரத்து, மூலதனம் போன்ற பற்றுக்குறை உள்ளீடுகள் (Inputs) இத்தகைய உற்பத்தியில் வீணடிக்கப்படுவதால் திட்டமிட்ட வளர்ச்சியின் அம்சங்களும் அமைப்புகளும் சிதறடிக்கப்படுகின்றன.

## 4. சர்வாதீன சக்தியின் எழுச்சி

தொழிலில் சர்வாதீன சக்தி இல்லாதிருந்தபோதும் பொருளாதார சக்தி குவிகிறது. சர்வாதீன சக்தியோடு கூடவே பொருளாதார சக்திக் குவிப்பும் தோன்றுகிறது. இதனால் ஒரு சிலரிடம் சக்தி குவிந்து சர்வாதீனநிலை ஏற்படுகிறது. எனவே, சந்தையின் அளவும் சுருங்கி, பொருளை வாங்குவோரும் ஒரு விற்பனையாளரை விட்டு வேறொருவரிடம் வாங்கமுடிவதில்லை. இதனால் பொருள்களின் விலை அதிகரித்து நுகர்வோரின் பொது நலன் பாதிக்கப்படுகிறது. சர்வாதீனநிலை தோன்றாவிடினும் ஒருசிலர் சர்வாதீனம் (Oligopoly) ஏற்பட்டு அவர்களிடம் சக்தி குவிகிறது. இதனாலும் பொதுமக்கள் நலன் பாதிக்கப்படுகின்றது.

## 5. சிறுதொழிலதிபர்கள் அகற்றப்படல்

சக்திக் குவிப்பால் பேரளவுத் தொழில்கள் நவீன தொழில் நுட்பத்தையும், அளவுச்சிக்கனங்களையும் பெற முடிந்த போதிலும், இந் நடவடிக்கைகளால் சிறிய தொழிலதிபர்களின் தனித்திறமையும் ஊக்கமும் அழிக்கப்படுகிறது. இதனால் சிறிய தொழில் நிறுவனங்கள் இடர்தாங்கும் பயிற்சியையும் நிர்வாகத்திறமையையும் பெறமுடிவதில்லை. இவ்வாறு சிறு தொழிலதிபர்கள் தொழில்களிலிருந்து அகற்றப்படுவதால் நாட்டில் நிர்வாகத்திறன், தொழிலதிபரின் ஆற்றல் ஆகிய வளங்கள் சுருங்குவது தொழில் வளர்ச்சிக்குப் பெரும் இடையூறாகும். இதனால் நாட்டில் வருமான, செல்வப் பங்கீட்டில் ஏற்றத்தாழ்வு அதிகரிக்கிறது.[1]

1 சர்வாதீன ஆய்வுக் குழுவின் அறிக்கை, பக். 138.

## சக்திக்குவிப்பைக் கட்டுப்படுத்துதல்

சமதர்ம சமுதாயத்தை அமைக்க விரும்பும் நாட்டில் ஏகபோகங்கள், பொருளாதார சக்திக் குவிப்பு ஆகியவைகளுக்கு எதிரான கிளர்ச்சி ஏற்படுவது இயற்கையாகும், இத்தகைய சக்திகளால் இந்தியாவிலும் தீய விளைவுகள் ஏற்பட்டிருப்பது வெளிப்படையான உண்மையாகும். சமதர்ம சமுதாயத்தை அமைக்க முட்டுக்கட்டையாக இருக்கும் இச் சர்வாதீன சக்திகளை ஒழித்துக்கட்ட வேண்டும் என்ற துடிப்பு இந்திய அரசியல் சட்டத்தின் ஓர் அம்சமாகிய அரசு வழி காட்டுக் கருத்துக் கொள்கையில் (Directive Principles of State policy) தெளிவாகப் பிரதிபலிக்கிறது, மஹாலனோபிஸ் குழுவும், சர்வாதீன ஆய்வுக் குழுவும், எந்தெந்த வகைகளில் சர்வாதீன சக்திகளின் தீயவிளைவுகளைப்போக்க முடியும் என்பதை ஆராய்ந்து கீழ்க்கண்டவற்றைப் பரிந்துரைத்துள்ளன.

## 1. பொருளாதார சக்திக்குவிப்பைத் தடுக்கும் வழிகள்

இந்தியாவில் சிறிய தொழில்கள் பெரிய தொழில்களுடன் இணைந்துவிடுதல், பலதரப்பட்ட தொழில்பகுதிகள் ஒன்றுசேர்தல் போன்றவைகள் அதிகரித்துள்ளன. தொழிலில் பலவகைப் பட்ட சர்வாதீனத் தடுப்பு வர்த்தக நடவடிக்கை (Restrictive Trade practices) களாலும் சக்திக்குவிப்பு அதிகரிக்கிறது. எனவே, பலதரப்பட்ட நிறுவனங்களின் தொழில் (Multi-Firm) அளவுகளை நேரடியாக வரையறுத்தால் குவிப்பைத் தடுக்க முடியும். இத்தகைய கருத்துகளை உள்ளடக்கிய மசோதா(Bill) ஒன்று நாடாளு மன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. ஒரு நிறுவனத்தின் தொழில் அளவுகளை வரையறுக்கச் சில நெறிமுறைகள் கையாளப்படும். ஒரு தொழில் வகுப்பினரின் சொத்துகளின் பணமதிப்பு, அவைகள் பெற்றுள்ள குவிப்பை உணர்த்தும். அந்த மதிப்பு ஒரு குறிப்பிட்ட வரையறைக்கு மேற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தொழில்களை மிகச்சிறிய பகுதிகளாகத் துண்டாக்கினால் சிக்கன மில்லாப் பகுதிகள் தோன்றி, ஆக்கம் வீணடிக்கப்படும். எனவே, சொத்துகளின் மதிப்பு ஒரு குறித்த பணவரையறைக்குமேல் சென்றுவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மேலும், சக்தி குவிவதற்குச் சாதனமாக (Means) அமையும் மூன்று முக்கிய நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்த வேண்டும். அவைகளாவன : 1. தொழில் கணிசமாக விரிவாக்கப்படுதல் 2. புதியதொழில் நிறுவனங்களைத் தோற்றுவித்தல் 3. தொழில்கள் ஒருங்கிணைதல் Merger). ஒரு தொழில்வகுப்பு, அளவுக்கு மேல் அதிகரித்துவிடாமல் தடுப்பது இச் சட்டத்தின் ஓர் அம்சமாகும். மற்றும் ஒரே

வகுப்பினர் மேன்மேலும் புதியதொழில்களைத் தோற்றுவித்தலைக் கட்டுப்படுத்துவதும் இச் சட்டத்தின் ஒரு முக்கிய நோக்கமாகும். தொழில்கள் ஒன்றுறக் கலக்கும் முன் அரசின் அனுமதி பெற வேண்டியது இன்றியமையாததாகும்.

## 2. சர்வாதீன வர்த்தக நடைமுறைகளைக் கட்டுப்படுத்துதல் (Control of Monopolistic Trade Practices)

சர்வாதீன வர்த்தக நடைமுறை என்பது பொருள், பணிகளின் உற்பத்தி, அளிப்பு, பங்கீடு, ஆகியவைகளைக் கட்டுப்படுத்தி அல்லது குறைத்து, பொருள்களின் விலைகளை நியாயமற்ற முறையில் அதிகரித்தலைக் குறிக்கிறது. சில சமயங்களில் நியாயமற்ற முறையில் போட்டியைத் தடுத்து அல்லது குறைத்து சர்வாதீன வர்த்தக நடைமுறைகளை மேற்கொள்கின்றனர். மேலும், தொழில் நுட்ப வளர்ச்சி, முதலீடு, ஆகியவைகளைப் பொதுநலனுக்குப் புறம்பாகக் குறைத்து, பொருள்களின் தரத்தையும் மோசமடையச் செய்கின்றனர். எனவே, இத்தகைய நடவடிக்கைகளின்மேல் பொதுக்கட்டுப்பாடு இன்றியமையாததாக விளங்குகிறது. இச் சட்டத்தின்படி மத்திய அரசு சில நெறிமுறைகளை வகுத்துள்ளது. இவ் விதிமுறைகளுக்கு மாறாக வர்த்தக நடைமுறைகளை மேற்கொள்பவர்களின் மேல் தண்டனை விதிக்கவும் மத்திய அரசுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது.

## 3. தடுப்பு வர்த்தக நடைமுறைகளைக் கட்டுப்படுத்துதல் (Control of Restrictive Trade Practices)

சர்வாதீன வர்த்தகக் கட்டுப்பாடு என்பது ஒரு தனிநபர் அல்லது ஒரு சில நிறுவனங்களின் அங்காடி ஆதிக்க இயல்பைக் கட்டுப்படுத்துவதாகும். தடுப்பு வர்த்தகச் செயல் முறைகள் என்பது ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்ட வர்த்தகர்கள் இணைந்த சந்தையில் ஆதிக்கம் பெறவும், போட்டியைத் தவிர்க்கவும், சுய ஒப்பந்தங்களை மேற்கொள்ளும் ஒருமித்த நடவடிக்கைகளைக் குறிக்கிறது. இத்தகைய தடுப்பு முறைகளால் போட்டி நசுங்கி, வளங்களின் சீரான பயன்பாடு தடுக்கப்பட்டு, விலைகளும் அதிகரித்து, நுகர்வோரைப் பெரிதும் பாதிக்கின்றன. இத்தகைய ஒப்பந்தங்கள், அமைப்பு முறைகள், தடுப்பு வர்த்தக நடவடிக்கைப் பதிவாளரிடம் (Registrar of Restrictive Trade Practices) பதிவு செய்யப்பட வேண்டும். சில விதிமுறைகளின் அடிப்படையில் இவ் வொப்பந்தங்கள் பதிவு செய்யப்படுகின்றன. 1970-ல் திரு. அழகிரிசாமி அவர்களைத் தலைவராகக் கொண்ட சர்வாதீன தடுப்பு வர்த்தக

நடைமுறைக் குழு (Monopolies and Restrictive Trade Practices Commission) ஒன்றும் அமைக்கப்பட்டது. இக் குழு இந் நடைமுறைகளைக் கண்காணிக்கவும், கட்டுப்படுத்தவும் வகைசெய்யும். பொதுவாக வருமான, செல்வ ஏற்றத்தாழ்வுகள், சர்வாதீன பொருளாதார சக்தி குவிதல் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தக் கீழ்க்கண்ட எதிரீட்டு நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன.

## 1. கம்பெனிச் சட்டச் சீர்த்திருத்தங்கள்
(Company Law Reforms)

கம்பெனி நிர்வாகங்களின் பல்வேறு வகையான துர் நடைமுறைகள், சமூக விரோத நடவடிக்கைகள் ஆகியவைகளைக் கட்டுப்படுத்தக் கம்பெனிச் சட்டங்கள் சமீபத்தில் திருத்தப்பட்டன. அப்படியிருந்தும் பதிலாள் நிர்வாக முறையின் (Managing Agency-System) தவறான நடவடிக்கைகள் நீங்காததால் ஏப்ரல் 1, 1971-ல் அம் முறை ஒழிக்கப்பட்டது.

## 2. உரிமம் வழங்கும் முறை
(Licensing system)

தொழில்களின் (வளர்ச்சி, கட்டுப்பாடு,) சட்டத்தின் அடிப்படையில் புதிய தொழில் பகுதிகளுக்கு 'உரிம முறை' உட்புகுத்தப்பட்டது. ஆனால் பெரிய தொழிலதிபர்கள் இவ் வொழுங்கிலிருந்து தப்புவதற்குத் தங்கள் சொந்த வழிமுறைகளை மேற்கொள்ளுகின்றனர். இதைத் தடுத்து, 'சர்வாதீனமும் குவிதலும்' தகர்த்தெறியப்பட வகை செய்யப்படவேண்டும். 1970-ல் மேற்கொள்ளப்பட்ட புதிய தொழில் உரிமக் கொள்கையும் முறையும் பெரிய தொழில்களிடம் குவிதல் ஏற்படுவதைத் தடுக்க வகை செய்யும்.

## 3. மூலதன அளிப்புக் கட்டுப்பாடு
(Control over Capital issues)

எல்லாவகை மூலதன அளிப்பு நடவடிக்கைகளும் அரசின் கட்டுபாட்டிற்குள்ளேயே உள்ளன. அப்படியிருந்தும் சர்வாதீன சக்திகளைத் திறம்பட ஒழித்துக்கட்ட முடியவில்லை. எனவே, மேலும் கடுமையான கட்டுப்பாடுகளைத் தகுந்த முறையில் மேற்கொள்ள வேண்டும்.

## 4. ரிசர்வ் வங்கியின் தேர்ந்த கடன் கட்டுப்பாடு
(Selective Credit Control by Reserve Bank)

தொழில், வர்த்தக நடவடிக்கைகளில் சர்வாதீன சக்திகளை ஒடுக்க மேலும் தீவிரமாக இந்திய ரிசர்வ் வங்கி தேர்ந்த கடன் கட்டுப்பாட்டு முறைகளைக் கையாள வேண்டும்

## 5. பொதுத்துறையை விரிவாக்குதல்
(Expansion of the Public sector)

தனியார் துறையில் உள்ள பெரிய தொழில்களின் வளர்ச்சியைக் குறைக்கத் தக்க முறையில் பொதுத் துறையில் உள்ள தொழில்களைப் பெருமளவில் விரிவாக்க வேண்டும். இதனால் சர்வாதீன சக்தியும், பொருளாதார சக்தி குவிதலும் சிறப்பான முறையில் கட்டுப்படுத்தப்பட முடியும். சமதர்ம சமுதாயத்தை அமைக்க இது ஒரு படிக்கல்லாக அமையும்.

## 6. சிறு தொழில் துணிவோரை ஊக்குவித்தல்
(Encouraging small Entrepreneur)

சிறிய நிறுவனங்கள் எல்லா வகைகளிலும் வலுப்பெற்று வளர்ச்சியடையச் சிறப்பான வகையில் ஊக்குவிக்கப்படவேண்டும். இவைகள் வலுப்பெற்று முன்னேற்றமடைந்தால் பெரிய தொழில்களின் சர்வாதீன சக்தி தானாகவே குறையும்.

## 7. கூட்டுறவு நிறுவனங்கள்
(Co-operative Enterprise)

தனியார் துறையில் பெரிய தொழில்களின் முறையில்லா வளர்ச்சியைச் சீராக்கப் பரவலாக்கப்பட்ட கூட்டுறவு நிறுவனங்கள் சிறந்த கருவிகளாக அமைகின்றன. சுய இலாபத்தைவிடப் பொது நலமே அடிப்படை நோக்கமாகக் கொண்ட கூட்டுறவு முறையில் சிறு உற்பத்தியாளர்களுக்கும் நுகர்வோர்களுக்கும் தகுந்த பாதுகாப்புக் கிடைக்கிறது.

## 8. புதுத்தொழில் நிறுவனங்களை ஊக்குவித்தல்
(Encouragement of new enterprises)

சர்வாதீன சக்திகள் காணப்படும் தொழில்களில் புதிய தொழில்களைத் தோற்றுவிக்கச் சிறப்புச் சலுகைகளையும் ஊக்கிகளை

யும் அளிக்கலாம். புதிய நிறுவனங்களை சர்வாதீன தொழில்களைத் தகர்த்தெறியப் பயன்படுத்தலாம். ஆனால், நன்கு அமைக்கப்பட்ட பழைய தொழில்களே புதுப் பெயருடன் தோன்றினால் இக் கொள்கை பயனற்றுப் போகும்.

## 9. வரிவிதிப்பு
(Taxation)

வளரும் சர்வாதீனத் தொழில்களின்மேல் தகுந்த வரிகளை விதித்து, அவைகள் ஒரு குறிக்த வரம்புக்குமேல் முறையிலா வளர்ச்சியடையாமல் கவனிக்க வேண்டும். ஆனால், இந் நடவடிக்கையில் தொழில் அளவுச் சிக்கனங்களின் (Economics of scale) நன்மைகள் இழக்கப்படலாகாது. இலாப ஈட்டுத் தொகைகளுக்கு அதிக பட்ச எல்லை விதிக்க வேண்டும். இதனால் பெரிய தொழில்கள் வளர்ச்சியடைந்து வலுவில்லாச் சிறு நிறுவனங்களைச் சுரண்டுவதைத் தடுக்கவேண்டும். பெரிய தொழில்கள் இலாப நோக்குடன் செயல்படுவதைவிடப் பொது நலனைக் குறிக்கோளாகக் கொண்டு பணியாற்றச் செய்ய வேண்டும். வருமான ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கவும், வரிவிதிப்பு பயன்படுத்தப்படுகிறது. 1970-71, 1971-72-க்கான மத்திய அரசின் வரவு செலவுத் திட்டங்களில் வருமான வரியை அதிகரிக்கவும், செல்வம், நன்கொடை, இவைகளின் மேலுள்ள வரி வீதங்கள் கணிசமாக அதிகரிக்கப்படவும் வகை செய்யப்பட்டுள்ளது. நகர நிலம் கட்டடங்கள், ஆகியவைகளின் மேலும் கணிசமான அளவு வரிகள் அதிகரிக்கப்பட்டன. பல்வேறு மாநிலங்களில் நகர, கிராம நில உடைமைகளின் மேல் உச்சவரம்பு விதிக்கும் சட்டங்களும் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. இதனால் ஏற்றத்தாழ்வு குறைந்து சமதர்ம சமுதாயம் அமையும் காலம் வெகு தூரத்தில் இல்லை என்றால் அது மிகையாகாது.

## 10. சமுதாயக் காப்பீடு
(Social Security)

சமூக நீதியுடன் கூடிய வளர்ச்சியைச் (Growth with Social-Justice) சாதிக்க வேண்டும் என்பதுவே இந்திய அரசின் அடிப்படை நோக்கமாகும். இதனடிப்படையில் 1970-71-க்கான மத்திய வரவு செலவுத் திட்டத்தில் சில சமூக நல நடவடிக்கைகள் மேற்கொள்ள வகைசெய்யப்பட்டது. எடுத்துக்காட்டாக, மத்திய ஊழியர்களின் குறைந்தபட்ச ஓய்வுத்தொகை, குடும்ப ஓய்வுத்தொகை (Family Pension) ரூ. 40 ஆக உயர்த்தப்பட்டது. பல்வேறு வகையான

தொழிலாளர்களின் குறைந்தபட்சக் கூலிகளைத் தீர்மானித்தல், வேலையின்மை, சுகவீனக் காப்பீட்டு நன்மைகள் போன்ற நடவடிக்கைகளின் மூலம் ஏழை, பணக்காரரிடையே உள்ள பெருத்த இடைவெளியை ஓரளவு குறைக்கமுடியும்.

## முடிவுரை

திட்டக் காலத்தில் தோன்றியுள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை ஆராயுமிடத்தில் இவற்றைக் குறைக்க அரசு மேற் கொண்ட சிறப்புக் கொள்கைகள் (Strategy) வெற்றியடைய வில்லை என்பதை உணரலாம். ஏற்றத்தாழ்வுகளைத் தடுக்க எதிரீட்டு நடவடிக்கைகளோடு கூட ஏற்கெனவே தீர்மானித்த செயல் முறைகளைத் திறமையுடனும் நேர்மையுடனும் அமுலாக்க வேண்டியது இன்றியமையாததாகும். பொருளாதார வளர்ச்சிக் குறிக்கோள்களுக்கு ஏற்ற வகையில் போதுமான சீராக்க நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுதல் சாலச் சிறந்தது. ஆனால், இப் பணி 'சுலபமானதாக இல்லை' என்று மஹாலனோபிஸ் குழுவின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. கலப்புப் பொருளா தாரத்தைக் கொண்ட இந்தியாவில் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில் தனியார் துறையின் பங்கு முக்கியத்துவம் வாய்ந்த தாகும். அதைத் தகுந்த முறையில் கட்டுப்படுத்தாவிட்டால் நாட்டின் தொழில் மயம் பாதிக்கப்படும். பொருளாதாரக் குவிப்பின் வளர்ச்சியைத் தடுக்க அரசு கையாண்டு வந்த நடவடிக்கைகள் திறனில்லாமல் காணப்பட்டன. எனவே, டிசம்பர் 1969-ல் சர்வாதீனத் தடுப்பு வர்த்தக நடை முறைச் சட்டம் நிறைவேற்றப் பட்டு, ஜூன் 1970-லிருந்து அமுலுக்கு வந்தது. பொருளாதாரச் செயல் முறையின் (Economic System) நடவடிக்கைளின் விளைவாகப் பொது நலனுக்கு எதிரான பொரு ளாதார சக்திக் குவிப்பு ஏற்பட்டுவிடாமல் தடுக்க இச் சட்டம் வகை செய்யும். இச் சட்டம் சர்வாதீன, தடுப்பு வர்த்தக நடை முறைக் குழுவை ஏற்படுத்தவும் மத்திய அரசுக்கு அதிகாரம் அளித்தது. இக் குழு தொழில் கலந்து இணைதல் (Mergers), ஒருங் கிணைதல் (Amalgamations), பெருகுதல் ஆகிய நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தும், புதிய தொழில் நிறுவனங்கள் தோன்றுதலையும் சீரமைக்கும். சர்வாதீனத் தடுப்பு வர்த்தக நடை முறைகளையும் இக் குழு தடுக்கும். வருவாய், செல்வம், பொருளாதார சக்தி குவிதல் ஆகியவைகளின் போக்கை எந்த அளவுக்கு இக் குழுவும் அரசின் மற்ற நடவடிக்கைகளும் மாற்றியமைப்பதில் மகத்தான வெற்றி பெற முடியுமென்பதைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டி யுள்ளது.

# 60. வளர்ச்சியும் சமுதாய முறைக் காரணிகளும்

## (Development and Socialogical factors)

### சமூக காரணிகள் பொருளாதார வளர்ச்சியைப் பாதித்தல்

பொருளாதார வளர்ச்சியின்போது உற்பத்தியைப் பெருமளவில் அதிகரிக்கச் செய்ய மனித முயற்சி (human effort) மிகவும் அடிப்படையானதாகும். இயற்கை வளங்கள் (Natural resources) தாராளமாகச் செலவின்றிக் கிடைத்தபோதிலும் மூலதன வளங்கள் (Capital resources) மனித முயற்சியாலேயே தான் தோன்றுகின்றன. இவ்விரு காரணிகளும் சீரான முறையில் சேர்ந்தால்தான் உற்பத்தி அதிகரிக்கும். இவ்விரு வளங்களும் ஒன்றுகச் சேர்ந்து உற்பத்தியை அதிகரிக்க மனித அறிவுக் கூர்மை, திறன், விடாமுயற்சி, தொழில் துணிவு, ஆகியவைகள் இன்றியமையாத கருவிகளாக விளங்குகின்றன. பொருளாதார நடவடிக்கையில் மனித முயற்சியானது தொழிலாளரின் உடல் உழைப்பு, தொழில் துணிவோரின் தொழிலாற்றல் என இருவகைப் படும். இவ்விருவகை முயற்சிகளும் உயர்ந்த நிலையில் காணப் பட்டால் பொருளாதார வளர்ச்சி மேலோங்கி நிற்கும். இதைத் திறமை, கடும் உழைப்பு நன்னடத்தை, ஆகியவற்றைக் கொண்ட தொழிலாளர்களையும் புதிய தொழில்களை மேற்கொள்ளத் தேவையான சக்தி, சுய ஆற்றல், இயங்கச் செய்யும் திறன் ஆகியவற்றைக் கொண்ட தொழிலதிபர்களையும் பெற்றுள்ள முன்னேறிய நாடுகளில் வளர்ச்சி மேலோங்கி இருப்பதிலிருந்து அறியலாம்.[1] மக்களின் இயல்பு, அவர்களின் மனநோக்கு, தொழிலார்வம் போன்ற பல்வேறு தன்மைகளைத்தான் மனித காரணிகள் (Human factors) என்கிறோம். மனிதரின் அறிவுக் கூர்மையின் விளைவாகத்தான் பொருளாதார வளர்ச்சி அதிகரிக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்குப் பிரதான, காரணியாக இருப்பது நிறுவன வழிக் காரணி (Institutional factors)

[1] டி. பிரைட்சிங் 'வளர்ச்சிப் பொருளாதாரம்' ப. 72.

களாகும். எனவேதான் அமெரிக்கா போன்ற நாடுகளில் மனித, நிறுவன, காரணிகளாகிய கல்வி, சுகாதாரம், மற்ற மனித சொத்துகளின்மேல் ஏராளமான தொகை செலவிடப்படுகிறது. சமூக, நிறுவன காரணிகள்தான் (Social and Institutional factors) மக்களின் இயல்புகளைத் தீர்மானிக்கின்றன. குன்னர் மிர்தல் (Gunnar Myrdal) தன்னுடைய 'ஆசிய நாடகம்' (Asian Drama) என்ற நூலில் இதே உண்மையைக் கீழ்க்கண்ட வரிகளில் விளக்குகிறார். "ஒரு நாட்டின் பொருளாதாரத்தை நவீனப்படுத்தும் முயற்சி வெற்றி பெறுவது அந்த நாட்டின் சமூக அமைப்பையும், ஸ்தாபன அமைப்புகளையும், மனப்பான்மையையும் பொறுத்ததாகும்." இக் கருத்தைத் தெற்காசியா முழுவதற்குமாக அவர் கருதினாலும் இது இந்தியாவிற்கும் மிகப் பொருத்தமானதாகும்.

## பொருளாதார வளர்ச்சியும் மனித காரணிகளும்
(Economic Growth and Human factors)

பல்வேறு நாடுகளில் உள்ள பொருளாதார வளர்ச்சியின் தரத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுக்கு அடிப்படைக் காரணம் சமூக, காரணிகளேயாகும். கால்டர் (Kaldor) அவர்களின் கருத்துப்படி, "பொருளாதார வளர்ச்சியை ஆராய மக்களின் மனப்பாங்கு, சமூக முறைக் காரணிகள் ஆகியவைகளைப் பற்றிய முழு ஆய்வு இன்றியமையாததாகும். முதலாளித்துவ தொழிலதிபரின் சிறப்பான மன நோக்கின் விளைவாக நவீன முதலாளித்துவம் தோன்றியுள்ளது. அத்தகைய முதலாளித்துவ வளர்ச்சியில்லாத நாடுகளில் பழமை நோக்குடைய விவசாயிகளால் வளர்ச்சி தடைபட்டுள்ளது."[1] பொருளாதார வளர்ச்சியின்போது தொழிலாளர்களின் தரம் உயர்ந்து பேரளவு சமூக முதலீடும் அதிகரித்தால் உற்பத்தியில் தொழிலாளர்களின் தேவை அதிகரிக்கிறது.[2] வளர்ச்சியடைந்த நாடுகளின் மூலதனச் சாதனங்களை தொழில் வளர்ச்சியில்லா நாடுகளுக்கு மாற்றமடையச் செய்தாலும் அந் நாடுகளின் வளர்ச்சி அதிகரிப்பதில்லை. ஏனெனில் இந் நாடுகளில் தொழில் நுட்ப, தொழில் அமைக்கும் திறன், திறமையான தொழிலாளர்களின் அளிப்பு தக்ககாலத்தில் கிடைப்பதில்லை. இச் சூழ்நிலையை மாற்றியமைக்கத்தான் மனித மூலதனம் பெருமளவில் வளர்ச்சியடையச் செய்யவேண்டும். தற்போது எந்த அளவுக்கு நிறுவன வழிக் காரணிகள் வளர்ச்சியைத் தடுக்கின்றன அல்லது மேம்படுத்துகின்றன என்பதைப் பற்றிய

1 N. கால்டர். 'ஒரு செலவினவரி' (An expenditure tax) ப. 180.

2 ராக்னர் நர்க்ஸ், 'வர்த்தக வளர்ச்சிப் பாங்கு' ப. 88.

சிந்தனை, வளர்ச்சி குறைந்த நாடுகளில் அதிகரித்து வருகிறது அமெரிக்காவில் குறிப்பிடத்தக்க வகையில் உற்பத்தித் திறன் அதிகரித்ததற்குக் காரணம் மனித மூலதனத்தில் ஏற்பட்ட பெருமளவு முதலீடாகும் என்று பேராசிரியர் T. W. ஷுல்ட்ஸ் (T. W. Schultz) குறிப்பிடுகிறார். மேலும், உலகப் போரால் நாசமடைந்த ஐரோப்பிய நாடுகளில் சுகாதார வசதிகள், பணிகள், தொழில் பயிற்சி, பலவகைப்பட்ட கல்வி, தொழிலாளர் பெயர்ச்சிக் கான சாதனங்கள் போன்ற மனித மூலதனத்தின் (Human Capital) முதலீடுகளால் பொருளாதாரம் வியக்கத்தக்க வகையில் வளர்ச்சி யடைந்தது.

## வளர்ச்சி குறைந்த நாடுகளின் சமூக இயல்புகள்
(Social Characteristics of Under developed Economies)

முதலாவதாக முன்னேறிய நாடுகளில் மக்களின் சமூக நோக்கு, நடவடிக்கைகளின் இயல்புகள் பொருள்சார் முன்னேற்றத் திற்கு (Material Advancement) பெருமளவில் உதவிபுரிந்தன. ஆனால், வளர்ச்சி குறைந்த நாடுகளில் மக்களின் பிற்பட்ட பழக்க வழக்கங்களால், பொருளாதாரம் பிற்பட்ட நிலையிலேயே இருந்து விடுகிறது. பார்சன்ஸ் (T. Parsons) அவர்களின் கருத்துப் படி, வளர்ச்சியடைந்த நாடுகளில் பொருளாதாரப் பொருள்களின் பங்கீட்டை அதிகரித்து, 'சாதனையை' (Achievement) உருவாக்க வேண்டும் என்ற மனபோக்கை மக்கள் பெற்றுள்ளனர். ஆனால், பின்தங்கிய நாடுகளில் 'மதவழிபாட்டிலே' (ascription)யே மக்கள் நாட்டம் கொண்டுள்ளதால் அங்கு பொருள்சார் முன்னேற்றம் தடைபட்டுள்ளது.

இரண்டாவதாக இந் நாடுகளில் பணிகள் தகுதியின் அடிப் படையில் மேற்கொள்ளப்படவில்லை. சிறந்த பணிகள், சமூக அந்தஸ்து உடையவர்களுக்கும் அவர்களுடைய உறவினர்களுக்கும் மட்டுமே அளிக்கப்படுகின்றன. ஏழ்மை நாடுகளில் இந் நிலை ஏற்படுவதற்குக் காரணம் உயர்ந்த அந்தஸ்து உடையவர்களுக்கு மட்டுமே உயர்ந்த பணிகள் கிடைக்கும் என்ற மக்களின் தவறான கருத்தேயாகும். இதுவே 'குறித்த சிலர் நற்கதிக் கோட்பாடு' (Particularism) என்று அழைக்கப்படுகிறது. ஆனால், வளர்ச்சி யடைந்த நாடுகளில் தகுதி, திறமை, ஆற்றல் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டுதான் மக்கள் பணிகளை மேற் கொள்ளுகின்றனர். இதுவே 'மனித இன நற்கதிக் கோட்பாடு' (Universalism) என்று அழைக்கப்படுகிறது.

மூன்றாவதாக வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொருளாதார நடவடிக்கைகள் பொதுவாக ஏற்றுக்கொள்ளத் தக்கவகையில் இல்லாமல் செறிவற்ற (Diffuse) நிலையில் உள்ளன. அதாவது பொருளாதாரப் பணிகள் குறிப்பான முக்கியத்துவம் பெறாமல் சிதறிக் கிடக்கின்றன. ஆனால், தொழில்வளர்ச்சி மேம்பட்டுள்ள செல்வந்த நாடுகளில் திட்டவட்டமான முறையில் (Specificity) பல்வேறு பணிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

நான்காவதாக வளர்ச்சி குறைந்த சமுதாயங்களில் சுய முன்னேற்றம், தான் என்ற குறுகிய மனப்பாங்கு பெருமளவில் காணப்படுகிறது. ஆனால், முன்னேற்றமடைந்த சமுதாயங்களில் தான் என்ற மனப்பாங்கு இன்றி, எல்லோருமே முன்னேற வேண்டும் என்ற மனப்பான்மை நிலவுகிறது. உண்மையில் மேலே குறிப்பிட்டுள்ள நான்கு சமூக இயல்புகளாகிய மதவழிபாடு, குறித்த சிலர் நற்கதிக் கோட்பாடு, பணிகளின் செறிவற்ற நிலை, குறுகிய மனப்பான்மை ஆகியவைகள் ஒன்றை ஒன்று சார்புடையவைகளாகும். சமூக இயல்புகளாகிய 'சாதனை,' மனித இன நற்கதிக் கருத்து, திட்டவட்டமான நடவடிக்கை, ஆகியவைகளால் ஒரு சமுதாயம் சீரடைந்துள்ளது என்பதை அறியலாம். இது பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாத முன் நிபந்தனை (Pre-condition) களாகும். எனவே, பல்வேறு நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் உள்ள ஏற்றத்தாழ்வுகளுக்குக் காரணம் அந் நாடுகளில் உள்ள மரபு, மதம், சூழ்நிலைகள், அரசியல் போன்றவைகளில் மக்கள் கொண்டுள்ள ஈடுபாடாகும். இச் சமுதாய நிறுவனங்களின் இயல்பால்தான் மனித மனப்போக்கு களும், குணமும், இயல்புகளும், பழக்கவழக்கங்களும் ஒரு நாட்டில் உருவாக்கப்படுகின்றன. மக்களின் சமூக நடவடிக்கைகளை மாற்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஒரு சமூகப் புரட்சி (Social Revolution) முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. சமூகப் புரட்சி ஏற்பட்ட பின்தான் பொருளாதார முன்னேற்றம் இந் நாடுகளில் தடைப்படாமல் மேம்பாடடையும்.

## சமுதாய அமைப்புமுறை பொருளாதார வாழ்க்கையைப் பாதிக்கும் வகைகள்

சமுதாய நிறுவனங்கள் பொருளாதார வாழ்க்கையை எந்த அளவு பாதிக்கின்றன என்பதைப் பற்றிய ஆய்வு மிகவும் அடிப் படையானதாகும். முதலில் அரசின் வரி, வர்த்தகக் கொள்கைகள், தொழிலின் உற்பத்திச் செலவு, இலாபம், ஆகியவற்றைப் பாதிக் கின்றன. நிலக் குத்தகை முறை வேளாண்மைப் பொருள்களின்

உற்பத்தியையும் பங்கீட்டையும் பாதிக்கிறது. சாதி முறை, கூட்டுக் குடும்ப முறை போன்ற சமூக அமைப்புகளால் இந்தியாவில் வேலைப் பகுப்பு, தொழில் மயம், உழைக்கும் ஆர்வம் போன்றவைகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. போதிய கல்வி வசதியின்மையாலும், அறிவு வளர்ச்சிக்குச் செய்தித் தொடர்பு இன்மையாலும் பொருளாதார நடவடிக்கையை அதிகரிக்கும் திறமை கொண்ட தொழிலாளர், தொழில் துணிவோரின் அளிப்புக் குறைந்துள்ளது. மத நம்பிக்கை, சமூக பழக்க வழக்கங்கள், மக்களின் மன நோக்கை நேரடியாகப் பாதித்துப் பொருளாதார நடவடிக்கையை அதிகரிக்கவோ அல்லது தடுக்கவோ நேரிடுகிறது. மாதிரியாக பிரான்ஸில் மற்ற நாடுகளைவிடக் குறைந்த வளர்ச்சி ஆரம்ப கட்டத்தில் ஏற்பட்டதற்குக் காரணம் சமூக மாற்றமின்மையே (Social-Rigidities) ஆகும். இத்தகைய நெகிழாத் தன்மையால் ஆக்கத் துறைகளில் பணி புரிவோரும் மற்ற வளங்களும் சுதந்திரமாகப் பயன்படுத்தப்படுவது தடைபடுகிறது. மேலும், சுய தொழில்களிலும் (Professions), பணிகளிலும், ஈடுபடுவது சமூக கௌரவமாக மக்கள் கருதுவதால் தொழில் துறையில் பணிபுரிவோரின் எண்ணிக்கை குறைகிறது. மக்கள் ஓய்வையும், சுய சேவைகளையுமே விரும்புவதாலும், புதிய தொழில் நுட்பப் பேரளவு நடவடிக்கைகளுக்கு வேளாண்மையில் எதிர்ப்பு இருப்பதாலும், முதல்நிலைத் துறையில் (Primary Sector) குறைந்த உற்பத்தித் திறன் காணப்படுகிறது. பேராசிரியர் ஹோஸ் லிட்ஸ் (Hose litz) அவர்களின் கருத்துப்படி ஸ்பெயின் நாட்டில் மக்களின் முன்னேற வேண்டும் என்ற ஆர்வமும் மனநோக்கும் இருந்ததால் அதிக வளர்ச்சியும், அது இல்லாததால் இலத்தீன் அமெரிக்க நாடுகளில் பொருளாதார வளர்ச்சி தடைபட்டும் உள்ளது. சைனு, ஜப்பான், ஆகிய இரு நாடுகளின் பொருளாதார வளர்ச்சியை ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து ஜப்பானில் சமூக அமைப்பு பொருளாதார வளர்ச்சிக்குப் பெரிதும் ஆதரவாக இருந்து வருவது அறிய தக்கதாகும். சீனுவில் பல்வேறு சமூக அமைப்புகள் பொருளாதார வளர்ச்சியைத் தடுத்துள்ளன. சீனுவில் மக்கள், தொழில் புரிவோரை மரியாதைக் குறைவாகக் கருதுவதும், உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற மனப்பான்மையும், பெயர்ச்சியின்மையும், பழமை மதப்பற்றும், சொத்துரிமை முறையும் (System of inheritance), பொருளாதார வளர்ச்சியைப் பெரிதும் தடைசெய்துள்ளன. ஆனுல், ஜப்பானில் சுதந்திர விவசாயிகள், உள், வெளி, வர்த்தக நடவடிக்கைகளில் சுதந்திரம், தொழிலுக்கு சமூகத்திலிருக்கும் நன்மதிப்பு, உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற வேறுபாடின்மை, சுதந்திர மத நோக்கு போன்ற காரணங்களால்

பொருளாதார வளர்ச்சி மேற்கத்திய நாடுகளைப் போலவே வெகு விரைவில் மேம்பாடு அடைந்துள்ளது.[1]

சமூக, பொருளாதாரக் கீழ் மட்டச் சமநிலை

எனவே, இன்றைய வளர்ச்சி குறைந்த நாடுகளில் சமூக, பொருளாதார கீழ் மட்டச் சமநிலை (Socio-Economic Low-Level Equilibrium) ஏற்பட்டுள்ளது என்பதை மேற்கண்ட விளக்கம் தெளிவுபடுத்துகிறது. இச் சமநிலை ஏற்படுவதற்குக் காரணம் மக்களின் பழமை வாழ்க்கை முறையும், பிற்பட்ட பழக்க வழக்கங் களுமேயாகும். இவைகள் பொருளாதார வளர்ச்சிக்குப் பாதகமான வைகளாகும். இதன் விளைவாகத்தான் பொருளாதாரம் தேக்க மடைகிறது. இக் கீழ்மட்டச் சமநிலையிலிருந்து வெளியேறி விரை வான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க 'எழுச்சி வாய்ந்த சக்திகள்' (Explosive Forces) தேவைப்படுகின்றன. இச் சக்திகள் பொருளாதாரத்தில் பழமைப் பாங்கைச் சீர்திருத்தி, சமூக நிறுவனங்கள் மாற்றமடையத்தக்க எழுச்சியை உருவாக்க வேண்டும்.

ஜப்பான், சீனு ஆகிய இரு நாடுகளில் ஒரே வகையான இயற்கை வளங்கள், மூலதனம், தொழிலாளர் அளிப்பு இருந்த போதிலும், இத்தகைய எழுச்சியால் ஜப்பான் மட்டும் மிகக் குறுகிய காலத்திலேயே தானுக இயங்கும் பொருளாதார கட்டத்தை (Take-off stage) எய்தியது. ஆனுல், இதற்கு மாருகப் பிற்பட்ட சமூக அமைப்பு முறைகளால் சீனு இக் கட்டத்தை இன்னும் அடையவில்லை.

பொருளாதார அமைப்பு முறைக்கும் (Economic institutions) சமூக அமைப்பு முறைக்கு (Social institutions) மிடையே முரண் பாடு எப்போதும் இருந்து கொண்டேயுள்ளது. ஒன்று மற்றொன்றை இயங்கச் செய்து வருகிறது. அதை இனி ஆராய்வதற்குமுன் மார்க்ஸ், ரோஸ்டாவின் பொருளாதார வளர்ச்சிக் கருத்துகளை ஆராயலாம்.

## சமூக, நிறுவன காரணிகள் பொருளாதார வளர்ச்சியைப் பாதித்தல்
## (Social and Institutional factors affecting Economic Growth)

பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும் அமைப்பு முறைக் காரணிகளை ஆராய்ந்துள்ள வளர்ச்சிப் பொருளியல் அறிஞர்கள்

[1] ஜாகப்ஸ், நார்மன் (Jacobs Norman) 'கிழக்காசியாவும் நவீன முதலாளித்துவத்தின் துவக்கமும்' 'ஆக்ஸ்போர்ட், லண்டன், 1958.

ஏராளமானவர் உள்ளனர். அவர்களாவார் : கார்ல் மார்க்ஸ், ஜோஸப் பெங்கலர் (Joseph Spengler), ரோஷ்டாவ் (W. W. Rowstow), மேரியோன் லெவி(Marion Levy), சோல் டாக்ஸ் (Sol Tax) போன்றவர்களாவர். இவர்களோடு கூட கோட்பிரே, M. வில்சன், D. லர்னர் போன்ற சமூக இயல் அறிஞர்களும் (Sociologists) மற்றவர்களும் இக் காரணிகளைத் தீவிரமாக ஆராய்ந்துள்ளனர். இவர்களுள் மார்க்ஸ், ரோஸ்டோவ் அவர்களின் கருத்தைக் கீழே விளக்கமாக ஆராயலாம்.

## மார்க்ஸின் கருத்து

கார்ல் மார்க்ஸ் (Karl Marx) அவர்கள் நிறுவன காரணிகளுக்கும் பொருளாதார மாற்றத்திற்கு மிடையேயுள்ள உட்தொடர்பைச் சிறப்பாக விளக்கியுள்ளார். அவருடைய கருத்துப்படி பொருளாதார மாற்றம், சமூக அமைப்பு முறையில் மாற்றத்தை ஏற்படுத்திப் புதியப் பொருளாதார அமைப்புக் கேற்ற வகையில் நிறுவனங்களை அமைக்கும். இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் பழமையான பழக்கவழக்கங்கள், மூடநம்பிக்கை, ஆகியவைகளின் விளைவாக நிறுவன அமைப்பு மாறாத் தன்மையுடையதாய் நெகிழ்ச்சியற்று உள்ளது. மதக் காரணிகள், சமூக அமைப்பு முறையில் மாற்றத்தை ஏற்படுத்துவதற்குத் தடையாய் உள்ளன. இத்தகைய நிறுவன அமைப்பு பொருளாதார வளர்ச்சியைத் தடுக்கிறது. மார்க்ஸ் சமுதாயத்தைப் பல்வேறு வகைகளாகப் பிரித்தார். அவைகளாவன :- படைமானிய (Feudalistic), கம்யூனிச, முதலாளித்துவ, சமுதாயமாகும். இச் சமுதாய முறையானது பழைமையான படைமானிய நிலையிலிருந்து முதலாளித்துவ சமுதாயமாகப் படிப்படியாக மாற்றமடையும் என்றும் அவர் கருதினர். பொதுவாகப் பொருளாதார மாற்றத்தால் சமுதாய மாற்றத்தைத் தக்க முறையில் ஏற்படுத்தப் பொருளாதார மாற்ற நடவடிக்கைகள் பிரம்மாண்டமான வகையில் வலுப்பெற்று விளங்க வேண்டும். அத்தகைய பொருளாதார மாற்றத்தை லெகுவில் சாதிக்க முடியாது. எனவே, முதல்படியாக சமூகத் தடைகளை நேரடியாக அறிந்து அவற்றை தகர்த்தெறியத் தக்க சமுதாய அமைப்பு மாற்றங்களை ஏற்படுத்துவது சாலச் சிறந்ததாகும்.

## ரோஸ்டாவின் கருத்துகள்

W. W. ரோஸ்டாவ் பொருளாதார வளர்ச்சியுடன் சமூக நிறுவனங்களில் மாற்றத்தை ஏற்படுத்தச் சில மன விருப்பங்களை

(Propensities) வலியுறுத்திக் கூறியுள்ளார். அவைகள் ஏற்கெனவே முதல் பகுதியில் (Part I) ஆராயப்பட்டுள்ளன. வளர்ச்சிக்கு இன்றியமையாத மன விருப்பங்கள் மனித மனப் போக்கை (Human attitudes) பொருத்ததாகும். இம் மனப் போக்குகள் சாதகமானவைகளாக இருக்குமேயானல், அது பொருளாதார வளர்ச்சிக்குப் பெருந்துணை புரியும். இவ் விதமாக பொருள்களை நுகர வேண்டுமென்ற மன அவா, அடிப்படை, நடைமுறை அறிவியலை வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்ற ஆர்வம், தொழில் நுட்பத்தை வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்ற மனவிருப்பம் ஆகியவைகள் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பெரிந்துணை புரியும் என்பது ரோஸ்டாவின் உறுதியான கருத்தாகும்.

சமுதாய காரணிகளின் ஆய்வின் முக்கியத்துவம்

மேற்கண்ட ஆய்விலிருந்து பொருளாதார வளர்ச்சி நடைமுறைக்கு (Process) சமூக காரணிகள் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பெருந்தடையாய் அமைந்துள்ளன என்பதை அறியலாம். வளர்ச்சிக்குச் சமூக அமைப்பும், மக்களின் மனப்போக்கும் இன்றியமையாதன என்று அறிந்தும் தொன்முறைப் பொருளியல் அறிஞர்கள் (Classical Economists) அவற்றை வலியுறுத்திக் கூறிவில்லை. இவரெட் ஹேகன் (Everet Hagen) என்பவரின் கருத்துப்படி "சமுதாய முறைக் காரணிகளை (Sociological Factors) தொன்முறைப் பொருளியலறிஞர்கள் 'அளவு மானியாகக்' (Parameters) கருதினர்கள். ஆனல், சமூகவழிக் காரணிகளை 'மாறக் கூடிய காரணிகளாகக்' (Variables) கருதினல்தான், வளர்ச்சிக் கோட்பாட்டை சீரானமுறையில் ஆராய முடியும்." இம் மாற்றங்களைத்தான் ரோஸ்டாவ் மேற்குறிப்பிட்டபடி விளக்கியுள்ளார். ஏன் சில நாடுகளில்மட்டும் பொருளாதார வாய்ப்புகளைப் பயன்படுத்திக்கொள்ள மக்கள் விரும்புகின்றனர் என்பது கேள்விக் குறியாகவே உள்ளது. பொதுவாக இதற்கு விடையாக மக்களின் உளச்சார்பான மனப்போக்கைத் (Psychological Attitude) தான் சமூக இயல் அறிஞர்கள் கூறுவர். ஆனல் இதைப்பற்றிய தீவிரமான ஆய்வு தற்போதைய நிலையில் இன்றியமையாததாகும். அத்தகைய ஆய்வினல் அடிப்படை சமூக பொருளாதார பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு வழிமுறைகள் கிடைக்கும். உதாரணமாக, தொழிலில் ஆக்கத்திறன் கொண்ட நபர்கள் உருவாகுதல், சில வகுப்பினரிடையே ஆக்கத்திறன் தொடர்ந்து காணப்படுதல், சில சமயங்களில் ஆக்க, நிலையற்ற சக்தி உடைந்துவிடுதல் (Burst of Creative and Restless Energy) போன்றவைகளைப் பற்றிய ஆய்வு, வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு அடிப்படையானதாக விளங்குகிறது.

## சமூக காரணிகளும் பொருளாதார நடவடிக்கைகளும்

ஒரு நாட்டுக்குத் தகுந்த பொருளாதார வளர்ச்சிக் கோட்பாட்டை அமைக்குமுன் சமூகஇயல் காரணிகளை ஆராய்ந்து பொருளாதார நடவடிக்கையை எந்த அளவில் சமூக காரணிகள் பாதிக்கச் செய்கின்றன என்பதை ஆராயவேண்டும். அவற்றைக் கீழ்க்கண்ட நான்கு வகைகளில் ஆராயலாம்.

1. தொழிலாளர் உற்பத்தித் திறனும், பொருளாதார நடவடிக்கைகளில் ஆர்வமும்
2. சேமிப்பும் முதலாக்கமும்
3. தொழில் துணிவாற்றல் (Entrepreneurship)
4. தொழில் நுட்பமும் சமூக காரணிகளும்

## தொழிலாளர் உற்பத்தித் திறனும் பொருளாதார நடவடிக்கைகளில் ஆர்வமும்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழிலாளர் உற்பத்தித்திறன் குறைவாக இருப்பதற்குப் பெரும்பாலும் பாதகச் சமூக அமைப்பு முறைக் காரணிகளே காரணமாகும். மேலும் மதம், சாதி, கூட்டுக் குடும்ப முறை, அரசியல் சூழ்நிலை, போன்றவைகள் பொருளாதார நடிவடிக்கைகளிலும், கடும் உழைப்பிலும் மக்களுக்குள்ள ஆர்வத்தைப் பெரிதும் பாதித்து வருகின்றன.

## தொழிலாளர்களின் அளவும், தன்மையும்
(Quantity and Quality of Lobour)

தேசிய உற்பத்தியில் தொழிலாளர்களின் பங்கு, அவர்களின் அளவு, இயல்பு, இவைகளைப் பொறுத்து அமையும். மேலும் அவர்கள் எந்த அளவுக்கு முதல் சாதனங்களைப் பெற்று (Capital Equipment) பணிபுரிகின்றார்களோ அதைப் பொறுத்து உண்மை தேசிய உற்பத்தி (National owtput) அதிகரிக்கும். வளர்ச்சியடைந்த நாடுகளில் 15 வயதுக்கும் 60 வயதுக்கும் இடைப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் 50 சதவிகிதத்துக்குமேல் உள்ளனர். இதற்குக் காரணம் அங்குள்ள கல்வி, சுகாதாரம், தொழில் அமைப்பு போன்ற சமூக வசதிகளே யாகும். ஆனால் இவ்வசதிகளின்மையால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் இவ் வகுப்பினர் 40 சதவீதத்திற்கும் குறைவாகவே உள்ளனர். உண்மையில் இவ் வகுப்பினரே தேசிய உற்பத்தியை அதிகரிப்பதில் பெரும் பங்கு பெற்றுள்ளனர். மக்கட்

தொகை வளர்ச்சியால் தொழிலாளர் சக்தியின் (Labour Force) அளவு அதிகரிக்கும். மேலும், மேற்குறிப்பிட்ட வயது வகுப்பினரின் (Age Group) இறப்புவீதம் குறைந்தாலும் தொழிலாளர் சக்தி அதிகரிக்கும். இளம் வயதிலேயே மணம் புரிதல், குடும்ப வாழ்க்கையை விரும்புதல், போன்ற பல்வேறு சமூகப் பழக்கவழக்கங்களால் தொழிலாளர் சக்தி அதிகரிக்கிறது.

### சிறுவர், மாதர் வேலைக்கு அமர்த்தப் படல்

சிறுவர், மாதர், தொழிலாளர்களாகப் பணி புரியும் நாடுகளில் தொழிலாளர் சக்தி அதிகமாக இருக்கும். ஆனால், சிறு வயதிலேயே பணி புரியத் தொடங்கும் சிறுவர்கள் கல்வியறிவு, பயிற்சி, உடல் ஆரோக்கியம் போன்றவைகள் கிடைக்கப்படாமையால் வயது வந்ததும், திறமையும் வலிமையும் குறைந்த தொழிலாளர்களாக மாறுகின்றனர். தக்க சமூக சட்டங்களின் மூலம் இவர்கள் வேலைக்கமர்த்தப்படுவது சீராக்கப் படவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரித்து, போட்டியினால் சராசரி கூலி மட்டம் குறைந்து விடும். வளர்ச்சியடைந்த நாடுகளில் மாதரும் பல்வேறு தொழில்களிலும் பணிகளிலும் ஈடுபட்டிருப்பதால் மொத்த தேசிய உற்பத்தி அதிகரிக்கிறது.

### தொழிலாளர்களின் தன்மை (Quality of labour)

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழிலாளர்கள் தொழில் துணிவும் திறமையும் குன்றி, கடும் உழைப்பை விரும்பாதவர்களாய் உள்ளனர். குறைந்த வருவாய் கொண்ட நாடுகளில் பொருளாதார வளர்ச்சியும் நலனும் பெறவேண்டுமென்ற ஆர்வம் பெரும்பாலான மக்களிடம் இல்லை. கிடைக்கும் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்தி ஆக்கத்திற்கு உகந்த சூழ்நிலையை உருவாக்கி வருந்தி உழைத்துப் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த மக்கள் விரும்புவதில்லை. இதன் காரணமாகத்தான் புலனாகா வேலையின்மையும் (Disquized unemployment), வேலைக்குறைவும் (Under employment) பெரும்பாலான வளர்ச்சியுறு நாடுகளில் சாதாரணமாகக் காணப்படுகிறது. மற்ற உற்பத்திக் காரணிகளை விட தொழிலாளர்களின் அளிப்பு மித மிஞ்சிய நிலையில் இருப்பதுதான் இதற்குக் காரணமாகும். எனவே தான் இந் நாடுகளில் தொழிலாளர் இறுதிநிலை உற்பத்தித் திறன் (Marginal Productivity of Labour) பூஜ்யமாக இருக்கிறது. தொழில் வளர்ச்சியடைந்த மேற்கத்திய நாடுகளில் தொழிலாளர் பற்றாக் குறை, உபரி மூலதன வளங்கள், ஆகியவைகளின் பிரச்சினைகளைத் தீர்க்க வழிவகைகள் மேற்கொள்ளப் படுகின்றன. அந் நாடுகளில் சோம்பிக்

கிடக்கும் (Idle) மூலதனங்களை எவ்வாறு முழு அளவில் பயன் படுத்துவது என்பது ஆராயப்படுகிறது. அதே போன்று இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழிலாளர் அளிப்பு மிகுதியாகவும், மூலதன வளங்கள் குறைந்தும் உள்ளன. இந் நாடுகள் தங்கள் உபரி தொழிலாளர்களை எந்தெந்த வகை களில் பயன்படுத்தி வளர்ச்சி வாய்ப்புகளை அதிகரிக்க முடியும் என்பதை ஆராயாமலிருப்பது என்ன காரணத்தாலோ தெரிய வில்லை! இந் நாடுகளில் தொழிலாளர்களின் பூஜ்ய இறுதி நிலை உற்பத்தித் திறனை மாற்றியமைத்து ஒரு நபர் உற்பத்தியை (output per head) அதிகரிக்கத் தொழிலாளர்கள் அயராது மிகத் திறமையுடன் கடும் உழைப்பை மேற்கொள்ள வேண்டும். 'ஜப்பானின் வியத்தகு பொருளாதார வளர்ச்சி இதற்குச் சான்றாக நிற்கிறது என்று W. W. லாக்வுட் வர்ணிக்கிறார்.

முன்னேறிய, பிற்பட்ட நாடுகளின் சமூக அமைப்பின் ஒப்பீடு

தொழிலாளர்களின் திறமை, கடும் உழைப்பு, கல்வியின் தரம், தொழில் நுட்ப வசதிகள், சுகாதாரம், தட்ப வெப்ப நிலை, சொத்துரிமை போன்ற காரணிகளைப் பொறுத்து அமைகிறது. இந்தியத் தொழிலாளர்கவின் குறைந்த உற்பத்தித் திறமையால் தான் தலாவருவாய் 1965-ல் 90 டாலர்களாக இருந்தது. ஆனால், கடும் உழைப்பும், விடா முயற்சியும் கொண்ட அமெரிக்காவில் அதே காலத்தில் 2893-ம், ஜப்பானில் 696-ம் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் 1500 டாலர்களுக்கு மேலும் இருந்தது. இந்தியத் தொழிலாளர்கள் பொதுவாகக் கடுமையாக உழைக்க மனமின்றி யும், சோம்பேறிகளாகவும் இருப்பதால், பொருளாதாரம் பிற்பட்ட நிலையிலேயே உள்ளது. கடுமையான உழைப்பு, விடா முயற்சி, தியாகம், சீரிய செயலாற்றல் ஆகியவைகளைப் பெறாத மக்களைக் கொண்ட எந்த ஒரு நாடும் பொருளாதார ரீதியில் விரைவான முன்னேற்ற மடைய முடியாது. பேராசிரியர் குன்னர் மிர்தல் அவர்கள் சில ஆண்டுகளுக்குமுன் டெல்லியில் பேசும் போது, 'இந்தியத் தொழிலாளர்களின் சில இயல்புகளைக்' குறிப்பிட்டார். சாதாரணத் தொழிலாளர்கள் கடுமையான உழைப்பிலும், திறமை கொண்ட செயல்களிலும் ஈடுபட வகை செய்ய வேண்டு மென்று அவர் குறிப்பிட்டார். ஒரு சிறிய பணியைச் செய்து முடிக்க முன்னேறிய நாடுகளைவிட இந்தியாவில் ஏராளமான தொழிலாளர்கள் வேலைக்கமர்த்தப்படுகின்றனர். குறைந்த கூலிக்கு ஏராளமான தொழிலாளர்களைப் பெற முடிவதால் இங்கு மலிவான தொழிலாளர் அளிப்பு காணப்படுகிறது. ஆனால், ஒரு சராசரி தொழிலாளியின் உற்பத்தித் திறன் அவன் வாங்கும் கூலி

விகிதத்தை விட மிகவும் குறைவாகும்.[1] எனவே, இந்தியாவில் மலிவான தொழிலாளர் அளிப்பு ஆக்கத்தின் அடிப்படையில் உண்மையில் இருப்பதாகக் கூற முடியாது. இந்தியாவிலுள்ள மக்கட் தொகையில் 2 சதவீத எண்ணிக்கை மட்டுமே உள்ள சிறிய தொழில் நாடாகிய ஸ்வீடனில் இந்தியத் தேசிய வருவாயை விட 50 சதவிகிதம் அதிகமாகக் கிடைக்கிறது. இந்தியத் தொழிலாளரின் ஊதியத்தை விட 25 மடங்கு அதிகமாக ஸ்வீடன் நாட்டுச் சாரசரித் தொழிலாளி பெறுகிறன். இதற்குக் காரணம் ஸ்வீடனில் ஒரு நபர் மூலதனசாதனம் (Per-capita Capital equipment) அதிகமாக இருந்த போதிலும் அந் நாட்டு மக்கள் அதிகத் திறமையுடனும், விடா முயற்சியுடனும், அதிக நேரம் உழைப்பவர்களாகவும் இருப்பதுதான் என்பது குறிப்பிடத் தக்கதாகும் இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் சோம்பேறித்தனமாக மக்கள் இருப்பதற்கு வேலையின்மை ஒரு காரணமாகக் கூறப்படுகிறது. இத்தகைய நிலை வளர்ச்சியுருத பொருளாதாரத்தினுல் ஏற்படுகிறது. எனவே, புதிய தொழிற்சாலைகளை நிறுவி, நிலத்திலிருந்து விளைச்சல் அதிகரித்து, வீடுகளைச் சீரமைத்து, சுகாதார வசதிகளை மேற்கொண்டு, கல்வித் தரத்தை உயர்த்தி, பொருளாதார வளர்ச்சியை அடைய இந்நாடுகள் தொடர்ந்து முயலவேண்டும். தொழிலாளர்களும் தங்கள் பணிகளைக் கடமையுணர்வுடனும், விடாமுயற்சியுடனும், காலவீணடிப்பின்றியும், செயலாற்றினுல் உற்பத்தி அதிகரிக்கும். ஆனுல், இவர்களுக்குத் தக்க பயிற்சியும், கிராமத்திலிருந்து நகரத்தில் குடியேறி வாழத்தக்க வசதியும் செய்து கொடுப்பதுபிற்பட்ட நாடுகளில் பிரச்சினைகளை ஏற்படுத்தும். இந் நாடுகளில் தொழில்மயம் அதிகரிக்க இவ்விரு அடிப்படைப் பிரச்சினைகளும் உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டும். இதற்குத் தக்க ஆர்வத்தைத் தொழிலாளர்களிடையே உருவாக்கி அவர்களின் சமூக மன நோக்கை மாற்றியமைக்கவேண்டும். இத்தகைய மாற்றத்தால்தான் தொழில் உற்பத்தி அதிகரித்து, தொழிலாளர்களின் தரமும் திறமையும் மேலும் உயரும். இச் சமூக மாற்றத்தை ஏற்படுத்தத் தொழில்களைப் பரவலாக்கிக் கல்வி, செய்தித் தொடர்பு சாதனங்கள் ஆகியவைகளில் சீரமைப்புகளை மேற்கொள்ள வேண்டும்.

## பொருளாதார நடவடிக்கைகளில் மக்களின் ஆர்வம்

### அரசியல் காரணிகள்

அமைப்புமுறைக் காரணிகள் மக்களின் ஆக்க நடவடிக்கைகளில் உள்ள ஆர்வத்தைப் பெருமளவில் பாதித்து வருகின்றன.

[1] டாக்டர் D. பிரைட்சிங். வளர்ச்சிப் பொருளாதாரம். ப. 79.

அரசியல் சூழ்நிலையில் நிலையின்மை காரணமாகத் தொழிலாளர்களின் திறமையும், தொழில் துணிவும் பாதிக்கப்படுகிறது. ஒருநாடு மற்றொரு நாட்டில் அரசியல் ஆதிக்கம் செலுத்துவதால் ஆளப்படும் நாட்டில் பொருளாதார சுரண்டல் (Economic Exploitation) அதிகரிக்கிறது. இதன் விளைவாக உள்நாட்டு மக்களின் தொழிலால்வரும் கடும் உழைப்பு குறைகிறது. அரசியல் நிலையின்மை காரணத்தால் தனியார் சொத்துக்குப் பாதுகாப்பு இல்லாமல் போய்விடுவதால் மக்களின் கடும் உழைப்பு, செல்வச் சேர்க்கை குறைக்கப்பட்டு விடுகிறது. அடிமை முறையினால் உற்பத்தித் திறமை குறைந்து விடுவதோடு மட்டுமல்லாமல் பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான சமுதாயப் பண்புகள் அனைத்துமே அழிந்து விடுகின்றது என்று பேராசிரியர் W. ஆர்தர் லூயிஸ் குறிப்பிடுகின்றார்.[1] சிவப்பு இந்தியர்கள் தங்கள் தலைவர்களுக்கு அதிக வருவாய் ஈட்டித்தரக் கடுமையாக உழைத்தார்கள். காலப்போக்கில் தலைவர்கள் சோம்பேறியாக மாறினார்கள். அரசியலில் நிலையின்மை காரணமாகப் பொருளாதார வளர்ச்சியும் நிலையில்லாமல் போய்விடுகிறது. பொருளாதார வளர்ச்சியை ஓர் அரசியல் கட்சி ஒருவகையிலும் மற்றொரு கட்சி வேறு வகையிலும் கண்ணோட்டம் கொள்வதால் வளர்ச்சி நிலையில்லாமல் போய்விடுகிறது.

### மத காரணிகள்

மதம் பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்தவும் தடுக்கவும் துணைபுரிகிறது. மதம் மக்களின் மனத்தில் பொருதார வளர்ச்சிக்கான உணர்வை ஊக்குவித்தால் அது வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக அமைகிறது. உதாரணமாக, மேற்கத்திய நாடுகளில் பிராடஸ்டண்ட் மதம் பொருளாதார வளர்ச்சியைப் பெருமளவில் ஆதரித்ததால் அந்நாடுகள் விரைவான வளர்ச்சியை பெற்றதாக மாக்ஸ் வெபர் (Max Weber) தன்னுடைய ஆராய்ச்சியில் குறிப்பிடுகின்றார். பிராடஸ்டண்ட் தத்துவம் சுலபமான மத அமைப்பை ஏற்படுத்தித் தொழிலாளர், மூலதனம் ஆகியவற்றை வெகுவாக அளித்துப் பொருளாதார வளர்ச்சியைப் பெருமளவில் மேம்படுத்தியது. மக்களிடம் வளர்ச்சி ஆர்வத்தை எந்த ஒரு மதம் தூண்டுகிறதோ அதைப் பொருளாதார முன்னேற்றத்தின் கருவியாகக் கருதலாம். பிராடஸ்டண்ட் தத்துவத்தால் ஜப்பானில் விரைவான முதலாக்கம் ஏற்படவில்லை. என்றாலும், ஜப்பானின் மத ஒழுக்க முறைகள், தத்துவங்கள் அதற்குச் சாதகமாக அமைந்திருந்தன. நார்மன் ஜாகப் என்பவர் சீனாவின் மத ஒழுங்குகளோடு

[1] W. ஆர்தர் லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப.107-118.

ஜப்பானை ஒப்பிடுகிறுர். சீனுவில் கன்பூசிய மதக் கொள்கை மிகப்பழமையான மதக் கருத்துகளையே மக்களிடம் பரப்பி வந்தது. ஆனுல் ஜப்பானில் தனி நபர்களுடைய பிரச்சினை பல்வேறு தீர்வுகளால் மாற்றியமைக்கப்பட்டது. ஜப்பானில் மத ஒழுக்க முறைகள் சுதந்திரமான பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கவில்லை. இந்தியாவில் 'கர்மவினை' என்னும் தத்துவம் மக்களின் பொருளாதார நடவடிக்கையைப் பெரிதும் பாதித்தது. பொதுவாக இந்துமதக் கொள்கைகள் பொருளாதார வளர்ச்சிக்குத் தூண்டுதலாக அமையவில்லை. ஏனெனில் மக்களின் தற்போதைய துன்பங்களுக்குக் காரணம் கடந்த ஜென்ம வாழ்க்கையின் வினைப்பயன் என்ற கருத்தைக் கொண்டுள்ளது. மக்கள் இவ்வாறே மூட நம்பிக்கை கொண்டு வாழ்ந்து வினையாற் ருமல் இருந்துவிட்டால், நாட்டில் பொருளாதார முன்னேற்றம் ஏற்படாது.

## 1. குடும்ப அமைப்பு
(Family Structure)

வளர்ச்சியுரு நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்குப் பெருந்தடையாய் இருக்கும் மற்ருெரு சமூக நிறுவனம் குடும்ப அமைப்பாகும். இந் நாடுகளில் குடும்பங்கள் மிகப்பெரிய அளவின்தாய் அமைந்து ஏராளமான சார்ந்த உறுப்பினர்களைப் (Dependent members) பெற்றுள்ளன. ஆனுல், தொழிலில் முன்னேறிய நாடுகளில் குடும்பங்களின் அளவு மிகச் சிறியனவாய் உள்ளது. வளர்ச்சி குறைந்த நாடுகளில் பணிபுரியும் ஒருவரை நம்பிப் பணிபுரியாத ஏராளமான குடும்ப உறுப்பினர்கள் சார்ந்து வாழ்ந்து வருகின்றனர். இத்தகைய பரந்த குடும்ப உறவுமுறை கடுமையாக உழைப்பவர்களின்மேல் பெருஞ்சுமையாகவே இருக்கிறது. உழைப்பவரின் ஊதியம் உயர்வதற்கு ஏற்ப அவரை நம்பி வாழ்வோரின் எண்ணிக்கையும் அதிகரிக்கிறது. உற்பத்தி தனி நபரின் சுய ஆற்றலுடன் அதிகரிக்கப்பட்ட போதிலும் நுகர்வு பழமையான கூட்டுக்குடும்ப முறையினுலேயே (Collective System) கட்டுப்படுத்தப்பட்டு வருகிறது. எடுத்துக் காட்டாக, பாகிஸ்தானில் தொழிலாளர்களில் 78 சதவீதத்தினர் தங்கள் மனைவி, குழந்தைகள் நீங்கலாக, ஏராளமான நம்பிவாழ் வோரைக் கொண்ட பெரிய குடும்பங்களைப் பெற்றுள்ளனர்.[1] இந்தியாவில் கூட்டுக் குடும்ப முறை (Joint Family System) காணப்படும் சில பகுதிகளில் அதிகமான சார்ந்தவர்களைக்

[1] ஐ நா, ஆசியா, தூரகிழக்கத்திய நாடுகளின் பொருளாதார வெளியீடு, ப. 17.

கொண்ட பெரிய குடும்பங்களினுல் பல சீர்கேடுகள் ஏற்பட்டுள்ளன. இக் குடும்ப முறையினுல் பணிபுரிவோரின் ஊதியங்கள் ஒன்ருய்ச் சேர்க்கப்படுவதால் ஒருவகைச் சமூகக் காப்பீட்டு (Social Scurity) அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, சத்தியற்ற குடும்ப உறுப்பினர்களுக்கு நல்ல பாதுகாப்புக் கிடைக்கிறது. கூட்டுக் குடும்ப முறையில் உழைப்பவர்களின் ஊதியங்கள் ஒன்ருய்ச் சேர்க்கப்படுவதாலும், தொழிலைத் திறமையுடனும் நேர்மையுடனும் நடத்த நம்பிக்கையும் உறுதியும் கொண்ட உறுப்பினர்கள் சில குடும்பங்களில் இருப்பதாலும் பெரிய தொழில்களும் தோன்றுகின்றன. ஆனுல், இத்தகைய சமூக அமைப்பில் நன்மைகளைவிடச் சீர்கேடுகளே அதிகமாக உள்ளன. குடும்பத்தலைவரின் மீது எல்லாப் பொறுப்புகளும் விழுந்துவிடுகின்றன. இதனுல் குடும்பத்தில் பழைமை மன நோக்கு (Conservatism) ஆதிக்கம் செலுத்தும். நுகர்வு, உற்பத்தியைப் பொறுத்ததாக இல்லாமல் தேவையை அடிப்படையாகக் கொண்டிருப்பதால், உழைப்பவர்களிடம் அதிக உற்பத்தி செய்ய வேண்டும். சொத்து சேர்க்க வேண்டுமென்ற ஊக்கம் பெருமளவில் குறைகிறது. எனவே, இம் முறையினுல் தனிநபர் சேமிக்கும் ஆர்வம் குறைகிறது. இதனுல் குடும்பத் தலைவரிடமிருந்து சொத்தைப் பெறும் உரிமை குறைகிறது. இது கடும் உழைப்பையும் தொழில் முன்னேற்றத்தையும் பெருமளவில் தடுக்கிறது. இந்தியாவில் தொழில் வளர்ச்சி அதிகரித்து வருவதாலும் கல்வி பரவலாக்கப்பட்டு வருவதாலும் கூட்டுக் குடும்ப முறை படிப்படியாகச் சிதைவுற்று வருகிறது. இதேபோல் சாதிமுறையாலும் (Caste System) தொழிலாளர் பெயர்ச்சி, ஒரு சில வகுப்பினர் முன்னேற்றம், போன்றவைகள் தடைபட்டுள்ளன.

குறைந்த வேளாண்மை உற்பத்தித்திறன்

பெரும்பாலான வளர்ச்சியுரு நாடுகளின் பொருளாதார அமைப்பில் வேளாண்மையே பிரதான தொழிலாக அமைந்துள்ளது. பிற்பட்ட, திறமை குறைந்த உற்பத்தி முறையால் வேளாண்மையில் உற்பத்தித்திறன் மிகவும் குறைந்துள்ளது. இந் நாடுகளிலுள்ள நில உடைமை முறை (System of Land holding) குத்தகை முறை (System of Tenure) களில் காணப்படும் பல்வேறு சீர்கேடுகளால் வேளாண்மை உற்பத்தி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. நில உரிமையைப் பெற்றிருத்தல் சமூக அந்தஸ்தையும் கௌரவத்தையும் அதிகரிப்பதாக நிலக்கிழார்கள் கருதுவதால், அவர்கள் தங்கள் நிலத்தில் உற்பத்தியைப் பெருக்குவதிலும் வருமானத்தை அதிகரிப்பதிலும் உண்மையில் முழு அக்கறை செலுத்துவதில்லை. நிலக்கிழார்கள் நிலத்தில் அக்கறையில்லாமல்

வேறு தொழில் நடவடிக்கைகளில் ஈடுபடுவதால்தான் தலத்தலில்லா நிலக்கிழார் முறை (Absentee Land Lordism) பிற்பட்ட நாடுகளில் காணப்படுகிறது. நிலத்தைத் திறமையுடன் ஆக்கத்திற்குப் பயன்படுத்த ஊக்குவிப்பது நிலத்தை உரிமையாகப் பெறுதலும் நிலக்குத்தகைப் பாதுகாப்புமாகும். துரதிர்ஷ்ட வசமாகப் பிற்பட்ட நாடுகளில் இவ் வம்சங்கள் திருப்திகரமாக இல்லை. இவற்றைத் திறம்பட நடைமுறைப்படுத்தத் துணிவுடன் நிலச்சீர்திருத்தங்களை (Land Reforms) அமுலாக்க வேண்டும். அப்போதுதான் விவசாயிகளின் உற்பத்தித்திறன் அதிகரிக்கும். இந்தியாவிலுள்ள சொத்துரிமைச் சட்டத்தால் (Law of Inheritance) குடும்பத்திலுள்ள எல்லோருக்கும் சொத்துப் பிரிக்கப்பட்டுக் கொடுக்கப்படுவதால், நிலத்தில் உட்பிரிவுகளும், துண்டாடப் படுதலும் (Subdivision and Fragmentation of holdings) காணப் படுகிறது. இதன் விளைவாக எந்திரமயமும், பேரளவு உற்பத்தியும் தடைபட்டு வேளாண்மைத்துறை மேம்பாடடையாமல் மற்றப் பொருளாதாரத் துறைகளை இயங்க வைக்கும் சக்தியையும் இழந்து விடுகிறது. இதனுல்தான் இத் துறை இந் நாடுகளில் பராமரிப்புத்துறையாகவே (Subsistence Sector) இருந்துவரு கிறது. முடிவாக, தொழில் துறையில் உற்பத்தி அதிகரிக்கத் தொழிலாளர்களிடம் கட்டுப்பாடும் (Discipline), கடும் உழைப்பும், தியாகமும், உற்பத்தித்திறமையும் அதிகரிக்க வேண்டும். வேளாண்மை உற்பத்தி அதிகரிக்க, விவசாயிகளுக்குத் தகுந்த குத்தகைப் பாதுகாப்பும், நிலத்தை உரிமையாகப் பெறவசதியும், தக்க பயிற்சியும், தேவையான உள்ளீடுகளும் (inputs) அளிக்கப்பட வேண்டும்.

## 2. சமூக காரணிகளும் சேமிப்பும்
(Social Factors and Savings)

வளர்ச்சி குறைந்த நாடுகளிலுள்ள பிற்பட்ட சமூக அமைப்புகள் அங்குள்ள மக்களின் நுகர்வுப் பாங்கைப் (Patterns of Consumption) பெருமளவில் பாதித்து, சேமிப்பு, முதலாக்கம் (Capital Formation) ஆகியவைகளின் பெருக்கத்தைத் தடை செய்கின்றன. பொருளாதார வளர்ச்சியில் சேமிப்பின் அளவும், முதலாக்க வீதமும் மிகமுக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. இவ் விரண்டும் அதிகரித்துள்ள நாடுகளாகிய அமெரிக்கா, கானடா, இத்தாலி, ஜப்பான் போன்றவைகளில் சேமிப்பும், முதலாக்கமும் மொத்தத் தேசியவருவாயில் சுமார் 15 சதவீதம் முதல் 20 சதவீதம் வரையிலும் காணப்படுகிறது. ஆனுல் வளர்ச்சியுறு நாடுகளில் அது மிகவும் குறைந்துள்ளது. மாதிரியாக இந்தியாவில் உள்நாட்டுச்

சேமிப்பு வீதம் மொத்தத்தேசியவருவாயில் சுமார் 12 சதவீதம் தான் என்பது அறியத்தக்கதாகும். வளர்ச்சியுறு நாடுகளில் சேமிப்பு குறைந்திருக்கக் காரணம் மிகக் குறைந்த தலா வருவாய் (Per Capita Income) ஆகும். இதைவிட முக்கியமாக இந் நாடுகளில் காணப்படும் மற்ருெரு மிகப்பெரிய குறைபாடு, கிடைக்கும் குறைந்த சேமிப்பைச் சேகரித்து, முதலீட்டு நடவடிக்கைகளில் மேற்கொள்ளத் தக்க வழிமுறைகள் இல்லாமையாகும். பொதுவாக, வளர்ச்சியடைந்த நாடுகள் உட்பட எல்லா நாடுகளிலுமே மொத்த தேசிய உற்பத்தியில் ஒரு பகுதி வீணடிக்கப்பட்டுத்தான் வருகிறது. ஆனல், இவ் வீணடிப்பு சமூக காரணிகளாலும் மக்களின் பழக்கவழக்கங்களாலும் எந்த அளவு பாதிக்கப்பட்டுள்ளது என்பதை அறிய வேண்டியது இன்றியமையாததாகும். மக்களின் மனப்போக்கு, பழக்கவழக்கங்கள் போன்றவைகளைப் பொறுத்துத்தான் நுகர்வுப் போக்கும் உள்ளது. மாதிரியாக இந்தியாவில் சில வகுப்பினரால் மாமிசம் பயன்படுத்தப்படுவதில்லை. தென்னிந்திய மக்களில் பெரும்பாலோர் அரிசி உணவை அதிக அளவில் விரும்புகின்றனர். இத்தகைய நடவடிக்கைகளால் தேவை, அளிப்பு பாதிக்கப்படுகிறது. பொதுவாக, இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் மக்களின் வருவாயில் பெரும்பகுதி உணவுப் பொருள்களின் மீதே செலவழிக்கப்படுகிறது. வளர்ச்சிக்கு உகந்த சமூக அமைப்புகள் ஒரு நாட்டில் அமையுமேயானல், அங்கு சிக்கனம், சேமிக்கும்திறன், எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனை, குடும்பப் பாதுகாப்பில் அக்கறை, குடும்ப வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் ஆர்வம் போன்ற பொருளாதாரப் பழக்க வழக்கங்கள் மக்களிடையே உருவாகும்.

### சமூக உறவின் புதுமைப் பாங்கு

ஐரோப்பிய நாடுகளில், அவைகளின் தொழில் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் ஏராளமான செல்வமும், மூலதனமும் சேர்ந்து முதலாக்கம் பெருமளவில் பெருகியதற்குக் காரணம் அந்நாட்டு மக்களின் சமூக இயல்புகளேயாகும். ஹெர்பர்ட் பிராங்கெல் (Herbert Frankel) என்பவர் 18-ம் 19-ம் நூற்ருண்டுகளில் ஐரோப்பாவில் மூலதனம் பெருமளவில் அதிகரித்ததற்குக் காரணம் இயந்திர முறை சக்தி (Mcehanical Forces) களல்ல. ஆனல், சமூக உறவின் புதுப்பாங்கில் தோன்றிய எழுச்சியாகும் (Evolution of new Patterns) என்று குறிப்பிடுகிருர். இப் புதுமைப் பாங்கு என்பது "சீரமைத்தல், எதிர்கால நோக்கு, குழந்தைகளை அறிவாளிகளாக்குதல், மக்கள் தங்கள் திறனை, தொழிலாற்றலை, அனுபவத்தைச் சீர்படுத்திப் புதிய நடவடிக்கைகளை மேற்

கொள்ளுதல், பிற்பட்ட பழைய பழக்க வழக்கங்களைக் கண்டித்தல் போன்றவைகளைக் குறிக்கிறது. [1]

பொருளாதார மற்ற அம்சங்களில் சேமிப்பு வீணடிக்கப்படல் (Wastage of Savings in Non-Economic Practices)

வளர்ச்சி குறைந்த நாடுகளில் சமூகப் பொருளாதாரப் புதுமைப் பாங்கை காண்பது அரிதாக உள்ளது. மேலும், பொருளாதாரத்தில் மூலதனத்தின் அளவு அதிகரிக்கும்போது ஒரு குறித்த விகிதத்தில் வருமானங்கள் உயர்கின்றன. ஆனால், அதிகரிக்கும் வருவாய் முழுவதும் நுகர்வுக்காகவே செலவு செய்யப்படுவதால், சேமிப்பு எல்லை (Savings Margin) மிகவும் குறைந்துள்ளது. இக் குறைந்த அளவு சேமிப்பு முழுவதும் நுகர்வுக்காகவோ அல்லது ஆக்கத்திற்கு உதவா முதலீட்டிலோ வீணடிக்கப்படாமல் தடுக்கப்படவேண்டும். இந் நாடுகளில் நுகர்வின் அளவு மிகக் குறைந்திருப்பதால், இதை மேலும் குறைப்பது சிறந்ததன்று. இந் நாடுகளில் காணப்படும் சமூகப் பழக்கவழக்கங்களால் ஏராளமான பணம் ஆடம்பர விழாக்களிலும், விசேட நாள்களிலும், வீணாக்கப்படுகிறது. இந் நிலையை மாற்றியமைத்துச் சேமிப்பைத் தீவிரப்படுத்த மக்களைக் கல்வியறிவுடையவர்களாக்கி அவர்களைப் பொருளாதார மற்ற நடவடிக்கைகளில் சேமிப்பை வீணடிக்காமல் பயனுள்ள பணிகளுக்குப் பயன்படுத்தச் செய்ய வேண்டும். இந் நாடுகளில் வளர்ச்சி பெற்ற நாடுகளைக் காட்டிலும் பெருமளவு வருமான, செல்வப் பங்கீட்டு ஏற்றத் தாழ்வுகள் மிகவும் கடுமையாகக் காணப்படுகிறது. செல்வம் ஒரு சிலரிடமே குவிந்திருந்து சேமிப்பு அதிகரித்த போதிலும் அது இலாபகரமான பணிகளில் பயன்படுத்தப்படுகின்றனவா என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும்.

சேமிப்பை நிலம், ஆடை ஆபரணங்களில் வீணடித்தல்

இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் நிலத்திற்குப் பொருளாதார மதிப்பும் (Economic Value) சமூக அந்தஸ்தும் கொடுக்கப்பட்டுள்ளது. நிலத்தோடு மக்கள் நெருங்கிய தொடர்புடையவர்களாய் உள்ளனர். நிலம் வைத்திருப்பவர்களுக்குச் சமூகத்தில் மரியாதை கிடைப்பதால் நிலத்தில் முதலீடு செய்யச் செல்வந்தர்கள் விரும்புகின்றனர். ஆனால், அவர்களுக்கு உற்பத்தியை அதிகரிப்பதில் முழு அக்கறை இருப்பதாகத்

[1] S. ஹெர்பர்ட் பிராங்கெல், 'வளர்ச்சியுருச் சமுதாயங்களில் பொருளாதார விளைவு, ஆக்ஸ்போர்டு, லண்டன், 1953, ப. 69,

தெரியவில்லை. சமுதாய மூலதனத்தின் பெரும் பங்கு நிலச் சொத்துகளில் (Real estate) முதலீடு செய்யப்படுகிறது. கிடைக்கும் மூலதனத்தின் ஒருபங்கு நகை, ஆபரணங்கள், விலை உயர்ந்த ஆடைகள், போன்றவைகளில் முதலீடு செய்யப்படுகிறது. இவ் வகைப் பொருள்களில் சேமிப்பு முதலீடு செய்யப்படுவது பொருளாதார இயல்புகளுக்குப் புறம்பான நடவடிக்கையாகும். நகை, ஆபரணங்களை மாதர்களும் சிறுவர்களும் அணிவது சமூகப் பண்பாடாகக் கருதப்படுகிறது. ஆனால், இது பொருளாதார இயல்புக்கு உகந்ததாக இல்லை. எனவே, இத்தகைய தப்பெண்ணங் களையும், மனநோக்கையும் கற்றோர், கல்லாதோர் மனத்திலிருந்து, அகற்றச் சமூக மாற்றங்களை ஏற்படுத்த வேண்டும்.

### ஆடம்பர நுகர்வு (Conspicuous Consumption)

வளர்ச்சி குறைந்த ஏழ்மை நாடுகளில் செல்வந்தர்கள் தங்களின் ஏராளமான செல்வத்தைத் தற்பெருமைக்காகப் பெரும் விருந்துகளிலும், விழாக்களிலும், வானளாவிய கட்டடங்களிலும் மாடமாளிகையிலும் பகட்டுப் பொருள்களிலும் வீணடிக்கின்றனர். இதைப் பொதுவாக எல்லா வகுப்பு மக்களுமே பின்பற்றுவதைக் கண்கூடாகக் காணலாம். எடுத்துக் காட்டாக இந்தியர்கள் அமெரிக்கர்களின் வாழ்க்கைப் பாங்கைப் போலவே தாங்களும் பின்பற்ற வேண்டுமென்று விரும்புகின்றனர். இதனால் உற்பத்தியின் அளவிற்கு மேல் நுகர்வின் அளவு அதிகரிப்பதை அவர்கள் சிந்திக்கத் தவறுகின்றனர். எனவே, இத்தகைய நுகர்வு பெரும்பாலான மக்களின் சமூக முதிர்ச்சியின்மையையும், கண்மூடித்தனமான நடத்தையையுமே புலப்படுத்துகிறது. மேற்கத்திய நாடுகளில் மக்கள் உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்றிருப்பதற்கு தலையாய காரணம் அவர்களின் கடுமையான உழைப்பு என்பதை மக்கள் உணராமல் முதிர்ச்சியடையா நிலையில் உள்ளனர். வளர்ச்சியடைந்த நாடுகளில் அளிப்பு வசதிகளில் சீரமைப்பு இருப்பதால்தான் வாழ்க்கைத் தரமும், உண்மை நுகர்வும் உன்னத நிலையில் உள்ளன. ஆனால், அதற்கு மாறாகத் தொழில் வளர்ச்சியடையாத இன்றைய நாடுகளில் மக்களிடம் அளிப்பு அதிகரிப்பதற்கு முன்பே உயர்ந்த அளவு நுகர்ச்சியைப் பெறவேண்டுமென்ற விவேகமற்ற அவசரமும், வீண் ஆத்திரமும் காணப்படுகிறது. அயராது உழைத்து ஒரு குறித்த அளவு உற்பத்தியைப் பெருக்குவதற்கு முன்பே அவசரப்பட்டு அதிக அளவு நுகர்ச்சியை விரும்புவது சிறந்ததாகாது. மேற்கத்திய நாகரிகத் திற்கு உடந்தையாக இருந்த கடும் உழைப்பு, விடாமுயற்சி போன்ற அரும் இயல்புகளையும் வளர்ச்சி குறைந்த நாடுகளில்,

உள்ள மக்கள் பின்பற்றுவதற்குத் தகுந்த வழிமுறைகள் கையாளப் படவில்லை.[1]

ஆடம்பரத் தொழில் மயம் (Conspicuous Industriliation)

ஆடம்பர நுகர்வைப் போலவே ஆடம்பரத் தொழில் மயம் என்பது சூழ்நிலையை அறியாமலேயே பிரம்மாண்டமான தொழில் மயத் திட்டங்களை அமுலாக்குவதில் பேரார்வம் கொள்வதைக் குறிக்கிறது. முதல்நிலை உற்பத்தி நாடுகளில் (Primary Producing Countries) தொழில் வளர்ச்சி இன்றியமையாதது என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு கிடையாது. ஆனால், நாட்டின் உண்மைப் பொருளாதாரத் தேவைகளை அறியாமல் வீணான தேசியத் தற்பெருமை நோக்குடன் (National Vanity) பேரார்வ மிக்கத் திட்டங்களை அமுலாக்குவது வளர்ச்சியைப் பெரிதும் தடுத்துவிடும். மேலும், பொருளாதாரத்தின் நீண்ட காலத் தேவைகளைப் பூர்த்திசெய்யும் மிக முக்கியமான முதலீடுகளில் அக்கறை குறைந்துவிடுகிறது. சான்றாக, இன்றியமையாத நுகர்வுப் பொருள்களின் உற்பத்திக்குப் பதிலாக சிறு மோட்டார் உற்பத்தி தொழில்களை (Small Car Projeet) விரும்புவது டம்பத் தொழில் நடவடிக்கையாகும். மேலும், கோடிக்கணக்கான ரூபாய் செலவுகளைக் கொண்ட பெரும் பாலங்கள் போன்றவைகளில் இந்தியா செலவிடுவது சிறந்ததாகாது. இதைப் போன்றே பிற்பட்ட நாடுகளின் அரசுகள் ஏராளமான தொகையை அரசியல் தூதுவர் கூடங்கள்(Embassies), பன்னாட்டுத் தூதுக் குழுக்கள், பிரதிநிதிகள் போன்ற அமைப்புகளின்மேல் வீணாகச் செலவிடுவதும் டம்பச் செலவினமாகும். (Conspicucous Spending). தேசிய உணர்வின் பெயரால் இத்தகையச் செலவினங்களைப் பன்னாட்டுக் கௌரவத்திற்காகச் செலவு செய்வது நாட்டில் உள்ள குறைந்த அளவு மூலதனத்தை வீணடிப்பதாக விளங்கும். இத்தகைய தேசிய உயர்மதிப்பு தானாகவே ஒரு நாட்டிற்கு வந்துசேர வேண்டும். அதற்காக வீண் செலவுகளை மேற்கொள்ளுதல் மதியீனமாகும்.[2]

எனவே, நுகர்வு, சேமிப்புப் பாங்கை மாற்றமடையச் செய்து வளர்ச்சிக் குறைந்த நாடுகளில் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த சமூகச் சூழ்நிலையும், இயல்பு முறைகளும் குறிப்பிடத் தக்க வகையில் மாற்றம் பெறவேண்டும். சமூகத்தில் முன்னணியி

[1] H. W. சிங்கர் (Singer), 'பொருளாதார வளர்ச்சியின் இடையூறுகள், சமூக ஆய்வு' பாகம்-20, 1953, ப. 27-31.

[2] J. மேரியோன் லெவி (Marion Lavy), 'வளர்ச்சி குறைந்த பகுதிகளில் முதலாக்கத்திற்கான சில தடைகள்.' 'முதலாக்கமும் பொருளாதார வளர்ச்சியும்' என்ற நூலில் உள்ள கட்டுரை, 1955. ப. 488.

லிருப்போர் வளர்ச்சிக்குகந்த மனநோக்கைப் பெற்றுச் சமூகத்தின் பழமையான பழக்கவழக்கங்களைத் தகர்த்தெறிவதற்குத் தயாராக வேண்டும். புதிய சமூகப் பொருளாதார அமைப்புகள் தோன்றித் தீவிரமான முறையில் சேமிப்பை அதிகரிக்கச் செய்யவேண்டும். தனியார் இலாபம் தற்காலத்தில் குறைந்திருப்பதால் பொருளாதாரத்தில் சேமிப்பும் குறைகிறது. இதற்காக அரசே வரி விதிப்பு, கடன் எழுப்புதல், போன்றவைகளால் சேமிக்கும் பொறுப்பை ஏற்றுப் பெரும்பங்காற்ற வேண்டும். இதற்கு அடிப்படையாகச் சமூக அமைப்பில் தகுந்த சீரமைப்பு இன்றியமையாததாக விளங்குகிறது.[1]

3. சமூக காரணிகளும் தொழில் துணிவாற்றலும் (Social factors and Entrepreunrship)

மேற்கத்திய நாடுகளில் தொழில் துணிவோர் கடும் உழைப்பு, தூண்டுதல் ஆர்வம் போன்ற நற்பண்புகளைப் பெற்றிருந்ததால் பொருளாதார வளர்ச்சி மேலோங்கியது. உற்பத்திக் காரணிகளையும், மற்ற வளங்களையும், ஆக்கத்திற்காகத் தொழிலதிபர்கள் பயன்படுத்துவதால் ஒரு நாட்டில் பொருளாதார முன்னேற்றம் அதிகரிக்கிறது. பேராசிரியர் கால்டர் அவர்களின் கருத்துப்படி, "கடந்த இருநூறு ஆண்டுகளில் மிக விரைவான பொருளாதார வளர்ச்சி (நவீன முதலாளித்துவம்) ஏற்படுவதற்குக் காரணமாயிருந்தது, இடர்தாங்கி, இலாபம் ஈட்டவேண்டுமென்ற மக்களின் மேம்பட்ட மனப்போக்கே யாகும். பழமை மனநோக்கை மாற்றியமைத்துப் புதுவகை உற்பத்திமுறையைத் தோற்றுவிக்கச் சமூகச் சக்திகளைச் சீராக்கவேண்டும். பொருளாதார அல்லது தொழில் நுட்பக் காரணிகளைவிடச் சமூகக் காரணிகளின் விளைவாகத்தான் நவீன முதலாளித்துவத்தின் தொழில் நிறுவனங்கள் உருவாகியுள்ளன.[2]

சூம்பீட்டர் கண்ட தொழில் முயல்வோன்

திரு. சூம்பீட்டர் அவர்கள் தொழில் துணிவோனைப் புத்தாக்கங்களை (Innovations) உட்புகுத்தும் வல்லுநர் என்றே விவரிக்கின்றார். சூம்பீட்டரின் புத்தாக்கன் (Innovator) சாதாரண நிலையில் இருந்துவரும் நுகர்வு, உற்பத்தி, ஆகியவைகளின் சுழற்சி வேகத்தை மாற்றியமைத்துப் புதிய உற்பத்தி முறைகளின் மூலம் புதிய பொருள்களை உற்பத்தி செய்து நாட்டில்

[1] ஐ. நா. ஆசியா தூரக்கிழக்கு நாடுகளுக்கான பொருளாதார வெளியீடு, டிச. 1959. ப. 20.

[2] N. கால்டர் 'பொருளாதாரச் சமநிலை, வளர்ச்சியின் கட்டுரைகள்' 1960, ப. 236.

ஒருங்கிணைந்த பொருளாதார வளர்ச்சியை இயங்கச் செய்கின்றான். எனவே, உண்மையான தொழில் துணிவோன் ஓர் இயற்கைத் தலைவனின் இயல்புகளைப் பெற்று, மற்றவர்களைக் காட்டிலும் அதிகத் திறமை, புத்தாக்கங்களை உட்புகுத்தும் ஆற்றல், சுய உணர்வு போன்ற நல்லியல்புகளைப் பெற்றவனாக இருத்தல் வேண்டும்.[1] திரு சூம்பீட்டர் அவர்கள் குறிப்பிட்டுள்ள இயல்புகளில் சிலவற்றைப் பெற்றிருந்த தொழிலதிபர்களாகிய ராக்பெல்லர் (Rockfeller), ஹென்றி போர்டு (Henry Ford), கிரப் (Krupp) அல்லது பிரபு பீவர்புருக் (Lord Beaver-Brook) போன்றவர்களின் அறிவுத் திறனால் செல்வம் அவர்களிடம் தேடிவந்து சேர்ந்தது. அவர்கள் தங்கள் நாடுகளில் ஒரு தொழில் அரசாட்சியையே தோற்றுவித்துப் பொருளாதார வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தனர். ஆனால், தற்போது நவீன அரசுகளே (Modern Governments) பொருளாதார, தொழில் துறையில் அதிகப் பங்கு பெற்று வருவதால், சூம்பீட்டரின் புத்தாக்கனுடைய (Innovator) சேவை வாய்ப்பு மிகவும் குறைந்துள்ளது.

## தொழில் துணிவாற்றலுக்கேற்ற சமூக அமைப்பின்மை
(Social institutions, unfavourable to Entrepreneurship)

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழிலில் சிறப்பாக ஈடுபடுவோருக்குச் சமூகம் தகுந்த மரியாதை அளித்து அவர்களை ஊக்குவிக்க வேண்டும். சிறப்பு மிக்க ராணுவ தளபதிகள், பேராற்றலுடைய விஞ்ஞானிகள், அறிவுக் கூர்மையான அரசியல் தலைவர்கள் போன்றவர்களுக்கு அளிக்கும் மரியாதையைப் போன்றே தொழிலதிபர்களுக்கும் அளிக்க வேண்டும். அத்தகைய சமூக சூழ்நிலையில் தான் அறிவும் ஆற்றலும் மிகுந்தவர்கள் தொழிலில் ஈடுபட ஆர்வம் பெறுவர். அதனால் தொழில் துணிவு நடவடிக்கையும் அதிகரிக்கும். தொழிலுக்கு மூலதனம் கிடைப்பதோடு தொழிலாளர் அளிப்பும் தேவையான அளவு கிடைக்க வேண்டும். மாதிரியாக, பிரான்சில் புதிய கண்டு பிடிப்புகள் ஏற்பட்ட போதும் போதிய மூலதனம் இல்லாமையால் அக் கண்டு பிடிப்புகள் மற்ற நாடுகளில்தான் வர்த்தகத்திற்காகப் புத்தாக்கங்களாகப் பயன்படுத்தப்பட்டன. சில நாடுகளில் தொழிலாளர் பற்றாக்குறையின் காரணமாக மற்ற நாடுகளிலிருந்தும் தொழில் துணிவோரை அழைத்துத் தொழிலில் ஈடுபடுத்த வேண்டிய நிலை உள்ளது. சில முன்னோடித் தொழில் நிறுவனங்களுக்கு உரிமம் வழங்குதல் போன்ற செயற்கைத் தொழில் தடைகளால் தொழில்

[1] A. J. சூம்பீட்டர் (Schumpeter), பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு, 1934, ப. 66-70.

துணிவோரின் ஆற்றல் மிக்க புத்தாக்கங்கள் பெரிதும் பாதிக்கப் படுகின்றன. மேலும், தொழிலை மேம்படுத்த வல்ல ஒரு வகுப்பினர் ஒன்று சேர்ந்திருந்தால் தொழில் துறைக்குத் தேவையான தொழில் துணிவோரை, தொழில் துறை எளிதில் பெற முடியும். இத்தகைய நிலையைச் சாதிக்க மக்களிடம் பொருள் சார் மனப் போக்கும், பொருளாதாரச் சீரமைப்பைப் பெற வேண்டுமென்ற ஆவலும் அதிகரிக்க வேண்டும். கல்வி முறையும் அதற்கேற்றாற் போல், பொறியியல், தொழில் நுட்பம், விஞ்ஞானம், போன்ற துறைகளில் கல்வி வசதிகளை அதிகரிக்கச் செய்யவேண்டும். நாட்டில் தனியார் தொழில் நிறுவனங்கள் சுதந்திரமாக வளர்ச்சியடைய வலுவான சட்ட நிர்வாக முறையும், அரசியல் அமைப்பும் ஏற்பட வேண்டும். செல்வம் சேகரிக்கப்படவும், இடர்தாங்குவோருக்கு அதிக சன்மானம் கிடைக்கவும் போதிய ஊக்கிகள் ஏற்படுத்தப்பட வேண்டும்.

### சாதி, மத சிக்கல்கள்

மேற்குறிப்பிட்ட தொழில் துணிவாற்றலுக்குச் சாதகமான சூழ்நிலை, வளர்ச்சி குறைந்த நாடுகளில் இன்னும் உருவாக்கவில்லை. மாற்றத்தை விரும்பாத பிற்பட்ட சமூக நிறுவன அமைப்பு முறை, முன்னோடிகளாக விளங்கும் தொழில் துணியும் வகுப்பினர் தோன்றுவதைத் தடுத்து நிறுத்துகிறது. குடும்ப, சாதிமுறை போன்ற அமைப்புகளினால் கடுமையாக உழைக்கும் தொழிலாளர், தொழில் துணிவோர் ஆகியவர்களின் அளிப்பு தடைபடுகிறது. இதன் விளைவாகத் திறமையான தொழிலதிபர்கள், தொழில் துறைக்கு வருவது தடைபடுகிறது. கூட்டுக் குடும்ப முறை தனி நபரின் சுய ஆற்றலைப் பயன்படுத்த வாய்ப்பில்லாமல் செய்து விடுகிறது. வகுப்புப் பேத உணர்வு அதிகமாயிருந்தால், ஒரு வகுப் பினரின் அங்கத்தினர்கள் மட்டுமே ஒருவருக்கொருவர் மரியாதை செலுத்திக் கொள்ளுகின்றனர். இதனால் பெரிய நிறுவனங்களின் அமைப்பு வலுவிழந்து விடுகிறது. வளர்ச்சியுறாப் பொருளாதார நிலையாலும், பிற்பட்ட சமூக முறையினாலும், சுரண்டல், உறவினர் களுக்குச் சிறப்புச் சலுகைகளை அளித்தல் போன்ற இயல்புகள் தோன்றுகின்றன. மேலும் வகுப்பு உணர்வினால் சமூக நடத்தை யில் தெய்வ வழிபாடு (Ascription) ஒரு சிலர் நற்கதிக் கருத்தில் (Particularism) நம்பிக்கை போன்ற இயல்புகள் உருவாகின்றன. தொழிலில் குடும்பக் கட்டுப்பாடு இருப்பதாலும், கட்டுப்படுத்தும் குடும்பத்திலிருந்து, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்படுவதாலும், குடும்ப வர்க்கத்தில் ஒருசிலர் மட்டுமே உன்னத நிலையில் இருக் கின்றனர். குடும்பத் தொழிலில் ஒரு சிலர் மட்டுமே நிர்வகிக்கும் பொறுப்பிலிருப்பதால் குடும்பத்தில் உள்ள இளையவர்களுக்குத்

தலைமைப் பதவியிலும் முக்கியமானவற்றைத் தீர்மானிப்பதிலும் அனுபவம் பெற வாய்ப்புக் குறைந்து விடுகிறது.[1] இதன் விளைவாக இந்தியா போன்ற நாடுகளில் விரைவான தொழில் மயம் ஏற்படுவது பாதிக்கப்படுகிறது. இதை ஐக்கிய நாடுகளின் ஒரு ஆய்வு சிறந்த முறையில் விவரிக்கிறது. "வம்சாவளிக் கருத்தினால் வேலைப் பகுப்பு (Division of labour) ஏற்பட்டுக் கீழ்ச் சாதியினர் உயர்ந்த இடத்தை அடைய முடிவதில்லை. எனவே, அவர்கள் தங்கள் சாதி நிலைக்கேற்றபடி தொழிலில் ஈடுபடுகின்றனர். இத்தகைய சாதிமுறை ஆழமாக வேரூன்றித் தழைக்கக் காரணமாயிருப்பது ஆத்மாவின் மறுபிறப்புக் கோட்பாட்டில் (Transmigration of souls) மக்களிடம் உள்ள மாறாத நம்பிக்கையாகும். இக் கோட்பாட்டின்படி நடக்காதவர்கள் மறுபிறப்பில் மேலும் கீழ்ச் சாதியிலேயே பிறக்க வேண்டிய நிலை ஏற்படும் என்றும் மக்கள் மூடநம்பிக்கை கொண்டுள்ளனர். இதன் விளைவாகத் தனிநபர் சுய ஆற்றல் புதிய தொழில் நடவடிக்கைகளில் பயன்படுத்தப்படுவது தடுக்கப்படுகிறது. மேலும், தொழில் துறையில் தன்னிகரில்லாத் தலைவர்கள் தோன்றுவதும் பெருமளவில் பாதிக்கப்படுகிறது.[2] எனினும் சில குறித்த வகுப்பினர் தொழில் துறையில் ஈடுபட்டுத் தொழில் வளர்ச்சியை அதிகப் படுத்தியுள்ளனர். இதற்கு உதாரணமாக, இங்கிலாந்தின் குயாகர்ஸ் (Quakers in Britain) வகுப்பினரையும் இந்தியாவில் பார்சீஸ் (Parsees in India) வகுப்பினரையும் கூறலாம். சமூக அமைப்பில் இத்தகைய பெரும் சிக்கல்கள் காணப்படுவதால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழில் துணிவாற்றல் மிகக் குறைவாக உள்ளது.

பிற்பட்ட கல்வியும் தொழில் துணிவாற்றலும்

வளர்ச்சி குறைந்த நாடுகளில் சமூகத்தின் பழமை நோக்கு, கீழ்த்தர நகர மயம், பிற்பட்ட கல்விமுறை போன்ற பல்வேறு சமூக காரணங்களால் தொழில் துணிவாற்றல் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது. மேற்கத்திய நாடுகளில் நகர மயமும் தொழில் மயமும் ஒன்றை ஒன்று சாதகமான முறையில் துணை புரிந்தன. நகரப் பகுதிகளில் வளர்ச்சி அதிகரிப்பதால் தொழில் துணிவாற்றல் மிக்கவர்கள் அதிக அளவில் குடியேறுகின்றனர். மேலும் கல்வி வசதி, அதிக

1 ஐ. நா. 'வளர்ச்சியுறு நாடுகளில் தொழில் நிறுவனங்களின் நிர்வகிப்பு', ப. 1958, 8-9.

2 ஐ. நா. 'தொழில் மயத்தின் நடவடிக்கைகளும் பிரச்சினைகளும்' 1955, ப. 19.

வருவாய் போன்ற காரணங்களால் அவர்கள் நகரங்களில் தொழில் துறையில் ஈடுபடுகின்றனர். ஆசிய நாடுகளில் உள்ள அநேக நகரங்களில் வெளிநாட்டுப் பண்பாடு அப்படியே பின்பற்றப் படுகிறது. மேற்கத்திய முறைகளைக் கொண்ட தொழில் நகரங்கள் மிகக் குறைவு. இந் நகரங்களில் உள்ள பண்பாட்டுமுறை, பழமைப் பண்பாட்டு முறைகளிலிருந்து பல்வேறு வழிகளில் வேறுபடு கிறது.[1] முன்னேற்றமடைந்த மேகற்த்திய நாடுகளில் நகரங்களில் வாழும் மக்களின் எண்ணிக்கையைவிடப் பிற்பட்ட நாடுகளில் உள்ள நகரங்களில் வாழ்வோர் எண்ணிக்கை மிகக் குறைவாகும். இதற்குக் காரணம் பிற்பட்ட நாடுகளில் வேளாண்மையைப் பிர தான தொழிலாகக் கொண்ட மக்கள் கிராமங்களில் அதிகவளவில் இருக்கின்றனர். எனவே தான் மக்கள் பழமை மன நோக்கும், போட்டி யுணர்வின்றியும் உள்ளனர். பொதுவாகப் பிற்பட்ட நாடுகளில் தொழில் துணியும் வகுப்பினரின்மேல் தப்பெண்ணம் பெருமளவில் உள்ளது. ஒரு சிலர் செய்யும் தவறுகளுக்காக, தொழில் துணியும் வகுப்பை முழுவதுமே மதிக்காமலிருப்பது சிறந்ததன்று. ஆனுல், எல்லாவற்றிற்கும் மேலாக இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில், தொழில் துணிவாற்றல் மிகக் குறைவாகத் தோன்றியிருப்பதற்கு, அடிப்படைக் காரணம் கீழ்த்தரக் கல்வி முறையாகும். ஆசிய நாடுகளில் கல்வி மதத்திஞல் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. இந்தியாவில் சமீப காலம் வரை கல்வி முறையில் விஞ்ஞானத்தைவிடக் கலைத் துறைக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டதாகக் குறை கூறப் பட்டது. ஆங்கிலேயர் ஆட்சியின் போது தகுதி வாய்ந்த அரசாங்கப் பொதுப்பணி அதிகாரிகளும் (Civil servants) எழுத்தர்களும் (Clerks) தேவைப்பட்டதால் அவர்களின் அளிப்பை அதிகரிக்க இத் தகைய கலைக் கல்விமுறை ஊக்குவிக்கப்பட்டது. [2] மேலும், நாட்டில் தொழில் மயம் அதிகரிக்காதிருந்தால் விஞ்ஞானம், தொழில் நுடபம், ஆகியவற்றைக் கற்போருக்கு எதிர்காலம் சிறப் பாக இல்லாமலிருந்தது. பொதுவாக இந்தியக் கல்வி முறை தொழில் துணிவாற்றல் நாட்டில் வளர்ச்சியடைவதற்குச் செய் திருக்க வேண்டிய மிகச் சிறு சேவையையும் செய்யவில்லை. என்பது டாக்டர் D. பிரைட்சிங் அவர்களின் கருத்தாகும் ஏனெனில் கல்வி கற்றோர் மேற்கத்திய நாகரிகத்திலேயே அக்கறை கொண் டிருந்து சாதாரணமக்களின் பிரச்சினையை ஆராயத் தவறி விட்டனர்.

[1] F. பெர்ட் ஹோஸ்லிட்ஸ் (F. Bert Hoslitz) 'பொருளாதார வளர்ச்சி யில் சமூக முறை சார் அம்சங்கள்' (Socialogical aspects of Economic Growth) 1960. ப. 225.

[2] டாக்டர் D. பிரைட்சிங். 'வளர்ச்சிப் பொருளாதாரம்' 1971, ப. 92.

சிக்கலின் விளைவுகள்

சமூக அமைப்பில் காணப்பட்ட சிக்கல்களின் விளைவாகப் பிற்பட்ட நாடுகளின் தொழிலில் இரு இயல்புகள் முக்கியமாகக் காணப்பட்டன.

1. முதலாவதாக, இந் நாடுகளில் தொழில் நிறுவனங்களைத் தோற்றுவித்த வெளிநாட்டவர்கள் மூலதனத்தோடு, தொழிலாற்றல், முற்போக்குச் சிந்தனை, சீரான தொழில் நுட்பம் போன்றவற்றையும் தங்களுடன் கொண்டு வந்தனர். எடுத்துக் காட்டாக, இந்தியாவில் ஸ்காட்லாந்தியர்களும், ஆங்கிலேயர்களும், எகிப்தில் சிரியா, ஆர்மேனியா, கிரேக்கம் போன்ற நாட்டின் மக்களும், மெக்ஸிகோவில் கொலம்பியா, ஸ்பெயின், பிரான்ஸ் ஆகிய நாடுகளின் முதலீட்டார்களும், மலேயா பர்மாவில், இந்தியர்கள், சீனர்களும், தொழில் வளர்ச்சியை மேம்படுத்தினர்.

2. வளர்ச்சியுறு நாட்டு மக்களிடையே காணப்பட்ட சமூக இயல்புகள், மூலதனப் பற்றுக்குறை, இடர் தாங்கும் தகுதியும், சக்தியும், மன மின்மை, போன்ற காரணங்களால், பணம் தொழிலில் முதலீடு செய்யப்படுவதற்குப் பதிலாக நிலச் சொத்துகள், வாணிகம், வர்த்தகம், ஆகியவைகளிலும் முதலீடு செய்யப்பட்டது. ஏனெனில் இத்தகைய நடவடிக்கைகளில் ஏராளமான தொழிலாளர்களை நிர்வகிக்க வேண்டிய திறன் அல்லது அறிவு அல்லது தொழில் நுட்ப ஆற்றல் தேவைப்படாமையே காரணமாகும். எல்லாவற்றிற்கும் மேலாக இத்தகைய முதலீட்டில் தொழிலைவிட இடர் குறைவாக இருப்பதோடு பணத்தின் சுழற்சி மிகவும் விரைவாக உள்ளது. அப்படியே அவர்கள் தொழில் நடவடிக்கைகளில் ஈடுபட்டாலும் பாகாப்பு நிறைந்த தொழில்களிலேயே ஈடுபடுகின்றனர். இதற்கு உதாரணமாக, கியூபாவில் சர்க்கரை உற்பத்தியையும், சிலி, பிரேசிலில் சில ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியையும் கூறலாம்.

## முன்னேறிய நாடுகளின் அனுபவத்தைப் பெறுதல்

இன்றைய வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு முன்னேறிய நாடுகளிடமிருந்து சில நன்மைகள் கிடைகின்றன. வளர்ச்சியுறு நாடுகள் தங்கள் பொருளாதார வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்தில் இருக்கின்றன. முதலாவதாக, இவர்களுக்கு முன்னேறிய நாடுகளின் தொழில் வளர்ச்சியின் நடவடிக்கைகளும், அனுபவங்களும்

கிடைக்கின்றன. அவைகளை இந் நாடுகள் ஆய்ந்து அறிந்து கொள்ளலாம். மேலும், வெளிநாடுகளில் அமுலாக்கி வெற்றி கண்ட தொழில் வகைகளையும், தொழில் யாங்கையும் தங்கள் நாடுகளிலும் சூழ்நிலைக்கேற்ப உட்புகுத்த நல்ல வாய்ப்பினையும் இந் நாடுகள் பெற்றுள்ளன. இரண்டாவதாக, பிற்பட்ட நாடுகளின் தொழில் அதிபர்கள் தொழிலில் விரைவான வளர்ச்சி பெற்ற நாடுகளைச் சுற்றிப் பார்த்துத் தொழிலைத் தோற்றுவித்தல், நிர்வகித்தல், இடர்தாங்கல் போன்ற நடவடிக்கைகளைப் பற்றிய முழு விவரங்களையும் கண்டறிந்து வந்து தங்கள் நாட்டிலும் உள்நாட்டுச் சூழ்நிலை, உற்பத்திக் காரணிகளின் அளிப்பு வசதி போன்றவைகளுக்கேற்ப அம் முதிர்ச்சி பெற்ற அனுபவங்களைத் தொழிலில் நடைமுறைப்படுத்த முடியும். திறமையான தொழில் நிர்வாகத்தைப் பற்றிய முழு இரகசியங்களையும் அறிந்து தொழிலை அவர்கள் மேம்படுத்த இயலும். பரிசோதனைக்காகவும், மாதிரி பார்க்கும் நடவடிக்கைகளுக்காகவும் ஏராளமான பணம் செலவிடத் தேவையில்லாததால், குறைந்த மூலதன வளங்களைக் கொண்டே அவர்கள் சிறப்பாகத் தொழில் நடத்தவும் முடியும். ஆனால், தொழில் வளர்ச்சியை மேற்கொள்ளும்போது தொழில் துணிவோர் பல சமூக, பொருளாதார சிக்கல்களால் தொல்லைப் பட வேண்டிய நிலை உள்ளது. முதலாவதாக, தொழிலுக்கு வேண்டிய முதலாக்கத்தைப் பெற மிகவும் கடினமாகப் போராடி ஆரம்ப முதலீடுகளை மேற்கொள்ள வேண்டியுள்ளது. அரசு சமூக நலனை மேம்படுத்தும் பணிகளை மேற்கொண்ட போதும், விலையுயர்ந்த முதல் சாதனங்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. இதற்கும் மற்ற வசதிகளாகிய போக்குவரத்து, மின்சக்தி, மூலப்பொருள்கள் போன்றவைகளில் ஏராளமான முதலீடு தேவைப்படுகிறது. இரண்டாவதாக, பிற்பட்ட நாடுகளில் முதலீட்டிலிருந்து கிடைக்கும் எதிர்பலனைப் (Returns) பற்றிய துல்லியமான மதிப்பீட்டைத் தயாரித்து அறிய முடிவதில்லை. ஏனெனில் பல்வேறு உற்பத்திச் செலவுகள், சந்தையின் அளவு, தேவை நிலை, போட்டியின் அளவு போன்றவைகளைப் பற்றிய துல்லியமான கணக்கு வழக்குகள் இந்தியாவில் சீரான முறையில் போதிய அளவு கிடைப்பதில்லை. எனவேதான் இந் நாடுகளில் தொழிலில் ஏற்படக் கூடிய இடர்களை முழு அளவில் குறைக்க முடிவதில்லை. இந் நாடுகளில் ஒரு மிகச் சிறிய விஷயமும் பெரிய விஷயமாகப் பெரிதாக்கப்பட்டு விடுகிறது. இத்தகைய சூழ்நிலையில்தான் பிற்பட்ட நாடுகளின் தொழிலதிபர்கள் முன்னேறிய நாடுகளின் தொழிலதிபர்களின் தொழில் நடவடிக்கைகளை அப்படியே பின்பற்றுகின்றனர்.

தொழில் துணிவாற்றலின் சிறப்பு மைய இடம் (Islands of Entre-preneur-ship)

சமீபத்தில் அமெரிக்க பொருளாதார அறிஞர்கள், வளர்ச்சியுறு நாடுகளின் சிறிய தொழில் நிறுவனங்களில் பணிபுரியும் ஏராளமான தொழில் துணிவோரிடம் தொழில் துணியும் ஆற்றல் மிக அதிகமாக இருப்பதாக ஆராய்ந்துள்ளனர்.[1] நவீன பெரிய பண்ணைகள், மிதிவண்டிப் பணி நிலையங்கள், லாரி போக்குவரத்து, செங்கல் ஆலைகள் போன்ற நிறுவனங்கள் சில உள்நாட்டுத் 'தொழில் துணிவாற்றலின் சிறப்பு மைய இடங்களாகும்' (Island of Entrepreneurship) என்று இந் நிபுணர்கள் கருதுகின்றனர். இவ் வகைத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களின் தொழில் துணியும் சக்தி அதிகமாக இருந்தும் சமூக சூழ்நிலை காரணமாக அவர்களின் ஆற்றல் முழு அளவில் பயன்படுத்தப்படுவதில்லை. எனவே, இத்தகைய தொழிலதிபர்களின் தொழில் நிர்வாகப் பிரச்சினை களைத் தீர்க்க அரசு தலையிட வேண்டியது இன்றியமையாததாக விளங்குகிறது.

தொழிற் துணிவாற்றல் பற்றுக்குறையை நீக்கும் வழி

வளர்ச்சி குறைந்த நாடுகளில் தொழில் துணிவாற்றல் பற்றுக் குறை காணப்படுவதற்குப் பல்வேறு வகையான சமூக, அமைப்பு முறை, பொருளாதார காரணிகளால் ஏற்படும் தொல்லைகள்தான் என்பதை மேற்கண்ட ஆய்விலிருந்து அறியலாம். இந் நிலையைச் சீர்திருத்தச் சிறந்த கல்வி வசதிகளின் மூலம் சுய ஆற்றல், தொழில் துணிவு, ஆகியவைகளை அதிகரிக்கச் செய்யவேண்டும். கல்வி முறையில் மாற்றம், தொழிலாளர்களின் தொழில் திறனைச் சீரமைத்தல், சமூக பழக்கவழக்கங்களில் மாற்றமின்மையைக் குறைத்தல், நிதி நிறுவனங்களை ஒருங்கமைத்தல், பொருளாதார சமூக முன்னேற்றத்திற்கான வசதிகளைச் செய்தல், வர்த்தகம், தொழிலுக்குத் தேவையான புள்ளி விவரங்களை அளித்தல், சட்டமுறை, நிர்வாக நடவடிக்கைகளைச் சீர்படுத்தல் போன்ற பல்வேறு நடவடிக்கைகளால் நாட்டில் தொழில் துணிவாற்றலை ஊக்குவிக்க முடியும். இத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ள அரசு நேரடியாகத் தலையிட்டுப் பொருளாதார, சமூக காரணிகளின் இயல்புகளைச் சீரமைக்க வேண்டும். சட்டமுறை, நிர்வாக அமைப்பு இவற்றைச் சீர்திருத்த அரசே நேரடி நடவடிக்கைகளை மேற் கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, தொழில் துறையில் இந்திய அரசு புதிய தொழில் நிறுவனங்களை நிர்வகித்து வருகிறது. ஆனால், அரசால் நிர்வகிக்கப்படும் தொழில்கள், தனியார் தொழில்களுக்கு

[1] C. உல்ப், S. C. சப்ரின் (C. Wolb and S. C Sufrin) 'வளர்ச்சி குறைந்த பகுதிகளில் முதலாக்கமும், வெளி மூதலீடும்,' 1958, ப. 29.

முன் மாதிரிகளாக அமையவேண்டும். தற்போதைய பொருளாதார சமூக அமைப்பில் வளர்ச்சி குறைந்த நாடுகளில் பொது செயல் திட்டங்கள் (Public Programmes) அரசால் மேற்கொள்ளப் பட்டால்தான் தனியார் நடவடிக்கைகள் ஊக்கம் பெறும்.

நிர்வாக, நிதிமுறை நடவடிக்கைகள் (Administrative and Fiscal measures)

தொழில் துணிவுத் துறையில் அரசு பங்கு கொள்வதோடு கூட நிர்வாக வரி, நடவடிக்கைகளின் மூலம் சமூகப் பொருளாதார நிலையை வளர்ச்சிக்கு உகந்ததாக மாற்றியமைக்க கீழ்க்காணும் வகைகளில் முயற்சி செய்யவேண்டும்.

*(1)* தொழில் நுட்ப முறைச் சீரமைப்பு, தொழில் நிர்வாகத் திற்கான மனப்போக்கு, திறமை, ஆகியவைகளை அதிகரிக்கச் செய்யத்தக்க புதுவகைக் கல்வி முறையின் மூலம், சமூக நிறுவன அமைப்பைப் பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றதாக இயங்கிடச் செய்யவேண்டும்.

*(2)* நிதிமுறை நீர்மைத் தன்மையைச் (Financial Liquidity) சீரமைத்து நிதிவசதிப் பிரச்சினையைத் தீர்க்க அரசு வகைசெய்ய வேண்டும். இதற்காகக் கிராமப் புறங்களில் வங்கிகள் தோன்ற ஊக்குவிக்க வேண்டும். அரசால் சேகரிக்கப்பட்ட நிதிவளங்களைத் தனியார் முதலீட்டுக்குப் பயன்படச் செய்ய நிதிமுறைக் கழகங்களை (Financial Corporations) ஏற்படுத்த வேண்டும்.

*(3)* தனியார் தொழிலில் நிச்சயமற்ற (Uncertanities) நிலையைக் குறைக்க அரசு தன் உதவித் துறைகளின் மூலம் சந்தை நிலவரம், புள்ளிவிவரங்கள், ஆராய்ச்சியின் முடிவுகள், வெளிநாட்டு அங்காடிகளின் நடைமுறைச் செய்திகள், போன்றவைகளை சேகரித்துத் தனியார் தொழில் துறைக்கு அளிக்கவேண்டும். அரசின் வரி, நிதியாக்க கொள்கைகளால் ஏற்படும் நிச்சயமற்ற நிலையைப் போக்க இம் முறைகளில் எளிமையான சீரமைப்பை உட்புகுத்த வேண்டும்.

*(4)* தொழில் துணிவோரின் பற்றுக் குறையைக் குறைக்க ஆற்றல்மிக்க சுய தொழில் நடத்துபவர்கள், பொதுப்பணி ஆற்றுபவர்கள் (Civil Servants), போர்ப்படை அதிகாரிகள், போன்றவர்களைத் தேர்ந்தெடுத்துத் தொழில் நிர்வாகத்தில் போதிய பயிற்சி வசதிகளை அளிக்கவேண்டும். தொழிற்பேட்டைகளை ஆரம்பித்துப் பொது உற்பத்தி வசதிகளைச் சிறு நிறுவனங்களுக்கு அளிக்கவேண்டும்.

(5) தொழிலாளர்களுக்குத் தொழிற் கல்வி முறையை அளித்து குறைந்த பட்ச கூலிகளைச் சட்டத்தின் மூலம் நடைமுறைப்படுத்தி அவர்களின் தரத்தை உயர்த்த வேண்டும். சீரான தொழிலாளர்—நிர்வாகி உறவு முறையை உருவாக்கத் தகுந்த வழிமுறைகளைக் கையாள வேண்டும்.

## 4. சமூக காரணிகளும் தொழில் நுட்பப் பிரச்சினைகளும்

### தொழில் நுட்பமாற்றமும் சமூக மாற்றமும்

விஞ்ஞானத்தை உற்பத்தி நடவடிக்கைகளில் பயன்படுத்துவதின் விளைவாக உற்பத்தித் திறனை அதிகரிக்கும் புதுத் தொழில் நுட்ப உற்பத்தி முறை உருவாகிறது. சமூகத்தின் மூலம் விஞ்ஞான மனப்போக்கு மக்களிடம் பரவுவதற்கு முன்பே தொழில் நுட்பச் சீரமைப்பு ஏற்படுகிறது. இதன் விளைவாக சமூக உறவிலும் நிறுவனங்களிலும் ஒரே சமயத்தில் மாற்றம் ஏற்படுகிறது. மக்களின் சமூக தப்பெண்ணங்களும், பிற்பட்ட பழக்கங்களும், மறையத் தொடங்குகின்றன. ஹெர்பெர்ட் பிராங்கெல் (Herbert Frankel) என்பவர் தொழில் நுட்ப முறை மாற்றம் என்பது தொழில் நுட்ப அறிவின் வளர்ச்சியை மட்டும் குறிக்கவில்லை; அதைவிட வேறு முக்கியமான ஒன்றை அது குறிக்கிறது என்று குறிப்பிடுகிறார். தொழில் நுட்ப முறையில் மாற்றம் ஏற்படுவதற்கு முன்பே சமூக முறையில் மாற்றம் (Sociological Change) முன்கூட்டியே ஏற்படவேண்டும் என்பது அவருடைய கருத்தாகும். புதிய தொழில் நுட்ப உற்பத்தி முறைக்கு உகந்த வகையில் மக்கள் முன் கூட்டியே தங்கள் சமூக, அரசியல் நிர்வாக அமைப்பில் தகுந்த மாற்றத்தை மேற்கொள்ள ஆவலும் சித்தமும் கொள்ளவேண்டும். பொருளாதார நடவடிக்கைகளின் மிக விரைவான எழுச்சிக்கு ஏற்ப மக்கள் தங்கள் அமைப்பு முறைகளை மாற்றியமைக்க வேண்டியது இன்றியமையாததாகும்.[1] பிற்பட்ட தொழில் வளர்ச்சியடையா நாடுகளில் உள்ள சமூக அமைப்பு தொழில் நுட்பச் சீரமைப்பிற்குத் தக்கவகையில் உகந்ததாக இல்லை.

### தொழில் நுட்ப முறையின் வளர்ச்சி

முதலில், அடிப்படை, நடைமுறை, விஞ்ஞான முன்னேற்றத்தின் விளைவாக விஞ்ஞானக் கண்டுபிடிப்பு (Discovery) அல்லது

[1] S. ஹெர்பெர்ட் பிராங்கெல் 'வளர்ச்சியுரு நாடுகளில் பொருளாதார விளைவு' (Economic Impact on Under developed Countries), லண்டன், 1953, பு. 22-23.

கூடுதல் விஞ்ஞான அறிவு ஏற்படுகிறது. இரண்டாவதாக ஒரு பயனுள்ள முடிவிற்காகப் புதிய கண்டுபிடிப்பு (Invention) தோன்றுகிறது. மூன்றுவதாகப் புத்தாக்கம் (Innovation), அல்லது பொருளாதார உற்பத்திக்குப் புதிய கண்டு பிடிப்புகளைப் பயன்படுத்தப்படுகிறது. இறுதியாக, புதிய தொழில் நுட்பம் வர்த்தக அளவில் விரிவாக்கப்பட்டுச் சீரமைக்கப்படுகிறது. இதனுல் நேரடியாகவோ மறைமுகமாகவோ தொழில் விரிவடைந்து, மற்றத் தொழில்களும் வளரத் துணைபுரிவதால்பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளும் முன்னேற்றமடைகின்றன.[1] தொழில் நுட்ப வளர்ச்சி சிறப்பாக ஏற்படுவதற்கு மூன்று வசதிகள் தேவைப் படுகின்றன. தொழில் நுட்ப வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத் திலும் ஏராளமான மூலதன முதலீடு தேவைப்படுகிறது. இரண்டா வதாக மக்களிடையே விஞ்ஞான மனப்போக்கும் உன்னத தொழில் துணிவாற்றலும், புத்தாக்கங்களை ஏற்படுத்தும் திறமையும் அதிகரிக்க வேண்டும். மூன்றுவதாக புதிதாக உற்பத்தி செய்யப்பட்ட பொருளுக்கு விரிவான தேவை ஏற்பட்டால்தான் உற்பத்தியை வாணிப மயமாக்க (Commercialization) முடியும். எனவே, இத்தகைய தொழில் நுட்ப முன்னேற்றம் முன்னேறிய நாடுகளில்தான் குறிப்பிடத்தக்க வகையில் ஏற்பட வகை உள்ளது. புத்தாக்கங்கள் தோன்றுவதற்கு உகந்த பொருளாதார அமைப்பு பெரிய நிறுவனங்களிடையே போட்டி ஏற்படுதலாகும். ஏனெனில், ஒவ்வொரு நிறுவனமும் பொருள் வேறுபாடுகளின் (Product Variation) மூலம் பொருள்களின் தரத்தை உயர்த்தி நுகர்வோர்களின் தேவைக்கேற்ற பொருள்களை அளிக்கமுடிகிறது. பல சுதந்திர நிறுவனங்களைக் கொண்ட ஒரு தொழிலில் உற்பத்தியை மேலும், அதிகரிப்பதால் தொழில் நுட்ப முன்னேற்றம் மேலும், விரைவில் அதிகரிக்கிறது. இதற்கு உதாரணமாக விளங்குவது அமெரிக்காவின் மோட்டார் வாகனத் தொழிலாகும். இதற்கு மாருக அதிகப் போட்டியைக் கொண்ட சிற்றளவில் அமைக்கப்பட்ட குடிசைத் தொழில்களில் புத்தாக்கங்களை உட்புகுத்தும் வாய்ப்பு மிகவும் குறைவாக உள்ளது என்று நோபில் புகழறிஞராகிய சைமன் கஜ்னட்ஸ் (Simon Kuznets) குறிப்பிடுகிருர்.[2]

## இந்தியாவுக் கேற்ற தொழில் நுட்பம்

இந்தியா போன்ற வளர்ச்சி குறைந்த நாடுகளில் தலா வருவாய் மிகக் குறைவாகவும், மக்கள் தொகையில் மித மிஞ்சிய

1 கியர்ஸ்டேட் (Keirstead B. S.) 'பொருளாதார மாற்றக் கோட்பாடு' (Theory of Economic Change) மாக்மில்லன். 1948 ப. 188.

2 சைமன் கஜ்னட்ஸ் (Simon Kuznets), 'பொருளாதார வளர்ச்சியின் ஆறு விரிவுரைகள்' 1959. ப. 30-31.

அதிகரிப்பும், குறைந்த நுகர்வும், குறைந்த சேமிப்புமிருப்பதால் தொழில் நுட்ப வளர்ச்சி விரைவாக ஏற்பட வாய்ப்பில்லை. எனவே, இந்தியாவின் முக்கிய குறிக்கோள்களில் ஒன்றாக அதிக மான தொழிலாளர் உற்பத்தித் திறன் அமைய வேண்டும். இந் நாடுகளில் தொழிலாளர் — மூலதனம், தொழிலாளர் — நில, விகிதங்கள் அதிகமாயிருப்பதால் தேவையான அளவு மூலதன வளங்களைப் பெற்று, உற்பத்திக் காரணிகளைச் சீராக ஒருங்கமைத்து, உற்பத்தியை அதிகரிக்க முடிவதில்லை. எனவே, இந்தியா போன்ற நாடுகளுக்கு உற்பத்தியை அதிகரிக்க ஒரே வழிதான் உள்ளது. கிடைக்கும் மூலதன வளங்களைக் கொண்டு தொழிலாளர் உற்பத்தித் திறனை அதிகரிக்க வேண்டும். இதற்குப் பெருமளவில் மூலதனம் தேவைப்படாத சீரான தொழில் நுட்ப உற்பத்தி முறையைப் பின்பற்றவேண்டும். ஆனால், குறைந்த வளங்களும், மித மிஞ்சிய தொழிலாளர் அளிப்பும் தொழில் நுட்ப முன்னேற்றத் திற்குக் குறுக்கே முட்டுக் கட்டையாக நிற்கின்றன. நிதிவசதி யின்மையால் ஆராய்ச்சிக்கூடங்களும் இந் நாடுகளில் அதிகமாக இல்லை. இந் நாடுகளில் பேரளவுத் தொழில் பகுதிகள், உறுதித் தேவை (Effective demand), சிறப்புத் தேர்ச்சி, தொழிலாளர் பெயர்ச்சியின்மை மிகக் குறைவாகக் காணப்படுகின்றன. 'மேலும் பாதகமான சமூக, அரசியல் சூழ்நிலையினால் வளர்ச்சி குறைந்த நாடுகளில் சுயஆற்றல், தொழில்துணிவு, புதிதாகக் கண்டுபிடிப் பாற்றல் (Inventiveness) தடைபட்டுள்ளது' என்று C. N. வக்கீல், P. R. பிரமானந்தா ஆகிய இருவரும் குறிப்பிடுகின்றனர்.

### பிற்பட்ட நாடுகளின் தொழில் நுட்ப நிலை

இன்றைய தொழில் வளர்ச்சி பெற்ற நாடுகளில் தொழில் நுட்ப முன்னேற்றம் பொருளாதார முன்னேற்றத்துடனேயே இணைந்து சீரான வளர்ச்சியடைந்தது. நிலக்கரியிலிருந்து எரிசக்தி யையும் பின் மின் சக்தியிலிருந்து அணுசக்திக்குமாகத் தொழில் நுட்ப வளர்ச்சியேற்பட்டது. இதே போன்று தொழிலுற்பத்தியும், பொருளாதார நடவடிக்கைகளும் படிப்படியாக முன்னேற்ற மடைந்தன. இந் நாடுகளில் பொருளாதார வளர்ச்சியும் தொழில் நுட்ப சீரமைப்பும் ஒன்றுக் கொன்று சாதகமான முறையில் துணை புரிந்துகொண்டன. தொழில் நுட்பம் பொருளாதார முன்னேற்றத் திற்குத் துணைபுரிய பொருளாதார முன்னேற்றமானது ஆராய்ச்சி, விஞ்ஞான அறிவு, புதிய கண்டு பிடிப்பு, புத்தாக்கம், ஆகியவைகள் தோன்ற வகை செய்தது. இதற்கு முற்றிலும் மாறாக வளர்ச்சியுறா நாடுகளில் பொருளாதார வளர்ச்சி ஆர்வமானது மிகவும் காலம் தாழ்த்தித் தோன்றியுள்ளது. தொழில் நுட்பமும் பொருளாதார வளர்ச்சியும் மற்ற நாடுகளில் மிக உன்னத நிலையில் இருக்கும்

சமயத்தில் ஏழ்மை நாடுகளில் இப்போதுதான் பொருளாதார வளர்ச்சியுணர்வு உருவாகியுள்ளது. முன்னேறிய நாடுகளிலுள்ள பொருளாதார அமைப்பு, பல்வேறு காரணிகளின் அளிப்புநிலை போன்றவைகளை அடிப்படையாகக் கொண்டு தொழில் நுட்பம் அங்கு உருவாகியுள்ளது. பிற்பட்ட நாடுகளில் பயிற்சிப் பெற்ற பணியாளர், தொழில் துணிவாற்றல், போதிய நிதிவசதி போன்றவைகளில் பற்றுக்குறை காணப்படுவதால் முன்னேறிய தொழில் நுட்பத்தை இந் நாடுகளில் பயன்படுத்தினுல் செலவு அதிகமாவதோடு உற்பத்தியும் குறைகிறது. மேலும் பொருளாதாரத்தைச் சீர் குலைத்து விடுகிறது. முன்னேறிய நாடுகளில் ஏராளமான மூலதனம், தொழிலாளர் பற்ருக்குறை, அதிக கூலி வீதங்கள் இருந்ததால் தொழில் நுட்ப புத்தாக்கங்கள் தோன்றி முதல் செறிவு தொழில் வளர்ச்சியேற்பட்டது. மாதிரியாக அமெரிக்காவில் எந்திர சாதனங்களைக் கொண்டு பருத்தி உற்பத்தி, நிலக்கரியை வாயுவாக மாற்றல், போன்ற பல்வேறு தொழில் நுட்ப நடவடிக்கைகள் தொழிலாளர் பற்ருக்குறையினுல் மேற்கொள்ளப்பட்டன. மித மிஞ்சிய விவசாயிகளின் அளிப்பைக் கொண்ட இந்தியா போன்ற நாடுகளில் அத்தகைய முறையைப் பயன்படுத்தினுல் வேலையின்மையும், பொருளாதார சீர் குலைவும் ஏற்படும். எனவே, தற்போதைய முன்னேறிய நாடுகளில் சில ஆண்டுகளுக்கு முன் பயன்படுத்திய தொழில் நுட்பமே இன்றைய வளர்ச்சியுரு நாடுகள் பயன்படுத்தத் தகுந்தவைகளாகும். இன்று அத்தகைய தொழில் நுட்ப சாதனங்கள் வளர்ந்த நாடுகளின் தொழிற் காட்சி கூட்டங்களில்தான்காண முடியும். எனவே, மேற்கத்திய மிக அதிகமான தொழில் வளர்ச்சியடைந்த நாடுகளின் தொழில் நுட்பத்தை அப்படியே பயன்படுத்தாத ஜப்பான்போன்ற நாடுகள் சில உள்ளன. அந் நாடுகளில் பரிசோதித்து வெற்றிக் கண்ட தொழில் நுட்பத்தை வளர்ச்சியுரு நாடுகள் தங்கள் சூழ்நிலைக்குத் தக்கபடி பின்பற்றலாம். மேலும் வளர்ச்சி குறைந்த நாடுகளில் மேற்கத்திய தொழில் நுட்பத்தை அப்படியே பயன்படுத்தினுல் பொருளாதார சிக்கன மின்மை ஏற்படும். முதலாவதாக, குறைந்த நிதிவசதியளிப்பின்மேல் மேலும் கடுமையான தொல்லையேற்படும். எந்திரங்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்குத் தேவையான வெளி நாட்டுச் செலாவணி ஏழ்மை நாடுகளில் இல்லை. இவ்வியந்திரங்களை வைத்துப் பராமரிக்கவும், அதிக வெளிநாட்டுச் செலாவணி தேவைப்படுகிறது. சிக்கனமில்லாத் தொழில் மயத்தால் பன்னுட்டுச் சிறப்புத் தேர்ச்சியும் பாதிக்கப்படுகிறது. முதல் செறிவுத் தொழில்களால் வேலையின்மையும் ஏற்படுகிறது. முன்னேறிய தொழில் நுட்ப சாதனங்களை அனுபவமின்மையால் திறம்படப்

பராமரிக்க முடிவதில்லை. மேலும் இவ்வியந்திரங்கள் அதிக வெப்ப நிலையைக் கொண்ட நாடுகளில் சிறப்பாகப் பணிபுரியாது.[1]

மேற் குறிப்பிட்ட பல்வேறு இடர்ப்பாடுகளால் வளர்ச்சி யடைந்த நாடுகளின் தொழில் நுட்ப முறையை வளர்ச்சியுறு நாடு களும் பின்பற்றுவது அறிவுடைமையாகாது. வளர்ச்சிகுறைந்த நாடு களில் பயிற்சியும் தகுதியும் பெற்றவர்கள் தங்கள் நாட்டுக்கேற்ற புதியதொழில் நுட்ப உற்பத்தி முறையை உருவாக்க வேண்டும். இந் நாடுகளின் தொழிலதிபர்கள் முன்னேறிய நாடுகளில் ஒரு குறித்த உற்பத்தித் துறையில் பயன்படுத்திய பல்வேறு இயந்திரங்களைப் பற்றி நன்முக அறிந்திருக்க வேண்டும். இந்தியாவிலும் மற்ற வளர்ச்சியுறு நாடுகளிலும் பொதுப் பணி வசதிகளைக் கொண்ட தொழிற் பேட்டைகளை யேற்படுத்துவது இவ் வகையிலோர் சிறந்த முறையாகும். இதன் மூலம் இந் நாடுகளுக்கேற்ற தொழில் நுட்ப வளர்ச்சியைப் படிப்படியாக அதிகரிக்க முடியும். ஓர் இயந்திரப அமைக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டாமல் படிப்படியாக அதன் பயன் அதிகரித்துக் கொண்டே செல்லும்.[2] இதன் மூலம் மூலதன சேமிப்பு உற்பத்தி முறையை (Capital saving device) உருவாக்க முடிகிறது. இதற்குத் தகுந்த சமூகப் பொருளாதார சூழ்நிலை இந் நாடுகளில் உருவாக வேண்டும்.

## சமூக நிறுவனங்களும் மக்கள் தொகையும்

மேற்குறிப்பிட்டுள்ள நான்கு காரணிகளுடன் ஐந்தாம் காரணி யாக மிதமிஞ்சிய மக்கள் தொகையையும் சேர்த்துக் கொள்ளலாம். வளர்ச்சியுறு நாடுகளில் அமைந்துள்ள சமூக அமைப்புகளும் நிறுவனங்களும் மக்கள் தொகையின் மித மிஞ்சிய வளர்ச்சிக்கு ஒரு வகையில் காரணமாய் உள்ளன. சான்முக, இந்தியாவில் கட்டாயத் திருமண முறையும் (Universal Marriage), இளம் பருவத் திருமண முறையும் (Early Marriage) இன்னும் சில பகுதிகளில் காணப் படுகிறது. இதன் விளைவாக, மக்கள் தொகையின் பெருக்கம் அதிகரிக்கிறது. கூட்டுக் குடும்ப முறையினுலும் மக்கள் தொகை யின் அழுத்தம் நிலத்தில் அதிகரிக்கிறது மேலும் விதவைகளின் மறுமண முறையும் (Widow Marriage) சில சமூகங்களில் தடுக்கப் பட்டுள்ளது. இதன் விளைவாக சார்ந்து வாழ்வோரின் (Dependents) எண்ணிக்கை சமுதாயத்தில் அதிகரிக்கிறது. சில

[1] W. H சிங்கர், 'பொருளாதார வளர்ச்சியின் இடையூறுகள் (Obstacles to Economic development') 'சமூக ஆய்வு, பாகம்-20. 1953– ப 19-31.

[2] ஐ. நா. வளர்ச்சியுறு நாடுசளில் தொழில் நிறுவனங்களின் நிர்வாகம், 1958, ப. 17-19.

மதங்களில் கருத்தடை முறைகளை மக்கள் பயன்படுத்துவது ஆதரிக்கப்படுவதில்லை. இதனால் மக்கள் குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைச் சாதாரணமாகப் பின்பற்றுவதில் ஆர்வம் கொள்வதில்லை. மக்களின் இத்தகைய பிற்பட்ட மனப் போக்கினால் நாட்டில் மக்கட் தொகையின் எழுச்சி (Population explosion) அதிகரிப்பதோடு தாய், சேய் நலமும் பாதிக்கப்பட்டுக் குடும்பத்தின் வாழ்க்கைத் தரமும் குறைந்து விடுகிறது. எனவே, மக்களின் மனப் போக்கும், சமூக அமைப்பும் தகுந்த மாற்றத்தைப் பெற்றாலன்றி மிதமிஞ்சிய மக்கட் தொகையால் பொருளாதார வளர்ச்சிப் பாதிக்கப்படுவதைத் தடுக்க இயலாது என்று Dr. சந்திரசேகரன் அவர்களும் விளக்கியுள்ளார்.

## பொருளாதார, சமூக முன்னேற்றத்திற் கிடையேயுள்ள முரண்பாடு—ஒருங்கிணைப்பின் அவசியம்

முரண்பாடு

வளர்ச்சி குறைந்த நாடுகளில் அரசால் மேற்கொள்ளப்படும் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியானது வளர்ச்சிப்பாரத்தைத் தாங்கும் சக்தியற்ற சமூக அடிப்படையின் மேல் (Social Foundation) மிகவும் முற்பட்ட பொருளாதார அமைப்பை (Advanced form of Economic structure) மேலும் சுமத்துகிறது. இந் நாடுகளில் சமூக அமைப்பு பண்டைக் காலந்தொட்டே நெகிழ்ச்சியில்லா மாறா நிலையிலேயே இருந்துவருகிறது. பொருளாதார ரீதியில் முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளில் பிற்பட்ட பழக்க வழக்கங்கள், மத நம்பிக்கைகள், சொத்துரிமைச் சட்டங்கள், சமூகக் கண்டிப்பு, போன்ற இயல்புகள் பொதுவாகக் காணப்படுவதில்லை. இங்கிலாந்து போன்ற நாடுகளில், தொழிற் புரட்சியால் தொழிலாளர் சுரண்டல், இடநெருக்கடி கொண்ட நகரங்களின் சீர்கேடுகள் போன்ற சமூக குறைபாடுகள் ஏற்பட்ட போதும் மக்கள் விரைவாக வளர்ச்சியடையும் நவீனப் பொருளாதாரத் தேவைகளுக்கேற்பத் தங்களையும் சரிசெய்து மாற்றிக் கொள்ளும் இயல்புகளைப் பெற்றிருந்தனர். மேலும் தொழிற் புரட்சியின் போது இங்கிலாந்து மக்களிடமிருந்த மனநோக்கு, பண்புகள், சமூக அமைப்பு, தற்போதுள்ள நவீன தொழில் வளர்ச்சியடையாத நாட்டு (Pre-industrial Economics) மக்களின் இயல்புகளுக்கும் வேறுபட்டு உயர்நிலையில் இருந்தது. தற்போதுள்ள வளர்ந்து வரும் நாடுகள் செய்து வருவதைப் போல் அவ்வளவு சீக்கிரமாக மிகக் குறுகிய காலத்தில் முன்னேறிய நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் திணிக்கப்படவில்லை. இன்றைய பெரும் பாலான வளர்ச்சி குறைந்த நாடுகள் தங்கள் பொருளாதார, சமூக

அமைப்பை மனத்தில் கொள்ளாமல் மிகக் குறுகிய காலத்திலேயே மிக விரைவாக, முன்னேறிய நாடுகள் நெடுங்காலம் அரும்பாடு பட்டு வளர்த்த முன்னேற்றத்தைச் சாதிக்க வேண்டுமென்று பேரவாக் கொண்டுள்ளனர். "முன்னேறிய நாடுகளில் காணப்படும் சுலபமான சமூக, பொருளாதாரச் சீரமைவை இந்தியா போன்ற பிற்பட்ட பரம்பரைப் பண்பாட்டைக் கொண்ட நாடுகளில் பெறுவது மிகவும் கடினமாகும்." [1] ஏனெனில் பொருள் சார் சீரமைப்பிற்கு இன்றியமையாத சமூக இயல்புகளும், மனநோக்கும், பண்பாட்டுப் பாங்கும், குறிப்பிடத்தக்க வகையில் மாற்றம் பெற வில்லை. எனவே, ஒரு குறிப்பிட்ட பொருளாதாரத்தில் பல்வேறு துறைகள், பிராந்தியங்களிடையே மேற்கத்திய முறைப்படி பொரு ளாதார ரீதியில் வளர்ச்சியடைந்த துறைகளும் பகுதிகளும் மற்றும் மிகவும் பிற்பட்ட நிலையில் உள்ள மற்றத் துறைகளும் அமைந்து ஓர் இரட்டைப் பிரிவு (Dichotomy) காணப்படுவதை அறியலாம். அதாவது ஒரு பொருளாதாரத்தில் முன்னேறிய துறைகளுக்கும், பகுதிகளுக்குமிடையே மிகவும் பிற்பட்ட நிலையிலிருக்கும் துறை களும், பகுதிகளும் அமைந்துள்ளன. இதன் விளைவாகப் பிற்பட்ட நாடுகளில் சமூக முன்னேற்றத்திற்கும், பொருளாதார முன்னேற் றத்திற்குமிடையே ஒரு முரண்பாடு காணப்படுகிறது. இம் முரண் பாடு மேற்கத்திய நாடுகள் தங்கள் வளர்ச்சிக் கட்டங்களில் பெற்றி ருந்த முரண்பாட்டைக் காட்டிலும் மிக அதிக அளவினதாக உள்ளது. இதற்கு மூன்று காரணங்கள் உள்ளன.

முரண்பாட்டின் காரணங்கள்

1. தொழில் மயத்தின் ஆரம்பக் கட்டத்தில் ஆலை முறையின் பெருக்கத்தால் பாதிக்கப்பட்டோரின் அளவு மேற்கத்திய நாடு களில் மிகக் குறைவாகும். ஆனால் ஆசியா, லத்தீன் அமெரிக்கா, ஆப்பிரிக்கா போன்ற நாடுகளில் ஆலைத் தொழில் வளர்ச்சியால் பாதிக்கப்படுவோரின் எண்ணிக்கை மிக அதிகமாகும். ஏனெனில், கிராமப் பகுதிகளிலிருந்து நகரத்திற்கு வருவோரின் எண்ணிக்கை மிக அதிகமாவதால் இந் நாடுகளில் பல தீவிரமான சமூகப் பிரச் சனைகள் தோன்றுகின்றன. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்தின் மக்கட் தொகை தற்போதுள்ள இந்திய மக்கட் தொகையில் 3% சதவீதமாக மட்டும் இருந்ததென்பது குறிப்பிடத் தக்கதாகும்.

2. மேற்கத்திய நாடுகளில் எந்தவிதப் புறத்தூண்டுதலுமின்றி இயல்பாகவே (Spontaneous) பொருளாதார வளர்ச்சி, தொழில் துணிவாளர்களால் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால் பிற்பட்ட வளர்ச்சி குறைந்த நாடுகளில் அரசே பொருளாதார வளர்ச்சியைத்

[1] டாக்டர். D. பிரைட்சிங் 'வளர்ச்சிப் பொருளாதாரம்' ப. 100.

தூண்டுவதற்குப் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்கிறது. மேற்கத்திய நாடுகளில் வேளாண்மை, வர்த்தகம், அரசியல் முறைகள், பண்புகள், விஞ்ஞானம், கலை, மதம் போன்ற அம்சங்களில் புரட்சிகள் தோன்றிய பின் கூடவே தொழிற்புரட்சியும் தோன்றியது. அதற்குமாறாக, அத்தகைய ஒரு பொது (Non-Economic) மாற்றம் வளர்ச்சி குறைந்த நாடுகளில் ஏற்படவில்லை. மேற்கத்திய நாடுகளில் தொழில் துணிவாற்றல் மிக்க வகுப்பினரின் (Entrepreneurial Classes) புத்துணர்ச்சியின் விளைவாக, தொழில் வளர்ச்சி இயல்பாகவே ஏற்பட்டுப் பொருளாதார வளர்ச்சி மேலோங்கியது. ஆனால், வளர்ச்சி குறைந்த பிற்பட்ட நாடுகளில் பொருளாதார வளர்ச்சி அரசாங்க வகுப்பினரால் (Official class) ஆராயப்பட்டு, திட்டமிடப்பட்ட, வளர்ச்சிக் கொள்கையின் அடிப்படையில் தூண்டப்பட்டு, ஓரளவு அதிகரித்துவருகிறது. மேற்கத்திய நாடுகளில் சமூக, அரசியல் மாற்றங்களும், மக்களின் பண்புகள், மனநோக்குகள் ஆகியவைகளின் மாற்றமும் பொருளாதார மாற்றத்துடனேயே இயல்பாகவே (Spontaneity) தோன்றிப் புதிய அம்சங்களின் திட்டங்களோடு சிறப்பாகப் பொருந்தின.

3. நவீனத் தொழில் பொருளாதாரத்தின் உணர்ச்சி, நவீன அமைப்புமுறை ஆகியவைகள் வளர்ச்சி குறைந்த நாடுகளின் இயல்புக்கு அப்பாற்பட்டவைகள். நவீனத் தொழில் நுட்பம், செயல் முறைகளின் அதிகவேகம், விரைந்து ஓடித்திரிந்து பொருள் தேடும் வாழ்க்கை போன்ற நவீனப் பொருளாதாரத்தின் இயல்புகளை பரம்பரைப் பழக்க வழக்கங்களைக் கொண்ட வேளாண்மை நாடுகளின் மக்களின்மேல் திணிப்பது, வெளிநாட்டுப் பண்பாட்டை (Foreign Culture) அவர்களையும் பின்பற்றும்படி கட்டாயப்படுத்துவதற்கு ஒப்பாகும்.[1] இவ் வெளிநாட்டுக் கலாச்சாரத்தைப் பழமைப் பரம்பரைப் பண்பாட்டைக் கொண்ட மக்களின் வாழ்க்கைப் பாங்குடன் ஒருங்கிணைப்பது மிகவும் கடினமாகும். இதனால் அநேக சமூகப் பிரச்சினைகள் தோன்றும்.

சமூக, பொருளாதார முன்னேற்றங்கள் ஒருங்கிணைக்கப்படல்

விரைவான பேரளவுத் தொழில் மயத்தின் விளைவாகத் தோன்றும் தவிர்க்க முடியாத பல்வேறு சமூக, பொருளாதாரக் கேடுகளைப் பொருளாதார வளர்ச்சியைச் சாதிப்பதற்குத் தேவையான சமூகச் செலவுகள் (Social Costs) என்று கருதலாம். முழுத்தொழில் வளர்ச்சியடையாத நாடுகளில் (Pre-Industriai

[1] P. T பாயர், B. S. யாமி. "வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்". ப. 88.

Countries) இச் சீர்கேடுகள் மேற்கத்திய நாடுகளில் அவர்களின் வளர்ச்சிக்கட்டத்தில் இருந்ததைவிட மிக அதிகமாக உள்ளன. ஆனால், இவ்வளறய வளர்ந்துவரும் நாடுகளுக்கு இச் சீர்கேடுகளை நன்றாய் அறிந்து அவற்றைக் கட்டுப்படுத்துவதற்கான வசதிகள் அதிகமாய் உள்ளன. இதை அவ்வாறே கட்டுப்படுத்தாமல் இயற்கையான சமூக எழுச்சியின் போக்கிலேயே விட்டுவிடுவது அறிவுடைமையாகாது.[1] அது மேற்கத்திய நாடுகளுக்குத்தான் பொருந்தும். இந்தியாபோன்ற பிற்பட்ட நாடுகளில் அரசின் தூண்டுதலாலேயே வளர்ச்சி ஏற்பட்டு வருவதால் மேற்குறிப் பிட்ட சீர்கேடுகளைக் கட்டுப்படுத்த அரசே முதலீடுசெய்து சமூக மாற்றத்தை எளிதாக்க வேண்டும். இத்தகைய சமூகப் பிரச்சினைகள் மிகவும் பரந்தும், சிக்கலானதாகவும், தீவிரமான தாகவுமிருப்பதால் இவைகளைக் கட்டுப்படுத்த வளங்களைத் தக்க முறையில் ஒன்றுதிரட்டித்தேசிய அளவில்முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். இவைகளின் முக்கியத்துவத்தையும் அவசரத்தையும் அறிந்த பெரும்பாலான பிற்பட்ட நாடுகள் தங்களுடைய வளர்ச்சித் திட்டங்களில் சமூக வசதிகளை அதிகரிக்கவும், சமூக முன்னேற்றத்துடன் பொருளாதார முன்னேற்றத்தை ஒருங்கிணைக் கவும் வகைசெய்து வருகின்றன. சான்றாக பாகிஸ்தானின் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் (1955-56 இருந்து 1959—60) வரை "மக்களின் நலன், போதிய வாழ்க்கைத்தரம், சமூகப் பணிகள், சமூகநீதி, சமவாய்ப்புகள், சமவருமான சொத்து பங்கீடு, போன்றவைகளை விரைவாகக் கூடியமட்டிலும் மேம்படுத்த நாட்டின் வளங்களை வளர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்று" அரசின் கொள்கையில் குறிப்பிடப்பட்டது.[2] இந்திய இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டத்தில், "ஒரு வளர்ச்சி குறைந்த நாட்டின்பணி, இருந்துவரும் பொருளாதார சமூக நிறுவனங்களின் அமைப்புகளைக் கொண்டே நல்லதொரு வளர்ச்சியின் விளைவுகளைப் பெறுவதாக மட்டும் இருக்கக் கூடாது. ஆனால் இந் நிறுவனங்களைச் சீராக்கி, மறுவடிவம் அளித்து, அவைகளால் பரந்த, மேம்பட்ட சமூகப் பண்புகளைச் சிறப்பாகத் தோற்றுவிக்கவும் வகை செய்ய வேண்டும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[3] இத்தகைய குறிக்கோள்கள் பிலிப்பைன்ஸ், பர்மா, இலங்கை போன்ற நாடுகளின் வளர்ச்சித் திட்டங்களிலும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

[1] டாக்டர். D. பிரைட்சிங், 'வளர்ச்சிப் பொருளாதாரம்' ப. 103.

[2] முதல் ஐந்தாண்டுத் திட்டம்; தேசியத் திட்டச்சபை, பாகிஸ்தான் அரசு டிச. 1957, ப. 1.

[3] இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம், திட்டக்குழு, இந்திய அரசு: 1956, ப. 22.

ஒருங்கிணைப்பின் நன்மைகள்

பொருளாதார வளர்ச்சித்திட்டங்களின் ஓர் ஒருங்கிணைந்த பகுதியாகச் சமூக சீர்த்திருத்தங்களுக்கும் முக்கியத்துவம் அளிக்கப் படவேண்டியது இன்றியமையாததாகும். அப்போதுதான் அர சின்தலைமையின் அடிப்படையில் நல்லதொரு பொருளாதார வளர்ச்சியைப் பெறவேண்டுமென்ற ஆர்வத்துடன் திட்டமிடும் போது தனியார் துறையின் அடிப்படையில் தோன்றும் வளர்ச்சியைவிட அதிகமான அளவு வளர்ச்சியைச் சாதிக்க முடியும். குறுகிய காலத்திலேயே தொழில்மயத்தை அடைய வேண்டுமென்று ஆர்வம் கொள்ளப்படுவதால், அதற்கேற்ப சமூக சீர்கேடுகளும், மிக விரைவாகப் பெருமளவில் தோன்றும். எனவே, திட்டமென்பது சமூக நலனை மேன்மைப்படுத்துவதோடு கூடவே பொருளாதார மேம்பாட்டையும் உயரச்செய்ய வேண்டும். எனவே, இவ்விருவகை முன்னேற்றங்களுக்கிடையே சீரானதொரு ஒருங்கிணைப்புத் திட்டத்தை ஏற்படுத்தினால், பொருளாதாரம் மிகக் குறைந்த பாதக விளைவுகளுடன் சுலபமாக மாற்ற மடையும்.[1]

ஒருங்கிணைப்பை ஏற்படுத்தும் முறைகள்

சமூகச் சீர்திருத்தங்கள், பொருளாதார வளர்ச்சி ஆகியவை களுக்கிடையே ஒருங்கிணைப்பை ஏற்படுத்தக் கீழ்க்கண்ட வழிகளில் செயல்முறைகளை மேற்கொள்ளலாம்.

முதலாவதாக, வளர்ச்சித் திட்டங்கள் நகரப் பகுதிகள், தொழில்கள் ஆகியவைகளுக்குத் தரும் முக்கியத்துவத்தைப் போலவே முறையே கிராமங்களுக்கும், வேளாண்மைக்கும் சிறப்பிடம் அளிக்கப்பட வேண்டும். ஐந்தாண்டுத் திட்டங்களின் அடிப்படையில் செயல் திட்டங்களில் (Projects) செய்யப்படும் பெரும்பாலான முதலீடு கிராமப்பகுதிகளுக்கும், நாட்டின் தொழில் மயமாக்கப்பட்ட பிராந்தியங்களுக்கும் பெருமளவில் நேரடியாகவே நன்மை புரிகிறது. இதற்குச் சான்றாக நீர்மின் இயக்கத் திட்டங்களைக் (Hydro-Electric Projects) கூறலாம். கிராமங்களில் தொழில்களைப் பரவலாக்கல், தொழிற்பேட்டைகளை ஏற்படுத்துதல், கிராமப்புறங்களுக்கு மின் ஊட்டமளித்தல், செய்தித் தொடர்பு சாதனங்களைச் சீர்படுத்துதல், கிராமப்புறங் களில் வங்கிகளையும், பள்ளிக் கூடங்களையும் திறத்தல், மருத்துவ, உடல்நல வசதிகளை விரிவாக்குதல் போன்ற நடவடிக்கைகள் மக்களிடம் தொழிலுணர்வையும், நற்பண்புகளையும் ஊக்குவித்து நாட்டின் வேளாண்மை, தொழில் துறைகளில் ஒரு சமச்சீரான

[1] டாக்டர். D. பிரைட்சிங், 'வளர்ச்சிப் பொருளாதாரம்' ப. 104.

வளர்ச்சியைச் சுலபமாக ஏற்படுத்த வகை செய்கின்றன. மேலும், இதன் விளைவாகக் கிராமப் பகுதிகளில் சமூக, பொருளாதார மேம்பாட்டைச் சாதிக்கவும் இச் செயல் முறைகள் பெருந்துணை புரியும்.

இரண்டாவதாக, சமூகச்சீர்திருத்தங்கள் மேற்கொள்ளப் படும்போது மக்களின் பழமை மனநோக்கு, தப்பெண்ணங்கள், மூடநம்பிக்கைகள், ஆகியவைகளைக் கருத்தில்கொண்டு சமூக மாற்றத்தைப் படிப்படியாகக் கொண்டுவரவேண்டும். நகரப் பகுதிகளைவிடத் தொழில் வளர்ச்சியில்லாப் பகுதிகளில் (Non-Industrial Regions) மக்களிடையே பழமைப் பழக்கங்களும், தப்பெண்ணங்களும் ஆழமாகப் பதிந்திருப்பதால், சீர்திருத்தத் திட்டங்கள் அதற்கேற்ற வகையிலேயே அமைவது நல்லது. அதற்குமாறாகத் தீவிரமாற்றங்களை ஏற்படுத்தினால், தற்போதுள்ள வாழ்க்கை முறை சீர்குலைந்து தவிர்க்கத் தக்க சமூக இன்னல்கள் ஏற்படலாம். ஆசிய நாடுகளில் கலைகள், பண்டை இலக்கண இலக்கியங்கள், சமய நூல்கள் ஆகியவைகளின் கல்வி போதனைக்குப் பதிலாக விஞ்ஞானத் தொழில் நுட்பக் கல்வியைப் பரவலாக்க வேண்டியது இன்றியமையாததாகும். சமுதாய, பொருளாதார மாற்றம் சுலபமாக ஏற்படத் தொழில் நுட்பப் பயிற்சி, குறிப்பிட்ட சில சிறப்புத் தொழில் நுட்பக் கல்வி ஆகியவைகளில் பெரும் பாலோரை ஈடுபடச் செய்ய வேண்டும். மௌரிஸ் ஜின்கின் (Maurice Zinkin) அவர்கள் குறிப்பிடுவதுபோல் "ஆசிய நாடுகளில், ஜெர்மனியில் 19 ஆம் நூற்றாண்டில் இருந்த கல்வி முறையைப் போலவோ அல்லது 20 ஆம் நூற்றாண்டில் அமெரிக்காவில் உள்ளதைப் போலவோ, பத்திரிகைத் தொழிலிலிருந்து தச்சுவேலை வரைக்கும் உள்ள எல்லாப் பயிற்சிகளையும் கற்றுதரத்தக்க மாதிரிக் கல்வி முறையை ஏற்படுத்த வேண்டும்."[1]

மூன்றாவதாக, விரைவான தொழில்மயத்தினால் ஏற்படும் சமூக சீர்கேடுகளைக் குறைக்கச் சமூக, பொருளாதார முன்னேற்றத்தை ஒருங்கிணைக்கக் கீழ்க்கண்ட முறையில் செயல் முறைகளை மேற்கொள்ள வேண்டும். அதாவது சமூக மாற்றங்களைப் பொருளாதாரச் செயல் திட்டங்களின் மூலமாகவும், பொருளாதார மாற்றங்களை சமூகத் திட்டங்களின் (Social Projects) மூலமாகவும் கொண்டுவர வேண்டும். சான்றாகச் சிறு தொழில்களை ஊக்குவிப்பதால் பொருளாதாரக் குறிக்கோளாகிய அதிக உற்பத்தியும், உயர்ந்த வருமானங்களும் ஏற்படுவதோடு அதிக வேலை வாய்ப்புகளின் மூலமாகச் சமூக நலனும் மேம்படுகிறது. அதேபோன்று

1 மௌரிஸ் ஜின்கின். (Maurice Zinkin). "சுதந்திர ஆசியாவிற்கான வளர்ச்சி" (Development for Foree Asia), 150-51.

சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், சமூக நிலைமையைச் சீர்படுத்தித் தொழில் ஊக்கம், ஒத்துழைப்பு ஆர்வம், ஒத்துழைப்பு உணர்வு, சுய உதவி, ஒழுக்கம், தலைமை போன்ற சமூகக் குறிக்கோள்களை அடைய முயன்றபோதிலும், கிராமத்தினரின் ஆக்க வேலை வாய்ப்புகள் அதிகரிப்பதால் பொருளாதார நலனும் ஏற்படுகிறது. பிற்பட்ட வகுப்பினர், மலைச்சாதியினர், நாடோடி வகுப்பினர் போன்றவர்களுக்காகத் தீட்டப்படும் பொருளாதாரத் திட்டங்கள் சமூக நலனையும் பெருமளவு அதிகரிக்கிறது.[1] மேலும் சமூகத் திட்டங்கள், பொருளாதார நோக்கங்களைச் சாதிக்கச் செய்யவும் வகை செய்யமுடியும். கல்வி, பொதுச்சுகாதாரம் போன்ற எல்லாவகை 'மனித முதலீடு' (Human Investment) சமூகத்தின் சமூக நிலைமையையும், பொருள்சார் நலத்தையும் சீர்படுத்துவதோடு, ஆக்கத்திற்கு உதவும் தொழிலாளர்களின் திறமையைச் சீர்படுத்தவும் பெருமளவு துணைபுரிகிறது. சுய உதவியுணர்வை மேம்படுத்த மேற்கொள்ளப்படும் பல்வேறு சமூகத்திட்டங்கள் மக்களின் குணநலன்களைச் சீர்படுத்திப் பொருளாதார நடவடிக்கைகளுக்குப் பெருமளவில் துணைபுரிகின்றன.

## முடிவுரை

பொருளாதார வளர்ச்சியின்போது குறுக்கே பல்வேறு இடர்ப்பாடுகள் தோன்றி வளர்ச்சியின் வேகத்தைக் குறைக்கின்றன. இவ்விடர்ப் பாடுகளில் மிகவும் முக்கியமானதாகக் கருதப்பட வேண்டியது சமூக நிறுவனங்களும் அமைப்புக்களுமாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் பல்வேறு சமூகக் காரணிகள் தொழிலாளர் உற்பத்தித்திறன், சேமிப்பு, தொழில் துணிவாற்றல், தொழில் நுட்ப வளர்ச்சி, மக்கட்தொகை போன்றவைகளைப் பெருமளவில் பாதிக்கின்றன. இவைகளில் சாதிமுறையும், மத நம்பிக்கையும், குடும்ப அமைப்பும் மிகவும் பிற்பட்ட நிலையிலிருப்பதால் பொருளாதார வளர்ச்சி விரைவாக அதிகரிக்க முடிவதில்லை. இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளுக்கு உகந்த சமூக மாற்றம் புரட்சிகரமாகத் தோன்றினலன்றிப் பொருளாதார வளர்ச்சி மேம்படாது. முக்கியமாக, குறுகிய காலத்தில் பெருமளவு வளர்ச்சியைச் சாதிக்க விரும்புவது சாலச்சிறந்ததாகாது. மக்களின் மனப்போக்கிலும், திறமையிலும் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்தியபின் பிரம்மாண்டமான திட்டங்களைத் தீட்டினுல் பொருளாதார வளர்ச்சி மேலோங்குமென்பதில் ஐயமில்லை. இதற்கு அடிப்படையாக சமூக, பொருளாதார மாற்றத்தில் ஒரு

[1] "ஐ. நா, ஆசிய, தூரக்கிழக்கு நாடுகளுக்கான பொருளாதார வெளியீடு" டிசம்பர், 1959. ப, 29.

சுமுகமான ஒருங்கிணைப்பு மிகவும் அவசியமாகும். பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள், சமூகச் சீர்திருத்தங்களுக்கும் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களுக்கும் சரிசமமான முக்கியத்துவம் அளித்தால் படிப்படியாகப் பிற்பட்ட சமூக நிலை, பொருளாதார வளர்ச்சிக்கு உகந்த வகையில் தகுந்த மாற்றத்தைப்பெற்று நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும்.

# 61. வளர்ச்சி நடவடிக்கைகளும் இந்தியப் பண்பாடும்

## (Process of Growth and Indian Culture)

### பழைமைப் பரம்பரைச் சமுதாயப் பண்பாடு வளர்ச்சியைப் பாதித்தல்

ஒரு நாட்டின் வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு அடிப்படையாக அமைவது அந் நாட்டு மக்களின் பரம்பரைப் பண்பாடாகும். இப் பண்பாடு சில நாடுகளில் பொருளாதார வளர்ச்சிக்கு ஊக்கம் தருவதாகவும், மற்றும் சில நாடுகளில் வளர்ச்சியைத் தடுப்பதாகவும் உள்ளது. வளர்ச்சி குறைந்த ஏழ்மை நாடுகளில் பரம்பரைப் பண்பாடுகள் தொழில் நுட்ப வளர்ச்சியைத் தடுக்கின்றன. மேலும், பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகளின் போது பரம்பரைப் பண்பாடுகளும் உடையத் தொடங்குகின்றன. எனவே, பண்பாடு என்ற சொல்லின் பொருளையும், அது பொருளாதார வளர்ச்சியை பாதிக்கும் அளவையும் ஆராய வேண்டியது அவசியமாகும். பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகளை (Process of Economic Growth) பற்றிய விளக்கத்தை ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம். பேராசிரியர் W. W. ராஸ்டாவ் அவர்கள் பொருளாதார வளர்ச்சி நடவடிக்கையை ஐந்து கட்டங்களாகப் (Five stages) பிரித்துள்ளார். அவைகளாவன :- 1. 'பரம்பரைச் சமுதாயம்' (Traditional society), 2. தானே இயங்கும் 'மேலெழு பொருளாதார நிலைக்கான முன் நிபந்தனைகள்' (Pre-Conditions for take-off), 3. தானே இயங்கும் 'மேலெழு நிலை' (Take-off), 4. 'முற்றிய பொருளாதார நிலைக்கான இயக்க சக்தி' (Drive to maturity), 5. 'உயர் பெரு நுகர்வுக் காலம்' (Age of high Mass-Consumption). சில அளிப்பு, தேவையின் இயக்கக் கருத்துகள், உற்பத்திப் பாங்கு, ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு இவ் வளர்ச்சிக் கட்டங்கள் வர்ணிக்கப்பட்டுள்ளன என்பதை ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம். இவ் வளர்ச்சிக் கட்டங்களைக் கருத்தில் கொண்டு

இந்தியப் பண்பாட்டிற்கிடையே இந்தியா எந்தக் கட்டத்தில் உள்ளது என்பதை அறிய வேண்டியது இன்றியமையாததாகும். "பொருளாதார வளர்ச்சி நடவடிக்கையானது ஆய்ந்தறிந்த நடவடிக்கைகளாலோ அல்லது சாதாரண சமூக எழுச்சியினாலோ தோன்றும் போது, பரம்பரைப் பண்பாட்டின் ஒரு பகுதி மறைந்து விடுகிறது. ஒரு சமூகத்திற்குத் தேவையான குறிப்பிட்ட சில சமூக இயல்புகளைப் (Social Values) பேணிக் காக்க எந்த அளவு பரம்பரைப் பண்பாடு பாதுகாக்கப்பட வேண்டும் என்பதை தீர்மானிக்க வேண்டியது அவசியமாகும். [1]

பண்பாட்டின் விளக்கம்

பண்பாடு என்பது சமூக ரீதியில் ஏற்றுக் கொள்ளத் தக்க மக்களின் பண்பட்ட நடத்தையாகும். மக்கள் தங்கள் வாழ்க்கை முறையில் நிலை நிறுத்தப்பட்ட சில நடத்தை நெறி முறைகளைக் கடைப் பிடிப்பதே பண்பாடாகும் என்று டாக்டர் R. பாலகிருஷ்ணு விளக்குகிறார். ஒரு பண்பாட்டு முறை வெளித் தூண்டுதலால் தொடர்ந்து அறிவாற்றலை வளர்த்துக் கொள்ளும் நடவடிக்கை யால், இயங்கும் இயல்புடைய (Dynamic quality) பண்பாடாகச் சீர்படுகிறது. புது நடவடிக்கைகளைச் சமுதாயங்கள் பின்பற்றும் போது பழமைப் பண்பாடு, புத்தாக்கங்கள் தோன்றுவதைத் தடுக் கிறது. அடிப்படைப் பழக்க வழக்கங்களுக்கு மறுவடிவம் ஏற்படுத் தும் போதும் பழமைச் சக்திகளால் அதற்கு எதிர்ப்புத் தோன்று கிறது. சான்றாக மேற்கத்திய நாடுகளில் தனியொருவனின் முயற்சியின் (Individual effert) அடிப்படையில்தான் தொழில் நடக்கின்றது. ஆனால், கிழக்கிந்திய நாடுகளின் பெரும் பகுதிகளில் சமூக உற்பத்தி நடவடிக்கைகளின் அடிப்படையில் தொழில் நடைபெறுகிறது. இந் நாடுகளில் தனியொருவன் ஒரு வகுப்பின் உறுப்பினராகவே செயல்படுகின்றான். எனவே, கூட்டு முயற்சி முறையிலிருந்து தனியுரிமை முயற்சி முறைக்கு மாற்றம் பெற இந் நாடுகளில் பெருந் தடைகள் உள்ளன. தனியொருவன் சுய ஆற்றலுடன் செயல்பட விரும்பினாலும் தொழில் ஊக்கம் (Labour in Centive) அதற்குச் சாதகமாக அமையாது. ஏனெனில் அவனுடைய நுகர்வுப் பாங்கு கூட்டுக் குடும்ப இயல்புகளைக் கொண்ட பழமைக் கூட்டுமுறையினால் (Traditional Collective system) கட்டுப்படுத்தப்படுகிறது. பொதுவாக எல்லா மதங் களின் அடிப்படை அம்சங்களும் தத்துவங்களும் ஒன்றாகவே உள்ளன. எல்லா மதங்களிலும் நன்மைகளும், தீமைகளும் காணப்படுகின்றன.

1 டாக்டர் R. பாலகிருஷ்ணு, 'பொருளாதார வளர்ச்சியில் பண்பாட்டுப் புனராக்கம்' (Cultual Re-Orientations in Economic development)

## இந்துப் பண்பாட்டின் அம்சங்கள் (Features of Hindu Culture)

பண்பாடு என்பது ஒரு கருத்துவழி அம்சமாக அமைந்து மனித நடத்தையின் பாங்கு, அடிப்படைச் சட்டங்கள் ஆகியவைகளைப் படம்பிடித்துக் காட்டுகிறது. சிந்தனைப் பாங்கு, மனக்கிளர்ச்சி, குணங்கள், சிந்தனை, மனித உணர்வையும் அனுபவத்தையும் உணர்த்தும் வகைகள் போன்ற செயல்களும் மக்களின் பண்பாட்டில் பிரதிபலிக்கிறது. எனவே, பண்பாடென்பது மனித அனுபவத்தை வடித்துக் காட்டுவதோடல்லாமல் மனித நடத்தையையும் ஒருங்கமைக்கிறது.[1] மனிதத் தனித்தன்மை (Human Personality), மனிதனின் சமூகப் பண்புகள் ஆகியவைகள் உருவாவதற்குப் பண்பாடு அடித்தளம் நாட்டுகிறது. இப் பண்பாட்டின் மூலம்தான் மனிதன் தன் ஆக்கச் சக்தியையும், புதிய கருத்துகள், இயல்புகள், நடவடிக்கைகள் ஆகியவைகளைக் கண்டறியும் ஆற்றலையும் வெளிப்படுத்தவேண்டும். சில சிந்தனைகள் மனித உணர்ச்சிகள் பண்பாட்டிற்குள் அடங்குவதில்லை. சமூகத்தால் அங்கீகரிக்கப்பட்ட சில நடத்தைப் போக்குகளை அது தேர்ந்தெடுத்துக் கொள்கிறது. "உண்மையில், கலாச்சாரம் நம் அறிந்த, அறியாத ஆர்வங்களையும், உணர்ச்சிகளையும் ஒரு நிலைப் படுத்தி மனித நடத்தைக்குப் பொருள் விளக்கிப் பகுத்தறிவுள்ள வாழ்க்கைக்கு வழி வகுக்கிறது,"[2] பழமைக் கருத்துகள், நம்பிக்கைகள், உணர்ச்சிகள், குணவியல்புகள் ஆகிய இன்றியமையாத அம்சங்கள் மக்களின் சீரான பொதுச் செயல் முறைகளில் பிரதிபலிப்பதைக் கலாச்சாரம் உணர்த்துகிறது. இவைகள் நீண்ட காலப் பண்பாட்டு முறை நடவடிக்கைகளினால் (Process of enculturation) வளர்ச்சியடைந்து சில அடையாளங்களின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றன. இந்துமதம் சமூக வளர்ச்சியின் பல்வேறு கட்டங்களில் தோன்றிய வேறுபட்ட கருத்துகளை ஒருங்கிணைத்துச் சுய வசப்படுத்திக் கொள்ளும் குறிப்பிடத்தக்க ஆற்றல் பெற்றுள்ளது. இந்து மதம் பல்வேறு வகையான நம்பிக்கைகள், கொள்கைகள், வழிபாடுகள் போன்றவைகளுக்கு உறைவிடமளித்து ஒரு தாராள மனப்பான்மை (Catholic) கொண்ட மதமாக விளங்குகிறது. வேறுபட்ட அம்சங்களை உள்ளடக்கும் திறமையைப் பெற்று அவைகளை ஒருங்கமைத்துள்ளதால் இந்துப் பண்பாடுப் பெரும் சிக்கல்களையும், வேற்றுமைகளையும் சாதித்து மனித வரலாற்றிலேயே ஈடு இணையில்லா இடத்தைப் பெற்றுள்ளது. இந்துப் பண்பாடு, ஒரு மதமாகவும், ஒரு சமூக

1 K. வில்லியம் காப், 'இந்தியாவில் இந்து கலாச்சாரம், பொருளாதார வளர்ச்சி பொருளாதாரத் திட்டம்' ப-7.

2 வில்லியம் காப், L. L. காப் (William Kapp and L. L. Kapp) 'இந்திய இந்து கலாச்சாரம், பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்' ப. 7.

முறையாகவும் கருதப்பட வேண்டும். ஏனெனில் இம் மதத்தின் அறநெறிக் கருத்துக்கள் பல்வேறு நவீன நாகரிகங்களின் சமூக முறையின் ஏராளமான முகப்புகளில் காணப்பட்டு வெளிப் படையாகவே சமயச் சார்பில்லாததாய் உள்ளது. கடைசியாக இந்திய சமூக வாழ்க்கையின் இணைந்த நடவடிக்கைகள், பேரவா, ஆகியவைகள் தனியொருவனால் அமைக்கப்படாமல் பரந்த குடும்பம், சாதி, இவைகளைப் பெற்றுள்ள வகுப்பினரின் மூலமாக உருவாக்கப்படுகிறது. இஸ்லாம், கிருத்தவம், இந்துமதம், போன்றவைகள் ஆதிகாலத்தில் உண்மையென்று பட்டவைகளை யெல்லாம் தங்கள் அம்சங்களாக ஏற்றுக் கொண்டுள்ளன. தொழில் நுட்ப வளர்ச்சிக்கு முற்பட்டநாகரிகங்களின் (Pre-Technological Civilizations) ஒழுங்குமுறை, காலமுறை போன்றவைகளை இந்து மதம் அப்படியே உட்கொண்டுள்ளது. இந்துமதத்தின் கர்மவினைச் சட்டம் (Law of Karma) என்பது காலம், காரண காரியத் தொடர்பு, ஆகிய நிலையான சுழற்சிசார் கருத்துகளின் விரிவாக்கப் பட்ட விளக்கமாகும். இதன் அடிப்படையில்தான் ஆத்மாக்களின் மறுபிறப்புக் கோட்பாடும் (Transmigration of Souls) தர்க்க ரீதியாக விளக்கப்பட்டுள்ளது. மறுபிறப்புக் கருத்தானது மக்கள் பொருள்சார் அம்சங்களிலேயே தீவிரமாக ஈடுபடுவதைத் தடுப்பதற்காக அமைக்கப்பட்ட ஒரு துறவறத் தத்துவமாகும். (Philosophy of renunciation) இந்துப் பண்பாடு மக்களின் பொருள் சார் நோக்கங்களை முழுவதுமாக எதிர்க்கவில்லை. "ஆனால், அக் குறிக்கோள்கள் இந்துமதம், இந்து அறநெறி, இந்து கலாச்சாரம் ஆகியவைகளின் அடிப்படை இயல்புகளுக்குக் கீழ் நிலையிலேயே இருக்க வேண்டுமென்பதுதான் அடிப்படைத் தத் துவமாகும்."[1] இந்துப் பண்பாட்டின் சில அம்சங்கள் இஸ்லாம் மதத்திலும், கிருத்தவ மதத்திலும், மற்றும் பல மதங்களிலும் பொதுவாக காணப்படுகின்றன.

"இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா;
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை ஆவது"

என்ற உலகசெல்வ நிலையாமைக் கருத்தை அடிப்படையாகக் கொண்டே எல்லாமதங்களும் விளங்குகின்றன. இந்துமதம் மக்கள் செல்வத்தைத் தேட அனுமதி அளித்திருந்த போதிலும் எல்லா உலக நடவடிக்கைகளிலும் மாயத்தன்மை காணப்படு வதையும் அது சுட்டிக் காட்டாமல் விடவில்லை. துறவறம்,

[1] வில்லியம் காப், L. L. காப் 'இந்திய இந்து கலாச்சாரம், பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்,' ப. ப. 18,

ஆழ்ந்த சிந்தனை ஆகியவைகளோடு உலக நடவடிக்கைகளை ஒப்பிடும் போது முன்னவைகள் மனநிம்மதியையும், பூர்ண திருப்தியையும், அளிக்க வல்லது என்பது உறுதியான கருத்தாகும் எனவே, உலக கலாச்சாரங்களில் ஒருவகை பொருள்சார் நடவடிக்கைகளையும், மற்றொருவகை அறநெறி நடவடிக்கை களையும், பொருள்சார் நடவடிக்கைகளையும், ஒருங்கிணைத்துச் செயல்பட்டு வருகின்றன. முரண்பாடான இரு வேறுபட்ட இயல்புகளும், நடத்தைப் பாங்குகளும் இந்து மதத்தில் ஒரே பண்பாட்டு முறையாக உருவெடுத்துத் தற்போதைய இரட்டை இயல்பு (Dualism) களைக் கொண்ட மனித நிலைமையை (Human Situation) இந்துப்பண்பாடு படம் பிடித்து காட்டுகிறது. இக் கருத்தின் சாரமாவது, "மனிதனின் ஒவ்வொரு சமூக பொருளாதார சீர்திருத்த முயற்சிகளுக்கும் ஒரு முக்கிய வரையறை உண்டு. நீதி நெறிகளின் சிந்தனையும் பொருள்சார் நடவடிக்கைகளும் சமபங்கு பெறவேண்டும். பொருள்சார் நடவடிக்கைகளிலேயே தனியொருவனின் மகிழ்ச்சியும் நலனும் கிடைப்பதில்லை".[1] துறவு, எளிமை வாழ்வு, தியாகம், சேல்வச்சேர்க்கையிலும் அரசியல் அதிகாரத்திலும் மனமின்மை போன்ற இயல்புகள் இந்துமதத்தின் தனிச்சிறப்பியல்புகளாகும்.[2] இத்தகைய இயல்பு களின் விளைவாகத்தான் அஹிம்சை (Ahimsa), தாராளமனப் பான்மை போன்ற உன்னத இலட்சியங்கள் இந்திய அறநெறியின் மிகமுக்கிய அம்சமாக விளங்குகிறது. மாதிரியாகப் பசுவைப் பாதுகாத்தல் போன்ற கருத்துகள் பொருளாதார வளர்ச்சியில் தீவிர விளைவுகளை ஏற்படுத்தியுள்ளன. மதத்தினால் மனிதனின் நல்லொழுக்கமும் புனிதமான அக உணர்வும் ஊக்குவிக்கப்படு கிறது. ஆனால் மறுவகையில் நோக்கின் மதத்தினால் பொரு ளாதார ஊக்கம் தடைபடுவதையும் உணரலாம்.

## இந்தியப்பண்பாடு பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும் வகைகள்

(Influence of Indian Culture On Economic development)

மேற்கண்ட ஆய்வில் இஸ்லாம், கிருத்தவ இந்துமதப் பண்பாடு களின் முக்கிய அம்சங்கள் விளக்கப்பட்டன. அவைகளின் அடிப் படையில் இந்தியப் பண்பாடு எந்த அளவு பொருளாதார

1 ஜே. கோஹீன் (J. Goheen) 'இந்தியாவின் பண்பாட்டு இயல்புகளும் பொருளாதார வளர்ச்சியும்,' பொருளாதார வளர்ச்சியும் பண்பாட்டு மாற்றமும் என்ற நூலில் ஒரு விவாதம், ப. 2.

2 டீ. நாராயண், 'இந்து குணம்', (Hindu Character) ப. 56.

வளர்ச்சியைப் பாதித்துள்ளது என்பதை இனி ஆராயலாம் அதிக உற்பத்தி, உற்பத்தித்திறன் இவைகளை அடையவேண்டுமென்ற இந்திய ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோள்களைக் கருத்தில் கொண்டு தற்போது இருந்துவரும் பண்பாட்டு நிறுவன அமைப்புகளை ஆராய வேண்டியது இன்றியமையாததாகும்.

1. காலச் சுழற்சியும் இயல் உலகுசார் காரண-காரியத் தொடர்பும் (Cyclical Time and Cosmic Causation)

காலசுழற்சி, இடல்உலக காரண-காரியத் தொடர்புகள் என்பன பரந்த கால, இட, மாற்றத்தினுல் மனிதனை உலக காரியங்களில் நம்பிக்கை இழக்கச் செய்து, அவன் ஆக்கச் சக்திகளைக் குறைத்து விடுகின்றன. இதன் விளைவாகச் சமூகச் சீர்திருத்தம், பொருளாதார வளர்ச்சி, வரலாற்று நிகழ்ச்சிகள் போன்றவைகளில் மனிதனின் நாட்டம் குறைகின்றது. கர்ம வினைச்சட்டத்தின்படி ஏழை ஏழையாகவும், பணக்காரன் பணக்காரனுகவும் அதே நிலையில் இருந்து தனியொருவனுக்குக் கிடைப்பது, 'தான் செய்த வினைப் பயனுகும்' என்ற செயலற்ற உணர்வுடன் இருக்க வேண்டிய நிலை உள்ளது. பரம்பரை அந்தஸ்தின் அடிப்படையில் ஒரு சமூகத்தில் ஏற்றத்தாழ்வுடைய செல்வப் பங்கீட்டை பழமை அறநெறியென்று இந்துமதம் அறிவுறுத்தி மக்களின் சமூக வாழ்க்கையைச் சீரமைக்கத் தேவையானத் தூண்டுதலைத் தளர்ச்சியடையச் செய்கிறது. இந்து மதம் மக்களுக்குக் காலத்தின் அருமையையும், சகிப்புத் தன்மையையும், உலக நிலையாமைக் கருத்தையும் அறிந்து பின்பற்றும்படி மக்களைத் தூண்டுகிறது.

"காலமென்பது கறங்குபோல் சுழன்று
கீழது மேலதா மேலது கீழதா
மாறிடும் ஒரு தோற்றம்"

என்ற காலத்தின் சுழற்சியை அறிந்து திருப்தி, பணிவுடைமை, துறவுமனப்பான்மை, போன்ற இயல்புகளை பல்வேறு மதங்களின் பண்பாடுகள் உள்ளடக்கி மக்களை விரைவாகவும், காரண காரியத்துடனும் செயல்படுவதைத் தடுக்கின்றன. இதற்கு மாறுக மேற்கத்திய உலகில் மக்களின் மனநோக்கு சமூக, பொருளாதார, வாழ்க்கை வசதிகளைச் சீர்படுத்தி மேம்படுத்த வேண்டுமென்ற தணியாத ஆர்வம் ஒளிவிட்டு மிளிர்கிறது. டாக்டர் R. ராதாகிருஷ்ணன் அவர்கள் இந்து சிந்தனையைக் கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிருர்:

"இன்முகம், திருப்தி, பொறுமை, சகிப்புத் தன்மை,
ஆகிய இயல்புகளை வளர்த்துக் கொள்வதில் உள்ள
ஆர்வத்தை கிழக்கத்திய நாகரிகங்கள் நிலையில்லா
உலகத்தின் உண்மை வாழ்க்கை வசதிகளைச் சீர்படுத்த
அவ்வளவாகக் காட்டுவதில்லை.
உலக சக்திகளை எதிர்த்துப் போராடுவதில்
மனமகிழ்ச்சி கொள்வதில்லை. உலக இன்பங்களை
குறைவாக விரும்பி அழியாத நிரந்தர 'பரமஒளியையே'
அடையவேண்டும் என்பதே அவர்களின் பிரதான
நோக்கமாக உள்ளது."[1]

தியாகம், ஆழ்ந்த சிந்தனை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட தர்மத்தையும், (Dharma), இயல்உலக காரண-காரிய தொடர்புத் திட்டங்களையும், இந்துப்பண்பாடு மக்களிடையே ஊக்குவித்து மனித பொருள்சார் ஆர்வங்களின் அளவைக் குறைத்துவிட்டது. இத்தகைய இயல்புகள் மக்களுக்கு அறிவுறுத் தப்படாதிருந்தால், அவர்களின் மனப்போக்குத் தற்போதைய விஞ்ஞானத் தொழில் நுட்ப அறிவைப் பயன்படுத்துவதற்கேற்ற பக்குவம் பெற்றிருக்கும். இத்தகைய பண்பாடு மற்ற மதங்களி லும் காணப்படுகிறது.

இந்துமதம் தட்ப வெட்பநிலை, காரண-காரியத் தொடர்பு, ஆகியவைகளை ஒன்றையொன்று சார்ந்திருக்கச் செய்யவில்லை. நிலவுலக வெப்ப மண்டலப் பகுதியில் மனிதனின் நம்பிக்கையை, சுய ஆர்வத்தை, அழிப்பது மனிதன்மேல் உள்ள இயற்கையின் இடைவிடாப் பகையாகும். மறுபிறப்பு, கர் மவினை, காலச் சுழற்சி, காரண-காரியத் தொடர்பு ஆகியவைகளில் உள்ள நம்பிக்கையால் மனிதன் செயலிழந்து பரம சிந்தனையிலேயே ஆழ்ந்து விடுகிறான். இத்தகைய அடிப்படைக் கருத்துக்களைக் கொண்ட இந்துமதப் பண்பாட்டினால்தான் பொருளாதார வளர்ச்சியின் வேகம் தடை படுகிறது. சமூக, பொருளாதார முன்னேற்றமென்பது கண்மூடித் தனமான விதியின் நம்பிக்கையால் நிர்ணயிக்கப்படாமல் தேர்ந்த மனித செயல்முறைகள், சமூக மேம்பாட்டு நடவடிக்கைகள் போன்றவைகளைப் பொறுத்ததாகும், எனவே, எல்லா மத தத்துவங்களும் பொருள்சார் மேம்பாட்டை மேம்படுத்தும் இயல் பினராய் அமைதல் நல்லது.

1 டாக்டர் S. ராதாகிருஷ்ணன், கிழக்கத்திய மதங்களும் மேற்கத்திய சிந்தனையும் (Eastern Religions and Western Thought) ப. 257.

## 2. விருப்பமில்லா நடவடிக்கையும் ஆர்வத்தின் அளவும் (Desireless Action and The Level of Aspiration)

மனிதனின் குறிக்கோள்கள், ஆவல்கள், இவைகளின் அளவை இந்துப் பண்பாட்டின் அறநெறி கருத்துகள் தடுத்துள்ளதைப் பகவத் கீதையில் குறிப்பிட்டுள்ள அறநெறிக் கருத்துகளிலிருந்துப் அறியலாம். "ஒரு செயலை மேற்கொள்வதற்கு மட்டுமே உனக்கு உரிமை உண்டு; அதன் பலனைப்பற்றி நினைக்க உனக்கு எப்போதும் உரிமையில்லை. செயல்களின் பலனை அடைவதே உன்னுடைய நோக்கமாக இருக்கலாகாது; செயலை செய்து முடித்தபின் அதன் பலனைப்பற்றிக் கவலைகொள்வது மதியீனமாகும்." கீதையின் இவ்வறிவுரைகள் தர்மநீதியை மக்களுக்குப் புகட்டிய போதிலும் பொருள்சார் நலம்பெற விருப்பம், பெயர்ச்சி, சீரமைப்பு போன்ற பொருளாதார இயல்புகளைத் தீவிரமாகத் தடைசெய்து விடுகின்றன. இம்மதக் கொள்கையின்படி மனிதன் செயல்படுவானேயானால் அவன் பொருள்சார் முன்னேற்றத்தைச் சுலபமாக அடையமுடியாது. இம் மதக் கருத்துகள் மனிதனின் தகுந்த செயல் திட்டங்களின் ஆர்வத்தை குறைத்துச் செயல் முடிவுகளைப் பற்றிய சிந்தனை சிறிதும் இல்லாமல் வளங்கள் வீணடிக்கப்படக் காரணமாய் உள்ளன. அக்கறையின்றியும் அரைகுறை ஆர்வமுடனும் போதிய திட்டமின்றியும் பலனைப்பற்றிய தொடர்ந்த முயற்சியின்றியும் மேற்கொள்ளப்பட்ட செயல்கள் தகுந்த விளைவுகளை ஏற்படுத்துவதில்லை. அக்கறையில்லா, சுயநலமற்ற, செயல்களினால் ஒருவனின் திறமையும், பணியாற்றலும், முழு அளவில் பயன்படுத்தப்படுவதில்லை. பலனைப்பற்றிய அக்கறையில்லா, ஆர்வம் குறைந்த செயல்கள், மதச்சடங்குகளைப் போலவே சீர்குலைந்து போய்விடுகின்றன. துறவு மனப்பான்மை, பொருள்சார் ஆர்வமின்மை போன்ற இயல்புகள் கடும் உழைப்பு, முறையான விடாமுயற்சி, அதிக ஆக்கத்திறன் போன்றவைகளில் மக்களுக்கு ஆர்வத்தை ஏற்படச்செய்ய முடியாது. 'பொருளாதாரத் திட்டத்தின் அடிப்படையில் மக்களின் நற்பண்புகளாகப் பொருளாதார வளர்ச்சி அதிகரிக்கவும் வாய்ப்புள்ளது' என்று மகாத்மா காந்தி துறவறக் கொள்கைக்கு மறுவிளக்கம் தந்துள்ளார். தியாகம், எளிமைத்தன்மை, மற்றும் உடலுழைப்பு ஆகியவைகளை உள்ளடக்கும் அக்கறை குறைந்த செயல் (Disinterested Action) என்பது மனிதனுக்கு மனப்பயிற்சியையும், சுயநம்பிக்கையையும், திறன் உயர்வுப் பயிற்சியையும் அளிக்கவல்ல உயர்கருத்து (Ideal) என்று காந்தியடிகள் புனர்விளக்கம் தந்துள்ளார்.[1]

[1] M. சிங்கர் 'இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் பண்பு இயல்புகள்' அமெரிக்க அரசியல், சமூக இயல் பள்ளியின் வெளியீட்டில், பாகம் 305, ப. 81-91

மாதிரியாக, ஜப்பானில் இந்தியாவின் யோகா (Yoga சனப் பயிற்சிகள் (Samatvam) பின்பற்றப்பட்டு மனத்தைக் கட்டுப்படுத்துவதினால் சுய பயிற்சியில் சீரமைப்பும், தனித்திறமையில் மேம்பாடும், சுயநம்பிக்கையில் முன்னேற்றமும் சாதிக்கப் பட்டுள்ளது. மேற்கண்ட புனர்விளக்கத்தினால் மக்களிடையே வளர்ச்சிக்குத் தேவையான உழைப்பு, அதிக சேமிப்பு ஆகிய பண்புகள் ஊக்குவிக்கப்பட்டு ஆக்கத்திற்கு உதவா நுகர்வு (Ostentatious Consumption), மற்ற வீண் செலவுகள் குறைவதற்கு வாய்ப்பு ஏற்படுமென்று காந்தியடிகள் எதிர்பார்த்தார். ஆனால், அது தக்க வெற்றியைத் தேடித்தரவில்லை. ஏனெனில், பெரும்பாலான செல்வந்தர்கள், வர்த்தகர்கள், வணிகர்கள் ஆகியோர் தியாகம், எளிமை, சிக்கனம் போன்ற இயல்புகளுக்குத் தகுந்த முக்கியத்துவம் அளிக்கவில்லை. இதன் விளைவாக அதிக சேமிப்பு, உயர்ந்த முதலாக்கவீதம், இந்தியாவில் பெருமளவில் வளர்ச்சி யடையவில்லை. ஜவஹர்லால் நேரு குறிப்பிட்டது போல் "பழமை இயல்புகளை நாம் ஒதுக்கித் தள்ளிவிட முடியாது அல்லது மதச் சடங்குகளிடையே நாம் வாழவும் முடியாது; பழமை, புதுமை ஆகிய இரு ஒழுங்குகளிலுமுள்ள சிறப்பியல்புகளை நாம் ஒருங் கிணைக்கவேண்டும்." கர்மவினைக் கருத்தின் துறவு, அக்கறையின்மை ஆகியவைகளால் மக்களின் ஆர்வத்தின் அளவு ஒரே நிலையிலேயே மாறாமல் தேங்கிவிடுகிறது. ஒழுக்கம். முறையான வாழ்க்கை, காலந்தவறாமை போன்ற இயல்புகளின் அடிப்படையில் மனிதன் நவீன தொழில் நடவடிக்கைகளில் ஈடுபடத் தேவையான உள்ளியக்கச் சக்தி (Inner drive) இந்துமத கர்மவினைச்சட்டத்தினால் பாதிக்கப்பட்டு விடுகிறது. சான்றாக, எல்லாம் விதியென்று எண்ணி இந்திய விவசாயிகள் சீரான விதைகள், உரவகைகள். தொழில் நுட்ப உற்பத்திமுறை போன்ற நடவடிக்கைகளில் தீவிரமான ஆர்வம் காட்டாததால் உணவு தானிய விளைச்சல் குறைவாக உள்ளது.

3. சாதி, சமூக பிரிவுகளும் 'தன்னல வகுப்பினரும்' வளர்ச்சியைப் பாதித்தல் (Influence of Caste, Social segmentation, and the 'Faction Society' on development)

இந்திய சாதி முறையால் சமூக, பொருளாதார முன்னேற்றம் குறிப்பிடத்தக்க வகையில் உயர்ச்சி பெறவில்லை என்பது பொருளாதார அறிஞர்களும், சமூக இயல் வல்லுநர்களும் ஆய்ந்து அறிந்துள்ள உண்மையாகும். சான்றாக திரு. J. P. பட்டாச்சார்யா

---

மேலும், M. சிங்கர் "இந்தியாவின் பண்பாட்டு இயல்புகளும் பொருளாதார வளர்ச்சியும்" பொருளாதார வளர்ச்சியும் பண்பாட்டு மாற்றமும் என்ற நூலில் பகுதி– 7: ப 10—12.

அவர்கள் சாதிமுறை, தொழிலாளர்களின் அளிப்பைப் பாதித்து தொழிலாளர் சந்தையில் (Labour Market) தேவை, அளிப்பு சரிசம நிலையடைவதைத் தடுக்கிறது என்று குறிப்பிடுகிறார். "பீஹார் போன்ற மாநிலங்களில் உழுதல் போன்ற வேளாண்மை நடவடிக்கைகளில் சில சாதி மக்களிடையே தப்பெண்ணம் இருப்ப தால் வேளாண்மை உற்பத்தி பாதிக்கப்பட்டுள்ளது. கூட்டுக் குடும்ப உறுப்பினர்கள் கூலியாள்களைக் கண்காணிப்பதிலேயே நாள் முழுவதையும் வீணாக்கிக் கடும் உடல் உழைப்பை மேற் கொள்வதில்லை."[1] கீழ்ச்சாதியினர் செய்யும் வேலையை அவர்களே செய்ய வேண்டுமென்றும், மேல் சாதியினர் ஆற்றும் பணிகளைக் கீழ்ச்சாதியினர் மேற்கொள்ளக் கூடாதென்றும் சில சாதிச் சட்டங்கள் வலியுறுத்துகின்றன. மேல் சாதியினர், தீண்டாதார் போன்ற கீழ்ச்சாதியினர் செய்யும் தொழில்களை மேற்கொண்டால் மதிப்புக் குறைந்துவிடும் என்று எண்ணி வேறுபணிகளில் ஈடுபடுவ தில்லை. இதன் விளைவாகப் பண்ணைகளில் சீரான உற்பத்தி முறைகள் உட்புகுத்தப்படுவது தடுக்கப்பட்டு விடுகிறது. சான்றாக எலும்புகள், மீன் போன்ற உரவகைகள் பெரும்பாலும் பயன்படுத்தப்படுவதில்லை. சாதியானது சமுதாயங்களைப் பொருளாதார ரீதியில் மூடிவைக்கப்பட்டவைகளாக்கி, (Closed economically) பெரும்பாலான மக்களின் பேரார்வத்தையும், ஆக்கச்சக்திகளையும் செயலற்றவைகளாக்கி விடுகிறது. "பழமைத் தொழில்களையே வலியுறுத்தி, தனியொருவனின் சுய ஆற்றல் வளர்ச்சியை, சாதி முறையானது தடுத்து விடுகிறது; அது தனி யொருவனின் பேரவா, ஆக்கச் செயல், ஊதியம் ஆகியவைகளுக் கிடையே நல்லதோர் உறவு உருவாகுவதைத் தடை செய்து விடுகிறது."[2] மேலும், பல்வேறு சாதிச் சட்டங்கள், ஒவ்வொருவ னுடைய நுகர்ச்சித் தரத்தையும் நிர்ணயித்துக் கட்டுப்படுத்துகிறது. ஒவ்வொருவரும் தன் சாதிச் சட்டமுறைகளுக்கேற்றபடி உண்ணவும் உடுத்தவும் அனுமதிக்கப்பட்டுள்ளனர். எடுத்துக் கட்டாக இந்தியப் பிராமணர்கள் இறைச்சி, மீன் போன்ற அசைவ உணவுவகைகளைப் பயன்படுத்துவதை விரும்புவதில்லை. உயர்ந்த, நடுத்தர, நிர்வாகப் பணிகளில் சிலசாதி வகுப்பினருக்குச் சலுகைகள் அளிக்கப்பட்டு இடங்களும் ஒதுக்கப்படுகின்றன. தனியார் துறையிலும்கூடக் குறிப்பிட்ட சில சாதியினரே பணி புரிவதால் வேலைக்கு ஆள்களைத் தேர்ந்தெடுக்கும் பொழுது அதே சாதியினரே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மேற்கத்திய நாடுகளில்

[1] J. P. பட்டாச்சாராயா, "இந்திய உழவர்களிடையே வேலை இன்மை," அர்த்த விஞ்ஞானவில் ('Unemployment among Indian Farmers) பாகம்-3, ப-266.

[2] G. B. ஜாதர், S. G பெரி, (Jather and Beri) 'இந்தியப் பொருளா தாரம், பாகம்-I ப-83.

சாதி, மத, பேதங்களும், நிறவெறியும் இருப்பதால் சமூகப் பொருளாதார வளர்ச்சி ஓரளவு தடைபட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால், இந்தியாவில் மேற்கத்திய நாடுகளைவிடச் சமூகப் பொருளாதார மாற்றத்திற்குப் பெருந்தடையாய் இருப்பது சாதி முறையாகும். 'விடுதலைக்கு முன்பும், விடுதலைக்குப் பின்பும் பொருளாதார வளர்ச்சியைக் குறைத்து, பொருளாதாரத் தேக்கத்தை ஏற்படுத்த ஒருவகையில் காரணமாயிருந்தது சாதி முறையே' என்று வில்லியம் காப் அவர்களும் L. L. காப் அவர்களும் குறிப்பிடுகின்றனர்.[1] எந்தெந்த நடவடிக்கைகளில் சாதி உறுப்பினர்கள் ஈடுபடலாம் அல்லது ஈடுபடக் கூடாது என்று சாதி முறைச் சட்டங்கள் கட்டுப்படுத்துகின்றன. இன்றும் கூடக் கிராமங்களில் தீண்டாதவர்களுக்கென்று தனியாக வீடுகளும், கிணறுகளும், தெருக்களும் காணப்படுகின்றன. பழைய பம்பாய் மாநிலத்தில் மேற்கொள்ளப்பட்ட கணக்கீட்டின்படி 70 கிராமத்திற்கு ஒரு கிராமத்தில் கூட ஹரிஜனங்கள் பொதுக் கிணறுகளிலிருந்து நீரெடுக்க அனுமதிக்கப்படவில்லை.[2]

### தீண்டாமையின் விளைவுகள்

சட்டபடி தீண்டாமை ஒழிக்கப்பட்டிருந்த போதிலும் தீண்டாதோரின் பொருளாதார வசதிகள் போதுமான அளவு சீராக்கப்படாததாலும், உயர் சாதியினர் சில பணிகளை அசுத்தமானவைகள் என்று எண்ணி மேற்கொள்ள மறுப்பதாலும் தீண்டாமை என்னும் தொழுநோய் இன்னும் நாட்டைவிட்டு அகன்றபாடில்லை. சாதி முறையினால் சமூகத்தில் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பிரிவினை ஏற்பட்டு வகுப்பு வாதங்களும், வகுப்புப் போராட்டங்களும், அதிகரித்து வருகின்றன. சாதி, குடும்ப அமைப்பினால் தனியொருவனின் வளர்சிச் சிந்தனையும், பரந்த கடமைப்பற்றும், அரசபக்தியும் உருவாவது தடுக்கப்படுவதால் பொருளாதார வளர்ச்சியும் அரசியல் மக்களாட்சியும் விரைவாகச் சாதிக்கப்பட முடியவில்லை. இத்தகைய நிலையினால் குடும்ப வகுப்புகள், தன்னலத்தை நாடும் சில கும்பல்களாகப் பிரிக்கப்படுகின்றன. பற்றாக்குறை, நிலத் தட்டுப்பாடு, சாதி முறைச் சட்டங்கள், போன்றவைகளால் இக் கும்பல்களிடையே பூசல்களும், போராட்டங்களும் ஏற்படுகின்றன. கால்வாய் நீர்ப் பங்கீடு, நீர்ப்பாசன உரிமை, நிலச் சொத்துரிமை, உயர்மதிப்பை அடையப் போட்டி, மண விழாக்களினால் பூசல்கள்,

[1] வில்லியம் காப், L. L. காப், 'இந்தியாவில் இந்துப்பண்பாடு, பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம், ப. 47.

[2] B. வெங்கடப்பையா, 'பழமைச் சமுதாயத்தின் சில சமூக மாற்றப் பிரச்சினைகள் — 'மாறிவரும் இந்தியா' (Changing India) என்ற நூலில் ப. 310.

பஞ்சாயத்துத் தேர்தல், உயர் சாதித் தன்மையைப்பெற போட்டியிடுதல் போன்ற காரணங்களினால் சாதிக் கும்பல்களிடையே கருத்துவேறுபாடு ஏற்பட்டு தன்னல வகுப்பினர் (Faction Society) தோன்றுகின்றனர். திரு. பல்ஜித்சிங் குறிப்பிடுவது போல் "இவ்வகுப்பினர் எந்த ஒரு புதுக் கருத்தையும், மாற்றத்தையும் விரும்புவதில்லை. ஏனெனில் மாற்றத்தினால் போட்டியாளர்கள் சாதகமான நிலையைப் பெற்றுத் தங்களைவிட உயர்நிலைக்குச் சென்று விடுவார்களென்று உயர்தன்னல வகுப்பினர் எப்போதும் அச்சம் கொள்கின்றனர். எனவே, ஒவ்வொரு வகுப்பினரும் ஒரே நிலையில் (Status quo) இருப்பதற்காகப் போட்டியிடுகின்றனர். "இதனால் எதிர்வகுப்பினர் சீரடைந்து விடலாகாது என்று ஒவ்வொரு வகுப்பினரும் பொறாமை கொள்கின்றனர்." முன்னேற்றமே அவர்களால் விரும்பப்படுவதில்லை. ஏனெனில் அது அவர்களுக்கு நன்மையளிப்பதோடு எதிர் வகுப்பினருக்கும் நன்மையளிக்கிறது. எனவே, முன்னேற்றத்தை எந்த வழியிலாவது தடுத்துவிடவே விரும்புகின்றனர்."[1]

தன்னல வகுப்பினரால் வளர்ச்சி பாதிக்கப்படல்

பெரும்பாலான கிராமவாசிகள் தங்கள் குடும்பம், சாதிமுறை தன்னல வகுப்பு (Faction Society) ஆகியவைகளின் சட்டதிட்டங்களினால் தங்களுக்கு வேண்டிய சுய உதவிகளைப் பெறுவதற்கு முடிவதில்லை. சமுதாய வளர்ச்சித் திட்டங்களின் (Community development projects) மூலம் பொருளாதார, சமூக சீர்திருத்தத்தை மேற்கொள்ள முயற்சி செய்யப்பட்டபோதும் கிராமங்களில் மக்களிடையே சீரான உறவு பெரும்பாலும் தோன்றவில்லை. மேலும் போட்டி வகுப்பினரிடையே பூசல்கள் மேலும் அதிகரிக்கின்றன. எனவே, சாதிமுறைகளின் பல்வேறு சிக்கல்களால் இந்தியாவில் பொருளாதார வளர்ச்சி தடைபட்டுள்ளது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஆனால், சில சமயங்களில் இந்திய கிராமத்தினர் ஒத்துழைப்பையும், கூட்டுறவையும், பொது நடவடிக்கைகளையும் விரும்புபவர்களாக உள்ளனர். சான்றாக மத விழாக்களிலும், வைபவங்களிலும், கோயில் திருப்பணிகளிலும் மக்களின் ஒருங்கிணைந்த செயலும், நடவடிக்கையும் தேவைப்படுகிறது. தீவிரமாக ஆராய்ந்து பார்த்தால், இந்து சமூகத்தின் சாதி, பரம்பரை முறை போன்றவைகளால் மக்கள் ஒருமித்த முறையில் செயல்பட இயலாதவர்களாய் உள்ளனர். இதன் விளைவாகக் கிராமப் பொருளாதார வசதிகள் சீரமைக்கப்பட முடியவில்லை. பொது முயற்சிகள் மத இயல்புகளைக் கொண்டவை

1 பல்ஜித்சிங், 'கிராம இந்தியாவில் அடுத்த கட்டம்' (Next step in Village India) ப. 14.

களாக இருப்பதால் சில பொதுக் குறிக்கோள்களுக்கு மக்களிடமிருந்து முழு ஒத்துழைப்பு கிடைப்பதில்லை. சாலை அமைத்தல், கிணறு வெட்டுதல், போன்ற வசதிகளால் எல்லா சாதியினரும் பயனடைவதில்லை.

4. சாதிமுறையும் நீதிநெறியின் தனிநிலையும் (Caste and moral Aloofness)

மேற்கண்ட ஆய்வில் சமூக முறையில் ஒருபக்கம் பரிசுத்தம், அசுத்தம் ஆகிய எண்ணங்களும், மறுபக்கம் துறவு, உலக நிலையாமை, போன்ற அறநெறிக் கருத்துகளும் சிறப்பியல்புகளாக அமைந்துள்ளன என்பது விளக்கப்பட்டுள்ளது. இவ்வியல்புகளால் செயல் திறமை எந்த அளவுக்குப் பாதிக்கப் பட்டுள்ளது என்பதை இனி ஆராயவேண்டும். ஒரு சாதி அமைப்பில் மக்கள் தங்களைப் போன்ற உடன் மனிதர்களுக்கு எந்த அளவு பரிவும், பரிதாபமும், கருணையும் காட்டுகின்றனர் என்பது கேள்விக் குறியாகவே உள்ளது. சாதியும் துறவு நெறியும், மக்களிடம் நீதிநெறியில் தனிப்போக்கை (Aloofness) வளர்த்து வருகின்றன. நீதிநெறித் தனிப்போக்கென்பது மக்களின் ஒரு வகை தனி மன நிலையைக் குறிக்கிறது. தனிப்போக்கு என்பது எல்லா மக்களிடமும் சமமான நீதித்நெறித் தொடர்பை மனத்தால் உணரத் தவறும் தனிமனப்போக்காகும். மக்கள் சாதாரணமாக சில அம்சங்களில் வாக்குறுதிகளையும் பொறுப்புகளையும் செய்துவிட்டு, அதை நடைமுறையில் பின்பற்றத் தவறிவிடுகின்றனர். இத்தகைய நிலை ஏற்படுவதற்குச் சில கெட்ட குறிகளும் (Signs), கெட்ட சகுனங்களும் காரணமாகக் கூறப் படுகின்றன. நீதிநெறிச் சட்டப்படி துன்பப்படுவோருக்குத் துணை புரிய வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டும் நடைமுறையில் மக்கள் அதைப்பின்பற்றத் தவறிவிடுகின்றனர். சாதி சுத்தம், அசுத்தம் ஆகிய கருத்துகளைக் கொண்ட சமூகநிலை இல்லாமலேயே மேற்கத்திய நாடுகளில் சமதர்ம சமூக சூழ்நிலை உருவாகி யுள்ளது. ஆனால், இந்தியாவில் எல்லா மக்களிடமும் நீதிநெறிப் பண்புகளிருந்தும் சாதி முறையால்தான் மனித ஆக்கச்சக்திகளைச் சேகரித்து, ஏழ்மை, மனிதத் துன்பங்கள் ஆகியவைகளைத் தகர்த்தெறிவது மிகக் கடினமாக உள்ளது. தீண்டாதோர், பிச்சைக்காரர் போன்றவர்களின் துன்பங்களைப் பார்த்து வலுவான சமூகச் சக்திகள் பரிவு காட்டவும், வெறுக்கவும் முடிவதில்லை. இதற்குக் காரணம், நீதிநெறியின் தனிப்போக்காகும். இப்போக்கைச் சீர்படுத்த விவேகானந்தர், நேரு போன்ற இந்திய சீர்திருத்த வாதிகள் பெருமுயற்சி செய்தனர். விவேகானந்தர் குறிப்பிடுவதுபோல், "இந்தியாவில் ஏழைமக்களின் கூக்குரலை

தணித்து அவர்களின் நலனைப் பேண எத்தனை தர்ம சங்கங்கள் இருக்கின்றன? நாம் மனிதர்கள்தானா? அவர்களின் ஜீவனத்திற்கும், சீரமைப்பிற்கும் நாம் என்ன தொண்டு செய்துள்ளோம்? நாம் அவர்களைத் தொடுவதில்லை. அவர்களின் கூட்டத்தை தவிர்க்க முயற்சிக்கிறோம்! நாம் மனிதர்கள்தானா?'' விவேகானந்தர் அவர்கள் சாதிமுறையை விரும்பினார். ஆனால், நேரு அதை எதிர்த்தார். விவேகானந்தர் குறிப்பிடுவதுபோல், "சாதிமுறை மிகவும் சிறந்ததாகும். சாதியே நாம் பின்பற்ற விரும்பும் திட்டமாகும். இந்தியச் சாதிமுறை ஐரோப்பா, அல்லது அமெரிக்காவில் உள்ள சாதி முறையைவிட மிகச் சிறந்ததாக இல்லையென்றாலும் ஓரளவு சிறந்ததாக உள்ளது.'' இந்துமதம் எல்லா உயிர்களும் ஒன்றே என்ற கருத்தை வலியுறுத்தி, பிராணிகளைக் கொல்லுவதற்குத் தடைவிதித்துள்ளது. அஹிம்சைக் கொள்கையைக் காந்தியடிகள் போன்றோர் கடைப்பிடித்தற்குக் காரணமாயிருந்தது இந்துமதப் பண்பாடாகும். ஆனால், வலுவிழந்த தேவைகள் அதிகம் கொண்ட ஏழை மக்களின் வாழ்க்கையைச் சீரமைக்க இந்துமதப் பண்பாடு நடைமுறையில் தகுந்த முறையில் பயனளிக்கவில்லை. வருமானம், செல்வம், பொருளாதார அந்தஸ்து, சமூக வாய்ப்புகள் போன்றவைகளில் ஏற்றத்தாழ்வுகளை இந்துப் பண்பாடு அதிகரிப்பதற்கு காரணமாக இருந்து வருகிறது.

5. கூட்டுக் குடும்பமும் பிறப்பு வீதமும் வளர்ச்சியைப் பாதித்தல்

கூட்டுக் குடும்ப முறையினால் கிராமப் பகுதிகளில் குடும்ப உறுப்பினர்கள் குடும்ப அளவைப் பெருக்கிக் கொள்வதால் வீண் செலவு அதிகரித்துச் சேமிப்பு வீதம் குறைகிறதென்பதை ஏற்கெனவே ஆராய்ந்துள்ளோம். இந்து கலாச்சாரத்திற்கிடையே கூட்டுக் குடும்பத்தின் சமூக, பொருளாதார விளைவுகளை இனி ஆராயலாம். இந்துப் பண்பாட்டின் அடிப்படையில் கூட்டுக் குடும்பம் உருவாகி சாதிமுறை, பரம்பரைக் கொள்கை ஆகியவைகளோடு நெருங்கியதொடர்பு கொண்டுள்ளதாய் உள்ளது. கூட்டுக் குடும்பம் அதிக பிறப்பு வீதங்களை ஊக்குவித்துக் குழந்தைகளுக்கு இந்துப் பண்பாட்டைப் போதித்து, அவர்கள் அதிலிருந்து மாறிவிடாமல் தடுத்து விடுகிறது. இதன் விளைவாக இக் குடும்பத்தின் சூழ்நிலைக்கேற்ப உறுப்பினர்களும் தனித் தன்மையையும் சிறப்பியல்புகளையும் பின்பற்றுகின்றனர். இது பொருளாதார வளர்ச்சியில் சில விளைவுகளை ஏற்படுத்துகின்றது.

கூட்டுக் குடும்பப் பண்பாட்டின் நன்மைகள்

இந்துப் பண்பாட்டை அடிப்படையாகக் கொண்ட கூட்டுக் குடும்பத்தில் சில நன்மைகளும் இல்லாமலில்லை. முதலாவதாக,

உடல் நலமின்மை, வேலையின்மை போன்ற கடும் தொல்லைகளால் துன்புறுவோருக்குக் கூட்டுக் குடும்பம் ஓரளவு பாதுகாப்பை யளிக்கிறது. பொருளாதாரத்தில் இச் சமூகச் செலவுகளை (Social Costs) மேற்கொள்ளத் தக்க தகுந்த நிறுவனம் வேறு ஒன்றும் இல்லை. இரண்டாவதாக, கூட்டுத் தொழில் முயற்சிகளை மேற் கொள்வற்குத் தேவையான வளங்களை ஒன்றுசேர்க்கக் கூட்டுக் குடும்பம் தகுந்த அமைப்பாக உள்ளது. சான்றாக வேளாண்மையில் அதிகத் திறமை கொண்ட பொருளாதார நில உடைமைகளை நிலைநாட்ட இது தகுந்த நிறுவனமாக உள்ளது. மக்கட் தொகையின் அதிகரிப்பு மிதமிஞ்சியிருக்கும் சூழ்நிலையில் உற்பத்தியை அதிகரிக்க இம் முறை வாய்ப்பளிக்கிறது. சிறிய, துண்டாடப்பட்ட நில உடைமைகள் கூடிய மட்டும் ஒன்று சேர்க்கப்பட்டுக் கூட்டாக வேளாண்மை நடவடிக்கைகளை மேற் கொள்ள முடிகிறது. மூன்றாவதாக, கூட்டுக் குடும்பத்தில் எல்லா உறுப்பினர்களின் ஊதியங்களும் ஒன்று சேர்க்கப்பட்டு இந்துப் பண்பாட்டில் அனுமதிக்கப்பட்டுள்ள தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கேற்ப ஒவ்வொருவருக்கும் வசதிகள் பங்கிடப்படு கின்றன.[1]

கூட்டுக் குடும்பப் பண்பாட்டின் தீய விளைவுகள்

கூட்டுக் குடும்பப் பண்பாட்டின் எதிர் விளைவுகளால் பொரு ளாதார வளர்ச்சி பெருமளவில் பாதிக்கப்பட்டுள்ளது. சான்றாக இக் குடும்பப் பழக்க வழக்கங்களால் ஆண் குழந்தைக்கு அதிக செல்வாக்கும், இளமைப் பருவத்திலேயே மணமுடிக்கும் பழக்கமும், மலடிகளுக்குக் குறைந்த சமூக அந்தஸ்தும், அளிக்கப்படுவதால், பிறப்பு வீதம் மிகவும் அதிகரிக்கிறது. இதன் விளைவாகத்தான் மிக விரைவாகவும், அதிக எண்ணிக்கையிலும் குழந்தைகளைப் பெற வேண்டுமென்று மக்கள் ஊக்குவிக்கப் படுகின்றனர். குழந்தைகளை வளர்க்கத் தேவையான பொருளாதாரச் செலவுகளால் மேற் குறிப்பிட்ட விளைவு தடுக்கப்படுவதில்லை. ஏனெனில், கூடுதல் குழந்தைகளால் ஏற்படும் சுமை அதைப் பெற்றோரின்மேல் மட்டும் விழாமல் கூட்டுக் குடும்ப அங்கத்தினர் அனைவரின் மேலும் விழுகிறது.[2] கிராமக் கூட்டுக் குடும்பத்தில் அதிகமான குழந்தை களைப் பராமரித்து வளர்ப்பது மதியீனம் என்று கருதப்படுவதில்லை. அதிகப் பிறப்பு வீதத்தால் குடும்பத்தின் சராசரி வாழ்க்கைத்தரம்

[1] வில்லியம், காப், L. L. காப், "இந்தியாவின் இந்து கலாச்சாரம், பொரு ளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்" ப. 56.

[2] கிங்லி டேவிஸ், (Kingly Davis), "வளர்ச்சியுறுப் பகுதிகளில் அதிகப் பிறப்பு வீதத்தை ஏற்படுத்தும் நிறுவன அமைப்பு", வளர்ச்சி குறைந்த பகுதிகள் என்ற நூலில் ப. 88-95.

குறைந்துகொண்டே சென்றாலும் உறுப்பினர்கள் அதிகக் குழந்தைகளை விரும்புகின்றனர். ஏனெனில் அவர்களிடம் நிலத்திலோ அல்லது வேறு துறையிலோ முதலீடு செய்வதற்கு வசதியும் வாய்ப்பும் இல்லை. குழந்தைகளே அவர்களின் சக்திக் கேற்ற முதலீடாக இருக்கின்றனர். "பிள்ளைக் கனியமுதே! பேசும் பொற்சித்திரமே! அள்ளி அணைத்திடவே—என் முன்னே ஆடி வருந்தேனே!" என்றெல்லாம் குழந்தைகளைப் பேரார்வத்துடன் வளர்த்துப் பெரியவர்களாக்கி வயதடைந்த காலத்தில் மக்கள் தங்களுக்குப் பாதுகாப்பு ஏற்பட வகைசெய்து கொள்கின்றனர் என்று K. H. பார்சன் அவர்கள் குறிப்பிடுகிறார்.

புலனாகா வேலையின்மை அதிகரித்தல்

குழந்தை வளர்ப்பிற்காகச் செலவிடுவது இரு வகைகளில் முதலீடாகக் கருதப்படுகிறது. முதலாவதாகக் குடும்பத்தின் உண்மைச் சேமிப்பை இது குறைத்து, நுகர்ச்சியின் அளவையும் குறைத்துவிடுகிறது. இரண்டாவதாக, தொழிலாளர்களின் அளிப்பை அதிகரித்து உற்பத்தியை அதிகரிக்க முயற்சிக்கிறது. ஆனால், உண்மையில் அவர்களுக்குப் போதிய வேலை வாய்ப்புகள் கிடைப்பதில்லை இதன் விளைவாக வேலையின்மையும் வேலைக் குறைவும் அதிகரிக்கின்றன. ஒரு விவசாயி ஏராளமான குழந்தைகளை வளர்ப்பதோடு கால்நடைகள் போன்ற ஆக்க உள்ளீடுகளிலும் முதலீடு செய்ய வேண்டியுள்ளது. எனவே அதிகப் பிறப்பு வீதம், குறைந்த இறப்பு வீதம், விரைவான மக்கட் தொகைப் பெருக்கம் ஆகியவைகள் மக்கட் தொகை அம்சங்களில் முதலீட்டை அதிகரித்து வளர்ச்சி நடவடிக்கைகளைப் பாதிக்கிறது. ஏனெனில் ஏராளமான சேமிப்பும் மூலதனமும் மக்கட் தொகை அம்சங்களில் வீணடிக்கப்படுகிறது. ஆக்கத்திற்குப் பயன்படாத ஏராளமான குடும்ப உறுப்பினர்கள் அதிகரிப்பதால்தான் கிராமங்களில் புலனாகா வேலையின்மை (Disguised unemployment) பெருகி வருகிறது.

ஆடம்பரநுகர்வு அதிகரித்தல் (Ostentatious Consumption)

கூட்டுக் குடும்பத்தின் பண்பாட்டுப் பழக்கவழக்கங்களால் தேசத்தின் உபரி வளங்கள் (Potential Surplus) ஆக்கத்திற்காக முழு அளவில் பயன்படுத்தப்படாததால் பொருளாதார வளர்ச்சி வீத அதிகரிப்பு தடைசெய்யப்பட்டு விடுகிறது. சான்றாகச் செலவு மிக்க மணவிழாக் கொண்டாட்டங்கள், வரதட்சணைகள் (சீதனம்), மரண விருந்துகள், ஆபரணங்கள், தங்கம், வெள்ளியைப் பதுக்கி வைத்தல் போன்ற ஆடம்பரச் செயல்முறைகளால் நாட்டின் ஏச்சவளங்கள் வீணடிக்கப்படுகின்றன. பரம்பரைப் பண்பாட்டை

அடிப்படையாகக் கொண்ட இப் பழக்கவழக்கங்களால், காலமும், பணமும் வீண்விரயமாக்கப்படுவதால் கீழ்க்கண்ட விளைவுகள் தோன்றுகின்றன. சேமிப்புப் பெருக்கம் குறைக்கப்பட்டு உபரி மூலதன வளங்கள் ஆக்கப் பயன்களிலிருந்து ஆக்கத்திற்குப் பயன்படாச் செயல்முறைகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றன. எனவே, இத்தகைய ஆடம்பர நுகர்வைத் தடுக்கத் தகுந்த சட்டத்தையும் ஏற்படுத்தலாம் என்று திரு. K. நாயர் குறிப்பிடுகிறார்.

6. இந்துப் பண்பாட்டினரின் தனித்தன்மை (The Hindu Personality)

பண்பாட்டு வளர்ச்சியின் போது ஒரு குழந்தை அப் பண்பாட்டின் இயல்புகளை இயல்பாய் அடையப்பெற்று என்னென்ன தனித் தன்மைகளை வளர்த்துக் கொண்டு இந்துப் பண்பாட்டின் இயல்புகளைப் (Traits of the Hindu Personality) பெற்றவனாக விளங்குகிறான் என்பதை இனி ஆராயவேண்டும். ஏனெனில் அப்போதுதான் இத் தனித்தன்மை எவ்வாறு வளர்ச்சியைப் பாதிக்கிறது என்பதையும், புத்தாக்கர்கள் தோன்றுவதைத் தடைசெய்கிறது என்பதையும் அறியமுடியும். சில வெளிப்படைப் பண்பாடுகள், சில தனித் தன்மைகளின் இயல்புகளை ஏற்றுக் கொண்டும், மற்றவைகளை ஒதுக்கித் தள்ளியும் படிப்படியாக வளர்ச்சியடைகின்றன. எனவே, இதன் விளைவாகச் சில பண்பாடுகள் மாறுபட்டும், சுயதன்மை கொண்ட தனி இயல்புகளைப் பெற்றும் தோன்றுகின்றன.[1] இதேபோன்று இந்துப் பண்பாட்டினரிடம் சில முக்கியமான தனிச் சிறப்பியல்புகள் காணப்படுகின்றன. அவைகளாவன: தனியொருவன் ஒரு குடும்பப் பண்பாட்டின் சிறப்பியல்புகளில் மூழ்கடிக்கப்பட்டு அவ் வகுப்பினரால் உருவாக்கப்பட்ட (Group-Directed) பண்புகள், ஆர்வங்கள், ஆகியவைகளை இயல்பாகவே தன்னிடம் அமையப் பெற்றுவிடுகின்றான். வகுப்பினராலேயே தனியொருவனின் ஆர்வங்கள் உருவாகின்றன. அவ் வார்வங்களை அவன் பூர்த்தி செய்யத் தவறினாலும் பீதியடைவதில்லை. இத்தகைய வகுப்பு ஆர்வங்களாலும், பரம்பரைப் பண்பாடுகளாலும் கட்டுப்படுத்தப்பட்ட தனியொருவன், மேற்கத்திய தனிபொருவனைக் காட்டிலும் அதிகமாகக் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவரப்படுகிறான். இஸ்லாம், கிருத்தவம் போன்ற மதங்களைப் பின்பற்றி வருபவர்களும் தங்கள்மதக் கட்டுப்பாட்டால் முழுச் சுதந்திரத்துடன் செயல்பட முடியவில்லை.

[1] K வில்லியம் காப், L. L காப், இந்திய இந்துப் பண்பாடு, பொருளாதார வளர்ச்சி பொருளாதாரத் திட்டம்.' ப. 58,

இந்துப் பண்பாட்டால் சுயவளர்ச்சி தடுக்கப்படல்

பரந்த குடும்பப் பண்பாடானது பல்வேறு உறுப்பினர்களால் பன்னெடுங்காலமாகப் படிப்படியாக வளர்ச்சியடைகிறது இதன் விளைவாகப் பெரிய குடும்பத்தின் அநேக உறுப்பினர்களிடையே குடும்பப் பற்று பரவலாக்கப்படுகிறது. இதனால் ஒரு குடுபத்தில் உள்ள குறித்த நபரைச்சுலபமாக இனமறிந்து கொள்ள முடிவதில்லை என்று I. கார்வே (I. Karve) அவர்கள் குறிப்பிடுகிறார். எனவே, பெரிய குடும்பத்தில் பொதுவான போக்கு (Impersonal System) இயல்பாகவே உருவெடுத்து விடுகிறது. வலுவற்ற அடிப்படையும், இனமறியவும் பின்பற்றவும் வகையில்லாத தனித் தன்மையும் இந்துப் பண்பாட்டில் அமைந்திருப்பதால், இந்துக் குழந்தை முதிர்ந்த வளர்ச்சியடைய முடியாமல் தடுக்கப்பட்டு விடுகிறது என்று திரு. D. நாராயண் அவர்கள் குறிப்பிடுகிறார். இத்தகைய கூட்டுக் குடும்ப முறையின் குறைபாடுகள் மற்ற மதங்களைப் பின் பற்றுவோரிடமும் காணப்படுகிறது.

சார்புமனப்பான்மையின் விளைவுகள் (Effect of Dependency Complex)

தந்தையைத் தலைவராகக் கொண்ட குடும்ப அமைப்பில் நிரந்தர வாழ்க்கை, பாதுகாப்பு உணர்வு உறுதியாக்கப்படுவதால் குடும்ப உறுப்பினர்கள் மற்றவர்களின் உதவியை நம்பியே வாழ்வதற்கு ஊக்குவிக்கப்படுகின்றனர். இந் நடத்தைப் பாங்கு குழந்தைப் பருவத்திலிருந்து பிற்கால வாழ்வுவரை படிப்படியாக வளர்ந்து, இந்துப் பண்பாட்டுத் தனித் தன்மையின் (Hindu Personality) ஒரு முக்கியப் பகுதியாக அமைந்துவிடுகிறது. இதன் விளைவாகக் குடும்பத்தின் ஒவ்வொருவருக்கும் குழந்தைப் பருவத்தைப் போலவே கடைசிவரைக்கும் மற்றவர்களின் துணையையே எதிர் பார்க்கும் சார்பு மனப்பான்மை (Dependency Complex) இயல்பாகவே அமைந்துவிடுகிறது. மேலும், இச் சார்பு மனப்பான்மை மக்களிடையே வேறு உதவியின்மை என்ற உணர்வினாலும் வலுப்பெறுகிறது என்று W. S டெய்லர் குறிப்பிடுகிறார். இச் சார்பு மனப்பான்மைக் கருத்து மக்களிடையே தோன்றும் அநேக திகைப்பூட்டும் மனவியல் சமூகவியல் அம்சங்களின் போக்கைத் தெளிவாய் அறிய முடிகிறது. இது வெளி உதவியை, உறுப்பினர்கள் சார்ந்து வாழ வேண்டியதன் காரணங்களையும் உணர்த்துகிறது. மற்றவர்களை நம்பி வாழும் முறை உடைக்கப் பட்டுவிட்டால், இந்து ஒருவனின் மனத்தில் எத்தகைய உணர்ச்சி வேகம் தோன்றுமென்பதை நாம் யூகித்துப் பார்த்துக்கொள்ளலாம் எதிர்பார்க்கும் உதவி அளிக்கப்படாமல் பாதுகாப்பும், சார்பு நிலையும், மறுக்கப்பட்டால் இந்து மனத்தில் மனக்கசப்பு, கோபம்,

அதிக மனக்கிளர்ச்சி போன்றவைகள் ஏற்படுவது இயற்கையாகும். எல்லாவற்றிற்கும் மேலாகச் சார்பு மனப்பான்மையால் ஒரு குழந்தையோ, இளைஞரோ விரைவாக முழுவளர்ச்சிக் கட்டத்தைத் தனித் தன்மையுடன் அடைய முடியாது. சார்பு மனப்பான்மையின் தீய விளைவுகள் மற்ற மதங்களிலும் காணப்படுகின்றன.

## இந்துப் பண்பாட்டின் சார்பு மனப்பான்மை பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கும் முறைகள் (Dependency Complex affecting (Economic Development)

பரம்பரைப் பண்பாட்டுச் சமூகத்தில் சார்பு மனப்பான்மைக் கருத்து, பொருளாதார வளர்ச்சியை மூன்று வகைகளில் பாதிக்கிறது. முதலாவதாக, சார்பு மனப்பான்மைக் கருத்து, இந்திய கிராமத்தினர் சுய உதவியைக் காட்டிலும் வெளியுதவியையே நம்பி வாழ்வதன் காரணத்தைத் தெளிவாக விளக்குகிறது. ஆங்கிலேயர் காலத்தில் மாவட்ட உள்ளாட்சி நிர்வாகத்தையே நம்பிக் கிராமத்தினர் வாழ்ந்து வந்தனர். இன்றும் கிராமத்தினர் சுய உதவியைச் சார்ந்திராமல் சமுதாய வளர்ச்சித் திட்டங்கள், தேசிய விரிவாக்கப் பணிகள், கூட்டுறவுத் துறை போன்ற நிறுவனங்களையே எப்போதும் நம்பி வாழ்கின்றனர். சார்பு மனப்பான்மை வளர்ச்சியடைந்து விடுவதால் மக்களிடையே சுயச் சார்பு, சுய நம்பிக்கை, சுய ஆற்றல் (Initiative) போன்ற வளர்ச்சிக்கு அடிப்படையான நல்லியல்புகள் உருவாவது தடுக்கப் பட்டு விடுகிறது.

இரண்டாவதாக, சார்பு மனப்பான்மையும், குடும்பத்தின் பண்பாட்டில் மூழ்கடிக்கப்படும் இயல்பும், தனியொருவனின் எல்லாச் செயல் முறைகளிலும், சுய தொழில் முயற்சிகளிலும் பிரதிபலிக்கிறது. வகுப்புப் பண்பாட்டின் உணர்வே ஒருவனின் நடவடிக்கைகளில் ஆழமாகப் பதிந்து விடுவதாலும், பாதுகாப்புப் பெற்றிருக்கும் எண்ணமும் அவனை ஒரு நிறுவனத்தில் நேர் தொடர்பு கொண்டு பொறுப்புகளை நிறைவேற்றவிடாமல் செய்து விடுகிறது. பொதுவான நிறுவனத்திற்காக ஒழுக்கம், காலந் தவறாமை, ஒழுங்குமுறை, துல்லிய நடவடிக்கை போன்ற இயல்புகளை மக்கள் பின்பற்றாமல் தங்கள் பண்பாட்டுச் செருக்கையும், சகிப்பின்மையையும் மேற்கொள்கின்றனர்.

மூன்றாவதாக, சார்பு மனப்பான்மைக் கருத்து மக்கள் பழமைப் பரம்பரைப் பண்பாட்டைக் கொண்ட (Tradition-bound) ஆர்வங்களையும் குணங்களையும் பெற்றிருப்பதன் காரணத்தைத் தெளிவாக வெளிப்படுத்துகிறது. சமூகத்தில் குறிக்கோள்

களும், நடத்தைப் பாங்குகளும், பரம்பரைக் கலாச்சாரத்தை அடிப்படையாகக் கொண்ட வகுப்புப் பழக்க முறைகளாலேயே கட்டுப்படுத்தப்படுகின்றது; தனியொருவனின் தேவைகள், விருப்பங்கள், குறிக்கோள்கள் ஆகியவைகளால் இல்லை என்பது கவனிக்கத் தக்கதாகும். இதன் விளைவாக தனியொருவனின் ஆர்வங்களும், பொருள் தேடும் நோக்கங்களும் தளர்ச்சியடைந்து பரம்பரைக் கட்டுப்பாடும் அடக்கு முறையும் அதிகரிக்கின்றது. இதற்கு மாறாகத் தனியொருவனின் செயல்முறைகளுக்கு மதிப்பளிக்கும் ஒரு சமுதாயத்தில் எந்தவிதத் தடையும், அடக்கு முறையும் இல்லாததால் தனியொருவன் தன் குறிக்கோள்களை அடைய முடிகிறது. இதனால் சமுதாய மாற்றமும் பொருளாதார வளர்ச்சியும் மேலோங்குகிறது. ஆனால், பரம்பரைப் பண்பாட்டின் அடிப்படையில் உருவாகும் சார்பு மனப்பான்மையாலும், தனியொருவனின் குறிக்கோள் அடக்கி ஒடுக்கப்படுவதாலும், சமூக மாற்றமும், பொருளாதார வளர்ச்சியும் தோன்ற வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது. இப் பண்பாட்டின் விளைவாகச் சமூகம் பழமைப் போக்கிலேயே எவ்வித மாற்றமுமின்றி நிலையாக இருந்துவிடுகிறது. இதனால் இச் சமூகத்தில் புத்தாக்கர்கள் (Innovators) உருவாவதில்லை. மேற்குறிப்பிட்ட எல்லாக் காரணங்களாலும் இந்துப் பண்பாட்டின் தனித் தன்மை, (Hindu Personality), புத்தாக்கர்களைத் தோற்றுவிப்பதற்குப் பதிலாகப் பழமைப் போக்குடையவர்களையே (Tradition-Oriented Persons) தோற்றுவிக்கிறது.

பழமைக்கும் புதுமைக்குமிடையே முரண்பாடு

பல்வேறு மதங்களின் பண்பாடும் சமூகங்களும் முரண்பாடுடைய மாறுபட்ட சக்திகளுக்கிடையே அகப்பட்டுத் தடுமாற்றம் அடைந்து வருகின்றன. அதாவது பழைய பரம்பரைப் பண்பாட்டுச் சக்திகள், நவீன மயத்தின் சக்திகள் ஆகிய இரண்டிற்குமிடையே பிணக்கம் ஏற்பட்டு நிலைமை மிகச் சிக்கலாக உள்ளது.

பழமைப் பண்பாட்டுச் சக்திகள், காலச்சுழற்சி, காரண காரியத் தொடர்பு, மறுபிறப்பு நம்பிக்கை, கர்மவினை, தன்னலமற்ற நெறி முறைகள், தியாகம், துறவு, எல்லாவற்றிற்கும் தெய்விக சக்தியை நம்புதல், சாதிமுறை வலுப்பெறல், தீண்டாதோரின் துன்பநிலை, கூட்டுக் குடும்பத்தின் அமைப்பு, பரம்பரைப் பண்பாட்டுத் தனித் தன்மை (Traditional Personality) ஆகியவைகளில் பிரதிபலிக்கின்றன.

நவீன மயத்தின் சக்திகள் எல்லோருக்கும் வாக்குரிமையளித்தல் (Universal suffrage), நிலச் சீர்திருத்தங்கள், தொழிலுற்பத்தி

யில் முதலீட்டை அதிகரிக்க வகை செய்தல், கல்வி வசதிகள், நீர்த் தேக்கங்கள், நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்துதல், நிர்வாகச் சீர் திருத்தங்கள், பின் தங்கிய சாதியினருக்குச் சிறப்புச் சலுகைகளை அளித்தல் போன்ற பல்வேறு செயல் நடவடிக்கைகளில் உறுதிப் படுத்திக் காட்டப்பட்டுள்ளன. காலப் போக்கில் எந்தெந்த நவீன சக்திகள் வலுப்பெற்றுப் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த முடியுமென்பது கேள்விக் குறியாக உள்ளது.

விடுதலையும் பண்பாட்டு மாற்றமும்

இந்தியாவிற்கு விடுதலை கிடைத்த பின்பு, அது தன் அரசியல் பொருளாதாரக் கொள்கைகளை வகுத்துத் தேசியப் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்த முயற்சிகள்மேற்கொண்ட போதும்இந்துப் பண்பாட்டின் அடிப்படையில் ஆழமாகப் பதிந்துள்ள வளர்ச்சி யின் இடர்ப்பாடுகளால் எதிர்பார்த்த அளவு வெற்றி கிடைக்க வில்லை. விடுதலைப் போராட்ட இயக்கம் இந்துப் பண்பாட்டின் மேல் எந்தவித விளைவையும் ஏற்படுத்தாமல் பழைய மதப் பண்பாட்டின் போக்கிலேயே விட்டுவிட்டது வருந்தத்தக்கதாகும். விடுதலைப் போராட்டம் ஒரு விளைவை ஏற்படுத்தியிருக்கும் என்று எண்ணினால் அது பரம்பரைப் பண்பாட்டு மயத்தின் சக்திகளைத் தளர்ச்சி யடையச் செய்யாத நாட்டுப்பற்றை மக்களிடையே பரவலாக்கி யிருப்பதுதான். இந்து மதப் பண்பாடு தேசிய விடுதலையில் ஆர்வத்தைத் தோற்றுவித்திருந்தாலும், தற்காலத்திய பிரச்சினை களைத் தீர்ப்பதற்கு அது ஒரு சிறந்த அமைப்பாக விளங்க முடியாது. E. ஷில்ஸ் (Shils) என்பவர் குறிப்பிடுவது போல், ''பழைய பண் பாட்டில் பொதுக் கருத்துகள், தெளிவற்ற இயல்புகளும், குறிக் கோள்களுமே பெருமளவில் அமைந்துள்ளன. இவைகளை அரசியல் வாதிகளிடமிருந்து சுலபமாக நீக்கிவிட முடியாது. பொருளாதார நிறுவனங்கள் செயல் திறமையுடன் செயலாற்றுவதற்குப் பழமைப் பண்பாடு, பெருமளவில் வகை செய்வதில்லை.'' 1

எல்லோருக்கும் வாக்குரிமை அளிப்பது சமூக மாற்றத்தை ஏற்படுத்துவதுவதற்கு மிகச் சக்தி வாய்ந்த கருவியாகப் பயன்படு கிறது. இந்தியாவில் இத்தகைய ஒரு கருவியும் பல்வேறு வகுப் பினரிடையே ஏற்படும், மனக்கசப்பு, சாதி, மத நம்பிக்கை பேதம், பிரிவினைச் சக்திகள் போன்ற பல்வேறு காரணங்களால் தீவிரமாக பாதிக்கப்பட்டுத் திறமையுடன் செயல்பட முடியவில்லை. வகுப்பு வாதங்களும், உணர்ச்சி வேகங்களும் சமூக மாற்றத்தின் செயல் முறைகளின் போது தடுக்க முடியாதவைகளாய் உள்ளன. சாதி

1 E ஷில்ஸ், 'வளரும் சமுதாயத்தில் அறிவாளியின் பங்கு' (Role of The intellectual in a developing Community), ப. 9.

முறையானது, ஒருங்கமைக்கப்பட்ட சமுதாயம், சுய ஆற்றல் கொண்ட பொருளாதார வளர்ச்சி ஆகியவைகளை அடைய வேண்டுமென்ற குறிக்கோளுக்குப் பெரும் தடையாக உள்ளது. இந்தப் பண்பாட்டின் தலையாய கருத்தாகிய (Core of Hindu Culture) உலக நிலையாமையும் இவ்வுலகில் மனிதனின் செயல்களும், நவீன மயத்திற்கும், சாதிப் பற்றற்ற நிலைக்கும் பெரும் இடையூருக உள்ளன. காலச் சுழற்சி, காரணகாரியத் தொடர்பு, தெய்வப் பற்றுப் போன்ற இந்துப் பண்பாட்டின் அடிப்படைக் கருத்துகள் விஞ்ஞான சிந்தனை, மதப் பற்றற்ற சமுதாயம் ஆகியவைகளுக்கு முரண்பாடாக உள்ளன. மேற்கத்திய நாடுகளில் கடந்த நூற்றுண்டுகளில் அறிவாற்றலுடைய வேளாண்மை, தொழில், புரட்சிகள் தோன்றுவதற்கு அடிப்படையாக இருந்த மத, அரசியல், விஞ்ஞான, புத்தாக்கத் தொழில் நுட்ப முன்னேற்றங்கள் இந்தியாவில் ஒருபோதும் ஏற்படவில்லை. [1]

சமூக-பண்பாட்டு மாற்றத்தின் அவசியம்

இந்தியாவில் மத, சமூகச் சீர்த்திருத்த நடவடிக்கைகள் சாதி, மத பூசல்களைப் போக்குவதில் முழு வெற்றி பெறவில்லையென்பது வெளிப்படையாகும். சான்ருக, காந்தியடிகளின் தீண்டாமை எதிர்ப்போ அல்லது தீண்டாதோருக்கு அளிக்கப்பட்ட அரசியல் சட்டத் தனிச் சலுகைகளோ அல்லது நேருவின் சாதிமுறைத் தடுப்போ, மக்களின் மனப் போக்கிலும் சிந்தனையிலும் இதுவரை தீவிர விளைவுகளை ஏற்படுத்தவில்லை. பொருளாதார வளர்ச்சிக்குத் தேவையான மதப் பற்றற்ற நிலையை ஏற்படுத்தக் கால சுழற்சி, காரண காரியத் தொடர்பு போன்ற பல்வேறு கருத்துகளையும் சட்டங்களையும் ஒழித்துக்கட்ட வேண்டியது இன்றியமையாததாகும். இத்தகைய பழமைக் கருத்துகளை எந்த அளவுக்கு ஒழித்துக் கட்டுகிறோமோ அந்த அளவுக்கு நவீன மயத்தையும், சாதி மதப் பற்றற்ற நிலையையும் மேம்படுத்த முடியும். இவ்விரண்டு கருத்துகளும் மேடைப் பேச்சுகளாகவே இருந்து விட்டால் மக்களின் சமூகம்பண்பாட்டு நிலை நவீன காலத்திற்கேற்ப மாற்றமடையாமல் தேக்கம் பெற்று விடும். இந்தியாவின் அரசியல் வாதிகள், சமூகச் சீர்த்திருத்த தலைவர்கள், மக்களுக்கு உண்மைச் சமூக நிலையை எடுத்துணர்த்தி, அதன் மூலம் இந்துப் பண்பாட்டின் பழமைக் கருத்துகளுக்கு மறு விளக்கமும், மறு உருவமும் அளித்து சமூக-பண்பாட்டு மாற்றத்தை (Socio-Cultural Change) மக்களிடையே ஊக்குவிக்க வேண்டும்.

1 L. L. காப், வில்லியம் காப், 'இந்திய இந்து பண்பாடு, பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்'. ப. 62.

## பண்டைப் பண்பாட்டைச் சீரமைக்கும் அறிவுசார் தலைவர்களின் தேவை

மேற்கத்திய நாடுகளில் லூதர், கால்வின், கலீலியோ, நியூட்டன், போன்ற மத அல்லது அறிவுசான்ற சீர்த்திருத்த வாதிகள் உலகத்திற்கு நவீன விளக்கங்களை அள்ளிக் கொடுத்ததைப் போல் இந்தியாவில் ஒருவரும் தோன்றவில்லை. பழைய பரம்பரைக் கருத்துகளால் கட்டுண்ட பண்பாட்டைக் கொண்ட சமுதாயத்தை ஒரு நவீன சமுதாயமாக உருவாக்கி மாற்றமடையச் செய்ய அத்தகைய ஒரு மறு விளக்கம் மிகவும் இன்றியமையாததாகும். எத்தகைய ஒரு மாற்றத்தைத் தேர்ந்தெடுப்பது அல்லது எதிர்ப்பது என்பதைக் கண்டறிவது இந்தியாவில் மிகவும் கடினமாக உள்ளது. பல்வேறு வகையான மாற்றங்களின் மூலம் பழமைப் போக்கின் கருத்துகளைத் தேர்ந்தெடுத்து அல்லது விலக்கி, சமூக வளர்ச்சி நடவடிக்கைகளைத் தொடர்ந்து மேற்கொள்ள வேண்டியுள்ளது. பழமைக் கருத்துடையவர்கள் பழைய பண்புகளை உயிர்ப்பிக்க விரும்பிய போது நேரு, "மதச் சடங்குகளால் சூழப்பட்ட பழைய பண்பாட்டில் நாம் வாழ முடியாது என்றும், பழமை, புதுமை ஆகிய இரண்டிலும் உள்ள நல்லியல்புகளை ஒன்றுசேர்க்க வேண்டும்" என்றும் முழக்கமிட்டார். இந்தியா, பழமையிலும் புதுமையிலும் என்னென்ன நல்லியல்புகள் காணப்படுகின்றன என்பதை ஆராய்ந்து, அவற்றில், வளர்ச்சிக்கு உகந்தவைகளை இன்னும் நடைமுறைப்படுத்த வேண்டிய நிலையில் உள்ளது. இந்தியாவின் அறிவுசார்ந்த தலைவர்கள் பழமைப் பண்பாட்டைப் புதிய வாழ்க்கை முறையுடன் ஒருங்கிணைக்க வழி முறைகளைக் கண்டறிய வேண்டும். இத்தகைய செயல் முறைகள் தொல்லை மிகுந்தவைகளாய் இருந்த போதிலும் அவைகள் ஆக வளர்ச்சிக்கு இன்றியமையாதவைகளாதலால் பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க இந்தியா இத்தகைய சமூக இடர்ப்பாடுகளைத் தகர்த்தெறிந்து நவீன மயம், சாதிப் பற்றற்ற நிலை ஆகிய நவீன நாகரிக அம்சங்களை மேம்படுத்த அரும்பாடுபட வேண்டும். தலைவர்களும், "பழையன கழிதலும், புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" என்ற முதுமொழிக்கொப்ப பழைமைக் கருத்துகளை மக்கள் மனத்திலிருந்து மறக்கச் செய்து, புதுமை புதுமை என்று புத்துலகத்திற்கு இந்து மக்களை அழைத்துச் செல்ல வகை செய்ய வேண்டும்.

## இந்தியாவின் தடைபட்ட வளர்ச்சிக்கான காரணங்கள்

மேற்கண்ட ஆய்வின் முடிவிலிருந்து இந்தியாவில் மிகக் குறைந்த பொருளாதார வளர்ச்சி வீதத்தை நிர்ணயிக்கும் காரணிகள் இந்துப் பண்பாடும், இந்து சமூக அமைப்புமென்பது வெளிப்படையான உண்மையாகும். மூலதன வளங்கள், அல்லது

திறனுள்ள மனித சக்தி (Skilled Manpower) ஆகியவைகளில் ஏற்படும் பற்றுக் குறையினால் மட்டும்தான் பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகள் தடைசெய்யப்படவில்லை. பரம்பரை வர்க்க ரீதியில் அமைக்கப்பட்ட சாதிமுறை, குறைந்த வளர்ச்சி ஆர்வங்கள், நீதி நெறியின் தனி நிலை (Moral Aloofness), வகுப்பு வேறுபாடு (Factionalism) போன்ற மதப்பற்றுள்ள (Non-secular) தொழில் நுட்ப வளர்ச்சியடையாத (Pre-tecnological) நிறுவனங்கள், பண்புகள் ஆகியவைகளே வளர்ச்சிக்குப் பெருந் தடைகளாய் உள்ளன. சமூக-பண்பாட்டு அம்சங்கள் (Social-Cultural elements) வளர்ச்சியை நிர்ணயிக்கும் காரணிகளாய் உள்ள தால் அவைகளைப் பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டும்போது, எப்போதும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியது இன்றியமை யாததாகும். அவ்வாறு செய்யத் தவறினால் எதிர்பார்க்கும்பொருளா தார வளர்ச்சி வீதம் தொடர்ந்து குறைந்து கொண்டே செல்லும். பொருளுற்பத்தி (Output) ஆக்கத்திறன் (Productivity) ஆகியவை களில் எதிர்பார்த்த அளவுக்கும் உண்மை அதிகரிப்பிற்கும் தொடர்ந்து இடைவெளிகள் அதிகரிக்கும். சான்றாக இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் மக்கட்தொகையின் அதிகரிப்பைக் குறை வாக மதிப்பிட்டதால் பொருள்களின் விலை அதிகரிப்பு, உணவுப் பொருள்களின் தட்டுப்பாடு, வெளிநாட்டுச் செலாவணிப் பற்றுக் குறை போன்ற பொருளாதாரச் சிக்கல்கள் அதிகரித்தன.

இந்தியாவின் சூழ்நிலைக்கேற்ற பொருளாதார, சமூக மாற்றங்கள்

இந்தியப் பொருளாதார வளர்ச்சியின் பிரச்சினைகளுக்கு நிரந்தரத் தீர்வுகாண இந்திய சமுதாய முறை, மக்களின் பரந்த உலக மனநோக்கு, தேவைக்கேற்ற சுயஆர்வங்கள், போன்றவைகள் படிப்படியான, ஆனால் முறையான மாற்றம்பெறச் செய்ய வேண்டியது தலையாய கடமையாகும். அதற்காகக் கண்மூடித் தனமான வகையில் ஏற்கெனவே நெடுங்காலமாக அல்லலுற்று வெற்றிகரமாக நவீன சமுதாயத்தை நிலைநாட்டிவிட்ட மேற்கத்திய நாடுகளையோ அல்லது சோவியத் ரஷ்யாவையோ இந்தியா அப்படியே பின்பற்றுவது மதியீனமாகும்.[1] அத்தகைய மாற்றத்தினால் தொழில் நுட்பத்திறமை பெருமளவில் அதிகரிக்க வகையேற்பட வேண்டும். விஞ்ஞான, தொழில் நுட்ப முறையில் வேளாண்மை நடவடிக்கைகளை மேற்கொள்ளச் சமூக நிறுவனங் களும் அதற்கேற்றவகையில் தகுந்த மாற்றங்களை அடைய வேண்டும். அவ்வாறில்லையென்றால் வேளாண்மைத் துறையும் உணவு உற்பத்தியும் விரைவான வளர்ச்சியைப் பெற இயலாது.

1 வில்லியம் காப், L. L. காப் இந்திய இந்துப், பண்பாடு, பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்' ப. 65.

எனவே, பேரளவு நீர்ப்பாசன வடிகால் முறைகள், நவீன போக்கு வரத்து அமைப்புகள், வெள்ளப்பாதுகாப்பு முறைகள் போன்ற நிறுவன அமைப்புகளைத் தொழில் நுட்ப ரீதியில் பயன்படுத்த மக்களிடம் ஆர்வத்தைத் தூண்ட வேண்டும். மேற்கு ஐரோப்பா, அமெரிக்க ஐக்கியநாடு, சோவியத் ரஷ்யா ஆகிய நாடுகளில் சமூக-பண்பாட்டு அமைப்பில் கடந்த காலங்களில் ஏற்பட்ட மகத்தான மாற்றங்களால் பழைய பண்பாட்டு முறைகள் தொடர்ந்து நீங்கிப் புதியப் பொருளாதார அரசியல் நிறுவன அமைப்புகள் தோன்றி யுள்ளன. இத்தகைய மாற்றங்களை நடைமுறைப் படுத்துவதில் பல்வேறு தொல்லைகள் தோன்றுகின்றன. சான்றாக இயந்திர மயத்தைப் புகுத்துதல், சிற்றளவுப் பண்ணைகளை ஒழித்தல் போன்ற நவீன முறைகள் இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் தீவிர விளைவுகளை ஏற்படுத்துகின்றன.

## தொழில் நுட்ப வளர்ச்சிக்கு முந்தைய சமூகத்தின் முன்னேற்றம்

(Progress in a Pre-Technological Society)

ஆர்வங்கள், குறிக்கோள்கள், வகுப்பாலும் பழமைப் பண்பாட்டாலும் கட்டுப்படுத்தப்படும் தொழில் நுட்பத்தை அடையாத சமூகத்தில் சமூக மாற்றம் சுலபமாக ஏற்படாது. எனவே, இந்து மதத்தின் தலையாய கருத்துகளுக்கு மறுவிளக்கம் தந்து சமூக-பொருளாதார மாற்றத்திற்கு அவைகளை உகந்தவைகளாக்கி உலகத்தின் முன்னேறிய நாடுகளின் முன் இந்தியாவும் கலாச்சார மேம்பாடும், நவீன மயமும், அரசியல், பொருளாதார சுதந்திரமும் பெற்றுத் தலைநிமிர்ந்து முன்னேறுவதற்கு வகை செய்யப்பட வேண்டும். "தொழில் நுட்ப வளர்ச்சியைப் பெறாத சமுதாயங்களில் முன்னேற்றத்தை அதிகரிக்க சமூக அம்சங்களை தெய்விகக் கருத்துகளிலிருந்தும், சமூக சீர்திருத்தங்களை அரசியல் சீர்திருத்தங்களிலிருந்தும் தெளிவாகப் பிரித்து,பொதுநிர்வாகத்தின் மூலம் ஆக்கச் செயல்முறைகளை நடைமுறைப்படுத்த வேண்டும். அவ்வாறு செய்தால் புதிய ஆர்வங்களும் நிறுவனங்களும் உருவாகி ஆக்கச் சக்தியும், தனித்திறமையும், சாதாரண மக்களிடையே பரவலாக வளர்ச்சியடையும்."[1] சமூக—பொருளாதார மாற்றத்திற்கு வகைசெய்யாத பழமைப் பரம்பரைப் பண்பாட்டை மாற்றமடையச் செய்யப் புது தொழில் நுட்பம் உருவாக்கப்படவேண்டும். டாக்டர் R. பாலகிருஷ்ண அவர்கள் குறிப்பிடுவது போல், "பண்பாடு எப்போதும் அறுந்து விடாமல்

[1] வில்லியம் காப், L L காப். 'இந்திய இந்து பண்பாடு, பொருளாதார வளர்ச்சி, பொருளாதாரத் திட்டம்" ப. 65

தொடர்ந்து வளர்ச்சியடைந்து கொண்டே செல்கிறது. எந்தப் பண்பாட்டுப் புதுமையும் தற்போது இருந்துவரும் சமூக, தனியொருவரின் ஒருங்கிணைப்பைத் தகர்த்தெறிய முடியாது. இச் சமூகத்தின் தொழில் நுட்பத் தேவைகளுக் கேற்ற வகையிலும், அதனாலேற்படும் விளைவுகளைக் கருத்தில் கொண்டும் புதுத் தொழில் நுட்ப வளர்ச்சியின் அம்சங்களை உட்புகுத்த வேண்டும். தொழில் நுட்ப வளர்ச்சியின் அம்சங்கள் பரம்பரைப் பண்பாட்டுச் சமுதாயத்தின் அமைப்புமுறைக் கொள்கைகளுடன் (Organisational Principles) பொருந்தியவைகளாக இருக்க வேண்டும்."[1]

பழமைச் சமுதாயத்தில் தொழில் நுட்ப வளர்ச்சி

தொழில் நுட்ப மாற்றத்தால் சமூகப் பண்பாட்டு மாற்றம் ஏற்படுகின்றதா அல்லது சமூகப் பண்பாட்டு மாற்றத்தால் தொழில் நுட்ப மாற்றம் தோன்றுகின்றதா என்பது பெரும் கேள்விக் குறியாகவே உள்ளது. தொழில் நுட்ப மாற்றம் ஒரு சுயதன்மை கொண்ட சுதந்திர சக்தியாக இல்லை. அது சமுதாயத்தைப் பரவலாகத் தாக்கி சில விரும்பத்தகாத எதிர்விளைவுகளைத் தோற்று விக்கிறது. சமூக எழுச்சியின் பொது நடவடிக்கையின் ஓர் அம்சமாக அது விளங்குகிறது. எனவே, அதைச் சுலபமாகச் சமுதாயத்தில் உட்புகுத்தி மாற்றத்தைத் தோற்றுவிக்க முடியாது. பரம்பரைப் பண்பாட்டுச் சமுதாயத்தை மாற்றியமைக்க மூலதனம், தொழில் நுட்ப அறிவு போன்ற வெளிநாட்டு உதவியின் மூலம், வகை செய்ய முடியுமென்பது வெளிப்படையான உண்மையாகும். இத்தகைய தொழில் நுட்ப அறிவு பரம்பரைப் பண்பாட்டைக் கொண்ட மக்களின் மனத்தில் புகுத்தப்படுவதற் கேற்ற வகையில் அமைய வேண்டும். அதேபோன்று மூலதனமும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகப் பயன்படுத்தப் படவேண்டும். "மக்களின் நம்பிக்கைகள், மனநோக்குகள் மாற்றமடையும் பொழுது செயல் முறைகள் ஒரு புறம் சமூகத்தில் பரவலாக்கப் பட்டும் மறுபுறம் படிப்படியாக மறைந்தும் உருவாகும் செயல்பாங்கு முறைதான் (Patterns of Activity) பொருளாதார வளர்ச்சியாகும்" என்று டாக்டர். R. பாலகிருஷ்ணா அவர்கள் வர்ணிக்கிறார். இத்தகைய மாற்றமுறையின்போதும், பொருளாதார வளர்ச்சியின் போதும் சில சமூக பண்புகளும், பொருளாதார முறைகளும் அழிக்கப்படாமல் பாதுகாக்கப்பட வேண்டும். சான்றாக, குடிசைத் தொழில்களும் சிற்றளவுத் தொழில்களும் நவீன தொழில்நுட்ப வளர்ச்சியால் அழிந்து போய்விடுவதினின்றும் பாதுகாக்கப்பட வேண்டும். அப்போதுதான், "பரம்பரைப் பண்பாட்டின் கலைத்

[1] டாக்டர் R. பாலகிருஷ்ணா, 'பொருளாதார வளர்ச்சியில் பண்பாட்டுப் புனராக்கம்' (Cultural Re-orientations in Economic Development)

திறன்" (Artistic Culture) அழிந்து விடாமல் இருக்க முடியும். இதனால் மூலதனப் பற்றுக்குறையுள்ள இந்தியாவில் வேலை வாய்ப்புகளையும் அதிகரிக்க முடியும். இந்தியக் கைவினைஞர்களின் (Artisars) போற்றத்தக்க கைத்திறன், வியத்தகு தொழில் ஆற்றல், சுயமுயற்சி ஆகியவைகளைக் கண்ணுற்ற போர்டு நிறுவனத்தின் பன்னாட்டுத் திட்டக்குழு (International Planning Team) அவைகள் அழிந்துவிடாமல் பாதுகாக்கப்படக் கிராமியக் கைத்தொழில்கள் (Folk Crafts) புத்துயிர் அளிக்கப்பட வேண்டுமென்று பரிந்துரைத்தது. கார்வேக் குழுவும், கைக்குத்தல் அரிசிமுறை கிராமங்களிலிருந்து மறைவதைத் தடுக்க வேண்டும் என்று ஆலோசனை கூறியது. பண்டைப் பண்பாட்டுச் சமூக அமைப்பைப் பாதுகாப்பதற்காக, இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில், குடிசைத் தொழில், சிறுதொழில்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. தமிழ்நாட்டிலிருந்தும், கையால் நூற்றல், கையால் காகிதம் செய்தல், இசைக்கருவிகள், பொம்மைகள் செய்தல், சிலவகைத்துணி உற்பத்தி செய்தல், போன்ற பரம்பரைப் பண்டை நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்ட சிறு தொழில்கள் மறைந்து வருகின்றன. எனவே, தொழில் நுட்பப் பொருளாதார மாற்றத்தின் போது மனித அம்சங்களையும் கருத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

## தொழில் நுட்ப வளர்ச்சிக்கேற்ற மனமாற்றம்

பொருளாதார வளர்ச்சி முறையின் போது பரம்பரைப் பண்பாடு நீக்கப்பட வேண்டுமென்று கருதப்பட்ட போதிலும், தொழில் நுட்ப வளர்ச்சியின்மேல் சில தடைகளை விதிக்க வேண்டும்; இதனால் அடிப்படைப் பண்பாட்டு மாற்றம் தோன்றாமல் போய்விட்டாலும் பரவாயில்லை; இல்லையென்றால் பொருளாதார வளர்ச்சியே தோன்றாது. எந்த ஒரு வாழ்க்கைச் சீர்திருத்தமும், மக்களின் வாழ்க்கை வசதிகளை அதிகரிப்பதையே அடிப்படை நோக்கமாகக் கொள்ள வேண்டும். மேலும், பண்பாட்டு மாற்றம், பொருளாதார வளர்ச்சி ஆகியவைகளின் விளைவாகப் பெற்றோர் அதிகாரத்தையும், பண்பாட்டு மேன்மையையும் தகர்த்தெறிவது அறிவுடைமையாகாது. தொழில் நுட்பத்தைப் பின்பற்றும் போது எளிமையான கருவிகளும், சிக்கலான எந்திரங்களும் ஒரு நாட்டிற்குக் கிடைக்கின்றது. எளிமையான கருவிகள் சமுதாயப் பண்பாட்டைத் தீவிரமாக மாற்றமடையச் செய்வதில்லை. ஆனால் சிக்கலான எந்திரங்களுக்குச் சமுதாயத்தில் எதிர்ப்பு ஏற்படுகிறது. இதற்குக் காரணம் பிற்பட்ட சமூக அமைப்பினால் வளர்ச்சியடைந்துள்ள மனித நெகிழ்ச்சியற்றத் (Human Rigidity) தன்மையாகும். இத்தகைய மாறாச் சமூக

நிலையைத் தடுக்க வேண்டியது இன்றியமையாததாகும். கிராமங்களில் வாழ்க்கைத்தரம் உயரச் சிறு தொழில்களிலும் தொழில் நுட்ப வளர்ச்சியை உட்புகுத்த ஊக்குவிக்க வேண்டும். தொழில் நுட்ப வேலையின்மை ஏற்படும் என்பதற்காக இந் நடவடிக்கையை மேற்கொள்ளாமல் காலம் தாழ்த்துவது கிராமங்களில் பொருளாதாரத் தேக்கத்தைத் தொடர்ந்து நீடிக்கச் செய்யும்.

பரம்பரைப் பண்பாடும் பொருளாதார மேலெழுநிலையும் (Traditional Culture and the take-off stage)

இந்தியப் பரம்பரைப் பண்பாடு விரைவான பொருளாதார, சமூக மாற்றத்தைத் தடுத்து, நாடு சுய ஆற்றலுடன் தானே இயங்கும் மேலெழுநிலையை (Take-off stage) அடைந்திட எதிரியாக அமைந்துள்ளதென்பதை மேற்கண்ட பரந்த ஆய்வு தெளிவாகப் புலப்படுத்துகிறது. மேலெழு நிலையைச் சாதிக்க உண்மைத் தேசிய வருவாயில் 10 சதவீதத்திற்கு மேல் நிகர முதலீடு செய்ய வேண்டுமென்று, W. W. ராஸ்டாவ் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இந்தியாவில் பரம்பரைப் பண்பாட்டுக் கருத்துகளாலும், நிறுவனங்களாலும், சேமிப்பும், முதலாக்கமும் குறைந்து மக்கட் தொகை எழுச்சிக்கு உகந்த வகையில் முதலீடு கணிசமான அளவில் அதிகரிக்கவில்லை, இதனால் இந்தியா இன்னும் மேலெழு நிலையைச் சாதிக்கவில்லையென்பது வெள்ளிடை மலையாகும். W. W. ராஸ்டாவ் குறிப்பிடுவதுபோல் "மேலெழு நிலையைச் சாதிக்க சமூகத்தின் பொருளாதார அமைப்புக்குள் பல்வேறு முன் நிபந்தனைகள் உருவாகவேண்டும். மேலெழு நிலையின் போது பொருளாதாரத்தைப் பரம்பரைப் பண்பாட்டு அமைப்பிலிருந்து மாற்றமடையச் செய்து நவீனப்படுத்துவோரின் சமூக, பொருளாதாரப், பண்பாட்டில் தோன்றும் மகத்தான வெற்றியைக் காண முடிகிறது. மேலெழு நிலை, சமூகத்தைத் தொடர்ந்து நவீன தொழில் நுட்பத்தை விரிவாக்க ஊக்குவிக்கிறது."[1] சமூகப் பண்பாட்டு மாற்றம் மிகவும் வேகம் குறைந்து காணப்படுவதால், உள்நாட்டு முதல் சேகரிப்பும், முதலீடும் தடைபட்டுள்ளது. இதைச் சரிக்கட்ட வெளிநாடுகளிலிருந்து நிதி உதவி பெற்று வளர்ச்சியை மேலெழச் செய்ய முயன்றாலும், சமூக சீர்திருத்தம் தகுந்த அளவு மேம்படாததால் பொருளாதார வளர்ச்சி குறிப்பிடத்தக்க வகையில் அதிகரிக்கவில்லை. வெளிநிதியுதவியைப் பெற்றுச் சமூக, பொருளாதார மாற்றத்தை அதிகப்படுத்த முயன்றாலும் பல்வேறு நிறுவன இடையூறுகளால் முழுமையான மாற்றத்தை அடைய முடிவதில்லை. அமெரிக்கப் பொருளாதாரத்தில் பொருள்சார் வளர்ச்சியின் மிகுதியால் சமூகச்

1 W. W. ராஸ்டாவ், 'பொருளாதார வளர்ச்சிக் கட்டங்கள்' ப. 58.

சீர்திருத்தங்கள் தோன்றியுள்ளன. நிறுவன மாற்றம் வெளி யுதவியையொ அல்லது வெளிக்கடன்களையோ பெறுவதினுல் மட்டுமே ஏற்பட்டுவிட முடியாது. எந்த அளவுதான் வெளி நாட்டு மூலதனத்தை முதலீடு செய்தாலும். வளர்ச்சியின் நிறுவன இடையூறுகள் (Institutional obstacles) தகர்த்தெறியப்பட்டா லொழிய விரைவான பொருளாதார வளர்ச்சியைச் சாதிக்க முடியாதென்பது திட்டவட்டமான உண்மையாகும். இந்தியா வின் குறைந்த உண்மைச் சேமிப்பை வீணுக்கிவிடாமல் நவீன மயம் (Modernisation), நிறுவனமாற்றம் (Institutional Change) ஆகியவைகளில் முதலீடு செய்தால் பொருளாதார வளர்ச்சி வீதம் கணிசமான அளவு உயரும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது.

## முடிவுரை

பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகளின் போது விரை வான வளர்ச்சிக்கு இடையூருக இருப்பது பழமைப் பண்பாட்டு முறையாகும். இரண்டாம் உலகப்போருக்குப்பின் மேற்கு ஐரோப்பா, ஜப்பான் ஆகியநாடுகளில் மிகவிரைவான பொருளா தார வளர்ச்சி தோன்றுவதற்குக் காரணமாக இருந்தது இந் நாட்டு மக்கள் தங்கள் வாழ்வைச் சீரமைக்கத் தேவையான திறனேடு நவீன பொருளாதாரத்திற்கேற்ற வளர்ச்சிக்கான சித்தம், உள்ளார்ந்த சமூக மனநோக்கு ஆகியவைகளையும் பெற்றிருந்த தாகும் என்று பால், ஜி. ஹாப்மேன் (P. G. Hoffman) குறிப் பிடுகிருர். இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் இத்தகைய அம்சங்கள் இல்லாததால்தான் ஆரம்பக் கட்டத்தில் பொருளா தார வளர்ச்சியைத் திறம்படத் தோற்றுவிப்பது கடினமாக உள்ளது. பிற்பட்ட சமூகப் பண்பாட்டு முறை தகுந்த மாற்றத்தைப் பெற்ருல்தான் இந் நாடுகளில் விரைவான பொருளாதார வளர்ச்சி யைத் தோற்றுவித்து மக்களின் வாழ்க்கை நிலையை மேம்படுத்த முடியுமென்று டாக்டர். H. W. சிங்கர் (H. W. Singer) வலியுறுத்து கிருர். இந்தியா மேற்கத்திய நாடுகளைப்போல் தாளுக இயங்கும் மேலெழு நிலையை (Take-off) அடைவதற்கு இன்னும் முட்டுக் கட்டையாக இருப்பது பிற்பட்ட பழமைப் பரம்பரைச் சமுதாயப் பண்பாட்டு முறையாகும். இந்துப் பண்பாட்டின் பிற்பட்ட கர்மவினை, துறவறம் போன்ற தத்துவங்கள் தகுந்த மாற்றத்தைப் பெற்ருலொழிய இந்தியப் பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள் குறிப்பிட்ட இலக்குகளைத் திறம்படச் சாதிக்க முடியாது. ஏனெனில் காலச் சுழற்சியும், இயல் உலக காரண காரியத் தொடர்பும், விருப்பமில்லா நடவடிக்கையும், ஆர்வத்தின் அளவும், சாதிப் பிரிவு

களும் தன்னல வகுப்பினரும், நீதிநெறியின் தனி நிலையும், கூட்டுக் குடும்பமும் பிறப்பு வீதமும், இந்துக்களின் தனித்தன்மையும், சார்பு மனப்பான்மையும், ஆகிய பல்வேறு இந்துப் பண்பாட்டின் அம்சங்கள் இந்தியப் பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கின்றன. தற்போதைய இந்தியாவிற்கு இன்றியமையாததாக விளங்குவது பண்டைப் பண்பாட்டைச் சீரமைக்கும் வலிமைபெற்ற அறிவாற்றல் மிக்க தலைவர்களாகும். இத் தலைவர்கள் இந்தியாவின் சூழ்நிலைக்கேற்ற பொருளாதார சமூக மாற்றங்களை ஊக்கத்துடனும் உறுதியுடனும் செயல்படுத்த தயக்கமில்லாதவர்களாய் இருக்கவேண்டும். அத்தகைய மாற்றம் ஏற்பட்டால்தான் இந்தியச் சமூகத்தில் தொழில் நுட்ப வளர்ச்சியையும் கடும்உழைப்பு, விடாமுயற்சி, தொழில் துணிவாற்றல் போன்ற நல்லியல்புகளையும் மக்கள் பெருமளவில் பெற்று வளர்ச்சியை மேம்படுத்த முடியும். பழமைச் சமுதாயத்திற்கேற்ற தொழில் நுட்பமுறை பரவலாக்கப் பட மக்களிடையே தகுந்த மனமாற்றம் தேவை. இம் மன மாற்றம் ஏற்படத் தகுந்த கல்வி, தொழில்நுட்பப் பயிற்சி, சுகாதார வசதிகள் போன்ற சமூக நலனை மேம்படுத்தும் அமைப்புகளில் அரசின் முதலீடு அதிகரிக்கப்படவேண்டும். இதன் விளைவாக பொருள் உற்பத்தி விரைவாக அதிகரிக்காமல் பணவீக்கம் ஏற்பட்டாலும் பரவாயில்லை. ஏனெனில் எதிர்கால விரைவான சரிசம பொருளாதார வளர்ச்சிக்கு இத்தகைய பொருளாதார சமூக மாற்றங்கள் மிகவும் அடிப்படையாக விளங்குகின்றன. சமூக எழுச்சியின் விளைவாகத்தான் நவீன சமுதாயத்திற்கேற்ற தொழில்நுட்ப உற்பத்திமுறை உயர்மேல் நிலையை அடைய முடியும். அதன்பின் இந்தியா தானாக இயங்கும் மேலெழு நிலையை அடைவதில் எந்தவிதத் தடையும் ஏற்படாது என்பது வெளிப் படையான உண்மையாகும்.

# 62. பொருளாதார வளர்ச்சியும் சமூக மாற்றமும்

## (Economic Growth and Social Change)

### சமூக நிறுவனங்களின் இயல்பும் அவைகளின் மாற்றமும்

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியின் வேகம் அந் நாட்டிலுள்ள மக்களின் சாதகமான சமூக, மனச் சார்பான காரணிகளைப் பொறுத்ததாகும். "இக் காரணிகளில் தலையாயதாக விளங்குவது வளர்ச்சிக்கான சமூகத்தின் சித்தமும், உற்பத்தியில் புதுமையும், அதிகத் திறமையும் கொண்ட உற்பத்தி முறையையும் பின்பற்ற மக்கள் தயாராக இருப்பதுமேயாகும்." வளர்ச்சி முறையின் மிக முக்கியமான அம்சம் மக்களின் மனத்தில் மாற்றத்தை ஏற்படுத்தி முற்பட்ட பழக்க வழக்கங்களையும் ஒருங்கிணைந்த அமைப்பையும் ஏற்படுத்துவதுமாகும். ராபர்ட் கார்னர் குறிப்பிடுவதுபோல் "வளர்ச்சி என்பது ஒரு மன நிலையாகும். மக்கள் தங்களுடைய இயற் பொருள் (Physical) சூழ்நிலையில் மாற்றத்தை ஏற்படுத்து முன் தங்கள் மன நிலையைப் பக்குவப்படுத்திக் கொள்ள வேண்டும். இது ஒரு வேகம் குறைந்த செயல் முறையாகும். அது பல்வேறு வகுப்பினர் (Classes), மரபினர் (Races) களுக்கிடையே உள்ள உறவில் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும். அது சமூக நிறுவனங்கள், பள்ளிகள், நீதிமன்றங்கள், சுகாதாரப் பணிகள் போன்ற அரசாங்க அமைப்பிலும் நடவடிக்கைகளிலும் சீரான மாற்றத்தை ஏற்படுத்த வேண்டியது இன்றியமையாததாகும். வளர்ச்சிக்குக் கடுமையான இடையூறாக இருந்தது நெகிழ்ச்சியை விரும்பாத சமூக அம்சம் மக்களின் பிற்பட்ட சிந்தனைப் பழக்கமும், நடத்தையுமேயாகும்.[1] எனவே, பொருளாதார வளர்ச்சிக்கு முன்கூட்டியே தகுந்த சமூக மாற்ற மேற்

[1] ராபர்ட் L. கார்னர் (Robet L. Garner) 'நான்கு அம்சங்களின் வழி காட்டிகள்' (Guideliness for Point four) 'பன்னாட்டு வளர்ச்சி ஆலோசனைச் சபை, வாஷிங்டன்,

பட்டால்தான் வளர்ச்சியின் தடைகளும், முட்டுக் கட்டைகளும், இடையூறுகளும் தாமாகவே மறைந்துவிடும். மூன்றும் ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதும் இக் கருத்தையே வலியுறுத்துகிறது. "கடைசியாகப் பொருளாதார வளர்ச்சி என்பது நல்ல முடிவைப் பெறுவதற்கு ஒரு சாதனமாக அமைந்திருப்பதாகும். சாதி, மத வகுப்பு, பேதமில்லா ஒரு சமுதாயத்தின் பரந்த தியாகம், பெரு முயற்சி ஆகியவைகளின்மூலம் நாட்டில் உள்ள எல்லோருக்கும் வளர்ச்சிக்கான முழு வாய்ப்பையளித்துத் தேசிய நலனுக்காகப் பாடுபடுவதே பொருளாதார வளர்ச்சியின் தலையாய குறிக்கோளாகும்."

சமூக மாற்றம் (Social Transformation)

பொருளாதார வளர்ச்சியின் முடிவாகவும் சாதனமாகவும் (Ends and Means) விளங்குவதே சமூக மாற்றமாகும். ராக்னர் நர்க்ஸ் குறிப்பிடுவது போல், "மூலதனமென்பது சமுதாயத்தின் சிந்தனை, மற்ற நடவடிக்கைகள் ஆகியவைகளின் பழக்க முறைகள், அமைப்பு வகைகள் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமூக மரபுரிமை (Social Heritage) யாகும்." [1] தனி நபர்களின் முயற்சிகளின் அளவை ஒரு சமுதாயத்தின் நிறுவன அமைப்பு தீர்மானிக்கிறது. W. ஆர்தர் லூயிஸ் குறிப்பிடுவது போல் "சாதகமான சமூக அமைப்பும் நிறுவனங்களும் இருந்தால் முயற்சி செய்யவேண்டு மென்ற சித்தம் ஊக்குவிக்கப்பட்டு நாடு பொருளாதார வளர்ச்சியடைகிறது; இச் சித்தம் மிக வலுவானதாக இருந்தால் வளர்ச்சிக்கு வகை செய்யப் பல்வேறு நிறுவனங்கள் புனர் மாற்றம் (Re-modelled) பெறுகின்றன." [2] சமூக மாற்றமடையா நாடுகளில் பொருளாதார வளர்ச்சி தடை செய்யப்பட்டு மக்கள் பழையப் போக்கிலேயே மூழ்கிவிடுவர்.

அநேக வளர்ச்சியுறு நாடுகளில் காணப்படும் வெளிப்படையான காட்சி ஏற்கெனவே நிலையாக இடம் பெற்ற பழமை வாழ்க்கை முறைக்கும் புதுமைக் கருத்துகளுக்குமிடையே ஏற்படும் மோதல்களும் மனக் கிளர்ச்சிகளுமாகும். பொருளாதார மாற்றத்திற்குத் தேவையான வகையில் பழமைப் பாங்கின் (Traditional Pattern) புனர் மாற்ற நடைமுறை (Process of Remodelling) சில நாடுகளில் மிக விரைவாகவும், சில நாடுகளில் வேகம் குறைந்தும் காணப்படுகிறது.

[1] ராக்னர் நர்க்ஸ். 'வளர்ச்சியுறு நாடுகளின் முதலாக்கச் சிக்கல்கள்' ப. 138.

[2] W. ஆர்தர் லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 57.

முடிவும் சாதனங்களும் (Ends and Means)

சமூக மாற்றம் பொருளாதார வளர்ச்சியின் சாதனமாகவும் முடிவாகவும் உள்ளது. புத்துணர்ச்சியும் சுறுசுறுப்பும் கொண்ட சமுதாயம்தான் வளர்ச்சியின் இடர்ப்பாடுகளை உன்னத ஒழுக்கத்துடன் தகர்த்தெறிய முடியும். அத்தகைய சூழ்நிலையில் மிகச் சிக்கமான முறையிலேயே பொருளாதார வளர்ச்சியையும் சாதித்து விடலாம். இதற்கு மாறாகச் சமூக மாற்ற மடையாத வளர்ச்சியுறு ஒரு நாட்டில் முதல் முதலீட்டையும், நவீன தொழில் நுட்பத்தையும் அதிக அளவில் பயன்படுத்தினால் பொருளாதாரம் சுய இயங்கும் நிலையை (Self-Generating stage) அடையத் தவறி விடும் அல்லது நாட்டில் இங்குமங்கும் நவீன பண்ணைகள், லாரி போக்குவரத்து, மிதி வண்டிப் பணிநிலையங்கள், செங்கல் ஆலைகள் போன்ற 'வளர்ச்சியின் சிறப்பு மைய இடங்கள்' (Islands of Development) தோன்றுவதோடு வளர்ச்சி நடவடிக்கை முடிந்துவிடும். அது குறைந்த பட்சம் சமுதாயத்தின் செல்வம் திரட்டும் ஆவலைத் தூண்டும். பொருளாதார வளர்ச்சிப் படகு மறு கரையைச் சென்று சேருவதற்குப் புனர்மாற்றமடைந்த சமூக அமைப்பாகிய துடுப்புகள் சீரான ஆக்கச் சக்தியுடன் இயங்க வேண்டும். வளர்ச்சியின் குறிக்கோளாகிய மறு கரையானது இன்பகரமான நிலையிலிருக்கும் சமுதாயமாகும். எனவே, பொருளாதார வளர்ச்சியின் மூலம் ஆக்க நடவடிக்கை, செழிப்பு, மக்களின் மகிழ்ச்சிகரமான வாழ்க்கை ஆகியவைகளை அடையக் கருவியாக இருப்பது இயக்க ஆற்றலும் ஊக்கமும் பெற்ற சமூக அமைப்பாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் முடிவுகளும் சாதனங்களும் (Ends-and Means) ஒன்றையொன்று ஒருங்கிணைந்து தலையாய முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. பொருளாதார வளர்ச்சியில் மனித அம்சம் ஒரு பரந்த பாடப் பொருளாக உள்ளது. இந்நடவடிக்கை சமூக ஒழுங்கு முறை முழுவதிலும் தீவிரமான, வியத்தகு மாற்றத்தை ஏற்படுத்த வேண்டியுள்ளது. மாதிரியாக, அது மக்களின் மனப் போக்கில் முற்பட்ட சிந்தனையையும், ஒருவராயும் எல்லோருடன் ஒன்று சேர்ந்தும் பணிபுரியும் கூட்டு விருப்பத்தையும் ஏற்படுத்த வேண்டும். இப் பாடத்தில் எந்தெந்த முக்கிய சமூக நிறுவனங்களும் கருத்துகளும் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கின்றன வென்பதையும் அவைகளை மாற்றமடையச் செய்ய என்னென்ன வழி முறைகளைக் கையாள முடியுமென்பதையும் ஆராயலாம். இந்த ஆய்வில் சமூக ஒழுங்கின் கீழ்நிலைத் 'தேக்கத்தையும்'' (Depressions) அதைப் போக்கக் கண்டறிய வேண்டிய சிறப்பு அம்சங்களையும்' (Strategic Points) உற்று நோக்கலாம்.

## மத மன நோக்கு
(Religious Attitude)

### மத வளர்ச்சியைப் பாதித்தல்

வளர்ச்சியுறு நாடுகளில் மதம் மக்களின் பல்வேறு நடவடிக்கைகளில் ஊடுருவிச் சென்றுள்ளது. மக்களின் மதநோக்கு அவர்களின் பெரும்பாலான நடவடிக்கைகளில் பிரதிபலிக்கிறது. எனவே, மதத்திற்கும் பொருளாதார வளர்ச்சிக்குமிடையே உள்ள தொடர்பை ஆராய வேண்டியது இன்றியமையாததாகும். முதலாவதாக சிலவகை மத நோக்குகள் பொருளாதார வளர்ச்சிக்கு உகந்தவைகளா என்பதைக் கண்டறிய வேண்டும். இரண்டாவதாகப் பொருளாதாரத்தேக்கம் மூடமதநம்பிக்கைகளை வளர்க்கின்றதா என்பதையும், பொருளாதார வளர்ச்சி அத்தகைய நம்பிக்கைகளை மறையச் செய்கின்றதா என்பதையும் ஆராய வேண்டும். மத நோக்கும் நிறுவனங்களும் ஒழுங்கு, கடும் உழைப்பு, திறமை, நேர்மை, சிக்கனம், ஆகியவைகளை அந்த மதத்தைப் பின் பற்றுவோரிடம் ஊக்குவித்தால் சமூக, சூழ்நிலை, மக்களின் மனத்தைப் பக்குவப்படுத்திப் பகுத்தறிவைப் புகுத்தி, உற்பத்தித் திறனை அதிகரிக்கவும். செல்வத்தைச் சேர்க்கவும், சமூக மரியாதை, சக்தி, இவற்றை மேம்படுத்தவும் முடிகிறது. 19ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட மறுமலர்ச்சி (Renaissance) மக்களிடையே இத்தகைய குணங்களைப் புகுத்திப் பொருளாதார வளர்ச்சியைப் பெரிதும் மேம்படுத்தியுள்ளது. பிராடஸ்டண்ட் மதத்தினர், அதிலும் முக்கியமாகக் கால்வனிஸத்தை (Calvanism) பின்பற்றியவர்கள், பியூரிட்டன் (Puritanism) மரபினர், குவாக்கர்ஸ் (Quakers) வகுப்பினர், போன்ற மரபினர் மேற்குறிப்பிட்ட இயல்புகளைப் பெற்று, அதிக உற்பத்தித் திறன், செல்வம், சமூக அந்தஸ்து, போன்றவைகளைப் பெற்று, பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தினர். இதற்கு மாறாக இந்தியாவில் இந்து மதம் உலக வழக்குகளை முற்றிலும் துறந்து உலகத்தின் பொருள் சார் வாழ்க்கையை வெறுக்கச் செய்யுமாறு தூண்டுகிறது. இந்து ஒருவன் வாழ்க்கையில் தன் மரியாதையை, தன் தொழிலை, தன் சாதியை, தன் செல்வம், உடமைகளையும், கர்ம வினையின் (Doctrine of 'Karma') விளைவு என்று எண்ணி அப்படியே ஏற்றுக் கொள்ளுகிறான். தன் கர்ம வினையை மாற்றப் பெரிதாக ஒன்றும் செய்துவிட முடியாது என்று எண்ணிப் பழமையில் மூழ்கிக் கிடக்கிறான். எனவே, உண்மையில் இந்து மதக் கொள்கைகள் பொருளாதார வளர்ச்சிக்கு இடையூறாகவே இருந்து வருகின்றன. ஏற்கெனவே இறைவனால் நிர்ணயிக்கப் பட்ட வாழ்க்கையில் நம்பிக்கை கொண்டிருப்பதால் இந்து

மக்களிடையே முன்னேற்றமின்மை (Unprogressiveness) காணப் படுகிறது. எனவே, மத நோக்குடைய நாடுகளில் பொருளாதார வளர்ச்சியில் பொதுவாகவே ஊக்கமின்மை காணப்படுகிறது. மிகப் பழைமையான மதங்கள் உலக வாழ்க்கையை வெறுத்து ஆன்ம சிந்தனையில் மக்களை மூழ்குமாறு வலியுறுத்தி வருகின்றன. இத்தகைய சூழ்நிலையை மாற்றியமைக்க மதத் தலைவர்கள், சமூக சீர்த்திருத்த வாதிகள் ஒன்று சேர்ந்து மதக் கருத்துகளுக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்குமிடையே சச்சரவின்மையை ஏற்படுத்த வகைசெய்ய வேண்டும். மதத் தலைவர்களும், சமூக இயல் அறிஞர்களும், இச் சமூக மாற்றத்தின் வேகம், எந்த முறையில், எந்த அளவில் பொருளாதார வளர்ச்சிக்கும் சமூக மாற்றத்திற்குமிடையே சமூக நிலையை உருவாக்க முடியுமென்பதைத் தீர்மானிக்க வேண்டும்.

### மத நம்பிக்கையும் தொழில் வளர்ச்சியின்மையும்

மதக் கருத்துகளால் கட்டுப்படுத்தப்பட்ட மக்கள் வாணிபம், வர்த்தகம், தொழில், ஆகியவைகளில் அதிக பொருளாதார உறவை வைத்துக் கொள்வதிலிருந்து தடுக்கப்படுவதால், பொருளாதார வளர்ச்சி இயற்கையாகவே தடைபடுகிறது. ஒரு காலத்தில் இந்துக்கள் வெளி நாட்டினருடன் தொடர்பு வைத்துக் கொள்ளவோ, வெளி நாடுகளில் சுற்றுப் பயணம் செய்யவோ அனுமதிக்கப்படவில்லை. எனவே, அவர்கள் வெளிநாட்டு மூலதனத்தையோ அல்லது தொழில் நுட்பத்தையோ பின்பற்றுவதில் அக்கறை கொள்ளவில்லை. 19ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இந்தியாவில் வெளிநாட்டினர் தொழில் மயத்தைத் தோற்றுவித்த பின்பு பம்பாயின் பார்ஸிகள் (Parsis of Bombay) மேற்கத்திய கருத்துகள், கல்வி ஆகியவற்றைக் கற்று மற்றச் சமுதாயங்கள் தொழில் துறையில் ஈடுபடுவதற்கு முன்பே அவர்கள் தொழில்களை ஆரம்பித்து விட்டனர். மக்கள் மத மன நோக்கின் அடிப்படையில் கருத்துணர்ச்சியின்றிக் கிணற்றுத் தவளைகள்போல் நாட்டுக்குள், அடைப்பட்டு (Closednes) இருந்ததால், தொழில் நுட்பம் மூலதனம், தொழிலாளர் ஆகியவைகளின் சுதந்திரப் பெயர்ச்சி நாடுகளுக்கிடையே தடுக்ககப்படுகிறது. ஆனல், இந்தியாவில் 19 ஆம் நூற்றுண்டின் மத்திய காலத்திலிருந்து இத்தகைய பிற்பட்ட நிலை படிப்படியாக மாறி வருகின்றது· இந்து மத நம்பிக்கையாகிய விதி, கர்மவினை, இவைகளின் நேரடி விளைவாகத் தொழிலாளர் பெயர்சியின்மை, கடும் உழைப்பில் நம்பிக்கையின்மை, சமூக அந்தஸ்தை உயர்த்துவதில் அக்கறையின்மை, மேற்கத்திய முறையில் பொருளாதார முன்னேற்றமின்மை போன்றவைகள் ஏற்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது. இத்தகைய மத இயல்புகளை

மாற்றினால்தான் மதக் கருத்துகளும் பொருளாதார முன்னேற்றத்திற்குமிடையே சமரசம் ஏற்படும். இந்தியாவில் இவ்விரண்டிற்கிடையேயுள்ள சமரசமின்மை படிப்படியாக மறைந்து வருவதை அறிய முடிகிறது. ஒருவர் தன் பொருளாதார நிலையை மேம்படுத்தக் கடுமையாக உழைக்க முயலுவதை மதம் பெரும்பாலும் தடுப்பதில்லை.

மேற்கின் பொருள்சார் கருத்தும் கிழக்கின் ஆன்மீகக் கருத்தும்
(Materialism of the west and Spiritualism of the East)

வளர்ச்சிக் குறைந்த நாடுகளில் மதநம்பிக்கைகள் மக்களிடையே உள்ள ஆய்வு உணர்வு (Spirit of Enquiry), செயல்முறை, விஞ்ஞான நோக்கு இவற்றில் மனத்தளர்ச்சியை உண்டாக்குகிறது. மக்களிடையே பகுத்தறிவையும், விஞ்ஞான மன நோக்கையும் அனுமதித்து ஊக்குவிக்கும் ஒரு மதம் தொழில் நுட்பச் சீரமைப்பிற்கும், சமூக உறவிலும், மனநோக்கிலும் இயங்கும் தன்மையையும் (Dynamism) ஏற்படுத்தத் தகுந்ததாகும். சிலவற்றின் காரணங்களைக் கண்டறிய வேண்டுமென்ற ஆர்வமே இயற்பொருள், சமூகத் துறைகளில் புதிய கண்டுபிடிப்புகள், புத்தாக்கங்கள் தோன்றுவதற்கு மிக உறுதியான இயங்கு சக்தியாக உள்ளது. மேற்கத்திய நாடுகளில் இத்தகைய ஆர்வம் ஏற்பட்டதால்தான் பொருள்சார்நலனை அடைய வேண்டுமென்று மக்கள் ஆர்வம் கொண்டு பொருளுற்பத்தியை அதிகப்படுத்தினர். இதனால் பொருள்சார் கொள்கை அந்நாடுகளில் பொருளாதார முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தியது. ஆனால், டாக்டர் ராதாகிருஷ்ணன் போன்றவர்கள் பொருள்சார் முன்னேற்றத்தையே குறிக்கோளாகக் கொண்ட நாடுகளில் ஆன்மீக உணர்வில் மக்கள் ஆர்வம் கொள்வதில்லை என்று கருதுகின்றனர். ஆனால், பொருள்சார் முன்னேற்றத்தையடையாத கிழக்காசிய நாடுகளில் ஆன்மீகக் கொள்கை பொதுவாக எல்லா மதத்திலும் வேருன்றியிருக்கிறது. தன்னைத்தானே அடக்கியாளும் சக்தியும், பொருள் சார் ஆசையை அடக்கியாளும் சக்தியும் ஆன்மீகக் கருத்தில் பொதிந்துள்ளன. உண்மையான மத உணர்வு மனிதனுக்கு இன்றியமையாததுதான். ஆனால், அது பொருளாதார வளர்ச்சிக்கு இடையூறாக அமைவது விரும்பத்தக்கதல்ல. பிரான்ஸிஸ் L. K. ஷு (Francis L. K. Hsu) அவர்கள் குறிப்பிடுவதுபோல் "கிழக்கிலிருந்து மேற்கை உண்மையாகவே வேறுபடுத்திக் காட்டுவது இவ்விரு நாடுகளின் சிந்தனையின் தரமும், அளவும், தீவிரமுமேயாகும்."[1]

1 பிரான்ஸிஸ் L. K. ஷு (Fransis L. K. Hsu), வில்லியம்ஸன், பட்ரிக் (Williamson and Buttrick) அவர்களின் நூலாகிய 'பொருளாதார வளர்ச்சியில்' (Economic Development) ப. 385.

இடைக்காலக் கிறித்துவ இறைமை இயல்வாதிகள் (Theologians) இறைவன் என்ற கருத்தை ஆய்ந்து அதன் மூலம் மனிதப்பிரச்சினை களைத் தீர்ப்பதற்காக ஒரு பகுத்தறிவுக் கொள்கையை வகுத்தனர். அவர்கள் வளர்த்த தத்துவம், கலை, இலக்கியம், பண்பாடு, சமூக வாழ்க்கை ஆகியவைகளில் அவர்களின் பகுத்தறிவு பிரதிபலிப் பதை அறியலாம். கிழக்கத்திய நாடுகளில் மதக் கொள்கைகளில் நம்பிக்கை, உலக வாழ்வை வெறுத்தல், அளவு கடந்த வழிபாடு. ஆகியவைகளே மனிதவாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்துகின்றன, இந்நிலையைப் போக்கி மக்களின் மன நோக்கில் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்தத் தக்க குறிக்கோளைக் கொண்ட பொதுக் கல்வி முறையை எல்லோருக்கும் கிட்டும்படி பரவலாக்க வேண்டும். ஆனால், இம்முறையானது வேகம் குறைந்ததாகும். மேலும், இது தக்கமுறையில் எச்சரிக்கையுடன் திட்டமிட்டு மேற்கொள்ளப் படாவிட்டால் சமுதாயத்தில் துன்பமும், சீர்குலைவும் ஏற்படும். பொருள்சார் கொள்கையும், ஆன்மீகக் கொள்கையு ம்ஒருங்கமையப் பெற்ற பொருளாதார வளர்ச்சிதான் உன்னத இலட்சியத்தைக் கொண்டதாகும்.

## உண்மை மதக்கருத்துகளின் எழுச்சி

மதக் கருத்துகளால் தொழில், வர்த்தகம் ஆகிய துறைகளில் பொருளாதார உறவை ஒருவன் வளர்த்துக்கொள்ள மதக் கருத்துகள் கட்டுப்படுத்தினால் பொருளாதார வளர்ச்சி பெரிதும் பாதிக்கப்படுகிறது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் தொழில் நுட்ப அறிவு, மூலதனம், தொழில் ஆகியவைகளில் பன்னாட்டுத் தொடர்பு அதிகரித்து வருகிறது. இதற்கு ஐக்கிய நாடுகள் சபை, பிராந்திய வளர்ச்சிக்கான பொருளாதார கலாச்சார ஒப்பந்தங்கள் பெருந்துணை புரிந்து வருகின்றன. மதக் கருத்துகளைப் பொரு ளாதார நடவடிக்கைகளில் பயன்படுத்துவது ஒவ்வொரு சமூகத் திலும் வேறுபடுகிறது. பகுத்தறிவுக் கொள்கை ஒன்றுதான் மதநோக்கு நன்மை ஏற்படுத்துகிறதா தீமை ஏற்படுத்துகிறதா என்பதைத் தீர்மானிக்க முடியும். சில மத நம்பிக்கைகள் பொரு ளாதார வளர்ச்சித் தேவைகளுக்குப் பாதகமாக அமைவதில்லை. பெரும்பாலான மதங்கள் முயற்சியின் மூலம் பொருளாதார வாய்ப்பைப் பெருக்குவதைத் தடை செய்வதில்லை. மத வளர்ச்சி யினால் சமூக சமநிலை ஏற்பட்டு சுரண்டல், இலஞ்சம், ஆகியவைகள் அதிகரித்தால் தீர்க்கதரிசிகள் உருவாகி அதைத் தடுக்கின்றனர்; பின்பு மறைந்து விடுகின்றனர். இதன் விளைவாக மதங்கள் தேக்கத்திலிருந்து பாதுகாக்கப்படுகின்றன. பிற்பட்ட நாடுகள் தீர்க்கதரிசனப் பண்பாட்டை மீண்டும் உயிர்ப்பித்து, மதத்தலைவர்

களை உருவாக்கிப் பொருளாதார வளர்ச்சியின் தேவைகளைப் பூர்த்தி செய்ய வகை செய்யலாம். இத்தகைய மாற்றம் கருத்து வழி மோதல்களையும் பண்பாட்டு நிலையின்மையையும், சீர்குலைவையும் ஏற்படுத்தும். ஆனால் மாற்றமுறும் கட்டம் முடிவுற்றவுடனே புதிதாகத் தோன்றும் சமய நம்பிக்கை சமூக இயல்பு முறையில் ஒருங்கிணைப்பை ஏற்படுத்த வகைசெய்யும். மாற்றத்தை ஏற்படுத்த வகைசெய்யும் மதத்தைப் பின்பற்றும் மக்கள் அடையும் நன்மைகள் அதிகமாக உள்ளன. இம் மக்கள் புத்தாக்கங்களை ஏற்படுத்த ஆர்வம் கொள்வதை மதமும் ஆதரிப்பதால் சமூகம் கூடுதல் எழுச்சி பெறுகிறது. ஆர்தர் லூயிஸ் குறிப்பிடுவதுபோல், "விரைவான சமூக மாற்ற காலங்கள் மத எதிர்ப்புடன் நெருங்கிய தொடர்புடையனவாக உள்ளன. ஐரோப்பிய முதலாளித்துவ எழுச்சியுடனே அல்லது அப்போது ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளுடனே தொடர்புபடுத்தி ஆராய்ந்து பார்த்தால் உண்மை புலனாகும். மதத்தின் உண்மையான பணியை மதிப்பிட வேண்டுமானால் பழைய மதத்திற்கு எந்த அளவுக்கு எதிர்ப்புகள் ஏற்பட்டனவோ அந்த அளவுக்குப் புதிய மதத்தின் சீர்திருத்த ஆவலையும் (Reforming zeal) ஆராய வேண்டும்."[1]

## மதம் பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமா அல்லது விளைவா ?

(Is Religion the cause or the effect of Economic Conditions ?)

மதம் பொருளாதார நிலைகளின் விளைவாயிருக்கின்றது என்ற கருத்தை மட்டுமே ஏற்றுக் கொண்டால் பொருளாதார சமூக நிலைகள் மத மன நோக்குகளில் பிரதிபலிக்கிறது எனலாம். குறிப்பிட்ட சில பொருளாதார சக்திகளின் விளைவாகக் குறிப்பிட்ட மத மன நோக்கு, சமூக நிறுவனங்கள் (Religious Attitudes and Institutions) தொடர்ந்து வளர்ச்சியடைந்து வருகின்றன. இந்நிலையில் மதத்திற்கும் பொருளாதார வாழ்க்கைக்குமிடையே கற்பிக்கப்பட்டு வந்த முரண்பாடு மறைகிறது. பொருளாதார நிலையில் ஏற்படும் மாற்றத்துடனேயே மத நம்பிக்கைகளும் தாமாகவே மாற்றத்தைப் பெறுமென்பதை நாம் யூகித்துக் கொள்ளலாம். இத்தர்க்கத்தின்படி மதம் பொருளாதார வளர்ச்சிக்குத் துணையாகவோ அல்லது இடையூறாகவோ இருக்கவில்லை என்பது புலனாகும். காலப் போக்கில் மதப் பழக்க வழக்

[1] W. A. லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 104.

கங்கள், மாற்றமடைந்த பொருளாதார சூழ்நிலைக்கு ஏற்ப மறு விளக்கம் தரப்பட்டுச் சரிசெய்யப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட கருத்து கார்ல் மார்க்ஸின் விளக்கத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. எனவே, மார்க்ஸின் கருத்தில் விளக்கப்பட்ட பொருளாதார வாழ்க்கைப் பாங்கின் மாற்றம் இத்தர்க்கத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆனால் மேற்கண்ட வினாவிற்கு இவ்வளவு சுலபமாக விடையளிக்க முடியாது. பொருளாதார நடவடிக்கைகள் மக்களின் மனப்போக்கைப் பாதித்து மதநம்பிக்கையில் சீரமைப்பை ஏற்படுத்துவது என்பது உண்மைதான். ஆனால், மத நம்பிக்கை பொருளாதார சக்திகளின் நடவடிக்கைகளின் கடைசிக் கட்டத்தில்தான் மாற்றமடைகிறது. மேலும், மத நம்பிக்கை இம் மாற்றத்தின் வேகத்தை குறைக்கும் அல்லது பொருளாதார சக்திகளின் விளைவுகளைச் சீர்குலைத்துவிடும். மதத்தின் மாறாத் தன்மையால் நெடுநாள்களுக்குப் பொருளாதாரமாற்ற நடவடிக்கை தடைபட்டு விடுகிறது. இத்தகைய எதிர்ப்பைச் சமாளிப்பது பொருளாதாரத்திற்கு மிகக் கடினமானதாகும். எனவே, பொருளாதார வளர்ச்சியை முற்றிலுமாகத் தடுத்துவிட மதத்தால் இயலாது. மதத்தின் தீவிர விளைவுகளால் வளர்ச்சி வீதத்தையும் அதன் விளைவுகளையும் உறுதியாகக் குறைக்கமுடியும். வளர்ச்சி குறைந்த நாடுகளின் வளர்ச்சி நடவடிக்கைகளில் கால அம்சம் (Time Element) முக்கியத்துவம் பெற்று விளங்குகிறதென்பது குறிப்பிடத்தக்கதாகும். ஏழ்மை நாடுகள் ஒரு புறம் முன்னேறிய நாடுகளின் வாழ்க்கைத் தரத்தைச் சாதிக்க முயலும்போது மற்றொருபுறம் இந்நாடுகளில் பெரும்பாலானவை அதிகரித்துவரும் மக்கட்தொகையின் தொல்லையைக் கட்டுப்படுத்த வேண்டியுள்ளது. பொருளாதார மாற்றம் மதக்கருத்துகளுக்குக் காரணமாகவும் விளைவாகவும் அமைந்துள்ளதென்பது கருத்துவழியில் உண்மையாக இருந்தாலும் ஏழ்மைநாடுகளில் விரைவான வளர்ச்சியைப் பெற மத மனநோக்கின் விளைவு பொருளாதார வளர்ச்சியைப் பாதிக்கின்றது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். விரைவான வளர்ச்சியைப்பெற மதமனப்போக்கைச் சீர்படுத்தி வளர்ச்சிக்கு உகந்ததாக மாற்றமடையச் செய்தேயாக வேண்டும். பேராசியர் ஆர்தர் லூயிஸ் அவர்கள் குறிப்பிடுவதுபோல, "வளர்ச்சிக்கு ஒவ்வாத மதக் கருத்துகளைப் பாசமுடனும் வெறியுணர்வுடனும் பின்பற்றும் ஒரு நாட்டில் பொருளாதார வளர்ச்சி சின்னாபின்னப் பட்டு விடலாம். அதற்கு மாறாகச் சமூக மாற்றத்தினால் ஒரு புது நம்பிக்கை கொண்ட சமூகம் உருவெடுத்தால் பொருளாதார வளர்ச்சிச்சுடர் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும்."[1]

1 W. A. லூயிஸ், பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு', ப. 107.

## சாதி முறை
## (Caste system)

இந்தியாவிலுள்ள ஹிந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளிலிருந்து மூன்று முக்கிய சமூக நிறுவனங்கள் நெடுநாள்களாய் இருந்துவருகின்றன. அவைகளாவன: (1) சாதிமுறை (5) கூட்டுக் குடும்ப முறை (3) சொத்துரிமைச் சட்டம் என்பனவாகும். இப் பகுதியில் முதலில் சாதி முறையினுல் எந்தெந்த வகையில் இந்தியப் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்பட்டுள்ளது என்பதை ஆராயலாம். சாதி முறையானது இந்தியப் பொருளாதார வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களேயும் தனிவகையில் உருவாக்கியுள்ளது. சாதி என்பது ஒரே பெயரைப் பெற்ற, ஒரே குல பரம்பரையைச் சேர்ந்த, ஒரு குறிப்பிட்ட தொழிலேயே செய்கின்ற திரட்சியேயாகும். ஒவ்வொருவனும் ஒரு குறிப்பிட்ட சாதியில் பிறந்து அதைவிட்டு வெளியேற இயலாதவனுக இருக்கின்ருன். இந்து சமூகம் நூருயிரக் கணக்கான சாதிகள், துணை சாதிகளாகப் (Sub-Caste) பிரிக்கப்பட்டுள்ளது. மற்ற மத வகுப்பினராகிய முஸ்லிம்களும், கிறித்தவர்களும் ஒருவகைச் சாதி முறையை வைத்துள்ளனர். ஒவ்வொரு சாதியும் ஒரு குறித்த தொழிலேயும் பழக்கத்தையும் பெற்று அன்ருட வாழ்க்கையின் ஒவ்வொரு சிறிய அம்சத்தையும் தீர்மானிக்கிறது. சாதிகளிடையே பொது உணவருந்தலும், மண விழாக்களும், கட்டாயமாகத் தடுக்கப் படுகின்றன. சாதி ஒழுங்கு முறைகளே எதிர்ப்பவர்களுக்குத் தண்டனேயும் விதிக்கப்படுகிறது. இந்து சமூகமானது பல்வேறு சுதந்திரச் சிறிய வகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. காலப் போக்கில் சாதிப் பிரிவுகள் தங்கள் குறித்த அமைப்பை மாற்றிக் கொண்டு வருகின்றன. ஆனுல், நெகிழ்ச்சி குறைந்த, ஏற்றத் தாழ்வு மிகுந்த, பல படிவங்களாகப் பிரிக்கப்பட்ட முறையிலேயே சாதிகளின் மாற்றப் போக்குக் காணப்படுகிறது. கிங்க்ஸ்லீ டேவிஸ் (Kingsley Davis) இதைக் கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிருர். 'சாதி முறையானது அதிக ஏற்றத்தாழ்வையே சமூக உறவின் வழிகாட்டிக் கொள்கையாக அமைத்துக் கொண்டு மனித வரலாற்றிலேயே அதிகக் கண்டிப்பு வாய்ந்த நடவடிக்கைகளே உட்புகுத்தி வருகிறது.''[1]

## சாதி முறையின் பொருளாதார விளேவுகள்
### நன்மைகள்

சாதி முறையினுல் சில நன்மைகளும், தீங்குகளும் ஏற்பட்டுள்ளன. முதலாவதாக, சாதி முறையினுல் வேலேப்

[1] கிங்க்ஸ்லீ டேவிஸ் (Kingsley Davis), 'இந்தியா, பாகிஸ்தானின் மக்கட் தொகை; ப. 170.

பகுப்பு முறை ஏற்பட்டது. சாதியிலுள்ள ஒவ்வொருவனுக்கும் ஒரு குறித்த வேலை பிறப்பிலிருந்தே கிடைத்து விடுவதால், வேலைக்காக அலைய வேண்டிய நிலையில்லை. இதனால் வேலையின்மைப் பிரச்சினையும் அதிகமாக எழுவதில்லை. இரண்டாவதாக, சாதி முறையினால் ஒரு குறித்த தொழிலைச் செய்யும் தொழிலாளர்களின் நலன் பாதுகாக்கப்படுகிறது. ஏனெனில் அவர்களின் வர்த்தகத்திலோ தொழிலிலோ வெளியாளர்கள் வருவது தடுக்கப்படுகிறது. இம் முறையினால் சமூக அமைதியும் பொருளாதாரப் பாதுகாப்பும், தனிநபர் மகிழ்ச்சியும், திருப்தியும் அதிகரிக்கிறது. மூன்றாவதாக, இம் முறையினால் வகுப்பு வாதங்கள் குறைகின்றன. மற்ற நாடுகளில் காணப்படும் வகுப்புவாதச் சண்டைகள் இந்தியாவிலேற்படுவதில்லை. ஒவ்வொருவரும் தன் கர்மவினையின்படிதான் ஒரு குறிப்பிட்ட சாதியில் பிறந்திருப்பதாக நம்புகின்றனர். ஆரம்ப காலத்தில் சமூக அமைப்பு அழிந்து போவதிலிருந்து பாதுகாக்கப்பட சாதிமுறை பலப்படுத்தப்பட்டது. "பல்வேறு தொழில் வகுப்பினரிடையே பழங்காலத்தில் அதிகாரத்தைச் சமமாகப் பகிர்ந்தளிக்கக் காலத்தால் அழியாத விஞ்ஞான சமதர்ம சமுதாயமாகச் சாதிமுறை அமைந்திருந்தது." நான்காவதாக, இம் முறையானது தொழிற்சங்க நிறுவனத்தைப் போலவே எல்லா வகைப் பாதுகாப்புகளையும் அதன் உறுப்பினர்களுக்கு அளித்துச் சுதந்திர கிராம அமைப்புகளை உருவாக்கத் துணை புரிந்தது.

## தீமைகள்

இந்து சமூகம் அழிவிலிருந்து பாதுகாக்கப்படச் சாதிமுறை உருவாக்கப்பட்ட போதிலும் அது மக்களுக்குச் சேவை புரிவதற்குப் பதிலாகத் தொடர்ந்துவரும் பரம்பரை நிறுவனமாக மாறிவிட்டது. இதனால் சமூகப் பொருளாதார வளர்ச்சி நாட்டில் குன்றிப் போய்விட்டது. காலப்போக்கில் சாதிமுறை கடுமையான முறையில் நெகிழ்ச்சி இல்லாத அமைப்பாகிவிட்டது. ஏற்றத் தாழ்வு, நெகிழ்ச்சியில்லா நிலை ஆகிய காரணங்களால் சாதி முறையில் பல்வேறு குறைபாடுகள் காணப்படுகின்றன. அவைகளாவன:

(1) தொழிலாளர் பெயர்ச்சியின்மை

சாதிமுறை அமைப்பின் விளைவாக ஒரு வகுப்பைச் சேர்ந்த தொழிலாளர்களிடையே பெயர்ச்சி தடைபடுகின்றது. ஒருவனின் தொழில் பிறப்பிலேயே தீர்மானிக்கப்பட்டு விடுவதால், அவன் வாழ்நாள் முழுவதும் அதே தொழிலையே செய்ய வேண்டியிருப்பதால், புதுத் தொழிலில் ஈடுபட முடியாமல் போய்விடுகிறது. இதனால்

தொழிலாளர்கள் பல்வேறு தொழில்களுக்கும் சில சமயங்களில் பல்வேறு இடங்களுக்கும் பெயர்ச்சியடைவது தடுக்கப்பட்டு விடுகின்றது. இந்தியாவில் கைவினைஞர்களும், விவசாயிகளும் தங்கள் சொந்த மூலதன சாதனங்களைக் கொண்டு பணிபுரிவதால் தங்கள் மூலதனத்தையும் வேறு இடத்திற்குக் கொண்டு செல்ல முடியாது. தொழிலாளர், மூலதனப் பெயர்ச்சியின்மையால் போட்டியிடாச் சாதிப்பிரிவுகள் தோன்றி உற்பத்திச் செலவையும், திறமையையும், மாற்றமடையச் செய்வதில்லை. சாதித் தடைகளால் மூலதனம், தொழிலாளர், தொழிலமைப்பு ஆகியவைகளில் சீராக ஒருங்கிணைவது தடுக்கப்படுகிறது.

(2) தகுதிக்கேற்ற வேலை அளிக்காமை

சாதிமுறை தொழிலாளர்களைச் சாதி முறைக்கேற்ப வேலைகளை தேர்ந்தெடுக்கச் செய்கின்றது. எனவே, ஒருவர் தகுதியின் அடிப்படையில் ஒரு தொழிலில் ஈடுபடாமல் சாதியின் அடிப்படையிலேயே பணிபுரிய வேண்டிய சூழ்நிலை உள்ளது. தற்போதைய தொழிலுற்பத்தி முறையிலும் இது காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக, கல்கத்தா, பம்பாய் போன்ற தொழில் நகரங்களில் சாதியின் அடிப்படையிலேயே தொழிலாளர்கள் தங்கள் வேலைகளைத் தேர்ந்தெடுக்கின்றனர். கல்கத்தாவில் மோமின் (Momins), டான்டிஸ் (Tantis) சாதியினர் ஆரம்பத்தில் கைத்தறி நெசவாளர்களாயிருந்தனர். தற்போதும் பருத்தி நெசவாலைகளில் நெசவுத் துறையிலேயே வேலை செய்து வருகின்றனர்.[1] பொதுவாகவே பிற்பட்ட வகுப்பினர் (Backward Classes) தோல் பதனிடும் தொழில், தோல் ஆலைத் தொழில் போன்றவைகளில் பணிபுரிகின்றனர். எனவே, தகுதியின் அடிப்படையில் மக்கள் வேலைகளைத் தேர்ந்தெடுக்காமல் சாதி முறையின் அடிப்படையிலேயே பணிபுரிவது புலனாகிறது. ஒருவகையில் ஒரே சாதியினர் ஒரே தொழிலில் குவிந்திருப்பதால் அவர்களிடம் ஒற்றுமையும் திருப்தியும் அதிகரிக்கிறது.

(3) தீண்டப்படாதவர்களின் சமூக இழிநிலை

சாதி முறையினால் தாழ்ந்தோர், உயர்ந்தோர் என்ற சமூகப் பிரிவு ஏற்பட்டுக் கீழ்க்குலத்தோர் மேற்குலத்தோரிடம் தொடர்பு கொண்டு உறவாட முடிவதில்லை. இதன் விளைவாக மனித ஆற்றலும் சக்தியும் வீணடிக்கப்படுகிறது. தீண்டாதோர், கல்வியறிவு அளிக்கப்படாமல் தங்கள் பொருளாதார நிலையைச் சீர்படுத்த வாய்ப்பில்லாமலேயே போய்விடுகிறது. அவர்கள்

[1] UNESCO, 'தென்னாசியாவில் சமூகப் பொருளாதாரத் துறையின் ஆராய்ச்சி நிலையம்.

துன்பகரமான கடைநிலை வேலையிலேயே பணிபுரியக் கட்டாயப் படுத்தப்படுகின்றனர். பம்பாய் போன்ற தொழில் நகரங்களில் கூடத் தொழிலாளர்கள் தங்கள் கண்காணிப்பாளராக ஒரு தீண்டாதார் இருப்பதை மனமார விரும்புவதில்லை. பிராமணர்களும் உயர்ந்த சாதியைச் சார்ந்த இந்துக்களும் எழுத்தாளர்களாகவும், கண்காணிப்பாளராகவும், உயர்ந்த பதவிகளில் பணிபுரிகின்றனர். பின்தங்கிய வகுப்பினர் கண்காணிப்பாளர், எழுத்தர் போன்ற பணிகளில் பெருமளவில் காணப்படவில்லை. எனவே, சாதிமுறையினால் ஏராளமான மனித சக்தி வளங்கள் தவறான போக்கில் பயன்படுத்தப்பட்டு வீணடிக்கப்படுகின்றன.

(4) உடலுழைப்புப் பணியில் வெறுப்பு (Contempt for manual work)

சாதிமுறையினால் நேரத்தை வீணாகக் கழிக்கும் சில வகுப்பினர் உருவாகின்றனர். இதற்குக் காரணம் உடலுழைப்பு வேலைகளில் அவர்களுக்கேற்படும் வெறுப்பேயாகும். பிராமணர்களும், உயர் சாதி இந்துக்களும் உடலுழைப்பு வேலையை அவமதித்துக் கீழ்ச்சாதி வகுப்பினரிடமே விட்டு விடுகின்றனர்.[1] இம் மேல் வகுப்பினர்கள் நிலச் சொத்துகளை உடைமைகளாகப் பெற்றனர். பணத்தையும் சேமித்து வைத்தனர்; உயர்தரக் கல்வியையும் பெற்றனர். கீழ் வகுப்பினரின் அயராத உழைப்பினால் மேல் வகுப்பினர் உன்னத வாழ்க்கையை நடத்திவந்தனர். எனவே, சாதி முறையானது கீழ்க் குலமக்களைக் கொடுமைப்படுத்தும் எந்திரமாகத் தாழ்நிலையை அடைந்தது. இம் முறையானது பல்வேறு வகுப்பினரை ஒரே சீரான இணைந்த சமுதாயமாக உருவெடுப்பதிலிருந்தும் தடுத்துப் பிரிவினை சக்தியை அதிகரித்தது. மேலும், இம் முறையானது பிராமணர் போன்ற மேல் வகுப்பினர்களுக்கு எதிராகக் கீழ் வகுப்பினர்களிடையே கசப்புணர்ச்சியை ஏற்படுத்தியது.

(5) சாதிமுறையில் பொருளாதார வளர்ச்சி தடைபடல்

A. R. தேசாய் அவர்கள் குறிப்பிடுவதுபோல், "சமூக உறவில் மிக நுண்மையாகப் பிரிக்கப்பட்ட பெரும் சமுதாய இடைவெளியைக் கொண்ட உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற வகுப்பினரைச் சாதிமுறை வளர்க்கிறது. சமுதாய அடிமட்டத்தில் ஏராளமான தீண்டாதார்களையும், உச்சியில் மிகக் குறைந்த அளவுடைய, நெருங்கிப் பழக முடியாத, உயர்ந்தோர்களாகிய, பிராமணர்களையும் கொண்ட பிரம்மாண்டமான ஒரு வம்சாவளிச்

[1] D. S நாக் (Nag) 'வளர்ச்சியுறாப் பொருளாதாரத்தின் பிரச்சினைகள்', ப. 118

கோபுரமாகச் சமூக அமைப்பு அமைந்துள்ளது."[1] பழங்காலத்தி லிருந்தே பிராமணர்களின் குழந்தைகளுக்குக் கல்வியளிக்கப்பட்ட போது தீண்டாதார்களின் குழைந்தகைளுக்கு அது புறக்கணிக்கப் பட்டது. ஒருவரின் தகுதி, மனஆர்வம், இவைகளின் அடிப் படையில் கல்வியளிக்கப்படாமல் சாதி வழக்கத்தின் அடிப் படையிலேயே கல்வி அளிக்கப்படுகிறது. இதன் விளைவாக அறிவு வளர்ச்சி கொண்டவர்களின் அளவு படிப்படியாகக் குறைந்து விடுகிறது. கீழ் மட்டத்தில் உள்ளவர்களிடம் தொழிலார்வம், பகுத்தறிவு ஆகியவைகள் கடுமையாய்த் தடுக்கப்பட்டு விடுகின்றன. பொருளாதார வளர்ச்சிக்கும் நலனுக்கும் அடிப்படையாக விளங்கும் வெளிப்படா ஆற்றலுக்கும், பொருளாதார நடவடிக்கை களுக்குமிடையே உள்ள நெருங்கிய தொடர்பு கடுமையான சாதி முறையினுல் தடுக்கப்பட்டு விடுகிறது. கெட்கர் (Ketkar) என்பவர் குறிப்பிடுவதுபோல் "எல்லோருக்கும் சமவாய்ப்பு அளிக்காமல் பணியாளர்களைத் தகாத இடங்களில் பணிபுரியச் செய்வதால் மக்களின் பொருளாதார நடவடிக்கைக்கு எவ்வளவு தீங்கு விளைவித்துள்ளோம் என்பது நமக்குத் தெரியாது."[2] திறமையும் உற்பத்திச் செலவும் மாருத நிலையிலிருப்பதால் 'உற்பத்தி எல்லைகளை' (Frontiers of Production) முன்னேக்கி எழுச்சி பெறச் செய்ய முடியவில்லை. இதன் விளைவாகப் பேரளவு உற்பத்தி நிறுவனங்கள் வளரவிடப்படாமல் தடுக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட வகைத் தொழிலாளர்களின் தேவை, அளிப்புக்கிடையே விரைவான சீரமைவு தடுக்கப்படுகிறது. பல்வேறு உற்பத்திக் காரணிகள் ஒருங்கிணைக்கப்படவிடாமல் சாதிமுறை தடுக்கிறது.

### 6. சாதிமுறையில் நுகர்வு பாதிக்கப்படல் (Adverse effect on Consumption)

சாதிமுறை, தொழிலாளர் பெயர்ச்சியைக் குறைத்துப் பொருளாதார வளர்ச்சியைத் தடுத்துள்ளது என்பதை ஏற்கெனவே ஆராய்ந்தோம். ஆனுல், அது நுகர்வின்மேல் பாதக விளைவுகளை ஏற்படுத்திப் பொருளாதார வளர்ச்சியைக் குன்றச் செய்கிறது. கீழ்ச் சாதியினர் குறைந்த வருவாயையும், குறைந்த தேவை களையும் பெற்றிருப்பதால் கடும் உழைப்பும், புத்தாக்கங்களும், தோன்றுவதற்கு ஊக்கமில்லாமல் போய்விடுகிறது. ஆனுல், சில தொழில்களில் உயர் சாதியினர் குவிந்துள்ளதால் அங்குத் தேவைக்கு மேற்பட்டவர்கள் பெருகிவிடுகின்றனர். இதற்குச் சான்றாக

[1] A R தேசாய், 'இந்தியாவின் கிராம சமூகவியல்' (Rural Socialogy in India) ப. 40

[2] S. V. கெட்கர் (S. V. Ketkar), 'இந்தியப் பொருளாதாரம்' சமூக நிறுவனங்கள் என்ற பகுதியில்,

'எழுத்தர்' வேலையைக் கூறலாம். இதன் விளைவாக வருவாய் குறைந்த மட்டத்திலேயே இருந்து விடுகிறது. சாதி முறையால் நிர்ணயிக்கப்பட்ட நுகர்வுப் பாங்கு ஒரே குறித்த நிலையிலேயே இருந்து விடுகிறது. அது பலவகைப்பட்ட பொருள்களின் உற்பத்தியை ஊக்குவிக்கிறது. ஆனால், ஒரே பொருளின் உற்பத்தி பேரளவில் பெருக்கப்படுவதில்லை. சாதியால் உந்தப்பட்ட உற்பத்தி முறையில் (Caste-ridden system of production) பேரளவு உற்பத்தியின் சிக்கனங்களை அடையமுடியாது. கீழ்ச்சாதி என்பது கீழ் வாழ்க்கைத் தரத்தை குறிக்கிறது. உயர்ந்த சாதியினர் பணி புரியும் சில தொழில்களில் ஏராளமானவர்கள் குவிந்துவிடுவதால் அவர்களின் வாழ்க்கைத் தரமும் குறைந்துவிடுகிறது. இவ்வித மாகச் சாதி இவ்விருவகை வகுப்பினர்களின் வளர்ச்சியைத் தடுக்கிறது. மேலும், பொருளாதாரத்தின் பரவலான ஒருங் கிணைந்த வளர்ச்சிக்கு வேண்டிய முயற்சிகளை ஊக்கங்கெடச் செய்கிறது.

மாறாச் சமூகத்தின் சீர்கேடுகள் (Evils of Static Society)

ஆரம்பத்தில் சாதி முறையினால் பொருளாதாரத்தில் சமநிலை உருவாகுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், காலப்போக்கில் அது வளர்ச்சிக்கு உகந்ததாக இல்லாமல் நெகிழ்ச்சியில்லாத் தன்மையைப் பெற்றுவிட்டது. அதன் மாறாநிலை, மூடப்பட்ட சமுதாயத்தை (Closed Communities) உருவாக்கும் போக்கு, ஏற்றத்தாழ்வைத் தோற்றுவிக்கும் முறை, உயர்ந்தோர்—தாழ்ந்தோர் என்ற பாகுபாட்டை ஏற்படுத்துதல், போன்ற பல்வேறு காரணங்களால் அது ஒரு மாறாச் சமூகத்தை (Static Society) உருவாக்கிவிட்டது. இச் சமூகம் நவீன தொழில் சமூகத்தின் சமூகப் பொருளாதார மாற்றங்களுடன் ஒத்து வாழ முடியாத நிலையிலுள்ளது. டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் சாதி முறையானது, மக்கள் அறிவாற்றலுடன் முன்னேறுவதைத் தடுத்து விட்டதாகவும், சுயவாற்றலையும், தொழிலுணர்வையும் அழித்து விட்டதாகவும் குறைகூறியுள்ளார். சாதி முறையினால் சமச்சீரில்லா உணவு உட்கொள்ளும் நிலையிருப்பதால் மன, உடல் வளர்ச்சி சீர்கேடு அடைகிறது. சாதிகளால் வரதட்சணை முறைக் (Dowry Systum) கொடுமைகள் வளர்கின்றன. சிலர் தேவை யில்லாமல் புகழப்பட பலர் தாழ்வுற்ற நிலையில் வாழ்கின்றனர்.

## சாதி அமைப்பின் சமீப மாற்றங்கள்
## (Recent Changes in Caste Organisation)

மத நம்பிக்கைகளின் அடிப்படையில் வளர்ச்சியடைந்த சாதி முறை தற்போது படிப்படியாகக் குறைந்து வருகிறது. சாதியின்

கடுமைத் தன்மையைக் (Caste Rigidity) குறைக்கும் செயல்முறை இந்தியாவில் ஆங்கில ஆட்சி தோன்றுவதற்கு முன்பே ஆரம்பிக்கப் பட்டு விட்டது. மதத் தலைவர்களும் சமூக சீர்திருத்த வாதிகளும், பிராமணர்கள், மற்ற உயர் சாதியினர் ஆகியவர்களுக்கு அளிக்கப் பட்டு வந்த சிறப்பு உரிமைகளைப் பெருமளவில் கண்டித்தனர். மேலும், இந்து சமூகத் தீண்டாமையை ஒழித்துக்கட்ட அவர்கள் போராடினர். சாதி முறையின் ஆதிக்கம் அழிவுற்று படிப்படியாக மாற்றமடையப் பல்வேறு காரணிகள் பொறுப்பாயிருந்தன. அவைகளாவன:—

1. ஆங்கிலேயர் ஆட்சி

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் நாட்டில் பல்வேறு துறைகளில் குறிப்பிடத்தக்க சில மாற்றங்களேற்பட்டன. அவைகளில் முக்கியமாகப் புது வேலைகளும் தொழில்களும், சாதி முறைகளுக்கு அப்பாற்பட்ட வகையில் மக்களுக்கு அளிக்கப்பட்டன. அதிக வருவாய், உயர்ந்த சமூக மதிப்பு, அரசாங்கப் பணிகளில் அமைந் திருந்ததால் பிராமணர்களும் உயர்சாதி இந்துக்களும், வெளி நாடுகளுக்குச் சென்று தங்கள கல்வியறிவை வளர்த்துக் கொண்டனர். வெளிநாடுகளிலிருந்து சில பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டு எல்லோராலும் பயன்படுத்தப்பட்டன. வெளி நாட்டினருடன் தொடர்பு கொள்ளுதல் தக்கதன்று என்று கருதப் பட்ட நிலைமாறியது. மேற்கத்திய பொருளாதாரச் செயல் முறை களின் சக்திகள் இந்தியாவிலும் பரவியது. மேலும், இரயில் வேக்கள், பேருந்துகள், உணவு விடுதிகள், ஆகியவைகளை எல்லா சாதி மக்களும் பயன்படுத்துவதால் சாதிவெறியுணர்வு படிப்படி யாக மறைந்து வருகிறது.

2. கல்வி பரவலாக்கப்படல் (Spread of Education)

தற்போது எல்லா சாதியினரும் எந்தக் கல்வியை வேண்டு மானாலும், திறமையின் அடிப்படையில் பெற்றுக் கொள்வதற்குப் பல்வேறு வகையான வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. எல்லாவகைச் சாதிகளையும் சேர்ந்த ஆண் பெண், மேலோர் கீழோர், என்ற எந்தவித பேதமுமின்றி ஒன்ருகவே கல்வி பயில் கின்றனர். எல்லா சாதி மாணவர்களும் ஒன்ருகக் கல்விபயிலும் சமத்துவம் போதிக்கும் கல்வி நிறுவனங்கள் சாதிக் கொடுமையைக் குறைக்கும் தகுந்த கருவிகளாகச் செயல்பட்டு வருகின்றன. பட்டியலில் இட்ட வகுப்பினர், பிற்பட்ட வகுப்பினர், போன்றவர் களுக்குக் கல்விச் சலுகைகளையளித்து அரசும் அவர்களின் கல்வியின் தரத்தை உயர்த்தி வருகிறது.

3. அதிகரிக்கும் நகர மயம் (Increasing Ursanisation)

தற்போதையை நகர வாழ்க்கையில் சாதி முறைகளைப்பற்றிச் சிந்திக்கவும் மக்களிடையே நேரம் கிடையாது. நகர வாழ்க்கை கடுமையான சாதித் தடைகளைப் படிப்படியாக அழிக்கும் சக்தி வாய்ந்த கருவியாகும். நகர மயம் அதிகரிக்க அதிகரிக்கச் சாதிக் கொடுமைகளின் இயல்புகள் படிப்படியாகக் குறைந்துவிடும். கிராமங்களிலிருந்து நகரத்திற்கு வரும் மக்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபடுகின்றனர். இவர்கள் விஞ்ஞான முன்னேற்றத்தையும், தொழில்நுட்ப வளர்ச்சியையும், ஆலைகளிலும் மற்ற இடங்களிலும் கண்டறிந்து பழமைக் கருத்துகளில் தாங்களாகவே நம்பிக்கை இழந்து வருகின்றனர். நகர மயம் அதிகரிக்க அதிகரிக்க கல்வியின் அளவும் மக்களிடையே அதிகரிக்கிறது. இதன் விளைவாகச் சாதி, மத பேத உணர்வு மக்களிடையே வலிமை இழந்து வருகிறது. போக்குவரத்து வசதிகள், உல்லாச வாழ்க்கை, தொழில் மயம், செய்தித் தொடர்பு, பொது நலனை மேம்படுத்தும் நிறுவனங்கள், போன்றவைகள் நகரப்பகுதிகளில் அதிகரித்து வருவதால் சாதிக் கொடுமைகள் படிப்படியாக மறையத் தொடங்குகின்றன.

4. இந்திய அரசின் நடவடிக்கைகள்

விடுதலைக்குப்பின் மத்திய அரசு பல்வேறு தீவிரக் கொள்கைகளைப் பின்பற்றிச் சாதி வேறுபாடுகளைத் தகர்த்தெறியப் போராடி வருகின்றது. முதலாவதாக, அரசியல் சட்டத்தில் சாதி, மத, கொள்கை, நம்பிக்கையில் பேத மேற்படுவதை ஒழித்துக்கட்ட வகை செய்யப்பட்டுள்ளது. இவைகளில் எதையும் பின்பற்ற அடிப்படை உரிமை வழங்கப்பட்டுள்ளது. சமூகத்தினிடையே காணப்படும் ஏற்றத்தாழ்வைக் குறைக்கவும், இச் சட்டம் வகை செய்துள்ளது. இதனடிப்படையில் பட்டியலிடப்பட்ட வகுப்பினர், பிற்பட்ட வகுப்பினர்களுக்குப் பல்வேறு பணி, தொழில் துறைகளில், இடங்கள் ஒதுக்கப்படுகின்றன. மூன்றும் திட்டக் காலத்தில் சாதி முறையை ஒழிக்கும் பல்வேறு செயல் நடவடிக்கைகளுக்காக ரூ. 114 கோடி ஒதுக்கப்பட்டது. இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காகவும், தீண்டாமையை ஒழிப்பதற்காகவும் காந்திஜி அவர்கள் போராடியது எளிதில் மறைந்துவிட முடியாததாகும். தற்போதயை அரசு தாழ்த்தப்பட்ட மக்களின் சமூகப் பொருளாதார நிலையை உயர்த்த மிகத் தீவிரமான நடவடிக்கைகளைப் பின்பற்றி வருகிறது.

## சாதிமுறையின் அமைப்புகள்
(Caste Associations)

கல்வி வளர்ச்சி, மேற்கத்திய பொருளாதார சிந்தனை, நகரமயம், அரசியல் ஜனநாயகம், போக்குவரத்து முறை, புதுத் தொழில் நுட்பம் போன்ற பல்வேறு காரணிகள் சாதிக் கொடுமைகளைக் குறைக்க வகைசெய்து வந்த போதும் சில சக்திகள் சாதி மாற்றமின்மைய அதிகரித்து வருகின்றன. ஒரு குறித்த வகுப்பினர் தங்கள் சமூக அந்தஸ்தை நிலைநாட்டவோ அல்லது உயர்த்தவோ சாதிச் சங்கங்களை எல்லா இடங்களிலும் ஏற்படுத்தி வருகின்றனர், பழங்கால சாதிப் பஞ்சாயத்துகள் தற்போது கிராமங்களிலும். வட்டாரங்களிலும் சாதிப்பற்றை அதிகரிக்கும் நிலைக்கு மாற்றமடைந்துள்ளன. சாதி உணர்வும், சாதிப்பற்றும் அதிகரித்து வருவது வெளிப்படையாக உணரலாம். கிராமங்களில் சாதிமுறை வலுப்பெற்றுக் காணப்படுகிறது. கிங்க்ஸ்லீடேவிஸ் குறிப்பிடுவது போல், "கிராமம் ஆதிக்கம் செலுத்தி வரும் வரைக்கும் சாதியை ஒழிப்பது மிகவும் கடினமாகும். முக்கியமாக அது இந்துக்களின் மதத்திலும், ஆன்மீகக் கொள்கையிலும் தற்போது ஆழமாக வேரூன்றிவிட்டது."[1]

## சாதிமுறையை ஒழிக்கும் வகைகள்

சாதிமுறையை ஒழிக்கச் சமூக ரீதியில் புத்துணர்வுப் பெற்ற தன்னிச்சையான கொடுங்கோலர் ஒருவரை நியமித்து முன்னேறும் சமூக ஒழுங்கிற்குத் தேவையானவற்றை உருவாக்க முடியுமென்று சிலர் கருதுகின்றனர்.[2] ஆனால், இம் முறையால் சமூகக் கொடுங்கோன்மையும், சமூக ஒழுங்கீனங்களும் ஏற்பட்டுப் பெருத்த சமூக இழப்பு ஏற்படும். மேலும், முடிவையும் உறுதியாகக் கூற முடியாது. ஏழ்மை நாடுகளுக்குப் புரட்சிகரமான முறையைவிட எழுச்சிகரமான முறைதான் தகுந்ததாக அமையமுடியும். ஏனெனில் சமூக முறையிலும் பொருளாதார வளர்ச்சியிலும் புரட்சிகரமான முறையினாலேற்படும் பேரிடியை ஏழ்மை நாடுகள் தாங்க முடியாது. சமூகச் சீர்திருத்தம், கல்வி வளர்ச்சி, முக்கியமாக பெண்பாற் கல்வியோடு கூட, தொழில் மயத்தினால் இந்தியப் பொருளாதாரத்தின் கிராம இயல்பு மாற்றமடைந்தால், ஏராளமான உறுதி கொண்ட சமூகப் பொருளாதாரச் சக்திகள்

1 கிங்க்ஸ்லீ டேவிஸ் (Kingsley Davis), 'இந்தியா—பாகிஸ்தானின் மக்கட்தொகை' ப. 175.

2 D. S நாக் (D. S. Nag), 'வளர்ச்சியுறுப் பொருளாதாரத்தின் பிரச்சினைகள்' ப. 11Σ.

உருவெடுத்துச் சாதிமுறையை ஒழித்துக்கட்டி ஒரு புதுச் சமூக அமைப்பையும் தோற்றுவிக்கும். அதன் மூலம் உற்பத்திக் காரணிகளைச் சீராக ஒருங்கிணைத்து உழைப்புக்கேற்ற ஊதியத்தை யும், சிறப்புத் தேர்ச்சியைப் பரவலாக்கும் வாய்ப்பையும், பொருளாதார வாய்ப்புகளை அதிகமான அளவு பயன்படுத்தும் சுதந்திரமும் மக்களுக்கு உறுதியாகக் கிட்டும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. இந்தியாவின் சாதி முறையின் எதிர்காலம் இந்திய எதிர்காலத் திட்டமிட்ட பொருளா தார வளர்ச்சியையே பொறுத்திருக்கிறது. நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி சாதிமுறையை ஒழித்து ஒரு புதுப் பொருளாதார சமுதாயத்தை உருவாக்கப் பெருந்துணைபுரியு மென்பதில் ஐயப்பாடு இல்லை. தற்போது இந்தியாவில் பல்வேறு சாதியினர் ஒன்றாகவே உணவருந்துகின்றனர்; மேலும், பல்வேறு சாதி மக்களிடையே மண உறவும், பிராந்தியங்களிடையே திருமணங்களும் படிப்படியாக அதிகரித்து வருகின்றன. தீண் டாமையை ஆதரிப்பது தற்போது சட்டப்படி குற்றமாகும். 'சட்டத் திற்கு முன் எல்லாச் சாதியினரும் ஒருவரே' என்பது நிலை நாட்டப் பட்டுவிட்டது. எல்லா சாதிகள், சமூகத்தினர், இவைகளிலிருந்து ஒன்றுசேர்ந்த ஒரு புதிய நடுத்தர வகுப்பு இந்தியாவில் உருவாகி வருகிறது. இவ் வகுப்பினர் மருத்துவம், சட்டம், பொறியியல், தொழில், தொழில் நுட்பப் பணிகள் போன்ற பல்வேறு சுய தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

## கூட்டுக் குடும்பமுறை
(Joint Family system)

கூட்டுக் குடும்ப முறையென்பது ஒரு பொதுப் பரம்பரை யினரின் பின்வந்தவர்களாகிய ஏராளமான உறவினர்களின் ஒரு வகுப்பாகும். இக் கூட்டுக் குடும்பத்தில் சொத்துகள் எல்லாம் பொதுவாக வைக்கப்பட்டு ஒரு குடும்பத் தலைவராலேயே நிர்வகிக்கப்படுகின்றன. குடும்பத்தின் எல்லோரும் ஒன்றாகவே வேலை செய்கின்றனர். கூட்டாகவே வருவாயும், செலவும் நிர்வகிக்கப்படுகிறது. இம் முறையானது மக்கட்தொகை குறைந் தும் ஏராளமான பயன்படுத்தப்படாத நிலமும் அமைந்திருந்த காலத்திலிருந்தே இக் கூட்டுக் குடும்ப முறை தோன்றித் தொடர்ந்து இன்றும் முக்கியமாகக் கிராமப் பகுதிகளில் பரவலாகக் காணப் படுகிறது. கூட்டுறவு, கூட்டு நடவடிக்கை முறை, (Collectivism) ஆகிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு கூட்டுக் குடும்ப முறை செயல்படுகிறது. இந்திய மக்கட்தொகையில் கிராமப் பகுதிகளில் வாழும் 70 சதவீதத்தினருக்கு மேற்பட்டவர்கள்

கூட்டுக்குடும்ப முறையையே அடிப்படையாகக் கொண்டு பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றனர். இக் குடும்ப முறையின் உறுப்பினர்களில் பெரும்பாலோர் வேளாண்மைத் தொழிலிலேயே ஈடுபட்டுள்ளனர். A. R. தேசாய் அவர்கள் குறிப்பிடுவதுபோல் "பொதுவீடு, பொது நிலம், பொதுப் பொருளாதார நடவடிக்கைகளோடு கூடவே பொது இரத்த உறவைக் கொண்ட சுற்றத்தார்களடங்கிய குடும்ப அமைப்பே விவசாய கூட்டுக் குடும்பத்தை (Peasant household) உருவாக்கு கிறது."[1] கூட்டுக் குடும்பமுறைப் பராமரிப்பு பொருளாதாரத்தின் (Subsistence Economy) அடிப்படை இயல்புகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அங்காடி வளர்ச்சி குறைந்ததாயும், பண்ட மாற்று முறையையே பெருமளவில் பெற்றுள்ளது. பொருள் மாற்ற நடவடிக்கைகளில் பண்டமாற்று முறையே பெருமளவில் பின்பற்றப்படுகிறது. குடும்பத்தின் ஆண்பால் தலைவர் அக் குடும்ப உறுப்பினர்களின் மேல் முழு அதிகாரத்தைப் பயன்படுத்துகிறார். "அத் தலைவர் குடும்பத்தின் ஆளுநராகவும், போதகராகவும் கல்வியூட்டுபவராகவும், நிர்வாகியாகவும் பணிபுரிய அதிகாரமும் உரிமையும் பெற்றுள்ளார்."[2] தனி உறுப்பினர்கள் குடும்பத்தில் அவருக்கு அடங்கிய எல்லோருடனும் ஒன்று சேர்ந்து வாழ்கின்றனர்.

## கூட்டுக்குடும்ப முறையின் விளைவுகள்

நன்மைகள்

*(1)* கூட்டுக்குடும்ப முறையில் கூட்டுறவு உற்பத்தியும் நுகர்வும் காணப்படுகிறது. இம் முறையில் வேலைப் பகுப்பு முறை தகுந்த இடத்தைப் பெற்றுள்ளது. ஏனெனில் குடும்பத்தில் உள்ள உறுப்பினர் ஒவ்வொருவரும் தம் சக்திக்கேற்றப்படி பணிபுரிந்து தம்மால் இயன்றதைக் குடும்பத்திற்கு வழங்குகிறார். மேலும், குடுபத்தின் சுகதுக்கங்கள் அனைத்திலும் சமமான பங்கினைப் பெறுகிறார். இதனால் கூட்டுக் குடும்பத்தை ஒரு "சிற்றளவு சமதர்ம சமுதாய அமைப்பு" எனலாம்.

*(2)* கூட்டுக்குடும்பத்தின் ஒவ்வொரு உறுப்பினரும் தன்னலங் கருதாது பணி புரியவும், தம் சக்திக்கேற்ற வகையில் சம்பாதிக் கவும் தன் தேவைக்கேற்றதைப் பெறவும் பயிற்றுவிக்கப் படுகின்றார். எனவே, இக் குடும்பம் சிறப்பாய் ஒருங்கமைந்த

[1] A. R. தேசாய், 'இந்தியக் கிராம சமூக இயல்' ப. 34.

[2] D. S. நாக் (D. S Nag), 'வளர்ச்சிக் குறைந்த பொருளாதாரத்தின் பிரச்சினைகள், ப. 120.

வண்மையான பொருளாதாரக் கூட்டமைப்பாக அமைந்து ஒரே தொழிலிலியே ஈடுபட்டுள்ளது. எனவே, ஒவ்வொருவருக்கும் இம் முறையானது குறைந்த பட்ச பராமரிப்பு (Subsistence) வாழ்க்கையைப் பெற உறுதியளிக்கிறது. இம் முறையின் மூலம் குடும்பத்தில் உள்ள ஒவ்வோர் உறுப்பினருக்கும் இவ்விதமாகப் பொருளாதாரப் பாதுகாப்புக் கிடைத்துவிடுகிறது. இளம் வயதினர், வேலையில்லாதோர், அனாதைகள், உடலூனமானவர்கள், விதவைகள், முதியோர்கள், கைவிடப்பட்டவர்கள், கெட்டழிந்தவர்கள், ஊதாரிகள் போன்ற ஒவ்வொருவருக்கும் உறைவிடமும் பராமரிப்பும், குறைந்தபட்சமேனும் உறுதியளிக்கப்படுகிறது. இது ஒருவகைச் சமூகக் காப்பீடாக அமைகிறது.

*(3)* கூட்டுக்குடும்ப முறை சில பொருளாதார வளங்கள் வீணடிக்கப்படுவதைத் தடுத்து அவற்றைப் பாதுகாக்கப் பெருந் துணைபுரிகிறது. இம் முறையினால் பண்ணைச் சாதனங்கள், குடும்பப் பொருள்கள் மிகுந்த அளவில் இருப்பது தவிர்க்கப்படுகிறது. குடும்பச் செலவில் கணிசமான அளவு சேமிக்கப்படுகிறது, சொத்துகள் அதிகபட்சமாகச் சிறந்த முறையில் பயன்படுத்தப் படுகின்றன. தியாக உணர்வு, குடும்பப் பொறுப்புணர்வு. செலவில் தீவிரக் கட்டுப்பாடு ஆகியவைகளால் குறைந்த வருவாயில் கூடச் சேமிப்புத் தோன்ற வாய்ப்புக்கிடைக்கிறது. வெளியாளர்களை நம்பிவிட முடியாத நம்பிக்கையான தொழில்களில் ஒருவரை ஒருவர் நம்பும் குடும்ப உறுப்பினர்களே ஈடுபடுவதால் தொழில் பேரளவு நிறுவனமாக மேம்படுகிறது. அப்படியும் உறுப்பினர்களிடையே நம்பிக்கை மோசமேற்பட்டாலும் பணம் கூட்டுக் குடும்பத்தை விட்டு வெளியே சென்று விடுவதில்லை. ஒரு தொழிலின் ஆரம்பக் கட்டத்திலோ அல்லது நெருக்கடியான காலங்களிலோ ஒரே குடும்பத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் ஒருவரை யொருவர் துணைபுரிந்து கொள்கின்றனர். தொழிலாற்றலும், சுய சிந்தனையும் கொண்ட குடும்ப உறுப்பினர்கள் அக் குடும்பத்தின் பொருளாதார மேம்பாட்டிற்கு வகை செய்கின்றனர். "பதினான்காம் நூற்றாண்டில் தோன்றிய இத்தாலிய வங்கி நிறுவனங்கள், ஜப்பான், இந்தியா ஆகிய நாடுகளில் ஏற்பட்ட தொழில் நிறுவனங்களின் தோற்றம் ஆற்றல் மிகுந்த ஒரு சில குடும்ப வகுப்பினர்களாலேயே தோன்றியுள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்."[1] ஜப்பானின் 'ஜியாபட்ஸி' குடும்ப வகுப்பினரையும், இந்தியாவின் 'டாடா, பிர்லாக்களையும்' இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

[1] D. S. நாக் (D S. Nag), 'வளர்ச்சி குறைந்த பொருளாதாரத்தின், பிரச்சினைகள்' ப. 120,

4. குடும்பப் பரம்பரைப் பெருமையின் உணர்வு, குடும்ப அந்தஸ்தையும் சொத்தையும் கட்டிக்காக்க வேண்டுமென்ற சிந்தனை, உறுப்பினர்களைக் கடுமையாக உழைக்கத் தூண்டுகிறது. இதற்காக அவர்கள் மிகச் சிக்கன வாழ்க்கையையும் மேற்கொள்கின்றனர். ஏராளமான உறுப்பினர்களால் குடும்பத்தின் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஊறு நேர்ந்தாலும் கூடப் பெரிய குடும்பத்தில் கடும் உழைப்பிற்கும், சிக்கனம், சேமிப்பு, நெறியான வாழ்க்கை போன்றவைகள் ஊக்குவிக்கப்படுகின்றன. பரம்பரைத் தொழில் திறமைக்குச் சில இந்திய கைவினைப் பொருள்களைக் (Indian Handicrafts) கூறலாம். இப் பொருள்களில் முன்னோர்களின் பரம்பரைத் தொழில் திறன் பிரதிபலிக்கிறது. குடும்பப் பொறுப்பை ஏற்றுள்ள தலைவர் அதைப் பாதுகாத்துச் சீர்படுத்தத் தன் சுய உழைப்பையும் சேமிப்பையும் அதிகரிக்கிறார். குடும்ப அந்தஸ்தை உயர்த்த வேண்டுமென்பதற்காகக் குடும்பத்தில் சிக்கனமும் கடுமுழைப்பும் அதிகரிக்கிறது. மேலும் இம் முறையினால் கிராம சமூகத்தில் ஏழ்மையின் கொடுமையால் வகுப்பு வாதமும், கொலை வெறியும் தடுக்கப்பட்டுள்ளது. மற்ற ஏழ்மை நாடுகளைப் போலவே இந்தியாவும் ஏழ்மைக் கோட்டிலிருந்து கடந்து மேல் நோக்கிச் சென்று, நவீனப் பொருளாதார வளர்ச்சிப் பாங்கைப் பெற உறுதி கொண்டுள்ளது. கூட்டுக் குடும்பமுறை பராமரிப்புப் பொருளாதாரத்தையே கட்டிக்காக்கிறது. புதுப் பொருளாதார மாற்றத் திற்கிடையே மற்ற சமூக நிறுவனங்களைப் போலவே கூட்டுக் குடும்ப முறையையும் வளர்ச்சிக்கு உகந்ததாக மாற்றமடையச் செய்தால்தான் நவீனப் பொருளாதாரப் பாங்கை அடைய முடியும். பொருளாதார வளர்ச்சிக்காக அதன் ஆக்க வளங்களுக்கும் அதன் தடுப்பு விளைவுகளுக்குமிடையே ஓர் உன்னத சம நிலையை ஏற்படுத்த வேண்டியது இன்றியமையாததாகும்.

5. கூட்டுக் குடும்ப முறையினால் நில உடைமைகள் பிரிக்கப்படுதலும், துண்டாடப்படுதலும் தவிர்க்கப்படுகின்றன. ஏனெனில் நில உடைமைகள் எல்லாருக்கும் பொதுவான பொறுப்பிலே வைக்கப்பட்டுக் குடும்பத் தலைவர் நிலம் முழுவதையும் பராமரிக்கிறார். இதனால் நிலம் ஒரே கூட்டாக அமைந்து துண்டாடப்படாமல் நவீன உற்பத்தி முறையை மேற்கொள்ளவும் வகைசெய்கிறது. வேளாண்மையை இயந்திர மயமாக்கப் பேரளவு பண்ணை நிலங்கள் எளிதில் கிடைக்கின்றன. குடும்பத்தின் தலைவரே நில நடவடிக்கைகளை உறுப்பினர்களின் உதவியைக் கொண்டு மேற்கொள்கிறார். இதனால் நில உடைமைகளின் சராசரியளவு எப்போதும் நிலைநாட்டப்படுகிறது.

## கூட்டுக் குடும்ப முறையின் குறைபாடுகள்

பொருளாதார வளர்ச்சி ஆரம்பிக்கப்பட்டுவிட்ட நாடுகளுக்குக் கூட்டுக் குடும்ப அமைப்பு அவ்வளவு தகுந்த முறையாகக் கருத முடியாது. திரு. பாயர் மற்றும் யாமி (P. T. Bauer and B. S. Yamey) அவர்கள் குறிப்பிடுவது போல், பராமரிப்புப் பொருளாதாரத்தைக் கொண்ட நாடுகளில் இத்தகைய சமூக அமைப்புகள் தனி நபர்களின் வருவாய் ஊதியத்தைக் குறைத்து நேரடியாகவே பொருளாதார வளர்ச்சியைத் தடுகின்றன. ஏனெனில் தனியொருவன் பரவலான சந்தைகள், ஒருங்கிணைந்த வளங்களின் சீரான அளிப்பு ஆகியவைகளைப் பயன்படுத்தும் பொன்னான வாய்ப்பைப் பெறமுடிவதில்லை. "கூட்டுக் குடும்ப முறை பொருளாதார வளர்ச்சிச் சாதனையின் ஒரு கட்டத்தில் நன்மையுள்ளதாய் இருக்கலாம். ஆனால், அதன் பின் அது பொருளாதார வளர்ச்சியில் சுணக்கத்தையும் மந்தத்தையும் ஏற்படுத்திவிடும்."[1] அதற்குக் காரணம் என்ன என்பதை இனி ஆராயலாம்.

### 1. குடும்பத்தின் இளையவர்களிடம் பொறுப்புணர்ச்சியின்மை

கூட்டுக் குடும்ப முறையில் தனியொருவனின் உழைப்புக்கும் அவன் பெறும் ஊதியத்திற்கும் இடையே உள்ள உறவு மிகவும் வலுவிழந்ததாக உள்ளது. ஏனெனில் எவ்வளவு அதிகம் ஊதியம் பெற்றாலும் அது குடும்பத்தின் பொதுச் சொத்தாகவே போய் விடுகிறது. தனியொருவனின் கூடுதல் முயற்சியின் பலனைக் கடுமையாக முயற்சி செய்யாதவர்களும் பகிர்ந்து கொள்ளுகின்றனர். இதன் விளைவாக, குடும்பத்தின் இளையவர்கள் கடும் உழைப்பில் ஊக்கம் இழந்து விடுகின்றனர். குடும்பத்தின் எல்லாப் பொறுப்புகளையும் நிறைவேற்றக் குடும்பத் தலைவருக்கு உரிமையும் அதிகாரமும் கொடுக்கப்பட்டதால், இளையவர்கள் பொறுப்புணர்சியின்றி டம்ப நுகர்வு, வீண் செலவினங்கள் போன்றவைகளை மேற்கொள்கின்றனர். மாதிரியாக, குடும்பத் தலைவர் குழந்தைகளைப் பாதுகாத்துக் கொள்வார் என்ற எண்ணத்துடன் இளையவர்கள் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறைப்பதில்லை. இதனால் குடும்பத்தின் பாரம் அதிகரித்துச் சேமிப்பும் முதலாக்கமும் குறைகிறது.

### 2. சோம்பேறிகள் அதிகரித்தல் (Growth of drones)

குடும்பத் தலைவருடைய உழைப்பையும் சுய ஆற்றலையும் அடிப்படையாகக் கொண்டு பொருளாதார நடவடிக்கைகள் மேற்

1 பி. டி. பாயர், பி. எஸ். யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம், 1957, ப-64,

கொள்ளப்படுவதால் குடும்பத்திலுள்ள மற்றவர்களின் தனி முயற்சிக்கு ஊக்கம் கிடைப்பதில்லை. தனி நபர்களின் பெரு முயற்சி, சுயவாற்றல், ஊக்கம் இல்லாத நாட்டில் பொருளாதார வளர்ச்சி தோன்றாது. உழைப்பிற்கும் அதன் பலனுக்குமிடையே நேர்த் தொடர்பை ஏற்படுத்தினால்தான் தனியொருவரின் தொழி லாற்றல் அதிகரிக்கும். குடும்பத்தில் தலைவரை நம்பி வாழ்பவர் களின் சுய ஆற்றல் குறைந்து விடுவதால் இம் முறையினால் சோம் பேறிகளின் எண்ணிக்கை குடும்பத்தில் அதிகரிக்கிறது. தங்களுடைய தேவைகள் தாமாகவே பூர்த்திச் செய்யப்பட்டுவிடும் என்ற உணர் வோடு குடும்பத்தில் சார்ந்து வாழ்பவர்களுடைய சுய ஆற்றல், தொழில் துணிவு, கடும் உழைப்பு, சிக்கனம், ஆகியவைகள் தீவிர மாகப் பாதிக்கப்பட்டுக் குடும்பத்தில் பொறுப்பும், சுய மரியாதை யும் இல்லாத சோம்பேறிகள் வளர்க்கப்படுகின்றனர். எனவே, தனியொருவனின் வளர்ச்சி, சுய ஆற்றல், தொழில் துணிவு ஆகிய இயல்புகள், குடும்ப உறுப்பினர்களிடையே நிலையாக ஏற்படுவதற்கு வாய்ப்பில்லாமல் போய் விடுகிறது. இதற்கு மாறாக மேற்கத்தி யர்கள் தங்கள் தனியுரிமை கலாச்சாரப் பாங்கின்படி ஒவ்வொரு வரும் சுய ஆற்றலுடன் சிறப்பான முன்னேற்றத்தைப் பெறப் பெரு முயற்சி செய்கின்றனர். ஒவ்வொருவனும் தனக்குத் தானே தலைவனாகவும் தன்னுடைய உயர்விற்கும் தாழ்விற்கும் தானே பொறுப்பாளியாகிறான். உதாரணமாக, அமெரிக்காவில் தனி யொருவன் பதினெட்டு அல்லது இருபது வயதடைந்ததும் பெற்றோர்களின் பொறுப்பிலிருந்து விடுபட்டுத் தன் எதிர் காலத் திற்குத் தானே பொறுப்பாளியாகிக் கடும் உழைப்பில் ஈடுபடுகிறான். ஜப்பான் நாட்டில் மக்களின் சுறுசுறுப்பான தனியுரிமை நடவடிக் கைகளால் தொழில் வளர்ச்சி மேம்பட்டுள்ளது. இன்றைய வளர்ந்த நாடுகள் தனியுரிமைக் கொள்கையை வளர்ச்சியடையச் செய்வதற்கு முன்பே பதினாறு அல்லது பதினேழாம் நூற்றாண்டில் (A. D.) இக் கொள்கையானது மேலை நாடுகளில் நிலையாக வேரூன்றி இருந்தது. வளர்ச்சியடைந்த நாடுகளில் பொருளாதார வளர்ச்சி மேலும் மேலும் அதிகரிக்கக் கூட்டுக் குடும்பம் என்ற கருத்து படிப்படியாக செல்வாக்கிழந்து விட்டது. [1]

3. தொழிலாளர்களின் பெயர்ச்சியின்மை

கூட்டுக் குடும்ப முறையினால் குடும்ப உறுப்பினர்கள் ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்திற்குச் சென்று தொழில் நடவடிக்கைகளில் ஈடுபடக் குடும்பப் பற்றும், பாசமும், சுலபமாக அனுமதிப்பதில்லை. வீட்டிலேயே தங்கிவிடும் பழக்க வழக்கம் ஊக்குவிக்கப்படுவதால்

[1] W. A. லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 113.

தொழிலாளர் பெயர்ச்சி தடைபடுகிறது. இது கிராமப் பகுதிகளில் மிகவும் அதிகமெனலாம். எடுத்துக்காட்டாக இந்திய உழவர்கள் தொழில் அல்லது இட மாற்றத்திற்கு எதிரான மனப் போக்கையே கொண்டுள்ளனர். அதிக வருவாய் கிடைக்கும் தொழிலிற்கோ அல்லது இடத்திற்குச் செல்லவோ அவர்கள் விரும்புவதில்லை. தந்தையரின் பாதையைப் புதல்வர்களும் பின்பற்ற வேண்டுமென்று குடும்பப் பரம்பரைப் பண்பாடு அவர்களைக் கட்டுப்படுத்துகிறது. இத்தகைய பண்பாட்டினுல் தொழில் சார் பெயர்ச்சி குறைக்கப்பட்டுச் சமூக மாற்றமும் பொருளாதார வளர்ச்சியும் உறுதியாகவே தடைபட்டு விடுகிறது. பேராசிரியர் W. A. லூயிஸ் குறிப்பிடுவது போல் "கூட்டுக் குடும்பப் பரம்பரைப் பண்பாட்டின் பாங்கு பண்டைக் காலத்திற்குச் சிறந்ததாக இருந்திருக்கலாம். ஆனுல், அதன் பல்வேறு பிரச்சினைகளால் தற்காலத்திற்கு அது உகந்ததாக இல்லை. ஒரு சமுதாயம், அதன் ஆவல் மிக்க எதிர்கால முன்னேற்ற நடிவடிக்கைகளை நடைமுறைப் படுத்துவதற்குப் பதிலாக கடந்த காலக் குடும்பப் பண்பாட்டிலேயே ஊறிப் போகும்போது, அதன் வளர்ச்சி முடமாக்கப் படுகிறது." [1]

4. சேமிப்பு, முதலாக்கம் தடைபடுதல்

கூட்டுக் குடும்ப முறையில் குடும்பப் பழமையைப் பண்பாட்டைப் பேணிக்காக்க விழாக்கள், விசேஷங்கள் போன்ற சமயங்களில் ஏராளமான பணம் வீணடிக்கப்படுகிறது. பொதுவாக டம்பப் பொருள்களின் நுகர்வும் (Conspicuous Consumption) 'குடும்ப மரியாதை' என்ற பெயரில் அதிகரிப்பதால் உண்மைச் சேமிப்பு குறைகிறது. இதன் விளைவாகக் குடும்பக் கடன் (Family indebtedness) அதிகரிக்கிறது. பரந்த குடும்ப முறையைக் கொண்ட உழவர் சமூகத்தில் தனியொருவனின் தொழிலாற்றலுக்கு ஊக்கம் இல்லாததால் கடும் உழைப்பு, சேமிப்பு, முதலாக்கம் குறைகிறது. P. T. பாயரும், B. S. யாமியும் குறிப்பிடுவது போல் ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய நாடுகளின் அநேக பகுதிகளில் ஓரளவு செல்வந்தராய் இருக்கும் ஒருவரைச் சுற்றி ஏராளமான உறவினர்கள் வாழ்கின்றனர். "ஆப்பிரிக்கா, இந்தியா, சைனு, ஆகிய நாடுகளின் பெரும் பகுதிகளில், கண்டபடி மிதமிஞ்சிச் செலவழித்துக் குடும்ப உறுப்பினர்களுக்கும் தூரத்து உறவினர்களுக்கும் விருந்தோம்பும் பண்பு பொருளாதார வாழ்க்கையின் ஓர் அம்சமாகக் காணப் படுகிறது." [2] இத்தகைய ஊதாரித்தனமான செலவினங்களால்

[1] W. A. லூயிஸ் 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 117.

[2] பி. டி. பாயர், பி. எஸ். யாமி, வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம், ப- 65.

குடும்ப சேமிப்பு குறைந்து விடுகிறது; முதலாக்க வீதமும் குறைந்து வேளாண்மை, தொழில் போன்ற துறைகளில் முதலீடும் குறைந்து விடுகிறது.

5. வங்கிகளின் தடைபட்ட வளர்ச்சி

கூட்டுக் குடும்ப முறை பரவலாகக் காணப்படும் கிராமப் பகுதிகளில், குடும்ப உறுப்பினர்களிடையே பொறுப்பின்மையாலும் கடும் உழைப்பின்மையாலும் வருமான ஊதியங்கள் குறைவாகவே உள்ளன. இதற்குக் காரணம் சுயதிறமையுடன் உழைக்க ஊக்கமின்மையே காரணமாகும். இதனால் கிராமப் பகுதிகளிலிருந்து விற்பனை எச்சம் (Marketable Surplus) அதிக அளவில் சந்தைகளுக்கு வருவதில்லை. கூட்டுக்குடும்பத்தில் ஏராளமான உறுப்பினர்களும், சார்ந்து வாழ்வோரும், தூரத்து உறவினர்களும் இருப்பதால் உணவு தானியங்களில் விற்பனை எச்சம் ஏற்படுவதில்லை. இதன் விளைவாக வங்கிகளின் நடவடிக்கைகளின் தேவை உழவர்களுக்குத் தேவைப்படுவதில்லை. கிராமப் பகுதிகளின் பெரும்பாலான பகுதிகளில் இன்னும் பண்டமாற்று முறையே இருப்பதால் அங்குப் பணப்புழக்கம் குன்றியுள்ளது. இதனால் வங்கிகளின் பல வகைப்பட்ட பணிகள் விவசாயிகளிடம் நல்ல செல்வாக்குப் பெறவில்லை. சுற்றத்தார்களுக்குத் தெரிந்து விடும் என்ற எண்ணத்துடன், மக்கள் வங்கிக் கணக்கை (Bank Account) ஏற்படுத்த விரும்புவதில்லை.[1] இதனால் வங்கிப்பழக்கம் மக்களிடையே பரவுவது தடைபடுகிறது.

## கூட்டுக்குடும்ப முறையில் மாற்றத்தை ஏற்படுத்துதல்

மேற்கத்திய நாடுகளில் தனிக்குடும்ப முறையே எல்லாப் பகுதிகளிலும் பின்பற்றப்படுகிறது. ஒருபையன் வாலிப வயதடைந்ததும் தந்தையின் குடும்பத்தை விட்டு வெளியேறித் தன் சுய முயற்சியின் அடிப்படையில் உயர்நிலை அல்லது தாழ்நிலை அடைகிறான். இத்தகைய தனி உரிமைக் கருத்தே (Individualism) அமெரிக்கா, கானடா, இங்கிலாந்து போன்ற மேற்கத்திய நாடுகளின் விரைவான பொருளாதார வளர்ச்சிக்குக் காரணமாகும். அதிர்ஷ்டவசமாக இந்தியா, மற்றுமுள்ள ஆசிய நாடுகளில் நவீன வாழ்க்கையின் சக்திகள் வலுப்பெற்று மக்களின் நடவடிக்கைகளில் படிப்படியாக ஊடுருவி வருவதால் கூட்டுக் குடும்ப முறை தன் செல்வாக்கிழந்து வருகிறது. இந்தியாவில் இம்முறை சக்தியிழந்து வருவதன் காரணங்கள் வருமாறு:—

1 பி. டி. பாயர், பி. எஸ். யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம், ப. 66.

1. இந்தியாவிலும் தற்போது தனிஉரிமை உணர்வு (Spirit of Individualism) மக்களிடம் மிக விரைவாகப் பரவி வளர்ந்து வருகிறது. இதனால் கூட்டுக் குடும்ப முறை விரைவாக உடைபட்டு வருகிறது. குடும்பத் தலைவருக்குப்பின் கூட்டுக் குடும்பங்கள் பிரிந்து விடுகின்றன. தாழ்ந்த சாதி வகுப்பினரிடையே தந்தையர் உயிருடன் இருக்கும் போதே குடும்பம் பிரியத் தொடங்கி விடுகிறது. கூட்டுக் குடும்ப முறையில் பிரிவினை ஏற்படுவதற்குத் தற்போது அநேக காரணிகள் காரணமாய் உள்ளன.

2. நிலத்தில் அதிகரித்துவரும் மக்கள் தொகையின் அழுத்தத்தினாலும் (Pressure of Population) கூட்டுக் குடும்ப அமைப்பு சிதறுண்டு வருகிறது. மக்கட்தொகை மிகவிரைவாக உயர்ந்து வருகிறது. ஆனால், அதற்கேற்றபடி நிலத்தின் அளவு அதிகரிப்பதே இல்லை. எனவே குடும்பத்தின் சில உறுப்பினர்கள் மற்ற வேலைகளில் ஈடுபடுவதற்காக் குடும்பத்தை விட்டு நகரங்களில் வேலை தேடுவதற்காக வந்து விடுகின்றனர். தொழில் துணிவும், சுயஆற்றலும் கொண்ட உறுப்பினர்கள் கூட்டுக் குடும்பத்தை விட்டு வெளியேறி வேறு இடங்களுக்குச் சென்று பணிபுரியத் தொடங்குகின்றனர். பரம்பரைக் குடும்பத் தொழில்களில் மக்களின் ஆர்வம் குறைந்து விடுவதாலும் பெயர்ச்சி அதிகரிக்கிறது.

3. பொக்குவரத்து, செய்தித்தொடர்பு வசதிகளின் வளர்ச்சியினால் சிற்றூர்களிலும் புதிய நகரங்களிலும் சென்று வேலைதேடும் வாய்ப்பு அதிகரிக்கிறது. கூட்டுக் குடும்பத்தின் தொழில் துணிவும், சுய ஆற்றலும் கொண்ட உறுப்பினர்கள் பரம்பரைத் தொழில்களை விட்டுவிட்டுப் புது வேலைகளில் சேர்வதற்குப் பேரார்வம் கொள்கின்றனர்.

4. நகரங்களில் இடநெருக்கடி காரணமாகக் கூட்டுக்குடும்ப அமைப்பு ஏற்படுத்தப்பட முடிவதில்லை. ஒற்றை அறை கொண்ட இல்லங்களை (Single Room Flats) இதற்கு உதாரணமாகக் கூறலாம். புதல்வர்கள் வளர்ந்து விட்டபின் சிறு வீட்டிலேயே இருக்க இயலாததால் தனிக்குடும்பத்தை ஏற்படுத்திக் கொள்ளுகின்றனர். எனவேதான் நகரங்களிலும் பெரிய ஊர்களிலும் கூட்டுக்குடும்ப அமைப்பைப் பராமரிப்பது கடினமாக உள்ளது.

5. உளச்சார்பான காரணங்களாலும் (Psychological factors) தனிஉரிமை முறை வளர்ச்சியடைந்து கூட்டுக்குடும்ப முறை தளர்ச்சிபெற்று விடுகிறது. கூட்டுக் குடும்ப அமைப்பில் உறுப்பினர்களிடையே மனக்கசப்பு ஏற்படுவதாலும குடும்பத்தை

விட்டுச் சிலர் பிரிந்து விடுகின்றனர். மேற்கத்திய கருத்துகளும் வாழ்க்கை முறையும் மக்களால் பெரிதும் பின்பற்றப்பட்டு வருவதால் இந்தியப் பரம்பரைப் பண்பாட்டு முறை செல்வாக் கிழந்து வருகிறது.

6. கடைசியாகப் புதிய தனியுரிமைச் சமூகச் சட்டமும் நடவடிக்கைகளும் பழைய பண்பாட்டு முறையை வெகுவிரைவில் மாற்றியமைக்கப் பெருந்துணை புரிந்து வருகிறது. இவைகளின் விளைவாகக் கூட்டுக் குடும்ப முறைப் படிப்படியாகப் பிரிவுபடுத்தப் பட்டு மறைந்து வருகிறது.

## நடுத்தரக் குடும்ப அமைப்பு

கூட்டுக் குடும்ப முறை இந்தியாவிலிருந்து விரைவாக மறைந்துவிடுவதற்கான உறுதியான அறிகுறிகள் காணப்படு கின்றன. ஆனால் உறுதியான பதிலீட்டுக் குடும்ப அமைப்பின்றி, கூட்டுக் குடும்ப முறை திடீரென்று நீக்கப்பட்டுவிட்டால் கிராம சமுதாயத்தில் பிரிவினைச் சக்திகளால் சில பாதக விளைவுகளும் ஏற்படலாம். கூட்டுக்குடும்ப முறையினால் சக்தியற்றவர்கள் சார்ந்து வாழ்பவர்கள், வயது முதிர்ந்தோர் போன்றவர்கள் பராமரிக்கப்பட்டுக் கண்காணிக்கப்பட்டனர். ஆனால் இம்முறைக் குப்பதிலாகத் தனியுரிமைக் குடும்பமுறை தோன்றினால் இவர்களின் கதி பரிதாபத்திற்குரியதாகிவிடும். ஒருவரையொருவர் தொண்டு செய்யும் உணர்வு சமூகத்திலிருந்து மறைந்துவிடும். எனவே, பரம்பரைக் கூட்டுக் குடும்ப முறைக்கும், தீவிர அமெரிக்காவைப் போன்ற தனியுரிமைக் குடும்ப முறைக்கும் இடைப்பட்ட ஒரு நடுத்தரக்குடும்ப அமைப்பு முறையை இந்தியா போன்ற ஏழ்மை நாடுகளில் ஏற்படுத்த வேண்டியது இன்றியமையாததாகும். அப்போதுதான் கூட்டுக்குடும்ப முறையை அடிப்படையாகக் கொண்ட தன்னலமற்ற சேவையையும். தனியுரிமைக் குடும்பத்தின் தனியொருவன் சுய ஆற்றலையும் ஒன்றாகச் சேர்க்க முடியும். அத்தகைய நடுத்தரக் குடும்ப அமைப்பை ஏற்படுத்த இயலா விட்டால், முதியோர், உடல் வலிமையற்றோர், கைவிடப் பட்டோர் போன்றோரைக் காப்பாற்ற வேண்டிய பெரும் பொறுப்பு அரசாங்கத்தையே சார்கிறது. இதற்காக அரசு தகுந்த, முழுமையான சமூக காப்பீட்டு (Social Security) நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். அத்தகைய முழுமாற்றம் ஏற்படும் வரை கூட்டு அல்லது பரந்த குடும்ப அமைப்பின் உறுப்பினர்கள் துன்பப்படுபவர்களுக்குத் தங்கள் உதவிக் கரத்தை நீட்டிப் பராமரிப்புப் பொருளாதாரத்திற் கேற்ற சமுதாயக் காப்பீடாகத்

தொடர்ந்து நீடிக்க வேண்டும்.[1] இத்தகைய சூழ்நிலையில் கூட்டுக் குடும்ப முறையின் படிப்படியான மறைவிற்கும், நவீன சமூகக் காப்பீட்டு நடவடிக்கைகளின் வளர்ச்சி வேகத்திற்குமிடையே ஒரு சம விகிதத் தொடர்பை ஏற்படுத்துவது சாலச் சிறந்ததாகும். சமூக இயல் அறிஞர்கள் இம்மாற்றப் பிரச்சினைகளை ஆராய்ந்து முடிவுகளைக் கொள்கைகளை வகுப்போரிடம் அறிவிக்க வேண்டும் அப்போதுதான் இம் மாற்றம் குறைந்த சமூக செலவில் (Social Cost) முடிவுபெற முடியும். சமுதாய மாற்றத்திற்கான சமூக செலவு குறைவாக இருந்தால், பொருளாதார மாற்றத்தில் (Economic Transformation) மக்களின் ஆர்வம் மிகும். எனவே, திட்ட நிபுணர்கள் சமூக மாற்றத்திற்கான சமூக செலவை ஆர்வமுடன் குறைக்கப் பெருமுயற்சி செய்யவேண்டும்.

## சொத்துரிமைச் சட்டங்கள்
(Laws of inheritance)

**விளக்கம்**

ஒரு சமுதாயத்தின் சொத்துரிமை, மரபுரிமை (Succession) அதன் பொருளாதார நடவடிக்கைகளைப் பெருமளவில் பாதிக்கின்றன. எனவே பொருளாதார வளர்ச்சியில் அவைகள் மிகவும் முக்கியத்துவம் பெற்று விளங்குகின்றன. மூன்று முக்கியமான கட்டங்களின் மூலம் சொத்துரிமை படிப்படியாக மாறுபடுகிறது. பொதுச்சொத்து (Communal Property), கூட்டுக்குடும்பச் சொத்து, தனியுரிமைச் சொத்து, மிகவும் பிற்பட்ட நிலையில் உள்ள பொருளாதாரங்களில் சொத்துரிமையின் முதல்கட்டம் காணப்படுகிறது. இந்தியாவில் இரண்டாம் கட்டச் சொத்துரிமை முறை பெரும் பகுதிகளில் இருந்தபோதிலும் மூன்றும் கட்டத்தை நோக்கி நாடு செல்வதையும் உணரமுடிகிறது. இந்துச் சட்டப்படி (Hindu law) சொத்துரிமை என்பது தனியாக இல்லை. குடும்பத்தின் தலைவர் இறந்தபின் சொத்துரிமை ஒன்றும் மாறுவதில்லை. சொத்துப் பிரிவினை கட்டாயப்படுத்தப்பட்டாலன்றிச் சொத்து பிரிக்கப்படாமல் கூட்டு உரிமையிலேயே இருந்து விடுகிறது. கூட்டுக் குடும்பம் பிரிக்கப்பட்டால் தந்தையருடன் எல்லா புதல்வர்களுக்கும் சொத்தில் சம உரிமை கிடைக்கிறது. சமீபத்தில் இச் சட்டம் திருத்தப்பட்டதால் தற்போது தந்தையரின் சொத்தில் புதல்வர்களுடன் புதல்விகளுக்கும் சம அளவில் பங்கு கிடைக்கிறது. மேலும், இளவரசர்கள், ஜமீன்தார்கள் ஆகியவர்களைத்

1 W. A. லூயிஸ், பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு, ப. 113—115.

தவிர மற்ற எல்லோருக்கும் மூதாதையர் சொத்தைத் தலைமகனே பெறும் சட்டம் (Law of Primogeniture) இந்தியாவில் பொருந்துவதில்லை. இச் சட்டத்தின்படி சொத்து குடும்பத்தில் முதலில் பிறந்த தலைமகனுக்கு மட்டும்தான் உரிமையாகிறது. இத்தகைய சட்டம் இங்கிலாந்திலும் மற்றும் சில ஐரோப்பிய நாடுகளில் மட்டுமே பின்பற்றப்பட்டு வருகிறது. இந்தியாவில் மிதாக்ஷரா முறை (Mitakshara System) யின்படி முன்னோர்களின் சொத்து ஒரு வகுப்பினரால் கூட்டாக வைக்கப்பட்டுப் பராமரிக்கப்படுகிறது தயபாக முறையின்படி (Dayabhaga) குடும்பத் தலைவர் அவர் வாழ்நாள் முழுவதும் சொத்தின்மேல் முழு உரிமையைப்பெற்றுப் பராமரித்து வருகிறார். மற்றக்குடும்ப உறுப்பினர்களுக்குச் சொத்தின்மேல் எவ்வித உரிமையும் இல்லை.

## சொத்துரிமைச் சட்டங்களின் பொருளாதார விளைவுகள்

சொத்துரிமைச் சட்டங்களின் விளைவாகச் சமுதாயத்தில் சாதாரண வசதிகளைக் கொண்ட ஏராளமான நடுத்தர வகுப்பினர் சமநிலையில் வாழ முடிகின்றது. இதன் விளைவாக முதலாளித்துவத்தின் பல்வேறு சீர்கேடுகள் தவிர்க்கப்படுகின்றன. இருப்பினும் சொத்துரிமையினால் நன்மைகளை விடத் தீமைகளே அதிகமாகக் காணப்படுகின்றன. அவைகள் பின்வருமாறு:

(1) பேரளவுத் தொழில் தடுக்கப்படல்

பொருளாதார வளர்ச்சிக் கட்டத்தில் சொத்துரிமையைப் பெறுதல் மூன்று விளைவுகளை ஏற்படுத்துகிறது: சொத்துரிமையினால் வாரிசு சொத்தின் மேல் (Inherited Property) ஏற்படும் விளைவு, சொத்துரிமையினால் சொத்துரிமை பெற்றவரின் பொருளாதார நடவடிக்கைகளின் மேல் ஏற்படும் விளைவு, பொதுவாகப் பொருளாதார வளர்ச்சியின் மேலேற்படும் விளைவு. முதலாவதாக, சொத்தைப் பெறுபவர் சொத்தைப் பாதுகாக்கவும் மேலும், பெருக்கவும் தகுதியற்றவராகவும் இருக்கலாம். இதன் விளைவாகச் சொத்து சீரழியவும் வாய்ப்பு ஏற்படும். சொத்துரிமை தாமாகவே மாற்றப்பட்டுவிடுவதால் சொத்தைப் பெற்றவன், 'தான் உயர்ந்தவன்' என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்கிறான். இதனால் அவனிடம் புத்தாக்க உணர்வு தளர்ச்சியடைகிறது. சொத்துரிமையினால் உழைப்புக்கும் ஊதியத்திற்குமிடையே உள்ள உறவு குறைந்து விடுவதால்தான் கேட்காமலே பெற்ற பெரும் பொறுப்பை முக்கியமாகக் கருதுவதில்லை. சொத்தைப் பெற்றவர் உண்மையிலேயே சுய ஆற்றல் கொண்டவராக இருந்தால் தொழில் மேலும் தொடர்ந்து மேம்பாடு அடையும். சொத்தைப் பெற்றவர்

சொத்தைக் கொண்டு முன்னேறுவதற்கு நல்ல பயிற்சி பெற்றால் சமுதாயத்திற்கு நன்மையேற்படும் நிலக்கிழார்கள் அல்லது லேவாதேவிக்காரர்களின் புதல்வர்கள் இளம பருவத்திலேயே தங்கள் பரம்பரைத் தொழிலை எதிர்காலத்தில் பொறுப்புடன் நடத்த நல்ல பயிற்சி பெற்றுக்கொள்கின்றனர். ஆனால், பொதுவாகச் சொத்தைப் பெற்றவர்கள் உல்லாச வாழ்க்கையையே நடத்துகின்றனர். இதனால் சொத்துரிமையின் அடிப்படையில் நடைபெறும் பொருளாதார நடவடிக்கைகள் நடைமுறையில் நீண்டநாள் வலுப்பெற்று நிலைத்து நிற்பதில்லை. இதன் விளைவாக முதலாக்கத்தின் அடிப்படையிலேற்படும் பேரளவுத் தொழில் நிறுவனங்களின் வளர்ச்சி தடுக்கப்படுகிறது.

2. நில உடைமைகளின் பிரிவும், துண்டாடப்படுதலும் அதிகரித்தல் (Increase in Subdivsion and Fragmentation of Holdings)

சொத்துரிமையின் விளைவுகள் பெரும்பாலும் சொத்து எந்த முறையில் சொத்தைப் பெறுபவர்களிடம் கைமாறுகிறது என்பதைப் பொறுத்துதான் அமையும். சொத்து மூத்த மகனிடம் மட்டுமோ அல்லது அவருக்குப் பின் வருபவர்களிடமோ எந்த முறையில் செல்கிறது என்பதையும் அறியவேண்டும். மூதாதையின் சொத்தைத் தலைமகனே பெறும்முறை (Primogeniture) யால் சொத்து பிரிக்கப்பட்டு விடாமல் ஒருங்கமைந்திருந்து பேரளவுச் சிக்கனங்கள் (Economies of large Scale) பெற முடிகிறது. இதனால் நில உடைமைகள் பிரிக்கப்பட்டுத் துண்டாடப்பட வேண்டிய நிலை ஏற்படுவதில்லை. நில உடைமைகள் மேற்கொண்டு பிரிக்கப்படாமல் இருக்கும். மிதாக்ஷர முறையில் (Mitakshara system) சொத்து குடும்பக் கூட்டு உரிமையில் இருந்துவிடுவதால் மேற் குறிப்பிட்ட நன்மைகள் கிடைக்கின்றன. மூதாதையரின் சொத்தைத்தலைமகனே பெறும் முறையினால் குடும்பத்தின் மற்ற இளைய புதல்வர்கள் வேறு இடங்களுக்குச் சென்று வேலைகளில் ஈடுபட வேண்டியிருப்பதால், சுய சிந்தனையும் சுறுசுறுப்பும் அவர்களிடம் அதிகரிக்கிறது. ஆனால், இம் முறையினால் எல்லோரிடமும் சொத்து சமமாகப் பங்கிடப்படுவதில்லை. குடும்பத்தின் தலைமகன் ஊதாரியாகவும் சுறுசுறுப்பில்லாதவனாகவும் இருக்கலாம். இதனால் புத்தாக்கங்கள் தோன்ற முடிவதில்லை. சொத்து ஒருசிலரிடமே குவிதலால் இச் சமுதாயங்களில் ஏற்றத்தாழ்வும் அதிகரிக்கிறது. இக் குறைகள் இந்துச் சட்டத்தில் காணப்படவில்லை. இச் சட்டத்தின்படி சொத்து எல்லோருக்கும் சமமாகப் பங்கிடப்படுகிறது. கிராமங்களில் சொத்து ஒரு குடும்பத்தின் கூட்டு உரிமையில் இருப்பதால் அங்குச் சுதந்திர உழவர் நிர்வாகிகளைக் கொண்ட (Peasant Proprietors) ஒரு நிலையான கிராம சமுதாயம்

உருவாகியுள்ளது. ஒவ்வொருவனும் தன் தொழிலைத் தொடங்கு முன் சிறிதளவு வசதியைப் பெறுகிறுன். சொத்தில் பிரிவினை ஏற்பட்ட பிறகும், கிடைத்த சொத்தை மேலும் பெருகச் செய்யும் பேரார்வமுடன் கடும் உழைப்பை மேற்கொள்கிறுன். பேராசிரியர் W. A. லூயிஸ் குறிப்பிடுவது போல், "எல்லோரும் சம அளவு சொத்து வசதியைப் பெற்றுத் தொடங்கும் தொழில் நடவடிக்கைகளால் ஒரு சமுதாயத்தில் பொருளாதார வளர்ச்சி அதிகரிக்கும். மேம்பட்ட ஆற்றலைக் கொண்டவர்களிடம் பொருளாதார நடவடிக்கைகளின் பொறுப்பு நன்ருக அறிந்தபின் ஒப்படைக்கப் பட்டால் ஒரு சமுதாயத்தில் பொருளாதார வளர்ச்சி மேலும், பன்மடங்கு அதிகரிக்கும்."[1] இந்துச் சொத்துரிமைச் சட்டத்திஞல் சில பாதக விளைவுகளும் ஏற்பட்டுள்ளன. அது அதிக அளவு மூலதனச் சேர்க்கையையும், பேரளவு நிறுவனங்களின் வளர்ச்சியையும் தடுக்கிறது. சொத்து எல்லோருக்கும் சரிசமமாகப் பங்கிடப் பட்டு விடுவதால், ஒவ்வொருவருக்கும் மிகக் குறைவான அளவு சொத்தே கிடைக்கிறது. இதஞல் சேமிப்புக் குறைகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, இச் சட்டங்களிஞல் நில உடைமைகள் பல துண்டுகளாகப் பிரிக்கப்பட்டு, பல இடங்களில் துண்டாடப்பட்டு விடுவதால் சிக்கன மற்ற நில உடைமைகள் தோன்றி வேளாண்மையில் எந்திரமயத்தை உட்புகுத்த முடிவதில்லை. ஏற்கெனவே மிகச் சிறிய அளவு நில உடைமைகளும், அதிக மக்கட் தொகை அழுத்தமும் கொண்ட நாட்டில் இத்தகைய சூழ்நிலை மிகவும் அபாயத்திற்குரியதாகும். நில உடைமை ஒருங்கிணைப்பும் (Consolidation of Holdings) இணைந்த பண்ணை முறையும் (Joint Farming) தான் கிராமப் பொருளாதாரம் தேக்கநிலையிலிருந்து விடுபடப் பெருந்துணைபுரிய முடியும். சொத்துரிமைச் சட்டங்கள் பொருளாதார வளர்ச்சிக்கு உகந்ததாக அமையக் கீழ்க்கண்ட முறைகளில் வேளாண்மைத் துறையில் மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும். சிக்கன உடைமைகளை ஏற்படுத்துதல், குடும்ப வளங்களை ஒருங்கிணைத்துப்பயன்படுத்தல், பெரு முயற்சிக்கு ஊக்கம் அளித்தல், குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களிடையே சம பங்கிட்டு நீதியை ஏற்படுத்துதல் ஆகியவைகளாகும். சிக்கனமற்ற நில உடைமைகள் ஆசிய நாடுகளின் வேளாண்மைப் பொருளாதாரங்களில் ஆழ வேரூன்றிவிட்டன. மாதிரியாக, பெரும்பாலான இந்திய மாநிலங்களில் சொந்த உடைமைகளில் ஒன்றில் அரைப் பங்கிலிருந்து மூன்றில் இரண்டு பங்கு நில உடைமைகள் 5 ஏக்கருக்கும் குறைந்த அளவினைக் கொண்டதாகவே உள்ளன. அனைத்திந்திய கிராமக் கடன் ஆய்வின்படி (1956) "சிறிய உழவஞல் பயரிடப்பட்ட நிலத்தின் அளவு சுமார் 3 ஏக்கராகும்."

[1] W. A. லூயிஸ்- பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு, ப-120.

இந்தோனேசியாவில் கிழக்கு ஜாவாவிலுள்ள 95 சதவீத உழவர்கள் ஓர் ஏக்கருக்கும் 2 ஏக்கருக்கும் இடைப்பட்ட அளவுடைய பண்ணைகளையே பெற்றுள்ளனர். ஜப்பானில் மொத்த உடைமைகளில் மூன்றில் ஒரு பங்கு 0·496 ஹெக்டாருக்குக் குறைவாகவும், 65 சதவீத நில உடைமைகள் 0·992 ஹெக்டாருக்குக் குறைவாகவும் இருக்கின்றன.[1]

3. சட்ட நடவடிக்கைகள் (Litigation)

மூன்றுவதாக, சொத்துரிமைச் சட்டங்களின் விளைவாகக் கூட்டு வாழ்க்கை முறையில் மக்களின் ஆர்வம் குறைந்து விடுவதால் சொத்து பிரிக்கப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. பொதுவாகவே சொத்துரிமையினால் வம்சாவளிச் சொத்து (Inherited Property) பிரிக்கப்பட்டு விடுகிறது. சொத்தைத் சமமாகப் பங்கிட்டுக் கொள்வதில் இளையவர்களிடையே மன ஒற்றுமை ஏற்படாமல் மனக் கசப்பு ஏற்பட்டு விடுகிறது. எந்தச் சொத்து யாருக்குக் கொடுக்கப்படுவது, சொத்தைத் தக்கமுறையில் எப்படி மதிப்பிடுவது போன்ற பல்வேறு பிரச்சினைகளைத் தீர்க்க கும்பத்தின் இளைய உறுப்பினர்கள் சட்ட நடவடிக்கைகளில் ஈடுபட்டுத் செல்வத்தை வீணடிக்கின்றனர். இதன் விளைவாகவும் சேமிப்பும், முதலாக்கமும் பெருகுவது தடைபடுகிறது.

குறைபாடுகளைப் போக்கும் முறைகள்

மேற் குறிப்பிடப்பட்டுள்ள குறைபாடுகளைத் தீர்க்க, ஒரே வகையான, எல்லா ஏழ்மை நாடுகளுக்கும் பொருந்தத்தக்க நவடிக்கைகளைப் பரிந்துரைக்க இயலாது. ஏனெனில் ஒவ்வொரு ஏழ்மை நாட்டிலுமுள்ள வரலாற்று, சமூக, வளர்ச்சிப் பிரச்சினைகள் வேறுபடுகின்றன. ஆனால், பெரும்பாலான ஏழ்மை நாடுகளில் சில திருத்தங்களுடன் பின்பற்றத்தக்க அடிப்படை நடவடிக்கைகளைத் தொகுத்துக் கூறமுடியும். அவைகளாவன: மக்கட் தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்துதல், வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குதல், விவசாயமல்லாத வேறு தொழில்களில் வேலை வாய்ப்பை அதிகரித்தல், நிலச்சீர்திருத்தங்களை (Land Reforms) மேற்கொள்ளுதல், தொழிலாளர், மூலதனம் இவைகளின் பெயர்ச்சியின்மீதுள்ள சமூகத் தடைகளை நீக்குதல், கல்வி, கூட்டுறவு நிறுவனங்கள் பரவலாக்கப்படல் போன்றவைகளாகும். இந்தியாவின் பரந்த நிலச் சீர்திருத்தங்களின் குறிக்கோள்களைப் பற்றி இந் நூலின் முதல் பகுதியில் ஆராயப்பட்டுள்ளது. இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் ஜமீன்தாரி முறை ஒழிக்கப்

1 ஜப்பானின் புள்ளிவிவர வருடாந்திர நூல் (1954) (Japan Statistical year Book)

பட்டு ரயத்வாரி முறை (Ryotwari system) ஏற்படுத்தப்பட்டுள்ளது. ரயத்வாரி முறையினால் விவசாயி நேரடியாகவோ அரசிடம் நிலத் தீர்வைவரி (Land Revenue) செலுத்த முடிகிறது: சுதந்திர நில நிர்வாக உரிமையையும் பெற முடிகிறது. தற்போது பல்வேறு மாநிலங்களில் நில உச்ச வரம்புகள் நிர்ணயிக்கப்பட்டு இவ் வியக்கமும் முன்னேற்றமடைந்து வருகிறது. கூட்டுறவுப் பண்ணை முறையையும் நாட்டில் பரவலாக்க முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு வருகின்றன. ஜப்பானில் மார்ச் 1947-ல் ஒரு நிலச் சீர்திருத்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. அதன்படி நிலச் சொந்தக்காரர்களிடமிருந்து நிலம் கட்டாயமாக வாங்கப்பட்டு உழவர்களுக்கு விற்கப்பட்டுச் சொந்தப் பண்ணைகள் (Owner-farms) உருவாக்கப்பட்டன. இதனால் வேளாண்மை நடவடிக்கைகளில் ஈடுபடாத நிலச் சொந்தக்காரர்கள் வெளியேற்றப்பட்டு விடுகின்றனர். இச் சீர்திருத்தத்தின் மற்றொரு குறிக்கோள் ஜப்பானின் வேளாண்மை உற்பத்தியையும், கிராம ஜன நாயகத்தையும் (Rural Demoeraey) வளர்ச்சியடையச் செய்வ தாகும். இந்தியாவிலும் தலத்திலில்லா நிலக்கிழார் முறையை (Absentee Land-Lordisom) படிப்படியாகக் குறைத்துவிட்டால் வேளாண்மை உற்பத்தி அதிகரிக்கும். லாஓஸ் (Laos), கம்போடியா (Combodia) ஆகிய நாடுகளில் வேறுபட்ட மக்கட் தொகை இயல் நிலை (Demogrophic Condition) இருப்பதால் ஒருவகை நிலச் சீர்திருத்தமும் அங்கு தேவைப்படவில்லை.[1] நிலச் சீர்திருத்த நடவடிக்கைகளுக்கும் சொத்துரிமைச் சட்டங்களுக்கும் நேர் தொடர்பு இல்லையென்றாலும் மறைமுகத் தொடர்பு உண்டு. கிராமப் பகுதிகளிலுள்ள ஏழ்மை, வேலையின்மையைத் தடுக்க பொருளாதார வளர்ச்சி, முக்கியமாக விவசாயமல்லாத வேறு துறைகளில் (Non-agricultural Scetor) வெகு விரைவாகத் தோன்றியே ஆகவேண்டும். இவ் விதத்தில்நிலச் சீர்திருத்தங் களுக்கும் சொத்துரிமைச் சட்டங்களுக்கிடையே தொடர்பு ஏற்படுவதை அறியலாம்.

## நிறுவன காரணிகளில் மாற்றத்தை ஏற்படுத்தல்
## (Change In Institutional Faetors)

மேலே ஆராயப்பட்ட மூன்று சமூக நிறுவனங்கள் பொருளா தார வளர்ச்சியோடு ஒத்துப்போக முடியுமா என்பது விளக்கப் பட்டுள்ளது. சமூக நிறுவன மாற்றங்களின் தன்மை, காரணங்கள், விளைவுகள் ஆகியவைகளை இனி ஆராயலாம். வளர்ச்சியின் ஆரம்பத்தில் நிறுவன மாற்றமில்லாமலேயே பொருளாதார

[1] ஐ நா. நிலச் சீர்திருத்தங்களின் முன்னேற்றம், பகுதி I, ப 1-50,

மாற்றம் ஏற்பட முடியுமென்பது அறியத் தக்கதாகும். மாதிரியாக சமூக நிறுவனங்களோடு தொடர்பில்லாத ஒருநபர் மூலதன அதிகரிப்பு அல்லது புதுத் தொழில் நுட்ப உற்பத்தி பொருளாதார மாற்றம் ஏற்படுவதற்குக் காரணமாக அமையலாம். உண்மையில் பொருளாதார மாற்றம் சமூக நிறுவனங்களின் மாற்றத்தை ஏற்படுத்த முடியும், அல்லது நிறுவன மாற்றங்கள் பொருளாதார மாற்றத்தையும் ஏற்படுத்த முடியும். பொருளாதார காரணிகளின் தொடர்பின்றியே நிறுவன மாற்றம் ஏற்படலாம். மதக் கருத்துகள் அரசியல் அமைப்பு, கல்வி முறை இவைகளில் மாற்றங்கள் உருவாவது பொருளாதார மாற்றத்தினுல் ஏற்படுவதில்லை. அதற்கு மாருக அத்தகைய தனி நிறுவனங்களின் மாற்றம் பொருளாதார வாழ்க்கையில் மாற்றத்தைத் உருவாக்க முடியும். எனவே, நிறுவன, பொருளாதார மாற்றங்கள் தனித்தனியாகவும் ஏற்படலாம்; ஒன்றின் மாற்றத்தால் மற்றென்றிலும் மாற்றம் ஏற்படலாம். மாற்றங்களுக்கிடையே உள்ள தொடர்பை ஏற்படுத்தும் முன் ஒவ்வொரு சமூக அல்லது பொருளாதாரத் தனி மாற்றத்தையும் விஞ்ஞான ரீதியில் ஆராயவேண்டும்.

நிறுவன மாற்றத்தினுல் பொருளாதார மாற்றமேற்படுவதை அறிதல்

நிறுவன மாற்றத்தினுல் பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவது சில காரணிகளைப் பொறுத்ததாகும். அவைகளாவன: நிறுவன மாற்றங்கள் உழைப்புக்கும் ஊதியத்திற்குமிடையே ஏற்படுத்தும் உறவின் அளவு, பேரளவுச் சிக்கனங்களை அளித்து ஊக்குவித்தல், மக்களுக்குப் பொருளாதார சந்தர்ப்பங்களைப் பயன் படுத்திக்கொள்ள விடுதலையளித்தல், இத்தகைய வசதிகளை அளிக்கவல்ல ஒரு நிறுவன அமைப்பினுல் உறுதியாகப் பொருளா வளர்ச்சி மேம்படும். அத்தகைய வசதிகள் உருவாகாத சமுதாயத்தில் பொருளாதார வளர்ச்சி தடைபடும். ஏனெனில் நிறுவன மாற்றம் இத்தகைய சாதகமான சூழ்நிலையைத் தடுத்து விடும்.

பொருளாதார வளர்ச்சியும் நிறுவன மாற்றமும் ஒத்துப் போவதை அறிய நிறுவன மாற்றத்தினுல் எந்த அளவு பொருளா தார வாய்ப்புகளைப் பெற மக்கள் சுதந்திரம் பெறமுடியும் என்பதை ஆராயவேண்டும். சமூகமான சூழ்நிலை ஏற்பட்டதும் பொருளா தார வாய்ப்புகளையும் பயன்படுத்திக்கொள்ள மக்கள் தொடங்கும் போது பொருளாதாரமும் வளர்ச்சியடையத் தொடங்குகிறது. வளர்ச்சியின் நடவடிக்கைகளின் போது புதிய சூழ்நிலைக்கேற்ப சமூக நிறுவனங்களும் தம்மைத் தாமே சரிசெய்து கொள்ள முயற்சி

செய்கின்றன. இந்நிலை மேலும், தொடர்ந்து சீர்பட்டுப் புதிய செயல் முறைகளில் ஊக்கத்தை அதிகரிக்கும் மாதிரியாக ஒரு பராமரிப்பு கிராமப் பொருளாதாரத்தில் (Subsistence Village-Economy) அரசு குழாய்க் கிணறுகளை ஏற்படுத்தித் தேவையான நீரைப் பயன்படுத்திக்கொள்ள அனுமதியளிப்பதாக வைத்துக் கொள்ளவோம். தேவையான நீர் அளிப்பு, அதைப் பயன்படுத்தத் தடையில்லா அனுமதி இவைகளால் பராமரிப்புப் பொருளாதாரத்திலேயே ஒரு புரட்சிகரமான மாறுதல் வியத்தகு வகையில் ஏற்படும். இந் நிலையில் பயிரிடும் முறை, சாகுபடியில் தொழில் நுட்பம், மூலதன—நில விகிதம் (Capital-land ratio) ஒருநபர் உற்பத்தித் திறன், விற்பனை நடவடிக்கைகள் ஆகியவைகளில் அடிப்படை மாற்றம் தோன்றும். அங்காடிப் பொருளாதாரத் துறை விரிவடைந்து திறமையினளவு அதிகரித்து, உற்பத்தி எல்லை (Production Frontier) முன்னேக்கி எழுச்சி பெறும்; விவசாய மல்லாத வேறு துறைகளிலும் கூட வேலை வாய்ப்பு அதிகரிக்கும்.[1] பொருளாதார வாய்ப்புகளை மக்கள் பயன்படுத்தத்தொடங்கியதுமே சமூக அமைப்பில் தேவையான திருத்தங்களையும் அவர்கள் செய்துகொள்வர். ஒவ்வொரு அமைப்பு சார் மாற்றமும் (Structural Change) தொடர்ச்சியான சங்கிலி போன்ற சீர்திருத்தங்களை யேற்படுத்தி வளர்ச்சி நடவடிக்கைகளுக்கு தகுந்தாற்போல் நிறுவனங்களையும் சீர்படுத்தும். நிறுவனங்களின் நடவடிக்கைகளின் வேகம் வளர்ச்சிக்கான சக்திகளை மேலும், வலுப்பெறச் செய்யும். இந் நிலையில் பொருளாதார நிறுவனங்கள் சமூக அந்தஸ்து என்ற முகமூடியைக் கிழித்து எறியும். பழமை இயல்புகளை அடிப்படையாகக் கொண்ட சமூக அமைப்பு என்ற மரம் அதன் வேரிலிருந்தே ஆட்டம் கண்டுவிடும். பொருளாதார வளர்ச்சிச் சக்திகளின் மாபெரும் வெற்றி மாறுக நிறுவனங்களில் மக்களுக்கிருக்கும் நம்பிக்கையைச் குறைத்து விடுகிறது. பழமைச் சக்திகளில் மக்களுக்கிருந்த உறவு நீங்கி மக்கள் அச் சக்திகள் பொருளாதார வளர்ச்சிக்கு இடையூறனவை என்பதை உணரத் தலைப்படுகின்றன. பழமைச் சக்திகளின் பாதுகாவலர்கள் (Custodians) தங்கள் பழைய சமயக் கருத்துகளை விட்டுவிட்டு, மாறும் சூழ்நிலைக்குத் தகுந்தவாறு தங்களையே மாற்றியமைத்துக் கொள்கின்றனர். ஒரு சக்தி வாய்ந்த புது வகுப்பினர் சமுதாயத்தில் உருவெடுத்து அரசியல் அதிகாரத்தின் சமநிலையை மாற்றுகின்றனர். எனவே, பொருளாதார வளர்ச்சி பழமை நிறுவன அமைப்புகளில் ஊடுருவிச் சென்று வளர்ச்சிக்கு உகந்த ஒரு புதிய நிறுவன அமைப்பை தோற்றுவிக்கிறது.

[1] W. A. லூயிஸ் 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 151,

உள்ளெதிர் சக்திகளின் நடவடிக்கைகள் (Interaction of Forces)

சமூக நிறுவனங்களால் மாற்றம் ஏற்படுத்தப்பட்டாலும் வளர்ச்சியில் தொடர்ச்சியான வேகம் ஏற்படுகிறது. முதலில் மக்களின் மன நோக்கில் மாற்றம் ஏற்படுகிறது. அவர்கள் புதிய வாய்ப்புகளைப் பயன்படுத்தவேண்டுமென்ற அவாக் கொள்கின்றனர். புதிய சந்தர்ப்பங்கள், பழைய நிறுவன அமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்தும்படி மக்களைத் தூண்டுகின்றனர்.[1] வளர்ச்சியின் சக்திகள், நிறுவன மாற்றம், இவைகளுக்கிடையே தோன்றும் உள்ளெதிர் நடவடிக்கைகளால் ஒன்று மற்றொன்றை இயங்கச் செய்யத் தலைப்படுகின்றது. அத்தகைய சூழ்நிலையில் பொருளாதாரம் முழுவதையும் மாற்றியமைக்கும் காரணியை வேறுபடுத்திக் கண்டறிவது மிகவும் கடினமாகும். W. A. லூயிஸ் குறிப்பிடுவது போல், "பொருளாதார சந்தர்ப்பங்கள், மக்களின் நம்பிக்கை, சமூக நிறுவனங்கள், ஒன்றையொன்று தொடர்ந்த உள்ளெதிர் நடவடிக்கைகளில் (Cumulative Interaction) ஈடுபடுவதால் மாற்றத்தின் காரணம் இதுதான் என்று விரல்விட்டு உறுதியாகக் கூறுவது எப்போதுமே கடினமாக உள்ளது."[2] வளர்ச்சிக்கும் நிறுவன முறை மாற்றத்திற்குமிடையே உள்ளெதிர் நடவடிக்கைகள் தோன்றுவதற்கு, உதாரணமாக ஆசிய நாடுகளில் அரசியல் விடுதலைக்குப்பின் பொருளாதார நடவடிக்கைகளில் ஏற்பட்டு வரும் எழுச்சியைக் கூறலாம். அரசியல் சுதந்திரமே எல்லாவற்றிற்கும் அடிப்படைக் காரணமாக முதலில் தோற்றமளிக்கும். ஆனால் அரசியல் விடுதலைக்குப் பின்பும் சில தேசியப் பொருளாதாரங்கள் வளர்ச்சியில் பின்நோக்கியும் சென்றுகொண்டுள்ளன. இதற்குச் சான்றாகப் பாகிஸ்தான், பர்மா, இந்தோனேசியா போன்ற நாடுகளைக் கூறலாம். சில நாடுகளில் வளர்ச்சி நடவடிக்கைகள் நிறுவனங்களில் மாற்றத்தையும் ஏற்படுத்துகின்றன. இதற்கு உதாரணமாக இந்தியாவின் சாதி முறையையும், தாய்லாந்தின் வேளாண்மைத் துறையில் தலத்தில்லா நிலக் கிழார்முறை ஒழிக்கப்பட்டதையும் உதாரணமாகக் கூறலாம். பொருளாதார சக்திகளால் உருவாக்கப்பட்ட நிறுவன மாற்றமுறை மக்களின் வாழ்க்கையில் திடீர் அதிர்ச்சிகளையும் எழுச்சிகளையும் ஏற்படுத்துகிறது. ஏனெனில் புதிய பொருளாதார இயல்புகள் நிலையாக வேரூன்றிவிட்ட சமூகக் கருத்துகளுடனும், மன நோக்குகளுடனும் மோதுகின்றன. நிறுவனங்களே மாற்றத்தை தோற்றுவித்தால், இம்மோதலினால் ஏற்படும் இடர்ப்பாடுகள் குறையும். அப்போதுதான்

1 P. T. பாயர், B. S. யாமி, வளர்ச்சிக் குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப 71

2 W. A லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு, ப-144.

மக்கள் பொருளாதார மாற்றத்தை ஏற்றுக்கொண்டு தங்கள் சமூக இயல்புகளை மாறும் பொருளாதார சூழ்நிலைக்கேற்றபடி சீர்படுத்திக் கொள்ள முடியும்.

மாற்றத்தினால் ஏற்படும் சமூக விளைவுகள்

பொருளாதார மாற்றம், நிறுவன மாற்றம் ஆகியவைகளால் நிறுவனங்களைச் சமநிலையில் வைக்கவோ, அல்லது முழுமையான மாற்றத்தை ஏற்படுத்தவோ முடிவதில்லை. சமூக அமைப்பின் ஒரு குறித்த பகுதியிலிருந்து தோன்றும் மாற்றம் வேறுபட்ட வேகத்தில் பல்வேறு வழிகளில் விளைவுகளை ஏற்படுத்துகிறது. சில நிறுவன அம்சங்கள் மற்றவைகளைக் காட்டிலும் அதிகமாகப் பாதிக்கப்படுகின்றன. எனவே, புதிய பாங்கு, பழைய புதிய கருத்துகளின் வினோதமான கலவையாகும். புதிய நிறுவனப் பாங்கின் வடிவம் பழைய பண்பாட்டின் இயல்பையும், மாற்றத்தையேற்படுத்தும் சக்திகளையும், மாற்றத்தை ஏற்றுக் கொள்ள விரும்பும் மக்களின் சித்தத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமையும்.[1] இக்காரணிகள் ஒவ்வொரு சமூகத்திலும் வேறுபடுகின்றன. வட இந்தியாவின் சாதி முறையில் ஏற்பட்ட மாற்றத்தின் தன்மையும் அளவும் தென்னிந்தியாவில் சாதி முறையிலேற்பட்ட மாற்றத்தை விட வேறுபடுகிறது. நீதிநெறி, சமூக அமைப்பு, பொருளாதார உறவு ஆகியவைகளின் புதுமைப் பாங்கிற்கு ஏற்றாற் போல் மக்கள் தங்களைச் சரிசெய்துகொள்ள வெகு காலம் பிடிக்கிறது. சமூக வாழ்க்கையில் புது சமநிலையை ஏற்படுத்துவதால், சில சமூக நீதி நெறி இழப்புகளும் ஏற்படலாம். W. A. லூயிஸ் குறிப்பிடுவது போல், "பொருளாதார மாற்றத்தினால் ஏற்படும் கடுமையான விளைவுகளுள் 'பழைய நீதிநெறிகள்' மறைந்து விடுதலும் ஒன்றாகும். இதனால் தான் நீதி நெறியாளர்களும், மனித இன இயலின் அறிஞர்களும் விரைவான மாற்றத்தை எதிர்ப்பது வழக்கமாய் உள்ளது. விரைவான மாற்றத்தினால் பழைய நம்பிக்கையும் சமூக நிறுவனங்களும் மிக விரைவாக மறையத் தொடங்குகின்றன. ஆனால் புதிய நம்பிக்கையும் சமூக நிறுவனங்களும் அதே இடத்தைப் பெறுவதற்குக் கால தாமதம் ஏற்படுகிறது"[2] சான்றாகத் தனியுரிமைத் தொழில்கள் உருவாகுவதால் கூட்டுக் குடும்ப முறையும், குடும்பத் தலைவரின் அதிகாரமும் வலுவிழந்து விடுகிறது. இதன் விளைவாக கூட்டு வாழ்க்கையும், ஒருவரையொருவர் துணை புரியும் நோக்கும் குறைந்து விடுகிறது. ஒரு புதுப் பொறுப்புணர்வும் நவீன சமுதாயக்

[1] P. T. பாயர், B. S. யாமி, 'வளர்ச்சிக் குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 67-68.

[2] W. A. லூயிஸ். 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 144-45.

காப்பீட்டு முறையும் தோன்றும் வரைக்கும் குடும்பத்தில் வாழும் மக்களின் உறவு முறை பெரிதும் பாதிக்கப்படுகிறது.[1]

உள்நாட்டு, வெளிநாட்டு சக்திகளின் நிறுவன மாற்றம்

மேற்குறிப்பிட்ட ஆய்விலிருந்து சமூக மாற்றம் முழுமையானதாகவோ, முறையானதாகவோ இல்லை என்பதை உணர முடிகிறது. அதன் போக்கு ஏராளமான முரண்பாடுகளைக் கொண்டதாக உள்ளது. ஒரே சமயத்தில் மக்களின் பல்வேறு கலாச்சார அம்சங்கள் சமவிகிதத்தில் மாற்றமடைவதில்லை. சில நிறுவனங்களும் கருத்துகளும், மற்றவைகளைவிட மிக விரைவாக மாற்றமடைகின்றன. வலிமை வாய்ந்த உயர் நிறுவனங்களின் சில பகுதிகள் மற்ற நிறுவனங்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு மிக விரைவாக மாற்றம் பெறுகின்றன. எனவே, மாற்றத்தின் வேகத்தையோ அல்லது மற்றக் கலாச்சார அமைப்புகளின் மேல் அது ஏற்படுத்தும் எதிர் நடவடிக்கைகளையோ துல்லியமாகக் கணக்கிடுவது கடினமாகும். மாற்றங்களைச் சமச்சீரான முறையில் ஒழுங்குபடுத்த முயலுவது வீண் செயலாகும். மாற்றத்திலேற்படும் முரண்பாடுகளை நீக்க ஒரேவழி மாற்றமே ஏற்படாமல் செய்வதாகும். ஆனால், இது விரும்பத்தக்கதுமல்ல, முடியக் கூடியதுமல்ல என்பது வெளிப்படையாகும். அப்படியென்றால் மாற்றத்தின் போக்குகளை நாம் கட்டுப்படுத்த முடியாது என்பது பொருளல்ல. மாற்றத்தின் விளைவுகளைக் குத்துமதிப்பாக முன்கூட்டியே அறிந்து அதற்குத் தக்க ஏற்பாடுகளையும் முன்கூட்டியே செய்ய முடியும். சான்றாக ஓரிடத்தில் அணைக்கட்டை அமைப்பதால் அப் பகுதியில் வாழும் மக்களுக்கு நீர்வளம் கிடைப்பதோடு வேறிடத்தில் வாழ்வோர்க்கும் புனர்வாழ்வு கிடைக்கிறது. மக்கள் அடையும் துன்பங்களை முன்கூட்டியே அறிந்து அவைகளைக் குறைக்க தகுந்த நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும். புனர் வாழ்வு பெற்ற மக்கள் எப்படித் தம்மைப் புது இடத்திற்கும் புதுத் தொழிலுக்கும், புது உறவு முறைக்கும் ஏற்பத் தம்மைச் சரிசெய்து கொள்வர் என்பதை அறிவது கடினமாகும். மாற்றத்தின் இவ்வம்சத்தை இயற்கையான செயல் முறையிலேயே விட்டுவிட வேண்டும். மாற்றம் துன்பத்தை ஏற்படுத்துமா இல்லையா என்பது வளர்ச்சி எவ்வாறு தொடங்கப்பட்டுள்ளது என்பதைப் பொறுத்ததாகும். உள்நாட்டு (அக) சக்திகளாலேயே (Indigenous forces) வளர்ச்சி ஆதரிக்கப்பட்டிருந்தால் அதற்கு அதிக எதிர்ப்பு தோன்றாது. எனவே, பழைய சமூக இயல்புகளின் மேல் அதிர்ச்சி குறையும். வெளிநாட்டு (புறச்) சக்திகளால் (Exotic Forces)

[1] P. T. பாயர், B. S. யாமி, 'வளர்ச்சி குறைந்த நாடுகளின் பொருளாதாரம்' ப. 67.

உந்தப்பட்ட மாற்றம் கடுமையான எதிர்ப்பைப் பெறுகிறது. மேலும் நிலையாக்கப்பட்ட சமூக ஒழுங்கின் மேல் பெருமளவு சிதைவுறும் விளைவையு மேற்படுத்தும். உள்நாட்டு (அகச்) சக்திகளால் ஏற்பட்ட மாற்றத்திற்குச் சான்ருக ஜப்பானில் ஏற்பட்ட பொருளாதாரப் புரட்சியையும் (Economic revolution) வெளிநாட்டு (புறச்) சக்திகளால் ஆப்பிரிக்காவில் தற்போது நடைபெற்று வரும் மாற்றத்தையும் குறிப்பிடலாம்.

## மாற்றத்தை ஏற்படுத்துபவர் யார்?

ஆரம்பக் கட்டத்தில் புதுக் கருத்துகளை புதுமைப் பாங்குடன் தருபவர்கள் மிகச் சிலரேயாவர். மக்களில் பெரும்பாலோர் அக் கருத்துகளில் ஐயம் கொள்ளலாம் அல்லது எவ்வித தயக்கமுமின்றி ஏற்றுக் கொள்ளலாம். அப் புதிய கருத்துகள் நடைமுறைக்கு உகந்தவைகளாக நிரூபிக்கப்பட்டவுடனேயே மற்றவர்களும் அதைப் பின்பற்றத் தொடங்குகின்றனர். எனவே, 'மாற்றத்தின் ஏற்றம் சமுதாயத்தின் தோன்றும் தலைவர்களின் தரத்தைப் பொறுத்ததாகும்' என்ற முதுமொழி முற்றிலும் உண்மையென்று தோன்றுகிறது.[1] மக்கள் எல்லோரும் புத்தாக்கர் (Innovator) களாகிவிட முடியாது; ஒரு குறிப்பிட்ட வகுப்பினரிடம்தான் புதுக் கருத்துகள் உருவாகின்றன.[2] சமூகத்தின் பல்வேறு துறைகளிலிருந்து உயர்வு பெறும் ஒருசிலர்தான் புதிய கண்டு பிடிப்பின் வரலாற்றைப் படைக்கின்றனர். எனவே, ஒவ்வொரு புத்தாக்கரும் குறிப்பிட்ட சில மேம்பட்ட இயல்புகளைப் பெற்றிருக்கிருர் என்பது உண்மையாகும். இவ் வகையில் புத்தாக்கர்கள் தம்மை ஒரு தனி வகுப்பினர்களாகவே அமைத்திருக்கின்றனர். ஏனெனில் புத்தாக்கர்கள் சில பொதுத் தன்மை கொண்ட பிரச்சினைகளுடன் போராட வேண்டிய நிலை வந்தது. இத்தகையப் பிரச்சினைகளாவன:—பழைய முறைகளால் ஏற்படும் எதிர்ப்பு, தங்களின் புதிய கருத்துகளை எழுச்சி பெறச் செய்ய வேண்டுமென்ற ஆர்வம், மாற்றத்தின் போக்கிலேற்படும் தொல்லைகளாகும். "புதுக் கருத்துகள் ஒரே வகுப்பினரிடமிருந்து உருவாக்கப்படுவதில்லை. புத்தாக்கங்களுக்கு ஏற்படும் சமூக எதிர்ப்பைத் தாங்கவல்லமை பெற்ற ஒரு புது வகுப்பிலிருந்து தோன்றும் 'புத்தாக்கச் சிற்பிகளே' (New-Men), புதுக் கருத்துகளைத் தோற்றுவிக்கின்றனர்.[3]

[1] W. A. லூயிஸ் 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 148.

[2] W. மாலன்பாம், 'இந்திய வளர்ச்சி வாய்ப்புகள்' - ப. 195. (Wilfred Malenbaum), (Prospeets for Indian Development)

[3] W. A. லூவிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 149.

## புத்தாக்க சிற்பிகளின் தோற்றம் (Emergence of Innovtors)

பழைய 'சமூக அமைப்பை ஒரு புதுமை அமைப்பாக மாற்றி யமைக்க வல்ல 'புதுமைச் சிற்பி' (New men) களைக் கொண்ட சுதந்திர வகுப்பினர் சமுதாயத்திலிருந்து உருவாகின்றனர். 'இப் புதுமை வித்தகர்கள்' உரிமையும் வசதியும் கொண்ட வகுப்புகளி லிருந்து பெரும்பாலும் தோன்றுவதில்லை. ஏனெனில் வசதி படைத்த இவ்வகுப்பினர்கள் பழைய சமூக நிலையையே பாதுகாப் பதில் பேரார்வம் கொண்டு புதுப்பொருளாதார வாய்ப்புகளைத் தேடி அடைவதில்லை. நடைமுறையில் பழைய அமைப்பின் அடிப்படையில் மிகப்பாதுகாப்புடன் இருக்கும் மக்கள் மாற்றத்தைத் தடுக்கின்றனர். ஏனெனில் மாற்றம் அவர்களின் சமூக, கலாச்சார, அரசியல், பொருளாதார உரிமைகளுக்கும் வசதிகளுக்கும் எதிரானதாக உள்ளது. இத்தகைய எதிர்ப்பால் ஒரு சிறிய உள்நாட்டுப் போர்கூட ஏற்படலாம். இதற்குக் காரணம் பழைய சமூக முறையில் அதிருப்தி கொண்ட வகுப்பினர் தங்கள் ஆர்வங்களை பூர்த்திசெய்ய மாற்று வழி வகைகளைக் கையாளு கின்றனர். சமூகத்தின் கீழ் மட்டத்தில் உள்ள மக்கள் பழைய முறையினால் மன அதிருப்தி கொள்கின்றனர். ஆனால் அவர் களிடம் செல்வம், அறிவு, பரம்பரைத் தொழில் துணிவாற்றல், சமூக சுதந்திரம், போன்ற வளங்கள் மிகக் குறைவாக உள்ளன. எனவே, அவர்கள் மாற்றத்தைத் தோற்றுவிக்கும் இடரைத் தாங்க சக்தியற்றவர்களாக இருக்கின்றார்கள். எனவே, சமூகத்தின் மேல் மட்டத்தில் உள்ள செல்வந்தர்களும் கீழ் மட்டத்திலுள்ள வறியவர் களும் மாற்றத்தைத் தோற்றுவிக்க இயலாதவர்களாய் உள்ளனர். 'இம்முறையில் மாற்றத்தைத் தோற்றுவிக்கும் "புதுமைச் சிற்பிகள்" (New men) சில வளங்களும் போதிய சுயசுதந்திரமும் ஓரளவு செயல் முறைப் பண்பாடும் கொண்ட உயர்வகுப்பிற்கும் சிறிது குறைந்த நடுத்தர சமூக வகுப்பிலிருந்து உருவா கின்றனர்."[1] மேலும், உயர்மட்டத்திலிருந்து ஒருசிலரும் கீழ் மட்டத்திலிருந்து ஒரு சிலரும் 'புதுவித்தகர்களின்' வரிசையில் சேர்ந்துகொள்கின்றனர். ஆனால் அவ்வாறு சேர்பவர்கள் மிகச் சிலரேயாவர். இப் "புத்தாக்க சிற்பிகளின்" வகுப்பிற்கு (Class of Newmen) நடுத்தர வகுப்பிலிருந்துதான் ஏராளமானவர்கள் வந்து சேருகின்றனர். நடுத்தர வகுப்பு மக்களிலும் நகரப்பகுதி களில் உள்ளவர்கள்தான் அதிகமாக வந்து சேருகின்றனர். ஏனெனில் அவர்கள் நகரங்களில் உள்ள வாய்ப்புகளைப் பயன் படுத்திக் கொண்டு மாற்றத்தில் பங்கு பெற தகுதி பெற்றவர்களா யிருக்கின்றனர். வர்த்தகம், தொழில், சமூக சீர்திருத்தங்கள்,

1 W. A. லூயிஸ் 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' —ப. 149,

புதுப்பொருளாதார உறவுகள் ஆகியவைகளை மேம்படுத்துவதில் அவர்களே தகுந்த முன்னோடிகளாக உள்ளனர். பொதுவாக அரசியல், சமூக இயக்கங்களில் நகரப்பகுதிகளில்தான் தலைவர்கள் உருவாகின்றனர். நகரங்களில் போட்டியை எதிர்த்து நிற்க வேண்டுமாதலால், அங்கு சமுதாய உறவு குறைந்து விடுகிறது. எனவே, நகரங்களில் மறைமுகப் பொருளாதார உறவு அதிகரிப்ப தால் புதுப்பொருளாதார வாய்ப்புகளை பயன்படுத்திக் கொள்ள மக்கள் பேரவாக் கொள்கின்றனர். சொத்து சேர்ந்து கொண்டே செல்வதால் ஆர்வம் தூண்டப்படுகிறது. மக்கள் சோதனைப் பயிற்சி மனப்போக்கையும் (Attitude of Experimentation) விஞ்ஞான ஆய்வையும் வளர்த்துக் கொள்கின்றனர். இயற்கையை எதிர்த்துப் போரிட்டு மகத்தான வெற்றி காணவேண்டுமென்று விரும்பும் இலட்சிய மனிதர்கள் முன்னேற்றமென்ற ஒப்பற்ற மாளிகைக்குச் சக்தி வாய்ந்த அடிக்கற்களாகவும் பெருந்தூண்களா கவும் விளங்குகின்றனர்.

## சமூக மாற்றத்தில் வெளிக்கருத்துகளின் செல்வாக்கு

ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் நகரங்களின் 'புதிய மனிதர்'களோடு கூட வெளிநாட்டினரும் மிகமுக்கிய பங்கினைப் பெற்றுள்ளனர். பெரும்பாலான நாடுகளில் வெளிநாட்டுத் தொடர்பால் பொருளாதார வளர்ச்சி மேலோங்கியுள்ளது. புதுக் கருத்துகள், உறவின் புதுமைப் பாங்கு, புதுப் பொருளாதாரச் சந்தர்ப்பங்கள், புதுத் தொழில் நுட்பம் ஆகியவைகள் வெளிநாட்டி லிருந்து ஒரு நாட்டுக்குள் நுழைகின்றன.[1] இதன் விளைவாக வெளிக்கருத்துகள் செல்வாக்குப் பெற்று பழைமைச் சமூக இயல்பு களையும், நிறுவன முறைகளையும் எதிர்க்கின்றன. இச் சமயத்தில் 'புதிய மனிதர்கள்' வலுப்பெற்று நிலைத்துவிட்ட பழைய சமூக முறையை வீரமுடன் எதிர்த்துப் போராட மன உறுதி பெறு கின்றனர். வெளிநாட்டுத் தொடர்பால் எந்த அளவு மாற்றம் தோன்றியுள்ளது என்பது வெளிநாட்டினர் ஒரு நாட்டுக்குள் வரும் முறையைப் பொறுத்தாகும். உள்நாட்டு மக்கள், வெளி நாட்டினர் இவர்களிடையே சுய ஒத்துழைப்பு ஏற்பட்டு மாற்றம் தோன்றினால் வெளிநாட்டுக் கருத்துகள் மக்களின் வாழ்க்கை முறையில் பெருமளவில் ஒன்றுறக் கலந்துவிடுகின்றன. இதற்கு மாறாக, வெளிநாட்டினர் வசதிபடைத்த வகுப்பினருடன் (Privileged Classes) சேர்ந்துகொண்டு உள்நாட்டு மக்களை அடிமைப் படுத்தி வெளிக்கருத்துகளை அவர்களின்மேல் திணிக்க முயன்றால்

1 P. T. பாயர், B. S. யமி, 'வளர்ச்சிகுறைந்த நாடுகளின் பொருளா தாரம்' ப. 73

நாட்டில் வளர்ச்சி குன்றிப் பொருளாதாரம் பெரும் தேக்க நிலையை அடைகிறது,[1] இந்தியாவில் நடைபெற்ற ஆங்கிலேயர்களின் ஆட்சி இதற்குக் குறிப்பிடத்தக்க, வரலாற்று முக்கியத்துவம் பெற்ற, ஒரு சான்றாக அமைந்துள்ளது.

## மாற்றத்தில் அரசின் பங்கு

பேரரசுகளால் நடத்தப்படும் ஆட்சி ஒரு நாட்டின் தேசிய இயக்க வளர்ச்சியில் சில மறைமுக விளைவுகளை ஏற்படுத்துகிறது. பேரரசுகளின் ஆட்சியாளர்களின் காலனிக் கொள்கைகள் உள் நாட்டு மக்களிடம் உள்ளெதிர் நடவடிக்கைகளை ஏற்படுத்து கின்றன. மக்கள் வெளியாளர்களின் பொருளாதாரச் சுரண்டலையும் தங்களின் பின் தங்கிய நிலையையும் உணரத் தொடங்குகின்றனர். பேரரசாட்சியாளர்களின் சுரண்டல், வெளிநாட்டினருடன் தொடர்பு, இவைகளின் விளைவாக உள்நாட்டு மக்களிடம் தங்கள் நாட்டையும் வளர்ச்சியடையச் செய்ய வேண்டும் என்ற பேரார்வம் தூண்டப்படுகிறது. அத்தகைய ஆர்வம் காலனி ஆதிக்கத்திற்கு எப்போதும் உட்படாத நாடுகளிலும்கூடப் பரவுகிறது. இரண்டாம் உலகப் போருக்குப் பின் காலனி அந்தஸ்தும் (Colonial Status) பொருளாதாரப் பிற்பட்ட நிலையும், (Economic Backwardnes) ஒரே நிலையிலேயே காணப்படுகின்றன. ஏனெனில் காலனி நாடு களில் உள்ள பிரச்சினைகளும், பிற்பட்ட நிலையில் உள்ள நாடுகளின் பிரச்சினைகளும் ஏறக்குறைய ஒன்றாகவே உள்ளன. வளர்ச்சி குறைந்த நாடுகளின் தேசிய அரசுகள் தங்கள் நாடுகளை எல்லா வகைகளிலும் சீரமைத்து நவீனப்படுத்த வேண்டுமென்று சூளுரைத்து, அதற்கொப்பச் செயல்முறைகளை மேற்கொண்டு வருகின்றனர். பொருளாதார வளர்ச்சிக்கு உகந்த நிறுவன அமைப்பைப் புனரமைக்க வளர்ச்சியுறு நாடுகளில் நாட்டுப் பற்று ஒரு சக்தி வாய்ந்த கருவியாகச் செயல்பட்டுவருகிறது. இவ்வார்வம் பொருளாதார வளர்ச்சித் திட்டங்களில் பிரதிபலிக்கிறது. திட்டங்களை அமல்படுத்தி மேற்கொள்ளப்படும் அரசின் நடவடிக் கைகள் வளர்ச்சியுறு நாடுகளில் சமூக—பொருளாதார மாற்றத்தை (Socio-Economic Transformation) தோற்றுவிக்கப் பல்வேறுவகை களில் துணைபுரிகின்றன. பேராசிரியர் W. A. லூயிஸ் அவர்கள் குறிப்பிடுவதுபோல், "அரசு தீவிர மனஉறுதியும், அறிவாற்றலும் பெற்றிருந்தால் பொதுப்பணிகளைச் சீரமைப்பதாலோ, கல்வி வசதியை அதிகரிப்பதாலோ, நிறுவனங்களைச் சீர்திருத்துவதாலோ, புதுத்தொழில்களை ஊக்குவிப்பதாலோ, அல்லது புதுத்தொழில் நுட்பத்தைப் புகுத்துவதாலோ, பொருளாதார வளர்ச்சியைப்

[1] W. A. லூயிஸ் 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 148

பெருமளவில் மேலோங்கச் செய்யமுடியும்."[1] ஏழ்மைநாடுகளில் தற்போது இருந்துவரும் தேக்க சூழ்நிலையைப் போக்கப் பொருளாதார வளர்ச்சியை உருவாக்குபவராக (Initiator) அரசு பெரும்பங் காற்ற முன்வரவேண்டியது மிக இன்றியமையாததாகும். இதன் விளைவாக ஒரு வளர்ச்சி குறைந்த நாடு மாற்றமில்லாத தேக்க நிலையிலிருந்து விடுபட வாய்ப்புக்கிடைக்கும். அரசு இம்மகத்தான் பணியை ஆற்ற வேண்டுமானால் தேவையான தேசியவளங்களும், வளர்ச்சிக்கு உகந்த நிறுவன மாற்றமும் அதன்வசம் இருக்க வேண்டும்.

## முடிவுரை

பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படும்போது அவற்றின் வேகத்தையும் தீவிரத்தையும் தடுப்பது பிற்பட்ட சமூக முறையும் நிறுவனங்களுமாகும். வளர்ச்சி யடைந்த நாடுகளில் பொருளாதார வளர்ச்சி தோன்றுவதற்கு முன்பே சமூகமாற்றம் குறிப்பிடத்தக்க வகையில் தோன்றி வளர்ச்சியை வேகப்படுத்தியது. இதனால் அந் நாடுகளில் சமூக சீர்திருத்தங்களும் பொருளாதார வளர்ச்சியும் தகுந்த பலன்களை அளித்துள்ளன ஆனால் இந்தியா போன்ற பிற்பட்ட நாடுகளில் சமூக மாற்றம் ஏற்படுவதற்கு முன்பே பொருளாதார வளர்ச்சியை வேகப்படுத்தத் தேசிய அரசுகள் தீவிரமாக முனைந்துள்ளன. இதன் விளைவாக உற்பத்தியின் அளவும் உற்பத்தித் திறனும் எதிர்பார்த்த அளவு அதிகரிப்பதில்லை. எனவே, பிற்பட்ட நாடுகளில் தகுந்த சமூக மாற்றத்தைத் தோற்றுவிக்காமல் பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த எண்ணுவது அறிவுடைமையாகாது. எனவே, மக்களாட்சியைக் கொண்டுள்ள நாடுகளில் பொருளாதார வளர்ச்சி மேலோங்க மத நோக்கு, சாதிமுறை, கூட்டுக் குடும்பமுறை, சொத்துரிமைச் சட்டங்கள், ஆகியவைகளில் தகுந்த மாற்றத்தை ஏற்படுத்தினா லன்றி எதிர்பார்க்கும் பொருளாதார வளர்ச்சி வீதத்தை குறுகிய காலத்தில் விரைவாக அடைய முடியாது. முதலாவதாக மக்களின் மனப் போக்கில் உண்மையான மனமாற்றம் ஏற்பட வேண்டும்; முக்கியமாக மக்களிடம் 'உண்மை மதமனநோக்கு' (Real Religious Spirit) தோன்ற வேண்டும். இதன் விளைவாக மக்கள் மேற்கொள்ளும் சமூக, பொருளாதார நடவடிக்கைகளில் நேர்மையும், சேவை மனப்பண்பும், கடும் உழைப்பும், விடா முயற்சியும், சுறுசுறுப்பும், விட்டுக்கொடுக்கும் பெருந்தன்மையும், ஏற்பட உண்மை மத உணர்வும் கருத்துகளும் வகைசெய்ய வேண்டும். சுருங்கக் கூறின் மக்களிடம் கிழக்கு நாடுகளின்

[1] W. A. லூயிஸ், 'பொருளாதார வளர்ச்சிக் கோட்பாடு' ப. 154.

ஆன்மீக உணர்வும் மேற்கத்திய நாடுகளின் பொருள்சார் உணர்வும் சம அளவில் ஒருங்கிணைக்கப்பட வேண்டும். மக்களிட முள்ள சில பிற்பட்ட பழக்க வழக்கங்களும், மூடநம்பிக்கைகளும் படிப்படியாக மறைய வேண்டும். வளர்ச்சிக்கு உகந்த மதக் கருத்துகள் எழுச்சிபெறச் செய்யத்தக்க தலைவர்கள் உருவாக வேண்டும். இரண்டாவதாக, இன்றைய சமூகச் சிந்தனை, நவீன மயம், தொழில் நுட்ப முன்னேற்றம், ஆகியவைகளைக் கருத்தில் கொண்டால், சாதிமுறை என்னும் நிறுவனம் மக்களுக்கு எந்த விதத்திலும் பயனில்லாதிருத்தலால் அது ஒழிக்கப்படல் சாலச் சிறந்ததாகும். இன்றும் தீண்டாமையால் இந்தியாவின் சில மாநிலங்களில் தீண்டாதோர் கொடுமைப்படுத்தப்படுகின்றனர். நெகிழ்ச்சியற்ற சாதிமுறையைத் தகர்த்தெறிய அரசின் எந்திரம் போன்ற செயல் முறைகள் தீவிரமாக்கப்பட வேண்டும். மூன்றாவதாக, கூட்டுக் குடும்ப முறையின் அமைப்பில் குறிப்பிடத் தக்க மாற்றம் ஏற்பட்டு உறுப்பினர்களிடையே பொறுப்புணர்ச்சி, சுயஆற்றல், சுயமுயற்சி, தொழில் துணிவு, சுறுசுறுப்பு, விடா முயற்சி, சேமிக்கும் ஆர்வம், போன்ற நல்லியல்புகள் தோன்றி நாட்டில் சேமிப்பும் முதலாக்கமும், முதலீடும் கணிசமான அளவு உயர வேண்டும். இதற்குத் தீவிரக் கூட்டுக் குடும்ப முறைக்கும், தனியுரிமை முறைக்கும் இடைப்பட்ட ஒரு நடுத்தரக் குடும்ப அமைப்புத் தோன்றி உறுப்பினர்கள் இளம் வயதடைந்ததும் சுயமுயற்சியும், சுயநம்பிக்கையும், சுய ஆற்றலும் பெற்றுத் தங்கள் வாழ்க்கையைத் தாங்களே வகுத்துக் கொள்ள மனஉறுதி பெறச் செய்ய வேண்டும். நான்காவதாக, சொத்துரிமைச் சட்டங்கள் நவீன காலத்தொழில் நுட்ப வளர்ச்சிக்கேற்ப மாற்றியமைக்கப் படவேண்டும். சொத்தோ, நிலமோ பல்வேறு பிரிவுகளாகப் பிரிக்கப்படுவதால் பொருளாதார முக்கியத்துவம் இழந்து விடு கின்றன. எனவே, இவைகள் பிரிந்துவிடாமல் ஒருங்கிணைந்து இருக்க வகைசெய்யப் படவேண்டும். மேற்குறிப்பிட்ட மாற்றங் களைத் தோற்றுவிக்கப் புத்துலகத் தொழில் துணிவாற்றலுள்ள புத்தாக்கச் சிற்பிகள் பெருமளவில் தோன்றிச் சமூகத்தின் பல்வேறு நெகிழ்ச்சியற்ற அம்சங்களைத் தகுந்த முறையில் மாற்றமடையச் செய்ய வேண்டும். இதற்குத் தேவையானது கல்வி வளர்ச்சியும், தொழில் நுட்பப் பயிற்சியும், பொதுச்சுகாதாரமுமாகும். வளர்ச்சி குறைந்த நாடுகளில் இத்தகைய இன்றியமையாத அடிப்படை நடவடிக்கைகளைத் திறமையுடன் செயலாற்ற வேண்டிய பெரும் பொறுப்பு அரசாங்கத்தையே சார்கின்றது. நவீன உலகில் பொரு ளாதார வளர்ச்சியில் அரசின் பங்கு முக்கியமாகச் சமூக மாற்றத் தில் இன்றியமையாததாக விளங்குகின்றது.

---

# BIBLIOGRAPHY


1. Aggarwal, A. N and Singh, S. P.—The Economics of Under development.
2. Alvin Hansen,—Economic Issues of the 1960's.
3. Bauer, P. T.—Indian Economic Policy and Development.
4. Bauer P. T. and Yamey, B. S.—The Economics of under-developed Countries.
5. Balakrishna, R.—Review of Economic Growth in India.
6. Baljit Singh,—Federal Finance and Under-developed Economy.
7. Balakrishna, R.—Regional Planning in India.
8. Bright Singh, D.—Economics of Development.
9. Bhattacharya K. N.—Indian Plans.
10. Bhatt, V. V.—Employment and Capital Formation in under-developed Economics.
11. Chelliah, R. J.—Fiscal Policy in underdeveloped countries.
12. Das Gupta, A. K.—Planning and Economic Growth.
13. Duesenberry, J. S.—Income, Saving and the theory of consumer Behaviour.
14. Datta, A.—Paths to Economic Growth (ed)
15. Datta, B.—The Economics of Industrialisation.
16. Dobb, M.—Some Aspects of Economic Development.
17. Desai, A. R.—Rural Sociology in India.
18. Epstein, T. S.—Economic Development and Social changes
19. Galbraith, J. K.—Economic Development in Perspective.
20. Gunnar Myrdal—Economic Theory and underdeveloped Region.
21. ,, ,, —Asian Drama.
22. ,, ,, —An International Economy.

23. Gadgil, D. R.—Planning and Economic Policy in India.
24. Ghosh, O. K.—Problem of Economic Planning in India.
25. Ghosh, S. K.—Inflation in an Underdeveloped Economy.
26. Giri, V. V.—Labour Problems in Indian Industry.
27. Higgins, B.—Economic Development.
28. Hirschmar, A. O.—The Strategy of Economic Development
29. Iyengar, H. V. R.—Monetary Policy and Economic Growth.
30. Kaldor, N.—Essays on Economic Stability and Growth.
31. Kurihara, K. K.—The Keynesian Theory of Economic Development.
32. Kindleberger, C. P.—Economic Development.
33. Kishor, B. and Singh B. P.—Indian Economy Through the Plans.
34. Kap K. W. and Kap L. L.—Hindu Culture, Economic Development and Economic Planning in India.
35. Kingsely Davis—The Population of India and Pakisthan.
36. Kuchal, S. C.—Industrial Economy of India.
37. „ „ —Corporate Finance.
38. Lewis, W. A.—The Theory of Economic Growth.
39. „ „ —The Principles of Economic Planning.
40. „ „ —Development Planning.
41. Lewis, J. P.—Quiet Crises in India.
42. Lockwood—Economic Development of Japan.
43. Malenbaum, W.—Prospects for Indian Development.
44. Meir, G. M. and Baldwin R. E.—Economic Development Theory, History and Policy.
45. Meir, G. M.—Leading Issues in Development Economics.
46. Meier, R. L.—Development Planning.
47. Myint, H.—The Economics of Developing Countries.
48. Manmohan Singh—India's Export Trends.
49. Mathur A. .S and Mathur J. S.—Trade Union Movement in India.
50. Nag, D. S.—Problems of underdeveloped Economy.
51. Nurkse, R.—Problems of Capital Formation in underdeveloped Countries.

52. Nurkse, R. —Patterns of Trade and Development.
53. „ „ —Lectures on Economic Development.
54. N. C. A. E. R.—Price Policy and Economic Growth.
55. Okum, B. and Richardson, R. W.—Studies in Economic Development.
56. Oskar Lange—Essays on Economic Planning.
57. Raj, K. N.—Indian Economic Growth.
58. Radhakrishnan, S.—Eastern Religion and Western Thought.
59. Rao, V. K. R. V.—Essays in Economic Development.
60. Rostow, W. W.—The Stages of Economic Growth.
61. „ „ —The Process of Economic Growth.
62. Rao, V. K. R. V.—Price Policy and Economic Development.
63. R. B. I.—Report on currency and Finance 1956-57.
64. Reddaway, W. B.—Development of Indian Economy.
65. Roy, H. N.—The Role of Monetary Policy in Economic Development.
66. R. B. I. Bulletin, April 1968—Price Policy in a Developing Economy.
67. R. B. I. —India's Balance of Payments 1948-49 to 1661-62.
68. Rao, V. K. R. V. and Narain, D.—Foreign Aid and India's Economic Development.
69. Schumpeter, J. A.—The Theory of Economic Development
70. Singer. H. W.—Economic Progress in underdeveloped Countries.
71. „ „ —International Development, Growth and change.
72 Singh, V. B.—Industrial Labour in India.
73. Sethi, J. D,—Problems of Monetary Policy in An under-developed country,
74. Seth, M. L.—Theory and Practice of Economic Planning.
75. Srivastava S.K—Transport Development in India.
76. Srinivas, M. N.—India's Villages
77. Tandon, B. C,—Economic Planning.
78. Tripathy, R. N.—Public Finance in Underdeveloped Countries.
79. Tinbergen, J.—Development Planning.

80. Thomas Wilson—Planning and Growth.

81. U. N.—Taxation and Fiscal Policy in Underdeveloped Countries.

82. Williamson, H. F. and Buttrick, C. A.—Economic Development Principles and Patterns (ed)

83. *Government of India Publications*

First Five Year Plan.

Second Five Year Plan.

Third Five Year Plan.

The Annual Plans.

Fourth Five Year Plan (1969-74)

Mid-term Appraisal.

The Location of Industry in India.

84. *Journals*

Commerce

Eastern Economist.

Economic Review.

Economic Times.

Financial Times

Indian Economic Journal.

Indian Journal of Economics.

Indian Economic Review.

The Hindu-Survey of Indian Industry, 1971, 1972.

Yojana,

# கலைச்சொல் அகராதி

## A

Absentee Land—lordism—தலத்திலில்லா நிலக்கிழார் முறை
Absolute terms—சார்பில்லா அளவுகள்
Actual Outlay—உண்மை முதலீடு
Administrative Measures—நிர்வாக நடவடிக்கைகள்
Advisory Board—ஆலோசனைக் கழகம்
Advisory Organisation—ஆலோசனை அமைப்பு
Age of High Mass-Consumption—உயர்பெரும் நுகர்வுக் காலம்
Agricultural Education—வேளாண்மைக் கல்வி
Agro-Industries—வேளாண்மை சார்ந்த தொழில்கள்
Agricultural Research—வேளாண்மை ஆராய்ச்சி
Aid India Club—இந்திய உதவிச் சபை
Air Transport Corporation—விமானப் போக்குவரத்துக் கழகம்
All India Labour Organisation—அகில இந்தியத் தொழிலாளர் அமைப்பு
Amalgamations—ஒருங்கிணைப்புகள்
Animal Husbandry—கால்நடைப் பெருக்கம்
Annual Average—வருடாந்திர சராசரி
Annual Foreign Exchange Budget—வருடாந்திர வெளிநாட்டுச் செலாவணி வரவு—செலவுத் திட்டம்
Applied Science—நடைமுறை விஞ்ஞானம்
Ascription—மத வழிபாடு
Asian Trade Union Congress—ஆசிய தொழிற்சங்க அமைப்பு
Assets—சொத்துகள்
Attitude of Employers—வேலை கொடுப்போரின் மனப்போக்கு
Artisan—கைவினைஞன்

Autonomous investment—சுயமான முதலீடு
Authorised Capital—அனுமதிக்கப்பட்ட மூலதனம்

## B

Backward Economy—பின்தங்கிய பொருளாதாரம்
Backward Classes—பிற்பட்ட வகுப்பினர்
Backward Pockets—பிற்பட்ட
Balanced Growth—சமச்சீரான வளர்ச்சி
Balancing Factors—சமப்படுத்தும் காரணிகள்
Balance of Payments—வெளிநாட்டுச் செலுத்து இருப்புநிலை
Balance of Payments deficit—செலுத்து இருப்புநிலைப் பற்றுக்குறை
Bank Custodians—வங்கிப் பாதுகாவலர்கள்
Banking Funds—வங்கி நிதிகள்
Bill Clearance—உண்டியல் கழிவு
Bilateral Agreement—இருதலைப்பட்ட ஒப்பந்தம்
Bilateral Hard Loans—இருமுகக் கடன்கள்
Black Country—கறுப்புப் பிரதேசம்
Board of Trade—வர்த்தகக் கழகம்
Board of Conciliation—சமாதானச் சபைகள்
Boom—பூரிப்பு
Brain drain—திறன் வறட்சி
Broad gauge—அகலப் பாதை
Budget—வரவு-செலவுத் திட்டம்
Budgetary Policy—அரசு வரவு-செலவுக் கொள்கை
Buffer Stocks—உபரி இருப்புச் சரக்கு
Business groups—தொழில் வகுப்பினர்
Business Cycles—வாணிகச் சுழல்கள்
By—Products—துணைப் பொருள்கள்

## C

Capital—மூலதனம்
Capital Account—முதல் கணக்கு
Capital Equipment—முதல் சாதனம்
Capital Formation—முதலாக்கம்

Capital-land ratio—மூலதன-நில விகிதம்
Capital Market—முதலங்காடி
Capital Re-Payment—மூலதன மறு செலுத்துநிலை
Capital resources—மூலதன வளங்கள்
Capital goods—மூலதனப் பொருள்கள்
Capital-labour ratio—முதல்-தொழிலாளர் விகிதம்
Capital intensive development—முதல் செறிவு வளர்ச்சி
Capital Absorbtive Power—முதல் ஈர்க்கும் சக்தி
Caste Associations—சாதிமுறை அமைப்புகள்
Caste Rigidity—சாதியின் கடுமைத் தன்மை
Caste System—சாதி முறை
Central Road Fund—மத்திய சாலை நிதி
Central Region—மத்தியப் பிராந்தியம்
Central Union—மத்தியச் சங்கம்
Census—கணக்கெடுப்பு
Census of Production—உற்பத்திக் கணக்கெடுப்பு
Ceiling on Incomes—வருமான உச்ச வரம்பு
Cheap Money Policy - மலிவு பணக் கொள்கை
Civil Aviation—விமானப் போக்குவரத்து
Civil Aviation Department—விமானப் போக்குவரத்துத் துறை
Classical Economists—தொன்மைப் பொருளாதார அறிஞர்கள்
Cloth-Textile Industry—நெசவுத் துணித் தொழில்
Coastal Transport—கடற்கரைப் போக்குவரத்து
Coaching Vehicles—பார வண்டிகள்
Code of Discipline—ஒழுங்கு விதி முறைகள்
Collective bargaining—கூட்டுப் பேர முறை
Collectivism—கூட்டு நடவடிக்கை முறை
Complimentary funds—துணை நிதி
Cost of Living—வாழ்க்கைச் செலவு
Communal Property—பொதுச் சொத்து
Commercialization—வாணிப மயம்
Corporations—கழகங்கள்
Consolidation of Holdings—நில உடைமைகள் ஒருங்கிணைப்பு
Colsed Communities—வெளி இயல்புகள் நுழையாமல் தடுக்கப்பட்ட சமுதாயங்கள்

Composition of Imports—இறக்குமதியின் தன்மை
Components—துணைப்பகுதிகள்; உதவிக் கருவிகள்
Company Law Reforms—கம்பெனிச் சட்டச் சீர்திருத்தங்கள்
Concentration—குவிப்பு
Concentration of Economic Power—பொருளாதாரச் சக்தி
Commodity Boards—பொருட்கள் சபை
Commercial Vehicles—வர்த்தக மோட்டார் வண்டிகள்
Common Code of Conduct—பொது ஒழுக்க விதிமுறை
Commercial Policy—வாணிபக் கொள்கை
Conspicuous Consumption—ஆடம்பர நுகர்வு; பகட்டு நுகர்வு
Consumption Expenditure—நுகர்வுச் செலவு
Consumption Pattern—நுகர்வுப் பாங்கு
Consumption Standard—நுகர்வுத் தரம்
Control of Agricultural Prices—வேளாண்மைப் பொருள் விலைக் கட்டுப்பாடு
Control of Industries—தொழில் கட்டுப்பாடு
Controller of Credit—கடன் கட்டுப்படுத்துபவர்
Control of Expenditure—செலவுக் கட்டுப்பாடு
Control of Restrictive Trade Practices—தடுப்பு வர்த்தக நடைமுறைகளைக் கட்டுப்படுத்துதல்
Control of Monopolistic Trade Practices—சர்வாதீன வர்த்தக நடைமுறைகளைக் கட்டுப்படுத்துதல்
Control over Capital issues—மூலதன அளிப்புக் கட்டுப்பாடு
Co-efficient of Localisation—தொழிற் செறிவு குணகம்
Co-operative Credit—கூட்டுறவுக் கடன்
Co-operative Enterprises—கூட்டுறவு நிறுவனங்கள்
Co-operative Financial Institutions—கூட்டுறவு நிதி நிறுவனங்கள்
Coking—Coal—சுட்ட நிலக்கரி
Cost Analysis—செலவு ஆய்வு
Cost of the Projects—திட்டச் செலவுகள்
Cost structure—செலவு நிலை
Cost Benifit Analysis—சிக்கனச் செலவுப் பலன் ஆய்வு
Country-wise Concentration—நாடு முழுவதிலுள்ள குவிப்பு
Country-wise data—நாடுவாரியாக புள்ளி விவரங்கள்
Courts of Enquiry—விசாரணை நீதி மன்றங்கள்

Credit Control—கடன் கட்டுப்பாடு
Credit Management—கடன் நிர்வாகம்
Credit Policy—கடன் கொள்கை
Credit Structure—கடன் அமைப்பு
Current Account—நடப்புக் கணக்கு
Current Consumption—நடப்பு நுகர்வு
Current Expenditures—நடப்புச் செலவினங்கள்
Current Export—நடப்பு ஏற்றுமதி
Current Import—நடப்பு இறக்குமதி
Current Investment—நடப்பு முதலீடு
Current Outlay—நடப்புச் செலவு
Current Output—நடப்பு உற்பத்தி
Current Production—நடப்பு உற்பத்தி
Current Savings—நடப்புச் சேமிப்பு

## D

Debt liquidation—கடன் தீர்த்தல்
Debt Management—பொதுக்கடன் நிர்வாகம்
Debt repudiation—கடன் திருப்பித்தர மறுத்தல்
Decentralisation—பரவலாக்குதல்
Deductive Analysis—பகுத்தறிவு ஆய்வு
Deductive Method—பகுத்தறி முறை
Deductive Reasoning—பகுத்தறி ஆய்வு
Deductive Theory—பகுத்தறிவு
Deficit—பற்றுக்குறை
Deficit Financing—பற்றுக்குறை நிதியாக்கம்
Deficit Production—பற்றுக்குறை உற்பத்தி
Deficit Spending—பற்றுக்குறைச் செலவு
Deficiency Finance—பற்றுக்குறையுள்ள நிதி
Demand—தேவை
Demand Analysis—தேவை ஆய்வு
Demand Curve—தேவைக் கோடு
Demand Deficiency—குறைந்த தேவை

